உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதி முனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

[ உரை நடை ]

*

மன்மத ஆண்டு ஆவணி மூல நன்னாள்

28—8—1955

இதன் விற்பனைத்தொகை
"குமரகுருபரன்"
*
பத்திரிகையைச் சாரும்.

2—4—0

ஸ்ரீ காசிமடம் :: திருப்பனந்தாள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து வெளியீடு

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதி முனிவர்
அருளிச் செய்த

# திருவிளையாடற் புராணம்

## [உரை நடை]

தருமையாதீனம் 25-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
அவர்கள் வழங்கியருளிய வாழ்த்துரையுடன் கூடியது.



திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர்
ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள்
அவர்களுடைய ஆணையின்வண்ணம்



திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் இளவரசு
ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்
அவர்களால் வெளியிடப்பெற்றது.



ஆக்கியோர்
வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்
திருச்சிராப்பள்ளி.

மன்மத ஆண்டு ஆவணி மூல நன்னாள்

 : : [ஆகஸ்டு - 1955

சிவ சிவ

# வேண்டுகோள்



ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்; தென்
ஆல வாயில் உறையும் எம் ஆதியே!

— ஞானசம்பந்தர் தேவாரம்

உனக்குப் பணிசெய்ய உன்றனைஎந் நாளும்
நினைக்க வரம்எனக்கு நீதா; - மனக்கவலை
நீக்குகின்ற தென்மதுரை நின்மலனே! எவ்வுலகும்
ஆக்குகின்ற சொக்கநா தா!

— சொக்கநாத வெண்பா

## அருள் பெறும் வழி

அண்ணல் ஆலவாய் நண்ணி னுன்றனை
எண்ணி யேதொழத் திண்ணம் இன்பமே.

— திருஞானசம்பந்தர் தேவாரம்.

சொக்கனென்று ஒருகால் ஓதில்
துயர்கெடும் பகையும் மாளும்;
சொக்கனென்று ஒருகால் ஓதில்
தொலைவிலாச் செல்வம் உண்டாம்;
சொக்கனென்று ஒருகால் ஓதில்
சுருதிசொல் யாண்டும் செல்லும்;
சொக்கனென்று ஒருகால் ஓதில்
சொர்க்கமும் எளிதாம் அன்றே.

— நம்பி திருவிளையாடற் புராணம்.

---

உ

குருபாதம்.

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25-வது குரு மகா சந்நிதானம்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தில் மன்மத ஆவணி மூல நன்னாளில் வழங்கப்பெறும்

## "திருவிளையாடற்புராண உரைநடை"

நூலை நோக்கி அருளிய

# வாழ்த்துரை



திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் கல்விக்கொடை, பொன் ஈதல், உணவளித்தல் முதலிய அறங்கள் பற்பலவற்றிற்கும் பிறப்பிடம்; நல்லிசைப் புலவர்க்கெல்லாம் நற்றாயகம்; மறைகள், சிவ நூல்கள், தோத்திரம், புராணம், இதிகாசம், முதலிய நூல்களைப் பல மொழிகளில் தோற்றிவரும் உணர்வகம்; செந்திலாண்டவன் திருவருளால் தோன்றிய குமரகுருபர அடிகள், நால்வர் (சமய குரவர்), சந்தான குரவர், பண்டைய புலவர், பற்பலர் நற்பெயரால் கோடிக்கு மேலும் நிதியாக வைத்துக் காப்பாற்றுதல் செய்துவரும் புண்ணியங்களுக்கு மூல பண்டாகரம். அந்நிதிகள் வாயிலாக ஸ்ரீகாசி மடத்திலிருந்தும் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் முதலான இடங்களிலிருந்தும் வெளியிடச் செய்துதவும் நூல்களுக்கு அளவுமுண்டோ? அவற்றுள் ஒன்று **மன்மத ஆவணி மூலத் திருநாள்** வெளியீட்டு மலராகிய **இத்திருவிளையாடற்புராணம்.**

இத்திருவிளையாடற்புராணம் தன்னைக் கற்கும் அன்பர்க்குச் சங்கநிதி பதுமநிதிகளை நல்கும். தகைமை தரும் மகப்பேற்றை வழங்கும். பகை வெற்றி பயக்கும். மங்கல நன்மணம் பெறுச்

செய்யும். நோயற்ற வாழ்வு அளிக்கும். நீடூழி வாழ்விக்கும். துறக்கத்தின்பமும், சிவபுண்ணியமும், சிவாநந்தப் பெரு வாழ்வும் முறைப்படி கூட்டும்.

இதில் வேதநெறி சைவநெறி பத்தி நெறிகளை அறியலாம். விலங்கு நூலுணர்வும், ஒன்பான் மணித்திறம் பற்றிய ஆராய்ச்சியும், சுவை வகைகளும் காணலாம். ஐந்திலக்கணத் தெளிவும் பெறலாம். இதன் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர்க்குத் தெரியாத கலை ஒன்றும் இல்லை என்னும் உண்மையை இவ்வுயரிய நூலை ஒரு முறையேனும் வெள்ளோட்டமாகக் கற்றாலும் உணர்வர். இதை நன்கு கற்றுணர்ந்தொழுகும் நல்லோனே,

"பரவசம் அடைந்து வழிகவர்ந் துண்ணும்
பழிப்புல வேடர்போய் ஒளிப்ப
இருள்வெளி கடந்து திருவருள் வழிச்சென்
றெண்ணிலாச் சராசரம் அனைத்தும்
புரையற நிறைந்து காட்சிகண் காண்பான்
புதைப்படத் தனித்தபூ ரணமாய்
உரையுணர் விறந்த உண்மையா னந்த
உணர்வினை உணர்வற உணர்ந்தான்"

— **திருவிளையாடற் புராணம் (3310).**

ஆவன்.

இவ் வுரைநடைப் பகுப்பு, செய்யுட்பொருளை அறிய மாட்டாதவர்க்குத் தெள்ளிதின் விளங்கும் எளிய நடையில் அமைந்து சிறந்து விளங்குகின்றது. திருமுறை (12) கள், பழந்தமிழ் நூல்கள், கல்லாடம் முதலியவற்றிலிருந்து தக்க மேற்கோள்களுடன் பல்வேறு நற்குறிப்புக்களையுங் கொண்டு, வரலாற்றாராய்ச்சிகளைத் தழுவி நிலவுகின்றது. இஃது அழகிய முறையில் உலகுக்குக் கிடைக்கும் **அரும்பெரும் வெளியீடு** ஆகும்.

நம் கண்மணியிற் சிறந்த நன்மணியாகிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** சைவமும் தமிழும் பரதகண்டமும் செய்த தவப்பயனது நல்வடிவம். அவர்கட்கு நல்லொழுக்கமும், மெய்ப்பொருளுணர்வும் இயல்பாக வாய்ந்து

செல்வங்கள். சிவபூஜா துரந்தரர். ஸ்ரீ காசி, கேதாரம் முதல் கன்னியாகுமரி வரை உள்ள தலங்கள் பலவற்றைப் பன்முறை கண்டு வழிபடும் பெறலரும் பேறு எய்தியவர்கள். அவர்களுக்கு உள்ள திருவருள் உறைப்பு, உண்மை, உறுதி, ஊக்கம், ஒழுங்கு, செயற்றிறம் முதலியவற்றைத் தமிழுலகம் நன்கு அறியும். திருமுறைப் பண்ணிசைக்கு என்றே வாய்ந்த தம் இனிய குரலால் நாள்தோறும் அவற்றைப் பாடிப்பாடிச் சிவாநந்தம் நுகர்பவர்கள். சதா சிவசிந்தனையே புரிபவர்கள். சிவசிவ என உலகத்தை ஓதுவிக்கும் உயர்விற்கு உரியவர்கள். சிவப்ரகாசம் உலகெலாம் விளங்கச் செய்பவர்கள். செந்திலாண்டவனையும் குமரகுருபரரையும் மறவாமல் ஸ்ரீ செந்தமிழ்ச் சொக்கர் திருவருளால் அறங்களெல்லாம் இயற்றுகின்றவர்கள். அவற்றைத் தொடர்ந்து நிகழ்த்திவர நம் கண்மணி இளவரசு **வித்துவான் ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் அவர்களையும்** உதவியாக ஏற்றுக்கொண்டவர்கள். இன்னோரன்ன நூல் வெளியீட்டிற்குத் திரு. **வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்** அவர்களையும் நியமித்திருப்பவர்கள்.

சைவமும் தமிழும் வாழ்க! திருமடம் வாழ்க! எங்கள் அடிகள் கண்மணி **அருணந்தி முனிவர் ஊழிதோறூழி வாழ்க!** அவர்கள் தொண்டெலாம் வாழ்க!

"ஞாலம் நின் புகழே மிகவேண்டும் தென்
ஆலவாய் உறையும் எம் ஆதியே"

சிவமயம்

# அணிந்துரை



[திரு. பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை M.A., B.L., M.O.L., அவர்கள் தலைமைத் தமிழ்ப்பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை.]

குமரகுருபரர் தமிழுக்கென வாழ்ந்தவர்; சைவமாகவே விளங்கியவர்; வடநாட்டுக் காசி மாநகரிலும் சென்று சைவத் தமிழ்த் தவ அரசராகத் தமிழ்ப் பண்பாட்டினை வளர்த்துப் பரப்பியவர். அவருடைய காசிமடம் தமிழ் வளர்ச்சிக்கு நிலையமாக நின்று திகழ்கின்றது. எத்தனையோ பரிசுகள்! எத்தனையோ கட்டளைகள்! தமிழ்ச் சொற்பொழிவுக்கென எத்தனையோ ஏற்பாடுகள்! எத்தனையோ நூல் வெளியீடுகள்! தமிழ்ப் புது வெள்ளம் சிவனருள்போல் இவ்வாறு காசிமடத்திலிருந்து தமிழ்நாடெங்கும் இந்தியநாடெங்கும் உலகெங்கும் பொங்கி வழிந்து ஓடிப் பரவுகிறது. வான் பொய்ப்பினும் பொய்யாத காவிரி பொய்ப்பினும் பொய்யாது உலகினை வாழ்விக்கிறது, காவிரியால் வாழும் தமிழ்ப்பனசை.

பரஞ்சோதியார் திருவிளையாடற்புராணம் இடைக்காலத்து மக்களது கருத்தினைக் கொள்ளைகொண்ட காப்பியமாகும். இதனை வெளியிட்டுதவியது தமிழ்ப்பனசை. அந்தக் காப்பியம் அருந்தமிழ்ச் செய்யுளாக அமைதலின், எல்லோரும் அந்த இன்பத் தமிழ்க்கடலில் எளிதில் திளைக்குமாறு உரை நடையில் எழுதி வெளியிடுகிறது இன்றும் அத் தமிழ்ப்பனசை.

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்** பெயரளவில் காசிவாசி அல்லர்; உண்மையில் காசியிலும் கேதாரத்திலும் பதரியிலும் சென்று சென்று பழகும் பரந்த உள்ளம் படைத்தவர்; பனசைச் செல்வமெல்லாம் தமிழ்ச் செல்வமாகும் தனிவழியைக் கண்ட தவச் செல்வர். அவர் திருவுள்

ளத்தின் உயர்வே இப்படி எல்லாம் பனசையின் பழஞ்சிறப்பினை நினைப்பூட்டும் புதுச் சிறப்பாகப் பொலிகின்றது. **ஸ்ரீமத் மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்** அவர்களும் தவ இளவரசாய் அந்த அருள் உள்ளத்தினை அருட்செயலாக மலரவைத்துச் செயற்றலைமை பூண்டு உதவுகிறார்கள்.

இத்தொண்டு தக்க புலவர் ஒருவரிடம் ஒப்படைக்கப்பெற்றுள்ளது. முன் திருவிளையாடற்புராணத்தினைப் பதிப்பித்த திரு. **வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்** அவர்களே உரைநடையாக இப்புராணத்தை உதவும் திருப்பணியில் ஈடுபட்டுள்ளார்கள். இளைஞரோடு பழகி, அவர்கள் உள்ளத்தினை நன்குணர்ந்த திரு. ஓதுவார், இளைஞரும் எளிதில் உணரும் உரைநடை எழுதுவதில் திறமைபெற்றுள்ளார். தம் செந்தமிழ்த் திறம் எல்லாம் விளங்க ஒரு வாய்ப்பும் இதனால் பெற்றார்.

திருவிளையாடற்புராணச் செய்யுட் பதிப்புக்கு முன்னுரை எழுதிய அடியவனே இதற்கும் அணிந்துரை எழுதும் பேறு பெறுகின்றேன். ஆண்டவன் அருள் வலிய வந்து தடுத்தாளும் முறை இதுவே என எளியேனும் உணர்ந்து களிக்கின்றேன். இப் புராணத்தின் பெருமையை முன்னரே எழுதியுள்ளேன் ஆதலின், புதிதாகக் கூறுவதற்கு ஒன்றும் இல்லை. தமிழின் கடவுட் பெருமை, தமிழ்நாட்டு வரலாற்றின் கடவுட்டன்மை, அழகின் கடவுட் சிறப்பு, அருளின் மாட்சி இவற்றைத் திருவிளையாடலில் அன்றி வேறு எங்கே அறியக்கிடக்கும்? ஆதலின், இந்த உரைநடையும் தமிழின் உயிர்நிலையை விளக்குவதேயாம்.

வாழ்க இந்நூல்! வாழ்க ஓதுவார்! வாழ்க **ஸ்ரீ மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**! வாழ்க **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**! வாழ்க காசி! வாழ்க பனசை! வாழ்க **ஸ்ரீ குமரகுருபரன்** திருவருள்!

உ

செந்திலாண்டவன் துணை

# பதிப்புரை



தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றாள்
    தடாதகா தேவியென் றொருபேர்
தரிக்கவந் ததுவும், தனிமுதல் ஒருநீ
    சவுந்தர மாறனா னதுவும்,
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
    கொண்டதும், தண்டமிழ் மதுரம்
கூட்டுண வெழுந்த வேட்கையால் எனில்இக்
    கொழிதமிழ்ப் பெருமையார் அறிவார்?

- மதுரைக் கலம்பகம்.

**ஸ்ரீ** குமர குருபர சுவாமிகள் தமிழினிடத்தே தெய்வத் தன்மையைக் கண்டவர்; முத்தமிழுக்குச் சிவபெருமானே பயனாக உள்ளார் என்பர்; இறைவனைப் பண்முத்தமிழ்க் கோர் பயனே சவுந்தர பாண்டியனே என்பர்; இறைவியைத் தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி, நறை பழுத்த துறைத் தீந்தமிழின் ஒழுகு நறுஞ்சுவை என்று பாராட்டுவர்; குமரனைச் சங்கத்தமிழின் தலைமைப் புலவன், தெளிதமிழின் வடித்திடு நவரசம் என்பர்; அம்மையப்பர் குமரப் பெருமானோடு தமிழின் பொருட்டே மதுரைக்கு எழுந் தருளினர் என்று பகர்வர்; மதுரையைத் தமிழ் வளரும் கூடல், தமிழின் இயல்பயில் மதுரை, முத்தமிழ் தேர்தரு மதுரை என்று தமிழ் மொழியோடு சார்த்தியே சிறப்பிப்பர்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த தமிழ் மதுரையில் ஸ்ரீ சோம சுந்தரக் கடவுள் புரிந்தருளிய 64 திருவிளையாடல்களைக் கூறுகின்ற மதுரம் ஒழுகு கொழிதமிழ்ப்பனுவல் **திருவிளையாடற் புராணம்** ஆகும். இப் புராணத்தில் விரிக்கப்பெற்ற திருவிளை யாடல்களுள் சோமசுந்தரக் கடவுள் இந்திரன் பழிதீர்த்தது,

வெள்ளையானை சாபம் தீர்த்தது, மாமியின் பொருட்டு எழுகடலழைத்தது, உக்கிர குமாரர் திருவவதாரம் செய்தது, அவர் கடல் சுவற வேலிட்டது, மேகத்திற்குத் தளையிட்டது, சோம சுந்தரர் உக்கிரகுமாரருக்கு வேல் அளித்தது, கல்லானைக்குக் கரும்பருத்தியது, யானை எய்தது, விருத்தகுமார பாலரானது, கான்மாறியாடியது, பழியஞ்சியது, மாபாதகம் தீர்த்தது. அங்கம் வெட்டியது, வளையல் விற்றது, உலவாக் கோட்டை யருளியது, விறகு விற்றது, பலகையிட்டது, பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்தது, கரிக்குருவிக்கு உபதேசம் செய்தது. நாரைக்கு முத்தி கொடுத்தது, தருமிக்குப் பொற்கிழியளித்தது, வலை வீசியது, நரி பரியாக்கியது, பாண்டியன் சுரம் தீர்த்தது ஆகிய இவற்றை **ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்** தமது நூல்களுள் அமயம் வாய்த்துழியெல்லாம் அழகொழுகக் குறித்துள்ளார்கள்.

இங்ஙனம் மதுராபுரித் திருவிளையாடல்களைப் போற்றியருளிய **ஸ்ரீ குமர குருபர சுவாமிகள்** அவர்களின் வழியில் ஸ்ரீ காசி மடத்து 20-வது தலைவராக எழுந்தருளியுள்ள எங்கள் தலைவர், **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்,** திருவிளையாடற் புராணச் செய்யுள் நூலைக் கர ஆண்டு ஆவணி மூல நன்னாளில் வெளியிட்டருளினார்கள்; சொற்பொழிவு வாயிலாகக் கேள்விச் செல்வத்தைப் பெருக்கத் திருவுளங்கொண்டு **மதுரையில் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி** ஒன்று ஏற்படுத்தி நடத்தியருளுகிறார்கள்; சிறிது கற்றோரும் திருவிளையாடற் புராணக் கதைகளை அறியவேண்டும் என்று கருதித் **திருவிளையாடற் புராண வசனம்** என்னும் இந்நூலை எழுதுவித்துள்ளார்கள். இத் திருவிளையாடல் உரைநடை **மன்மத ஆண்டு ஆவணி மூல** நன்னாளாகிய இன்று வெளியிடப்பெறுகின்றது.

தருமையும் கமலையும் விரிதமிழ்க் கூடலும் இருநகராக அரசு வீற்றிருந்த **ஸ்ரீ குரு ஞானசம்பந்த சுவாமிகளுக்கு** ஆன்மார்த்த மூர்த்தியாகிய **சொக்கலிங்கம்** மதுரைப் பொற்றாமரையில் கிடைத்தது! ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் மதுரையில் புரிந்த திருவிளையாடலைக் கூறும் திருவிளையாடற்

புராண நூலுக்கு வாழ்த்துரை தரத் தக்கவர் யாராக இருத்தல் பொருந்தும்? சொக்கலிங்கத்தை ஆன்மார்த்த மூர்த்தியாக உடையவர்களும், தருமையம்பதியில் ஞானச் செங்கோல் செலுத்துபவர்களும், நற்றவ முதல்வர் - நூன் முறை பயின்ற நுண்மைசால் அறிஞர் - கற்றவர் விரும்பும் காவியப் புலவர் - செவிதொறும் செவிதொறும் தெள்ளமு தூட்டுபு கவிஞர்வயின் சிரப்பும் கல்விப் பிரசங்கர் - என்று போற்றற்குரியவர்களும் ஆகிய தருமபுர வாதீன மகாசந்நி தானம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்** அவர்களேயன்றோ! அவர்கள் அருளிய வாழ்த் துரையும் இந்நூல் முதற்கண் அணிசெய்கின்றது. வாழ்த் துரையருளிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானம்** அவர்களுக்கு மன மொழி மெய்களால் வழிபாடாற்றுகின்றேன்.

"வடகலை தென்கலை பல கலையும் பொதி மதுரை வளம் பதியில்" எழுந்தருளியுள்ள அம்மையப்பரது திருநாமம் பொருந்தியவரும், வடகலையல பலகலையொடு தமிழ் பரப்பும் பழுத்த தமிழ்ப் புலவரும் ஆகிய திரு. **பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்** அவர்கள் இவ் வுரைநடை நூலுக்கு அணிந்துரை தந்துள்ளார்கள். அவர்களுக்குச் செந்தி லாண்டவன் திருவருள் நிறைவதாக.

இவ் வுரைநடை நூலை அழகிய இனிய செந்தமிழில் எழுதியவர் திருச்சிராப்பள்ளி திரு. **வித்துவான் தி. பட்டுச்சாமி ஓதுவார்** ஆவர். இவருடைய தெய்வத் திருமுறை அறிவும், சித்தாந்த சாத்திரப் பயிற்சியும், பரந்த தமிழிலக்கிய ஞானமும் இவ் வுரைநடை நூலை எழுதப் பெரும் பயன் அளித்தன என்பதை இந்நூலை மேற்போக்காகப் பார்த்தாலும் அறியப்பெறும். பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளை யாடற் புராணத்தையொட்டியே இந்நூல் எழுதப்பெற் றுள்ளது. கல்லாடம், தெய்வத் திருமுறைகள், சங்க இலக் கியங்கள் முதலியவற்றுள் குறிக்கப்பெற்ற திருவிளையாடலைப் பற்றிய பகுதிகள் எல்லாம் இயன்றவரையில் அடிக் குறிப் பாகத் தரப்பெற்றுள்ளன. திருவிளையாடல்களைக் கூறும்

பிற நூல்களிற் காணப்பெறும் அதிகச் செய்திகளும் ஆங்காங்குச் சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளன. இங்ஙனம் சிறந்த முறையில் இந்நூலை எழுதிய திரு. ஓதுவார் அவர்களுக்கு நம்முடைய அன்பும் ஆசியும் உரியன. இவர்க்குச் செந்திலாண்டவன் திருவருள் மல்குக! இவ் வுரைநடை நூலைப் பயின்று சைவப் பெருமக்கள் பயன்பெறுவாராக!

இச் சிவ புண்ணியத்தைச் செய்வித்தருளிய எங்கள் தலைவரும், சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கப் பலப்பல பேரறக் கட்டளைகளை நிறுவிப் பரிபாலனஞ் செய்தருள்பவர்களும், சிவசிந்தனையில் ஆழ்ந்திருப்பவர்களுமாகிய **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களை** என்றும் போற்றி வழிபடுகின்றேன்.

வையகமெலாம் அரன் நாமமே சூழ்க!

ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்,
28—8—'55.

இங்ஙனம்,
**மகாலிங்கத் தம்பிரான்,**
இளவரசு.

உ

செந்திலாண்டவன் துணை

# முன்னுரை



வாயானை மனத்தானை மனத்துள் நின்ற
கருத்தானைக் கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்
தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச்
சுடர்த்திங்கட் சடையானைத் தொடர்ந்து நின்றென்
தாயானைத் தவமாய தன்மை யானைத்
தலையாய தேவாதி தேவர்க் கென்றும்
சேயானைத் தென்கூடல் திருவா லவாய்ச்
சிவனடியே சிந்திக்கப் பெற்றேன் நானே

— திருநாவுக்கரசர்

உலகின்கண் நிலவும் சமயங்கள் பலவற்றுள்ளும் சைவ சமயமே தலைசிறந்த சமயமாகும். இதனைச் "சைவத்தின் மேற் சமயம் வேறில்லை" என்ற ஆன்றோர் அமுத மொழியினால் நன்கு அறியலாகும். இச் சமயத்தின் உண்மை நெறியினை உலகிற்கு எடுத்துக் காட்டுவன சைவத் திருமுறைகள், சைவப் புராணங்கள் முதலியனவாம். அப் புராணங்களுள் இறைவனுடைய முக்கட் சுடர்போலத் திகழ்வன பெரிய புராணம், **திருவிளையாடற் புராணம்**, கந்த புராணம் என்ற மூன்றும் ஆகும்.

சந்தனப் பொதியில்வாழ் செந்தமிழ் முனிவனும், சவுந்தரபாண்டியன் எனும் தமிழ்நாடனும், சங்கப் புலவரும் தழைத்தினிதிருந்த மாண்பினையுடையது மங்கலப் பாண்டி வளநாடாகும். இது, "பாண்டிய நாடே பழம் பதி" எனப் பாராட்டப்பெற்ற பெருமை வாய்ந்தது. இந்நாட்டின் எழிலாரும் முகமெனப் புகழ் பெற்று விளங்குவது மதுரைமா நகரமாகும். இந் நகர் சிவராசதானி எனச் சிறப்பிக்கப்பெறுவது; மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றினாலும் மாண்புற்று இலங்குவது; விராட்புருடனுக்குத் துவாத சாந்தத்

தலமாக விளங்குவது. இத்தகைய மாண்புகள் நிறைந்த இந்நகரில் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் நன்கு விளக்கிக் காட்டுவதே **திருவிளையாடற் புராணம்** ஆகும். இது, முருகப் பெருமானால் அகத்தியருக்கு அருளப் பெற்றுப் பின்னர் அகத்தியரால் பிற முனிவர்களும் அறிந்து வந்து ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டுப் பூசித்துப் பேறுபெற்றமையைக் கூறுவதாகும். இப் புராணத்தைத் தமிழிற் பாடி உதவியவர் **பரஞ்சோதி முனிவர்** ஆவர்.

பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணம் செய்யுள் நடையில் அமைந்தது; சைவத் திருமுறைகள், சைவ சித்தாந்த சாத்திரங்கள், சங்க இலக்கியங்கள் முதலியவற்றின் அரிய கருத்துக்களைக் கொண்டு விளங்குவது; சொல் நயமும், பொருளாழமும், கவிநயமும் பெற்றுப் பக்திச்சுவை நனி சொட்டச்சொட்டப் படிப்பவரைப் பரவசப்படுத்தும் பான்மையினையுமுடையது; சைவப் பெருமக்களால் நாடோறும் பக்தியுடன் படித்துப் பாராயணம் செய்யப்பெற்றும், பெரிய புராணம் போன்று கயிறுசாத்தி உண்மைகாணும் உயர்வைப் பெற்றும் விளங்குவது. இத்தகைய சிறப்பியல்புகளைக்கொண்டுள்ள இப் புராணத்தினைக் கற்றோரே அன்றி மற்றோரும் எளிதிற் கற்றுணர்ந்து பயனடைதல் வேண்டும் என்ற அருள் நோக்கத்துடன் **திருவிளையாடற் புராண உரைநடை** என்ற இவ்வெளிய உரைநடை நூல், திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தின் வெளியீடாக, நிகழும் **மன்மத ஆண்டு, ஆவணி மூல நன்னாளில்** வெளிவருகின்றது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் அருளாட்சியுடன் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ-லஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**, சைவசமயத்திற்கும், தமிழ்மொழி வளர்ச்சிக்கும், ஏனைய பொது அறங்கட்கும் நாளும் வழங்கிவரும் அருட்கொடைகளை யாவரும் நன்குணர்வர். **ஸ்ரீ-லஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்கள் இதுவரை சுமார் ஐம்பது லட்சம் ரூபாய்களுக்குமேல் அருட்கொடைகள் வழங்கி, மூலதனம் அமைத்து,

இமயம்முதல் குமரிவரையில் பேரறக் கட்டளைகள் பலவற்றை யும் நிறுவியதேபோன்று, சிவபுராணமாகிய இத் **திருவிளையாடற் புராண உரைநடை** நூலையும் வெளியிட அருளினார்கள். அதற்கு நம் பாரத நாடு **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்கட்குப் பெரிதும் கடப்பாடு உடையது ஆகும்.

இத் திருவிளையாடற் புராண உரைநடை நூல், ஸ்ரீ காசிமடத்து வெளியீடாகிய பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணக் குறிப்புரை, சிதம்பரம் ஈசானிய மடம் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் அவர்களின் பதிப்பு, சோடசாவதானம் திரு. சுப்பராயச் செட்டியார் அவர்களின் திருவிளையாடற் புராண உரை, ஈர்க்காடு, திரு. இரத்தினவேலு முதலியார் அவர்கள் உரை, நாவலர், பண்டித ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் உரை, மகாமகோ பாத்தியாய, தாட்சணாத்திய கலாநிதி, டாக்டர் உ. வே. சாமி நாத ஐயர் அவர்களின் பதிப்பாகிய திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணக் கருத்துக்கள், குறிப்புரைகள் முதலானவற்றை அடிப்படையாகக் கொண்டு தெளிவான எளிய தமிழ் நடையில் எழுதப்பெற்றுள்ளது. இது தருமை யாதீனம் 25-வது குரு மகா சந்நிதானம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்** திருவுளம் உவந்தளித்தருளிய வாழ்த்துரையினையும், சென்னை, திரு. **பன்மொழிப் புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, எம்.ஏ., பி.எல்., எம்.ஓ.எல்., அவர்கள்** அணிந்துரையினையும் கொண்டு திகழ்கின்றது.

இவ் வுரைநடை நூலைச் செவ்விய முறையில் அமைத்தற்கு இடையறுது உடனிருந்து பெரும் பணியாற்றியவரும், தமிழறி ஞரும் ஆகிய என் மருகர் திருவாளர் **இரா. மா. மதுரைநாயகன்** ஆவர். இத்தகைய அரிய பெரிய தொண்டினைப் புரிந்த அவர் கட்கும், இப் பதிப்பு நல்ல முறையில் அமைவதற்கு அவ்வப் பொழுது தமது அருங் கருத்துக்களை வழங்கிவந்த திருப்பனந் தாள் செந்தமிழ்க் கல்லூரி பிரின்சிபால் திரு. **வித்துவான் கே. எம். வேங்கடராமையா, எம்.ஏ., பி.ஓ.எல்.,** அவர்கட்கும், திருவிளை

யாடற்புராண சம்பந்தமாக நடைமுறையில் வழங்கப்பெறும் சிற்சிலகுறிப்புகளைத்தந்துதவிய மதுரை ஸ்ரீ மீனாட்சிசுந்தரேசர் கோயில் முதல் நிர்வாகம் **சிவ ஸ்ரீ ம. க. சுந்தரேச பட்டர்** அவர்கட்கும், அச்சுப் பிரதிகளை உடனிருந்து ஒப்புநோக்கி உதவி புரிந்துள்ள என் நண்பர், திருச்சிராப்பள்ளி திரு. **வித்துவான் கோ. இரத்தினம் பிள்ளை** அவர்கட்கும், அணிந்துரை வழங்கிய சென்னை திரு. **பன்மொழிப் புலவர், தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை எம்.ஏ., பி.எல்., எம்.ஓ.எல்,** அவர்கட்கும் எனது நன்றி என்றும் உரியதாகும்.

இவ் வுரைநடைநூலுக்குத் திருவுளங்கனிந்து வாழ்த்துரை வழங்கியருளிய தருமையாதீனம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ குரு மகா சந்நிதானம்** அவர்களின் திவ்ய திருவடி மலர்களை அடியவன் என்றும் வாழ்த்தி வணங்குகின்றேன்.

நம் தாயகம் தழைக்க நாளும் தகுவன வழங்கியருளும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சுவாமிகள்** அவர்களும், அவர்கள் அருள்வழி நின்றிலங்கும் **ஸ்ரீமத் இளவரசு சுவாமிகள்** அவர்களும், அடியவன்மீது கொண்டுள்ள திருவருள் நோக்கத்தால் கந்தபுராண உரைநடை, திருத்தொண்டர் புராண உரைநடை முதலியவற்றை இயற்றி வெளியிட அருளியதுபோன்று, திருவிளையாடற் புராண உரைநடை நூலாகிய இந் நூலினையும் இயற்றி வெளியிடுமாறு திருவுளம்பற்றியமை அடியவன் பெற்ற பெரும் பேறேயாகும். இச் சீரிய சிவத் தொண்டினில் அடியவனை ஈடுபடுத்தியருளிய அவர்களின் பொன்னார் திருவடிக் கமலங்களை அடியவன் சிரத்திற்கு அணி எனக் கொண்டு மன மொழி மெய்களால் வாழ்த்தி வணங்குகின்றேன்.

'அருள்நந்தி நிலையம்'
வரகநகர், திருச்சி,
28—8—'55.

இங்ஙனம்,
**தி. பட்டுச்சாமி ஓதுவார்**

உ

செந்திலாண்டவன் துணை

# உள்ளுறை



## 1. மதுரைக் காண்டம்

## 2. கூடற் காண்டம்

## 3. திருவாலவாய்க் காண்டம்

உ
சிவ சிவ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதி முனிவர்
அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

[வசனம்]



## முதலாவது
## மதுரைக் காண்டம்

—o—

### 1. காப்பு

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய [1]சொற்பொருள் நல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே. 1

சிவம்

வென்றுளே புலன்க ளைந்தார்
மெய்யுண ருள்ளந் தோறுஞ்
சென்றுளே அமுதம் ஊற்றும்
திருவருள் போற்றி! ஏற்றுக்

---

1. சொற்பொருள்-சொல்லும் பொருளும். சொல் சத்தியும், பொருள் சிவமும் ஆகும். "என்னையிகழ்ந் தனனேசொல் வடிவாய்நின் னிடம் பிரியா இமையப் பாவை, தன்னையுஞ்சொற் பொருளான உன்னையுமே இகழ்ந்தனன்" (திருவிளையாடற்புராணம் - இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம்) என்பது இங்குக் கருதற்பாலது.

குன்றுளே இருந்து காட்சி
கொடுத்தருள் கோலம் போற்றி !
மன்றுளே மாறி ஆடும்
மறைச்சிலம் படிகள் போற்றி ![1] 2

**சத்தி**

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி !
உத்தரியத் தொடித்தோள் போற்றி !
கரும்புருவச் சிலைபோற்றி ! கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி !
இரும்புமனங் குழைத்தென்னை எடுத்தாண்ட
அங்கயற்கண் எம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி ! ஆரணநூ
புரஞ்சிலம்பும் அடிகள் போற்றி ! 3

**நூற்பயன்**

திங்களணி திருவால வாய்எம் மண்ணல்
**திருவிளையாட்(டு)**[2] இவையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வம் ஓங்கித்
தகைமைதரு மகப்பெறுவர் ; பகையை வெல்வர் ;
மங்கலநன் மணம்பெறுவர் ; பிணிவந் தெய்தார் ;
வாழ்நாளும் நனிபெறுவர் ; வானு(டு) எய்திப்
புங்கவராய் அங்குள்ள போகம் மூழ்கிப்
புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார். 4

காப்பு முதலிய செய்யுள்—4

---

1. இச்செய்யுள் முறையே விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர், என்னும் மூவகை ஆன்மாக்களுக்கும் இறைவன் அருள்புரியும் தன்மையினைக் குறிப்பிக்கும்.

2. இறைவன் செய்யும் செயல்களெல்லாம் எளிதில் முடிதலால் அவற்றை அவனுடைய திருவிளையாட்டுக்கள் என்று கூறுவர். இங்கு, "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" (திருவாசகம்) எனவும், "சொன்னவித் தொழில்கள் என்ன காரணந் தோற்ற வென்னின். முன்னவன் விளையாட் டென்று மொழிதலுமாம்" (சிவஞானசித்தியார்) எனவும் வருவன கருதற்பாலன.

## 2. கடவுள் வாழ்த்து

### பரசிவம்

பூவண்ணம் பூவின் மணம்போலமெய் போத மின்பம்
ஆவண்ணம் மெய்கொண் டவன்றன்வலி ஆணை தாங்கி
மூவண்ண றன்சந் நிதிமுத்தொழில் செய்ய வாளா
மேவண்ணல் அன்னுன் விளையாட்டின் வினையை வெல்வாம். 1

### பராசத்தி–(சிவசத்தி)

அண்டங்க ளெல்லாம் அணுவாக அணுக்க ளெல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி தாயி னுனும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங்கரி யாயி னுனும்
அண்டங்க ளீன்றுள் துணையென்பர் அறிந்த நல்லோர். 2

### சொக்கநாதர்

பூவில் நாயகன் பூமகள் நாயகன்
காவின் நாயகன் ஆதிக் கடவுளர்க்(கு)
ஆவி நாயகன் அங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி ஏத்துவாம். 3

### அங்கயற்கண்ணம்மை

பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே
தனக்குரிய படிவ மாகி
இங்கயற்கண் அகனுலகம் எண்ணிறந்த
சராசரங்கள் ஈன்றும் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண்
டியன்மகள்போற் கோலங் கொண்ட
அங்கயற்கண் அம்மை[1]இரு பாதப்போ(து)
எப்போதும் அகத்துள் வைப்பாம். 4

### சோமசுந்தரர்

சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங்
கொன்றையந்தார் தணந்து வேப்பந்
தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி

1. அங்கயற்கண் அம்மை - மீனுட்சியம்மை.

விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு
மகனாகி மீன நோக்கின்
மடவரலை மணந்துலக முழுதாண்ட
சுந்தரனை வணக்கஞ் செய்வாம். 5

**தடாதகைப் பிராட்டியார்**

செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று
முடிபுனைந்து செங்கோல் ஓச்சி
முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு
நந்திகண முனைப்போர் சாய்த்துத்
தொழுகணவற்(கு) அணிமணமா லிகைசூட்டித்
தன்மகுடம் சூட்டிச் செல்வந்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலந் தலைமேல் வைப்பாம். 6

**வெள்ளியம்பலவாணர்**

பொருமாறிற் கிளர்தடந்தோள் ஒருமாறன்
மனங்கிடந்த புழுக்கம் மாற
வருமாறிற் கண்ணருவி மாறாது
களிப்படைய மண்ணும் விண்ணும்
உருமாறிப் பவக்கடல்வீழ்ந்(து) ஊசலெனத்
தடுமாறி உழலும் மாக்கள்
கருமாறிக் கதியடையக் கால்மாறி
நடித்தவரைக் கருத்துள் வைப்பாம். 7

**தட்சணாமூர்த்தி**

கல்லாலின் புடையமர்ந்து நான்மறைஆ(று)
அங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் [1] நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
இருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம். 8

1. நால்வர் - சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர் என்ற நான்கு முனிவர்கள்.

### சித்தி விநாயகர்

உள்ளமெனுங் கூடத்தில் ஊக்கமெனுந்
தறிநிறுவி உறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னுந் தொடர்பூட்டி
இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம். 9

### முருகக் கடவுள்

கூறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப்
பெருங்கடலுங் கலங்கக் கார்வந்(து)
உறங்குசிகைப் பொருப்புஞ்சூர் உரப்பொருப்பும்
பிளப்பமறை உணர்ந்தோர் ஆற்றும்
அறங்குலவும் மகத்தழலும் அவுணமட
வார்வயிற்றின் அழலும் மூள
மறங்குலவு வேலெடுத்த குமரவேள்
சேவடிகள் வணக்கஞ் செய்வாம். 10

### நாமகள்

பழுதகன்ற நால்வகைச்சொன் மல[1]ரெடுத்துப்
பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை[2] ஒழுகிஅணி
பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுதகன்ற அன்பெனுநார் தொடுத்தலங்கல்
சூட்டவரிச் சுரும்புந் தேனுங்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தாள்
அடிமுடிமேற் கொண்டு வாழ்வாம். 11

---

1. பழுது - மலருக்குப் புழுக்கடி முதலியனவும். சொல்லுக்குத் திணை வழு முதலியனவும் ஆகும். நால்வகைச்சொல் - இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்பன. நால்வகை மலர் - கோட்டுப்பூ, கொடிப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ என்பன.

2. சுவை-வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், வெகுளி, நகை என்னும் எண்வகைச் சுவை.

## திருநந்திதேவர்

வந்திறை யடியில் தாழும்
வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த
வேத்திரப் படையால் தாக்கி
அந்தியும் பகலும் தொண்டர்
அலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியெம் பெருமான் பாத
நகைமலர் முடிமேல் வைப்பாம். 12

## வாழ்த்து[1]

மல்குக வேத வேள்வி; வழங்குக சுரந்து வானம்;
பல்குக வளங்க ளெங்கும்; பரவுக அறங்கள்; இன்பம்
நல்குக உயிர்கட் கெல்லாம்; நான்மறைச் சைவம் ஓங்கிப்
புல்குக உலக மெல்லாம்; புரவலன் செங்கோல் வாழ்க. 13

கடவுள் வாழ்த்து முதலிய செய்யுள்—19
ஆகச் செய்யுள்—23

---

1. இவ்வாழ்த்தில் வேள்வியால் மழையினையும், மழையால் வளத்தினையும், வளத்தால் அறத்தினையும் இன்பத்தினையும், பின்னர் வைதிக சைவத்தினையும், அதன்பின்னர் எல்லாவற்றிற்கும் அரணாக வுள்ள செங்கோலினையும் வைத்து அழகுபடக் கூறப்பெற்றுள்ளன.

## 3. பாயிரம்

**நூல் செய்தற்குக் காரணம்**

சிவபெருமானிடத்துக் கேட்டுத் தெளிந்த திருநந்திதேவர் பால் சனற்குமார முனிவர் அன்பினோடு கேட்டு ஆராய்ந்து வியாசமுனிவருக்கு அறிவிக்க, வியாசமுனிவர் சூதமுனிவருக்குக் கூறிய **புராணங்கள் பதினெட்டு**[1] ஆகும். அவற்றுள் **காந்த புராணத்தின்** ஒரு பகுதியாகிய **சங்கர சங்கிதையில் திருவாலவாய்** என்னும் **மதுரையின்** பெருமை கூறப்பெற்றுள்ளது.

அச்சங்கர சங்கிதை என்னும் சிறந்த வடநூலுட் புகழப் பெற்ற மதுரையின் பெருமைகளை யெல்லாம் தமிழ் மொழியில் திரட்டித் தந்தருள வேண்டும் என்று மதுரைமாநகரில் வாழும் பெரியோர்கள் கேட்டுக்கொள்ள, "இப்பிறவியிலேயே பிறப்பின் பயனை அடையக்கடவேம்" என்ற உறுதிகொண்டு **தல விசேடம், தீர்த்த விசேடம், மூர்த்தி விசேடம் என்ற மூன்றும்,** மதுரைச் சோமசுந்தரக்கடவுளின் **திருவிளையாடல் அறுபத்து நான்கும், அருச்சனை புரிந்த செயல் ஒன்றும்** ஆக அறுபத்தெட்டினையும் முறைப்படியே படலங்களாக அமைத்து விரிவான முறையில் கூறலுற்றேம். ஆதலால்,

நாயகன் கவிக்கும் குற்றம்
நாட்டிய கழக மாந்தர்
மேயவத் தலத்தி னோர்க்(கு)என்
வெள்ளறி(வு) உரையில் குற்றம்
ஆயுமா(று) அரிதன் றேனும்
**நீர்பிரித்(து) அன்னம் உண்ணும்**
**தூயதீம் பால்போற்** கொள்க;
சுந்தரன் சரிதந் தன்னை.

பாயிரம், அவையடக்கம் முதலிய செய்யுள்—8
ஆகச் செய்யுள்–31

---

1. இதனை, "மச்சம் கூர்மம் வராகம் வாமனம், பிரமம் வைணவம் பாகவதம் சைவம், இலிங்கம் பௌடிகம் நாரதீயம் காரூடம், பிரமகைவர்த்தம் மார்க்கண்டே யம்காந்தம், பிரமாண்டம் ஆக்கினேயம் பதுமம் என்றிவை. பாற்படு பதினெண் புராண மாகும்" எனவரும் திவாகரச் சூத்திரத்தால் அறியலாம்,

## 4. திருக்கைலாயச் சிறப்பு

**திருக்கயிலை மாண்பு**

திருமால் பிரமன் முதலாய தேவர்களும், முனிவர்களும் தங்கள் தங்கள் கைகளைச் சிரசின்மீது கூப்பி வரங்கள் தந் தருளுமாறு வேண்டிநிற்க, அவர்களுக்குத் திருவருள்பாலித்து, இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிச் சொல்லையும் உணர்வை யும் மறைமுடிவையும் கடந்துநிற்கும் சிவபெருமான் எழுந் தருளியிருப்பது **திருக்கயிலாயமலை** ஆகும். அஃது, இந்திரன் முதலிய இமையவர் உலகும், பிரமதேவனுடைய சத்தியலோக மும், திருமாலுடைய பரமபதமும் ஆகிய எல்லாம் அழிய வருகின்ற [1]ஊழிக் காலத்திலும் அழியாது நிலைபெற்று வளரும் சிறப்பு வாய்ந்தது.

புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலாம் நிலைகெட வருநாள்
உரந்த வாதுநின்(று) ஊழிதோ றோங்குமவ் வோங்கல்.

இக் கயிலைமலையில் அரம்பை மாதரின் ஆடலின் ஒலியும், பாடலின் ஒலியும், யாழின் ஒலியும், மத்தளத்தின் ஒலியும், யானைகளின் பிளிற்றொலியும், அருவிகள் வீழ்கின்ற ஒலியும் ஒன்றோடொன்று கலந்து எங்கும் பரவி மிகுந்து கேட்டுக் கொண்டே இருக்கும். அங்கு, முனிவர்கள் திருவெண்ணீறு அணிந்து சிவபெருமானைத் தம் அகத்தே பெற்று அசைவற் றிருந்து, அருவிபோல் ஆனந்தக்கண்ணீர் சொரிந்துகொண் டிருத்தலால் கயிலாய மலை போன்று விளங்குவர். கயிலை மலை, வெள்ளிய ஆடைகளை விரித்தாற்போல ஆரவாரித்து வீழும் அருவித்திரளின் வெள்ளத்தைச் சொரிதலே அன்றி, நான்கு வேதங்களின் முடியினுள் விளங்கும் ஒளிப்பிழம்பை (இறைவன் திருவுருவை) அகத்திற் கண்டு பேரின்பத்தில் அழுந்திக் கிடக்கின்ற பெரிய முனிவர்களின் கண்களும் ஆனந்த அருவியாகிய வெள்ளத்தைச் சொரிவனவாம்.

---

1. இங்கு, "ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன் நொடித்தான் மலையை" எனவரும் சுந்தரர் தேவாரம் சிந்திக்கற்பாலது.

ஆங்கு வெண்டுகில் விரித்தெனக் கல்லென ஆர்த்து
வீங்கு காலருவித்திரள் வெள்ளமே அன்றி
ஓங்கு நான்மறைக் குடுமியின் உள்ளொளி நோக்கித்
தூங்கு மாதவர் கண்களுஞ் சொரிவன வெள்ளம்.

கயிலை மலையின் ஒரு பக்கத்திலே கோட்டுப்பூ, நிலப்பூ, நீர்ப்பூ, கொடிப்பூ என்ற நால்வகைப் பூக்களைக்கொண்டும், உள்ளத்தை உருக்கும் பாடல்களாகிய மலர்களைக்கொண்டும் சிவபெருமான் திருவடிகளில் சூட்டுகின்ற பெரிய தவத்தினை யுடையோர் கூட்டமும் சூழ்ந்து நிற்கும்; மற்றொரு பக்கத்திலே [1]**யானைகளும், புலிகளும், பாம்புகளும்** அருந்தவ முனிவர்களை அடைந்து, அவர்களைத் தங்கள் சுற்றம் வழிபட்ட இறைவனைக் கருதி, அன்போடு பணிசெய்து கொண்டுநிற்கும்.

இத்தகைய மாண்புகளுடன் திருக்கயிலைமலை தேவர்களாலும், மக்களாலும் புகழும்படி திகழ்வதாகும்.

செய்யுள்—7
ஆகச் செய்யுள்–38

—

1. யானை திருவானைக்காவிலும் சீகாளத்தியிலும், புலி சிதம்பரத்திலும், பாம்பு சீகாளத்தியிலும் வழிபட்ட வரலாற்றைத் திருவானைக்கா புராணம், சீகாளத்திப் புராணம், கோயிற்புராணம் என்பவற்றுள் காண்க.

## 5. புராண வரலாறு

**திருக்கயிலை மலையில் சூதமுனிவர் வீற்றிருத்தல்**

அளவற்ற அரிய பெருமையினையுடைய திருக்கயிலாய மலையின்கண் சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கோயிலின் முன்னர் உள்ள **சிவதீர்த்தக் கரையின்** அருகிலே **ஆயிரக்கால் மண்டபம்** ஒன்றுளது. அது சந்திரகாந்தக் கற்களையும் நவமணிகளையும் கொண்டு தேவ தச்சனால் கட்டப்பெற்றதாகும். அம் மண்டபம், நிறைமதி விண்மீன்களுடன் வந்து தங்கியதைப்போன்று விளங்கும்.

தண்ட ருங்கதிர்ச் சந்திர காந்தத்தில்
பண்ட யங்க நவமணி பத்திசெய்(து)
அண்டர் தச்சன் அநேக தவஞ்செய்து
கண்ட(து) ஆயிரக் கால்மண் டபமரோ.

ஆன பான்மையி னுல்அந்த மண்டபம்
ஞான நாயகன் நாள்மலர்த் தாடொழ
வான மீனெடு வந்து பதங்குறித்(து)
ஊன மில்மதி வைகுவ(து) ஒத்ததே.

அங்குத் தவமே உருவெடுத்து இருந்தாற்போல் புலித் தோலாசனத்தின்மேல் பதினெட்டுப் புராணங்களையும் கூறியருளிய **சூத முனிவர்** வீற்றிருந்தார்.

**சம்புபத்தர் முதலிய முனிவர் வருதல்**

அப்பொழுது **சம்பு பத்தர், சதானந்தர், உத்தமர், மகோதரர், உக்கிர வீரியர், பிரசண்டர்** முதலாகிய மாதவர்கள் யாவரும் அச் சிவ தீர்த்தத்தில் வந்து நீராடி, அம்மண்டபத்தில் ஏறி யிருந்து சந்தியாவந்தனம் முதலியவற்றை முடித்துச் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துத் துதித்து வணங்கினர். பிறகு, அவர்கள் இறைவனிடம் அன்பு பூண்ட சூதமுனிவர் திருமுன் சென்று, அவருடைய திருவடிகளை வணங்கி வழிபட்டுத் துதித்து நின்று, "முழுமுதற் கடவுள் சிவபெருமானே என்பதை வேதம், ஆகமம், புராணம், மிருதி முதலிய நூல்களினுடைய துணி பொருள் என்று தெளிந்

துணர்ந்த பெரிய தவத்தினையும் ஞானத்தினையும் உடைய முனிவரே! தேவரீர் முன்னர் அடியேங்களுக்குச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் **மேருமலை, மந்தரமலை, கயிலைமலை, பருப்பதம்** (ஸ்ரீசைலம்) முதலிய அளவில்லாத பதிகளையும், அவற்றின் சிறப்புக்களையும் காரணங்களோடு கருத்திற்கிசைய ஐயம், திரிபு, அறியாமை என்ற முக்குற்றமும் நீங்கும்படி உரைத்தருளினீர்; தற்போது பல தலங்களினுள் மேம்பட்டுள்ளதும், பல தீர்த்தங்களுள் சிறப்புற்றுள்ளதும், வேண்டுவார் வேண்டிய நலங்களை எளிதில் அளித்தருளும் மூர்த்தியாகிய இறைவன் எழுந்தருளியிருப்பதும் ஆகிய ஒரு சிறந்த தலத்தைக் கூறி அருளவேண்டும்'' என்று விண்ணப்பஞ் செய்தனர்.

**சூதமுனிவர் மதுரையின் சிறப்பினைக் கூறுதல்**

அதுகேட்ட சூதமுனிவர் முகமலர்ச்சிகொண்டு எல்லாத் தலங்களின் பெருமைகளையும் தம்முள்ளே ஆராய்ந்து துணிந்துகொண்டு அவர்களை நோக்கி, "முனிவர்களே! சிவபெருமான் எழுந்தருளிய தலங்களில் கேட்ட மாத்திரத்தில் வீடுபேறு அளிக்க வல்லதும், **மூர்த்தி, தலம், தீர்த்தம்** என்ற இம்மூவகையாலும் சிறந்து விளங்குவதுமான தலம் ஒன்று உள்ளது: அதன் சிறப்பினை விளக்கமாகக் கூறுகின்றேன்; கேளுங்கள்'' என்று கூறலானார்: "யாவும் முடிவு பெறக் கூறிய புராணங்கள் பதினெட்டாகும்; அவற்றுள் **காந்த புராணம்** மிகச் சிறந்தது; அஃது ஆறு [1] சங்கிதைகளைக் கொண்டது; அச்சங்கிதை ஒவ்வொன்றும் அவற்றைக் கூறியவர்களின் பெயர்களால் விளங்கும். சனற்குமார முனிவன் கூறிய சங்கிதை **சனற்குமார சங்கிதை** என்றும், சூதமுனிவனாகி யான் கூறிய சங்கிதை **சூத சங்கிதை** என்றும், பிரமதேவன் கூறிய சங்கிதை **பிரம சங்கிதை** என்றும், திருமால் கூறிய சங்கிதை **விட்டுணு சங்கிதை** என்றும், சிவபெருமான் கூறிய சங்கிதை **சங்கர சங்கிதை** என்றும், சூரியன் கூறிய சங்கிதை **சூரிய சங்கிதை** என்றும் பெயர் பெறும். சிவபெருமான் சங்கர சங்கிதையைத் தேவியாருக்கு உணர்த்தியருளினார்; அப்போது அவள் மடி

1. சங்கிதை - தொகுதி என்னும் பொருளது.

யின்மேல் முருகக்கடவுள் வீற்றிருந்துகொண்டு கேட்டு அதனைப் பின்னர்த் தம்மை வழிபட்டுநின்ற அகத்திய முனிவருக்குக் கூறினர். அன்றுமுதல் சங்கர சங்கிதை **அகத்திய சங்கிதை** என்று பெயர் பெற்றது. அச்சங்கிதையில், கேட்ட மாத்திரத்தில் வீடுபேறு அளிக்கத்தக்க ஒரு திருப்பதியின் சிறப்புக் கூறப்பெற்றுள்ளது. அப்பதி "**திருவாலவாய் ஆகும்**" என்று கூறினர்.

**சூதமுனிவர் மேலும் விளக்கிக் கூறுதல்**

இவ்வாறு கூறியதைக் கேட்ட மாத்திரத்திலே வீட்டுலகிற் கருத்தைச்செலுத்திய முனிவர்கள் அகமகிழ்ந்து அப்பதியின் சிறப்பினை மேலும் விளக்கிக் கூறியருளும்படி வேண்டினர். சூதமுனிவர் அவர்களை நோக்கி, "முன்னொரு காலத்தில் நான்முகன் அசுவமேத யாகம் செய்வதற்கு விரும்பித் தன்னிடத்து வந்து இறந்தவருக்கு வீடு பேற்றை அளிக்கின்ற [1] **காசிப்பதி**யின்கண் தன் புத்திரர்களோடு சென்றான். அவ்வேள்விக்கு **அகத்தியர், வியாதர், நாரதர், சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர், கௌதமர், பராசரர், வாமதேவர், வான்மீகி, வசிட்டர், சுகர்** முதலான முனிவர்களும் வந்திருந்தார்கள். நான்முகன் பத்து அசுவமேத யாகங்களைச் செய்து முடித்து அங்கு வந்திருந்த முனிவர்களுக்கு வழங்கவேண்டியவற்றை யெல்லாம் வழங்கித் தன் இருப்பிடமாகிய சத்திய லோகத்தை அடைந்தான்.

அதன்பின்பு, முனிவர்கள் யாவரும் [1]**காசிப்பதி**யில் எழுந்தருளியிருக்கும் விசுவேசர் சந்நிதியை அடைந்து வலஞ்செய்து வணங்கிப் பின்னர் ஆங்குள்ள [2] **முத்தி மண்டபத்திற்குச்** சென்று

1. காசிப்பதி - இது "காசியில் இறக்க முத்தி" என்று புகழ்ந்து போற்றும் முத்தித் தலம். இக் காசித் தலத்தில் கங்கைக் கரையிலே கேதார கட்டத்தை அடுத்து ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் தாபித்த 'குமாரசாமி மடம்' மிகச் சிறப்புற்று, நாடோறும் ஏராளமான அன்னதானம் முதலிய சிவபுண்ணியங்களைப் புரிவதில் தலைசிறந்து, உலகம் போற்றிப் புகழுமாறு சகல வளங்களுடன் திகழ்கின்றது. கேதார கட்டமும் கேதாரநாதர் ஆலயமும் அதன் நிர்வாகமும் குமாரசாமி மடத்திற்கே உரியதாகும்.

2. முத்தி மண்டபம் - இது காசி விசுவநாதர் ஆலயத்தின் வெளியே வடபால் ஞான சுவாமியின் அருகில் உள்ளது.

தட்சணாமூர்த்தியின் திருமுன்னே அன்போடு அமர்ந்தனர்; அப்போது தங்கள் நடுவே வீற்றிருக்கும் **நாரத முனிவரை** நோக்கி வணங்கி, "**மூர்த்தி, தலம், தீர்த்தம்** என்ற இம்மூன்றினும் சிறந்து விளங்கும் சிவ தலம் யாது?" என்று வினவினர். நாரதமுனிவர், "சகல கலைகளையுணர்ந்த சனற்குமார முனிவரிடத்தே கற்றுணர்ந்தவர் வியாச முனிவர்; அவரிடத்தே கேளுங்கள்" என்றார். அவ்வியாச முனிவர், "முருகவேளிடத்து வேதமுதலிய எல்லாக் கலைகளையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தவர் அகத்தியர்; அவரிடத்தே கேளுங்கள்" என்று விடுத்தார். உடனே யாவரும் அகத்தியரை அடைந்து கைகூப்பி வணங்கி நின்று, "வாதாவி, வில்வலன் என்னும் அரக்கர்களைக் கொன்ற தருமமூர்த்தியே! விந்த மலையை அடக்கிய தவக் குன்றே! அலைகடல் குடித்த அருட்பெருங் கடலே! அருந்தமிழ்க் கொண்டலே! தென்றிசை தாழ்ந்தபோது அதனைச் சமனாக்கி நிறுத்திய பற்றுக்கோடே! மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூவகைச் சிறப்பும் உடையதாகிய **சிவதலம்** ஒன்றை அடியேங்களுக்குக் கூறியருள வேண்டும்" என்று வேண்டினர்.

---

### அகத்தியர் முனிவர்களுக்குக் கூறுதல்

அப்போது அகத்திய முனிவர் முகமலர்ச்சிகொண்டு முத்தி மண்டபத்தில் வந்து இறந்த [1] **நான்கு கோழிகளையும்**, விநாயகக் கடவுளையும், முருகக் கடவுளையும், தட்சணாமூர்த்தியையும் வணங்கி, **அங்கயற்கண் அம்மையையும், சோமசுந்தரக் கடவுளையும்**

---

1. முன்னொரு காலத்தில் காசியிலிருந்த மாகனந்தன் என்னும் அந்தணன் ஒருவன் கொடுந்தொழில் பல புரிந்து தன் சுற்றத்தாரால் துரத்தப்பட்டு மனைவியோடும், மக்கள் இருவரோடும் கீகட தேயம் நோக்கிச்செல்லும்போது காட்டிலேவேடர்களால்கொல்லப்பட்டு யாவரும் உயிர் துறந்தனர். அப்பொழுது காசியை நினைத்துக்கொண்டு இறந்தமையால் அவன் பண்டையுணர்வுடன் சேவலாகவும், மனைவி பெடையாகவும், மக்களிருவரும் குஞ்சுகளாகவும் பிறந்தனர். இந்நான்கு கோழிகளும் காசிக்குச் செல்வார் பின்னே தொடர்ந்து சென்று காசியிலுள்ள முத்தி மண்டபத்தை அடைந்து முத்திபெற்றன. அன்று முதல் முத்தி மண்டபம் குக்குட மண்டபம் எனவும் பெயர்பெறும். இவ்வரலாறு காசி காண்டத்தில் கூறப்பெற்றுள்ளது.

தமது இதயத்தில் இருத்திச் [1]சமாதி கூடியிருந்து பரவசப்பட்டு அம்முனிவர்களை நோக்கி, "முனிவர்களே! சிவபெருமான் உமாதேவியாருக்கு அருளிச்செய்த சங்கர சங்கிதையை முருகப்பெருமான் எனக்குத் தெளிவுபெற அருளிச் செய்தார். அச்சங்கிதையில் நீங்கள் விரும்பும் மூவகைச் சிறப்பு வாய்ந்ததும், அருந்தவஞ் செய்து பெறத்தக்க வீட்டுப்பேற்றை அளிக்க வல்லதுமாகிய ஒரு சிவ தலம் கூறப்பெற்றுள்ளது. அத்தலமே சிவபெருமான் **அறுபத்துநான்கு திருவிளையாடல்களை** புரிந்ததும், **பூலோக சிவலோகம்** என்று அழைக்கப்படுவதுமாகிய **திருவாலவாய்** என்னும் **மதுரைத்தலம்** ஆகும். அத்தலத்தின் **மூவகைச் சிறப்புக்களையும்** சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய **அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும்** ஆறுமுகக் கடவுள் எனக்குக் கூறியவாறே உங்களுக்கு இனிக் கூறுவேன்" என்று முனிவர் யாவரும் கேட்கும்படி கூறத் தொடங்கினர்.

செய்யுள்—25
ஆகச் செய்யுள்—63

---

1. சமாதி - இஃது இறைவனின் வேறுகாது தியானத்தில் அழுந்தி நிற்பது. இங்கே, "சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பது" (திருக்குறள்-மெய்யுணர்தல்) என்பதன் விசேடவுரையில், "அதனைக் காண்கையாவது உயிர் தன்னவிச்சை கெட்டு அதனோடு ஒற்றுமையுற இடைவிடாது பாவித்தல்; இதனைச் சமாதி எனவும்....கூறுப" எனப் பரிமேலழகர் கூறியிருப்பது சிந்திக்கற்பாலது.

## 6. பாண்டித் திருநாட்டுச் சிறப்பு

**மேகங்களின் சிறப்பு**

நீலகண்டராகிய சோமசுந்தரக் கடவுளே பாண்டியரசனாகி, வேத முறைப்படி செங்கோல் செலுத்தி ஆண்டருளிய **பாண்டி நாட்டின்** சிறப்பினைச் சொல்வதற்கு மிக அரியதாகும். மேகங்கள், சிவபெருமானின் திருநீறு அணிந்த திருமேனிபோல வெண்ணிறத்தோடு சென்று, கடல் நீரைக் குடித்து, உமா தேவியாரின் திருமேனிபோலும் பசிய நிறங்கொண்டு பல் வகைப்பட்ட உயிர்களுக்கும் பிறவித்துன்பத்தை நீக்கும் பொருட்டுத் திருவருள் சுரந்திடுதல்போல[1] நீரைச் சுரந்து மேலெழுந்தன. ஒல்லென முழங்கி மின்னலாகிய வாட்படையைப் பக்கங்களில் அசைத்து, இந்திர வில்லை ஏந்திநின்று, தன் பகையாகிய கோடைமேல் நீண்ட நீராகிய அம்புகளைச் சொரிந்து, "கொடிய போரினை முடிப்போம்" என்று வருவதைப் போல் மேகங்கள் நெருங்கின. பொதியமலையின் உச்சியில் மேகங்கள் மழையைப் பொழிதல், பெரிய வில்லை ஏந்திய **இராமபிரான்** அன்போடு திருவாலவாய்க் கடவுள் திருமுடியின் மேல் திருமஞ்சனம் ஆட்டுதலை ஒக்கும். கரிய மேகங்கள் பொதிய மலையின்மேல் வந்து மழையைப் பொழிதல், சோமசுந்தரக் கடவுள் திருமுடியின்மீது தூய நீரால் அபிடேகம் செய்யும் **இந்திரனை** ஒக்கும். இறைவன் திருமுடிமேல் தேவேந்திரன் கையினால் சொரிகின்ற மலர்களைப்போல அம்மேகங்களினின்றும் பல்வகை மணிகள் சிதறின.

**பொருநையாகிய பெண்**

கடலாகிய ஆடையினைத் தரித்த பூமாதேவி, தன்னிடத்துத் தோன்றிய பல்வகையான உயிர்களிடத்தெல்லாம் அன்பு கொண்டு கொங்கையினின்றும் பாலைச் சொரிவதுபோல, பொதிய மலையினின்றும் அருவிகள் கீழே வீழும். அக்காட்சி

---

1. இங்கு, "....நந்தம்மை ஆளுடையாள் தன்னிற் பிரிவிலா எங் கோமான் அன்பர்க்கு, முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய் மழையேலோர் எம்பாவாய்" எனவரும் திருவாசகம் -திருவெம்பாவை அடிகள் நினைவிற்கொள்ளற்பாலன.

பொதியமலையாகிய மலைமடந்தை, **பொருநை** (தாமிரபருணி) என்னும் பெண் குழந்தையைப் பெற்றதைப்போல் தோற்ற மளிக்கும். அப்பொருநை நீராகிய குழந்தை, முல்லை நிலத்தின் கண் ஒல்லென்ற ஒலியோடு விரைந்து தவழ்ந்து, இனிய பாலைப் பருகி அங்குநின்றும் நீங்கி மருத நிலமக்களாகிய உழவர்களின் பம்பை என்னும் இசைக்கருவியின் இசையைச் செவிமடுத்து மெல்ல நடந்து பண்ணைகள்தோறும் விளையாடிற்று. பின்பு, வாழை மரங்களைத் தொடைகளாகவும், மாந்தளிர்களை நிறமாக வும், தென்னங்குரும்பைகளைத் தனங்களாகவும், வஞ்சிக்கொடி களை இடையாகவும், கூந்தற்பனையின் மடலைக் கூந்தலாகவும், சந்திரனை முகமாகவும் பெற்றுப் பொருநையாகிய குழந்தை மங்கைப்பருவம் அடைந்தது; நெய்த நிலத்தைச் சூழ்ந்த சோலைகளில் தங்கிப் பல்வகை மலர்மாலைகளை அணிந்து, நுரை யாகிய போர்வையைப் போர்த்துச் சந்தனத்தோடு கலந்த கத்தூரிக் குழம்பு பூசி, பொன்மணி ஆரம்பூண்டு, கடலாகிய தன் கணவன் மார்பைத் தழுவிக் கலந்தது.

**பொருநை நதியின் சிறப்பு**

பொருநை நதி விரைந்து தாவிக்கொண்டு தன் இரு கரை களிலுமுள்ள சிவாலயங்களை அடைந்து, முல்லை நிலத்திலுள்ள [1]பஞ்ச கவ்வியங்களையும், தேனையும் தன் அலைகளாகிய கரங் களினால் மொண்டு வீசியும், கத்தூரியையும் சந்தனத்தையும் பூசியும், மலர்களைத் தூவியும் செல்லுதல், சிவபூசை புரியும் அடியார்களைப்போல் தோற்ற மளிக்கும். மன்மதபாணமாகிய மலர்களை அலைகள் ஒதுக்க, தேமலாகிய பொன்மணலைப் பெற்று, அன்னப்பறவைகளைத்தாங்கி, இருகரைகளிலும் சங்கு களை வீசி, காஞ்சி மரங்களைத் தள்ளிக்கொண்டு கரையுடையும் படி செல்லும் பொருநை நதி, சிவபெருமானுக்கு ஐயமிடும் தாருகா வனத்து முனிவர்களின் மனைவியரைப்போல் காட்சி அளிக்கும். பொருநை வெள்ளமானது மருத நிலமாகிய மங்கைக்கு மலையிடத்துள்ள மணி,பொன்,வைரம், குழை என்ப

1. பஞ்சகவ்வியம் – இது பால், தயிர், நெய், கோமயம் (பசுவின் சாணம்), கோசலம் (பசுவின் சிறுநீர்) என்னும் ஐந்தும் விதிப்படி கலந்த பொருள்.

வற்றைப் பூட்டி, அகிலும் சந்தனமும் பூசி, இனிய அமுதத்தை உண்பிக்கச் செய்து அவள் பருவத்திற்கு ஏற்றவற்றை ஆராய்ந்து செவிலித் தாயைப்போல் வளர்க்கும்.

**பொருநை வெள்ளம்**

சிவபெருமானே எங்கும் நிறைந்த பரம்பொருள் என்றும், விபூதி முதலிய சாதனங்களே வீடுபேற்றுக்கு வழி என்றும், வேத முதலிய கலைகளெல்லாம் கூறுவதை அறிந்து வைத்தும் தெளியாதவரின் அறிவின் கலக்கத்தைப்போல் பொருநையின் பெருவெள்ளம் கலங்கியோடும். பின்னர் **சைவ நெறியால் அறிவு விளக்கம் பெற்ற பெரியோரின் திருவுள்ளத்தின் தெளிவுபோல்** தெளிவு அடைந்து ஓடும்.

மறைமுதற் கலைகள் எல்லாம் மணிமிடற் றவனே எங்கும்
நிறைபரம் என்றும் பூதி சாதனம் நெறிவீ(டு) என்றும்
அறைகுவ(து) அறிந்தும் தேறார் அறிவெனக் கலங்கி அந்த
முறையின்வீ(டு) உணர்ந்தோர் போலத் தெளிந்தது மூரி வெள்ளம்.

வேதத்தினின்றுங் கிளைத்த அறுபத்து நான்கு கலைகளைப் போல் அப்பொருநை நதியின் வெள்ளம், நீர்த்துறைகளினின்று கிளைத்துப் பல வாய்க்கால்களாக மருத நிலத்திலுள்ள ஊர்களிலும், சோலைகளிலும், வயல்களிலும், மலர் ஓடைகளிலும், மற்றைய இடங்களிலும் விரைந்து சென்று **சிவனடியார்**களின் திருவுள்ளத்தின்கண் நிறைந்த அன்பைப்போல் நிரம்பியது. கீழ்மக்களிடத்திலுள்ள பொருள்களும் இம்மை மறுமைப் பயன்களில் அவா நீங்கிய [1] **சிவயோகி**யரின் திருக்கரத்தில் பட்டால் குற்றம் நீங்கிப் பரிசுத்தம் அடைந்தமை போல, மேகமானது கடல்நீரைப் பருகி, அதிலுள்ள உப்பைப் போக்கித் தூய்மையாக்கிச் சொரிந்த நீர்த்துளிகள் உலகத்து உயிர்கட்கும் தேவர்கட்கும் அமுதமாயின.

இழிந்த மாந்தர்கைப் பொருள்களும் இகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படில் தூயவாய்க் களங்கம்

---

1. இங்கே. "தண்டறு சிந்தைத் தபோதனர் தாமகிழ்ந்(து), உண்டது மூன்று புவனமும் உண்டது; கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்(று); எண்டிசை நந்தி எடுத்துரைத் தானே" எனவரும் திருமந்திரம் நினைவிற் கொள்ளற்பாலது.

ஒழிந்த வாறுபோல் உவரியுண்(டு) உவர்கெடுத்(து) எழிலி
பொழிந்த நீரமு தாயின புவிக்கும்வா னவர்க்கும்.

அழிவில்லாத **சிவ சத்தியே** படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐவகைத் தொழில்களையும் நடத்துதற்பொருட்டு, வெவ்வேறு பெயர்களைப் பெற்று நின்றாற்போல், கடல்நீர் ஒன்றே ஆறு, கால்வாய், குளம், கிணறு, அகழி எனப் பலவகைப் பெயர்களைப் பெற்று அளவற்ற பயிர்களை வளர்க்கும்.

**உழவர் சிறப்பு**

மருத நிலத்திலுள்ள உழவர்கள் பொன்னேர் பூட்டி மருதப் பண்களைப் பாடியவாறு வயல்களில் உழுவார்கள். தாய்மார்களின் அன்புகனிந்த பாடல்களைக் கேட்டு மகிழும் குழந்தைகளைப்போல், ஏர்களில் பூட்டிய எருதுகளும் எருமைக் கடாக்களும் மகிழ்ந்து செல்லும். அக்காட்சி மனவலி கடந்தோரால் வெல்லப்பட்ட ஐம்பொறிகளும் ஒருவழிநின்று செயலாற்றுவதை ஒக்கும். பல்வேறு நிறங்களைக்கொண்ட எருதுகளைப் பூட்டிய ஏர்கள் செல்லுதல், பல நிறங்களையுடைய மணிக்கோவை செய்தது போலத் தோன்றும். கலப்பையின் முனையிலுள்ள கொழுத்தேயும்படி உழவுத்தொழில் செய்யும் உழவர்கள் நில மடந்தையின் உடலைக் கிழித்த படைச்சாலியின் வழியே பொங்கிய இரத்த வெள்ளத்தைப்போலச் செம்மணிகள் ஒளி வீசா நிற்கும். பின்பு, உழவர்கள் உழுத வயலில் நீரினைக்கட்டிச் சேருக்குவார்கள்; மருத நிலக் கடவுளைத் தொழுது செந்நெல் முளைகளை விதைப்பார்கள்; முளைத்த நாற்றுக்களைப் பிடுங்கி நடுவார்கள்; பயிர்களிடையே தோன்றும் களைகளை நீக்கிப் பாதுகாத்து வளப்படுத்துவார்கள்.

**பயிரின் களைகளை நீக்குதல்**

உழத்தியர்கள் தாமரை, குவளை, அல்லி முதலிய களைகளைத் தங்களுடைய அவயவங்களின் பகை என்று கருதிக் களைந்தெறிந்தனர். உறவினராயினும் பகைவராய் வந்தபோது, ஆண்டானது ஏவல் வழி நின்று தண்டிப்பவர்க்கு அவ்வுறவை நினைத்தல் இயலாது போல, உழவர்களும் தங்கள் உழத்தியரின்

அங்கங்களுக்குத் தாமரை, குவளை, அல்லி முதலியன உவமை என்றும் கருதாமல் அவற்றை அடியோடு களைந்து எறிந்தனர்.

**நெற்பயிர் வளர்ச்சி**

நெற்பயிர்கள், பெரியோர்கள் இயற்றிய நூலின்கண் பொதிந்து கிடக்கும் உண்மைப் பொருள்போல், தம்மிடம் வளர்கின்ற கருவை உள்ளடக்கியவாறு காட்சி அளிக்கும்; பிறகு, நூற்பொருளின் கருத்துரையைப்போல் சிறிது வெளித் தோன்றும்; அதன் பிறகு, கல்வி நிறையாத கவிஞர் இறுமாத் தல்போல் தலை நிமிர்ந்து நிற்கும்; முடிவில், நூலின் உரை விரிந்ததுபோல் கதிர்களை விரித்துக் கற்புடை மகளிர் தலை வணங்குதல் போல் தலைவணங்கி நிற்கும்[1].

புரையற உணர்ந்தோர் நூலின் பொருளினுள் ளடங்கி அந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போல் இறுமாங்(து) அந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போல் ஒசிந்த(து) அன்றே.

அன்பு மிகுந்த பத்தியாகிய விதையை விதைத்து,[2] ஆர்வமாகிய நீரினைப் பாய்ச்சும் தொண்டர்க்கு ஈசனது இனிய திருவருளாகிய பயன் விளைதல் போல, உழவர்கள் நாடோறும் பருவமறிந்து தங்கள் விளைபுலங்களைப் பாடுபட்டுக் காக்க நெற்பயிர்கள் நன்கு விளைந்தன.

அன்புறு பத்தி வித்தி ஆர்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்(கு)
இன்புறு வான ஈசன் இன்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கால் மள்ளர் வைகலும் செவ்வி நோக்கி
நன்புலம் முயன்று காக்க விளைந்தன நறுந்தண் சாலி.

விளைந்த நெற்பயிர்களை உழவர்கள் அரிவாளைக் கையிலேந்தி வெவ்வேறாக அறுத்துக் கற்றைகளாகக் கட்டிக் களங்

1. இங்கே, "சொல்லருஞ் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல், மெல்லவே கருவிருந்(து) ஈன்று மேலலார், செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்த நூல், கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே" என வரும் சீவக சிந்தாமணிச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

2. இங்கே, "அருச்சனை வயலுள் அன்புவித் திட்டு" எனவரும் திருவாசக அடி உன்னற்பாலது.

களுக்குக் கொண்டுபோய், அடித்து வைக்கோலை நீக்கிப் பதர் போகத் தூற்றி நெல்லைப் பொலிகளாகக் குவிப்பார்கள்; கிராம தேவதைகளுக்கும், வறியோர்களுக்கும் முறைப்படி கொடுத்து அளந்து ஆறில் ஒருபங்கை அரசர்க்கு இறைப்பொருளாகக் கொடுப்பார்கள்; எஞ்சியதைக்கொண்டு தென்புலத்தவர்களுக்கும் உறவினர்களுக்கும், தெய்வங்களுக்கும், விருந்தினர்களுக்கும் அளித்துத் தாங்களும் உண்பார்கள்[1].

பாண்டிநாட்டில், நெல்மட்டுமன்றி வெல்லம், எள், சாமை, கொள், சோளம், மலைநெல், அவரை, தினை, பல்வகைப் பயறுகள் முதலிய புன்செயில் விளைபொருள்களை உழவர்கள் எருதுகளிலும், வண்டிகளிலும் வீட்டிற்குக் கொண்டுசெல்வர்.

பாண்டிநாட்டு மக்கள் துறவிகளுக்கும், திருத்தொண்டர்களுக்கும் உணவு, உடை, உறைவிடம், நோய்க்கு மருந்து முதலியன அளித்து அவரவர்கள் தத்தம் நிலை வழுவாது ஒழுகச்செய்வர்; நாடோறும் சிவனடியார்கள் வழியிலே எதிர்ப்பட்டால் புதல்வர்களிடம் வைத்திருக்கும் மெய்யன்பும், அரசிளங் குமரரைக் கண்டால் ஒத்த பயமும் கொண்டு அடிவணங்கி ஒடுங்கி இனிய மொழிகள் கூறி அவர்கள் உள்ளக் குறிப்பினை உணர்ந்து பணிபுரிவர்.

நிச்சலும் ஈசன் அன்பர் நெறிப்படில் சிறுர்மேல் வைத்த
பொச்சமில் அன்பும் மன்னர் புதல்வரைக் கண்டா லன்ன
அச்சமுங் கொண்டு கூசி அடிபணிந்(து) இனிய கூறி
இச்சையா(று) ஒழுகி உள்ளக் குறிப்பறிந்து ஏவல் செய்வார்.

இத்தகைய சிறப்புவாய்ந்த பாண்டி நாடாகிய கன்னிக்குத் தன்னிடமுள்ள ஊர்களே உறுப்புக்களாம்; அவ்வுறுப்புக்களில் விளங்கும் அணிகலன்களே திருக்கோயில், திருமடம், அறச்சாலை, தண்ணீர்ப்பந்தல், அன்னசாலை முதலியனவாம்.

**திணைமயக்கச் சிறப்பு**

இப்பாண்டி நாட்டெல்லையில் **குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்** என்ற நான்கு திணைகளும் உள்ளன; அவை ஒன்றோ

1. இங்கே, "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு), ஐம்புலத்தா(று) ஓம்பல் தலை" எனவரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.

டொன்று நெருங்கியுள்ள முறையில் திகழ்வன. முல்லை நிலத்துப் பசுக்களை மேய்க்கும் ஆயர்கள், குருந்த மரத்தின்மேல் விரைந்து ஏறி, அதன்மேல் படர்ந்துள்ள மிளகுக் கொடியிலுள்ள மிளகுக் கொத்துக்களை உதிர்ப்பார்கள். குறிஞ்சி நிலத்தைச் சேர்ந்த வேட்டுவச் சிறுமியர் நெய்தல் நிலத்திலுள்ள முத்துக்களினால் கோலிய சிறு வீட்டில், முல்லை அரும்புகளே சோருக அவற்றோடு தேனைக்கலந்து விளையாடுவர். எருமைகள், தம் கன்றுகளும். வண்டுகளும் கடைவாயை நக்கும்படி கரும்புகளைத் தின்றுவிட்டு வேங்கைமர நிழலில் தூங்குவன. யானைகள் குறிஞ்சி நிலத்திலுள்ள தினைக்கதிர்களை மேய்ந்து விட்டு மருதமர நிழலிலே சென்று கண்ணுறங்கும். வேடச் சிறுமிகள் கட்டிய சிறு வீட்டின்கண் கடல் அலைகள் புகுந்து அழிக்கும். அச்சிறுமியர் கோபங்கொண்டு கழற்றி வீசிய அக்கு மணி அணிகளைப் பரதவச் சிறுமிகள் முத்துக்களோடு கோவைசெய்வர். முல்லை நிலத்திலுள்ள வண்டுகள் சென்று தாம்வல்ல முல்லைப்பண்ணை மருத நிலத்துத் தாமரை மலர்களிலுள்ள மருதப்பண்வல்ல வண்டுகளைப் பாடக் கற்றுக்கொடுத்துப் பின் மருதப்பண்ணைத் தாம் கற்பன.

வாளை மீன்கள் முல்லை நிலத்திலுள்ள பசுவின் மடியில் மோதி, அப்பசு தன் கன்று முட்டியதென்று மனமுருகி விரைந்து சொரிகின்ற பால்வெள்ளத்திலே தாவுவன; நெய்தல் நிலத்திலுள்ள புன்னை மலரின் தேனை ஆண் வண்டுகள் உண்டு செவ்வழிப் பண்ணினைப் பாடக் கொன்றை மரங்கள் கொடையாளர்போல் பொன்போன்ற பூக்களைப் பொழிவன; கடலானது தன்னிடத்துள்ள சங்கினை எடுத்து முல்லை நிலத்திலுள்ள காசாஞ்செடிமீது வீசும்; தென்னைகளிலிருந்து வீழும் நெற்றுக்கள், பலாப்பழங்களின்மேல் மோதி வீழவும் அப்பலாப் பழங்கள் பிளவுபட்டுத் தேன்பெருகும். அத்தேன் நெய்தல் நிலத்திலுள்ள கேணிகளில் பாய்ந்து அவற்றின் உவரைப் போக்கும். மருத நிலத்திலுள்ள கெண்டைமீன்கள் நெய்தல் நிலத்துத் தாழம்பூவின் நிழலைக் கொக்கு என்று அஞ்சித் தாமரை மலரில் புகுந்து மறையும். நெய்தலைச் சேர்ந்த தாழை மலர்கள் உப்பங்கழிகளின் புலால் நாற்றத்தைப் பொறுக்கலாற்

ருது, உடல் நடுங்கி மகரந்தமாகிய சோற்றைக் கக்கும்; அப்போது ஆம்பல்கள் வாய்திறந்து அதனை ஏற்கும். அதனைக் கண்ட குவளை மலர்கள் கண்ணால் அறிவிக்க முல்லைச் செடிகள் கூடிச் சிரித்துப் பழிதூற்றுகின்றவரைப்போல் பழம்பூக்களைத் தூற்றும். நெய்தநிலப் பெண்கள் கரும்பு, புளியங்காய், தினை, கிழங்கு, தேன், அவரை, கொள்ளு, எள்ளு முதலியன வாங்குதற்பொருட்டு அளவுக்களவு முத்துக்கள் அளித்துப் பெறுவார்கள்.

**பொதியமலைச் சிறப்பு**

ஐம்புலனாகிய பகையை வென்று, உயிர்கள் அனைத்திற்கும் அருளாகிய குடையால் நிழலைச்செய்து வாய்மையாகிய செங்கோலைச் செலுத்திச் சிவப்பேறு மிகுதற்குக் காரணமான சிவ ஞானமாகிய செல்வத்துடன் விளங்கித் தவமானது வீற்றிருந்து ஆட்சிபுரிதற்கு இடமாக விளங்குவது **பொதியமலை**யாகும். ஆகாயகங்கையை அளாவி உயர்ந்து நிற்கும் பொதியமலை சிவபெருமானையும், அம்மலையைச் சூழ்ந்துள்ள மேகம் யானையினின்றும் உரித்து இறைவனால் போர்க்கப்பெற்ற தோலையும், மேகத்தின் மழைத்துளிகள் யானையினின்று சிந்தும் உதிரத்தையும், அதனிற் காணப்படும் இந்திரவில் அவ்வியானையின் உதிரம் தோய்ந்த கொம்பினையும் ஒத்தது; சுனையும், அதனைச் சுற்றி மொய்த்துக்கிடக்கும் வண்டுகளும், நீரையுடைய பாத்திரத்தையும் கரியையும் ஒத்தன; செங்காந்தள்மேல் வேங்கை மலர்கள் கிடப்பன, நெருப்பின்மேல் பொன் இருத்தலையும் ஒத்தன. சுனை நீரிலுள்ள செங்குவளை மலரில் வண்டுகள் ஒலிக்கக் குங்கும மரங்கள் பழம்பூக்களையும் தேனையும் சிந்தும் காட்சி, நெற்பொறிகளைச் சொரிந்து, நெய்யை வார்த்து, முத்தீயினையுடைய வேள்வியை முடிக்கும் முனிவர்களை ஒத்திருக்கும். முனிவர்கள் செய்யும் யாககுண்டங்களிலிருந்து எழும் வேள்விப் புகையோடு, குறவர்கள் மூட்டிய அகிலின் தீப்புகை கலந்து நிற்கும். பொதிய மலையிலுள்ள மூங்கில்களின் கணுக்களினின்றும் சிதறும் முத்துக்களையும், மேகங்கள் சொரியும் முத்துக்களையும், அருவிகள் ஒதுக்கிய பல்வகை மணிகளையும், நாகத்தினின்று தோன்றிய செம்மணிகளையும்

குறப்பெண்கள் எடுத்துத் தினைக்கதிர்களைத் தின்ன வருகின்ற மான்களும் குருவிகளும் வீழும்படி தம் கவண்களில் வைத்து வீசுவர்.

**பாண்டி நாட்டின் உயர் தனிச்சிறப்பு**

உலகம் திருமாலின் வடிவம் போன்றது; பாண்டி நாடு திருமாலின் உந்தித் தாமரை போன்றது; பொதியமலை அத் தாமரை மலரில் உள்ள பொகுட்டு போன்றது. அப்பொதிய மலையின்கண் வாழும் அகத்திய முனிவர் அத்தாமரைப்பொகுட் டில் வீற்றிருக்கும் நான்முகன் போல்வர். அம் முனிவர் போற்றி வளர்த்த முத்தமிழ் நான்முகன் அருளிய வேதம் போன்றது. ஒப்பற்ற மேருமலை பொதிய மலையை ஒக்கும்; மேருமலையைச் சூழ்ந்து ஓடும் சாம்பூநதம் என்னும் நதி அப் பொதிய மலையைச் சூழ்ந்த தேவர்கள் நீராடும் தாமிரபருணி ஆற்றை ஒக்கும். சாம்பூநத ஆற்றால் சூழப்பெற்ற போக பூமி தாமிரபருணியால் சூழப்பெற்ற பாண்டி நாட்டை ஒக்கும்.

**பொதுச் சிறப்பு**

தண்டமிழையுடைய திருவாலவாய் சிவலோக வடிவாகும்; திருவாலவாயின் புறத்தில் விளங்கும் நகரங்கள் அனைத்தும் இந்திரன், பிரமன், திருமால் முதலிய தேவர்களுடைய நகரங் களின் வடிவமாகும். சந்தன மரங்கள் பொதியமலையில் விளை கின்றன; முத்துக்கள் தாமிரபருணியில் விளைகின்றன. தருமங் கள் தாமிரபருணி நதியால் சூழப்படும் நகரங்களிலே உண் டாகின்றன. சிவபெருமான் திருவடிகளிலேகொண்ட பத்தி கள் அந்நகர மக்களின் அறிவின் கண்ணே உண்டாகின்றன.

சிவபெருமான் தென்றிசையைக் குறித்து நெருங்க வந்து வந்து [1]திருநடம் புரிதல், அத்திருநடனத்தால் உண்டாகிய மெலிவை நீக்குதற் பொருட்டுப் பொதிய மலையிலிருந்து வரும் தென்றற் காற்றைத் திருமுகத்தில் ஏற்கவும், தமிழின் சுவை யைத் திருச்செவியால் நுகரவும் அல்லவா? சிவபெருமான் முன்

1. இறைவன் திருநடம்புரிந்த இடங்கள் திருவாலங்காடு, சிதம்பரம் மதுரை, திருநெல்வேலி, திருக்குற்றாலம் என்பன; இவை முறையே இரத்தின சபை, கனக சபை, இரசித சபை, தாமிர சபை, சித்திர சபை எனப் பெயர்பெறும்.

ஞெரு காலத்தில் **பாணினி முனிவனுக்குச்** சமஸ்கிருதமொழிக்கு வியாகரண சூத்திரத்தை அருளிச் செய்ததுபோல பொதிய மலையில் அமர்ந்துள்ள **அகத்திய முனிவனுக்குத்** தமிழிலக்கணத்தை அறிவுறுத்திஞர். தமிழ் நங்கைக்குப் பாண்டி நாடு நாடகசாலை என்று உயர்ந்தோரால் புகழ் பெற்றதாகும். சிவபெருமான் சங்கப்புலவர்களோடு தாமும் ஒருவராக எழுந்தருளியிருந்து ஆராய்ந்து தெரிந்த **இப்பசுந் தமிழ்** மற்றைய நிலங்களிலுள்ள இலக்கண வரையறை இல்லாத சில மொழிகளைப்போல எண்ணத்தக்கதன்று. சிவபெருமானைத் தூது விட்டது தமிழ்! முதலை உண்ட பாலனை அழைத்தது தமிழ்! எலும்பைப் பெண்ணுக மாற்றியது தமிழ்! மறைக் கதவைத் திறக்கச் செய்தது தமிழ்! வேறு மொழியன்று.

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ(டு) அமர்ந்து
பண்ணு றத்தெரிந்(து) ஆய்ந்தவிப் பசுந்தமிழ் ஏனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோல்
எண்ணி டைப்படக் கிடந்ததா எண்ணவும் படுமோ?

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததும் முதலை
உண்ட பாலனை அழைத்ததும் எலும்புபெண் உருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ? மறுபுலச் சொற்களோ? சாற்றீர்!

இத்தகைய சிறப்பு வாய்ந்ததும், எக்காலத்தும் சிவ பத்தியும் மெய்யன்பும் சைவ விளக்கமும் குன்ருமல் அறஞ் செய்யப் பெறுவதுமாகிய **பாண்டிநாடு** உமாதேவியும் சிவபெருமானும் முருகக் கடவுளும் செங்கோல் செலுத்திய நாடாகும்; இது போன்ற வேறு நாடு பூவுலகத்தும் விண்ணுலகத்தும் இல்லை என்றே சொல்லலாம்.

செய்யுள்—60
ஆகச் செய்யுள்–123

---

1. பாணினி—இவர் காந்தார தேசத்துச் சலாது நகரத்திலே பிறந்தவர். இவர் தந்தை பணினி; தாய் தாக்ஷி. இவர் சிவபெருமான் அருள் பெற்றுப் பாணினீயம் என்னும் வியாகரண நூலைச் செய்தவர். அதனைக் காசுமீர தேசத்து கானிட்க மன்னனது சபையில் அரங்கேற்றியவர்; அகத்தியருக்குப் பிற்பட்ட காலத்தவர் என்பர்.

## 7. மதுரைத் திருநகரச் சிறப்பு

### பாண்டி நாடாகிய மங்கை

பாண்டி நாடாகிய மங்கைக்குத் திருப்பரங்குன்றமும், திருக்கொடுங்குன்றமும் **கொங்கைகள்**; திருச்சுழியல் **கொப்பூழ்**; திருக்குற்றாலம் **வயிறு**; திருவேடகம் சிவந்த **கைகள்**; திருப்பூவணம் **திருமேனி**; திருநெல்வேலி திரண்ட **தோள்கள்**; மதுரைமா நகரம் அழகிய **திருமுகம்**.

கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றும்; கொப்பூழ்
அங்க மேதிருச் சுழியல்; அவ் வயிறுகுற் றாலம்;
செங்கை ஏடகம்; மேனியே பூவணம்; திரள்தோள்
பொங்கர் வேய்வனம்; திருமுகம் மதுரையாம் புரமே.

### மதுரைமா நகரச் சிறப்பு

பாண்டிநாடு நிலமகளின் மார்பில் கிடந்து ஒளிவீசும் பெரும் பதக்கம் ஆகும்; புறத்துள்ள நகரங்கள் அனைத்தும் அப் பதக்கத்தைச் சுற்றிப் பதிப்பிக்கப்பெற்ற மணிகள் ஆகும்; மதுரைத் திருநகர் அப் பதக்கத்தில் அமைந்த நடுநாயக மணி ஆகும். நில மகளுக்குத் திலகம் போன்ற மதுரைமா நகரம் திருமகளுக்குச் செந்தாமரை வீடாகும்; சரசுவதிக்கு வெண்டாமரை வீடாகும்; ஞானசத்தி (உமாதேவி)க்கு **யோக பீடம்** ஆகும்; மதுரைமா நகரில் வானுயர்ந்து நின்று வெள்ளிய ஒளி வீசும் மாடங்கள், கலைமகளின் இருப்பிடம் என்பதையேனும் அல்லது புகழ் மாதின் இருப்பிடம் என்பதையேனும் அறிவிக்கும்.

### நகரின்புறம்

மருத நிலங்களில் நெற்பயிர்கள் கரும்புகளைப் போலவும்; கரும்புகளெல்லாம் கமுக மரங்களைப் போலவும்; கமுக மரங்களெல்லாம் தென்னை மரங்களைப் போலவும்; தென்னை மரங்களோ மேகமாகிய பந்தலைத் தாங்குவதற்கமைந்த கால்களைப் போலவும் கருதும்படி உயர்ந்திருக்கும். குளிர்ந்த மலர்ச் சோலைகள், அங்கயற்கண் அம்மை இந்திரனை வென்று கொணர்ந்த பஞ்ச தருக்களே போல், மிகுந்த மணத்தினை வீசி மலர்களையும் கனிகளையும் விரும்பியவர்க்கு அளிக்கும் காட்சியை

ஒத்தன. பாக்கு மரத்துடன் நெற்பயிர்கள் உயர்ந்து நிற்க நெற் பயிரோடு பாக்கு மரத்தை வெற்றிலைக்கொடி சுற்றி நிற்கும் தோற்றம், சிவபெருமானின் திருவிழாவின்கண் தருப்பைப் புல்லோடு கட்டப்பெற்ற கொடிமரத்தை ஒக்கும்.

ஒல்லொ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீஇ ஓங்க
மெல்லி லைப்பசுங் கொடியினுல் வீக்குறு பூகம்
அல்லெ னுங்களத்(து) அண்ணல்தன் அணிவிழாத் தருப்பைப்
புல்லொ டும்பிணிப் புண்டபொற் **கொடிமரம்** போலும்.

செருந்தி மரங்கள் தாமரை மலர்களின்மேல் தேனையும் மலர்களையும் சொரிதல், மறையோதும் அந்தணர்களுக்குப் பொன்னை நீர்வார்த்துக் கொடுப்பதை ஒத்திருக்கும். தாமரை மலராகிய ஆசனத்தில் அரசவன்னம் தன் பெடையுடன் மணமக்கள்போல் வீற்றிருக்கும்; அப்போது தடாகமாகிய பெண், தன் அலையாகிய வளைக்கையால் தாமரையிலையாகிய மரகதத் தட்டில் வெண் முத்தாகிய நீரைக்கொண்டு ஆலாத்தி எடுக்கும் தோற்றம்போல் தாமரைத் தடாகம் விளங்கும். இரும்பினை ஒத்த தோள்களையுடைய வேலையாட்கள் கொடுக்கும் கரும்பு களைக் கரும்பாலைப் பொறிகள் இடியொலி போன்று நெரித்து வண்டுகள்மொய்க்கச் சாற்றைப் பொழியும் தோற்றம், பாகர் கொடுக்கும் கரும்புகளை ஒலியோடு முறித்துத் தின்று, வண்டு கள் மொய்க்கச் சாற்றினைச் சிந்தும், யானைகளைப் போல் விளங்கும்.

***அகழியின் வருணனை***

சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் ஏழு கடல்களும் மதுரைப் பதியின் கண்ணே அறவடிவாகிய தீர்த்தமாகி வந்து அமைந்துள்ளதைக் கண்டு, பெரும்புறக் கடலும் மதுரைமா நகரின் புறத்தே வந்து தங்கியதுபோல் மதிலைச் சூழ்ந்த **அகழி** விளங்கியது. அடிக்கடி மேலெழுந்து துள்ளும் வாளை மீன் களும், தம் உறுப்புக்களை விரித்துத் தவழுகின்ற ஆமைகளும் அவ்வகழியில் திரிதல், மதிலின்கண் உள்ள பொறிகளே அன்றி அக்ழியும், வாள்களையும் கேடகங்களையும் கொண்டு பகைவ ரோடு போரிடுவதை ஒக்கும். அவ்வகழிகளில் கொடிய கூற்று

வலேப்போல முதலே இருந்து வருத்துதலால் மண்ணுலகத்தவர் எவரும் அங்கு இறங்கமாட்டார்கள். இவ்வகழியே யன்றி வேதமாகிய தமிழின் பெருமையை அறிந்து வேத நெறியோடு சைவ நெறியினையும் நிலைபெறச்செய்த **வைகை நதி**யும் மதிலின் ஒரு பக்கத்துள்ள அகழியாக விளங்கும். அன்னங்களும் தாமரைகளும் நிறைந்த நீர் நிலைகள் காண்பவர்களின் கண்களை யும் மனத்தையும் கவரும்.

**மதிலின் சிறப்பு**

மதுரைமா நகர்க்குக் காவலாயுள்ள மதில், சோமசுந்தரக் கடவுளின் கையிலணிந்த பாம்பே ஆகும்; மதிலை மறைத்து நின்று மேகம் தவழ்ந்து செல்லுதல் பாம்பு நெளிந்து செல் வதை ஒக்கும். திரிபுரத்தை வெல்லுவதற்கு வில்லாயிருந்த மேருமலை, இறைவர் பாண்டி மன்னராய் இருந்தனர்; அவர்க்கு இன்னும் பகை வெல்லுதற்கு உதவி புரிந்து அவரால் அருள் பெறலாம் என எண்ணி மதிலின் வாயிலில் கோபுர வடிவாய் வந்து எதிர் நிற்றலை ஒக்கும்.

**மதிற்பொறிகள்**

சூரியனின் தேர் செல்லும் வழியாகிய வானைத் தடைப்படுத்தும் மதிலின் புறத்தே பகைவர்கள் சூழ்ந்து முற்றுகையிட்ட காலத்து அவர்களைச் சினந்து எதிர்த்துப் போர்செய்து வெல்லுவதற்கு வீரர்கள் வேண்டுவதில்லை: அம்மதிலிலுள்ள **பொறிகளே** போர்செய்து வெல்லவல்லன. அப்பொறிகளில் சில மழுப்படைகளை வீசி எறியும்; நஞ்சு தோய்ந்த வாட்படைகளை எறியும்; முத்தலைச் சூலங்களை எறியும்; வேல்களையும் சக்கரங்களையும் அனல் உமிழ எறியும்; வளைதடிகளையும் நெருஞ்சில் முள் வடிவுடைய படைகளையும் வீசும்; நெடிய கொழுப்படைகளை எறியும்; கவண் கயிற்றில் கல்லைக் கோத்து ஆரவாரித்து வீசி எறியும். வாள் போலும் பற்களையுடைய பாம்புப் பொறிகள் நாக்கை நீட்டிப் பகை வரைக் கொல்லும். மலைப்பாம்புப் பொறிகள் வாயைத் திறந்து போர் புரிபவரை விக்கும்படி விழுங்கும்; யானைப் பொறிகள் இருப்புலக்கைகளை எதிரிகளின் தலைகள் சிதற

வீசிஅடிக்கும். புலிப்பொறிகள் விரைந்து பகைவரைஅமுக்கும். குதிரைப் பொறிகள் எதிரிகளின் மார்பின் எலும்புகள் முறிய உதைத்து, அகழியின்கண் தள்ளி மீளும்; சில பொறிகள் உருள் கல், இருப்புமுளை, அரிகயிறு முதலிய படைகளை எறிந்து பகை வரை அழிக்கும்; கொள்ளிவாய்ப் பேய்ப் பொறிகள் தீயை உமிழ்ந்து கக்கும்; சில பேய்ப் பொறிகள் உடல் குப்புறும்படி செய்து குதித்து விளையாடும்; கை கொட்டும்; தோள் தட்டும். சில பொறிகள் சங்கிலிகளைப் பகைவர்மீது வீசி இழுக்கும்; கைகளை அறுத்தற் பொருட்டு அரி சங்கிலியை விட்டு இழுக் கும்; தலைகளைத் திருகும்; தீயைச் சிந்தும்; கற்களை உருட்டி விட்டுக் கொல்லும்; கல் மழை பொழியும்; வறுத்த மணலைக் கொட்டும்; ஈயத்தை உருக்கி மழைபோலப் பகைவர்மீது பொழியும்; உருகிய உருக்கு நீரையும் செம்பு நீரையும் வீசித் தெளிக்கும்; பகைவர் விடுகின்ற படைகள் அனைத்தையும் எதிர் நின்று பிடித்து அப்பகைவர் மேலே செருக்குடன் வீசும்; பல விடங்களிலும் சென்று உடுக்கை ஒலியைப் பேரிகையோடும் மிகச்செய்து திரும்பும்; நடைத்தேரை மேலே நடாத்திச் சென்று அம்பு மழையைப் பொழிந்து போர்புரியும்; மயக் கத்தைக்கொண்ட ஐம்பொறிகளையும், வெல்லமுடியாத காலனை யும் வென்றாலும் வெல்லுவதற்கு முடியாதனவாய் விளங்கும் அப்பொறிகள் **யவனர்களால்** செய்யப்பெற்றனவாம்[1].

***அகநகர்***

திருவிழாக்கள் நீங்கப்பெறாத வீதிகள் கரும்புகளையும், பூமாலைகளையும், வாசனைப்பொடிகளையும், இரத்தினாபரணங் களையும், மாந்தளிர்களையும், தூபங்களையும் தீபங்களையும், பூரணகும்பங்களையும் தாங்குவதால், (கருப்புவில் எழுதிய தொய்யில், பூமாலை, வாசனைப்பொடி, இரத்தினாபரணம் முத லியவற்றை அணிந்து தூபதீப கும்பங்களாகிய மங்கலங்களை ஏந்தித்) தலைவரின் வருகை நோக்கி அன்பு ததும்பி விரும்பி நிற்கின்ற கற்பினையுடைய மகளிரை ஒத்தன. இறைவன்

1. மதிற்பொறிகளின் செய்கைகளையெல்லாம் சிலப்பதிகாரம் அடைக்கலக் காதையிலும், சீவகசிந்தாமணி நாமகளிலம்பகத்திலும், காஞ்சிப் புராணத்திலும் விரிவாய்க் காண்க.

திருவடி நிழலில் அடைந்தவர்கள் ஆனந்தக் கண்ணீர் சொரியும் தன்மைபோல், சந்திரகாந்தக் கற்களாகிய மாளிகைகள் சந்திரன் முன்னர் தெள்ளிய நீரைச் சொரியும். இறைவன் திருவடி நீழலில் இரண்டறக்கலந்த பல உயிர்களைப்போல், பளிங்குக் கற்களாலாகிய மேல்வீடுகள்தோறும் அவ்வீடுகளின் நீழலில் சராசரப் பொருள்கள் கலந்து நிற்றலை ஒக்கும். யானைகள் செல்லும் வீதிகளிலும், பெண்கள் செல்லும் வீதிகளிலும், மான்மதம் (கத்தூரி) கமழும். மகளிரின் அடிகளில் அணிந்த செம்பஞ்சுக் குழம்பின் குறிகளை மாடமாளிகைகளும், நாடக சாலைகளும் சூடுவதே அன்றி, ஆடவர்களின் முடிகளும் தோள்களும், மார்புகளும் சூடப்பெறும்.

மகளிரின் மதிபோன்ற முகங்களும் தடாகங்களும் **குழைகளை** (குண்டலங்களை, தளிர்களை) உடையன; பெண்களின் கண்களும் மாடங்களும் **கொடிகளை** (கொடுமைகளை, கொடிகளை) உடையன; மாதர்களின் கைகளும் மலர்ச்சோலைகளும் **வண்டுகளை** (வளையல்களை, வண்டுகளை) உடையன; பெண்களின் கூந்தலும் வீதிகளும் **அறல்களை** (கருமணல்களை, அறநெறிகளை) உடையன; வானுயர்ந்த மாளிகைகளிலும் மலர்களிலும் **மணம்** (விவாகம், வாசனை) நிறைந்திருக்கும்; மலர்களிலும், நீர்த்துறைகளிலும் **தும்பி** (வண்டு, யானை) குடைந்து ஆடும்; சோலைகளும் மகளிர்வாய்களும் **அலர்கள்** (மலர்கள், பழிமொழிகள்) தூற்றும்; தடாகங்களிலும் இல்லங்களிலும் **அன்னம்** (அன்னப்பறவை, சோறு) நிறைந்திருக்கும்.

**வீதிகளின் சிறப்பு**

தலைவரோடு ஊடல்கொண்ட மகளிர் வெறுத்து எறிந்த அணிகளும், அம்மனையும், பந்தும், விளையாடும் மகளிர் சுமக்கலாற்றாது நீத்த ஆபரணங்களும், தாம் கட்டிய சிறு வீடுகளைச் சிதைத்த இளைஞரோடு வெகுண்ட பெண்கள் அறுத்தெறிந்த முத்துமாலைகளும் அந்நகரத்து வீதியில் குப்பைகளாகக் குவிந்திருக்கும். அடியார்கள் வாழும்பொருட்டு மாணிக்கங்களையும். வளையல்களையும், விறகையும் விற்றுத்திரிந்த இறைவனுடைய திருவடிமலர்களைச் சுமப்பதற்குத் தவம்புரிந்த தெருக்களின், பெருமைகள் கூறுதற்கு அளவின ஆகுமோ?

திங்களைப் பொடிசெய்து சேருகக் குழைத்து பூசினாற் போல விளங்கும் வெள்ளிய மாட வரிசைகள், திருவெண் ணீற்றை அணிந்த அடியார்களின் மெய்வேடத்தினைத் தாங்கின வைகளாய்க் கண்களால் சோமசுந்தரக் கடவுளின் திருவிழா வைக் காண்பதற்கு வந்தாற்போல் காட்சிதரும்; மதுரைத் திருவீதிகளில் தேரின் ஒலியும், குதிரைகளின் கனைப்பொலி யும், அக்குதிரைகள் கழுத்தில் அணிந்த கிண்கிணி மாலையின் ஒலியும், தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக் கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐவகை இசைக்கருவிகளின் ஒலியும், யானைகளின் பிளிற்றொலியும் ஒன்றுகலந்து எப்போ தும் பேரொலி நிறைந்திருப்பதால் மேகத்தின் இடி யொலி செவிகளில் கேட்கப்படாது.

**பரத்தையர் வீதி**

தம் கண்வலையில் அகப்பட்டு மனம் அழிபவரின் பொருளைக் கைக்கொண்டு எள்ளுக்கு எண்ணெய் அளந்து கொடுப்பது போல், கலவி இன்பத்தை விற்கின்ற **பரத்தையர்** தம் இன்பக் கலவிகளை அனைவர்க்கும் விளங்கத் தெளிவிப்பார்போல், காம நூலுட் கூறும் லீலைவகைகள் விளங்கும்படி தீட்டப்பெற்ற சித் திரங்கள் அப்பரத்தையர் வாழும் வீதிகளில் நிறைந்திருக்கும். பரத்தையர் தம் கண்களாகிய வேல்களால் காமுகர்களின் மார்புகளைத் தாக்கி, அவர்களின் கைப்பொருள்களைக் கொள்ளை கொள்ளுவர்; மல்லிகை மலர்மாலைகளைத் தொங்கவிட்டு நிலா முற்றத்தின்கண் அமைத்த மஞ்சத்தின்மீது வீற்றிருந்து காம னும் விரும்பிவரப் பல பண்களைப் பாடி ஆடவரின் ஆவியை பரிசிலாகக் கொள்வர். வீதியில் பரத்தையரின் கூந்தல் மாலை யினின்றும் கீழே உதிர்ந்த மகரந்தங்களும் கொங்கைகளினின் றும் உதிர்ந்த சந்தனமும் குதிரைக்காலில் மிதிபட்டுத் தூளாகி மேலெழுந்துசென்று தேவமாதரின் உடலையும் கூந்தலையும் சூழ்ந்து அவர்களின் இயற்கை மணத்தை மறைக்கும். ஆசிரி யர் பலமுறை ஓதுகின்ற வேதத்தினைச் சந்தைகூட்டிச் சொல்லு கின்ற அந்தணச் சிறுவர்களைப்போல் பரத்தையர்கள் சொல்லு கின்றவண்ணம் கிளிகளும், நாகணவாய்ப் பறவைகளும் எப்போதும் **ஆலவாய் உடையானே** என்றும், **அங்கயற்கண்**

**ணியே** என்றும் கூறிக்கொண்டே இருக்கும். பரத்தையர், தம் தளிர்போன்ற விரல்களால் மீட்டும் யாழ்நரம்பின் ஒலியும் அவர்களுடைய இனிய குரல் ஒலியும் ஒன்றுகலந்து இளைஞர்களின் செவியாகிய காலின் வழியே சென்று கொடிய காமமாகிய பயிர் விளையும்படி அதனை வளர்க்கும்.

**வேளாளர் வீதி**

கங்கையின் குலத்தில் தோன்றிய சிறப்பும், அரசர்க்கு அமைச்சராய் இருந்து வினைபுரியும் உயர்வும், மேழிச்செல்வமும் உடைய **வேளாளர்** தம் வீதியில் வருகின்ற விருந்தினரை இன்முகத்தோடு எதிர்சென்று அழைத்து இன்னுரை கூறும் ஒலியும், அருகிலிருந்து அறுசுவை உணவுகளை உண்ணச்செய்து முகமன்கூறும் ஒலியும், தமிழ்ப்பாக்களின் சொற்சுவை பொருட்சுவைகளை உணர்ந்து பாராட்டும் ஒலியும், புலவர்களுக்குப் பெரும் பொருளைக் கொடுத்தலினால் உண்டாகும் ஒலியும் ஒன்றுகூடிக் கடல் ஒலியைக் கீழ்ப்படுத்தும். இடையறாது விருந்தினர் வந்து விருந்துண்டு செல்லப் பின்னும் வேளாளர் விருந்தினர்களின் வருகையை எதிர்நோக்கி நிற்றல், வித்தினை விதைத்துவிட்டு மழை என்றுவரும் என்று விண்ணினை நோக்கிக் காத்துக்கொண்டிருக்கும் உழவர்களைப்போன்றிருக்கும். வேளாளர் எட்டுத்திசைகளிலும், விண்ணுலகிலும் சிறந்து விளங்கும் புகழினையுடையவர்; மெய்யறிவுடையவர்; பொறுமையும், நன்றியும் உரனும் உடையவர்; தானத்திலும் கொடையிலும் சிறந்தவர்: அன்புடையவர்; நட்பிற்கு உகந்தவர்; மானத்தை வளர்ப்பவர். இப்பண்புகளெல்லாம் அவர்களிடம் தவங்கிடந்து பெற்ற மகவுபோல் இனிதே வளர்ந்தன.

**வணிகர் வீதி**

தம்மிடம் வாணிபம் செய்ய வருபவர் கேட்கும் பொருள் இல்லையாயின், அப்பொருளினை இல்லையென்று கூறாமல், இனமாக இருக்கும் பொருளைக் கூறியும், கேட்கும்பொருள் தம்மிடம் உள்ளதாயின் விலை வரையறுத்துக் கூறிக் கொடுத்தும் பொருளாலே அன்றிச் சொல்லாலும் இலாபத்தைப் பெறுகின்ற **வணிகர்கள்** இருக்கும் கடைவீதிகளிலுள்ள திண்ணைகள்

நீல மணிகளால் விளங்கும்; சுவர்கள் பளிங்கின் ஒளியை வீசும் வயிரத் தூண்களால் விளங்கும்; அவற்றின் இடையே முத்துச் சரங்கள் வரிசையாகத் தொங்கும்.

வணிகர், கடல் தரும் பொருள்களையும், மருத நிலம் தரும் பொருள்களையும், முல்லை நிலம் தரும் பொருள்களையும், குறிஞ்சி நிலம் தரும் பொருள்களையும், பண்டசாலைகளில் கொண்டுவந்து நிறைப்பர். கரிய கம்பளம் வேய்ந்த சட்டத்தின்மேல் வரிசை வரிசையாகத் தொங்கவிட்ட பவளமாலைகளும் பொன்மாலை களும் முத்துமாலைகளும் மரகதமாலைகளும் இந்திர வில்லு களைப் போன்று விளங்கின. ஆபரணங்களை விற்கின்ற வணிகர் கடைவீதிகள் இரவும் பகலுமற்ற விண்ணுலகம்போல் விளங் கும். விலையுயர்ந்த பலவகைப் பட்டாடைகளும், அவற்றைக் காட்டிலும் விலையுயர்ந்த பருத்தி ஆடைகளும், கிடைத்தற்கரிய வேறு பல அரிய பொருள்களும், தமிழ் ஒழிந்த பதினேழு தேய வணிகர்களின் உறைவிடமும் பிறசெல்வங்களும் அங்கு நிறைந் திருக்கும். வணிகச் சிறுமியர் வைத்து விளையாடும் அம்மிகளும், குழவிகளும் மரகதத்தால் விளங்கும்; உரல்களும் உலக்கை களும் வயிரத்தால் விளங்கும்; அடுப்புகள் வெள்ளியால் செய் யப்பெற்றிருக்கும். அவர்களுக்கு அகிற்கட்டை விறகாகும்; பனிநீர் உலை நீராகும்; முத்துக்கள் அரிசியாகும்; மாணிக்கங் கள் நெருப்பாகும்; அவர்கள் சமைக்கும் பாத்திரங்கள் அனைத் தும் பொன்னாலானவை. வணிகர் வீடுகளின் கதவுகள் செம் பொன்னாலும் தாழ்பாள்கள் வயிரத்தாலும் ஆகியவை; ஆத லால், அவர்களின் செல்வத்தை அளவிட்டுக் கூற இயலுமோ?

வணிகர் வீதிகளில் தீப்பொறியை ஒத்த சிவந்த மாணிக் கங்களும், பொற் கட்டிகளும், மரகதங்களும், முத்துக்களும், வயிரங்களும், பவளங்களும் சிதறிக் கிடக்கும். நாடோறும் அரித்தெடுப்பார் கையில் வகைக்கு இரண்டாயிரம் கிடைப்பன வாம். பெரிய ஆலமரத்தில் பயன் கொள்ளுதற் பொருட்டுக் கூடிய பறவைகளைப் போல் பயனைக் கொள்ளவந்த பதினெண் மொழிகள் வழங்கும் நிலத்து மக்களும் அவரவர் மொழிகளில் பேசுவதால் பல்வேறு மொழிகளை அங்குக் கேட்கலாம். பல

வேறுவகையான பொருள்களையும், எழுவகை உலோகங்களையும், பல வகையான கலைகளையும் (ஆடைகளையும்), பிறவற்றையும், முறையால் வகைப்படுத்தி வைத்து, வேண்டுவோர் கொள்ளும் அளவிற்குத் தக்கவாறு (விலை) பகரப் படுவதால் அவ்வணிகர் வீதிகள் வேதங்களை ஒத்திருந்தன. மதுரைமா நகரம் சிவபுரமாகவும் வணிகர்களின் இல்லங்கள் சூழ்ந்த கடை வீதி அளகைமா நகரமாகவும் விளங்கும்.

**மன்னர் வீதி**

உலகிலுள்ள புற இருளைக் கதிரவன் நீக்குவதுபோலத் தீயோரிடத்தில் கடுங்கோபத்தையுடைய ஆணைச் சக்கரத்தால் குடிகளின் துன்பமாகிய இருளைக் கெடுத்துச் செங்கோல் நடாத்தி வெற்றிகாணும் அரசர்கள் வாழும் வீதியில், கடல் அலைகளையே குதிரைகளாக்கிச் சேர்த்து வைத்ததைப்போல் விளங்கும் குதிரைக்கூடங்களும், மலைகளையே பெயர்த்து வைத்தாற்போல விளங்கும் யானைக்கூடங்களும் மிகுதியாக உடையன; மழு, வச்சிரம், வில், அம்பு, முத்தலைச்சூலம், சக்கரம், வேல், நெருஞ்சின்முள், கலப்பை, வளைதடி, வாள், கேடகம், தண்டம் முதலாய படைக்கலத்தொகுதியொடு கொற்றவை (துர்க்கை) வாழ்கின்ற கூடங்களும் பல உள்ளன; தொளையையுடைய கல்லை ஏந்தித் திருமால் சக்கரத்தைச் சுழற்றினாற்போல் சுழற்றியும், செம்புழுதியிற் படிந்த யானைகளைப்போல் செந்நிலத்தில் பாய்ந்து மற்போர் புரிந்தும், வாட்படையோடு கேடகத்தைப்பற்றி ஒருவர்மேல் ஒருவர் வீசியும் அரசிளங் குமரர்கள் போர்ப்பயிற்சி பெறும் கூடங்கள் அளவற்றனவாம். நீல மணியாலாகிய மாளிகையும், செம்மணியால் கட்டப்பெற்ற மாளிகையும், பொன்னாலாகிய மாளிகையும், சந்திரகாந்தக் கற்களால் அமைக்கப்பெற்ற மாளிகையும் வரிசை வரிசையாக அமைந்திருக்கும் தோற்றம், மதுரையாகிய மங்கையின் பலவகை மணிகளைக் கோத்தணிந்த வடங்களை ஒக்கும். மேகங்கள் மின்னலை வாள்போல வீசித் தம்முள் போர்புரிதல்போல, யானைகள் வெள்ளிய தந்தங்களை எதிரெதிரே நீட்டி உடலில் மூழ்கும்படி குத்தி, மேகங்கள் முழங்குவதுபோல முழங்கி, அம்மேகங்கள் மழை சொரியும் தாரைபோல இரத்தம் சொரியும்படி வீரர்கள்

அவ்யானைகளைப் போர்ப் பயிற்சி செய்விப்பார்கள். மனோவேக மும் தங்கள் வேகத்திற்குப் பின்னிடும்படி செல்லவல்ல குதிரை கள் பூட்டப்பெற்ற தேர்களைப் பூமடந்தையின் முதுகு கிழியும் படி அவ்வீரர்கள் செலுத்துவார்கள். தம்முயிரைப்பற்றிச் சிறி தும் இரங்காதவர்களாய்ப் போர்முனையில் எதிர்த்த வீரர்கள் செய்யும் போரைப்போலச் செய்யும்படி கொண்டையை யுடைய சேவல்களையும், ஆட்டுக்கடாக்களையும் போரிற் செலுத்தி அவற்றின் துன்பங்களை நோக்காமல் போர் ஒன்றையே நோக்கி வீரர்கள் நிற்பர். முத்தினை ஒத்த பேதைச் சிறுமியர் வையையாற்றின் வெள்ளிய முத்துக்களால் கட்டிய சிறு வீடுகள் சிதையும்படி அரசிளங் குமரர்கள் சிறுதேர் ஓட்டுவார்கள். அதனைக்கண்ட சிறுமியர்கள் கண்ணீரைச் சிந்தித் தாங்கள் அணிந்துள்ள முத்துமாலைகளை அறுத்துச் சிறு தேர்களின் ஓட்டம் தடைப்படும் வண்ணம் எறிவர். அதனைக் கண்ட அரசிளஞ் சிறுவர்கள் முத்துப்போல் புன்னகையினைப் புரிவர். முடிமிசை வேப்பம்பூ மாலை கமழவும், கால்களிடத்து ஆத்திமாலையும் பனம்பூ மாலையும் கமழவும், பாண்டி மன்னர் வழி வழியாகச் செங்கோல் நடாத்தும் எழுநிலை மாடங்களை யுடைய அரண்மனை மதுரை நகரின் வடகிழக்குப் பக்கத்தில் உள்ளதாகும்.

**மறையவர் வீதி**

ஆத்திகர்கள் ‘உண்டு’ என்று கூறும் அறம் முதலிய நான்கு பொருளும்,‘இல்லை’என்றுகூறும் நாத்திகர்களின் நாவினை அறுக் கின்ற வாளாகச் சிவபெருமான் உரைத்தருளிய வேதங்களின் முடிவும் உணர்ந்து மனந்தெளிந்து, முத்தீ வளர்க்கும் பெருஞ் செல்வர்களாகிய மறையவர்களின் வீடுகளனைத்தும் இடையில் முஞ்சிப் புல்லாகிய அரைஞாண் ஒளிரவும், தலையில் தாமரை மலர் சூடிய சிகை அசையவும், ஆடையின் சொருகல் முன்னே கொய்சமாகத் தொங்கவும், மார்பில் மான்தோல் முடிந்த முப்புரி நூல் விளங்கவும், பலாசுக்கோலைக் கையில் கொண்டு மறைபயில் சிறுவர்களின் வேதம் ஓதும் சாலையாம். மறைச்சிறுவர்கள் தெய்வ மறைகள் பயில்வதைக்கேட்டு அவ்வில்லங்களிலுள்ள கிளிகளும் அம்மறைகளைக் கூறுநிற்

கும்; அக்கிளிகளிடமிருந்து வேற்றிடங்களிலுள்ள நாகணவாய்ப் பறவைகளும் அம்மறைகளைக் கற்று வானுலகத்தில் பொருந்திய கற்பகச் சோலையின்கண் உறையும் கிளிகளுக்கெல்லாம் அவற்றைக் கற்பிக்கும்.

கழகங்கள் அனைத்தும் நான்கு வேதங்களும், ஆறு அங்கங்களும், பதினெண் மிருதிகளும், பதினெண் புராண நூல்களும் ஆகிய இவற்றை அறிந்தோர்களாலும், பிற சமயத்தவர்களின் வாதங்களைப் போக்கத் தக்க சிறந்த அறிவு படைத்தவர்களாலும் பொலிவு பெற்று விளங்கின. உறியால் பொதியப்பட்ட கமண்டலத்தைக் கையில் உடையவரும், காவி ஆடை யுடுத்தவரும், சிற்றுயிர்களுக்கு நேரும் துன்பத்தை அஞ்சி மெல்ல நடக்கும் நடையினை உடையரும், அறியாமையைப் போக்கும் ஒளி நிறைந்த மழுவைப்போல் கோவணங் கட்டிய தண்டத்தை யுடையவரும், உபநிடதங்களை அன்றி வேறு நூல்களைச் சிந்தியாதவருமாகிய **தவமுனிவர்கள்** வாழும் மடங்கள் அவ்வீதிகளில் எங்கும் உள்ளன. சமையல் அடுப்புக்களினின்று எழுந்த புகையும், மேல் மாடத்தில் அகிற் கட்டையினின்று எழுந்த புகையும், வேள்விக்குண்டத்தினின்று எழுந்த புகையும். ஒன்று கலந்து சூரியனை மறைத்து இருளாக நிற்றல், சிவபெருமானுடைய திருக்கண்களை உமாதேவியார் தமது கரத்தால் மூடியபோது இருண்ட நாளை ஒக்கும்.

**சைவர் வீதி**

தெய்வத் திருவெண்ணீற்றையும், திருவைந்தெழுத்தையும் மரக்கலமாகக்கொண்டு, இருவினைகளால் நேரும் எழுவகைப் பிறப்பாகிய ஏழு கடல்களையும் கடந்து, சிவபெருமான் திருவடியாகிய முத்திக் கரையை அடையும் **சைவப் பெரியார்கள்** வாழும் வீதிகளில் மடங்கள் பல திகழ்வன. அங்குச் சிவபெருமானைப் பூசைசெய்து இம்மை மறுமைப் பயனைப் பெறுவோரும், சிவனடியார்களைப் பூசித்து வருகின்ற பிறப்பைப் போக்குவோரும், எங்கும் சிவாகமங்களைக் கேட்டுச் சஞ்சித வினையைத் தடுப்போரும், சிவபெருமான் திருவுருவைச் சிந்தித்து ஆணவத்தைப் போக்குவோருமாகிய பெரியோர்கள் பலர் உளர்.

ஆகமங்களுள் இலட்சம் கிரந்தங்களை ஆராய்ந்து விதி விலக்குக் களை நன்குணர்ந்தவர்களும், தம் அடியைப்பற்றிய சமயிகள் (தொண்டர்கள்), மைந்தர்கள், சாதகர்கள் ஆகிய இவர்களின் பாசத்தைப் போக்கி வீடுபேற்றை அருளுபவர்களுமாகிய **சைவ ஞானசிரியர்** பலர் அங்கு உளர். வேதங்களையும், ஆகமங் களையும் முறையே பொதுவாகவும் சிறப்பாகவும் சிவபெருமான் அருளிய முறைமையினால், விதிவிலக்கு மொழிகளும், வீடும் ஒன்று என்றும், இரண்டு என்றும் கூறுகின்ற மாறுபாடு இல்லை என்றும் தெரிந்த **சிவயோகியர்** கூட்டங்கள் பல அங்கு உள்ளன.

**திருக்கோயில் முதலியன**

வேய்ங்குழலின் ஒலியும், தும்புரு நாரதர்களின் இசைப் பாட்டின் ஒலியும், பெண்களின் ஆடலின் ஒலியும், தேவாரத் திருமுறை ஓதும் ஒலியும். திருவிழாவின் ஒலியும், நான்மறை களின் ஒலியும், முழவின் ஒலியும், நீங்கப்பெறுதது சொக்கலிங் கப் பெருமான் எழுந்தருளிய **திருக்கோயில்** ஆகும். அங்கு இறைவன் திருநடனம் புரியும் வெள்ளியம்பலத்தினின்று மேலே வளர்ந்தெழுகின்ற வெள்ளிய ஒளியின் நீட்சி, கயிலைமலை யின் உயர்ச்சியைப்போல் விளங்கும். சோமசுந்தரக் கடவு ளுக்கு அருகிலே வண்டுகள் ஒலிக்கத் தேன் துளித்து மலர்களைத் தூவிக்கொண்டு நிற்கும் **கடப்ப மரம்** கண்களினின்றும் ஆனந்த நீர் பெருக, பல மலர்களைத் தூவித் துதித்து வழிபட்டு வரம் வேண்டிநிற்கும் இந்திரனை ஒக்கும்: கடல் அதுவன்று இது தான் என்று சொல்லும்படி அமைந்த **அகழியும்**, சக்கர வாள கிரி அதுவன்று இதுதான் என்று கூறும்படி விளங்கும் **மதிலும்**, எட்டாய்விளங்கும் மலைகள் அவை அல்ல இவைதாம் என்று மொழியும் **கோபுரங்களும்**. மேருமலை அதுவன்று இதுதான் என்று சொல்லும்படி வானுலகத்தினின்றும் இறங்கிய **இந்திர விமானமும்** அக்கோயிலை அழகுசெய்து விளங்கும்.

**மதுரைமா நகரச் சிறப்பு**

வேத முடிவையும், நாத தத்துவத்தின் முடிவையும் கடந்த சிவபெருமானின் திருவடிகளை அன்போடு வழிபட்டு ஒழுகு வார்க்கு அச்சிவபுண்ணியம் தரும் பயன் தழைப்பதுபோல,

மதுரைத் திருநகரில் எல்லா வளங்களும் தழைத்துள்ளன. சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து வீடுபேறு அடைந்தவர் அடையும் இன்பம்போல் அம்மதுரைமாநகரில் வாழும் மக்கள் ஐம்பொறிகளாலும் கொள்ளத்தக்க எல்லாப் பொருள்களும் மிக நிறையப்பெற்று இன்பமுறுவர். முதல்வராகிய சிவபெருமான் பாண்டியனாகி அரசுசெய்தமையால் மதுரைமாநகர் திருமகளைப் பெற்றது; அத்திருமகள், பல பொருள்களும் நிறைந்த செல்வத்தைப் பெற்றாள்; அச்செல்வம், பல அறங்கள் என்று சொல்லப்படுகின்ற பெண்ணை ஈன்றது; அப்பெண், சிறந்த புகழைப் பெற்றாள். சிவலோகம் என்று துதிப்பதற்கு அமைந்த மதுரைமாநகரில் தமது தேவலோகத்திலுள்ள பொருள்களிலும் சிறந்த பல செல்வங்கள் விளங்குவதால் அவற்றைத் தேவர்கள் கண்டு வியந்து மனதிற் கொண்ட பொறாமையால் இன்னும் கண் துயிலாதவராய் இருக்கின்றனர்.

மணங்கமழும் மாலைகளை அணிந்த மீனக்கொடியையுடைய பாண்டி மன்னர் வேற்படையை எறிந்து கடலைச் சுவறச் செய்து வெற்றிகொண்டதும், தேவேந்திரனுடைய முடியைப் பொடியாக்கி அவன் செருக்கை அடக்கி வெற்றிகொண்டதும், மேகங்களை விலங்கிட்டுச் சிறையிலிட்டதும், மேருமலையைச் செண்டால் அடித்து வெற்றிகொண்டதும் இம்மதுரைமாநகரின் வலிமையினாலே அல்லவா?

மதுரைமாநகரின் செல்வத்தை இறைவனாலே அன்றி ஆயிரம் நாப்படைத்த ஆதிசேடன் கூறவும், ஆயிரங் கண் படைத்த இந்திரன் காணவும் முடியாது. அறம் செய்வதற்குரிய இடம் பூமி என்றும், அவ்வறத்தால் விளையும் பயனை நுகருமிடம் விண்ணுலகம் என்றும் கூறுவர்; ஆனால் எப்பொழுதும் அறம் புரிதற்கு இடமாயுள்ளதும், அதனால் வருகின்ற இன்பத்தையடைதற்கு இடமாயுள்ளதும் மதுரைமா நகரமே ஆகும்.

மதுரைமா நகரில் பண் கனிந்த இனிய சொல்லையுடைய மகளிரின் யாழிசையோடு கூடிய பாடலைத் தேவாமிர்தமும்

வெறுக்கும்படி செவிகளில் ஏற்று இன்பமுற்றும், அமுதம் போன்ற மகளிர் செய்யும் நடனத்தைக் கண்களால் கண்டு மகிழ்ந்தும் காலங் கழிப்போர் பலர்; தான தருமங்களை நூலறிவினையுடைய சான்றோர்க்குச் செய்து காலங் கழிப்போர் பலர். சோமசுந்தரக் கடவுளை மூன்று காலங்களிலும் சென்று வணங்கிச் சிவபூசையினை ஆகம முறைப்படி செய்வதிலும், இறைவன் செய்தருளிய திருவிளையாடல்களைக் கற்றோர் சொல்லக்கேட்டுச் சிந்திப்பதிலும், அடியார்களை அன்போடு பூசை செய்து வழி படுவதிலும் காலங் கழிப்போர் பலர். கற்கத் தகும் மெய்ந் நூல்களைக் கற்றும்,அந்நூற்பொருளைக் கற்றூர் வாய்க்கேட்டும், கேட்டவற்றைக் கருத்தில் பதியுமாறு பலகால் சிந்தித்தும், கேட்பவருக்கு ஐயம் திரிபு நீங்க அறிவித்தும், [1]இரவும் பகலும் அற்றவிடத்தில் சச்சிதானந்த வடிவமாகிய சிவானந்த வெள்ளத்தில் படிந்துங் காலங் கழிப்போர் பலர்.

**காப்பியத் தலைவன் பெருமை**

காப்பியத் தலைவனாக அமைபவன் தன்னிகரற்றவனாக இருக்கவேண்டுமென்று முன்னோர் கூறுதல் உபசார மொழி அல்லவா? உண்மையில் அத்தகைய காப்பியத் தலைவனை மானிட வடிவில் காண்பது அரிது. ஆனால் தன்னிகரற்ற தனிப்பெருங் கடவுளே பாண்டி மன்னனாய்—இந்நகர்க்கு அரசனாய்—இந்நூலின் காப்பியத் தலைவனாய் விளங்கினார். இந்த அகில உலகம் அச்சோமசுந்தரப் பெருமானுடைய திருவாணையினாலே நடைபெறுகிறதெனில், அவர் தன்மையை எங்ஙனம் எடுத்துக் கூறுவேன்? மற்றைய அரசர்கள் தேவர்கள் முதலியோரின் தன்மைகளைப்போலக் கருதிக் கூறும் தகுதியை உடையதோ? அன்று. இனித் **தலச்சிறப்பு, தீர்த்தச்சிறப்பு, மூர்த்திச் சிறப்புக்களைக்** கூறிச் சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய **அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும்** முறையாகக் கூறுவேன்.

செய்யுள்—109

ஆகச் செய்யுள்—232

---

1. இரவும் பகலும் அற்றவிடம்-இது கேவல சகலங்களின் நீங்கிய சுத்தாவத்தையில் நிற்கும் அருளாதார நிலை ஆகும்.

## 8. தலச்சிறப்பு

**தலத்தின் மேன்மை**

"சிவபெருமானிடம் அன்பு கொண்ட முனிவர்களே! நீங்கள் விரும்பிக் கேட்ட தலம் **திருவாலவாய்** ஆகும். அத்தலத்தில் **பொற்றாமரை** எனப் பெயர் கொண்ட ஒரு **தடாகமும்**, அதன் அருகில் ஞானவடிவாய்த் தோன்றிய **சோமசுந்தரக் கடவுள்** எனப் பெயர் கொண்ட ஒரு **சிவலிங்கமும்** உள்ளன. திருவாலவாய்க்கு இணையாகிய ஒரு தலமும், பொற்றாமரைத் தீர்த்தத்துக்கு நிகராகிய தீர்த்தமும், அங்கு எழுந்தருளியிருக்கும் சிவலிங்கத்திற்கு ஒப்பாகிய சிவலிங்கமும் மூவுலகத்தினும் இல்லை; இஃது உண்மை. இம்மூன்றனுள் முதன்மையதாகிய **தல விசேடத்தை** முன்னர் கூறுகிறேன்; கேட்பீர்களாக.

**கேட்க முத்தி தரும் ஆலவாய்**

எவ்வுலகத்திலும் புண்ணியத் தலங்களே சிறந்தன; அப்புண்ணியத் தலங்களுள் சிவத்தலங்களே சிறந்தன; அச்சிவத்தலங்களுள் அறுபத்தெட்டுச் சிவத்தலங்கள் சிறந்தன; அவற்றுள் [1]பதினாறு சிவத்தலங்களே சிறந்தன; அவற்றுள்ளும் நான்கு சிவத்தலங்களே சிறந்தனவாகும். அந்நான்கு சிவத்தலங்கள் [2]**சிதம்பரம், காசி, திருக்காளத்தி, திருவாலவாய்** (மதுரை) என்பனவாம். இந்நான்கினுள்ளும் திருவாலவாயே மிகச்சிறந்ததாம். சிதம்பரம் தரிசித்தவர்க்கு வீடுபேற்றை அருளவல்லது; காசி தன்னிடம் தங்கி இறப்பவர்க்கு முத்திதர வல்லது; திருக்காளத்தி அன்போடு வழிபடுபவர்க்கு வீடுபேற்றை அளிக்க வல்லது.

---

1. பதினாறு சிவத்தலங்கள்-கயிலாயம், திருக்கேதாரம், ஸ்ரீசைலம், கோகர்ணம், காசி, திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சிபுரம், திருவண்ணாமலை, விருத்தாசலம், சிதம்பரம், திருவெண்காடு, திருவாரூர், வேதாரணியம், மதுரை, இராமேசுவரம் என்பன.

2. சிதம்பரம், திருக்காளத்தி - இவை இரண்டும் பஞ்ச பூதத் தலங்களைச் சேர்ந்தவை. காசி-இது பன்னிரண்டு சோதி லிங்கத் தலங்களைச் சேர்ந்தது. திருவாலவாய்-இது சப்த தலங்களைச் சேர்ந்தது.

அன்னமலி வயற்புலியூர் காசிநகர்
காளத்தி ஆல வாயாம்
இன்னவளம் பதிநான்கில் திருவால
வாய்அதிகம்; எவ்வா றென்னின்
மின்னவிர்**அம் பலங்காணக்** காசிநகர்
வதிந்(து) இறக்க வியன்கா ளத்திப்
பொன்னகரம் பத்தியினால் வழிபாடு
செயவளிக்கும் போகம் வீடு.

ஆனால் **திருவாலவாயோ** தன் பெயரைக் கேட்டபொழுதே போகத்தையும், பேரின்ப வீட்டையும் அளிக்கும். பரம் பொருளாகிய சிவபெருமான் எல்லாத் தலங்களையும் படைக்கும் பொருட்டு முன்னே இத் திருவாலவாயைப் படைத்து இதன் கண் எழுந்தருளி யிருந்தார்.

திருவாலவாய் என்று ஒருவர் சொல்லக் **கேட்டவரே** அறத்தை அடைவர்; திருவாலவாய் என்று **நினைத்தவரே** பொருளை அடைவர்; திருவாலவாயைத் **தரிசித்தவரே** இன்பத்தை அடைவர்; திருவாலவாயில் எப்பொழுதும் **வசித்த வரே** வீடுபேற்றை அடைவர்.

திருவால வாயென்று கேட்டவரே
அறம்பெறுவர்; செல்வம் ஓங்குந்
திருவால வாயென்று நினைத்தவரே
பொருளடைவர்; தேவ தேவன்
திருவால வாயதனைக் கண்டவரே
இன்பநலஞ் சேர்வர்; என்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரே
பரவீடு சேர்வர் அன்றே.

**எளிதில் பயன் அளிக்கும் திருவாலவாய்**

கங்கைநதிசூழ்ந்த காசி முதலிய சிவத்தலங்கள் மறுமையில் வீடுபேற்றை அளிக்கும். வையைநதி சூழ்ந்த திருவாலவாய், தன்னிடத்து வசிப்பவர்க்கு இம்மையிலே [1] சீவன் முத்தியையும்

1. சீவன் முத்தி-இஃது உடலோடு கூடியிருந்தே உப்பளத்திற் பட்ட புல்போல் பசுகரணமெல்லாம் சிவகரணமாகிச் சாக்கிரத்தே அதீதத்தைப் புரிந்து எப்பற்றுமின்றிச் சிவபோகம் துய்த்தல் ஆகும்,

மறுமையில் பரமுத்தியையும் கொடுக்கும். அதனால் திருவாலவாய் தனக்குத்தானே ஒப்பாகும். ஆதலால், இப்பதியினை விடுத்து வேறு பதியினை அடைந்து தவம் புரிவோர் தம் உள்ளங்கையில் பெற்ற அமுதத்தை ஒத்த தேனெடு கலந்த இனிய பாற்சோற்றை உகுத்துவிட்டுப் புறங்கையை நக்குபவர் போல்வர். மற்றைய தலங்களில் [1]**அசுவமேதம், வாசபேயம், சோடசாகம், அக்கினிட்டோமம், இராசசூயம்** முதலிய பல வேள்விகளைச் செய்தலால் வரும் பயனும், [2]**தரிச பூரணம்** முதலிய கிரியைகளைச் செய்தலால் வரும் பயனும், எள், நெய், அன்னம், கன்னி, குதிரை, தேர், யானை, வீடு, வெள்ளி, பசு, பொன் ஆபரணம், ஆடை, விளைநிலம் முதலிய தானங்களைச் செய்தலினால் வரும் பயனும், காசி முதலிய சிவத்தலங்களில் வசித்தலால் வரும் பயனும், கங்கை, யமுனை, சரசுவதி, காவிரி, கிருஷ்ணை, துங்கபத்திரை, பாலி, தாமிரபருணி முதலிய நதிகளில் நீராடிய தவத்தால் வரும் பயனும் திருவாலவாயில் எந்நாளும் வாழ்பவர்க்கு எளிதில் உண்டாகும்.

**மிகுந்த பயன் தரும் திருவாலவாய்**

பிறபதிகளில் செய்த [3]கொலை, களவு, கள்ளுண்ணல், பிறர் மனை நயத்தல் முதலிய பாதகங்களெல்லாம் திருவாலவாயிலே என்றும் வாழ்பவரை விட்டு நீங்கும். மற்றைய தலங்களில் மாதந்தோறும் [4]**சாந்திராயண விரதம்** அநுட்டித்தலால் வரும்

---

1. அசுவமேதம், இராசசூயம்-இவை அரசர்கள் செய்யும் யாக வகைகள். வாசபேயம், சோடசாகம், அக்கினிட்டோமம்-இவை அந்தணர்கள் செய்யும் யாக வகைகள்.

2. தரிசபூரணம்-இது சிவபெருமானுக்கு மகிழ்வுதரும் ஒருவகைக் கிரியை ஆகும்.

3. இக் கொலை முதலிய பெரும் பாதகங்களை, "மறையவர்ச் செகுத்தோன் கடிமது நுகர்ந்தோன் வயங்குசெம் பொன்களவு) ஆண்டோன், நிறையருட் குரவன் பன்னியைப் புணர்ந்தோன் நிகரில்இக் கொடியரை யாரும், அறைவரால் மாபா தகர்என இவரை அடுத்தொரு வருடம்நட் டவரும், முறைதவிர் மாபா தகர்களே என்ன மொழிவதற்(கு) ஐய மொன்(று) இன்றே" எனவரும் சூதசங்கிதையாலும் அறிக.

4. சாந்திராயண விரதம்—இது பௌர்ணமி தொடங்கி அமாவாசை வரைக்கும் ஒவ்வொரு பிடி அன்னம் குறைத்துப் புசித்தும், அமாவாசை

பயன் இப்பதியிலே இரவில் உண்ணுதலால் உண்டாகும். வேறு தலங்களில் ஒருமாதப் பட்டினி விரதத்தால் வரும் பயன் இப்பதியிலே ஒருநாள் பட்டினி விரதத்தால் உண்டாகும். பிற தலங்களில் நான்கு மாதம் நோற்கும் விரதத்தாலே வரும் பயன் இப்பதியை அடைந்திருந்து **அட்டமி விரதம்** அநுட்டித்த லால் உண்டாகும். மற்றைய தலங்களில் ஆறுமாதம் நோற்கும் நோன்பால் பெறும் பயனை இப்பதியிலே **சோமவார விரதம்** அநுட்டித்தலால் அடையலாகும். பிற பதிகளில் ஓராண்டு உணவினை விடுத்துச் செய்யும் விரதத்தால் வரும் பயனை இப் பதியிலே **சிவராத்திரி விரதம்** அநுட்டித்தலால் பெறலாகும். ஐம்பொறிகளையும் வென்ற தவசி இப்பதியிலே மூன்றுவேளையும் நிறைய உண்டு வசித்திருந்தானாயினும் அவன் [1]காற்றை உண்டு பெருந்தவம் செய்தோனாவன்.

**இணையற்ற பதி திருவாலவாய்**

அறிவால் உயர்ந்த முனிவர்களே! இந் நான்மாடமாகிய திருவாலவாயின்கண் அந்தணர்கட்கு **ஒரு பிடி அரிசியும்,** தவத்தினருக்கு **ஒரு பிடி அன்னமும்** கொடுத்தவர் யாவராயினும் பிற இடங்களிலிருந்து **சோடச தானம்** செய்த பயனை அடைவர். பல்வகைத் தலங்களில் வசித்தலால் வரும் பயனையும், பல்வகைத் தீர்த்தங்களில் நீராடியதனால் வரும் பயனையும், பல்வகைத் தானங்களைச் செய்வதால் வரும் பயனையும், பல்வகைப் பூசையினைச் செய்வதால் வரும் பயனையும், பல்வகைத் தவங்கள் முழுதும் செய்து முடித்தலால் வரும் பயனையும், பல்வகை மந்திரங்களைச் செபித்தலால் வரும் பயனையும், கேட்டறிந்த பல்வகை நூற் பொருள்களை ஆராய்ந்தறிவதால் வரும் பயனையும், பல்வகை யோக ஞானங்களெல்லாம் பயின்று மெய்ப் பொருளை அறிந்து, தற்போதம் அடங்கி யிருத்தலால் வரும் பயனையும் இப்பதியில் எந்நாளும் வசிப்போர் அடைவர்.

---

தொடங்கிப் பௌர்ணமி வரைக்கும் ஒவ்வொரு பிடி அன்னம் அதிமாகப் புசித்தும் அனுட்டிக்கும் ஒருவகை நோன்பு ஆகும்.

1. காற்றினையுண்டு பெருந்தவம் புரிதலை, "புற்றுமாய் மரமாய்ப் புனல்காலே உண்டியாய் அண்ட வாணரும் பிறநம், வற்றியாரும்நின் மலரடி காணா மன்ன!" எனவரும் திருவாசகம்-செத்திலாப்பத்து அடிகளாலும் உணரலாம்.

ஆதலின், இப்பதிக்கு இணையான பதி எங்குமில்லை. இப்பதியின் பெருமையினைச் சிவபெருமானே அன்றி, அறியவல்லர் வேறு யாவர்? ஆதலின், இருவினைகளை வெல்லக் கருதுபவர் இப்பதியை அடைந்து வாழ்தல் வேண்டும்.

முன்னொரு காலத்தில் பிரமதேவர், திருக்கயிலாயம் முதலான எல்லாப் பதிகளையும் ஒரு தராசின் தட்டிலும், திருவாலவாயினை மற்றைத் தட்டிலும் வைத்து இரண்டையும் தூக்கியபோது திருவாலவாய் மிகக் கனத்திருத்தலைக் கண்டு இதுவே மூவுலகங்களிலும் மிக மேலாகிய தலம் என்று உறுதி கொண்டார்.

**திருவாலவாயின் வேறு பெயர்கள்**

இப்பதியினைப் பெரியோர்கள் சிவநகரம், கடம்பவனம், [1]சீவன் முத்திபுரம், [2]கன்னிபுரம், திருவாலவாய், மதுரை, பூலோக சிவலோகம், [3]சமட்டி விச்சாபுரம், நான்மாடக் கூடல், [4]துவாத சாந்தத்தலம் எனப் பல பெயர்களால் அழைப்பர்" என்று **அகத்தியர்** கூறியருளினார். அதனைக்கேட்ட முனிவர்கள் யாவரும் வியப்பு எய்தி, "தேவரீர் தலப்பெருமையினை நன்கு கூறி யருளியதை நாங்கள் கேட்டு, உடலைப் பெற்றதனால் அடையவேண்டிய பயன் முழுதும் இப்பொழுதே அடைந்தோம். இனி, பொற்றாமரைத் தீர்த்தத்தின் சிறப்பைக் கூறி யருளவேண்டும்" என்று வேண்டினர். அவர்களின் விருப்பத்திற்கிணங்கிய அகத்தியர் **தீர்த்தச் சிறப்பைக்** கூறலானார்.

செய்யுள்—23

ஆகச் செய்யுள்–255

---

1. சீவன் முத்திபுரம் - இது சீவன்முத்தி யளிப்பதால் பெற்றபெயர்.

2. கன்னிபுரம் - இது தடாதகைப் பிராட்டியார் கன்னியாயிருந்து ஆட்சிபுரிந்ததால் பெற்றபெயர்.

3. சமட்டி விச்சாபுரம் - இது சிவஞானம் முதலிய எல்லா ஞானங்களையும் தருதலால் பெற்றபெயர்.

4. துவாத சாந்தத் தலம் - இது விராட் புருடனுக்கு உச்சிமேல் பன்னிரண்டங்குல முடியிலுள்ள இடமாக இருத்தலால் பெற்றபெயர்.

## 9. தீர்த்தச் சிறப்பு

### மிகப் பழமையான பொற்றாமரைத் தீர்த்தம்

உமாதேவியாருடைய அன்பு பொழியும் கருணைத் திருமுகத்தின் பொலிவுபோல விளங்கும் **பொற்றாமரைத் தீர்த்தத்தை,** நதிகளுக்கு அரசுபோல் விளங்கும் கங்கை, காவிரி முதலிய நதிகளும், கடல்களும், மேகங்களும், பிற நீர் நிலைகளும் தோன்றுவதற்கு முன்பே தமக்குத் திருமஞ்சனம் செய்தற் பொருட்டுச் சோமசுந்தரக்கடவுள் தோற்றுவித்தார்.

### சிவகண நாதர்களின் வேண்டுகோள்

முன்னொருகாலத்தில் ஞானானந்த ஒளி வடிவாகிய சிவ பெருமான், ஒரு திருவிளையாட்டைத் திருவுளத்துக்கொண்டு உமாதேவியாரோடு இடபவாகனத்தின்மீது எழுந்தருளி நந்தி முதலிய கணத்தலைவர்கள் தமக்கு முன்னும் பின்னும் பக்கமுமாகிய எங்கும் சூழ்ந்து துதிக்க, நாகருலகம், பொன்னுலகம், சத்தியலோகம், வைகுண்டம், தமது சிவலோகம் முதலிய இடங்களுக்குச் சென்று உலாவித் திருவிளையாடல் புரிந்து திரும்பினர். அப்போது திருமாலும், நான்முகனும், தேவேந்திரனும் சிவபெருமான் திருமுன்னர் வந்து வணங்கித் துதிக்க, அவர்களுக்கு வேண்டிய வரங்களை அளித்துத் தமது திருவாலவாயினை அடைந்து சிவகணத் தலைவர்கள்மேல் திருக்கடைக்கண் சாத்திச் சிவலிங்கத்தில் சென்றெய்தும் தருணத்தில், திருநந்திதேவர் முதலிய கணத்தலைவர்கள் வணங்கித் துதித்து, "ஆனந்தத் தாண்டவம் புரியும் எம்பெருமானே! இச் சிவலிங்கப் பெருமானுக்குத் திருமஞ்சனஞ் செய்யவும், அடியேங்கள் நீராடி உய்யவும், கங்கை முதலிய நதிகளும் தடாகங்களும், பிற நீர் நிலைகளும் இல்லையே; ஆதலால், இங்கு ஒரு தீர்த்தம் உண்டாக்கியருளவேண்டும்" என்று வேண்டினர்.

### பொற்றாமரைத் தீர்த்தம் தோன்றிய வரலாறு

உடனே சிவபெருமான் அச்சிவலிங்கமூர்த்திக்குத் தென் கீழ்த் திசையிலே தமது சூலத்தை எடுத்துப் பூமியில் ஊன்றினார். அச் சூலம் பூமியையும் பாதாளத்தையும் அண்ட

கடாகத்தையும் கிழித்தது. அக் கடாகத்தின் புறத்திலே சுற்றிக் கிடந்த பெரும்புறக் கடலானது ஊழிக் காலத்தில் பொங்கி எழுங் கடல்நீர் போலப் பெருக்கெடுத்து மேலே எழுந்துவந்தது. சிவபெருமான் தமது திருக்கரத்தால் அதன் பெருக்கை, "அமைக" என அமைத்துச் சடா முடியிலுள்ள கங்கை நீரை அதில் தெளித்துக் கலந்து புண்ணிய தீர்த்த மாகச் செய்தார்; பிறகு, நந்திதேவரையும் மற்றைக் கணத் தலைவர்களையும் நோக்கி," நாம் பிற தீர்த்தங்களை உண்டாக்கு வதற்கு முன்னே இத்தீர்த்தத்தை உண்டாக்கியதால் இஃது **ஆதி தீர்த்தம்** எனவும், இனி உண்டாக்கப்படும் தீர்த்தங்க ளெல்லாவற்றிற்கும் மேலாக விளங்குவதால் **பரம தீர்த்தம்** எனவும், இதில் நீராடியவருக்கு மங்கலத்தைக் கொடுத்தலால் **சிவ தீர்த்தம்** எனவும், ஞானத்தைக் கொடுத்தலால் **ஞான தீர்த்தம்** எனவும், முத்தியைத் தருவதால் **முத்தி தீர்த்தம்** எனவும் பெயர் பெறும்.

இன்னமா தீர்த்தந் தன்னை எனைப்பல தீர்த்தங் கட்கும்
முன்னம்யாம் இங்குக் கண்ட முதன்மையால் **ஆதி தீர்த்தம்**
என்னலாம்; இனியுண் டாக்கும் தீர்த்தங்கள் எவைக்கும் மேலாய்
மன்னலால் **பரம தீர்த்தம்** எனப்பெயர் வழங்க லாகும்.

மருட்கெட மூழ்கி னோர்நன் மங்கலம் பெறலால் நாமம்
அருட்**சிவ தீர்த்தம்** ஆகும்; புன்னெறி அகற்றி உள்ளத்(து)
இருட்கெட ஞானந் தன்னை ஈதலான் **ஞான தீர்த்தம்**;
தெருட்கதி தரலான் **முத்தி தீர்த்தம்**என்(று) இதற்கு நாமம்.

இத் தீர்த்தத்தில் நீராடித் தர்ப்பணஞ்செய்து, தானங் கொடுத்து அதன் கரையிலிருந்து திருவைந்தெழுத்துக்களைச் செபித்து அன்போடு நம்மை அடைந்து வணங்கி, வழிபட்டு வலம்செய்து துதித்தவர், மானுடப் பிறவியைப் பெற்றதனு லாகிய பயனைப் பெறுவர். இத் தீர்த்தத்தினுல் நமக்கு அபி டேகம் செய்யின் பதினுன்கு உலகங்களிலுமுள்ள உயர்ந்த தீர்த் தங்கள் எல்லாவற்றுலும் அபிடேகம் செய்ததால் வரும் பயனைப் பெறுவர். ஆதலால், இத்தீர்த்தத்தில் வந்து நீராடி இங்கு எழுந்தருளியிருக்கும் நமது அருட்குறியாகிய சிவலிங் கத்தை உள்ளன்போடு பூசனை புரியுங்கள்" என்று கூறி

யருளினர். பிறகு சிவபெருமானும் அத் தீர்த்தத்தில் மூழ்கி அக்கணத் தலைவர்களையும் மூழ்கச்செய்து சிவலிங்கத்துள்ளே மறைந்தருளினர். திருநந்திதேவர் முதலான சிவகணத் தலைவர்கள் யாவரும் அந்தத் தீர்த்தத்தைக்கொண்டு சிவாகம முறைப்படி சோமசுந்தரக் கடவுளின் திருமுடியின்மேல் அபிடேகஞ்செய்து பூசித்து வழிபட்டுத் தாங்கள் விரும்பியவற்றை யெல்லாம் பெற்று உய்ந்தனர்.

**பொற்றாமரைத் தீர்த்தத்தின் பெருமை**

பொற்றாமரைத் தீர்த்தத்தைத் தரிசித்தால் பாவங்கள் நீங்கும்; அதனில் மூழ்கினல் விரும்பிய பொருள்கள் அனைத்தும் வந்து கைகூடும்; முழுகுங்கால் ஒவ்வொரு முழுக்கிற்கும் உலகத்துள்ள அளவற்ற தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் ஆடிய பயன் கிடைக்கும். உடலை மண் முதலியவற்றைக் கொண்டு விதிப்படி சுத்திசெய்து வருண சூக்த மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு நீராடினல், புண்ணிய தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் நீராடி நான்மறைகளை உணர்ந்த அந்தணர்களுக்கு எல்லாப்பொருளையும் தானஞ்செய்தபேறு கிடைக்கும். நெருப்பினை நினைவின்றித் தொட்டாலும் சுடுதலைப்போலத் தெய்வத்தன்மை பொருந்திய இத் தீர்த்தத்தை நினைவின்றித் தீண்டினுலும் தீவினையினின்றும் நீங்கி வீடுபேற்றை அடைவர்.

தெய்வஇத் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டி னுலும்
அவ்விய வினையின் நீந்தி அரும்பெறல் வீடு சேர்வர்;
இவ்வுரை மெய்யே ஆகும்; என்னெனின் மனத்தா(று) அன்றி
வெவ்வழல் தீண்டி னுலுஞ் சுடுமன்றி விடுமோ? அம்மா.

அத்தீர்த்தத்தில் எப்போதும் நீராடுபவர் சீவன் முத்தியை அடைவர். ஞானத்தை அளிக்கின்ற வருண ஸ்நானம், ஆக்கினேய ஸ்நானம், மந்திர ஸ்நானம் [1]முதலிய ஸ்நானங்களைச் செய்தவர் அடையும் பேறுகளெல்லாம் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிப் பெற்ற பேற்றுக்கு ஒப்பாகா. அதனில் நீராடிச் சோமசுந்தரக் கடவுளை வணங்குவோர் மறுமையில்

1. முதலிய என்றதனுல் இன்னும் மிருதிகை ஸ்நானம, திவ்ய ஸ்நானம், கபில ஸ்நானம், விபூதிஸ்நானம், மானதஸ்நானம், வாயு ஸ்நானம், நிர்மாலிய ஸ்நானம் என்பவைகளும் கொள்க.

பரமுத்தியினைப் பெறுவர். சிரத்தை யில்லாமல் அதனில் நீராடியவர் சுவர்க்கத்தை அடைவர், சிரத்தையோடு அதனில் நீராடித் தேவர் முதலானவர்க்கு விருப்புடன் அரிசியையும், எள்ளையுங்கொண்டு தருப்பணம் செய்தவர் தக்க வேள்விக ளனைத்தையும் செய்தலால் வரும் பயனைப் பெறுவர். விரதம், பூசை, தானம், தருமம், ஓமம், தவம், செபம், தியானம் முதலானவற்றைப் பொற்றாமரைத் தீர்த்தக்கரையில் இருந்து செய்யின் மற்றைத் தலங்களில் இருந்து செய்த பயனைக் காட்டிலும் கோடி மடங்கு அதிகமாகப் பெறுவர்.

பொற்றாமரைத் தீர்த்தத்தில் பிறந்தநாளிலே மூழ்கினால் கொடிய பிறவித்துன்பம் நீங்கும்; சித்திரை, கார்த்திகை, மாசி என்னும் மாதங்களில் நீராடிப் பிதிரர்களின் பொருட்டுப் பிண் டங் கொடுத்தால், அப்பிதிரர்கள் பிறவிக் கடலினின்றும் நீங்கி முத்திக்கரை ஏறுவர். அத்தீர்த்தக் கரையிலே இறந்தவர்க் குரிய கடன்களைச் செய்தால் எள் ஒன்றுக்கு ஆயிரம் ஆண்டு களாகத் தென்புலமடைந்தோர் சொர்க்கலோகத்தை ஆளுவர். பொற்றாமரை வாவியில் நீராடிச் சிவபிரானை வழிபடுபவர் இப் பிறவியிலேயே வீடுபேற்றைப் பெறுவர். நித்திய வேள்வி, விரதம், வேதமோதுதல், தானம், தவம் ஆகிய இவை தருகின்ற பயன்களனைத்தும், பொற்றாமரைத் தீர்த்தக் கரையிலிருந்து சிவப் பிராமணருக்குத் தானங் கொடுக்கின்ற புண்ணியத்தில் கோடியில் ஒன்றுக்கேனும் ஒப்பாகாவாம். முற்பிறப்புக்களிலே நல்லொழுக்கங்களை மேற்கொண்டு விரதம், தானம், தவங்களைச் செய்த தூயோர்க்கே அன்றி மற்றையோர்க்கு இத் தீர்த்தம் இப்பிறப்பில் சென்று நாடோறும் ஆடுதற்குக் கிட்டாது.

உம்மையிற் பிறவி தோறும் நியமநல் லொழுக்கம் பூண்டு
பொய்மையில் விரதந் தானந் தவஞ்செய்து புனித ராகிச்
செம்மைநன் னெறியில் நின்ற சித்தருக் கல(து)இத் தீர்த்தம்
இம்மையில் அடைந்து நித்தம் ஆடுதற் கெய்தா(து) அன்றே.

**பொற்றாமரைத் தீர்த்தம் புண்ணிய நாளில் அளிக்கும் பயன்**

அமாவாசையன்றும், மாதப்பிறப்பன்றும், கிரகண புண் ணிய காலத்திலும், வியதிபாதயோகத்திலும் பொற்றாமரைத்

தீர்த்தத்தில் நீராடித் தோத்திரமும் தருப்பணமும் தானமும் செபமும் செய்வதால் முறையே நூறு மடங்கு, ஆயிரம் மடங்கு, இலட்சம் மடங்கு, அனந்தம் மடங்கு பயன்கிடைக்கும். சித்திரை மாதப் பிறப்பும், ஐப்பசி மாதப்பிறப்புமாகிய விஷு புண்ணிய காலங்களிலே நீராடினால் மற்றைய காலங்களில் நீராடிய பயனைக்காட்டிலும் பதினாயிரம் மடங்கு பயன்கிடைக்கும். தை மாதப்பிறப்பு, ஆடி மாதப்பிறப்புமாகிய அயன புண்ணிய காலங்களிலே நீராடினால் இருபதினாயிரம் மடங்கு பயன் கிடைக்கும். சோமவாரமும் அமாவாசையும் கூடி வரும் புண்ணிய காலத்திலே நீராடினால், அனந்த மடங்கு பலன் கிடைக்கும். பிரயாகையில் (திரிவேணி சங்கமத்தில்) தை மாதம் முழுதும் நீராடி அடையும் பயனைப் பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஒரு நாள் நீராடுவதால் அடையலாம்; ஓராண்டுக் காலம் விரத ஒழுக்கத்தோடு தவறாமல் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி மீனாட்சியம்மையையும் சோமசுந்தரக் கடவுளையும் வழிபட்டால் மலடிக்கும் மகப்பேறு கிடைக்கும். இப் பொற்றாமரைத் தீர்த்தத்தைத் தரிசித்தலினால் அறமும், தீண்டலினால் பொருளும், அள்ளி உட்கொள்ளலினால் இன்பமும் நீராடுதலினால் வீடும் கிடைக்கும்.

### வேறு பெயர்கள்

சிவபெருமான் அருளிச்செய்த காரணமுறையால் வந்த பெயர்களே அல்லாமல் இன்னும் வேறு பல காரணங்களினாலும் பொற்றாமரைத் தீர்த்தம் பல பெயர் பெறும். சிவபெருமானுடைய சடையிலுள்ள கங்கை நீர் கலக்கப் பெற்றமையால், **சிவகங்கை** எனவும், எல்லாத் தீர்த்தங்களிலும் உத்தமமாய் விளங்குதலால் **உத்தம தீர்த்தம்** எனவும், பொற்றாமரைகள் அலர்வதால் **பொற்றாமரைத் தீர்த்தம்** எனவும், அறம் பொருள் இன்பம் வீடு என்ற நால்வகை உறுதிப் பொருளை அளிப்பதால் முறையே **தரும தீர்த்தம், அருத்த தீர்த்தம், காம தீர்த்தம், முத்தித் தீர்த்தம்** எனவும் பெயர் பெறும். இத் தீர்த்தம் பாவம் என்னும் விறகுக்குத் தீயாக விளங்குவதாகும். செய்யுள்—36

ஆகச் செய்யுள்-291

---

## 10. மூர்த்திச் சிறப்பு

**மூல லிங்க மூர்த்தி**

திருவாலவாயினில் வீற்றிருந்தருளும் சோமசுந்தரக் கடவுளாகிய மூலலிங்க மூர்த்தியின் பெருமை அளவிடற்கரிய தாகும். மேருமலை, திருக்கயிலாய மலை, மந்தரமலை, திருக் கேதாரம், காசி முதலான இடங்களிலே சிவலிங்க மூர்த்திகள் தோன்றுவதற்கு முன்னரே இக் கடம்ப மரத்தடியில் இச் சிவ லிங்கம் தோன்றியருளியது. இச்சிவலிங்கம் தோன்றியருளிய பின்னரே மேருமலை முதலிய தலங்களிலுள்ள அருட்குறியாகிய சிவலிங்கங்களெல்லாம் தோன்றின. ஆதலின், ஞான வொளி வடிவாகிய இச் சிவலிங்கம் [1] **மூல லிங்கம்** எனவும் பெயர் பெறும். இப்பெருமைபொருந்திய இலிங்கத்தில் தமது இச்சை வயத்தாற் கொள்ளப்பட்ட முப்பத்திரண்டு இலக்கணங்களையுடைய ஞான வடிவாகிய-அழகு பொருந்திய-திருமேனியைக்கொண்ட சிவபெருமான் உமாதேவியாரோடு எப்பொழுதும் அருள் பாலிக்கின்ற தகைமையினைக் கண்ட தேவர்கள் [2] **சோம சுந்தரக் கடவுள்** என்று திருநாமமிட்டு அழைத்தனர். இச் சோமசுந்தரக் கடவுள் உலகமெங்கும் வியாபித்து நிற்றலாலன்றோ பாண்டி மன்னன் கையிலுள்ள பொற்பிரம்பினாலே முதுகிற்பட்ட அடித் தழும்பு, மூவுலகங்களிலுமுள்ள சராசரங்களிலும் பட்டது. ஒரு மரத்தின் வேரிலே ஊட்டும் நீர் அதன் கிளைகளெல்லா வற்றையும் தழையச் செய்யும் செயல்போலச் [3] சமட்டி வடி வாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்கப்பெற்றவர், பிற திருப் பதிகளிலுள்ள [4] வியட்டி வடிவாகிய சிவலிங்க மூர்த்திகளையும் தரிசிக்கப் பெற்றவர் ஆவர்.

---

1. இங்கே "மூலத்தானை யெல்லார்க்கும் முன்னே தோன்றி" எனவரும் அப்பர் தேவார அடியும், "மேதினி தோன்று முன்னஞ், செவ்வியின் மூலத் தெழுந்த திப்பிய விலிங்கம்" எனவரும் திருவாலவாயுடையார் திருவிளை யாடற் புராண அடிகளும் சிந்திக்கற்பாலன.

2. சோமசுந்தரன் — இஃது உமையுடன் கூடிய அழகினையுடையவன் என்று பொருள்படும்.

3. சமட்டி வடிவு - சூக்கும மூர்த்தியாய் எல்லாமான வடிவு.

4. வியட்டி வடிவு - தூல மூர்த்தியாய் வெவ்வேறான வடிவு.

**சோமசுந்தர மூர்த்தியின் உயர்வு**

திருவாலவாயினில் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் செய்தருளிய மூல லிங்க மூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளுக்கு ஒப்பும் உயர்வுமுடைய கடவுள் எக்காலத்திலும், எவ்வுலகத்திலும் இல்லை. மலைகளில் சிறந்தது **மேரு மலை**; மரங்களில் சிறந்தது **கற்பகத்தரு**; வேள்விகளில் சிறந்தது **அசுவமேதயாகம்**; தானங்களில் சிறந்தது **அன்ன தானம்**; மனிதரில் சிறந்தவர் **சிவப் பிராமணர்**; தேவர்களில் சிறந்தவர் **சிவபெருமான்**; விரதங்களில் சிறந்தது **சோம வார விரதம்**; மந்திரங்களில் சிறந்தது **திருவைந்தெழுத்து**; இரத்தினங்களில் சிறந்தது **சிந்தாமணி**; தருமங்களில் சிறந்தது **சிவதருமம்**; தவத்தினரில் சிறந்தவர் **சிவபத்தர்**; பசுக்களில் சிறந்தது **காமதேனு**; தீர்த்தங்களில் சிறந்தது **பொற்றாமரைத் தீர்த்தம்**; இவற்றைப்போல் எத்தலங்களிலுமுள்ள மூர்த்திகளில் சிறந்தது **சோமசுந்தரமூர்த்தி**. தோற்றமும் முடிவும் இன்றி அகண்ட பரிபூரணமாய் நின்று உயிர்களுக்குப் பந்தத்தையும் முத்தியையும் கொடுத்தருளுகின்ற சிவபெருமான் தம்மை வழிபடுவோருக்கு இம்மை மறுமை வீடு மூன்றையும் அருளும்பொருட்டு வேதங்கள் துதிக்க, இச்சொக்கலிங்கத்திலே எந்நாளும் நிலைபெற்று விளங்குவர். இச் சுயம்பு மூர்த்தியை மற்றைய தலங்களிலுள்ள சுயம்பு மூர்த்திகள் நாடோறும் வந்து தரிசித்துச் செல்லாநிற்கும். இந்த உத்தம மூர்த்தியைத் தரிசிக்கப் பெற்றோர் வாக்கும் மனமும் ஒடுங்க அகத்தே தோன்றியருளும் சிவ பரஞ்சோதியைத் தரிசித்தவராவர்.

**மூல லிங்கமூர்த்தியைத் தரிசிக்கப் பாவம் நீங்குதல்**

சோமசுந்தரக் கடவுளாகிய இச் சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்து வணங்கியவர்களின் **பாவங்கள் அனைத்தும்**, நெருப்பிற்பட்ட பஞ்சு அழிதல் போலவும், கோபத்தால் தவம் குன்றுதல் போலவும், மருந்தால் நோய் நீங்குதல் போலவும், உலோப குணத்தால் உத்தம குணங்கள் அனைத்தும் அழிதல் போலவும், சூரியோதயத்தால் இருள் அழிதல் போலவும், பெருங்காற்றினால் மேகம் சிதைதல் போலவும், சிங்கத்தின் கோபத்தால் யானை அழிதல் போலவும், குலிசப்படையால் மலைகள் துகள்பட்டு அழிதல் போலவும், காமநோயால் அறிவு

கெடுதல் போலவும், சிவஞான நோக்கால் அஞ்ஞானம் வலி கெட்டு அழிதல் போலவும், கருடன் நோக்கால் நாகம் அழிதல் போலவும், செருக்கால் கற்ற கல்வி அழிதல் போலவும் அழியும்.

**என்றும் இறைஞ்சுபவர் இறைவனடி சேர்வர்**

திருவாலவாயினில் எழுந்தளிய சோமசுந்தரக் கடவுளை விடியற்காலையில் தரிசிக்கப்பெற்றால், கடலால் சூழப்பெற்ற பெரிய பூமியைத் தானம்கொடுத்த பலன் எய்தும்; உச்சிக் காலத்தில் வணங்கப்பெற்றால் அறிஞர்களுக்கு ஆயிரம் பசுக் களைத் தானம் அளித்த பலன் கிட்டும்; மாலைக் காலத்தில் தொழப் பெற்றால் கோடிபசுக்களைத் தானம் கொடுத்த பலன் உண்டாகும்; நடு இரவில் வணங்கப்பெற்றால் அசுவமேதயாகம் செய்த பலன் கைகூடும். இங்ஙனம் நியமமாக நான்கு காலமும் சோமசுந்தரக் கடவுளை அன்போடு வணங்கி வழிபடும் புனித சீலர்கள், முற்பிறப்புக்களில் செய்த வினைகளினின்றும் நீங்கிப் புனிதத் தன்மை அடைந்து அருட் செல்வத்தோடு பிற செல் வங்களும் பெற்றுப் போகம் நுகர்ந்து, பின்பு ஆணவ மலத்தி னின்றும் நீங்கி, வீடுபேறு அடைவர்.

சோமசுந்தரக் கடவுளின் திருநாமத்தைக் காதில் கேட் டால் பத்துப் பிறவிகளில் செய்த வினைகள் நீங்கும்; நினைத் தால் நூறு பிறவிகளில் செய்த பெரும்பாவம் நீங்கும்; சொக்க லிங்கப் பெருமானை இப்பொழுது சென்று வணங்குவோம் என்று எழுந்து வீட்டின் புறத்தே வந்தால் ஆயிரம் பிறவிகளில் செய்த கொடிய பாவம் நீங்கும்.

அறவுருவன் ஆலவா யான்நாமம்
செவிமடுத்தால் அடைந்த பத்துப்
பிறவிவினை அறும்; நினைந்தால் நூறுபெரும்
பவப்பாவம் பிணிபோம்; கூடல்
இறைவனையின்(று) இறைஞ்சுதும்என்(று) எழுந்து
மனைப்புறம் போந்தால் ஈரைஞ் ஞூறு
மறமுறுவெம் பவத்(து)இழைத்த பாதகவல்
வினையனைத்தும் மாயும் மன்னே.

**வழிபாட்டால் வரும் பயன்**

சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்தவர் ஆயிரம் அசுவமேத யாகம் செய்த பயனைப் பெறுவர்; உருத்திர சூக்த மந்திரத்தி னல் துதித்து வணங்கியவர் ஆயிரம் இராசசூய யாகம் செய்த பயனைப் பெறுவர்; உள்ளங்கை அளவினையுடையதாகிய நீர் கொண்டு அபிடேகஞ்செய்து வழிபட்டவர், மற்றைப் பதிகளி லுள்ள சிவலிங்க மூர்த்திகளைச் சிவாகம விதிப்படி சோட சோபசாரத்தோடு வழிபட்டவராவர். பஞ்சாமிர்தம், பஞ்ச கவ்வியம், தேன், முப்பழம், சந்தனம் முதலியவற்றால் திருமேனி குளிரும்வண்ணம் அபிடேகம் செய்து முறைப்படி வழிபட் டோர் தீவினைக்கடலைக் கடந்து அறம் முதலிய நால்வகைப் பயனையும் பெற்று வாழ்வர். நறுமணங்கலந்த நல்ல நீரினல் அபிடேகஞ் செய்தவர் இலட்சம் அசுவமேதயாகம் செய்த பயனைப் பெறுவர்; கத்தூரி, குங்குமப்பூ, சந்தனம் முதலிய வாசனைப்பொருள் பலவற்றையும் கலந்துபூசி வழி பட்டோர் தெய்வ மகளிரோடு நறுமணங் கமழும் சந்தனக் குழம்பு பூசி இன்பக் கடலுள் திளைத்து வாழ்வர்.

சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடியின்மேல் ஒரு மலரைச் சாத்தினல், பிற பதியில் நூறு பொன் மலர்கொண்டு பூசித்த பலனைப் பெறுவர். சோமசுந்தரக் கடவுளுக்கு ஒரு முறை தூபங்கொடுத்தவர் மனம், வாக்கு, காயங்களினல் முன் செய்த ஆயிரம் குற்றங்கள் நீங்கப் பெறுவர்; திருவமுது செய்து நிவேதித்தவர் அவிழ் (பருக்கை) ஒன்றற்கு யுகம் ஒன்றாகச் சிவலோக வாழ்வுபெற்று மகிழ்வர்; தாம்பூலம், முதலியன கொடுத்தவர் நூறுகோடி தேவஆண்டுகள் சிவபுரத் தில் வாழ்வர்; கற்பூர தீபம் இட்டவர் சிவசாரூபம் பெறுவர்.

மதுரை நாயகனுகிய சோமசுந்தரக் கடவுளுக்குத் திரு மஞ்சனக்குடம், அபிடேகக் கலசம், தூபக்கால், தீபக்கால், மணி முதலியவற்றை அளிப்பவர் தாம் செய்த பாபங்க ளெல்லாம் நீங்கப்பெற்று, விரும்பிய இன்ப வெள்ளத்துள் மூழ்குவர். சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியில் பல்வகை இன்னிசைக் கருவிகள் ஒலிக்க ஆடலும் பாடலும் புரிவிப்பவர் மூவுலகத்தாரும் வணங்கும் மன்னராகி இசைக் கருவிகள்

ஒலிக்கப் பெண்களின் ஆடலும் பாடலும் கேட்டு இன்பம் நுகரும் பேற்றினை அடைவர். சொக்கலிங்கப் பெருமானை [1]அட்டாங்கமோடாயினும், பஞ்சாங்கமோடாயினும் ஒரு முறை வணங்கியவர் செங்கோல் செலுத்தும் அரசராகிப் பிற மன்னர் தம்மிடம் வந்து வணங்க வீற்றிருப்பர். இத்தகைய பெருமையினையுடைய சோமசுந்தரக் கடவுளின் சந்நிதியில் செய்யும் ஓமம், தவம், செபம், தானம் முதலியன அணுவின் அளவின ஆயினும் மேருவின் அளவினவாம். இச்சிவலிங்கமூர்த்தியின் பெருமைகள் அனைத்தையும் அளவிட்டுக் கூறவல்லவர் யாவர்? முனிவர்களே! யாம் சிறிது அறிந்தவாறு உரைத்தோம்.

திருவாலவாய்க்கு ஒப்பாகிய தலமும், பொற்றாமரைத் தீர்த்தத்திற்கு ஒப்பாகிய தீர்த்தமும், சோமசுந்தரமூர்த்திக்கு ஒப்பாகிய மூர்த்தியும் பூமி, அந்தரம், சுவர்க்கம் என்னும் மூன்றுலகங்களிலும் இல்லை.

**வேறு பெயர்கள்**

இச்சோமசுந்தரமூர்த்திக்குக் கருப்பூர சுந்தரர், கடம்பவன சுந்தரர், கலியாண சுந்தரர், அபிராம சுந்தரர், சண்பக சுந்தரர், மகுட சுந்தரர், கத்தூரி சுந்தரர், பழி அஞ்சிய சுந்தரர், சோம சுந்தரர், ஆலவாய்ச் சுந்தரர், நான் மாடக்கூடல் நாயகர், மதுராபதி வேந்தர், சமட்டி விச்சாபுர நாதர். சீவன் முத்திபுர நாதர், பூலோக சிவலோகாதிபர், கன்னிபுரேசர், மூல லிங்க மூர்த்தி முதலான திருநாமங்கள் உண்டு.

இதுவரையில் கீழுலகேழும் ஊடுருவ முளைத்தெழுந்த சொக்கலிங்கமூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளின் பெருமையினை முருகக்கடவுள் அருளியபடியே கூறினோம். இனி அவர் செய்த **அறுபத்து நான்கு திருவிளையாடல்களை**யும் கூறுவோம்.

செய்யுள்—37
ஆகச் செய்யுள்-328

---

1. அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்களை, "சிரநீள் கரம்சா னுக்கள் நிலம் தீண்டல் பஞ்சாங் கமதாகும்; சிரமோ வாய்கா துகைசானு செகத்தில் படிதல் அட்டாங்கம்" என்வரும் சிவபுண்ணியத் தெளிவு அடிகளால் அறியலாம்.

## 11. பதிகம்

இந்திரன் பழி தீர்த்தது முதல், வன்னியுங் கிணறும் இலிங்கமும் அழைத்தது வரையுள்ள [1] **அறுபத்து நான்கு திருவிளையாடல்கள்** சோமசுந்தரக் கடவுள் செய்தருளியனவாகும்; "முனிவர்களே! இத்திருவிளையாடல்கள் எக்காலத்தில் யாவர் பொருட்டு எம்பெருமான் செய்தருளினர் என்று நீங்கள் கேட்டமையால் இவற்றை விரித்து உரைப்போம்" என்று அகத்திய முனிவர் திருவாலவாயுடைய பெருமான் திருவடிகளைச் சிந்தித்து முறைப்படி விரித்துக் கூறலானர்.

செய்யுள்—15

ஆகச் செய்யுள்-343

---

1. இதனை, "....அன்பினர்க்கு அருளும், கூடற் பதிவரும் ஆடற் பரியோன், எட்டெட்(டு) இயற்றிய கட்டமர் சடையோன்" எனவரும் கல்லாடம் 97-வது பாட்டின் அடிகளாலும் அறியலாம்.

இங்குக்கூறும் அறுபத்து நான்கு திருவிளையாடல்களைச் சைவ மக்கள் நன்கு அறியும்பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி ரூ. 7,000 மூலதனத்தில் மதுரைமாநகரில் வைத்துள்ளார்கள். விவரம் பிற்சேர்க்கையிற் காண்க.

# 1. இந்திரன் பழி தீர்த்த படலம்

## இந்திரன் இழைத்த குற்றம்

முன்னொரு கிரேதாயுகத்தில் **தேவேந்திரன்,** சுவர்க்க லோகத்திலே வண்டுகள் மொய்க்கும் மந்தார நீழலிலே அரியணையின்மேல் அணிகள் ஒளிவீச அமர்ந்திருந்து, அன்னம்போலும் நடையினையுடைய தேவமகளிர் பூங்கொடிபோல ஆடுகின்ற ஆடலைக்கண்டும், அமுதம்போல் சுவைதரும் அவர்களின் பாடலைக்கேட்டும், களிப்பாகிய மதுக்கடலுள் மூழ்கினான். அப்போது சிவபெருமானையே ஒத்த அவனது குருவாகிய **வியாழ பகவான்** அங்கே வந்தார். பெண் மயலில் அகப்பட்ட இந்திரன் அதுகண்டும் இருக்கைவிட்டெழுந்து அவருடைய திருவடிகளுக்கு வழிபாடு செய்யாமல் வாளா இருந்தான். அந்தோ! தையலார் மையலிற் பட்டோர் தமக்கு ஒரு மதி யுண்டாமோ?

## நான்முகன் சூழ்ச்சி

அதனை உணர்ந்த குரவனாகிய வியாழபகவான் விரைந்து போய்விட்டார். உடனே, தேவேந்திரனுடைய செல்வம் பொலிவின்றிச் சிறிது சிறிதாகக் குறைய ஆரம்பித்தது. இந்திரன் அதனை உணர்ந்து, 'இந்தக் கேடு தொன்றுதொட்ட குருவை நான் வழிபாடு செய்யாத குற்றத்தினால் வந்தது' என்று தெளிந்து துன்பமுற்றுத் தன் குரவனைத் தேடிச் சென்றான்; அவருடைய உலகத்திலும், முனிவர்கள் உலகத்திலும், மற்றைய உலகங்களிலும் போய்த் தேடினான்; எங்கும் ஆசிரியனைக் கண்டிலன்; ஆசிரியன் எங்குற்றானோ என்றும் ஐயங்கொண்ட எண்ணத்துடன் சத்திய லோகத்தை அடைந்தான்; அங்கும் தேடிக் காணாது நான்முகன் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கித் துதித்து முன் நிகழ்ந்தவற்றை எல்லாம் விடாது கூறினான். நான்முகன் அதுகேட்டுக் குரவனை அவமதித்ததனாலாகிய பாவம் கொழுந்துவிட்டு ஓங்கி அவனை விழுங்கும் காலம் வருதலை அறிந்து, நன்கு ஆராய்ந்து தேவேந்திரனை நோக்கி, "நீ உன் பழமையான குரவனைக் காணும் வரையும் **துவட்டாவின்** புதல்வனும், மூன்று தலைகளையுடையவனும், அசுர குலத்தில்

பிறந்தும் அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவனுமாகிய **விச்சுவ உருவன்** என்பவனை உன் குருவாகக் கொள்வாயாக" என்று கூறினான். இந்திரன் பிரமதேவனின் சூழ்ச்சியை அறியாதவனாய் அதற்கு உடன்பட்டு, அவனை மீண்டும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு போய் அன்போடு விச்சுவ உருவனைத் தான் வழிபடும் குரவனாகக்கொண்டான்.

**இந்திரனைப் பிரமகத்திதோஷம் பற்றுதல்**

இந்திரன் வஞ்சனையையுடைய விச்சுவ உருவனை அடைந்து அவனது தீய கருத்தை உணராமல், "அடிகளே! ஒரு வேள்வி செய்யவேண்டும்" என்று வேண்ட, விச்சுவ உருவன் அதற்கு உடன்பட்டுப் புறத்திலே, "தேவர்களுக்கு ஆக்கம் பெருகுக" என்று கூறி வேள்வி செய்தபோதிலும், உள்ளத்தில் "அவுணர்களுக்கெல்லாம் உய்யுந்திறம்உண்டாகுக" என்று நினைந்து வேள்வியைச் செய்தான். சொல்லால் வேறாகவும் நினைப்பால் வேறாகவும் வேள்வி செய்யும் விச்சுவ உருவனின் செய்கையினை இந்திரன் ஞான திருஷ்டியினாலே அறிந்து, தன் வச்சிரப் படையால் மோதி மூன்று தலைகளையும் துணித்தான். அத் தலைகள் மூன்றும் தனித்தனியே [1] காடையும், ஊர்க்குருவியும், சிச்சிலியுமாய்ப் பறந்தன. விரைந்து பிரமக் கொலைப்பாவம் சீறிவந்து இந்திரனைப் பற்றிக்கொண்டது. இந்திரன் பெருந்துன்பம் அடைந்தான்.

**பாவத்தைப் பங்கிட்டுக் கொடுத்தல்**

இந்திரனைப்பற்றிய பிரமக் கொலைப்பாவத்தைத் தேவர்கள் தீர்க்க விரும்பினர்; அதனை மரங்களினிடத்தும், மண்ணினிடத்தும், பெண்களினிடத்தும், நீரினிடத்தும் பங்கிட்டுப்புகுத்தினர். அவர்கள், "இப் பாவத்தை நீக்கும் வழி எவ்வாறு?" என்று வினவினர். தேவர்கள், "இப்பாவம் நீரினிடத்து நுரையாகியும், மண்ணினிடத்து உவராகியும், பெண்களினிடத்துப் பூப்பாகியும், மரங்களினிடத்துப் பிசினாகியும் கழியக் கடவது" என்று

---

1. இங்குச் சோமபானம் செய்யும் முகம் காடையாகியும் சுராபானம் செய்யும் முகம் ஊர்க்குருவியாகவும், அன்னபானம் செய்யும் முகம் சிச்சிலியாகவும் பறந்து சென்றன என்று வடநூல் கூறும்.

கூறினர். மேலும் அந்நால்வர்களும் தொடர்ந்து, "இப் பாவத்தைச் சுமந்த எங்களுக்கு ஏற்படும் பயன்யாது?" என்று கேட்டனர். தேவர்கள், "கருப்பமுடைய பெண்கள், கருவுயிர்க்கும் வரையிலும் தங் கணவரைக் கலந்து வாழக் கடவர் என்றும், மண் தோண்டிய குழியும், அம் மண்ணினலேயே வடு வொழிந்து நிரம்பக்கடவது என்றும், நீரும் இறைக்குந்தோறும் ஊறி விளங்கக் கடவது என்றும், மரம் வெட்டுண்டாலும் தழையக்கடவது என்றும் எக்காலத்தும் நீங்காத பலனையும் அருளிச்செய்தனர். இதனல் இந்திரன், குற்றத்தினின்றும் நீங்கிய மாணிக்கம் போலப் பிரமக்கொலைப்பாவம் நீங்கி விளக்கமுற்றான்.

**துவட்டாவின் கோபம்**

துவட்டாவானவன் தன் புதல்வனுகிய விச்சுவ உருவனைத் தேவேந்திரன் வச்சிரப்படையால் கொன்ற செய்தியைக் கேள்வியுற்றுக் கோபித்துப் பெருமூச்செறிந்து பழி வாங்க நினைந்து ஒரு கொடிய வேள்வியை விரைந்து செய்தான். அவ்வேள்விக் குண்டத்தினின்றும் தீயின் கொழுந்துபோலச் செந்நிறத்தால் விளங்கும் முடியும், கரிய முகில் போன்ற வடிவும், தீப்பொறி போன்ற சிவந்த கண்களும், பிறைபோன்ற பற்களும் கையில் ஆலகால விடம்போன்ற வாட்படையும் கொண்ட **விருத்திராசுரன்** என்னும் ஒருவன் பெருமூச்செறிந்து கோபத்தீ சிதறப் பற்களைக் கடித்துத் திசைகள் செவிடுபட நகைத்துக்கொண்டு தோன்றினன். அவன், **நாடோறும் அறவினை இல்லாதார் பாவம் வளர்வதுபோல** ஒவ்வொரு நாளும் மிக மிக உயர்ந்து பருத்து வளர்ந்தான். துவட்டா, பருத்த உடலை உடைய விருத்திராசுரனை நோக்கி, "தேவேந்திரன் உயிரைப் போர் புரிந்து வாங்குக" என்று ஏவினன்.

**விருத்திராசுரன் போர்**

விருத்திராசுரன் வடவாமுகாக்கினி போலக் கோபங் கொண்டு, தேவேந்திரன் முன் சென்றான். தேவேந்திரனும் இமயத்துச்சியிலே கரு ஞாயிறு ஒன்று தோன்றியதுபோல வெள்ளை யானையின்மேலேறி அவனை எதிர்த்தனன். அறமும் பாவமும் சேர்ந்து போரிடுவதைப்போல இருவரும் போர் செய்

யும்பொழுது இந்திரன் தன் வச்சிரப்படையினை எடுத்து, விருத்திராசுரன்மேல் வீசினான். விருத்திராசுரன் கோபங்கொண்டு, இடிபோல ஆரவாரித்து, ஓர் இருப்புலக்கையைக் கையில் தாங்கி இந்திரன் புயத்தில் அடித்தான். உடனே, இந்திரன் மூர்ச்சையானான். பிறகு, அவன் சிறு பொழுதிலே மூர்ச்சை தெளிந்து விருத்திராசுரனின் வஞ்சனையை உணர்ந்து, "இப்பகைவனுக்கு நேர் நின்று போர்புரிய யான் வலியிலேன்" என எண்ணியவனாய்ச் சத்தியலோகத்தை அடைந்து பிரமதேவனை வணங்கித் துதித்து, தான் விருத்திரனால்பட்ட துன்பங்களை எடுத்துக் கூறினான்.

### திருமால் புதிய படைக்கலம் பெற வழிகூறல்

அப்பொழுது நான்முகன் இந்திரனோடு வைகுந்தம் சென்று திருமாலின் திருவடியில் வீழ்ந்து, வணங்கி நிகழ்ந்தவற்றை எடுத்துக் கூறினான். திருமால் ஆலோசித்து, "தேவேந்திரனே! உன் கையிலுள்ள வச்சிரப்படை மிகவும் பழையது; ஆதலின், பகைவர் உயிரை வாங்குவதற்கு வலியற்று நின்றது; உனக்கு வேறு புதியதொரு குலிசம் வேண்டும். இப்போது அதனைப் பெறுவதற்கு வழிகூறுவோம்; நாம் திருப்பாற்கடலைக் கடையுங் காலத்துத் தேவர்களும் அசுரர்களும் ஆயுதங்களோடு வரலாகாது; அங்ஙனம் வருதல் குற்றமாகும் என்று கூறி அவ்வாயுதங்கள் அனைத்தையும் **ததீசி முனிவரிடத்தே** சேர்ப்பித்தோம். ஆண்டுகள் பலசென்றன. தேவர்களேனும் அசுரர்களேனும்வந்து ஆயுதங்களைக் கேட்டிலர். ஆதலால், ததீசி முனிவர் அவ்வாயுதங்கள் அனைத்தையும் விழுங்கிவிட்டார். அங்ஙனம் விழுங்கப்பெற்ற ஆயுதங்கள் அனைத்தும் ஒன்றாகத் திரண்டு முதுகெலும்பிலேபொருந்தி நின்றன. அதுவே **வச்சிரப்படை**யாகும். நீ அவரை அடைந்து கேட்பதற்குமுன்னே கருணையே வடிவமாகிய அம்முனிவர் அதனை உனக்குத் தருவார்" என்று கூறினார்.

### ததீசி முனிவரின் பெருங்கொடை

அதுகேட்ட தேவேந்திரன் திருமாலையும் பிரமனையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தேவர்களோடும் புறப்பட்டுச் சென்று ததீசி முனிவர் இருப்பிடத்தை அடைந்து

அவரை வணங்கித் துதித்தான். ததீசி முனிவர் இந்திரன் முதலிய தேவர்களை நோக்கி அன்புடன் முகமலர்ந்து இன் சொற்களைக் கூறி, "நீங்கள் மிக வருந்தி வந்தீர்கள்; விளைந்த துன்பம் யாது? அதனைச்சொல்லுக" என்றார். தேவேந்திரன், 'அடிகளே! நீர் தடை செய்யாது அளிப்பதாகிய பொருள் ஒன்று உளது; அதனைப் பெற விரும்பி இத் தேவர்களோடும் முந்துற வந்தேன். அப் பொருள் கொடிய அவுணர்களை அழித்து, எம்மவர்களின் குடிகளையெல்லாம் உய்விக்க வல்லது. இத்தகைய வலிமைவாய்ந்த பொருள் உம்முடைய உடலி லுள்ளது" என்று கூறினன்.

முக்காலங்களிலும் நிகழும் எல்லாவற்றையும் ஞான நோக்கால் அறியும் ததீசி முனிவர், இந்திரன் கூறியதைக் கேட்டதும் கதிரவனைக் கண்ட கமலம்போல் திருமுகம் மலர்ந்து இந்திரனை நோக்கி, "நாய்கள் எம்முடையது எனவும், நரிகள் எம்முடையது எனவும், தாய் தந்தையர்கள் எம்முடையது எனவும், இயமன் எம்முடையது எனவும், பிணிகள் எம்முடை யது எனவும், பேய்கள் எம்முடையது எனவும் நினைத்துக் கொண்டிருத்தல் போல நாமும் நம்முடையது என்று நினைந்து கொண்டிருக்கும் உடல் யாருக்கு உரியது? பாம்பு தன் தோலை யும், பறவை தான் நுழைகின்ற கூட்டையும் தான் என்று கொள்ளுமா? அவ்வாறே உயிரும், [1]ஐம்பொறிகள் வாழா நின்ற இவ்வுடலை நான் என்று கொள்ளுதல் கூடுமா? கருணை சிறிதும் இல்லாத அசுரர்களாலே பெருந் துன்பம் அனுபவிக்கும் உங்கள் பொருட்டு என் உடலைக்கொடுத்து அறத்தையும், புகழையும் பெற்றுக்கொள்வேனாயின், யான் எடுத்த உடம்பினாலாகும் பயன் இதனைவிட வேறு யாதுளது?" என்று அருளிச்செய்து, சிவயோக சமாதியில் அமர்ந்து சுழுமுனை நாடியின் வழியாகக் கபாலத்தைக் கிழித்துச் சென்று தேவ விமானத்தில் ஏறிச் சிவலோகத்தையடைந்து இனிது வீற்றிருந்தார்.

---

1. இங்கு, "ஓம்பினேன் கூட்டை வாளா" எனவும், "கூட்டமாய் ஐவர் வந்து கொடுந்தொழிற் குணத்த ராகி, ஆட்டுவார்க் காற்றகில்லேன்" எனவும் வரும் அப்பர் திருநேரிசைகள் கருதற்பாலன.

### இந்திரன் புதிய படைகொண்டு விருத்திரனோடு போரிடுதல்

ததீசி முனிவரால் கொடுக்கப்பெற்ற ஆயுதங்கள் திரண்ட [1] முதுகந் தண்டைத் தேவதச்சன் ஒரு வச்சிரப் படையாகச் செய்து ஆக்கங்கூறி இந்திரன் கையில் கொடுத்தான். இந்திரன் அதனைப்பெற்று மின்னலை வீசும் முகில்போல நின்றான். பிறகு, விருத்திராசுரனைக் கொல்லும் பொருட்டுத் தேவேந்திரன் தேரும் யானையும் குதிரையும் வீரருமாகிய நால்வகைச் சேனைக் கடலின் நடுவில் தோன்றி, அந்த விருத்திராசுரனை எதிர்த்தான். விருத்திராசுரனும் கோபங்கொண்டு சேனைகளோடு புறப்பட்டு வந்து போரைத் தொடங்கினான். அசுரர்கள் தேவர்களை எதிர்த்து இடிபோல ஆரவாரித்துக் கையில் வில்லை எடுத்து நாண் ஓசை செய்து அம்புகளைத் தொடுத்தனர். அவருட் சிலர் வேல்களையும் சக்கரங்களையும் வீசி எறிந்தனர். தேவர்கள் அசுரர்களை நெருங்கித் தங்கள் திரண்ட தோள்களைத்தட்டினர்; இடசாரி வலசாரியாக மாறிக் குதித்தனர்; கேடகத்தை நீட்டி மோதினர்; அண்டம் பிளக்க ஆரவாரித்து வாளை வீசி வெட்டினர்.

போரிட்ட அசுரர்களில் சிலர் தோள்களும், கால்களும், அறுபட்டு வீழ்ந்தனர்; சிலர் குருதி சொரிந்தனர்; சிலர் குருதி வெள்ளத்தில் மூழ்கினர், சிலர் மார்பு பிளக்கப் பட்டனர்; சிலர் சிரங்கள் இழந்தனர்; சிலர் இயமன் உலகு அடைந்து குடியேறினர். தேவ வீரர்களில் சிலர் கால்களும், சிலர் தோள்களும், சிலர் கைகளும் அறுபட்டனர்; சிலர் மார்பு பிளக்கப்பட்டனர்; சிலர் ஆண் தன்மை நீங்கினர்; போர்க்களத்தில் கழுகுகளும் பருந்துகளும் நிறைந்து சரிந்த குடல்களை இழுத்துப் பிடுங்கா நின்றன; பேய்கள் சொரியும் இரத்தத்தைக் குடித்துச் சிரித்துப் பாடின; தலையிழந்த உடல்கள் குதித்து ஆடின; பிண மலை அண்டத்தை முட்டியது. இவ்வாறு போரில் மாண்டதைக் கண்ட தேவேந்திரனும் விருத்திராசுரனும் தெய்வப் படைகளை விடுத்துச் சீறி நின்று போரிடலாயினர். தேவேந்திரன் தீக்கணையை விடுத்தான். விருத்திராசுரன்

1. இங்கு, "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என வரும் திருக்குறள் அடி நினைக்கற்பாலது.

நீர்க்கணையை விடுத்து அதனைத் தணித்தான். இந்திரன் காற்றுக்கணையை விடுத்தான். விருத்திராசுரன் பாம்புக் கணையை விடுத்து அதனை விழுங்கச் செய்தான். தேவேந்திரன் பெரிய பாம்புக் கணையை விடுத்துப் பேரொலி செய்தான். விருத்திராசுரன் கருடக் கணையை வீசி அதைத் தடுத்தான். தேவேந்திரன் மோகக் கணையைத் தூண்டினான். விருத்திராசுரன் ஞானக் கணையை விடுத்து இருள்போல் நின்றான். இவ்வாறு இந்திரன் விடுத்த தெய்வக் கணைகளுக்கெல்லாம், விருத்திராசுரன் மாற்றுக்கணைகளை விடுத்து உடனே விலக்கி வேறு கணைகளையும் விடுப்பதற்குக் கோபத்துடன் இந்திரனை நெருங்கினான். தேவேந்திரன் அதுகண்டு மானமாகிய காற்றானது கோபமாகிய அனலை மூட்ட, அது சுடுதலைப் பொறுக்கலாற்றாது சீறி மேகம் மின்னலை வீசினாற்போல் தன் கையில் தாங்கிய வச்சிரப் படையை விரைந்து அசைத்தவுடனே விருத்திராசுரன் அதற்கு அஞ்சிக் கடலில் வீழ்ந்து மூழ்கி மறைந்தான். இந்திரனும் அவனோடு கூட வீழ்ந்து மூழ்கி அவனைத் தேடிக் காணமல் நான்முகனை அடைந்து நிகழ்ந்தவற்றைக் கூறினான். நான்முகன் அசுரன் அழியத்தக்காகிய ஒன்றைச் சிந்தித்து, "நீ அகத்திய முனிவருக்கு இச்செய்தியைக் கூறுவாயாக" என்று சொல்லி விடுத்தான்.

**அகத்தியர் கடல்நீரைக் குடித்து வற்றச்செய்தல்**

தேவேந்திரன் உடனே சந்தனமரங்கள் நிறைந்த பொதிய மலையை அடைந்தான். பாசபந்தமாகிய மலையை அறுத்தெறிந்த அகத்திய முனிவர் தேவேந்திரனுக்கு உபசார வார்த்தைகள் கூறி, "வந்த காரணம் யாது" என்று வினவினர். தேவேந்திரன், வந்த செய்திகள் அனைத்தும் கூறி, "யாவற்றையும் உணர்ந்த தந்தையாகிய நுமக்கு யான் எடுத்துத் தெரிவிக்கும் செய்தி என்ன இருக்கிறது? விருத்திராசுரன் என்னுடன் போர்புரியலாற்றாது கடலில் புகுந்து ஒளித்துக்கொண்டான். அவனுடைய உயிர் நீங்குவதும் அவனால் ஏற்பட்ட துன்பங்கள் அனைத்தும் இன்றே நீங்குவதும் குறித்து, நும்மிடத்து வந்தடைந்தேன்" என்று கூறினான். ஐம்புலன்களை அடக்கி

வென்றவரும், [1] திருமாலின் வடிவத்தைச் சிவபெருமான் திருவுருவமாகச் செய்து நின்றவருமாகிய அகத்திய முனிவர், தேவேந்திரன் துன்பத்தை நீக்கும் பொருட்டு, உண்மை அறிவு ஆனந்த வடிவாய் நிறைந்த சிவபெருமானின் ஊழித்தீயை ஒத்த திருவுருவை மனத்தில் சிந்தித்துக்கொண்டு, விருத்திராசுரன் மறைந்துறையும் கடல்நீரை உளுந்து அளவினதாகச் செய்து, விந்தமலையை அடக்கிய கையால் எடுத்துப் பருகினர். சிவபெருமானுடைய திருவருளைப் பெற்ற அடியார்கட்கு எது தான் இயலாது? மூன்றுலகத்தும் முத்தொழிலும் செய்ய வல்லவர்கள் அவ்வடியார்களே அல்லவா? **அறநெறியைக் கைவிட்டுத் தேடுவோரின் செல்வம்போலக்** கடலிலுள்ள நீர் முழுதும் வற்றிப் போயின. கடலில் கிடந்த சிவந்த மாணிக்கங்கள் வடவைத்தீ கண்களுக்குத் தோன்றினாற்போல ஒளி வீசின; அத்தீ உயர்ந்து எரிகின்ற கொழுந்துபோலப் பவளக் காடுகளின் மிக்க இருளை விழுங்கின; பல மணிகள் பதித்த அணிகலங்களை வைத்த பெட்டியின் வாயைத் திறந்ததுபோல நவமணிகள் குவிந்துகிடந்த நீர் வற்றிய கடலின் அடிப்பாகம், இந்திரன் வேள்விக்குப் பசுவாகிய **வலாசுரன்** இறந்து பட்ட செங்களம் போன்றது. நீர் வற்றிய இடத்தில் வாட்படையை அசைத்தாற்போலப் பல மீன்கள் துள்ளின; பாம்புகள் நெளிந்தன; சங்குகளும் முத்துக்களும் ஒளி வீசின; ஆமைகள் மறைந்து ஒளித்தன; பல பொருள்களையும் சிதறி மரக்கலங்கள் உடைந்தன; பருந்துகள் சிறுமீன்களையெல்லாம் பிடித்து விழுங்கின.

### இந்திரன் விருத்திராசுரனைக் கொல்லுதல்

முன் போரிலே தோற்றுப்போன விருத்திராசுரன் அவ்விடத்து ஒரு பெரிய மலையின் உச்சியில், 'தேவர்கள் செய்த பாவம் ஒரு வடிவெடுத்து இருந்து தவஞ் செய்யும் தன்மை போலத் தவஞ் செய்துகொண்டிருந்தான், தேவர்கள் செய்த தவத்தினை ஒத்த தேவேந்திரன் விருத்திராசுரனைக்கண்டு தன் புதிய வச்சிரப் படையினாலே, அவன் தலையை அறுத்து வீழ்த்

1. இதன் வரலாற்றைக் கந்தபுராணம் - திருக்குற்றாலப் படலத்தில் விரிவாய்க் காணலாம்.

றினன். கீழே சிந்திய இரத்தம், வற்றிய கடலை நிறைத்தது. தேவேந்திரனைப் [1] பிரமகத்தி தோஷம் வந்து பிடித்துக் கொண்டது.

**இந்திரன் பிரமகத்தியால் வருந்தி மறைதல்**

அந்தப் பிரமகத்தி இந்திரனை இம் என்று கூறும் அளவுகூட நீங்காததாய் உம் என்று அதட்டும்; தனது மார்பைத் தட்டும்; சினந்து எழும்; ஆரவாரஞ் செய்யும்; போருக்கழைக்கும்; வாயை மடிக்கும்; பற்களைக் கடிக்கும்; குப்புற்றுக் கீழேவிழும்; விரைந்து ஓடும்; திரும்பி வரும்; குதித்து அழும்; சிரிக்கும்; சீறும்; என்ன செய்வான்? அதற்கு அஞ்சிய இந்திரன் வடகீழ்த்திசையிலுள்ள ஒரு தடாகத்தில் விரைந்து வீழ்ந்து ஒரு தாமரைத் தண்டின் நூலினுள்ளே ஒளிந்துகொண்டான். பிறகு, சுவர்க்கலோகம் தன் பொலிவு குன்றி இருந்தது.

**நகுடன் இந்திர பதவியைப் பெறுதல்**

அப்பொழுது, நிலவுலகில் [2] **நகுடன்** என்னும் ஓரரசன் அசுவமேத யாகம் செய்து வருதலைத் தேவர்கள் அறிந்தனர். தங்களுக்கு அரசனில்லாத வறுமையைக் கருதித் தேவர்களனைவரும் நகுடனை அடைந்து அவனுக்கு முடி சூட்டி அரசனாக்கிக் கொண்டார்கள். இந்திர பதவியை அடைந்த நகுடன், "இந்திராணியை இங்கே அழைத்துக்கொண்டு வாருங்கள்" என்றான். அருகிலிருந்தவர்கள் போய் அச் செய்தியை இந்திராணிக்குச் சொல்ல, அவள் புண்ணிய வடிவாகிய குரவன் (வியாழபகவான்) முன் சென்று "அடிகளே! இஃது என்ன ஆச்சரியம்! என் உயிர்த்துணைவன் உயிருடன் இருக்கும்போதே மற்றொருவன் வந்து என்னைத் தன் உயிர்த்துணைவியாகக்கொள்ளுதல் அறமோ?" என்றாள். வியாழ பகவான் அவளை நோக்கி, **"அகத்தியன், ஆங்கிரசன், கௌதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்"** என்னும் முனிவர் எழுவரும் தாங்க மாமணிச்

---

1. இதனை, "காருடற் பிறையெயிற்(று) அரக்கனைக் கொன்று, வச்சிரத் தடக்கை வரைப்பகை சுமந்த, பழவுடற் காட்டுந் தீராப் பெரும் பழி" எனவரும் கல்லாடத்தின் அடிகளாலும் அறியலாம்.

2. இந்த நகுடன் சந்திர குலத்தில் தோன்றியவன்; இவன் வரலாற்றைப் பாரதத்தில் விரிவாய்க் காணலாம்.

சிவிகையின்மேல் வந்தால் அவனே தேவேந்திரனாவான்; அவனே உன் கணவனும் ஆவான்" என்றான், இந்திராணி அதற்குடன்பட்டுக் குருவை வணங்கி விடைபெற்றுக் கொண்டு போய், "முனிவர் எழுவர் சுமக்கச் சிவிகையின்மேல் ஏறி இங்கே வருக" என்று நகுடனுக்குத் தூது அனுப்பினாள். இந்திரனாகி வருகின்ற நகுடன் சிவிகையினைச் சுமந்து வருகின்ற தூய முனிவர்களின் பெருமையினை அறியாதவனாயும், தனக்கு விளையும் துன்பத்தைப் பாராதவனாயும், காம இன்பத்தை அனுபவிக்கும் ஆசையால் விரைந்து செல்ல நினைத்து, "இந்திராணியிடத்திற்குக் கொண்டு செல்லுங்கள் [1] **சர்ப்ப**" என்றான், அப்பொழுது சிவிகையின் முன் கொம்பைத் தாங்கி முன்னே நடக்கும் அகத்திய முனிவர் சினந்து அவ்வரசனை "நீ சர்ப்பமாகக் கடவாய்" என்று சாபங் கொடுத்தார். உடனே நகுடன் பெரும் பாம்பின் வடிவாகிவிட்டான், அறிவற்ற கீழ்க்குணமுடையவர்களுக்கு அவர்களின் செல்வமேயன்றிப் பகையாயுள்ளது வேறொன்று உண்டோ? இல்லை.

**வியாழ பகவான் இந்திரனுக்குக் கூறிய யோசனை**

அதன் பின்பு, தேவர்கள் தமது குரவனாகிய வியாழ பகவானை அடைந்து வணங்கி "ஐயனே! பொன்னுலகம் அரசனில்லாமல் வருந்துகின்றது" என்று கூறி வேண்டினர். உடனே வியாழ பகவான் சென்று வடகிழக்கேயுள்ள அத்தடாகத்தில் மறைந்திருந்த இந்திரனைக் கூவி அழைத்து, தன் சொல்லை அறிந்து வெளிப்பட்டு வந்த அவனை உடன் கொண்டு திரும்பி வந்தான். இந்திரன் தன் குரவனை வணங்கி, "அடியேனை வருத்துகின்ற இப்பழி நீங்குவது எவ்வாறு? புகன்றருளுக" என்று இரந்து வேண்டினான். அதனைக் கேட்ட வியாழபகவான் "இந்திரனே! இக் கொலைப் பழி பூவுலகத்தல்லாமல் வேறு இடத்தில் நீங்காது! நீ வேட்டையாடுங் காரணமாகக்கொண்டு இப் பழியைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டு மண்ணுலகத்தின்கண் வருவாய்" என்று கூறினான். கடவுளுக்குச் செய்த குற்றத்தைக் குரவன், தீரும் வழியை ஆராய்ந்து தீர்த்து வைப்

1. சர்ப்ப - இது, விரைந்து செல்க என ஏவுதற்சொல்.

பான்; ஆனால், குரவனுக்குச் செய்த குற்றத்தை அக் குரவனே நீக்குவதல்லாமல் வேறு ஒருவராலும் தீர்க்க இயலாது. ஆதலின், தன்னிடம் தவறு செய்தமையால் வந்த இந்திரன் பழியைத் தீர்ப்பதற்கு வியாழ பகவானாகிய குரவனே வழியையும் கூறினான்.

ஈசனுக்(கு) இழைத்த குற்றம் தேசிகன் எண்ணித் தீர்க்கும்;
தேசிகற்(கு) இழைத்த குற்றம் குரவனே தீர்ப்ப தன்றிப்
பேசுவ தெவனோ? தன்பால் பிழைத்தகா ரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான் குரவனே வழியுங் கூற.

**இந்திரன் நில உலகத்திற்கு வருதல்**

இந்திரன் குதிரைமீதேறிக்கொண்டு தன் குருவும் தேவர்களும் அன்போடும் சூழ்ந்துவர, நிலவுலகத்தில் இறங்கித் திருக்கயிலாய மலையை அடைந்து வணங்கினான்; பிறகு, அங்கிருந்து தென் திசை நோக்கிப் புறப்பட்டான்; கங்கை முதலான கணக்கற்ற தீர்த்தங்கள் அனைத்திலும் சென்று நீராடினான்; திருக்கேதாரம், காசி, காஞ்சி முதலான சிவத் தலங்களை வணங்கி வழிபட்டான்; பிரமகத்தி பாவம் தீராமையால் வருந்தி அரவினால் விழுங்கப்பெற்ற திங்களைப்போல அழகு குன்றிய இந்திரன் **கடம்பவனத்து** எல்லையின் அருகாகச் சென்றான். அப்பொழுதே அவனைப் பற்றிய **பிரமகத்தி** [1] **வேறுபட்டு** விடுத்து அகன்றது. இந்திரன் தான் தாங்கிய சுமையை இறக்கியவன் போன்று அளவில்லாத மகிழ்ச்சியுற்று வியாழ பகவானிடம் கூறினான். அக் குரவனும், "இங்கே சிறந்த புண்ணிய தலமும், புண்ணிய தீர்த்தமும் உள்ளன; அவை நமக்குக் கிட்டுதல் வேண்டும்; நீ சென்று அவற்றை அறிவாயாக" என்று கூறினான். இந்திரன் அவற்றை அறிந்துவரச் சில தூதுவரை அனுப்பினான்.

**இந்திரன் கடம்ப வனத்தில் கண்ட காட்சிகள்**

பிறகு, இந்திரன் **கடம்ப வனத்துள்** சென்றுகொண்டிருந்தான். அவன் கண்ட காட்சியை என்னென்பது? குரங்குகள் அருவியில் நீராடும்; அருவிகள் வீசிய மணிகளை

1. இங்கு, இந்திரனைப்பற்றிய பழி விட்டு நீங்கி வேறுபட்டு நின்றதால் இவ்விடத்தை "வேறு நிலை" என்று கூறுவர்.

எடுத்துக் கற்பாறையில் வைத்து, அருவி நீரால் அபிடேகம் செய்யும்; மலர்களைப் பறித்துச் சூட்டும்; பழங்களைப் பறித்துவைத்து வழிபடும். ஒரு துறையில் யாளிகளும் யானைகளும் தும்பிக்கைகளால் நீரைமொண்டு ஒன்றினுக்கு ஒன்று ஊட்டி ஊட்டிப் பருகா நிற்கும். புலிகள் தங்கள் முலைப் பாலை மான் கன்றுகள் பசிப்பிணி நீங்கிட உண்பிக்கும். வெயில் மிக்க வெளியிடங்களில் கிடந்து வருந்தி நெளியும் பாம்பின் குட்டிகளுக்குக் கருடன் தன் இறக்கைகளை விரித்து நிழலைச் செய்யும். அதனைக்கண்ட குரங்குகள் கருணைகொண்டு "ஐயோ! இக்கருடன் வெயிலால் துன்பமடைந்ததோ ?" என்று கூறிச் சங்குகளில் அருவி நீரை மொண்டு எடுத்து அதன் மேல் சொரியும். நொச்சியின் இலையைப் போன்று பிளந்த கால்களையுடைய மயில்கள் பெண் மயில்களோடு மணம் புரியும் மணவறையிலே பாம்புகள் தங்கள் மாணிக்கங்களைக் கக்கி விளக்கேற்றும். குயில்கள் ' ஓம் ' என்று ஒலிக்க, பைங்கிளிகள் **திருவைந்தெழுத்தினையும்** ஓசையின் தொடர்ச்சிபெற உச்சரிக்க, நாகணவாய்ப் பறவைகள் குருவின் உபதேச மொழிகளைக் கேட்டு மகிழ்வதுபோல் அவற்றைக் கேட்டு மகிழும். இவ்வாறு இந்திரன் மிருகங்களோடு, பறவைகளின் செயற்கருஞ் செயல்களைக் கண்டு வியப்புற்று மெய் சிலிர்ப்ப உள்ளங் களிப்புறச் சென்றான்.

**இந்திரன் காண்பதற்கரிய சிவக்கொழுந்தைக் காணுதல்**

அப்போது, இனிய பாலை அருந்துகின்றவன் முன்னர், பின்பு கிடைத்தற்கரிய தேனைக் கொணர்ந்து சொரிந்தாற்போல இந்திரனுக்கு மகிழ்ச்சிமிக மீண்டுவந்த தூதுவர்கள் வணங்கிநின்று மொழிவாராயினர்: "அரசே! நாங்கள் எவ்வுலகத்திலும் எக் காலத்திலும் கண்டறியாத அதிசயமும் அளவைக்கு எட்டாத தெய்வத் தன்மையும் இக் கடம்ப வனத்தில் இன்று கண்டு மகிழ்ச்சியில் மூழ்கினோம்; அவ்விடத்து ஒரு தூய தீர்த்தக் கரையின் அருகில் ஒரு [1]**கடம்ப மரத்து** நீழலில்

1. இக் கடம்ப மரத்தினைப் பாதுகாத்தற்பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் வெள்ளிக் கவசம் சாத்தியுள்ளார்கள்.

ஒப்பற்ற **ஒளிப்பிழம்பாய் முளைத்தெழுந்த சிவலிங்கம்** ஒன்றுள்ளது'' என்றனர். அதனைத் தன் செவிக்கு அமுதமெனக்கொண்டு பேரானந்தமடைந்த இ ந் தி ர ன், ஒற்றர்களோடும் வழிக் கொண்டு கைகளைச் சிரசின்மேல் குவித்து, மனமொழிமெய் களும் அந்தக்கரணங்களும் முக்குணங்களும் ஒன்றித் தன் கொடிய தீவினையைப் போக்கத் தோன்றியருளிய அருட்குறி யாகிய சிவலிங்கத்தின்மீது பதிந்த அன்பு பிடித்திழுக்கச் சென்று, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிக் கடம்ப வனத் துள்ளே புகுந்தான். அங்கே அருவமாகியும், உருவமாகியும், அருவுருவமாகியும், இவற்றைக் கடந்து சச்சிதானந்த வடிவா கியும், அளவிறந்த உயிர்களாகியும், அவ்வுயிர்களின் அறிவுக் கோர் அறிவாகியும் நிற்றலின், மலரின் மணம்போலாகியும், சரா சரம் அனைத்தும் தன்னிடத்துத் தோன்றி அடங்க நின்ற மூல காரணமாகியும் முளைத்தெழுந்த [1] **சிவக்கொழுந்தைத்** தன் ஆயிரங் கண்களும் களிக்கும்படி கண்டான்.

அருவாகி உருவாகி அருவுருவங்
கடந்துண்மை அறிவா னந்த
உருவாகி அளவிறந்த உயிராகி
அவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்
மருவாகிச் சராசரங்கள் அகிலமுந்தன்
னிடையுதித்தும் அடங்க நின்ற
கருவாகி முளைத்த**சிவக் கொழுந்தை**யா
யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான்.

உடனே தேவேந்திரன் அடியற்ற மரம்போலக் கீழே வீழ்ந்து பணிந்து எழுந்தான்; ஆனந்தக் கண்ணீர் துளிக்க மகிழ்ச்சி என்னும் கடலில் மூழ்கி நாத் தழுதழுக்கத் துதிகள்

---

1. இச்சிவக்கொழுந்து மிகச் சுந்தரமாக இந்திரன் கண்களுக்கு [illegible]ியமையால், அதற்குச் 'சொக்கு' என்னும் திருநாமமிட்டான்; [illegible], ''சுந்தர வடிவங்கண்டே சொக்கெனும் நாமம் மிக்க, எந்தையே [illegible]க்கல்லா(து) ஓர் தேவர்க்கும் இயையா(து) என்றான்'' எனவரும் [illegible]ருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தின் அடிகளால் அறி யலாம். அன்றியும் '' தக்கன் வேள்வி தகர்த்தருள் ஆலவாய்ச் சொக்கனே '' எனச் சம்பந்தர் தேவாரம் கூறுவதாலும் உணரலாம்.

கூறி, உடல் நடுங்க அன்புவடிவாகிச் சோமசுந்தரக் கடவுளின் அருச்சனைக்கு வேண்டிய பொருள்களனைத்தும் விண்ணுலகத்திற்குச்சென்று கொண்டுவருமாறு சில தேவர்களை விடுத்தான்.

**சோமசுந்தரக் கடவுளை வழிபடச்செல்லுதல்**

பிறகு இந்திரன் தேவதச்சனை அழைத்து, ஒரு விமானம் அமைக்குமாறு ஏவினான். அப் பொற்றாமரைத் தீர்த்தத்தின் அருகே சென்று, சிவபெருமானை விரைந்து வழிபட மலர்களைத் தேடினான்; நல்ல மலர்கள் கிடைக்கப் பெறாமல் மனம் சோர்ந்தான்; அப்போது, சிவபெருமான் திருவருளினாலே அத்தீர்த்தத்தில் பல சூரியர்கள் ஒரு கடலில் ஒளிவீசித்தோன்றினாற்போலப் பொற்றாமரை மலர்கள் மலர்ந்திருக்கக் கண்டான்; அன்பு மேன்மேலும் பெருக மகிழ்ச்சிப் பெருக்கால் கூத்தாடினான்; பொற்றாமரை மலர் மலர்ந்த காரணத்தினாலே அத்தீர்த்தத்திற்குப் **பொற்றாமரைப் பொய்கை** என்ற திருநாமமிட்டு அழைத்தான்; மீளவும் பொற்றாமரைத் தடாகத்தில் நீராடிப் [1] **பொற்றாமரை மலர்களைப்** பறித்தெடுத்துக்கொண்டு முழுமுதலாய் எழுந்தருளியுள்ள சிவலிங்கப் பெருமான் சந்நிதியை அடைந்தான்.

முன்னரே சூழ்ந்துள்ள காடுகளை வெட்டி நிலத்தைத் திருத்திக் கொண்டுவரும்பொழுது, சிவக்கொழுந்தின் திருமுடிமேல் கதிரவனின் ஒளி மெல்லத் தீண்டக்கண்ட இந்திரன் மனம் வருந்தித் தன் வெண்குடையைக்கொண்டு நிழல்செய்ய எண்ணினான். அப்போது, சூரிய மண்டலம்போல் ஒரு மாணிக்க விமானம் விண்ணினின்றும் கீழே இறங்கிவந்தது. எட்டு யானைகளும், முப்பத்திரண்டு சிங்கங்களும், அறுபத்து நான்கு சிவகணங்களும் தாங்கத் தேவதச்சனால்ஆக்கிக்கொடுக்கப்பெற்ற [2] அவ்விமானத்தைச் சாத்தி, இந்திரன் சோமசுந்தரக்

---

1. தற்போது இப்பொற்றாமரை மலரின் ஞாபகச் சின்னமாகத் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்துத் தலைவர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் பொன்னால் தாமரைமலர் செய்து பொற்றாமரைத் தீர்த்தத்தில் மிதக்க விட்டுள்ளார்கள்; அவர்களின் பெருங்கருணைத் திறம் அளவிடற்கு அரியதாகும்.

2. இதனை, "வேதியன் படைக்க மாலவன் காக்கப், பெறுதயோர் திருவுருத் தான்பெரிது நிறுத்தி, அமு(து)அயில் வாழ்க்கைத் தேவர்கோன்

கடவுளைப் பூசிக்கத் தொடங்கினான். அச்சமயத்தில் வழிபாட்டிற்குரிய பொருள்களைக் கொணர விண்ணுலகத்திற்குச் சென்றவர்கள், ஐந்தருக்களினாலே தரப்பட்ட பீதாம்பரம், மணிகள் பதித்த ஆபரணம், சந்தனம், கங்கை நீராகிய திருமஞ்சனம், தூபம், திருப்பள்ளித் தாமம், தீபம், பஞ்சகவ்வியம், பழம், தேன், *திருவமுது ஆகிய இவையனைத்தையும் கொண்டு வந்து கொடுத்தனர்.

**சோமசுந்தரக் கடவுளைப் போற்றுதல்**

இந்திரன் தெய்வத்தன்மை பொருந்திய பொற்றாமரை முளைத்த தடாகத்தில் நீராடித் திருவெண்ணீறு தரித்து உருத்திராக்க மாலையை அணிந்து, அன்பே வடிவாய், அருள் வடிவமாகத் தோன்றுகின்ற பசுபதியாகிய சிவலிங்கப் பெருமானைச் சிவாகமப்படி மெய்யன்பு பெருகப் பூசைசெய்து இன்ப வெள்ளத்தில் திளைத்தான்; நிலத்தில் அட்டாங்க பஞ்சாங்க விதிப்படி வீழ்ந்து பணிந்து திரிகரணங்களும் ஒன்றுபட வலம் வந்தான்; கும்பிட்டுக் கூத்தாடினான்; ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தோடப் பன்முறைகைகூப்பிவணங்கித் துதித்துப்போற்றினான்.

அங்கணா போற்றி! வாய்மை
ஆரணா போற்றி! நாக
கங்கணா போற்றி! மூல
காரணா போற்றி! நெற்றிச்
செங்கணா போற்றி! ஆதி
சிவபரஞ் சுடரே போற்றி!
எங்கணா யகனே போற்றி!
ஈறிலா முதலே போற்றி!

யாவையும் படைப்பாய் போற்றி!
யாவையும் துடைப்பாய் போற்றி!
யாவையும் ஆனாய் போற்றி!
யாவையும் அல்லாய் போற்றி!

---

இழிச்சிய, மதமலை இருநான்கு பிடர்சுமந்(து) ஓங்கிச், செம்பொன்மணி குயிற்றிய சிகரக் கோயிலுள், அமையாத் தண்ணளி உமையுடன் நிறைந்த, ஆலவாய் உறைதரு மூலக் கொழுஞ்சுடர்" எனவரும் கல்லாடத்தின் அடிகளாலும் உணரலாம்.

யாவையும் அறிந்தாய் போற்றி!
யாவையும் மறந்தாய் போற்றி!
யாவையும் புணர்ந்தாய் போற்றி!
யாவையும் பிரிந்தாய் போற்றி!

இடருறப் பிணித்த இந்தப்
பழியினின்(று) என்னை ஈர்த்தீன்
அடியிணைக்(கு) அன்பன் ஆக்கும்
அருட்கடல் போற்றி! சேற்கண்
மடவரல் மணாள போற்றி!
கடம்பமா வனத்தாய் போற்றி!
சுடர்விடு விமான மேய
**சுந்தர விடங்க** போற்றி!
பூசையும், பூசைக் கேற்ற
பொருள்களும், பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு
நியதியிற் பேறு நல்கும்
ஈசனு மாகிப் பூசை
யான்செய்தேன் எனும்என் போத
வாசனை யதுவு மான
மறைமுத லடிகள் போற்றி!

**இந்திரனின் வேண்டுகோள்**

இவ்வாறு இந்திரன் போற்றித் துதித்ததும், யாவர்க்கும் முதல்வனும், அடியார்கள் எண்ணியதை எண்ணிய வண்ணம் முடிப்பவனுமாகிய சோமசுந்தரக் கடவுள் வெளிப்பட்டுப் புன்னகை பூத்து, இந்திரன்பால் திருவருட்கண் சாத்தி, "உன்னுடைய விருப்பம் யாது? சொல்" என்று திருவாய்மலர்ந்தருளினார். உடனே இந்திரன் வணங்கி எழுந்து சிரசின்மேலே கைகளைக் கூப்பிக்கொண்டு நின்று, "அடியேன், தேவரீர் வீற்றிருக்கும் எல்லைக்குச் சமீபமாக வருமளவில் என் கொலைப் பழியும், முற்பிறப்பிலே செய்த தீவினையும் நீங்கப்பெற்று, உம்முடைய திருவடித் தாமரை மலரைத் துதித்துப் பூசை செய்யவும் உரியனானேன்; இதனைக்காட்டிலும் பெறத்தக்க சிறந்த பேறு யாது உளது? இவ்வாறே இந்த நின் திருவடித்

தாமரைகளையே எப்பொழுதும் பூசை செய்து நினது தொண்டருள்ளே அடியேனும் ஒரு தாழ்ந்த தொண்டனுவேன்; அதுவே அடியேன் வேண்டுவது" என்று விண்ணப்பஞ் செய்தான்.

**சிவபெருமான் திருவருள் புரிதல்**

அப்போது சோமசுந்தரக் கடவுள் கருணை கூர்ந்து இந்திரனை நோக்கி, "அன்பனே! நீ வேனிற் காலமும், சித்திரை மாதமும், சித்திரை நட்சத்திரமும், பௌர்ணமி திதியும் ஆகிய இவை கூடிய **சித்திரை மாதத்தின் சித்திரைப் பௌர்ணமி** நாள் தோறும் வந்து வந்து பூசை செய்வாயாக; இதனுல், முந்நூற்றறுபத்தைந்து நாளும் பூசை செய்த பயன் கிடைக்கும்; இனி, நீ சுவர்க்கலோகத்தை அடைந்து தூய பல இன்பங்களைத் துய்த்து வாழக் கடவை; பின்பு, உனக்கு மலபரிபாகம் உண்டாக, நான்முகன், திருமால் முதலிய பெருந் தேவர்களுடைய பதங்களிலும் பிறவற்றிலும் நிராசை உண்டாகும்; அப்பொழுது நாம் வீடுபேற்றை அருளுவோம்" என்று திருவாய் மலர்ந்தருளி விடை கொடுத்து இலிங்கத்துள் மறைந்தருளினர்.

**தேவேந்திரன் மீண்டும் சுவர்க்கத்தில் ஆட்சி புரிதல்**

விண்ணவர்கோன் உடம்பெங்கும் புளகங்கொள்ளச் சிரசின் மேலே கைகளைக் குவித்தான்; கீழே வீழ்ந்து வணங்கினன்; எழுந்து கண்களில் ஆனந்த நீர் பெருக நின்றான்; பல முறை துதிசெய்து கூத்தாடினன்; சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளைப் பிரிவதற்கு ஆற்றுமல் அஞ்சினன்; ஆனுல், அவர் அருளிய ஆணையை நாடி உள்ளம் பிரியா விடை பெற்றுக்கொண்டு பொன்னுலகை அடைந்தான். அங்கு அவனுக்கு அரம்பையர்கள் இருமருங்கும் வந்து நின்று, கவரி வீசினர். தேவர்கள் மந்தார மலர்களையும், கற்பக மலர்களையும் சொரிந்து அடிவணங்கினர். இந்திரன் இந்திராணியுடன் அரசு வீற்றிருந்து, சோமசுந்தரக் கடவுளைச் சிறிதும் மறவாத சிந்தையோடு அளவிலா இன்பத்தில் திளைத்து வாழ்ந்து வந்தான்.

செய்யுள்—97.

ஆகச் செய்யுள்–440.

---

## 2. வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்

### துருவாச முனிவர் பெற்ற தாமரை மலர்

பிறவித்தொடர்பை அறுக்கும் காசி நகரில் **துருவாச முனிவர்** சிவாகம விதிப்படி தம் பெயரினாலே ஒரு சிவலிங்கம் தாபித்துப் பூசைசெய்து தோத்திரம் செய்தார். அப்போது அடியார்களின் [1] அன்புக்கு எளியவராகிய சிவபெருமான் தனது திருவருளால் திருமுடியினின்றும் பொன்னிறம் வாய்ந்த மணம் பொருந்திய தாமரை மலர் ஒன்றைக் கீழே விழச்செய்தார். துருவாச முனிவர் அதனைத் தம்முடைய இரு கைகளையும் விரித்து ஏந்திக் கண்களிலும், சிரசிலும், மார்பிலும் ஒற்றிக் கொண்டு உடல் பூரித்து மனமகிழ்ச்சி பெருக அங்கு நின்றும் நீங்கிக் கற்பக மரங்கள் பொருந்திய சுவர்க்க லோகத்திற்குச் சென்றார்.

### தாமரை மலரை இந்திரனுக்கு அளித்தல்

துருவாச முனிவர் விண்ணுலகத்தை அடைந்தபோது, இந்திரன் அசுரர்களை அழித்து வெற்றிமாலை சூடித் தனது தலைநகராகிய அமராவதிக்கு மீளுங்கால் தேவர் சேனையாகிய கடல் ஒருபால் ஆரவாரஞ் செய்யவும், மங்கலமாகிய பல்லாண்டும் வேதமும் ஒருபால் முழங்கவும், எத்திக்கிலும் வாத்தியங்கள் ஒலிக்கவும், தேவ மகளிர் அமுதினைப் பொழியும் இசைப் பாட்டுக்கள் செவியின்கண் ஏறவும், சாமரை நிரைகள் இரட்டவும், வெண்குடை நிழற்றவும், வெள்ளையானையின்மீது பவனி வந்தான். அப்பொழுது தேவர்கள், இந்திரன் அருகு வந்து தங்கள் தங்கள் மனத்திற்குப் பொருந்திய வேறு வேறு வகையான கையுறைகளைக் கொடுத்துக் கைகளைக் குவித்து வணங்கிக் கண்டார்கள். அதனைக் கண்ட துருவாச முனிவரும் இந்திரனுக்கு ஆசி மொழிகளைக் கூறித் தம் கையிலுள்ள தாமரை மலரைக் கொடுத்தார். செல்வச் செருக்கினாலே அறிவில்லாதவனாகிய தேவேந்திரன் அம்மலரை ஒரு கையை நீட்டி வாங்கி,

---

1. சிவபெருமான் அன்புக்கு எளியனாதலை, "பத்தி வலையிற் படுவோன் காண்க" எனவும், "யாவ ராயினும் அன்பர் அன்றி அறியொணாமலர்ச் சோதியான்" எனவும் வரும் திருவாசக அடிகளால் அறியலாம்.

வெள்ளை யானையின்மேல் வைத்தான். அவ் வெள்ளை யானை, தன் முடியின்மீது மணங் கமழ்ந்து கிடந்த அத் தாமரை மலரைக் கீழே தள்ளிக் காலினால் மிதித்துத் தேய்த்தது.

**துருவாச முனிவர் சீற்றங்கொண்டு சாபம் அளித்தல்**

அந்நிகழ்ச்சியைக் கண்டதும் துருவாச முனிவர் அக்கினி சிந்தும்படி பார்த்துத் தேவர்களெல்லாம் அஞ்சியோடும்படி கடுங்கோபங்கொண்டு, உருத்திரனைப்போல நின்று இந்திரனை நோக்கி, "புலித்தோலினை ஆடையாக உடுத்துப் பாம்புகளை அணிகலன்களாக அணிந்து, இடபத்தை வாகனமாகக்கொண்ட சிவபெருமானுடைய திருவடித் தாமரையை இடையறாது நினைக்கின்ற [1] **மெய்யன்பர்களும்** அருவருத்துத் தள்ளிவிட்ட அற்ப செல்வத்தினாலாகிய செருக்கினைக் கொண்ட இந்திரா! நீ என்ன காரியம் செய்தாய்? தேவர்களின் கையுறைப்பொருள் களையே நன்கு மதித்தாய்! ஈசன் திருமுடியின்மேல் சாத்தப் பட்ட தாமரை மலரைப் போற்றாது ஒரு கரத்தால் வாங்கி யானை தன் காலால் மிதித்துச் சிதைக்கும்படி அதன் மேல் வைத் தனையே! பேதையே! திருமாலின் இறுமாப்பும், நான் முகனின் இறுமாப்பும், தேவர்கள் வணங்க வாழும் உன்னுடைய இறு மாப்பும் ஆலமுண்ட பெருமானை அடிபணிந்து பூசித்ததனா லாகிய பயன் என்பதைச் சிறிதும் நினைந்திலையே!

வண்டுளருந் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர்தொழ வாழ்உன் இறுமாப்பும் ஆலாலம்
உண்டவனைப் பூசித்த பேறென்(று) உணர்ந்திலையால்.

ஏ இந்திரனே! உன் முடி பாண்டியருள் [2] **ஒரு வீரனுடைய** வளை (திகிரி) யினாலே சிதறக்கடவது; உனது இந்த நான்கு கொம்புகளையுடைய வெள்ளையானையும் காட்டானையாகக் கடவது" என்று சபித்தார்.

---

1. மெய்யன்பர்கள் செல்வத்தை அருவருத்துத் தள்ளுதலை, "கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு" எனவும், "போகம் வேண்டி வேண்டிலேன் புரந்த ராதி இன்பமும்" எனவும் வரும் திருவாசகத்தின் அடிகளால் அறிக. 2. இங்கு ஒரு வீரன் என்றது, உக்கிர குமார பாண்டியனைக் குறிப்பதாகும்.

**சாபத்தை மாற்றியருள வேண்டுதல்**

அவற்றைக் கேட்ட தேவர்கள் நடுநடுங்கித் துருவாச முனிவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கி, "ஐம்பொறிகளையும் வென்ற ஐயனே! எம் அரசனும் வெள்ளை யானையும் குற்றஞ் செய்தலால் சாபமிட்டீர்! இச் சாபத்தை இப்பொழுதே நீக்கியருள வேண்டும்" என்று குறையிரந்து வேண்டினர். அப்போது துருவாசமுனிவர் தேவர்களின்பொருட்டு மனமிரங்கிக் கருணைகூர்ந்து, "சிவபெருமான் திருவருளால் அருளிய பிரசாதத்தை (நிர்மாலியத்தை) நிந்தித்த குற்றம் பரிகாரத்தினாலே நீங்காது; ஆதலால் [1] இந்திரனுக்குத் தலை அளவாக வந்தது முடி அளவாகப் போகக் கடவது; வெள்ளை யானை காட்டானையாகி நூறு ஆண்டுகள் வரையில் திரிந்தபின்பு, பழைய நிலையினை அடைவதாக" என்று பிறிது சாபம் அருளினார். பிறகு, சாபம் பெற்றுநின்ற வெள்ளையானை விண்ணுலகத்தை விட்டு நீங்கி அறிவு இழந்து கருநிறமுடையதாகிக் காட்டில் திரியும் யானைக் கூட்டங்களோடு சேர்ந்து எங்கும் திரியலாயிற்று.

**காட்டானை பழைய வடிவம் பெறுதல்**

இவ்வாறு காட்டானைகளோடு கலந்த யானை, மறவர்கள் வாழும் பாலை நிலத்திலும், முல்லைப்பூக்களோடு செல்லும் காட்டாறுகளையுடைய முல்லை நிலத்திலும், முருகக்கடவுளைத் தெய்வமாகக் கொண்ட குறவர்கள் வாழும் குறிஞ்சி நிலத்திலும் திரிந்து நூறு ஆண்டுகளையும் கழித்தது. பின்னர் ஒரு நாள் அந்த யானை சோலைகளால் சூழப்பெற்ற தெய்வத்தன்மை பொருந்திய கடம்ப வனத்தில் புகுந்தது. அதற்குச் சிவபெருமானுடைய திருவருளைப்பெறும் காலம் வந்து கூடியது போலும்! அங்கு யானை, மரகதம்போலும் இலை தழைத்து மின்போலும் ஒளிவிளங்கும் பொற்றாமரைகள் மலர்ந்த தடாகத்தைக் கண்டது; அவ்வாறு கண்டபோது முன்னை அறிவு

---

1. இந்திரன் மகுட பங்கம் அடையும் வரலாறு இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலத்தில் காண்க; இங்கே. "தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று" என்னும் உலக வசனமும் நினைக்கற்பாலது.

தோன்ற, அப்பொற்றாமரைத் தடாகத்தில் நீராடியது; உடனே காட்டானை வடிவு நீங்கித் தன் பழைய வடிவம் பெற்றது.

**வெள்ளை யானை சொக்கலிங்கமூர்த்தியைப் பூசித்தல்**

அப்பொழுது சிவபெருமான் திருவருளினாலே சொக்கலிங்க மூர்த்தி எதிர்தோன்ற அவ் வெள்ளையானை கண்டு வணங்கியது; பிறகு அப்பெருமானைப் பூசிப்பதற்கு ஆர்வம் கொண்டது; தன் துதிக்கையினால் பொற்றாமரை நீரை முகந்து வந்து திரு மஞ்சனமாகிய தூய நீரால் அபிடேகம் செய்து திருப்பள்ளித் தாமஞ் சாத்திப் பூசை செய்தது.

**சோமசுந்தரக் கடவுள் திருவருள் புரிதல்**

வெள்ளை யானையினது அன்பின் பெருக்கை உணர்ந்த சோமசுந்தரக் கடவுள் வெளிப்பட்டு, "நீ இங்கு வந்த காரணம் என்னை? உனக்கு வேண்டும் வரம் யாது?" என்று வினவி யருளினார். தெய்வத் தன்மை பொருந்திய வெள்ளை யானை, அவரை வணங்கி நின்று, முற்பொழுதில் நிகழ்ந்ததனையும், வந்த தன்மையையும் முறைப்படக் கூறி, "எந்தையே! உம்மை அடையப்பெற்ற தமியேனுக்கு இனி ஒருகுறை உண்டாகுமோ? விமானத்தைத் தாங்கும் இந்த எட்டு யானைகளோடு அடி யேனும் ஒன்பதாவது யானையாகி உம்முடைய திருவடிகளைப் பிரியாது உமக்கெதிரே இவ் விமானத்தை முதுகில் தாங்க என் மனம் விரும்புகின்றது; ஆகையால், அதனை அருளல் வேண்டும்" என்று வேண்டியது.

சோமசுந்தரக் கடவுள் வெள்ளை யானையின்மீது திருக் கடைக்கண் சாத்தி, "தேவேந்திரன் நம்மிடத்து மெய்யன்பு பூண்டவன்; ஆதலால் நீ அவனைச் சுமந்து செல்வதே நமக்குப் பெரு மகிழ்ச்சி பயக்கும் செயலாகும்" என்று கூறிப் பின் னரும் வேண்டிய வரங்கள் பலவற்றை அளித்து விடை கொடுத்தனுப்பினார்.

---

1. இங்கு வெள்ளை யானைக்கு அருள் செய்ததை, "முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட, அத்திக்கு அருளி அடியேனை ஆண்டுகொண்டு" எனவரும் திருவாசகம்-திருத்தெள்ளேணத்தின் அடிகளாலும் அறியலாம்.

இடையறு அன்பின் வேழம்
இங்ஙனங் கூற விண்ணு(டு)
உடையவன் நம்பால் மெய்யன்
புடையவன் ; அவனைத் தாங்கி
அடைவதே நமக்கு வேண்டும்
அகமகிழ்(வு) என்னுப் பின்னும்
விடையவன் வரங்கள் நல்கி
விடைகொடுத்(து) அருளி னுனே.

**வெள்ளையானையின் சிவத் தொண்டு**

பிறகு, வெள்ளையானை வணங்கி விடைபெற்றுக்கொண்டு சொக்கலிங்க மூர்த்திக்கு மேற்குத் திசையினை அடைந்து அங்கே, தன் பெயரினால் [1] **ஒரு தீர்த்தமும்** (ஐராவதத் தீர்த்தமும்), அதன் கரையில் [2] **சிவலிங்க மூர்த்தியையும், விநாயகரையும்** பிரதிட்டை செய்து அன்போடு பூசை செய்து கொண்டு இருந்தது. இச் செய்தியைக் கேள்வியுற்ற இந்திரன் தன் ஏவலாளரை அழைத்து, "எமது வெள்ளை யானையைக் கொண்டு வருக" என விடுத்தான். வெள்ளையானை, தன்னைவந்து அழைத்த ஏவலாளர்களை நோக்கி. "வருவேன்" என்று கூறி, அவர்களை முன்னே போகச்செய்து, அங்கு நின்றும் புறப்பட்டுச் சொக்க லிங்க மூர்த்திக்குக் கீழ்த்திசையிலேபோய் அங்கே '[3]**ஐராவதபுரம்**' எனத் தன் பெயரால் ஒரு நகரத்தை அமைத்து, '**இந்திரேச்சுரர்**' எனத் தனது தலைவனாகிய இந்திரன் பெயரால் ஒரு சிவலிங்கமும் தாபித்துப் பூசை செய்துகொண்டிருந்தது.

**வெள்ளையானை சுவர்க்கலோகம் அடைதல்**

இந்திரன் இன்னும் நம்முடைய யானை வந்திலது என்று பின்னரும் தன் ஏவலாளர்களை விரைந்து அனுப்பினுன். அவ் வேவலாளர்களோடும் வெள்ளையானை சுவர்க்கத்தை அடைந்து,

---

1. இத்தீர்த்தம் தற்போது 'யானையூருணி' எனவும் 'கணபதி யேந்தல்' எனவும் வழங்கும்.

2. இச் சிவலிங்கப் பெருமான், 'ஐராவதேச்சுரர்' எனவும், இவ் விநாயகப் பெருமான், 'ஐராவத கணேசர்' எனவும் குறிக்கப்பெறுவர்.

3. ஐராவதபுரம் - இது தற்போது 'ஐராவதநல்லூர்' என வழங் கப்பெறும்.

இந்திரனை வணங்கிக் காடுகளிலும் மலைகளிலும் ப
தான் அடைந்த துன்பத்தினையும், சோமசுந்தரக்
தரிசித்துத் தன் சாபத்தைப் போக்கிக்கொண்டல
இனிது வீற்றிருந்தது.

**ஐராவதேச்சுரர் முதலானவரை வழிபடும் பயன்**

மேலைத் திசையிலுள்ள **ஐராவத தீர்த்தத்திலே** நீராடி, **ஐராவத விநாயகரையும், ஐராவதேச்சுரரையும்** மெய்யன்போடு வணங்கினவர் சாபத் தொடர்ச்சியினின்றும், தீவினைத் தொடர்ச்சியினின்றும் நீங்குவர். வெள்ளையானை சென்ற வழியிலே சென்று, வையை நதியில் நீராடித் தென்கரையில் எழுந்தருளியிருக்கும் **இந்திரேச்சுரரை** வணங்குவோர் அறம் முதலிய மூன்று பொருள்களால் பெறும் பயனை இம்மையிலேயே அனுபவிப்பர்; மறுமையில் [1]பதினான்கு தேவேந்திரப் பட்டம் வரையும் சுவர்க்கத்திலே பல போகங்களைத் துய்த்துப் பின்பு அதில் வெறுப்புத் தோன்ற இருவினை யொப்பு முதலியன அடைந்து முத்தியைப் பெறுவர்.

செய்யுள்—31

ஆகச் செய்யுள்–471

---

1. பதினான்கு தேவேந்திரர் - அரி, விபச்சித்து, சுசாந்தி. சிவி, விபு (வசு), மனோசவன், புரந்தரன் (ஓசஸ்வி), மாவலி, அற்புதன், சாந்தி. விருடன், இருத்தாமன், திவற்பதி, சுசி என்போர்.

## 3. திருநகரங் கண்ட படலம்

### கண்ட அதிசயம்

...இசை பயிலும் கண்டத்தினையுடைய வண்டுகள் இசை ...டுகின்ற கடம்பவனத்தின் கீழ்த்திசையிலே பாண்டியர் மரபிற்கு மகுடம்போல் விளங்கிய **குலசேகரன்** என்னும் மன்னர் மன்னன் அரசு வீற்றிருந்தது[1] **மணவூர்** ஆகும். அங்நகரில் **தனஞ்சயன்**[2] என்னும் வணிகன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன், பெருஞ் செல்வத்தைத் தேடுவதைப் போலவே சிவ பூசை முதலிய சிவ புண்ணியங்களையும் தேடுபவன்; சிவபெரு மானிடத்துச் சிறந்த மெய்யன்புடையவன். ஒரு சமயம் தனஞ் சயன் மணவூரிலிருந்து மேற்றிசையிலுள்ள ஊர்களில் சென்று, வாணிபம் செய்துகொண்டு தன் நகருக்குத் திரும்பி வருகையில் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளிய கடம்பவனத் தின் வழியே வந்துகொண்டிருந்தான். அப்போது சூரியன் மேற்குக்கடலில் வீழ்ந்துமறைந்தான். உலகினை இருள்சூழ்ந்தது. அவ்விருளினிடத்துத் தனித்தவனாய் வந்து வருந்துகின்ற தனஞ்சயன், அவ்விடத்தில் நான்கு கொம்புகளையுடைய எட்டு யானைகளின் பிடர்களால் சுமக்கப்பெற்றுக் கதிரவனைப்போல் ஒளி வீசிக்கொண்டிருக்கும் விமானத்தை நேரில் கண்டான்; அதன் அருகே சென்று, அதன்கண் எழுந்தருளிய சொக்கலிங்க மூர்த்தியைத் தரிசித்து வணங்கிப் பெரு மகிழ்ச்சி கொண்ட வனாய் இராப்பொழுதை அங்கேயே கழிக்குமாறு இருந்தான்.

அன்று இரவு **சோமவாரம்** ஆதலால், அங்கே தேவர்கள் வந்து, சொக்கலிங்கமூர்த்தியின் திருவடிகளை வணங்கிச் சிவ ராத்திரிபோல எண்ணி நான்கு யாமங்களிலும் விசேட பூசை செய்தனர். அதனைச் சோமசுந்தரக் கடவுளின் திருவருள்

---

1. மணவூர் - இது 'மணலூர்' எனத் திருவாலவாயுடையார் திரு விளையாடலிலும், 'மணலூர்புரம்' என வியாச பாரதத்திலும் கூறப்பெற் றுள்ளது; தற்போது மணற்புரம் எனவும் வழங்குகிறது என்பர்.

2. இத் தனஞ்சயன் வடிவம், தற்போது பொற்றாமரைத் தீர்த்தத்தில் பாண்டியன் படித்துறையில் (வடபால் படித்துறையில்) கிழக்குத் தூணில் உள்ளது.

நோக்கால் அன்பு நிறைந்த அறத்தினையுடைய வணிகனாகிய தனஞ்சயன் கண்டான்; சிவ பூசைக்குரிய கத்தூரி, பனிநீர், முதலிய சுகந்த திரவியங்களைத் தேவர்கள் கையில் கொடுத்துச் சோமசுந்தரக் கடவுளின் விமானத்தின் திருமுன் தானிருந்து இறைவனை அருச்சனை புரிவிப்பானாயினன். பிறகு சோமசுந்தரக் கடவுளைப் பூசித்த தேவர்களின் கூட்டமும், தன் மனத்தைப் பற்றிய வல்வினையின் கூட்டமும், இராப்பொழுதும் நீங்க வணிகன் ஒருவரையும் காணாதவனாகி விமானத்தின்கண் தனித்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானை மட்டுமே கண்டான்; பேரதிசயம் அடைந்து அச்சொக்கலிங்கப்பெருமான் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்தான்; இரண்டு கைகளையும் சிரசின்மேல் குவித்தவாறு வலம் வந்தான்; பிறகு விடைபெற்றுக்கொண்டு தன் ஊர் வந்து சேர்ந்தான்.

### தனஞ்சயன் அரசனுக்கு அறிவித்தல்

தனஞ்சயன் பாண்டிய மன்னனது அரண்மனையை அடைந்து குலசேகரன் முன் நின்று, "அரசே! நேற்றுக் கடம்பவனத்தில் ஓர் அதிசயங் கண்டேன்; நான் வாணிபம் செய்து திரும்பி வருகையில் கடம்பவனத்தில் நுழையும்பொழுது சூரியன் மேற்கு மலையை அடைந்து மறைந்தான்; இரவு வந்தது; அப்போது, சூரிய மண்டலம்போல் பேரிருளை நீக்கும் ஒளியினையுடைய ஒரு விமானத்தையும் அதனில் எழுந்தருளியிருக்கும் ஒரு சிவலிங்க மூர்த்தியையும் கண்டேன்; தேவர்கள் வந்து அம் மூர்த்தியை நான்கு யாமங்களிலும் பூசை செய்து சென்றனர்; இரவு நீங்கித் கதிரவன் உதித்ததும், நானும் விடைபெற்றுக்கொண்டு திரும்பி வந்துவிட்டேன்" என்று கூறினான். அச் செய்தியைக் கேட்ட குலசேகர பாண்டியன் சிவபெருமானின் திருவடிகளைச் சிந்தித்து இரு கைகளையும் சிரமேற் கூப்பி உள்ளத்திலே அன்பும் அதிசயமுமே பெருக இருந்தான்.

### பாண்டியன் கனவில் சிவபெருமான் தோன்றுதல்

அன்று பகல் கழிந்து இரவு வந்துற்றது. அன்பர்களுக்கு இருவினை ஒப்புவந்தபோது, அவர்களின் ஆணவ மலத்தைப் போக்கி, அவர்கள் சிரசின்மீது திருவடித் தாமரை மலரைச்

சூட்டித் தமது உண்மைத் திருவுருவத்தைக் காட்டியருளு கின்ற சிவபெருமான், அப் பாண்டியன் கனவில் ஒரு சித்தராய் வந்து தோன்றினர். அப்போது சித்தராகிய சிவபெருமான் பாண்டியனை நோக்கி, "வேலினை ஏந்திய பாண்டியனே! கடம்பவனத்திலுள்ள காட்டைத் திருத்தி அழகிய நகரமாகச் செய்வாயாக!" என்று அறிவித்து மறைந்தருளினர். குலசேகர பாண்டியன் இரவு கழியும் வரையும் உறங்காதவனுயினுன். சூரியனும் உதயமானுன். கனவினின்று நீங்கி விழித்திருந்த பாண்டியன் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அமைச்சர் களையும், தவத்தில் சிறந்த முனிவர்களையும் அழைத்தான்; கனவில் தான் கண்டதையும், பகலில் வணிகனிடத்துக் கேட்டதையும் கூறினுன்; பிறகு யாவற்றையும் விருப்பமுற உசாவித் தெளிந்து மேற்கு நோக்கிப் புறப்பட்டான்.

**குலசேகர பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை வணங்குதல்**

குலசேகர பாண்டியன் அமைச்சர்களோடு பெரிய அக்கடம்ப வனத்தை அடைந்தான்; பொற்றாமரைத் தடாகத்தில் நீராடி னுன்; பொன்னுலாகிய விமானத்தின்கண் இனிதாக வீற்றிருக் கும் சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்துக் கைகளைச் சிரமேற் கூப்பி வணங்கினுன்; உள்ளத்தினின்று எழுந்த அன்பு பின் நின்று தள்ள, இறைவனின் திருவருட்கருணை முன்னே வந்து இழுத்துச்செல்ல, என்புகள் நெக்கு நெக்குருக, விரைந்து சென்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து, சோமசுந்தரக் கடவுளின் திருமுன்பு நின்று,

"சரணம் மங்கையோர் பங்குறை சங்கர! சரணம்;
சரணம் மங்கல மாகிய தனிமுதல்! சரணம்;
சரணம் மந்திர வடிவமாஞ் சதாசிவ! சரணம்;
சரணம் உம்பர்கள் நாயக! பசுபதி! சரணம்"

என்று துதிப்பானுயினுன்.

மேலும் பாண்டியன் இறைவனை நோக்கி, "எந்தையே! மண் ணுலகத்தில் உண்டாகும் ஆசையையும், தேவர்களுடைய பதவி களின்மேல் உண்டாகும் ஆசையையும் விடுத்தவர்க்கு எய்து வதே அல்லாமல், அம்மண்ணுலகினை ஆண்டு துன்பத்தில் அழுந்தி

சுவர்க்கத்திலும், நரகத்திலும் கட்டுண்டு சுழலும் அறிவிலே மாகிய எங்களுக்கும் உமது திருவருள் எய்தத் தக்கதோ? நீ வேதத்தின் சிரசிற்கும் எட்டாது மிக உயர்ந்து நிற்பவன்; உமக்கு அன்பிலேம் ஆயினும் அடியேங்களுக்கு அன்பு தந்து எமது குடி முழுதையும் ஏவல்கொண்டு ஆளவோ இக் கானகத்தில் எழுந்தருளியது?'' என்று பலவாறு புகழ்ந்து கூறி, உள்ளத்தில் ஊற்றெடுத்த அன்பானது கண்களின் வழியாகச் சொரிவதுபோல, ஆனந்தக் கண்ணீராகிய நதியோடு சிவானந்தக்கடலுள் மூழ்கி மெய்யன்பினுல் வலம் வந்து, வணங்கிக் கொண்டு புறம்போந்து அமைச்சர்களோடு ஓரிடத்து இருந்தான்.

**காடுகளைக் களைந்து எறிதல்**

அப்போது பாண்டி மன்னனுடைய ஆணையால் அமைச்சர்கள் அங்குள்ள ஏவலாட்களைப் பல இடங்களிலும் அனுப்பிப் பல்வகைத் தொழிலாளர்களை அழைத்துவருமாறு செய்தனர். நீண்ட காட்டினை அழித்து அழகிய நகரமாக்கும் தொழிலாளர்கள், கடல்போல ஆரவாரம் செய்துகொண்டு வந்தனர். அவர்களில் சந்திரனது பிளவுபோன்ற கூரிய கொடுவாளையும், கோடரியையும் சுமந்த தோளினர் சிலர். அரையிற் கட்டிய கச்சினர் சிலர்; செருப்பணிந்த காலினர் சிலர். இத்தகைய தொழிலாளர்கள் பலர், காடுகளை வெட்டித் திருத்தும் தொழிலில் முனைந்தனர், மரங்களை வெட்டுகின்ற ஒலியும், வெட்டுகின்றவர்களின் ஒலியும், முரிகின்ற ஒலியும், முரிந்து கீழே விழுகின்ற ஒலியும் ஒன்ருகி, மேகங்களின் இடி ஒலியையும் கீழ்ப்படச்செய்யும். யானைகள் போர்க்களத்தில் ஒலிக்கின்ற வாயினையுடையவாய் நிணத்துடன் இரத்தம் பெருகத் தந்தங்கள் முரிய இறந்து கீழே வீழ்ந்துகிடக்கும் தோற்றத்தைப்போல், வயிரம் செறிந்த மரங்கள் மகரந்தத்துடன் மலர்களும் செந்தேனும் சிந்த ஒலி செய்து கிளைகள் முரியக்கீழே வீழ்ந்துகிடந்தன. மலர்களில் நிறைந்திருந்த வண்டினங்கள் அருகிலிருந்த முல்லை, மருதம் முதலிய நிலங்களிலுள்ள சோலைகளில் சென்று சேர்ந்தன; பறவைகள் வானுலகத்திலுள்ள கற்பகத் தருக்களில் சென்று தங்கின; விலங்குகள் அருகிலுள்ள காடுகளிலும்

மலைகளிலும் சென்று சேர்ந்தன; வினை செய்வோர், காடுகள் அனைத்தையும் வெட்டி மெய்ப்பொருளை உணர்ந்தவர்களின் தெளிந்த சிந்தையைப்போல, வெட்டவெளியாக்கிப் பல உயிர்களிடத்தும்பேரருள்கொண்டு, பற்று அறுத்துச் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்த அடியார்கள் தங்கள் பிறவியை வேரோடு களைதல்போல, மரங்களை வேரோடும் அகழ்ந்து எடுத்தனர்.

**சிவபெருமான் பாண்டியன் முன் தோன்றியருளல்**

இங்ஙனம் பாண்டியன் மரங்களை அகழ்வித்துப் பெரிய நிலத்தைச் செப்பஞ்செய்வித்து, நல்ல வழியினை உண்டாக்குவித்து அமைச்சர்களோடு, "நகர் எடுப்பது எவ்வாறு" என்று கலந்து ஆராய்ந்துகொண்டிருந்தான். அப்போது அங்குச் சிவபெருமான், மெய்யடியார்களின் அன்பிலே தோயும் சிவந்த திருவடிகள் நிலத்திலே பொருந்த மிக வெள்ளிய திருவெண்ணீற்றினை அணிந்து, விபூதிப் பையைத் தாங்கி, முன்னர்க் கனவில் எழுந்தருளிய வண்ணமே **சித்தராய்** அரசன் மகிழ்ச்சியடைய எழுந்தருளிவந்தார். அரி, அயன் முதலிய தேவர்கள் கனவிலும் காண்டற்கரியராய கடவுளை - தனக்கு நனவிலும் எளியராய் வெளிவந்த சித்தரைப்[1] பாண்டியன், எழுந்து எதிர்கொண்டு அவர் திருவடிகளை வணங்கித் திருமுன்நின்று, 'நல்வரவு' வினவி எழுந்தருள ஆசனங் கொடுத்தான். பாண்டியனின் அன்பு வலையில் அகப்படும் சித்தமூர்த்திகள், தாம் முன்னே கூறியருளிய சிவாகமத்தின் வழியே தோன்றிய சிற்பநூல் முறைப்படி ஆலயமும் மண்டபமும் கோபுரமும் நகரமும் இன்னவாறு செய்தல் வேண்டும் என வகுத்துரைத்து, விரைந்து மறைந்தருளினர்.

**ஆலயம் அமைத்தல்**

பாண்டியன் சிற்ப நூலிலே வல்ல தபதிகளை அழைத்துச் சிவபரஞ்சுடராகிய சித்தர் அருளிச் சென்ற வண்ணம் திருக்கோயில், திருநகரம் முதலியன அமைக்கத் தொடங்கி

---

1. இங்கே, "கனவிலுந் தேவர்க்கு அரியாய் போற்றி! நனவிலும் நாயேற்கு அருளினை போற்றி!" எனவரும் திருவாசகத்தின் அடிகள் சிந்திக்கற்பாலன.

னுன்; முன்பு மறைகள் ஓதும் பதும மண்டபம், அர்த்த மண்டபம், மகாமண்டபம், அறுகாற் பீடம், நிருத்த மண்டபம், திருவிழா மண்டபம், வேள்விச் சாலை, திருமடைப்பள்ளி, கணபதி கந்தர் முதலிய பரிவார தேவர்களின் கோயில்கள், சொக்கலிங்க மூர்த்திக்கு வலப்பாகத்தில் மீனுட்சியம்மையின் திருக்கோயில், திருமாளிகைப் பத்தியையுடைய திருமதில்கள், மண்டபங்கள், கோபுரங்கள், சுற்று மதில்கள், அகழி ஆகிய இவற்றை ஆராய்ந்து சமைப்பித்தான்.

**நகர் அமைப்பு**

அதன்பிறகு, பாண்டியன் சித்திரங்கள் நிறைந்த கடைவீதிகள், [1] தெற்றியம்பலங்கள், திருவிழாக்கொள்ளும் திருவீதிகள், [2] மாளிகைகள் நெருங்கிய பெரிய வீதிகள், கவர் வழிகள், நாற்சந்திகள், [3] அம்பலங்கள், மன்றங்கள், செய்குன்றுகள், மேடைகள், நாடக சாலைகள், சைவ முனிவர்கள் தங்கும் மடங்கள், அந்தணர் வீதிகள், அரசர் வீதிகள், வணிகர் வீதிகள், வேளாளர் வீதிகள், யானைக் கூடங்கள், குதிரைப் பந்திகள், தேர்ச்சாலைகள், கல்விச் சாலைகள், அறச்சாலைகள் முதலாயவற்றை நன்கு அமைப்பித்தான். கிணறுகள், சிறு குளங்கள், ஓடைகள், பெரிய குளங்கள், பொய்கைகள், நந்தன வனங்கள், சோலைகள், தோட்டங்கள், உய்யான வனங்கள் முதலியவற்றை அமைப்பித்து நகரத்திற்கு அழகு செய்தான். தனக்கு ஓர் அரண்மனை அந்நகரத்தின் வடகீழ்த்திசையில் செய்வித்தான்.

**மதுரா நகர் என்ற பெயர் பெறுதல்**

இங்ஙனம் பாண்டியன் நகரை அமைத்த பின்னர், அந்நகருக்குச் சாந்தி செய்யக் கருதினுன். அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் தமது சடையிலுள்ள சந்திரக் கலையின் புத்தமுதத்தைச் சிந்தினுர். அது, சிவபெருமானுடைய திருவடிகள், தம்மை அடைந்தவரைச் சிவமயமாகச் செய்த செய்கையைப்போல, அந்நகர் முழுதையும் அமிர்தமயமாக்கித் தூய்மை

1. தெற்றியம்பலம் - இது நடுவில் மரமும் சுற்றிலும் வேதிகையும் உடையது. 2. கவர் வழி - இரண்டு மூன்று தெருக்கள் கூடுமிடம். 3. அம்பலங்கள் - பொதுவிடம்; நீதிமன்றம்.

செய்தது. அவ்வமுதம் நல்ல மதுரமயமாகிய தன்மையினுலே அந்நகருக்கு **மதுரா நகர்** (மதுரை மாநகர்) எனப் பெயர் கூறினர்.

பொன்மய மான சடைமதிக் கலையின்
புத்தமு துகுத்தனர் அதுபோய்ச்
சின்மய மான தம்மடி அடைந்தார்ச்
**சிவமய மாக்கிய செயல்போல்**
தன்மய மாக்கி அந்நகர் முழுதுஞ்
சாந்திசெய் தது ;அது மதுர
நன்மய மான தன்மையால் **மதுரா**
**நகர்என** உரைத்தனர் நாமம்.

பிறகு, குலசேகர பாண்டியன் மதுரைமாநகரின் கிழக்குத் திசையில் **ஐயனுரையும்**, தென்திசையில் [1] **சத்த மாதரையும்** மேற்குத் திசையில் **திருமாலையும்** (கருமாணிக்கப் பெருமானையும்) வட திசையில் [2] **பத்திரகாளியையும்** காவலாக நிறுவினன்; [3] மதுரை நாயகராகிய சோம சுந்தரக் கடவுளைச் சிவாகம விதிப்படி பூசை செய்யும் பொருட்டு வேதாகமங்களின் வழியில் ஒழுகா நின்ற புண்ணிய வடிவுடைய முனிவர்களையும், ஆதி சைவராகிய சிவப் பிராமணரையும் காசிப் பதியினின்றும் அழைத்துவந்து மதுரைமாநகரில் நிலைபெறுத்தினன். அந்தணர் அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு பெருங்குடி மக்களும், [4] அநுலோமர், பிரதிலோமர் முதலாய புறக்குடி மக்களும் தத்தம் நெறியினின்றும் பிறழாது வாழ்ந்தனர். வைதிக

---

1. சத்த மாதர் – இவர், பிராமி, நாராயணி, உருத்திராணி, மகேசுவரி, வராகி, கௌமாரி, இந்திராணி என்போர்.

2. இப்பெயர் தற்போது செல்வி எனவும், செல்லத்தம்மை எனவும் வழங்குகிறது.

3. இவற்றை, "பார்சொக்க நாதன் உரைப்படி கீழ்த்திசைப் பாங்கர் அரி, யரபுத்திரன்; சத்த மாதாக்கள் தென்றிசை; அக்குடபால், கருணைப் புயல்; உத்தரங்காளி ; கூடலைக் காத்தளிக்கப் பிரிவில் பிரதிட்டைசெய் தான்குல சேகர பாண்டியனே" எனவரும் திருவாலவாயுடையார் கோயிற் றிருப்பணி மாலையாலும் அறியலாம்.

4. அநுலோமர் - உயர்குலத் தந்தைக்கும் இழிகுலத் தாய்க்கும் பிறந்தவர். பிரதிலோமர் - இழிகுலத் தந்தைக்கும் உயர்குலத் தாய்க்கும் பிறந்தவர்,

நெறியும், சைவ நெறியும், தருமநெறியும் செழித்தோங்கி வளர்ந்தன. குலசேகரன், பாண்டி நாட்டிற்கு ஓர் திலகம் பதித்தாற் போல மதுரை மாநகரைச் சகல சிறப்புக்களுடன் வளப்படுத்தினன்.

**குலசேகர பாண்டியன் இறைவன் திருவடி அடைதல்**

[1] குலசேகர பாண்டியன் ஒரு நன்னாளில் மங்கல இசைக் கருவிகள் முழங்கத் தன் அரண்மனையிலே போய் இருந்தான்; சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோயிலில் நித்தியம், நைமித்திகம், காமியம் என்னும் மூன்றும் குறைவின்றி நடைபெறுதற்கு ஆவன செய்து [2] திருமாலைப்போலத் தீமையை ஓட்டி அரசுபுரிந்திருந்தான்; பிறகு, இளஞாயிறு போலும் [3] **மலயத்துவசன்** என்பவனைப் பெற்று, அவனிடம் அரசியலை ஒப்பித்துப் பலநாள் கழிந்தபின்; ஒருநாள் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலை அடைந்து இறைவனை வணங்கி மும்முறை வலம் வந்து சிவத்தோடு இரண்டறக் கலந்தான்.

செய்யுள் — 47
ஆகச் செய்யுள் — 518

---

1. இக் குலசேகர பாண்டியன் வடிவம் பொற்றாமரையில் வடபாலுள்ள படித்துறையின் மேல்பாலுள்ள தூணில் உள்ளது.

2. இங்கே "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும்" எனவரும் திருமங்கை யாழ்வார் திருவாக்கு சிந்திக்கற்பாலது.

3. மலயத்துவசன் - பொதிய மலையின் உருவமெழுதிய கொடியையுடையவன் என்பது பொருள்: காரணப் பெயர். இவன் அகத்திய முனிவர் அருளால் பிறந்தவன் என்று அட்டமிப் பிரதட்சிண மான்மியம் கூறுகிறது.

## 4. தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம்

**மலயத்துவச பாண்டியன் பண்பு**

**மலயத்துவச பாண்டியன்** மனுநூலில் கூறிய அறநெறி தவருது செங்கோல் செலுத்துபவன்; ஒழுக்கம் நிறைந்தவன்; வெற்றியை அணிகலமாகக் கொண்டவன்; கருணைக்கு இருப்பிடமாகத் திகழ்பவன்; காட்சிக்கு எளியன்; இனியன்; வடமொழியிலும் தமிழ்மொழியிலும் மிக வல்லவன்; மதவேள் போலும் கட்டழகு மிக்கவன்; கண்டார் மிக விரும்பும் தகையவன்; சூரிய குலத்தில் தோன்றிய **சூரசேனன்** என்னும் சோழவரசனுடைய மகளாகிய [1] **காஞ்சனமாலையை** மணஞ்செய்து கொண்டவன்; சோமசுந்தரக் கடவுளை மூன்று காலங்களிலும் நியமமாகச் சென்று வணங்குதலை உடையவன்.

**மக வேள்வி**

இத்தகைய சிறப்புக்களைப் பெற்றிருந்த மலயத்துவசன் மகப்பேறின்றிப் பலநாள் வருந்தினன்; அரிய பல தான தருமங்களைப்புரிந்தான்; பின்னர், அசுவமேத யாகம் செய்யத்தொடங்கி வேத முறை வழுவாது ஆராய்ந்து தொண்ணூற்றொன்பது யாகங்களைச் செய்தான். அப்போது இந்திரன், 'இப் பாண்டியன் நூறு யாகங்களைச் செய்து முடிப்பானாயின், நொடிப் பொழுதில் எனது பட்டம் மாறிவிடுமே' என்று நினைந்து, பாண்டியனிடத்துச் சென்று நூறாவது அசுவமேத யாகத்தை முடிக்காவண்ணம் தடுத்து, "நீ நல்ல மகப்பேற்றை விரும்பினை; அதற்கு இசையப் புத்திர காமேஷ்டியைச் செய்வாயாயின் நல்ல புத்திரப்பேற்றைப் பெறுவாய்" என்று கூறிவிட்டுத் தன்னுலகை அடைந்தான். மலயத்துவச பாண்டியன் புத்திரகாமேஷ்டி செய்யும் விருப்புடையவனாய் அப்பொழுதே அவ் வேள்விக்கு வேண்டும் பொருள்கள் அனைத்தும் சேர்த்து நியமத்துடன் தன் மனைவியோடு யாகசாலையில் சென்றிருந்து புத்திர காமேஷ்டியைச் செய்யத் தொடங்கினன்; வேதநூற் புலமையுடைய குரவர் காட்டும் கிரியையின் வழியே மந்திரங்

1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் மலயத்துவசன் மனைவியை 'வடிவ மங்கை' என்று குறிப்பிடுகிறது.

களை உதாத்தம் (எடுத்தல்), அனுதாத்தம் (படுத்தல்), சொரிதம் (நலிதல்) என்னும் ஓசை தழுவும்படி உச்சரித்துத் திருக்கோயிலுக்குக் கீழ்த் திசையிலிருந்து யாகம் செய்ய லானுன். யாகசாலையினின்றும் எழும்பிய வேள்விப் புகை வானிலும் நிலத்திலும் திசைகளிலும் பரவி ஒரு போர்வை போல மறைத்தது. மன்னன், யாகத் தீயினிலே நெய், பொரி, சமித்து முதலியவற்றுல் தேவர்களுக்கு இனிய அமுதம்போல ஆகுதி செய்யும்பொழுது வேள்வித் தீ சிகை விட்டெழுந்தது.

**அங்கயற்கணம்மையின் தோற்றம்**

அப்பொழுது சிவபெருமான் தனித்திருக்க – மலையரச னுடைய மனைவியாகிய மேனை நாணுற–மலயத்துவச பாண்டி யின் வலத்தோள் துடிக்க – அவன் மனைவியாகிய காஞ்சன மாலையினது தனங்கள் பூரித்துப் பால் பெருகி ஒழுகுவதோடு இடக்கண் துடிக்க – இவ்வுலகமே அன்றி ஏழுலகமும் மகிழ்ச்சி எய்த – சைவம் முதலிய [1] அகச் சமயங்கள் தழைத்தோங்க – பொருமை முதலிய பாவங்கள் ஒழிய – தருமம் மகிழ – வேதங் களும் தேவ துந்துபிகளும் எத்திக்கிலும் ஒலிக்க – அரம்பையர் நடிக்க – மதுரை மாநகரத்தினர் தம்மை அறியாமலே மகிழ்ச்சி பொங்க – பதினெட்டு மொழிகளுள்ள நிலவுலகத்தில் இனிய தமிழ் மொழி வழங்குகின்ற நாடு சிறந்தோங்க – தமிழ் நாட்டு மூவேந்தருள் பாண்டியரே சிறந்த பெருமைபெற – அழற் கடவுள் தான் தவம் செய்த பயனை எளிதில் அடைய – கொய் யப்பட்ட தளிர் போல அக்கினி கொழுந்துவிட்டு எரிகின்ற வேள்விக் குண்டத்தின்கண் அழகிய இதழ்கள் பொருந்திய தாமரை மலர் அப்பொழுதே மலர்ந்து தளிர்களையுடைய மண முள்ள கொடி ஒன்று முளைத்து எழுவதைப்போல் – ஒளிவிடும் முத்துமாலையால் சுற்றப்பட்ட சிறு கொண்டை முழுச் சந்திர னிடம் காணப்படும் களங்கம்போல் விளங்க–அக் கொண்டையி னின்றும்தொங்கும் முத்துமாலை சந்திரனினின்றும்வெளிப்படும் கிரணம்போல ஒளிவீச – இனிய மழலையுடன் கூடிய இனிய அமுதம், மார்பின் வழியாகச் சிந்தியதுபோல இள நிலவு வீசும்

1. அகச் சமயங்கள் – சைவம், பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வைரவம், வாமம் என்பன,

முத்துவடம் ஒளிவிட—இள ஞாயிற்றின் ஒளியை உண்டு கடலில் தோன்றிய பவளமாலை ஒளி வீச – சிறிய இடையைச் சூழ்ந்த மெல்லிய சிற்றுடையின்மேல் மணிகள் பதித்த சிறிய மேகலை ஒலிக்க – காதுகளினின்று தொங்கும் மாணிக்கக் குழையைத் தன்னிடத்தேகொண்ட குதம்பைகள் தோளினைத் தடவி அசைய—தெளிந்த அமுதம்போன்ற மெல்லிய மழலைச் சொற்கள் தோன்ற புன்னகையினையுடைய பற்கள் வெளிப்பட— **எல்லா உயிர்களையும் எல்லா உலகங்களையும் பெற்றவளாகிய உமாதேவியார் மூன்று முலைகளையுடைய ஒரு பெண் மகவாக மூன்று வயதுடன்** எழுந்துவந்து நின்றாள்.

**காஞ்சனமாலையின் பெருமகிழ்ச்சி**

தளிர் போன்ற சிறிய மெல்லிய திருவடிகளில் சூழ்ந்து கிடந்த சிறு சிலம்பும் சதங்கையுங் கலந்து ஒலிக்க, மழலைச் சொற்களும் புன்னகையும் தோன்ற, நறிய தளிர் அசைவது போல் அசைந்து தளர்நடை நடந்துசென்று, தான்பிறந்த தனலாகிய பெரும்பயனைப் பெறுகின்ற காஞ்சனமாலையின் மடியின்கண்ணே அறநெறியில் நின்றோர்க்கு இம்மை மறுமை இன்பங்களையும், வீடுபேற்றையும் அளித்தருளும் உமையம்மையார் ஒரு பெண் குழந்தையாக வீற்றிருந்தாள்.

குறுந்தளிர்மெல் லடிக்கிடந்த சிறுமணிநூ
புரஞ்சதங்கை குழறி ஏங்க
நறுந்தளிர்போல் அசைந்துதளர் நடையொதுங்கி
மழலையிள நகையுந் தோன்றப்
பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி
இருந்(து) **ஒருபெண் பிள்ளை ஆனாள்**
**அறந்தழுவு நெறிநின்றோர்க்(கு) இகபோகம்**
**வீடளிக்கும் அம்மை** அம்மா.

சிவந்த வாய் விளர்க்காமலும், இரண்டு முலைக் கண்கள் கறுக்காமலும், கரிய கண்கள் பசக்காமலும், பத்து மாதம் சுமக்காமலும், ஆலிலைபோன்ற வயிறு வருந்தப் பெறாமலும், முன்னே பெற்ற மேனையை ஒத்தவளாகிய காஞ்சனமாலை தான்பெற்ற மகவை வாரியெடுத்து மார்போடு அணைத்து

உச்சிமோந்து, முத்தமிட்டு இன்பத்தில் ஆழ்ந்து மகிழ்ந்தாள். பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் ஐவகைச் சத்திகளாகி எல்லா உலகங்களையும் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐவகைத் தொழில்களைப் புரிந்து, அந்த ஐவகைச் சத்திகளினின்றும் தம் உண்மைவடிவு வேருகி, வாக்கு மனங்களையும், வேதங்களையும் கடந்து நிற்கின்ற **உமாதேவியார்** திருமகளாய் வந்து தோன்றுதற்கு மலயத்துவச பாண்டியன் இம்மையில் செய்த இத்தவம் பொருந்துமோ? அதற்குப் பொருந்திய தவம் மிகப் பெரியதாகும்.

**பாண்டியனின் துயரம்**

வஞ்சக வழியில் செல்லும் ஐம்பொறியின் உணர்வையும் அந்தக்கரணங்களின் உணர்வையும் கடந்து பேரின்ப வெள்ளப் பரஞானமே திருவுருவமாகக்கொண்ட உமையம்மையார் தமது அன்பு மிகுதியினலே வெளிவந்து இன்று ஒரு பெண் குழந்தையாய் அவதரித்த பெருங் கருணையையும், தம் மனைவியின் தவப் பயனையும் தெளியாமையால் மலயத்துவச பாண்டியன் மனத்தின்கண் துன்பமுற்று, "நான் மகப்பேறின்றி நெடுங்காலம் வருந்தி அரிய தவத்தைப் புரிந்தேன்; அதன்பின் இந்தப் புத்திரகாமேஷ்டியினைச் செய்தேன்; ஆனல் இந்த யாகமோ ஒரு பெண் பிள்ளையைக் கொடுத்தது; அந்தோ! இந்தப் பெண்ணும் மூன்று தனங்களுடன் பகைவர் நகைக்கத் தோன்றியுள்ளது; இஃது என்னையோ?" என்று கருதி மகிழ்ச்சி யில்லாதவனுய் வருந்தினுன்.

**வானெலி கேட்டு மகிழ்தல்**

அப்போது சிவபெருமான் திருவருளால் வானினின்றும் ஒரு திருவாக்கு, "மன்னவ! உன்னுடைய திருமகளுக்குப் புதல்வருக்குச் செய்வதுபோல் சடங்குகள் எல்லாம் சிறிதும் வழுவாமல் வேத முறைப்படி செய்து, **தடாதகை** என்று பெயரிட்டு முடிசூட்டக் கடவாய்; இப்பெண்ணுக்கு ஏற்ற கணவன் வரும்போது ஒரு தனம் மறைந்துவிடும்; ஆதலால் நீ மனம் கலங்காதே" என்று எழுந்தது.

"மன்னவ! நின் றிருமகட்கு மைந்தர்போற்
சடங்கனைத்தும் வழாது வேதஞ்
சொன்னமுறை செய்துபெயர் **தடாதகை**யென்
றிட்டுமுடி சூட்டு வாயிப்
பொன்னனையாள் தனக்கிறைவன் வரும்பொழுதோர்
முலைமறையும் புந்தி மாழ்கேல்"
என்னஅரன் அருளாலோர் திருவாக்கு
விசும்பிடைநின்(று) எழுந்த தன்றே.

அந்த இனிய வானொலியினைச் செவியிற்கேட்ட மலயத்துவச பாண்டியன் அன்பும் மகிழ்ச்சியும் உள்ளத்தில் பெருக மன மொழி மெய் ஒருவழிப்படக் கண்களினின்றும் சொரியும் ஆனந்தக் கண்ணீர் மார்பில் வழியச் சோமசுந்தரக் கடவுளைத் துதித்து வணங்கினான்; யாகத்தினை முடித்துக்கொண்டு தன் மனைவியோடும் எழுந்து யாகசாலையை விடுத்து இரண்டு பக்கங்களிலும் இன்னியங்கள் ஒலிக்க அரண்மனையை அடைந்தான். பிறகு, முரசங்கள் முழங்கவும், எட்டு மங்கலப் பொருள்களையும் ஏந்தி எதிர் வருகின்ற மகளிரின் முகத்தில் மகிழ்ச்சி தோன்றவும், மலயத்துவச பாண்டியன் அரசிருக்கை மண்டபத்தில் புகுந்து இனிதாக வீற்றிருந்து மறையவர்க்கும் பிறர்க்கும் அவர்கள் வெறுக்கும்படி பொன்னை வாரி வாரி வழங்கினான்; சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோயிலிலே விசேடபூசை, திருவிழா முதலியன பெருகும்படி செய்வித்தான்.

**பாண்டியனின் பெருமகிழ்ச்சி**

அதன்பின்பு மலயத்துவச பாண்டியன் [1] வள்ளுவனை அழைப்பித்து, "சிறையிலிருக்கின்றவர்களை விட்டுவிடுங்கள்; சிறைச்சாலைகளை இடித்துவிடுங்கள்; ஏழு ஆண்டு வரை நாட்டில் வாங்கும் வரிகளை வாங்காது விடுங்கள்; வேற்று வேந்தர்களிடத்துத் திறைகளை வாங்காது விடுங்கள்; சுங்கத்துறையை நீக்கிவிடுங்கள்; ஆலயங்களையும், அறச்சாலைகளையும் ஓங்கச் செய்யுங்கள்!" என்று பறை சாற்றும்படி ஏவினான்; பகை அரசர்களின் கால் விலங்குகளைக் கழற்றி, அவர்களுக்குரிய

1. வள்ளுவன் - முரசறையும் முதுகுடிப் பிறந்தோன்.

யானை, குதிரை, தேர், அரசுரிமை முதலியவற்றை முன்னுள்ளவாறே அளித்து அவரவர் தேசத்துக்குச் செல்லும்படி விடுத்தான்; 'பலரும் எளிதில் கொள்ளக் கடவர்' என்று பண்டாரத்தைத் திறந்து, பொன்னுடைகளையும், நவமணிகளையும், அணிகலன்களையும், பொற் குவியல்களையும் வேண்டிய அளவு எடுத்துப்போகச் செய்தான்; புலவர்களுக்குப் பொன், ஆடை, ஆபரணம், யானை, குதிரை, தேர் முதலியவற்றை மனமகிழ அளித்தான்; அரச வீதிகளில் மகிழ்ச்சி மிக வாசனைப் பொடியையும் எண்ணெயையும் நெய்யணி விழாக் கொண்டாடுதற்குக் கொடுத்தான். இத்தகைய பெரு மகிழ்ச்சி மதுரை மாநகரில் மட்டுமன்றி மற்றைய இடங்களிலும் நிறைந்தது.

இவ்வாறு நகரமெல்லாம் மகிழ மலயத்துவச பாண்டியனும் மகிழ்ந்து, சிவபெருமான் அருளிச்செய்தவண்ணமே சாதகன்ம முதலாகிய சடங்குகளைச் செய்துமுடித்துத் **தடாதகை** என்று பெயரிட்டு மகிழ்ந்தான். முன்னர் உமாதேவியை மேனை வளர்த்ததுபோல் காஞ்சனமாலை தடாதகைப் பிராட்டியாரை வளர்த்து வந்தாள். பாண்டியன் மலையரையன்போல மகிழ்ச்சியடைந்தான்.

**தடாதகைப் பிராட்டியார் விளையாட்டு**

தடாதகைப் பிராட்டியார் மழலை மொழி பேசும் சிறுமிகளோடு சேர்ந்து வீதிகளிற் சென்று சிறுவீடு கட்டி விளையாடினார்; மணலால் சிறு சோறு சமைத்துச் சிறுமியர்க்கு விருந்திட்டார். முருகக் கடவுளும் வாயினை வைத்து அருந்தாத திருமார்பில் வாய்வைத்து உண்ணுமாறு பாவைக்குப் பாலூட்டினார்; கழங்கு, பந்து, அம்மனை முதலிய விளையாட்டுக்களை விளையாடினார்; முத்து வடத்தால் கட்டிய ஊசலில் ஆடினார். இவ்வகையான விளையாட்டுக்களால் தடாதகைப் பிராட்டியார் அன்னைக்கும், தோழிகளுக்கும், தந்தைக்கும் மனத்தின்கண் மட்டற்ற மகிழ்ச்சியைக் கொடுத்தருளும் நாளிலே, வேதம் முதலிய அறுபத்து நான்கு கலைகளையும் முற்றும் குற்றமறக் கற்றுணர்ந்தார்; யானை குதிரை, தேர் முதலியவற்றைச் செலுத்தும் திறத்திலும், வில், வாள், வேல் முதலிய படைக்கலத் தொழிலின் தேர்ச்சியிலும் மிக வல்லராயினர்.

**திருமுடி சூட்டு விழா**

அதனைக் கண்டு, தந்தையாகிய மலயத்துவச பாண்டியன் மனமகிழ்ந்து தடாதகைப் பிராட்டியாருக்குத் திருமுடி சூட்ட எண்ணினன். **சுமதி** என்னும் அமைச்சன் முடிசூட்டுதற்குரிய நன்னாளை நிச்சயித்துத் தேசங்கள் தோறும் ஓலை விடுத்து மணி முடிதரித்த அரசர்களை வரச் செய்து, மதுரை மாநகரத்திலுள்ளார் எங்கும் விழாச் செய்ய அலங்காரம் செய்வித்துத் திருமுடி சூட்டு விழாவுக்கு வேண்டும் பொருள்களை ஆராய்ந்து திரட்டினன். பெரியோர்கள், மங்கல வாத்தியங்கள் ஒலிக்கப் பெரிய யானையின் முடியில் வைத்துக் கொண்டுவந்த கங்கை முதலிய ஒன்பது தீர்த்தங்களையும் நிரப்பிப் பொற்குடங்களைப் பூசித்து, மந்திரத்தால் வேள்வித்தீயை வளர்த்துத் தேவர்களை அவியுண்பிக்கச்செய்து, பொன்னால் செய்யப்பெற்ற மணிகள் இழைத்தசிங்காதனத்தைஅன்போடுபூசித்துத் தெய்வவழிபாட்டைச் செய்தனர். பிறகு திருமுடியை யானையின்மேல்வைத்து நகர்வலம் செய்வித்துப் பூசித்தனர்; அதன் பின்பு, மாணிக்கச் சுடிகையையுடைய பொன்வடிவாகிய ஐந்தலை நாகப்படத்தை மேலே பரப்பிக் கவிக்குமாறு செய்த அச்சிங்காதனத்தின்மேல் தடாதகைப் பிராட்டியாரை எழுந்தருளச்செய்து கும்பத்திலுள்ள புண்ணிய தீர்த்தத்தினால் அபிஷேகம் செய்வித்தனர்.

அப்போது தேவர்கள் மந்தார மலர் மழை பொழிய, முனிவர்கள் ஆசிகூற, தேவ மகளிர்கள் நடிக்க, முனிபத்தினிகள் பல்லாண்டு பாட, மங்கல வாத்தியங்கள் ஒலிக்க, வேதங்கள் முழங்கப் பெருங்கருணையே திருவுருக்கொண்ட எமது பிராட்டியாருக்கு மலயத்துவச பாண்டியன் மணிமுடிசூட்டி, அரசர்களும் அமைச்சர்களும் வணங்கப்பெறும் தன் தலைமையை அளித்தான்;[1] அதன்பின்பு காலை இளங்கதிர் வெள்ளி மலையில் உதித்தாற்போல, வேப்ப மலர் மாலையை அணிந்த முடியினையுடைய பெண்ணரசியாகிய தடாதகைப்

1. இம் மணிமுடி சூட்டும் விழா இன்றும் சித்திரைத் திருவிழாவில் எட்டாம் திருநாளில் நடைபெறுகின்றது. அப்போது, மீனாட்சியம்மையாருக்குப் பாண்டிய பரம்பரைக்குரிய வேப்பமாலை அணிதலும் வழக்கமாயுள்ளது.

பிராட்டியாரை வெள்ளை யானையின்மேலேற்றி நகர்வலம் செய்வித்தான். அப்போது வெண்குடை நிழற்ற, வெண்சாமரம் வீச, தேவர்கள் மலர் மழை பொழிய அம்மையார் நகர்வலம் வந்த காட்சியைக் கண்ட மலயத்துவச பாண்டியன் வானொலி கேட்டபோது அடைந்த மகிழ்ச்சியைக்காட்டிலும் பெரு மகிழ்ச்சி உற்றான்.

**மலயத்துவச பாண்டியன் விண்ணுலகு அடைதல்**

சின்னாட்கள் சென்ற பின் மலயத்துவச பாண்டியன் மண்ணுலகைவிட்டு விண்ணுலகை அடைந்தான். தடாதகைப் பிராட்டியார் விரத நெறியினைக் கைக்கொண்டு தந்தைக்குச் செய்யவேண்டிய இறுதிக்கடன் முதலிய பிறவற்றையும் முறைப்படி செய்து முடித்தார்; உலகமெல்லாம் ஒரு குடைக் கீழ்ச் சிறப்புற மனுமுறையில் அரிசுபுரியலானார்.

**தடாதகைப் பிராட்டியார் ஆட்சிப் பெருமை**

பெண்ணரசியாகிய தடாதகைப் பிராட்டியார் சூரியன் உதிப்பதற்கு ஐந்து நாழிகை என்று சொல்லும் காலத்திலே இனிய வாத்திய வொலி திருச்செவி மடுப்பப் படுக்கையி னின்றும் துயில் நீத்து எழுவார்; நறுமணமுள்ள நீரிலே மூழ்கு வார்; தமது மன்னர் மரபுக்கு ஏற்ற நியதிகளை முடித்துத் தானங்கள் பல வழங்கி, அன்போடு சிவபூசை முடித்துக் கொள்வார்; அந்தணர் அமைச்சர் முதலானோர் புடைசூழ சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலை அடைந்து கடம்ப மரத்தடியினில் முளைத்த மூன்று கண்களை உடைய கரும்பும், வேதமாகிய வண்டுகள் ஒலிக்கப்பெறும் நீலகண்டத்தையுடைய தேனும் ஆகிய பெருமானை விதிமுறைப்படி வலஞ்செய்து வணங்கித் துதித்து, அங்குநின்றும் மாளிகைக்குத் திரும்பு வார்; பிறகு, அத்தாணி மண்டபத்தை அடைந்து, ஆறு சிங்கங்கள் தாங்குமாறு இயற்றிய மண மலர்களை மேலே பரப்பிய மணித்தவிசில் ஏறித் திருப்பாற்கடலில் தோன்றிய அமுதத்தால் செய்த பாவைபோல் அரசு வீற்றிருப்பார்.

அப்போது திருக்கயிலாய மலையில் அகம்படித் தொண்டு செய்யும் **அனிந்திதை, கமலினி** என்ற இரு தெய்வ மகளிர்

மானுட மகளிராய்த் தோன்றி அடைப்பையையும் பொற் களாஞ்சியையும் ஏந்தி நின்றனர்; திருமகளும், கலைமகளும், அவ்வாறே மானுட மகளிராகி வந்து இருபுறத்தும் சாமரம் வீசினர்; வேடுவக்குலத் தலைவராகிய **கண்ணப்ப நாயனர்** தம் முடியிலே சுமந்து வந்து திருக்காளத்தியப்பருக்குச் சாத்தும் நறுமணமலர்போலச் சோழவரசனும், சேரவரசனும், மற்றைய அரசர்களும் தங்கள் தங்கள் முடியின்கண் அணிந்த மலர் மாலைகளைத் திருவடியின்கண் சாத்திப் பணித்த ஏவல்களைச் செய்து நின்றனர். ஏவல் புரிவோர் சூரியவாளை யுடையவராயும் மார்பில் கட்டிய கைகளை யுடையவராயும் எம்பிராட்டியார் எப்போது தமது அருட்பார்வையைச் செலுத்துவாரோ என்று சிறிதும் இமையாது பார்த்துக்கொண்டு நின்று, அருளுேக்கம் படுமேல் அங்கை குவித்து 'உய்ந்தோம்' என்று கூறி வாய் பொத்தித் தத்தமக்குரிய பணிகளைக் கேட்டுச் செய்வர். சட்டை தரித்த வடிவுடைய கஞ்சுகமாக்கள், "அங்கு நிற்கின்ற மன்னன் மராட நாட்டு அரசன்; அவ்விடத்து நிற்பவன் கருநாட தேச மன்னன்; இங்கு நிற்கும் இவன், விராடநாட்டு வேந்தன்; இவண் நிற்போன், குரு நாடர் காவலன்; நடுவில் நிற்பவன் சேர நாட்டு மன்னன்; ஊங்கு நிற்போன் சோழ நாட்டு மன்னன்" என்று இரு பக்கத்திலும் நின்று தங்கள் கையிற் பிரம்பினால் சுட்டிக் காட்டுவர்.

செந்தமிழ்ப் புலவர்களும், வடமொழிப் புலவர்களும், வேதம் முதலிய அறுபத்து நான்கு கலைகளை உணர்ந்தவர்களும், ஆறுவகைச் சமய நூல்களைக் கற்றுணர்ந்தவர்களும், துறவிகளும், சிவத்தொண்டர்களும், மாயையைவென்ற வீரர்களாகிய மெய்ஞ்ஞானிகளும், உறுதிப் பொருள்களை அறிவிக்கின்ற பெரியோர்களும், [1] ஐந்து அங்கங்களால் காலங்களை அறியும் சோதிட நூல் உணர்ந்தவர்களும், மேல் வருவனவற்றையும் முன் நிகழ்ந்தனவற்றையும் ஆராய்ந்துணரும் தகுதியுடைய முதல் மந்திரியாகிய சுமதி முதலிய அமைச்சர்களும் கொலு மண்டபத்தில் சூழ்ந்து நிற்பர்.

---

1. ஐந்து அங்கங்கள்-பஞ்சாங்கம்; இவை திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்னும் ஐந்தாம்.

கன்னியாகிய பிராட்டியார் மறை முதலிய நூல்களைக் கற்றுணர்ந்த அந்தணர்களின் [1]விருத்திகள், தேவாலயங்களில் நடைபெறும் பூசைச் சிறப்புகள், அறச்சாலைகளில் நடைபெறும் பேரறங்கள், குடி மக்களின் வாழ்க்கைகள் முதலானவற்றை அமைச்சர்களால் அறிந்தும், தனித்தனியே ஒற்றரை விடுத்து அறிந்தும், அவ்வவற்றிலே குறைகள் ஏதேனும் இருந்தால் அக் குறை செய்தாரைத் தண்டித்து அக் குறைகளைத் தீர்ப்பார்; இலக்கியத்தினாலும், இலக்கண அமைதியினாலும் ஆராய்ச்சி வகையாலும் பிறர்கூறிய நூற்பொருள்களை எடுத்து மொழிந்து வாதிடுவோர்களின் வாதங்களின் திறமைகளைக் கண்டு மகிழ்வார்; திருமால் முதலிய தேவர்கள் தங்கள் கைகளின் வலிமையால் திருப்பாற்கடலைக் கடைந்தெடுத்த அமுதம் அனைத்தையும் புலவர்கள் அள்ளித் தங்கள் நாவன்மையால் செய்யுளில் விளையச் செய்து எடுத்து ஊட்ட, அவற்றைத் தம் திருச் செவிகளால் ஏற்று இன்புறுவார்.

பாக சாஸ்திரத்தில் வல்லவர் முல்லையினது வெள்ளிய அரும்பினை ஒத்த முனை முரியாத அரிசியைக்கொண்டு சமைத்த அன்னமும், அறுசுவைக் கறிகளுமாகிய உணவுகளை அந்தணர்கள், சைவர்கள், துறவிகள் முதலாய அனைவருக்கும் மகிழ்ச்சி உண்டாக அம்மையார் உண்பித்து அவர்கள் நாவால் கூறும் புகழ்மொழியாகிய விருந்தினை அமுது செய்வார்; பிற்பகலிலே நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் கற்றுவல்ல புலவர்கள் கூறும் பதினெண் புராணங்களையும் மனு முதலிய தரும நூல்களையும் விரும்பிக் கேட்டும் பகற்பொழுதினைக் கழிப்பார்; வறுமையிலே கல்வி விளங்காமை போலக் கண்ணுக்குப் புலப்படாத மெல்லிய இடையினையுடைய மகளிர் ஒருவனால் ஆட்டும் சூத்திரப் பாவைபோல நின்று, பரதநூலுக்குப் பொருள் விரிப்பவர்போல் ஆடுகின்ற ஆடலின்கண்ணும், நலம் நிறைந்த பாடலின் கண்ணும் நல்ல அருட் பார்வை வைப்பார்; இல்லறத்தில் ஒழுகும் முன்னோர் செய்த அறங்களையும், வேள்விகளையும், பல அறங்களையும் விருத்தி செய்தற்பொருட்டுத் திரவியங்களைக்

1. விருத்திகள் - பிரமதேயமாக விடப்பட்ட மானியம் முதலியன; தொழில்களுமாம்.

கொடுப்பார்; தாமும் வேள்விகளைச் செய்தருளுவார்; கல்வியையும் செல்வத்தையும் தம் இரு கண்களாகக் கருதி நாடோறும் தழைத்தோங்கும்படி அவற்றை வளர்த்தும் வருவார்.

**பாண்டி நாடு கன்னி நாடு எனப் பெயர் பெறுதல்**

'ஒப்பும் வடிவமும் முதலும் முடிவுமில்லாத **சிவ சத்தி**, தன் மகேசை முதலிய சத்திகளாலே பெறப்பட்ட அயன், அரி, அரன் என்னும் மூவராலே முத்தொழில்களையும் நடத்தாநிற்கும்' என்று கூறுதலும் பெரும்புகழ் அன்று என்றால், அச் சிவசத்தி மலயத்துவச பாண்டியன் மகளாகி இந் நிலவுலகை மனுநூல் முறையால் ஆளும் என்று ஒரு புகழாகக் கூறுவது என் அறியாமையைக் காரணமாக உடையதே ஆகும்.

ஒப்புரு முதலீ(று) இல்லா ஒருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழில் நடாத்தும் என்று
செப்பலும் புகழன்(று) என்னில் தென்னவன் கன்னி யாகி
இப்புவி மனுவிற் காக்கும் என்ப(து)என் பேதை மைத்தே.

தடாதகைப் பிராட்டியார் கன்னிப் பருவத்திலே முடியணிந்து வெண்குடை நிழற்ற அமர்ந்து மனுநூல் வழியே தமது அரசியலை நடாத்தியதால் பாண்டி நாடு **கன்னி நாடு** எனப் பெயர்பெற்றது.

**முனிவர்கள் வினவுதல்**

இவ்வாறு உமாதேவியார் திருவவதாரம் செய்தருளி இருந்தனர் என்பதை அகத்திய முனிவர் கூறக் கேட்டு, முனிவர்கள், மன மகிழ்ச்சிகொண்டு வணங்கி அவரை நோக்கி, "தபோநிதியே! நான்கு வேதங்களாலும் உணரப்படாத பராசத்தி வடிவாயும் உலகமனைத்தையும் பெற்ற மாதாவாயும் உள்ள எம்பெருமாட்டியாராகிய உமாதேவியார், தக்கனும் மலையரசனும் நெடுங்காலம் வருந்தித் தவஞ் செய்தமையால் அவர்களுக்கு ஒரு மகவாய்த் திருவவதாரஞ் செய்தார். அவர்களோ தேவரினத்தைச் சார்ந்தவர்கள். பாண்டியனோ மானிட மன்னன்; அவனுக்கு அம்மையார் திருமகளாக இந் நிலவுலகில் இறைவனினின்றும் தனித்து வந்து தோன்றிய காரணம்

யாது? என்று வினவினர். அகத்திய முனிவர் கருணை கூர்ந்து, "இனிமை பொருந்திய ஒரு கதை உண்டு; அதனைக் கூறுகிறேன்; கேளுங்கள்" என்று எடுத்துக்கூறலானார்.

**விச்சாவதி மீனாட்சியம்மையின் பெருமையினைக் கேட்டல்**

"**விச்சுவாவசு** என்னும் பெயரினையுடைய ஒரு வித்தியாதரன் பெற்ற **விச்சாவதி** என்னும் பெண் ஒருத்தி இருந்தனள். அவள் வாள்போன்ற விழிகளையும், கிளிபோன்ற மொழியினையும் உடையவள்; அம்பிகையினிடம் மிக்க அன்புகொண்டவள். ஒருநாள் அவள் தன் தந்தையை வணங்கி, "ஐயா, யான் உமாதேவியை வழிபட்டு உய்யவேண்டும்" என்று கூறினாள். அப்போது விச்சுவாவசு உமாதேவியின் திருமந்திரத்தைத் தன் மகளுக்கு உபதேசித்தான். அவள் அதனைக்கேட்டு மகிழ்ந்து தந்தையை நோக்கி, "உமாதேவியை அன்பினால் வழிபடுதற்கேற்ற சிறந்த புண்ணிய தலம் யாது?" என்று வினவினள். விச்சுவாவசு, "**துவாதசாந்தம்**" என்று கூறப்பெறும் நகர் ஒன்று உள்ளது. அது கல்வி, கேள்விகளில் வல்லார் வாழும் **பூலோக சிவலோகம்** எனப்படும். மூவுலகங்களிலும் மேம்பட்ட [1]**சத்தி பீடங்கள் அறுபத்து நான்கு** ஆகும். அவற்றுள் தலைசிறந்த [2]**முதற்பீடமாய்** உள்ளது **மதுரைப்பதி** ஆகும்; அப்பதி இன்பத்தையும், வீடுபேற்றையும், வேண்டுவார் வேண்டிய சித்திகளையும் அளிக்க வல்லது; தேவர்கள், அல்லும் பகலும் அந்நகரில் வந்து அங்கயற்கண் அம்மை அருளுகின்ற சித்தியினால் தங்கள் வினைப்பகையை வெல்லுவார்கள். அதுவேயன்றி, என் தந்தையுடன் நம்மவர்கள் [3]ஐவரும், அந்நகரை அடைந்து வழிபட்டு வணங்கிப் பல வரங்களைப் பெற்றனர். எம்மையும், மற்றுள்ள யாவரையும், யாவற்றையும் ஈன்ற அங்கையற்கண் அம்மையார் அன்பினால் வழிபடுபவர் எவராயினும் அவர்கள் எண்ணிய வண்ணமே இம்மைப் பயனாகிய

---

1. சத்தி பீடங்கள் அறுபத்து நான்கின் பெயர்களைத் தேவி பாகவதத்தில் காண்க.

2. இப்பீடம் மீனாட்சி பீடம் எனப் பெயர் பெறும்.

3. ஐவர் - இங்கு, பஞ்சசுவரன், இயக்கன், வித்தியாதரன், வசுபூரணன், சுவச்ச வித்திரன் என்னும் வித்தியாதரர் ஐந்து பேர்.

இன்பத்தையும், மறுமைப் பயனாகிய வீடுபேற்றையும் அடையுமாறு அங்கே இனிய பெருங்கருணையினைப் புரிந்து வீற்றிருந்தருளுவார்'' என்றான்.

எம்மை யாரையும் யாவையும் ஈன்றஅங் கயற்கண்
அம்மை யாவரே யாயினும் அன்பின்ஆ தரிப்போர்
இம்மை யாகிய போகம்வீ(டு) எண்ணியாங்(கு) எய்தச்
செம்மை யாகிய இன்னருள் செய்துவீற் றிருக்கும்.

**விச்சாவதியின் மிக நெறியான நோன்பு**

இவ்வாறு தந்தை கூறியதைக் கேட்ட விச்சாவதி தந்தையை வணங்கி விடைபெற்று எழுந்து பூங்கொடிபோல் நடந்து காடும் மலையும் ஆறும் பிற்பட, மதுரைப் பதியை அடைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிச் சொக்கலிங்கப் பெருமானுக்கு வலப்பக்கத்திலே எழுந்தருளியிருக்கும் மீனாட்சியம்மையை வணங்கினாள்; பிறகு, தைமாதம் முதலாகக் கொண்டு நோன்பு புரிய ஆரம்பித்தாள்; தைமாதம் முழுதும் பகலில் நல்ல உணவை உண்டும், மாசி மாதத்திலே இரவில் உணவு உண்டும், பங்குனி மாதத்திலே உதவப்பெற்ற உணவு உண்டும், சித்திரை மாதத்திலே இலை முதலிய பல உணவுகளை உண்டும், வைகாசி மாதத்திலே எள்ளுப் பொடியாகிய உணவு உண்டும், ஆனி மாதத்திலே [1] சாந்திராயண நோன்பின் உணவு உண்டும், ஆடி மாதத்திலே பஞ்ச கவ்விய மாகிய உணவு உண்டும், ஆவணி மாதத்திலே பால் உணவு உண்டும், புரட்டாசி மாதத்திலே நல்ல நீரை உண்டும், ஐப்பசி மாதத்திலே தருப்பைப் புல்லின் நுனியிலுள்ள நீரை உண்டும், கார்த்திகை மாதத்திலே காற்றை உண்டும், மார்கழி மாதத்திலே பட்டினியாயிருந்தும் இவ்வாறே பன்னிரண்டு மாதமும் செய்து தவம் புரிந்து உடல் மெலிந்தாள். மேல்வரும் தை மாதத்திலே விச்சாவதி அங்கயற்கண் அம்மையின் சந்நிதியை அடைந்து, வணங்கிநின்று, மனத்திலே பாதாதிகேசமாகத்

1. சாந்திராயண நோன்பு - சந்திரனின் கலை வளருந்தோறும் ஒவ்வொரு கவளம் உயர்த்தியும், குறையுந்தோறும் ஒவ்வொரு கவளம் குறைத்தும் உண்டு நோற்கும் விரதம்.

தியானித்து, [1] யாழிற்குரிய தெய்வத்தைத் துதித்து யாழைக் கையிலெடுத்து முறுக்காணியை முறுக்கி நரம்பைத் தெறித்துப் பண்ணின் வகையை அறிந்து பாடத் தொடங்கினாள் :

ஒளியால் உலகீன்(று) உயிரனைத்தும்
மீன்போற் செவ்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே! கன்னி அன்னமே!
அளியால் இமவான் திருமகளாய்
ஆவி அன்னமயில் பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து
விளையாட் டயருஞ் செயலென்னே!

அண்டக் குவைவெண் மணற்சிறுசோ(று)
ஆக்கித் தனியே விளையாடுங்
கொண்டற் கோதாய்! படியெழுத
லாகா வுருவக் கோகிலமே!
கொண்டற் குடுமி இமயவரை
அருவி கொழிக்குங் குளிர்முத்தால்
வண்டற் குதலை மகளிரொடும்
விளையாட் டயரும் வனப்பென்னே!

வேத முடிமேல் ஆனந்த
வுருவாய் நிறைந்து விளையாடும்
மாதர் அரசே! முத்தநகை
மானே! இமய மடமயிலே!
மாதர் இமவான் தேவி! மணி
வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து
விளையாட் டயரும் பரிசென்னே!

என்று இங்ஙனம் பாடித் துதித்தாள்.

**அம்பிகை அருள்புரிதல்**

இவ்வாறு மெய்யடியார்களுடைய அன்பாகிய வலையில் அகப்படும் பெருங்கருணைப் பெருமாட்டியாகிய அங்கயற்

1. யாழ்த்தெய்வம் - மாதங்கி என்னும் தெய்வம் என்பர்.

கண் அம்மையார், கொண்டையணி பொருந்திய சிறிய கூந்தலையும், மழலைச் சொல்லையும், கொவ்வைக் கனிபோன்ற வாயினையும் உடைய மூன்று ஆண்டினைப் பொருந்திய ஒரு சிறு பெண் குழந்தை வடிவமாய் விச்சாவதி வேண்டிய வரத்தைக் கொடுத்தற்பொருட்டுத் திருக்கோயிலின்கண் வந்து நின்றருளினார். அப்போது கைகளைக் குவித்து வணங்கி நிற்கும் விச்சாவதியை நோக்கி மீனாட்சி அம்மையார், "நீ யாது விரும்பினை" என்று திருவாய்மலர்ந்தருளினார். விச்சாவதி, "அம்மையே! நினது திருவடித் தாமரையிலே என்றும் நீங்காத பேரன்பு வேண்டும்" என்று வேண்டினாள். தேவி, "இன்னும் வேண்டுவது யாது? சொல்" என்று அருளிச்செய்ய, விச்சாவதி, "இக் காட்சி தந்த குழந்தைத் திருவுருவத்திலே அடியாளிடத்துத் தோன்றிக் கருணை கூர்ந்திருக்கும்படி திருவுளங் கொண்டருளுக" என்று வேண்டி வணங்கினாள்.

சிவ சத்தியாகிய மீனாட்சியம்மையார் அதற்கியைந்து, "இந்நகரத்திலே, பாண்டியர் மரபிலே மலயத்துவசன் என்பான் ஒருவன் வந்து தோன்றுவான்; நீ அவனுடைய மனைவியாய் வருவாய். அப்போது நாம் உன் தவப்புதல்வியாக வருவோம்" என்று அருள் புரிந்தார், "**இதுவே மீனாட்சி அம்மையார் மலயத்துவச பாண்டியனுக்கு மகளாய் வந்து தோன்றிய வரலாறு**"[1] என்று அகத்தியர் கூறினார்.

செய்யுள்—81
ஆகச் செய்யுள்–599

---

1. இவ் வரலாற்றை உள்ளடக்கி, ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் தம் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில், மீனாட்சியம்மையாரை, "மலயத்துவசன் வளர்த்த பசுங்கிளி" எனவும், "மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வே" எனவும் கூறியுள்ளார்.

## 5. திருமணப் படலம்

**காஞ்சனையின் கவலை**

திகிரியாகிய சூரியன் துன்பமாகிய இருளைப் போக்கவும், வெண்குடையாகிய சந்திரன் நிழலைச் செய்யவும், உலகங்களை யெல்லாம் ஈன்ற தாயாகிய உமாதேவியார் இளங் கன்னியாக இருந்து மனுநூல் வழி தவறாது தனி அரசு புரிந்துவருங் காலத்திலே, திருமணம் செய்யும் பருவம் வந்து பொருந்தியது. அதுகண்டு, தாயாகிய காஞ்சனமாலை எம்பெருமாட்டியை நோக்கி, "பூங் கொம்பினைப்போன்ற உனக்குக் கன்னிப்பருவம் முதிர்ந்த செவ்வியுடையதாகியும் இன்னும் திருமணமாகிய பேறு கூடிற்றில்லையே" என்று கூறி வருந்தினாள். அதனைக் கேட்ட தடாதகைப்பிராட்டியார், "தாயே! நீ நினைந்த எண்ணம் ஆம்பொழுது ஆகும்; பின்பு, நீ பல்வேறாகக் கருதி வருந்தற்க; நான் சென்று எட்டுத் திக்குகளிலும் இப் பூமண்டலத்திலும் என்னுடைய வெற்றியை நாட்டிவருவேன்; நீ இங்கு இருப் பாயாக" என்று கூறி விரைந்து எழுந்து சென்றார்.

**அம்மையார் திக்கு விசயத்திற்குப் புறப்படுதல்**

தடாதகைப் பிராட்டியாரின் திருவுள்ளக் குறிப்பை அறிந்த அரசர்களும், அமைச்சர்களும், மற்றையோர்களும் வந்தார்கள். தேர்ப்பாகனும் குதிரைகளைப் பூட்டிய தேரைக் கொண்டுவந்தான். தடாதகைப் பிராட்டியார் சங்குகள் முழங்கத் தேரின்மேல் ஏறினார். தடாரிகளும், பேரிகளும் ஒலித்தன; முருடுகளும், மொந்தைகளும் முழங்கின; உடுக்கை களும், தக்கைகளும் ஆர்த்தன; படகங்களும், பம்பைகளும் ஒலித்தன; முழவங்களும், தட்டைகளும் ஆர்த்தன; சின்னங் களும் தாரைகளும் ஒலித்தன; காளங்களும், தாளங்களும் முழங்கின. இவற்றால் எட்டுத் திசைகளும் ஒலித்தன. மெய்க் காவலாக விளங்கும் அழகிய பெண்களில் சிலர் தங்கள் தனங் களில் கட்டிய கச்சினையுடையவர்களாயும், சிலர் தங்கள் கண் கள்போலத் தைக்குமாறு வில்லிற்பூட்டிய அம்பினையுடையவர் களாயும், சிலர் கேடகத்தையும் வாளையும் ஏந்திய கையை

யுடையவர்களாயும், சிலர் வேலையுடையவர்களாயும் பிராட்டியாரோடும் அத்தேரில் ஏறினார்கள்.

**நால்வகைப் படைகள் செல்லும் காட்சி**

இடசாரி வலசாரியாகச் சுழலும் பெரிய திண்ணிய தேர்ப் படைகள் அதிர்ந்து சென்றன. போரினில் பெரிய தண்டாயுதத்தைத் தாங்கிச் செல்லும் இயமனைப்போலவும் பெரிய மலையினைப் போலவும் யானைப் படைகள் சென்றன. ஒலியினையுடைய நீண்ட கடல் அலைகளின் ஒழுங்கினை உடையனபோலவும், யோகிகள் வலிய காற்றை அடக்கி ஒருவழிப்படச் செலுத்தச்செல்லும் மனம்போலவும் ஒழுங்குடன் ஒருவழிப்பட்டுக் குதிரைக் கூட்டங்கள் சென்றன. கூற்றுவனையும் புறங்கண்டு வரும் தன்மைபொருந்திய வீரக் கழல்களை அணிந்த காலாட் படைவீரர்கள் வேற்படையினை உடையவர்களாய்க் காற்றினும் விரைந்து சென்றனர். இவ்வாறு நால்வகைப் படைகளும் எண்ணின் அளவைக் கடந்து பூமி மறையும்படி விரைந்து சென்றன. கொடிகளும், குடைகளும், மயிற்பீலிகளும் விண்ணினை மறைத்தன. படைகள் செல்வதால் எழுந்த நுண்ணிய புழுதிகள் கதிரவன் கண்களை மறைத்தன. போருக்குச் செல்லும் பேரொலி கடலின் ஒலியை மறைத்தது. தேர் செல்லும் ஒலியும், யானைகள் செல்லும் ஒலியும், வீரர்கள் ஆர்க்கும் ஒலியும், தோள்களைத் தட்டும் ஒலியும் ஒன்றுசேர்ந்து பேரொலியாகி அண்டங்கள் பிளவுபடுமாறு ஒலித்தன. படைகள் செல்லும்பொழுது எழுந்த புழுதியால் கதிரவன் கடலில் மறைந்தவன் போலானான். அதனால் இருள்வந்து எங்கும் நிறைய, அவ்விருளினை முத்துக் குடைகளும், வேந்தர்களின் வயிர வாள்களும் முழு நிலவினைப்போல் ஒளிவீசிப் போக்கின. சேனையாகிய கடலில் தேர்கள் மரக்கலங்களைப்போல் சென்றன; குதிரைகளின் வரிசைகள் அலைகளைப்போல் துள்ளின; முரசங்களின் பேரொலி, கடலொலிபோல் ஒலித்தது; வாட்படைகள் மீன்களைப்போல் சுழன்று விளங்கின; சாமரைக் காடுகள் நுரைகளைப்போல் மேலெழுந்து தோன்றின; யானையின் வரிசைகள் கடல்நீர் உண்ணும் மேகக் கூட்டங்களைப்போல் சென்றன.

**தடாதகைப் பிராட்டியார் செல்லும் காட்சி**

வெண்கொற்றக்குடை நிழற்ற, மலர்மாலை அணிந்த மகளிர் கவரிவீச, ஒருபுறத்திலே அந்தணர்கள் ஆசி மொழிகள் கூற, ஒருபுறத்திலே மக்கள் இசைப்பாட்டுக்கள் பாட, தடாதகைப்பிராட்டியாரின் மணித்தேர் வேகமாகச்சென்றது. மீனக் கொடியும், புலிக்கொடியும், விற்கொடியும், மயிற்பீலிக் குடைகளும் பிராட்டியாரின் தேரின் பக்கத்தில் சென்றன. சந்திரன் பிராட்டியாரைப் பார்த்து, "அம்மையே! வேதங்கள் பல வழியால் உம்மைத் துதித்தும் காண்பதற்கு இயலாது வாய்தடுமாறி இளைக்குமாறு எங்கும் நிறைந்த சிவசத்தியாகிய நீ எங்கள் வழித் தோன்றலாகிய மலயத்துவச பாண்டியனுக்குத் திருமகளாய்த் தோன்றிச் செங்கோலோச்சி உலகத்திலுள்ள குற்றத்தைப்போக்குகின்றாய்; அதுபோல், அடியேனுடைய முகத்திலுள்ள களங்கத்தையும் போக்கியருள்க" என்று வேண்டுவது போல் வெண்கொற்றக் குடை நிழலைச்செய்தது. சுமதி என்னும் முதலமைச்சன், பிராட்டியாரின் தேருக்கு அணித்தாக வேறொரு பெரிய தேரினில் ஏறிச் செலுத்தி அப் பிராட்டியாரின் திருக்குறிப்பினை ஆராய்ந்து நால்வகைச் சேனைகளையும் கையிலுள்ள பிரம்பினால் நீட்டிச் சுட்டிக்காட்டிச் சேவகஞ் செலுத்திச் சென்றான். அளவில் அடங்காத நால்வகைப் படைகளும் மண்ணுலகமே அன்றி இந்திரன் உலகம் முதலிய உலகங்களிலும் பிறவிடங்களிலும் செல்லுமாறு செய்து, தடாதகைப் பிராட்டியார் அரசர்களின் செல்வங்கள் அனைத்தையும் கொள்ளை கொள்ளப் போவாராயினர்.

**வடநாட்டவர் முதலியோர்களை வெல்லுதல்**

வடபுலத்துக் [1] **கயபதி, துரகபதி, நரபதி** முதலான அரசர்களை அம்மையார் வென்று யானைகளையும், குதிரைகளையும், தேர்களையும், மகளிர்கூட்டத்துடன் திறைப்பொருளையும் பெற்றார். பிறகு தேர்ப்பாகன் தேரைச் செலுத்த இந்திரனது படையை அடைந்து போரினைத் தொடங்கு முன்னரே, இந்திரன் ஆற்றல்

1. இவர்கள் முறையே யானைப்படைகளையும் குதிரைப்படைகளையும் காலாட்படைகளையும் மிகுதியாக உடையவர்கள்; ஆதலால் இப்பெயர் பெற்றனர் என்பர்.

அழிந்து மனவெழுச்சி கெட்டுப் போர்க்களத்தினின்றும் நீங்கினன். அம்மையார் தேவ மகளிரையும், வெள்ளை யானையையும், வெள்ளைக் குதிரையையும், காமதேனுவையும், சிந்தாமணியையும், கற்பகம் முதலிய தருக்களையும் கவர்ந்துகொண்டு திரும்பினர்; இவ்வாறே மற்றைய திசைக் காப்பாளர் அனைவர்களோடும் சென்று போரிட்டு வென்று அவர்கள் பணிந்து தந்த திறைப் பொருளையும் ஏற்றுக்கொண்டு, அங்குநின்றும் புறப்பட்டுப் பல இயங்களின் ஒலியையும், நால்வகைச் சேனைகளின் ஒலியையும் ஏற்றுக்கொண்டு எதிரொலி செய்யுமாறு [1] ஊழிக்காலந்தோறும் வளருகின்ற கயிலைமலையை அடைந்தார்.

**கயிலைமலையினைப் பிராட்டியார் அடைந்து வளைத்தல்**

திருக்கயிலை மலையானது, 'மலையரசன் புதல்வியாகிய பார்வதி தேவியார் அன்று தன்னைவிட்டு நீங்கிப் போயினவர் இன்று திரும்பிவந்தனர்' என்று அருவியாகிய கண்ணீரைச்சிந்தி, அந்நீரின் ஒலியினால், 'அன்னையே ! வா' என்று அழைத்துத் தனது வெள்ளொளியாகிய புன்முறுவலால் தழுவி எதிர்கொள்ளுமாறு அம்மையார் சென்றருளினர்.

வானார் கயிலை மலையான்மகள் தன்னை நீத்துப்
போனாள்வந் தாள்என்(று) அருவிக்கட் புனலுக்கு அந்நீர்
ஆனா ஒலியால் 'அனைவா'என்(று) அழைஇத்தன் தேசு
தானும் நகையால் தழீஇயெதிர் ஏற்பச் சென்றாள்.

தடாதகைப் பிராட்டியாருடைய படை வீரர்கள் அம்பு பூட்டிய வில்லைத் தாங்கி இடியேற்றைப்போல ஆரவாரித்து முன்னேறிச் சென்று திருக்கயிலைமலையைச் சூழ்ந்துகொண்டனர். அதுகண்ட திருக்கயிலைமலையின் காவலர்கள் ஓடிச் சென்று, திருநந்திதேவரை அடைந்து வணங்கி இச்செய்தியை விண்ணப்பித்தனர்.

**சிவகணங்களுடன் பெரும் போர் புரிதல்**

எந்தையாகிய திருநந்திதேவர் சிவபெருமான் திருவுள்ளக் குறிப்பறிந்து பூதகணங்களை ஏவினர். உடனே அப்பூத

1. இங்கு, "ஊழிதோ றூழிமுற்றும் உயர்பொன் நொடித்தான் மலையை" எனவரும் சுந்தரர் தேவாரஅடி நினைவிற்கொள்ளற்பாலது.

கணங்கள் பிராட்டியாரின் பெருஞ்சேனையோடும் ஒன்றிக் கடலுங்கடலும் தம்முள் போர் செய்தலைப்போல எதிர்த்துப் போர் புரிந்தன. வீரர்கள் சூலங்கள், மழுவாட் படைகள், பெரிய ஈட்டிகள், சக்கரங்கள், எறிபடைகள், சிறிய ஈட்டிகள், வாட் படைகள், தண்டங்கள், கலப்பைகள், வேற்படைகள் முதலியவற்றை ஒருவர்மேல் ஒருவர் வீசி ஆரவாரிக்கும் ஆரவாரங்கள் ஊழிக் காலத்தில் ஒலிக்கும் கடலின் ஒலிகளை ஒத்தன. எறியப் படுவனவும், வீசப்படுவனவும், எய்யப்படுவனவும் ஆகிய பல வகைப் படைகளில் சில உதிர நீரில் மூழ்கி மறைந்து போயின; சில உடலில் தாக்காது தவறிப் போயின. சில உடலில் தாக்கி முறிந்துபோயின. இவை, **'முயன்று செய்தவர்களின் இருவினைக்கு ஈடாகவரும் பயனைப் போல்'** விளங்கின. இங்ஙனம் போர் நிகழ்ந்து கொண்டிருந்தபோது கயிலைமலையில் சிவபெருமானைத் தரிசித்து வணங்குதற்கு வந்த திருமால் முதலிய சில பெருந்தேவர்களின் கருடன் முதலிய பறவை ஊர்திகள் அஞ்சிப் பறந்தன; மற்றைத் தேவர்களின் விலங்கு ஊர்திகளும், விமானங்களும் படைக்கலங்களினால் சிதைந்தன; காலனுடைய எருமைக்கடா இரத்தத்தைக் கக்கியது. சிவபெருமானைத் தரிசிக்கவந்த வித்தியாதரர்கள் போர் செய்தலைக்கண்டு தமக்கு வரும் இடையூற்றிற்கு அஞ்சி மாதர்களுடன் வேறு வழியாகத் திருக்கயிலைக்குச் சென்றார்கள்.

இருதிறத்துப் படையினரும் திங்கட் படைக்குச் செங்கதிரோன் படையும், அக்கினிப் படைக்கு வருணப் படையும், நரசிம்மப் படைக்குச் சரபப் படையும், வாயுப் படைக்கு அரவப் படையுமாக மாறி மாறி விடுத்தனர்.

அப்பொழுது நந்தியெம்பெருமானிடம் அன்பு பூண்ட படைவீரர்களின் கையில் ஏந்தி இருந்த படைக்கலங்களைத் தடாதகைப் பிராட்டியார் தம் கணைகளை மழைபோலச் சொரிந்து துகள்களாக்கி நின்றார். ஆயுதங்களை இழந்தசிவகணங்கள் கற்களாகிய படைகளை எடுத்துப் பிராட்டியாரின் படை வீரர்களின்மேல் வீசினர். **பொய்மையுடைய மனத்தினர் செய்யும் தவம் அழிவதுபோலப்** பிராட்டியார் அவற்றை வச்சிரப் படையை

நிமிர்த்து வீசித் துண்டு துண்டாகத் துணித்தார்; பிறகு அச் சிவ கணங்களைத் தண்டப்படையால் தாக்கினர். அவர்கள் வலியிழந்து புறங்கொடுத்து ஓடினர். அண்டங்களையும், அவற்றிலுள்ள சராசரங்கள் அனைத்தையும் தாமே படைத்து அவையெல்லாவற்றுள்ளும் கலந்து நின்ற அம்மையாரது (பராசத்தியினது) வலிமையினை நாம் கூறுதற்கு இயலுமோ?

**பிராட்டியார் சிவபெருமானைக் காணல்**

படைக்கலங்களும் ஊர்திகளும் அழிந்து, தோள்வலி இழந்து தளர் நடை கொண்டு வருகின்ற சிவகணங்களின் நிலைமையினைக் கண்ட திருநந்திதேவர் கைலாசபதியாகிய சிவபெருமானை அடைந்து, அவர் திருவடியை வணங்கி, நிகழ்ந்தனவற்றை விண்ணப்பஞ் செய்தார். சிவபெருமான் புன்னகை செய்து, பினாக வில்லையும் படைக்கலங்களையும் திருக்கரத்திற் கொண்டு இடப வாகனத்தின்மீது ஏறிப் போர்க்களம் சென்றார்; அங்கே சிவகண வீரரோடு போர் புரிந்து அவர்களின் வீரத்தை அழித்து, 'இனி எவர் சினந்து எதிர்த்தாலும் வெல்வேன்' என்று பெண் சிங்கத்தைப்போல் நிற்கின்ற அம்மையாரின் திருவுருவத்தையும், வீரச் செயல்களையும் நேரில் கண்டருளினர். தடாதகைப் பிராட்டியும் ஒற்றை வீரக் கழல் அணிந்த திருவடியையும்,பாம்பாகிய கச்சினலேகட்டப்பட்டு உடுத்திய புலித் தோலையும், மழுப்படை ஏந்திய திருக்கரத்தையும், திருவெண்ணீறணிந்த முந்நூல் பொருந்திய திருமார்பையும், சடாமுடியையும் தன்னையே நோக்குகின்ற பெருங்கருணை புரியும் திருக் கண்களையும் உடைய இறைவரின் வலப்பாதியை நேரே கண்டருளினர்.

ஒற்றை வார்கழற் சரணமும்
பாம்பசைத்(து) உடுத்தவெம் புலித்தோலும்
கொற்ற வாண்மழுக் கரமும்வெண்
ணீ(று)அணி கோலமுந் நூல்மார்பும்
கற்றை வேணியும் தன்னையே
நோக்கிய கருணைசெய் திருநோக்கும்
பெற்ற தன்வலப் பாதியைத்
தடாதகைப் பிராட்டியும் எதிர்கண்டாள்.

கண்ட அளவிலே அம்மையாரின் ஒரு முலை மறைந்தது; உடனே உள்ளத்தில் நாணமும், மடமும், அச்சமும் இடங்கொள்ள, வளையும்படி பூத்த பூங்கொம்புபோல் இடை துவள, முன்னையன்பு வந்து குடிகொள்ள, கரிய குழற்கற்றை பிடரியிலே தாழ, கண்கள் புறவடியை நோக்க, மண்ணைத் திருவிரலால் கீறிக்கொண்டு தலைகுனிந்து மின்னலைப்போல் நின்றருளினார். அக் காட்சியைக் கண்ட பேரறிவினையுடைய சுமதி என்பவர் தான் முன்னாளிலே கேட்ட அசரீரியை மனத்தில் கொண்டு, அம்மையாரின் திருவடிகளை வணங்கி நின்று, "தாயே! கொன்றை மாலையையணிந்த சிவபெருமானாகிய இப் பேரழகனே நின் மணவாளன்" என்று கூறியதைக் கேட்ட தடாதகைப் பிராட்டியார் பேரன்பு பெருக நின்றார்.

**சிவபெருமான் பிராட்டியாருக்கு அருளுதல்**

அப்போது கருணை வடிவமாகிய சிவபெருமான் பிராட்டியை நோக்கி, "நீ திக்குவிசயத்தின்பொருட்டு எப்பொழுது புறப்பட்டாயோ அன்றுதொட்டு யாமும் நம்முடைய மதுரைப் பதியை விட்டு உன்னைச் சற்றும் பிரியாது தொடர்ந்து வந்தோம்; நான்மறை உரைத்தவாறு உன்னை வருகின்ற சோம வாரத்தன்று நல்ல முகூர்த்தம் கூடிய பொழுதிலே திருமணம் புரியவருவோம்; நீ உன் நகராகிய மதுரைக்குச் செல்வாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

என்று தொட்டுநீ திசையின்மேற்
சயங்குறித் தெழுந்துபோந் தனையாமும்
அன்று தொட்டுநம் மதுரைவிட்(டு)
உனைவிடா தடுத்துவந் தனம்; உன்னைத்
தொன்று தொட்டநான் மறையுரை
வழிவரு சோமவா ரத்தோரை
நன்று தொட்டநாள் மணஞ்செய
வருதும்; நின் னகர்க்குநீ யேகென்றான்.

**தடாதகைப் பிராட்டியார் மதுரையை அடைதல்**

சந்திரகுலத்திற்குத் தீபம்போல் விளங்குபவராகிய தடாதகைப்பிராட்டியார் இவ்வாறு கூறியருளிய தலைவரிடத்தில் தம்

அன்பையும் உயிரையும் ஒருங்கே வைத்துத் தோழியர் புடை சூழத் தேரின்மேல் ஏறியருளி, முரச வாத்தியங்கள் கடல் போல் முழங்க, இடைநின்ற தெய்வத் தன்மை பொருந்திய பெரிய மலைகளையும், புண்ணிய நதிகளையும் கடந்து, மதுரையம் பதியை வந்து அடைந்தார். அப்போது மகளிர் அட்டமங்கலப் பொருள்களை ஏந்திவந்து எதிர்கொண்டழைக்கச், செல்வம் மிக்க தம் திருமாளிகையில் அம்மையார் புகுந்தருளினர்,

**நகரமக்கள் மதுரை மாநகரை அலங்கரித்தல்**

பிறகு, அமைச்சர்கள் திருமண ஓலை எழுதி எல்லா நாடுகளுக்கும் விடுத்து, மதுரைமாநகரமெங்கும் மணமுரசினை யானையின்மேல் ஏற்றிச் சாற்றுவித்தனர். தடாதகைப் பிராட்டியாரின் திருமண முரசொலி கேட்ட மதுரை மாநகர மக்கள் அனைவரும் அளவுகடந்த மகிழ்ச்சிப்பெருக்கில் திளைத்துச் சோம சுந்தரக்கடவுளை எண்ணிக் கைகூப்பி வணங்கித் துதித்தனர். இயற்கை அழகு மிகுந்த மகளிரை ஆபரணம் முதலியவற்றால் செயற்கை அழகு செய்யும் தன்மைபோல, இயற்கை அழகும் வளப்பமும் பொருந்திய மதுரை மாநகர் முழுதையும் தொழிலின் திறங்களால் பேரழகு செய்வதற்கு முனைந்தனர். மகளிரும் ஆடவரும் மாலையோடு நீங்கிய சந்தனக் குப்பைகளைக் களைந்து புறத்தே கொண்டுபோய் வீசினர்; குளிர்ச்சி பொருந்திய பன்னீரைத் தெளித்து நிலத்திலுள்ள புழுதியைப் போக்கினர்; பிராட்டியாரின் திருமணங்காரணமாக எழுந்த மகிழ்ச்சி மயக்கத்தால் குழைகளும், வளையல்களும், கழுத்தணிகளும் கழன்று விழுவதை அறியாமல் வீடுகளை அலங்காரம் செய்வதில் ஈடுபட்டனர்.

**மக்கள் மகிழ்ச்சியுடன் பேசுதல்**

திருமணம் எப்பொழுது என்று ஒருவரை ஒருவர் வினவுவார்கள்; வருகின்ற திங்கட்கிழமை என்று பதில் கூறுகிறவர்களை மகிழ்ச்சியால் விரைந்து தழுவிக்கொள்வார்கள். அடுத்த திங்கட்கிழமை வருவதற்கு இடையில் இருக்கும் ஆறு நாட்களையும் ஆறு யுகங்களைப்போலக் கழிப்பார்கள். நம் பிராட்டியாரின் திருமண விழாவைக் கண்டு களிக்கவோ நமக்குத் தோள்கள் துடித்தன என்று கூறி மகிழ்வார்கள்.

**மனைகள் தோறும் அலங்கரிப்பு**

நகரமாந்தர் சுவர்த்தலங்களை வெள்ளையடித்துப் புதுப்பித்தனர். சிற்பநூல் வல்லாரும் விரும்பும் வண்ணம் சித்திரங்களை எழுதுவித்தனர். திண்ணைகளைக் குங்குமக் குழம்பால் மெழுகுவர். முளைப்பாலிகைகளையும், மாவிலை சொருகிய நீர் நிறை குடங்களையும் அத்திண்ணைகளிலே வரிசைப்பட வைப்பர், வாயிலிலே தோரணங்களைக் கட்டுவர். அழகிய வீதிகள் முழுதும் நடைப்பந்தர் அமைப்பர். பாளைகள் நிறைந்த கமுகமரங்களையும், கரும்புகளையும், பழுத்த குலைகளையுடைய வாழை மரங்களையும் வரிசையாகக் கட்டுவர். ஒன்பது கோள்களும் வந்து தங்கியிருத்தல்போல ஆங்காங்கே கண்ணுடிகளைக் கோத்துக் கட்டுவர். சூரியனுடைய ஏழு குதிரைகளும் அடிபடுமாறு சம்மட்டியின் வரிசைபோல, மீன் வடிவு எழுதிய கொடிகளை வரிசையாக நிறுத்துவர். மலர்களோடு குளிர்ந்த பனி நீரைக் கலந்து தெளிப்பர். பொரிகளோடு பொற் சுண்ணத்தை இறைப்பர். பாவை விளக்குக்களை நிற்க வைப்பர். பசிய மலர்மாலைகளைப் பந்தர்களில் கட்டித் தொங்கவிடுவர். கடைவீதியோ எனக் கண்டோர் ஐயுறுமாறு அழகிய வீதிகளெங்கும் இரத்தின மாலைகளையும், மரகத மாலைகளையும், முத்து மாலைகளையும் வரிசைப்படத் தொங்கவிடுவர்.

**யானை முதலியவற்றின் அலங்கரிப்பு**

வீரர்கள் யானைகளின் நெற்றியில் சிந்துரத் திலகம் சாத்துவர்; மணிகள் பதித்த நெற்றிப் பட்டத்தைச் சூட்டுவர்; குதிரைகளின் கழுத்தணி, காலணி, சேணம் முதலியவற்றைத் திருத்தமுற அணிவர்; தேர்களில் குதிரைகளைப் பூட்டுவர்; மாலைகளையும் வெண்சாமரங்களையும் அத் தேர்களில் கட்டித் தொங்கவிடுவர்.

**பெண்கள் தங்களை அலங்கரித்துக் கொள்ளுதல்**

பெண்கள் வீடுதோறும் பொற்றட்டுகளில் நவரத்தினங்களாலாகிய மங்கல தீபங்களை ஏற்றி வைப்பர். தாங்கள் அணிந்திருந்த பழைய அணிகளை வெறுத்து நீக்கிப் புதிய அணிகளைத் தரிப்பர்; பனிநீரில் குழைத்த குங்குமக் குழம்பை

மார்பிலே பூசிக்கொள்வர்; அவ்வாறு பூசிய ஈரத்தை அகிற் புகையால் புலர வைப்பர்; பிறகு மணமிகுந்த கலவைச் சந்தனங்களை அணிந்து கண்ணுடியில் அழகுபார்ப்பர்; இவற்றால் ஆடவரை வருத்துவர்; வேல்போன்ற கண்களுக்கு மை தீட்டி அவற்றை ஆடவர் மார்பிலே ஊன்றுவர்; அடிகளில் செம்பஞ்சுக் குழம்பைப் பூசி அதன்மேல் சிலம்புகளை அணிவர்; மதுவினை உண்டு மயங்கி இடை தள்ளாட நடந்து வருந்துவர்; கணவர் பாராட்டும்படி கனிமொழிகளைக் கூறுவர்; மகளிர் கூட்டத் தோடு கலந்து குரவைப்பாட்டினைக் குழறிப் பாடுவர்.

**பெண்களின் செயல்கள்**

[1]விறலியர் (பாண்மகளிர்) தம் கணவராகிய பாணரோடு [2]**கின்னர மிதுனம்போலச்** சென்று அரசியாகிய பிராட்டி யாரை வணங்கித் திருமணம் நிகழும் மகிழ்ச்சியால் இனிய இசைப் பாட்டினை யாழோடு பாடுவர்; அம்மையார் அளித் தருளும் பொருள்களை ஆடையை விரித்து வாங்குவர்; அவற்றை முடியின்மேற் கொண்டு ஆடுவர்; மதுவை உண்டு களிப்பர். அரச மகளிரும், அந்தண மகளிரும் காஞ்சன மாலையை அடைந்து திருமணவிழாவைப் பற்றி உசாவுவர்; பிராட்டி யாரின் திருமணக் கோலத்தை நோக்கி மகிழ்வர்; ஏவல் செய் யும் பெண்கள் அளிக்கும் மயிர்ச்சாந்து, நறுமணங் கமழும் கலவை இவற்றைப் பூசிக்கொண்டு மகிழ்ச்சியோடும் தங்கள் மனைகட்குச் செல்வர். பெண்கள் கங்கை, சரசுவதி, யமுனை, காவிரி முதலிய நதிகளின் தீர்த்தங்களைப் பொற்குடத்தில் நிறைக்கப்பெற்றுத் தூய ஆடையால் போர்த்து மலர் மாலை களால் அலங்கரித்து, மகளிர் சாமரை வீச, மங்கல இசைக்கருவி கள் ஒலிக்க யானையின் மேல் சிறப்பாகக் கொண்டுவாரா நின்றனர்.

---

1. விறலியர்-பாணர், கூத்தர், பொருநர் என்போரின் பெண் பாலரின் பொதுப்பெயர்; விறல்பட ஆடுதலின் விறலியர் எனப்பட்டனர். விறல் - சத்துவம்; மெய்ப்பாடு.

2. கின்னரமிதுனம் - கின்னரம் - யாழ் (வீணை). யாழைக் கையி லேந்திய ஆணும் பெண்ணும் கூடிய வடிவாக இருக்கும் மிதுன ராசி; ஆணும் பெண்ணுமாகிய இசையறியும் கின்னரப் பறவைகளுமாம். "பாடு கின்றன கின்னர மிதுனங்கள் பாராய்" என்பது இராமாயணம்.

**நகர மக்களின் மகிழ்ச்சி**

மதுரை மாநகரத்தவர் தத்தம் வீடுகள்தோறும் திருமணம் நிகழ்வதைப்போல் ஆர்வங் கொண்டனர்; வேத உணர்ச்சியும் தூய்மையுமுடைய அந்தணர்கள் அருந்துமாறு அறுசுவையினை யுடைய உண்டிகளைச் சமைப்பவர் சிலர்; "அடிகள் இங்கேயே உண்ணவேண்டும்" என்று துறவிகளை எதிர் சென்று வணங்கி அழைப்பவர் சிலர்; சிவனடியார்களை எதிர்கொண்டு பூசனையை ஆகம விதிப்படி செய்பவர் சிலர். திருமணத்திற்குரிய மண வாளரோ ஒப்பற்ற சிவபெருமான். மணமகளாரும் அத்தன் மையர். ஆகையால், நகரத்தை அலங்கரித்திருக்கும் அழகின் சிறப்பை நம்மால் எடுத்துக் கூற இயலுமோ?

**திருமண மண்டபத்தை அலங்கரித்தல்**

தடாதகைப் பிராட்டியார் இந்திரனைப் போரில் வென்ற காலத்துத் திறையாகப் பெற்ற விமான வரிசைகள் நின்றாற் போலவும், மலைகளெல்லாம் மலையரையனின் மகளாகிய பிராட்டியார் திருமணங் காணத் தேடிவந்து வரிசைப்பட நின்றாற் போலவும் நீண்ட நிலைத் தேர்களை வரிசையாக நிறுத்தினர். யானைகளைப் பளிங்கினால் செய்து இருபாலும் அமைத்த பொற் படிகளையும், நீல மணியினால் செய்த யாளிகளின் வரிசையை யுடைய மணிகள் பதித்த திண்ணைகளையும், அருகே வருபவர் களின் சாயல் வெளிப்புறத்தில் ஆடுகின்ற ஓவியப் பதுமைகள் போல் விளங்கப்பெற்ற பளிங்கினாலாகிய சுவர்த்தலங்களையும், இடையிடையே மரகதச் சாளரங்களையும், பல வடிவங்களாகச் செய்த ஆயிரம் பவளத் தூண்களையும், அவற்றின்மேல் இந்திர நீல மணிகளால் செய்த போதிகைகளையும், பொன்னால் செய்த உத்தரங்களையும், செம்மணிகளால் செய்த துலாங்களையும், சந்திரகாந்தக் கல்லால் செய்த மேனிலையையும் உடைய திரு மண மண்டபத்தை அழகுறச் செய்து அமைத்தார்கள்.

முத்தினால் பாளையும், மரகதத்தினால் பசிய இலையும், பவளக் கொத்தினால் பழங்களும், வெள்ளியினால் வழுவழுப் பான அரையும் செய்தமைத்த கமுக மரங்களையும், பவளக் கொத்தினால் தொங்கும் பூவோடு பொன்னால் பழுத்த குலையை

யும் தொங்கவிட்டுப் பொன்னால் தண்டுசெய்து மரகதத்தினால் நீண்ட இலையை அமைத்த வாழைமரங்களையும் வரிசைப்படக் கட்டினர். சிறுசண்பகம், குருக்கத்தி, சண்பகம், பாதிரி முதலாய மரங்களை அம்மண்டபத்தைச் சுற்றி வரிசையாக வளர்த்துப் பூங்காவினை அமைத்தனர். அங்கு வண்டுகள் இசைபாடின; மலர்கள் தேனினைச் சிந்தின; தென்றல் மலர்களின்மேல் மணத்தைக்கவர்ந்து சாரளங்களின் வழியே வீசின.

**திருமண வேள்வி புரியும் இடத்தின் அலங்காரம்**

வேள்விச்சாலைகளையும், வேதிகைகளையும், ஓமகுண்டங்களையும் அவ்வவற்றின் மேகலையோடு (வரம்புகளோடு) வேதாகம விதிப்படி அமைத்துக் **கண்ணாடி, இடபம், விளக்கு, திருமகள் வடிவாகிய பாவை, சாமரம், வலம்புரிச்சங்கு, சுவத்திகம், நிறைகுடம்**[1] என்னும் அட்டமங்கலப் பொருள்களையும் இயந்திரவகையினால் அமைத்தனர். சந்தனத்தோடு குங்குமப்பூவையும், கத்தூரியையும் கலந்து பனிநீரில் கரைத்துக் குழம்பாக்கி அதனால் தரையை மெழுகினர்; கதிரவனும் நாணுமாறு மாணிக்கத் தீபங்களை இரு கைகளிலும் பாவைகள் எடுத்து ஏந்தி நிற்க, வரிசையாக நிறுத்தினர். நட்சத்திரங்களைப்போல் நவமணிகளை இடையிடையே கோவையாக அமைத்த கம்பளங்களை மேலே விரித்துக் கட்டினர்.

**தேவர்களும் சிவனடியார்களும் அமருதற்குரிய இடங்கள்**

திருமண மண்டபத்தின்முன் விண்ணினை அளாவிய பந்தரைத் திசைகள் மறைய அமைத்தனர்; பாலிகை வட்டில்களில் முளைகளைத் தெளித்தனர்; பிரமன் முதலிய தேவர்களுக்குத் தகுதியான பொற் கம்பளத்தைமேலே விரித்து அதனுள்ளே ஆதனங்களை அமைத்தனர்; சிவனடியார்கள் அமருவதற்குச் சுற்றிலும் ஆதனம் இட்டனர்.

---

1. இங்கே கூறிய இடபம், திருமகள் வடிவாகிய பாவை, வலம்புரிச் சங்கு, சுவத்திகம் என்பவற்றை நீங்கி அங்குசம், முரசு, கொடி, இணைக் கயல் என்பனவற்றைக் கொள்ளுதலும் உண்டு.

**திருமண மண்டபத்தின் பொற்பீடம்**

திருமண மண்டபத்தின் நடுவில் கற்பகத்தரு அளித்த வயிரத்தால் செய்யப்பெற்ற சிங்கத்தின் பிடரியிலே பொற் பலகையை அமைத்தனர்; அதன் மேலே பவளக்குடத்தோடு சதுரமாகச் செய்த கழுத்தையுடைய தூண்களை நிறுத்திப் பளிங்கினால் உத்தரங்களையும் பவளத்தினால் கொடுங்கைகளையும் பரப்பி மூன்று அடுக்குகளை அமைத்துச் சிற்பநூல் முறைப்படி பல மணிகளால் விமானத்தை எழிலுற விளங்கச் செய்தனர்; அதன் உள்ளிடத்தே வேதாங்கம் ஆறுமே கால்களாகவும், பிரணவம் (ஓம் என்னும் மந்திரம்) அழகிய பொற்பீடமாகவும், நான்கு வேதங்களே முத்தினால் தொடுத்த வடங்களாகவும், வடிவங்கொண்டு தங்கினாற்போல, எங்கள் நாயகனாகிய சோம சுந்தரக் கடவுள் தடாதகைப் பிராட்டியாரோடு வீற்றிருப் பதற்கு நவமணிகள் பதித்த பொற்றவிசு ஒன்றைச் செய்து அமைத்தனர்.

**அரண்மனையில் எல்லாப் பொருளும் நிறைந்திருத்தல்**

இந்திரனிடமிருந்து பிராட்டியார் திறைப் பொருளாகக் கொணர்ந்த **கற்பகத்தரு** பொன்னுடை அணிகலன் முதலிய வற்றை நல்கவும், **காமதேனு** [1] அறுசுவையோடு கூடிய அமுதம் போன்ற [2] ஐவகை உணவு முதலான பல்வகை உணவுகளைச் சுரந்து கொடுக்கவும், [3] **சிந்தாமணி** நினைத்துக் கேட்கும் பற்பல பொருள்களை யெல்லாம் தந்துகொண்டிருக்கவும் இந்திர னுடைய பொன்னுலகமும் நாணுமாறு அவற்றை வாங்கி ஏவ லாளர்கள் தொகுத்தனர்.

**திருமணங் காண அரசர் முதலானோர் வருகை**

மலயத்துவச பாண்டியனது திருமகளாராகிய தடாதகைப் பிராட்டியாரின் திருமணத் திருமுகத்தை மன்னர்கள் எதிர்

---

1. அறுசுவை - கைப்பு, புளிப்பு, இனிப்பு, துவர்ப்பு, கார்ப்பு. உவர்ப்பு என்பன.

2. ஐவகை உணவு - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன, உறிஞ்சுவன என்பன.

3. சிந்தாமணி - சிந்தித்தவற்றைத் தரும்மணி என்பது பொருள்.

கொண்டு வரவேற்று வணங்கிக் கைக்கொண்டு தம் மணிமுடி மேலேற்றி அத் திருமுகச் செய்தியைக் கேட்டு மகிழ்ந்தனர்; திருமணச் செய்தியைத் தாங்கி வந்தவர்களுக்கு அணிகளையும் ஆடைகளையும் கொடுத்து அனுப்பினர்; பிறகு திருமணத்தினைக் காண மனத்தினும் முந்தி விரைந்து புறப்பட்டனர். கொங்கர், சிங்களர், பல்லவர், சேரர், கோசலர், பாஞ்சாலர், வங்கர், சோனகர், சீனர், சாளுவர், மாளவர், காம்போசர், அங்கர், மகதர், ஆரியர், சோழர், அவந்தியர், விதர்ப்பர், கங்கர், கொங்கணர், விராடர், மராடர், கருநாடர், குருநாடர், கலிங்கர், சாவகர், கூவிளர், ஒட்டியர், கடாரர், காந்தாரர், குலிங்கர், கேகயர், விதேகர், பௌரவர், கொல்லர், கலியாணர், தெலுங்கர், கூர்ச்சரர், மச்சர், மிலேச்சர், செஞ்சயர், முதலாகப் பிறநாட்டரசர்கள் எள்ளிடவும் இடமில்லை என்னும் படி நெருங்கிப் பசிய கடலைப்போல நிலமகளின் முதுகு ஒடியும் வண்ணம் எங்கும் பரந்த சேனைகளோடும், தத்தம் நாட்டி லுள்ள பல்வகைப் பொருள்களோடும் பலவழிகள் தோறும் திருமணத்தைக் காண மதுரை மாநகரை வந்தடைந்தனர்.

அரசர்கள் தம்வருகையை அறிந்த வாயிற்காவலர், பிராட்டி யாரிடம் சென்று அறிவித்தனர். அரசியார், அவர்கள் உள்ளே வரக்கடவர் எனக் கட்டளை பணித்தவளவிலே, அரசர்கள் உள்ளே சென்று சிங்காதனத்தின்மேல் தருமந் தழைத்து அருள் கனிந்து விளங்கும் பிராட்டியாரைத் தம் கண்கள் களிப்புறக் கண்டு மகிழ்ந்து முடியின்கண் அணிந்த மலர்மாலைகள் கீழே சிதற வீழ்ந்து வணங்கிப் பிராட்டியாரின் திருவருள் பாலிக்கச் சென்று தத்தமக்கு அமைந்த இடங்களை அடைந்தனர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நால்வகை நிலத்தில் தோன்றும் பொருள்களும், கடல் கடந்து வரும் பொருள்களும் நிறையப்பெற்று மதுரை மாநகரம் மங்கலமாக விளங்கியது.

**திருமால் முதலியோர் திருமணத்திற்குப் புறப்படுதல்**

தடாதகைப் பிராட்டியார் மதுரைக்குச் சென்றபின்பு, சிவபெருமான் போர்க்களத்தினின்றும் நீங்கி, வெள்ளியங்

கிரியை அடைந்து உயிர்களுக்குப் [1]போகத்தை அருளுகின்ற திருக்குறிப்போடு வீற்றிருந்தார். அதனை உணர்ந்த நந்தியெம்பெருமான், சங்குகன்னனை முதலாகவுடைய கணத்தலைவர்களை அழைத்து, இந்திரன், பிரமன், திருமால், உருத்திரர் ஆகிய இவர்களை அழைத்துவருமாறு விடுத்தார். அவர்கள் உருத்திரர், திருமால், பிரமன் முதலாகிய பெருந் தேவர்களின் உலகங்களை அடைந்து சிவபெருமானது திருமண விழாவைக் கூறினர். அம்மூவரும் அச் செய்தியைக்கேட்டு மேன்மேல் எழுகின்ற பேரன்பு பின்னின்று தள்ள விரைந்து புறப்பட்டனர்.

**உருத்திரராதியோர் வருகை**

காலாக்கினி யுருத்திரர், அட்டவித்தியேச்சுரர், கூர்மாண்டேசர், சத உருத்திரர், நூறுகோடி உருத்திரர், பவன், சருவன், ஈசானன், பசுபதி, வீமன், மாதேவன், உக்கிரன், உருத்திரன் என்னும் அட்டமூர்த்திகள், ஆடகேச்சுரர், நீலலோகித உருத்திரர், பதினொரு உருத்திரர், வீரபத்திரர், ஐயனர், அட்டவயிரவர், திருமால், பிரமன், இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலர்கள், அஷ்ட வசுக்கள், [2] நாற்பத்தொன்பது மருத்துவர், அச்சுவனி தேவர் இருவர், பன்னிரண்டு சூரியர், சந்திரன் முதலிய தேவர்களும், வியாக்கிரபாதர், பதஞ்சலி, உபமன்னியு, அகத்தியர், சனகாதி நால்வர், வாமதேவர், சுகர், வியாசர், நாரதர் முதலிய முனிவர்களும், ஏழு கன்னியர், சித்தர், வித்தியாதரர், இயக்கர், கின்னரர், முனிவர், யோகியர், நாகர், உரகர், அரக்கர், அசுரர், பூதவேதாளர், கூளி, அரம்பையர் முதலியோரும் திருக்கயிலாயமலையை அடைந்தனர்.

**காலம் முதலியன வருதல்**

காலங்களும், ஏழு கடல்களும், ஏழு நதிகளும், எட்டுத்திக்குகளும், எட்டு மலைகளும், எட்டு யானைகளும், ஏழு மேகங்களும்,

---

1. இறைவன் உமையோடு கூடியே உயிர்களுக்குப் போகம் அளிப்பர்; 'பெண்பா லுகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர், விண்பாலியோகெய்தி வீடுவர்காண் சாழலோ" என்பது திருவாசகம்.

2. இவர்கள் காசிபர்க்கும் திதிக்கும் பிறந்தவர்கள்; காற்றின் உருவாய் இயங்குபவர்.

மின்னல்களும், ஐம்பெரும் பூதங்களும், சப்தகோடி மாமந்திரங்களும், இருநூற்று இருபத்துநான்கு புவனங்களும், முப்பத்தாறு தத்துவங்களும், ஐந்துகலைகளும், ஐம்பத்தோர் அட்சரங்களும், எண்பத்தொரு பதங்களும், நான்கு மறைகளும், இருபத்தெட்டு ஆகமங்களும், பலவகைச் சமய நூல்களும், அறம் முதலிய நான்கு பொருள்களும், சரியை முதலிய நான்கு பாதங்களும், அஷ்டமாசித்திகளும் புறப்பட்டுத் திருக்கயிலாய மலையினை வந்தடைந்தன.

**கயிலைத் திருவாயிலில் யாவரும் வந்து நிற்றல்**

தேவர்கள் முதலிய யாவரும் கடல்போன்ற சேனைகளுடனே எண்ணிறந்த வாத்தியங்கள் முழங்கத் தங்கள் தங்கள்தேர் முதலிய ஊர்திகளின்மேல் தத்தம்மனைவியரொடும் வான்வழியாகத் திருக்கயிலைமலையை வந்து அணுகித் திருக்கோயிலின் புறத்தே, "**அரஅர**" என்ற முழக்குடன் நின்றூர்கள். ஒருங்கு கூடிய தேவர்களின் நெருக்கமற ஒதுக்கும் பொருட்டுத் திருநந்திதேவர் பிரம்புப்படையை வீசி, அத் தேவர்களின் மணிமுடியில் தாக்கி விலக்கினூர். அப்போது அவர்கள் மணிமுடியினின்று சிதறிய மணித்துகளினுள் மறைந்த கயிலைமலையானது, சூரிய மண்டலத்துள் அமாவாசையில் ஒடுங்கிய சந்திரமண்டலம்போல் தோற்றம் அளித்தது.

**கயிலாசபதி யாவர்க்கும் அருள்நோக்கம் புரிதல்**

தேவர்கள் யாவரும் திருவாயிலின் புறத்தே நிற்க நந்தியெம்பெருமான் அங்கு உள்ளேசென்று சிவபெருமான் திருவடிகளை வணங்கி, 'ஐயனே! தேவர்கள் அனைவரும் வந்திருக்கின்றூர்கள்' என்று கூற, ஆயின், "இங்கு அழைப்பாய்" என்று சிவபெருமான் கட்டளையிட்டார். திருநந்திதேவர் வந்து அவர்களை அழைத்து அவரவர் தகுதியை அறிந்து பிரப்பங்கோலால் குறித்துச்செலுத்தச் சிவபெருமான்திருவடித்தாமரை மலர்களைத் தங்கள் முடிகள் சூடுமாறு முற்பட்டு முற்பட்டு வந்து வணங்கினூர்கள். சிவபெருமான், தமது திருவடியில் வணங்கித் துதிக்கின்றவர்களில் அவரவர் தகுதிக்கேற்பச் சிலருக்குத் தன் திருவாயால் வார்த்தை நல்கியும், சிலருக்கு அரு

ளோடு கூடிய புன்னகை புரிந்தும். சிலருக்குத் திருநோக்கு அருளியும், சிலருக்குத் திருமுடியினை அசைத்தும் திருவருள் பாலித்தார்.

**சிவபெருமான் திருமணக்கோலங் கொள்ளல்**

பிறகு சிவபெருமான் அங்கு நின்றெழுந்து திருமணக் கோலம் கொள்ளும்பொருட்டு ஒரு திருமண்டபத்துள்ளே எழுந்தருளினார். அப்போது, சிவபெருமானுடைய திருவுளக் குறிப்பை அறிந்த அளகைப்பதியின் தலைவனாகிய **குபேரன்** தனது தவத்திற்குப் பயன் கிட்டியதுபோல் மெய்யன்போடு அம்மண்டபத்திற்குச் சென்று வேதங்களும் திருமால் பிரமன் என்னும் இருவரும், முனிவர்களும், தீண்டுதற்கரிய திருமேனி யைத் தன் கைகளால் தீண்டித் திருமணக்கோலம் செய்ய லானான்; அழகிய ஆடையை முன் புறத்தில் [1] கொய்சகமாகவும், பின்புறத்தில் கோவணமாகவும் சாத்தி, அதன்மேல் இரட்டை அரைஞாணைப் பட்டிகையோடு இறுக்கினான்; சிகையைக் கொண்டையாகப் புனைந்தான்; கற்பக மலரை அக்கொண்டை யில் சூட்டினான்; திருவெண்ணீறு அணிந்த திருமேனியில் சந்த னத்தோடு கத்தூரியும் பனிநீரும் கலந்து பூசினான்; சங்கக் குழைகள் அணிந்த திருச்செவிகளிலும் இரண்டு சூரியர்கள் குடி புகுந்து இருந்தாற்போல் விளங்கும் சுருண்ட பொற்றோடும் பொற்குண்டலமும் தோட்புறத்திலே அசைந்தாடத்தரித்தான்; கரிய திருமிடற்றின்மேல் முழுமதியைக் கோவை செய்தாற் போல் வயிரக் கண்டிகையை அணிந்தான்; முந்நூல் புரளும் அகன்ற திருமார்பின்கண் திருமுடியிலுள்ள திங்கள் அமுதைப் பொழிவதுபோல ஒளிவீசும் முத்துமாலையைச் சாத்தினான்; இருளினை ஓட்டும் மாணிக்கமாலையை முத்துமாலைகளின் நடுவில் திருப்பாற் கடலில் முளைத்தெழுந்த இளங் கதிரவனைப்போல் விளங்கத் தரித்து அழகு செய்தான்; நான்கு திருத்தோள் களில் பட்டிகைகளைத் தரித்தான்; அத் தோள்களில் அங்க தம் என்னும் தோளணிகளைப் புனைந்தான்; யானைத்தோலை அகற்றி அழகிய மேலாடையைச் சாத்தினான்; மந்திர வடிவ மான பவித்திரத்தை எடுத்து விரலில் அணிந்தான்; உடுத்த

1. கொய்சகம் - அடுக்கடுக்காக மடித்துச் சொருகுவது.

கோவணத்தின்மேல் பொன்னுடையை அணிந்தான்; அதன் மேல் ஐந்துதலைப் பாம்பு தொங்குவதுபோல ஒளிவீசும் மாணிக்கத்தலைக் கொடுக்கு இருபுறமும் தொங்கவிட்டான்; பூமாலைகளைத் திருத்தோள்களில் சாத்தினன்; திருவடிகளில் சிலம்பையும் வீரக்கழலையும் சேர்த்துக் கட்டினன். இவ்வாறு பெருநிதித்தலைவனாகிய குபேரன் சிவபெருமானுக்குத்திருமணக் கோலஞ்செய்து அருந்தவப்பயனை அடைந்தான்.

**சிவபெருமான் திருமணத்திற்காக மதுரைக்கு எழுந்தருளல்**

திருமால், பிரமன், இந்திரன் முதலான பெரிய தேவர்க்கும், மற்றைய யாவருக்கும் கடைக்கண் நோக்கத்தால் எல்லா மங்கலத்தையும் அளிக்கவல்ல சிவபெருமான், தாமும் ஒரு மங்கலக்கோலங் கொண்டருளிக் குண்டோதரன் முதுகின்மேல் தமது திருவடியை வைத்து எதிரே வந்த பெரிய இடபத்தின் மீது எழுந்தருளினர். அப்போது **தேவர்கள்** மலர்மாரி பொழிந்து [1]தேவ துந்துபி ஐந்தனையும் முழக்கிச் சூழ்ந்தனர். **அரக்கர்களும், இயக்கர்களும், பூதர்களும்** வந்து மங்கல இயங்களை இசைத்தனர். **வித்தியாதரர்** தாளம்போட்டு ஆட்டுவிக்கத் தேவமகளிர் பூங்கொம்பர்போல அசைந்து ஆடினர். ஆயிரந் தலைகளையும் இரண்டாயிரம் தோள்களையுமுடைய **பானுகம்பன்** தன் ஆயிரம் வாய்கள் தோறும் ஆயிரம் சங்குகளை வைத்து இரண்டாயிரங் கைகளாலும் பிடித்து ஆயிரம் சிங்கங்கள் வாய்திறந்து ஒலித்தாற்போல ஊதினன். சிவபூசையை இடைவிடாது செய்து இறைவன்திருவருள்பெற்ற **வாணாசுரன்** தாளத்திற்குப் பொருந்த தன் ஆயிரங்கைகளினாலும் பெரிய கடல் ஒலியும் கீழ்ப்படுமாறு 'தொம்' என்று மோதிக் குடமுழவின் ஒலியை எழுப்பினன். **முனிவர்கள்** கூப்பிய கரங்களுடனும், கூறும் வாழ்த்து மொழிகளுடனும் ஒருபால் துதித்துச் சென்றனர். **கணநாதர்கள்** கண்களில் ஆனந்தக்கண்ணீர் சொரியக் கைகொட்டி ஆடிப் பாடித் துதித்து ஒருபால் சென்றனர்.

இந்திரன் மணிகள் பதித்த களாஞ்சியைக் கையில் ஏந்திக் கொண்டு ஒருபால் சென்றான். **ஈசானன்** வெற்றிலையையும்,

1. தேவ துந்துபி ஐந்து - தோற்கருவி, துளைக்கருவி, கஞ்சக்கருவி நரப்புக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐந்து வாத்தியங்கள்.

வாசனைப் பொருள்களையும் கொண்டுவிளங்கும் பொன்னாலாகிய அடைப்பையைத் தாங்கி ஒருபால் சென்றான். **வாயுதேவன்** ஆலவட்டம் வீசி ஒருபால் வந்தான். **அக்கினிதேவன்** தூபத்தைத் தந்து ஒருபால் வந்தான். **வருணதேவன்** பொற் பூந்தட்டைக் கையில் ஏந்தி ஒருபால் வந்தான். **நிருதி** கண்ணாடியை எதிரே ஏந்தி வந்தான். **குபேரன்** அடிக்கடி அளவற்ற பொருளை வாரி வாரி வீசிக்கொண்டு வந்தான். **இயமன்** பெருங்கூட்டத்தை விலக்கிக்கொண்டு வந்தான். **ஆதிசேடன்** இரத்தின தீபங்களை ஏந்தி வந்தான். **வேதபுருடன்** இறைவன் திருவடியைத் தன் முடியின்மேல் சுமந்து பின்புறமாகவே வந்தான். **கங்கை, காவிரி** முதலிய ஒன்பது புண்ணிய தீர்த்தங்களாகிய மகளிர் வெண்சாமரைகளைப் புரட்டி வீசிவந்தனர். வெள்ளிய பிறைக் கீற்றைப்போன்ற ஒளி பொருந்திய பற்களையும், கரிய உடலையும், குழிந்த கண்களையும், சிவந்த தலைமயிரையும், சங்க குண்டலங்களையுமுடைய **குண்டோதரன்** சந்திரவட்டக் குடையினைத் தாங்கி வந்தான்.

இடிக்கொடி, அன்னக்கொடி, கருடக்கொடி முதலான கொடிகள் புடைசூழ, இடபக்கொடி அக்கொடிகளுக்கெல்லாம் அரசாய் அசைந்தாடியது. முத்தலைச் சூலப்படையைப் பதினெட்டுப் படைக்கலன்களும் சூழ்ந்து சேவித்து வரப் பெரும் வயிறுடைய **ஒரு பெரும் பூதமானது** அதனைக் கையிலே ஏந்தி முச்சுடர்களும் உதிக்கப்பெற்ற ஒரு மலை நடந்ததைப்போல ஒருபால் வந்தது. **புட்பதந்தன்** நான்கு வேதங்களின் பொருளைத் திரட்டிக் கூறினாற்போல வடமொழிப் பாடல்களைக் கூறித் துதித்துக்கொண்டு எதிரே வந்தான். **ஆலால சுந்தரர்** திருவெண்ணீற்றோடு திருப்பள்ளித் தாமத்தையும் ஏந்தி வந்தார். **நான்முகன்** வலப்பக்கத்திலும், **திருமால்** இடப்பக்கத்திலும் கைகளைக் கூப்பித் துதித்துச் சூழ்ந்துவரச் சிவபெருமான் வெள்ளிமலையோடும் எழுந்துவந்தாற்போல இடபத்தின்மேல் எழுந்தருளி வளமிக்க மதுரைமாநகரின் புறத்தே வந்தருளினார்.

**மணமகனாரைச் சிறப்புடன் வரவேற்றல்**

அப்போது பொற்சின்னங்கள் பின்வருமாறு ஆர்த்தன:

தேவர்கள் தேவன் வந்தான் ;
செங்கண்மால் விடையான் வந்தான் ;
மூவர்கள் முதல்வன் வந்தான் ;
முக்கணெம் பெருமான் வந்தான் ;
பூவலர் அயன்மால் காணாப்
பூரண புராணன் வந்தான் ;
யாவையும் படைப்பான் வந்தான்
என்று **பொற் சின்னம்** ஆர்ப்ப.

திருச்சின்ன ஒலியைக் கேட்ட மங்கையர்க்கு அரசியாகிய தடாதகைப் பிராட்டியாரின் சுமதி முதலிய அமைச்சர்களும், சேனாதிபதிகளும், பிற நாட்டு அரசர்களும், மற்றையோருங் கூடி நகர மதில் வாயிலின்கண் சென்று கண்ணுக்கினிய கோலங்கொண்டுள்ள சிவபெருமானைத் தரிசித்து எதிர்கொண்டு வணங்கினார்கள். சிவபெருமான் தேவலோகத்தைக்காட்டிலும் சிறப்புற்ற மதில் சூழ்ந்த மதுரை மாநகரத்தின் முதற்பெருங் கோபுர வாயிலைக் கடந்து, அகிற்புகை தவழும் மாளிகைகளை யுடைய வீதியில் வலமாக எழுந்தருளி வந்தார்.

**பல நாட்டுப் பெண்கள் எதிர்கொண்டு வந்து தரிசித்தல்**

தோழிகள் கூட்டம் சூழத் தமிழ்நாடு முதலிய பதினெட்டு நாட்டிலுமுள்ள மாதரும், தேவ மகளிரும், [1] முல்லை, தாமரை, அல்லி, நீலோற்பலம், குமிழ், கோங்கு, காந்தள், அசோகமாகிய இவை மணங்கமழ மலர்ந்த நந்தவனம்போல ஒருசேரச் சிவபெருமானைக்காண நெருங்கிச் சூழ்ந்தார்கள். "எங்களை நீங்கள் கைவிடுகின்றீர்களோ" என்று முறையிடுதல்போலச் சோருகின்ற மேகலையும், வளையல்களும் ஒலிக்கவும், "நாணமும், மடமும் உங்கள் உடைந்த மனவெளியினையே வழியாகக்கொண்டு உங்களை விட்டு ஐயோ ஓடிவிடும்; அதனைச் சொன்னோம் சொன்னோம்" என்று தங்களைக் காலைப்பிடித்துத் தடுப்பனபோலச் சிலம்புகள் ஒலிக்கவும் அம்மாதர்கள் சென்றார்கள். [2] தாமரைக்

---

1. இம் மலர்கள் மகளிர்க்கு முறையே பல், முகம், வாய், கண், மூக்கு, தனம், கை, மேனி இவற்றிற்கு உவமையாகும்.

2. இங்கு, "..செந்தாமரைக் காடனைய மேனித் தனிச் சுடரே" என வரும் திருவாசக அடி ஒப்பு நோக்கற்பாலது.

காடு பூத்தாற்போன்ற அருட்பெருங் கடலாகிய சிவபெருமானின் திருவடிமுதல் திருமுடிவரையில் பெண்கள் தங்கள் கண்களாகிய குவளை மலர்களைச் சூட்டிச் செந்தாமரை மலர்களைத் தமது கூந்தலின்மேலே அணிந்துகொள்வாரைப்போல் வளையலை அணிந்த தம் கைகளைத் தலைமிசைக் குவித்துச் சிவபெருமானை நோக்கித் துதிமொழிகள் போலப் பின் வருவனவற்றைக் கூறலாயினர்,

**மணமகனையும் மணமகளையும் வியந்துரைத்தல்**

1 "நம் தடாதகைப் பிராட்டியார், இந் நம்பியைக் கூடித் திளைப்பதற்கு என்ன தவம் செய்தாளோ!" என்பார் சிலர்; "இவ் வள்ளலும், நம் நங்கையைக் கூட என்ன தவம் செய்தானோ?" என்பார் சிலர்; "இம் மதுரை மாநகரம் செய்த தவந்தான் யாதோ?" என்பார் சிலர்; "இங்கு இவர்களின் திருமணத்தைக் காணுதற்கு நாம் என்ன தவம் செய்தோமோ?" என்பார் சிலர்; "மலயத்துவச பாண்டியன் முன்னுளில் வருந்தித் தவப் பயனைப் பெற்ற தன் மகளின் திருமணத்தைக் காணுதற்குத் தவஞ் செய்திலனே" என்பார் சிலர்; "பிராட்டியாரின் அழகுக்கேற்ற பேரழகுடையவன் இத் தோன்றல்" என்பார் சிலர்; "மதுரை மாநகருக்கு மன்னன் இப் பேரழகனே அல்லாமல் மற்றியாரும் இல்லை" என்பார் சிலர்; "நங்கை தன் நலனுக்கேற்ற நம்பியைத் தேடிப் பெற்றதற்குச் சுமதியின் திறமையே காரணம்" என்பார் சிலர்; "எல்லாம் நங்கை செய்த தவப்பேறே" என்பார் சிலர்; "காஞ்சனமாலை நம் பிராட்டியாரை மகளாகப் பெறுதற்குச் செய்த தவமல்லாமல் இங்கு இந் நம்பியை மருகனைப் பெறுதற்கு என்ன தவத்தை உடையாளோ" என்பார் சிலர்.

---

1. இங்குக் கம்பராமாயணத்திலுள்ள, "நம்பியைக் காண நங்கைக்(கு) ஆயிரம் நயனம் வேண்டும்; கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கும் அன்ன தேயாம்; தம்பியைக் காண்மின் என்பார்; தவமுடைத்(து) உலகம் என்பார்; இம்பரின் நகரிற் றந்த முனிவனை இறைஞ்சும் என்பார்" என்பது முதலான செய்யுட்களின் கருத்துக்கள் ஒப்பு நோக்கற்பாலன.

**மணாளனைக் கண்டு மங்கையர் சோர்ந்து நிலையழிதல்**

மணமகன் கோலத்தில் எழுந்தருளிய சிவபெருமானைக் கண்ட மங்கையர்கள் தம்வசம் இழந்தனர். சிலர் அணிந்திருந்த அழகிய ஆடையை நெகிழச் செய்து, பின் ஒழுங்கு செய்து உடுப்பர். சிலர், பூசிய சாந்தினை உதிர்ப்பர். சிலர் நாணம் மிகுந்தவர்களைப் போலத் தலைகுனிவர். சிலர், முடித்த கூந்தலை அவிழ்த்து வாரிச் சேர்த்துப் பின்னும் முடிப்பர். சிலர், மாந்தளிர் போன்ற தங்கள் உடல்களில் மன்மதனுடைய கணைகள் தைக்க ஆவி சோர்வர். சிலர், 'மெல்லிய மலர்கள் மாரனின் வில்லின் நாணினை அடுத்ததும் கணைகளாக மாறி வந்து தைப்பன; இஃது என்ன அதிசயம்' என்பர். சிலர், கூந்தலில் அணிந்த நீலோற்பல மாலையையும், முல்லை மாலையையும் வெறுத்து நீக்குவர். சிலர், காமனின் கணைகளால் அடிபட்டுக் கலங்கிய மயக்கத்தால் கண்களும் பற்களும் முகங்களும் அவ்வேளின் கணைகளென்று கருதி ஒருவர் முகத்தை ஒருவர் பாராமல் கவிழ்ந்த தலையோடு செல்வர். சிலர், பசிய பொன்போன்ற தங்கள் மேனியில் பற்றிய பசப்பு நிறத்தை அறியாதவராய், "விடையின்மேல் வீற்றிருந்தருளும் சிவபெருமான் நமது உள்ளத்தினும் வந்து பொருந்தப் பெற்றோம்; இஃது என்ன மாயம்! பெண்களே! அச் சிவபெருமானது நீண்ட சடையிலுள்ள கொன்றை மலர் நம்முடம்பில் தோன்றும்; இஃது அன்றோ? பாருங்கள்" என்று பசப்பினைக் குறித்துக் காட்டிக் கூறுவர். சிலர், 'செந்நெருப்பானது சந்திரன் என்ற பெயரோடு தோன்றி நம்மைச் சுடுவது யாது காரணம்' என்பர். சிலர், சிவபெருமானது முடியின்கண்ணும் இது கிடந்ததே என்பர். சிலர், 'அப் பெருமானுக்கு இவ் வெப்பம் இல்லையோ' என ஐயுறுவர். அம்மொழிகளைக் கேட்ட சிலர், 'இல்லை இல்லை; அவ் வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டே அவர் தம் திருமுடியில் கங்கை நீரையும் தாங்கியுள்ளார்; அதனைப் பாருங்கள்' என்பார்.

கொலைத் தொழில் புரியும் வேல்போன்ற கண்களையுடைய மகளிர் சிவபெருமான் பவனிவரும் திருக்கோலத்தைக் கண்டு ஆடையோடு நாணினையும் இழந்து உள்ளத்தோடு நிறமும் வேறுபட்டு, உலையிலிட்ட மெழுகு உருகி ஓடுவதைப்போல உள்

ளம் உருகிக் கண்ணீர் மல்கியவராய்ச் சிவபெருமானின் மெய்யன்பர்களைப்போல நின்றார்கள்; நண்பினர்க்கு வறுமைவந்துற்ற காலத்து அந்நண்பரை விட்டு விலகும் நன்றி கொன்ற மக்களைப்போல அம்மகளிர் கையில் அணிந்திருந்த தொடியும், வளையலும், இடையில் தரித்த மேகலையும் சோர்ந்து விலகின. ஆனால் அவர்கள் கால்களில் அணிந்திருந்த சிலம்புகள்மட்டும் வறுமைக் காலத்தும் விட்டுப் பிரியாத நன்றி மிகுந்த மக்களைப் போல் கால்களில் அணிந்தபடியே கிடந்தன. அப்போது உதிர்ந்த பூக்களையுடைய கொம்பு போன்று அம்மகளிர் காட்சி அளித்தனர்.

**நட்டவர்க்(கு) இடுக்கண் எய்த நன்றிகொன் றவர்போற்** கையில்
வட்டவாய்த் தொடியுஞ் சங்கும் மருங்குசூழ் கலையும் நீங்க
இட்டபொற் சிலம்பிட் டாங்கே **நன்றியின் இகவார் போற்கால்**
ஒட்டியே கிடப்ப நின்றார்; உகுத்தபூங் கொம்பர் அன்னார்.

**தனித்தனியே மகளிர் நிலையழிந்து நிற்றல்**

"சிவபெருமானுடைய புன்னகையாகிய மலர் திரிபுரத்தையும், கண்ணாகிய மலர் மன்மதன் உடலையும் எரித்தன அல்லவா? ஆ! கெட்டேனே! இப் புன்னகையும், பார்வையும் எளியேனது உடலாகிய புரத்தையும் சுடாமல் வீண்போமோ?" என்று கூறினாள் ஒருத்தி. தன் கண்களுக்கு உருவெளியாகிக் காணப்படும் மணவாளக் கோலமுடைய சிவபெருமானைத் தழுவ வேண்டும் என்ற பெரு விருப்பங்கொண்ட பெண்ணொருத்தி, தன் கருத்து நிறைவேறாததைக் கண்டு தன் மெலிந்த இடையைப்போல் உடலும் மெலியப்பெற்றாள். ஒரு பெண், மற்றைய பெண்களைப் பார்த்து, "தையன்மீர்! கொன்றை மாலையை அணிந்த சடையையுடைய சிவபெருமானின் கண்டம் கறுத்திருப்பதற்குக் காரணம் தெரியுமா? முன்னொரு காலத்தில் தேவர்கள் உய்யும்பொருட்டுக் கொடிய விடத்தினை உண்டதால் கறுத்ததே அன்று; அதிலுள்ள கருமை தமது உள்ளம் காரிரும்பே என்பதைக் காட்டும் பொருட்டே அங்ஙனம் கறுத்து விளங்குகிறது" என்றாள்.

ஒருத்தி, "என்னுடைய மனம் தூதாகச் சிவபெருமானிடத்துச் சென்றது; அஃது ஏன் இன்னும் என்பால் மீண்டு வரக் காலம் தாழ்ந்தது?" என்று துயரத்தோடு கூறினள். அதனைக் கேட்ட மற்றொருத்தி, "ஆ! கெட்டேன்! என்னுடைய மனமும் தூதாக அவரிடம் சென்றதே" என்று கூறினள். அதனைக் கேட்ட அப்பெண், "எனக்கு உரியவரிடத்து நீ காதல் வைத்தது என்னே?" எனக் கண்கள் சிவக்கக் கூறினள். மற்றொருத்தியும் அவளோடு கண்கள் சிவக்கப் பூசலிட்டாள். ஒரு பெண் சிவபெருமானைப் பார்த்து, "நீர் எம்பால் திருநோக்கம் வைப்பது எற்றுக்கு? மாரனை எரித்ததுபோல் எம்மையும் சுடுகின்றதே! எரித்த அப்பொழுதே அம் மன்மதனுக்கு உயிரளித்தீர்; அதுபோல் இன்றைக்கு எமது உயிரையும் இப்பொழுதே அளிப்பீரானால் உமக்கு உண்மையாகிய புகழ் ஏற்படும். இன்றேல் **பெண் பழி** உண்டாகும்" என்று கூறினள். பொற்கொடிபோல் விளங்கிய ஒரு நங்கை, சிவபெருமான் தன்னைக் கடைக்கணிக்காது செல்கின்றார் என்று கருதி, அங்கு எதிரே வந்த ஓர் ஓவியனைப் பார்த்து, "இங்குச் செல்லும் குழகனை நீ எழுதித் தர வல்லையேல் உனக்கு வேண்டுவனவற்றை அளிப்பேன்" என்றாள். அவன் அதற்கு, "யாவர் அவனை எழுத வல்லவர்? ஒருவருமில்லை" என்று பதில் கூறினன். அதனைக் கேட்டு அப் பெண் ஆவி சோர்ந்தாள்.

ஒருத்தி, சிவபெருமானின் வலப்பக்கத்திலே வந்த பிரமனையும், இடப்பக்கத்திலே வந்த திருமாலையும், தேவர்கள் கூட்டத்தையும், மக்கள் கூட்டத்தையும் காணாதவளாய் **மெய்யுணர்வுடைய ஞானியர்போல்** பார்த்த பொருள் அனைத்தையும் மான் மழுவேந்திய சிவபெருமானின் திருவுருவமாகவே கண்டாள். சிவபெருமானைத் தாங்கிய இடபமானது காற்றினும் கடிதாக விரைந்து முன்னே செல்ல இறைவனை முன்னே சென்று காணுதற்பொருட்டுப் பின்றொடர்ந்து ஆசைக் கயிறானது கட்டி இழுத்துச்செல்ல ஓடுகின்றவளாகிய ஒரு பெண், கொம்பினின்றும் உதிர்கின்ற மலர்போல இடையினின்றும் நழுவி வீழ்ந்த மேகலையானது தனது காலின்மேல் விழுந்து தடுக்க, விலங்கொடு நடக்கும் ஒரு பெண்ணை ஒத்தாள். பிறைச் சந்திரனை

அணிந்து இடபத்தின்மேல் வருகின்ற பேரின்பமாகிய தேன் கடலை மாதர் அனைவரும் கண்களாகிய வாயால் முகந்து குடித்துக் காமமாகிய வெள்ளத்தில் மூழ்கினர். அதனால், அவர்கள் ஆடைகள் சோர்வதையும், வளையல்கள் கழல்வதையும், பேரறிவு தம்மினின்று நீங்குதலையும் உணராதவர்களாயினர். அழகிய மாளிகைகளின்மேல் நின்று சிவபெருமானைக் காணும் பெண்கள், தங்கள் கைகளைக் குவித்து அவரை நோக்கிய வண்ணமே நின்றனர். அப்போது, அவர்களுடைய மனமும், அவரிடம் குடிபோகச் சொல்லும் செயலும் இறக்க, அவ்விடத்தில் மாட்சிமைப்படச் சுதையால் செய்துவைத்த பாவைகளோடு வடிவு வேறுபாடின்றி நின்றுவிட்டனர்.

திரிபுரத்தையும் மன்மதனையும் சுட்டு எரித்த நெருப்பு இச் சிவபெருமானுடைய திருவுருவமே என்பதைச் சிறிதும் அறியாதவராய் இம் மங்கையர்கள் அவரை விரும்பிப் பார்த்து அணிகளும் உடலும் பொரியப் பெறுகின்றார்கள்; அப் பெருமானின் திருமேனியைத் தழுவுவாராயின் அவர்கள் உயிர் என்ன பாடுபடுமோ?

**சிவபெருமான் அரச மாளிகையை அடைதல்**

கொடிகளினின்றும் மலர்ந்து சிந்திய மலர்களைப் போலப் பூங்கொம்பினை யொத்த மகளிரிடத்து நின்றும் சிந்திய மேகலையும், வளையல்களும், தொடிகளும், சுண்ணப் பொடியும், தேவர்கள் பொழிந்த மலர்களும், நந்தியெம்பெருமான் கையிலுள்ள பிரம்பு தாக்குதலால் சிதறிய தேவர்களின் மகுடங்களினின்றும் உதிர்ந்த இரத்தினங்களும், கற்பகப்பூ மாலைகளும் வீதிகளில் குப்பை குப்பையாய்க் கிடந்தன. அந்தணர்கள் பொற் கலசத்தில் தருப்பைப் புற்களோடு கூடியிருக்கும் நீரில் அரசிலையைத் துழாவித் தோய்த்துத் தெளித்தனர். அந்தணர் மனைவிமார்கள் இந்திர வில்லை வட்டமாக வைத்தாற்போல இரத்தினங்களை வட்டமாக வைத்து இழைக்கப் பெற்ற தட்டினை ஏந்தி முறைப்படி ஆலாத்தி சுற்றினர். மகளிர் கொடி, முரசு, கண்ணாடி, பொற்குடம், மணி, தீபம், அங்குசம், சாமரை என்னும் எட்டு மங்கலப் பொருள்களை ஏந்திவந்து காட்டினர். தேவமகளிர் கற்பூர தீபத்தினை

ஏந்தி இசைக் கருவிகள் முழங்கச் சிவபெருமானை மும்முறை வலம் வந்தனர். அப்போது சிவபெருமான் அவர்கள் யாவருக்கும் கருணைசெய்து அரச மாளிகையின் முன்சென்றருளினார்.

**சிவபெருமான் அரண்மனையில் எழுந்தருளல்**

அந்தணர்கள் மங்கல வாழ்த்துக் கூற, நந்தி யெம்பெருமானின் மலர்க் கரங்களைப் பிடித்துக்கொண்டு சிவபெருமான் இடபவாகனத்தினின்றும் கீழே இறங்கினார்; பிறகு திருமாலும். பிரமனும் இரு பக்கத்தும் வந்து நீட்டிய மலர்க் கரங்களைப் பற்றிக்கொண்டு, வேதங்களாகிய பாதுகைகளின் மேலே சத்திநிபாதம் உற்றவர்க்கு ஆணவாதி மலங்களைப் போக்கிப் பேரின்பத்தையருளும் பொன்போன்ற தம் திருவடிகளைச் சாத்தி, பாம்பின் தோலையொத்த மெல்லிய நடைப் பாவாடையை விரித்து அதன்மீது பரப்பிய காம்பு களைந்த நறு மலர்களின் தொகுதி திருவடிகளை நனைக்கவும், தேவர்கள் பூமாரி திருமுடியினை நனைக்கவும் அரண்மனையினுள்ளே எழுந்தருளினார்.

**காஞ்சனமாலையின் வேண்டுகோள்**

அப்பொழுது மங்கலநாண் அணிந்த பெண்கள் சூழக் காஞ்சனமாலை சிவபெருமானை அடைந்து, கங்கையினின்றும் மொண்டு கொண்டுவந்த பொற் கலசங்களிலுள்ள நீரை அப் பெண்கள் வார்க்கத் தான் சிவபரஞ்சுடரின் திருவடித் தாமரைகளை விளக்கி,அத்தீர்த்தத்தைத் தன்சிரசிலே தெளித்து உள்ளும் பருகினாள்; பின்பு திருவடிகளில் ஈரம் புலரும்படி வெண் பட்டாடையினாலே துடைத்துக் குளிர்ந்த பனிநீரால் திருமஞ்சனம் செய்து, கத்தூரிகலந்த சந்தனக் குழம்பை அணிந்து மந்தார மலர்களைச் சாத்தி ஒருபக்கம் ஒதுங்கி நின்று சிரசின்மேல் இருகைகளையும் குவித்து, 'அடியேன் அரிய தவத்தால் பெற்ற தடாதகைப் பிராட்டியைத் திருமணம் செய்து இந்நகரின் செல்வத்தையும் கன்னி நாடாகிய பாண்டி நாட்டையும் கைக்கொண்டு அரசாளுவீராக" என்று விண்ணப்பஞ் செய்தாள். சிவபெருமான் அதற்குத் திருவுளம் இசைந்து புன்னகைகொண்டு இசைக்கருவிகள் முழங்கத் திருக்கல்யாண மண்டபத்தை அடைந்தருளினார்.

"அருமையால் அடியேன் பெற்ற
அணங்கினை வதுவை செய்(து)இத்
திருநகர்த் திருவுங் கன்னித்
தேயமுங் கைக்கொண்(டு) ஆள்"கென்(று)
உரைசெய்தாள் அதற்கு நேர்வார்
உள்நகை யுடைய ராகி
மருகனார் இயங்கள் ஆர்ப்ப
வதுவைமண் டபத்தைச் சேர்ந்தார்.

**சிவபிரானாகிய மருகனார் மணமண்டபத்தில் வீற்றிருத்தல்**

அங்குச் சிவபெருமான் நான்மறைகளும் முழங்க, சிங்காதனத்திலேறி வீற்றிருந்தருளினார்; பின்னர், தம்மைச் சூழ்ந்து நின்ற திருமால், நான்முகன், மற்றைய உருத்திரர் முதலானவரையும், தேவர்களையும், முனிவர்களையும், பிறரையும் அவரவர்க்கு அமைந்த அழகிய ஆதனங்களில் அமரும் வண்ணம் திருக்கடைக்கண் சாத்தியருளினார், விண்ணுலகத்தவராகிய தேவர்களும், ஏனைய உலகத்தவர்களும் திருமணமண்டபத்தில் கூடி நெருங்கி இருந்தனர். அப்போது நிலமகள், [1]முன்போல ஒருபுறம் சாயாது இன்று சமநிலையில் நின்றே யாவரையும் தாங்கினள்; எழுகடலையும் உண்ட அகத்திய முனிவரை இப்போது சிவபெருமான் வடதிசையிலிருக்கச் செய்தாரோ? அல்லது சிவபெருமானின் ஆணை வலிமையினாலோ பூமி சமமாக நிற்கின்றது? இந்நிலையை நாம் அறியோம். திருமணத்திற்குரிய நல்ல முகூர்த்தம் வருமளவும் எம்பெருமான் மாமணித் தவிசில் வீற்றிருந்து அரம்பையர் புரியும் ஆடலை நோக்கி அருள் செய்திருந்தருளினார்.

**தடாதகைப் பிராட்டியார் திருமணக்கோலம் கொள்ளல்**

அப்போது மகளிர், பாசமாகிய குற்றத்தைப் போக்கி எம்மைப் பேரின்ப வெள்ள நீரில் மூழ்குவித்துப் பண்டைய ஒளியுருவை விளக்கவல்ல சிவசத்தியாகிய தடாதகைப் பிராட்டியாரை ஒரு பொற்றவிசில் எழுந்தருளச்செய்து,

---

1. முன்போல - இது பார்வதி தேவியாரது திருமணத்தின் நிகழ்ச்சியினைக் குறிப்பது.

கத்தூரி அணிந்து குங்குமக் குழம்பைப்பூசி, நறுமணங் கமழும் நன்னீர்கொண்டு முரசங்களும் சங்கங்களும் ஒலிக்கத் திருமஞ் சனஞ் செய்வித்தனர். அம்மையார் மெல்லிய ஆடை உடுத்து அரச தருமத்துக்கு ஏற்ப அந்தணர்களுக்குத் தம் தளிர்க் கரங்களினால் அவர்கள் வேண்டும் பொருளை வெறுக்குமாறு நிறையத் தானம் வழங்கினர்; பிறகு திருமணக் கோலம் கொள்ளத் தொடங்கினர்.

திருமகளும் கலைமகளும் தங்கள் மலர்க்கை செய்த தவப்பய னைக் காட்டுகின்றவர்போலப் பிராட்டியாரின் அழகிய அனிச்ச மலரை மிதிக்க அஞ்சுகின்ற மென்மை வாய்ந்த திருவடிகளில் செம்பஞ்சுக் குழம்பைத் தீட்டினர்; கூந்தலில் மணம் நிறைந்த மயிர்ச்சாந்தினைப் பூசினர்; மார்பிலே பனிநீர் கலந்த சந்த னத்தை அப்பினர்; தாமரை மலரின்மேல் இருந்து அன்னங்கள் ஒலிக்கும் தன்மைபோலத் திருவடிகளில் சிலம்பையும், கிண்கிணி யையும் அணிந்தனர்; முப்பத்திரண்டு வடங்கொண்ட **விரிசிகை** யையும், இருபத்தொரு வடங் கொண்ட **கலாபத்**தையும், பதினான்கு வடங்கொண்ட **பருமத்**தையும், எட்டு வடங்கொண்ட **மேகலை**யையும், இரண்டு வடங்கொண்ட **காஞ்சி**யையும் ஒரு புண்ணியக் கொடி வண்டுகள் ஒலிக்கப் பூத்திருத்தல்போல ஒலிக்கும்படி இடையிலே பூட்டினர்; பொன் வண்டுகளும் கருவண்டுகளும் தங்கிய காந்தள் மலர்போன்ற மெல்லிய விரல் களில் நீல மணி பதித்த பொன் மோதிரத்தை அணிந்தனர்; வைரத்தால் செய்த கடகங்களைக் கைகளிலும் தொடிகளைத் தோள்களிலும் அணிந்தனர்; மார்பிலே மரகத மாலையும், பொன் மாலையும், பவளமாலையும் வரிசைப்பட்ட இந்திர வில் ஒளி வீசு வதுபோலவும், முத்துமாலை மலையினின்று விழும் அருவியைப் போலவும், தரித்தனர்; பிராட்டியாரின் திருச்செவிகளில் இரகசியம் பேசுந் தன்மைபோலக் குழைகளை மகரகுண்டலங் களோடு அணிந்தனர்; இலம்பகமென்னும் நெற்றிச்சூட்டாகிய மாலையை மேகத்திற்கும் சந்திரனுக்கும் நடுவில் இந்திரவில் கிடந்தாற்போல நெற்றியில் அணிந்தனர்; முகிலைத் தன் புதல்வனாகிய உக்கிர குமார பாண்டியன் பின்னர்த் தளையிடுதலை முன்கூட்டிக் காட்டுதலைப்போலக் கூந்தலின்மேல் மலர் மாலை

யைச் சூட்டினர் ; கற்பகத்தரு அளித்த இந்தஅழகிய அணிகலன்களை யெல்லாம் பிராட்டியார் திருமேனியில் அணிந்து சிவபெருமானுக்கு அளவில்லாத வியப்பும் மகிழ்வும் உண்டாக அழகு செய்து வணங்கிக் கண்குளிரக் கண்டனர்.

*அண்ணலும் - அம்மையும்*

பிறகு திருமணத்திற்குரிய நல்ல முகூர்த்தம்வர, கலைமகளும் திருமகளும் சுந்தரவல்லியாகிய தடாதகைப் பிராட்டியாருக்கு 'மங்கலம்' என்று வாழ்த்துப் பாடி இருபக்கமும் வந்து தங்களுடைய கைகளை நீட்ட அவற்றைப் பிராட்டியாரும் முப்பத்திரண்டு அறங்களும் குடிகொண்டுள்ள தம் திருக்கரங்களால் பற்றிக்கொண்டு வேதங்கள் ஒலிக்க எழுந்தருளினர். அப்போது திருமண முரசங்கள் ஒலித்தன ; சங்குகள் முழங்கின ; வானவர் மலர்மாரி பொழிந்தனர் ; பெண்கள் சாமரைகள் வீசி மங்கல வாழ்த்துக்கூறினர். இந்திராணி பொன்னாலாகிய அடைப்பையை ஏந்தினாள் ; திலோத்தமை கண்ணாடியை ஏந்திப் பிடித்தனள் ; துர்க்கை பொற்பிரம்புகொண்டு சூழ்ந்த நெருக்கினை விலக்கி நடந்தாள் ; அரம்பை காளாஞ்சியை ஏந்தினள் ; [1] ஊர்வசி ஆலவட்டம்அசைத்தனள் ; மேனகை மணிகள் பதித்த பூந் தட்டினை ஏந்தினள். பல மகளிர் கொடிபோல மலர்களுடன் பனி நீரைச் சிந்தினர்; சிலர், மணங்கமழும் பொன்னிறப் பொடியினைத் தூவினர் ; சிலர், தீபத்தையும் தூபத்தையும் தாங்கி நின்றனர் ; சிலர், மங்கல வாழ்த்துப் பாடினர்; சிலர், பனிநீருடன் சந்தனத்தையும் மெல்லிய மலரையும் இட்ட நடைப்பாவாடையின்மீது பிராட்டியார், பாடகமணிந்த மெல்லிய திருவடிகளை மெல்லென வைத்து நடந்துவந்தார். " திருமகளையும், கலைமகளையும் அம்மையாரின் கைகளாகிய மலர்கள் பற்றிக் கொண்டன ; ஆதலின், செல்வப் பொருளையும், கல்விப் பொருளையும் இம்மையில் ஒரு சேரப் பெற விரும்புவோருக்கு இதுவே சமயம் " என்று கூறுவதுபோல் மணிகள் பதித்த நூபுரங்கள் ஒலித்தன. இவ்வாறு அம்மையார் அசைந்து மெல்ல ஒதுங்கித் தம்மேல் அன்பு நிறைந்திருந்த சிவபெருமான் பக்கலிற்சென்று அமர்ந்தருளினர்.

1. ஊர்வசி - இவள் பிரமனது ஊருவில் தோன்றியவள் (ஊரு-தொடை).

ஒளிவீசும் செம்பொன்னாலாகிய மணிகள் பதித்த தவிசின் மேல் சிவபெருமானோடு தடாதகைப் பிராட்டியார் வீற்றிருந்த காட்சி, மேரு மலையின் உச்சியில் கற்பகத் தருவின் பக்கத்திலே மலர்ந்த அழகிய கொடியினை ஒத்திருந்தது. அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் வெவ்வேறு வடிவங்கொண்டிருந்தது **பண்ணும் இனிய இசையும், நீரும் தட்பமும், பாலும் இனிய சுவையும், மலரும் மணமும், மணியும் ஒளியும்** வேறு வேறு வடிவுகொண்டு ஓரிடத்திலிருந்த தன்மையினைப்போன்றது.

பண்ணுமின் னிசையும் நீருந் தண்மையும் பாலும் பாலில்
நண்ணுமின் சுவையும் பூவும் நாற்றமும் மணியும் அங்கேழ்
வண்ணமும் வேறு வேறு வடிவுகொண் டிருந்தால் ஒத்த(து);
அண்ணலும் உலகம் ஈன்ற அம்மையும் இருந்த(து) அம்மா.

**திருமணச் சடங்குகள்**

வானுலகத்திலுள்ளவர்களும், எட்டுத் திசையிலுள்ளவர்களும், ஏனைய இடங்களிலுள்ளவர்களும், பாதலத்திலுள்ளவர்களும், நிலவுலகத்திலுள்ளவர்களும், மற்றையோரும் திருமண மண்டபத்தின்கண் வந்து தம்முட் பேதமின்றி ஒருசேர அடங்கியிருந்தனர். அவர்கள் எப்பொழுதும் [1] பண்ணின்கண் நிறைந்த இசைபோலப் பரவி, எங்கும் நிறைந்து நிற்கும் இறைவன் திருவடி நிழலில் கலந்துள்ளவரை ஒத்தார்கள்.

விண்ணுளார் திசையின் உள்ளார்
　　வேறுளார் பிலத்தின் உள்ளார்
மண்ணுளார் பிறரும் வேள்வி
　　மண்டபத்(து) அடங்கி என்றும்
**பண்ணுளார் ஓசை போலப்**
　　**பரந்தெங்கும் நிறைந்த மூன்று**
**கண்ணுளார் அடியின் நீழல்**
　　**கலந்துளார் தம்மை ஒத்தார்.**

---

1. இதனை, "பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும், எண்ணுஞ் சுவையும்போல் எங்குமாம்—அண்ணல்தாள், அத்துவிதம் ஆதல் அருமறைகள் ஒன்றென்ன(து), அத்துவிதம் என்றறையும் ஆங்கு" எனவரும் சிவஞானபோதத்துத் திருவெண்பாவாலும் அறியலாம்.

அப்பொழுது திருமால் பொற்கலசத்திலுள்ள நீரினல் சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளை விளக்கினர்; மணங் கமழும் சந்தனத்தைச் சாத்தி, மலரைத் தூவினர்; தூப தீபங்களை முறைப்படி காட்டி அன்போடு அருச்சனை செய்து சிவபெருமானுடைய திருவருளைப்பெற்று நின்ருர். இறைவனது திருவடியை விளக்கிய தீர்த்தத்தைத் திருமால் நான்முகன், முனிவர்கள், இந்திரன் முதலிய தேவர்கள், திருநந்தி தேவர், சிவகணத்தவர்கள், மற்றை அடியார்கள் முதலான எல்லோரும் தங்கள் தங்கள் சிரசிலே தெளித்து உட் கொண்டு தூய்மை பெற்றனர். பிறகு அங்குநின்ற திருமால் தாமரைமலரில் ஒரு காந்தள் மலர் மலர்ந்ததைப்போலச் சிவபெருமானுடைய சிவந்த திருக்கரத்திலே தடாதகைப் பிராட்டியாரின் திருக்கரத்தை வைத்து வேத மந்திரஞ் சொல்லித் தாரா தத்தஞ் செய்தார். அப்போது தேவர்கள் பூமாரி பெய்தனர்; அரம்பையர் ஆடினர்; விஞ்சையர் அமுதம் போன்ற கீதம் பாடினர்; முனிவர்கள் **அரஅர** வென்று தோத்திரஞ் செய்தனர். தேவர்கள் உரோமஞ் சிலிர்ப்பப் பரவசமாயினர்; சிவகணத்தவர் செங்கை கூப்பி அஞ்சலி செய்தனர். இவ்வாறு அங்குள்ளார் யாவரும் திருமண இன்ப மாகிய கடலில் மூழ்கினர். **சாக்கிய நாயனர்** எறிந்த கல்லையும் மலரைப்போலச் சூடியருளிய சிவபெருமானுடைய திரு வடியின்கீழ் வீழுமாறு தேவர்களும், முனிவர்களும், மற்றை யரும் ஆசிகூறிக் குங்கும நீரில் கலந்த முத்துப்போன்ற அரிசியை வீசி இன்பவெள்ளத்தில் அழுந்தினர்.

"அம்மையும் அப்பனுமாக மலரும் மணமும் போலப் பிரியாதவராகிய பெருமானும் பிராட்டியும் தமது அருள் விளை யாட்டினுல் நீண்டநாள் பிரிந்தவர்போல நம்போன்றவர் காணும் வண்ணம் தோன்றித் திருமணம் செய்தருளினர்; அதனுல், மூன்றுலகங்களும் ஈடேறின" என்று யாவரும் தங்கள் தங்களுக்குள் கூறி மகிழ்ந்தனர். பிறகு, காமதேனு வின் இனிய பால், வாழைக்கனி, நெய், சருக்கரை கலந்த சுவையுடைய மது பருக்கத்தைச் செம்பொன்னுலான மணிகள் பதித்த வட்டமான தட்டிலே திருமுன்பு வைத்துத் திருக்கை

தொட்டருளுமாறு சிவபெருமானை வேண்டினர். சிவபெருமான் திருக்கரத்தால் அவற்றைத் தொட்டருளி அமுது செய்தருளி னாற்போலத் திருவுளம் மகிழ்ந்து புன்னகை செய்தருளினார். முனிபுங்கவர்களின் மனைவியர்களும், திருமகளும், கலைமகளும் சேர்ந்து மங்கலம் பாடினர்.

**மங்கல நாண் சூட்டல்**

நான்முகன் தன்னுடைய புதல்வர்களோடு ஒருங்கே இருந்து, சுருக்கு சுருவங்களால் நறுமணங்கமழும் நெய்யை நிரப்பித் தீயினில் வார்த்தனன். செந்தீயும் தன் ஏழு நாக்கு களில் நடுநாவால் சுவையறிய நிரம்ப நெய்யை உண்டு வலஞ் சுழித்து, ஒலி மிகுத்து மேலெழுந் தோங்கியது. நான்கு புறத் திலும் நான்கு வேதங்களும் நின்று முழங்கின; சங்கங்கள் ஆர்த் தன; முரசங்கள் ஒலித்தன. [1] **பிரமதேவன்** திருமணச் சடங்குகளை வேத சிவாகம முறைப்படி குறைவின்றிச் செய்து முடிக்க இருவகைப் பற்றும் அற்றவர்க்கே வீடுபேற்றை அருளும் [2] பரம யோகியாகிய சிவபெருமான் தடாதகைப் பிராட்டியாருக்குத் **திருமங்கல நாணைப்**பூட்டித் திருக்கரம் பற்றியருளினார். தீக்கடவு ளும் தானே, அத்தீயை வளர்ப்பனும் தானே, அத் தீ முகமாக அவியைக் கொள்ளுபவனும் தானே ஆகிய [3] சிவபெருமான் ஒருவனே, உயிர்கள் போகத்தில் மூழ்கும் வண்ணம் ஆணும் பெண்ணுமாகித் திருமணச் செயலை முடித்தருளினார் என்றால் அவருடைய செயலை அளந்தறிய வல்லவர் யாவர்? ஒருவரும் இல்லை.

---

1. இங்கு முருகக்கடவுளே மணச்சடங்கினை நடத்தி வைத்தார் என்றும், திருமணம் பங்குனி உத்திரத்தில் நிகழ்ந்தது என்றும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறுகிறது. இத னால் முருகக்கடவுளுக்குச் "சடங்குக் கந்தன்" என்ற திருநாமமும் வழங்க லாயிற்று என்பர்; சடங்குக் கந்தர் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளிய ஸ்ரீ கல்யாண சுப்பிரமணியக் கடவுள் என்று கூறுகின்றனர்.

2. இங்கு, "யோகியாய் யோகமுத்தி உதவுதல் அதுவும் ஓரார்" எனவரும் சிவஞான சித்தியார் அடி கருதற்பாலது.

3. இங்கு, "போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்" எனவரும் சிவஞான சித்தியார் அடி சிந்திக்கற்பாலது.

**திருமண அறையில் புகுதல்**

பின்பு, பிறைமுடிப் பெருமான் தம்முடைய தேவியாரோடும் திருக்கரத்திலே நெற்பொரியை வாங்கிச் செந்தீயின் நாவில் ஓமஞ் செய்து, வேதங்களையுணர்ந்த முனிவர்களுக்குத் தக்க தானங்களை மகிழ்ச்சி மீக்கூரக் கொடுத்துத் தீயினை முறைப்படி வலம் வந்து அம்மையாரது திருவடித் தாமரை மலரைத் திருக்கையால் பற்றி, மந்திரத்தோடு அம்மியின்மேல் தூக்கிவைத்துப் 'புண்ணிய வடிவாகிய **வசிட்டன் மனைவி அருந்ததி** எங்கே' என்ன, அவ்வருந்ததி கைகளைக் கூப்பி எதிரே வர, அவள்மீது அருட்பார்வையை வைத்தருளினார். அதன் பின்பு, விதிமுறை சிறிதும் தவறாது திருமணச் சடங்குகளெல்லாம் நிறைவேற்றிக்கொண்டு உலகம் உய்யும் வண்ணம் மறைகள் முழங்க, மகளிர் வாழ்த்துக் கூறக் காமனைக் காய்ந்த கடவுள் தடாதகைப் பிராட்டியாரோடும் திருமண அறையில் புகுந்தருளினார்.[1]

மக்களும் கண்கள் இமையாமல் சோமசுந்தரக் கடவுளின் திருமணக் கோலத்தினைப் பார்த்துத் தூய தேவர்களை ஒத்தனர். இங்ஙனம் கூறுவது மனிதர்களுக்கு ஒரு புகழாமோ? எம்பெருமானாகிய இறைவனின் முதிர்ந்த அருட்பார்வையைப் பெற்ற மக்கள் தேவர்களால் வழிபட்டு ஏத்தும் தன்மை பெற்றவர் அன்றோ? திருமணப் பொலிவைக் கண்டு மக்கள் யாவரும் பிறவித் துன்பம் நீங்கி, மனிதர்கள் தேவர்கள் என்ற வேற்றுமை கடந்து கலந்து நின்றனர். சிவபெருமானுடைய திருவருட் பார்வையால் பிறவித் துன்பம் நீங்கும் காலத்து உயர்ந்தவரென்றும் தாழ்ந்தவரென்றும் வேறுபாட்டிற்கு இடமுண்டோ! இல்லை.

சோமசுந்தரக் கடவுள் திருமணவறையிலிருந்து நீங்கி, திருமண மண்டபத்தை அடைந்து, மணிகள் இழைத்த அரி

---

1. இங்கே, "கண்ணுதல் யோகிருப்பக் காமன்நின் றிடவேட் கைக்கு, விண்ணுறு தேவ ராதி மெலிந்தமை ஓரார் மால்தான். எண்ணிவேள் மதனை ஏவ எரிவிழித்(து)இமவான் பெற்ற, பெண்ணினைப் புணர்ந்(து)உயிர்க்குப் பேரின்பம் அளித்த(து) ஓரார்" எனவரும் சிவஞான சித்தியார் செய்யுள் நினைக்கற்பாலது.

யணையில் அமர்ந்தருளினர். பிறகு திருமாலுக்கும், நான்முகனுக்கும், தேவர்களுக்கும், சிவகணங்களுக்கும் எப்பொழுதும் நீங்காத அருட்செல்வத்தை அருளிய சிவபெருமான் முறைப்படி அனைவருக்கும் வரிசைகளை வழங்கியருளி அருள் விடை கொடுத்து அனுப்பியருளினர்.

**சிவபெருமான் அரசியல் நடாத்திக் காட்டுதல்**

அதன்பின்பு சிவபெருமான், '**ஆட்டுவிப்பான் ஒருவன், தான் முன்னர் ஆடிக்காட்டுந் தன்மையைப் போல்**' அரசர்களுக்குத் தாம் அரசு நடாத்திக் காட்டத் திருவுளங்கொண்டருளினர்; அப்போது, இடபக் கொடி மீன் கொடி ஆகியது; அணிந்திருந்த பாம்பணிகள் பொன்னணிகளாக மாறின; கொன்றை மலர்மாலை வேப்பம்பூ மாலையாக அழகு செய்தது; புலித்தோல் ஆடை மறைந்து பீதாம்பரமாக ஒளி வீசியது; சந்திரனை அணிந்த சடாமுடி வயிர முடியாகியது; மதுரையில் வீற்றிருக்கும் **சோமசுந்தரக்கடவுள் பாண்டியனாய்த்** திருக்கோலங்கொண்டு வீற்றிருந்தருளினர்.[1] சூலப் படையை ஏந்திய **சங்குகன்னன்** முதலான சிவகணத்தவர்களும் முன்னை வடிவு நீங்கி அரசர் பணி செய்தற்கேற்ற மானுட வடிவுகொண்டு அரச ஏவலில் நின்றார்கள்.

உலகத்தைக் காக்கும் அரசர்கள் சிவபெருமானைப் பூசித்தல் வேதநெறி என்று தாம் திருவாய்மலர்ந்தருளியதை அரசர் அனைவரும் துணிந்து மேற்கொள்ளுதற் பொருட்டுப் பாண்டியர் திருக்கோலம் தாங்கிய பரம்பொருள், மதுரை

1. இங்கு, "கடுக்கை மலர்மாற்றி வேப்பலர் சூடி, ஐவாய்க் காப்புவிட்டு அணிபூண் அணிந்து, விரிசடை மறைத்து மணிமுடி கவித்து, விடைக்கொடி நிறுத்திக் கயற்கொடி எடுத்து, வழுதி யாகி முழுதுல களிக்கும், பேரருளாளன்" எனவும், 'மதுரை மாநகர்ப் பூழியனாகிக், கதிர்முடி கவித்த இறைவன்' எனவும் வரும் கல்லாட அடிகளாலும் உணரலாம். இக்கருத்தினை உட்கொண்டே மாணிக்கவாசகர், 'தென்னாடுடைய சிவனே போற்றி' (போற்றி அகவல்) எனவும், 'தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானை' (திருவம்மானை) எனவும், 'என்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்' (திருப்பூவல்லி) எனவும், 'பாண்டி நன் னாடரால் அன்னேயெனும்' (அன்னைப்பத்து) எனவும் தம் திருவாசகத்தில் கூறியதுமாகும்.

நகரில் [1] **நடுவூர்** என்னும் திருநகரமொன்றை மேன்மைப்பட ஆக்கினர். அதிலே சிவாகமத்தில் கூறிய சிற்ப முறைப்படி திருக்கோயிலெடுத்து அருள் வடிவாகிய சிவலிங்கத்தை நிலைபெறுத்தி [2] "**இம்மையே நன்மை நல்கும் இறை**" எனத் திருப்பெயர் இட்டு முறைப்படி பூசைபுரிந்து[3] கடம்பவனத்தில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை மூன்று காலங்களிலும் வணங்கி உலகமுற்றும் தமது செங்கோலை நடாத்தியருளினர். திருமால், பிரமன் முதலிய தேவர்களும், முனிவர்களும், மற்றைய அனைவரும் தம்மையே பூசித்து இம்மை மறுமைப் பயன்களை அடையுமாறு அருள்புரிந்துநின்ற முழு முதற் கடவுளாகிய சிவபெருமானே பூசித்த இந்தச் சிவலிங்கத்தின் பெருமையை அளந்து கூறவல்லவர் யாவர்? ஒருவரும் இல்லை.

பாண்டியர் கோலம் பூண்ட எம்பெருமான் மக்களுக்கு அரசனாகியும், பகையரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கமாகியும், மகளிருக்கு மன்மதனாகியும், நிலமகளுக்குத் திருமாலாகியும் இம்மை மறுமை இன்பங்களை வெறுத்து மனந்தெளிந்த மெய்ஞ் ஞானியர்களுக்கு முழுமுதலாகியும் ஒப்பற்ற சச்சிதானந்தப் பொருளாகியும் நின்றருளினர்.

செய்யுள் — 199

ஆகச் செய்யுள் — 798

---

1. நடுவூர் - இது மதுரை மேலைமாசி வீதிக்கு மேற்கே உள்ளது; சுந்தரமாறன் பூசித்த தலம். இதனைத்தான் இம்மையே நன்மை தருவார் கோயில் உள்ள இடம் என வழங்குவர். இக்கோயிலைச் சுந்தர பாண்டியன் கி. பி. 1218-ல் கட்டினன் எனத் திருவாலவாயுடையார் கோவில் திருப்பணி மாலை கூறும்.

2. இம்மையே நன்மை நல்கும் இறை—இகாபீஷ்டப் பிரதாயகர்; இங்கு அம்பிகைக்கு மத்தியபுர நாயகி, நடுவூர் நாயகி எனத் திருநாமங்கள் வழங்கும்.

3. இங்கு, "முலைமூன்று அணைந்த சிலைநுதல் திருவினை, அருமறை விதிக்கத் திருமணம் புணர்ந்து, மதிக்குலம் வாய்த்த மன்னவ னாகி, மேதினி புரக்கும் விதியுடை நன்னாள், நடுவூர் நகர்செய்து அடுபவம் துடைக்கும், அருட்குறி நிறுவி அருச்சனை செய்த, தேவர் நாயகன் கூடல் வாழிறை" எனவரும் கல்லாட அடிகளாலும் அறியலாம்.

## 6. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

**சுந்தர பாண்டியர் யாவரையும் அமுதுண்ண அழைத்தல்**

பரஞ்சோதியாகிய சிவபெருமான், உலகம் நடத்தற் கேது வாகிய அறம் பொருள் இன்பங்களை நிலை நிறுத்தற்பொருட்டுச் **சுந்தர பாண்டியனாய்** வந்து, சந்திரன் மரபுக்கு மாணிக்க விளக்கும், புண்ணியப்பூங்கொடியுமாகிய தடாதகைப் பிராட்டி யாரைத் திருமணஞ் செய்த பின்பு, திருமணத்திற்கு வந்திருந்த அரசர்களையும், தேவர்களையும், முனிவர்களையும், ஏனையோர் களையும் நோக்கி, "அமுதுஉண்ண வாருங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவர்கள் விரைந்து சென்று பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடித் தங்கள் தங்கள் நியமங்களை விதிமுறை தவறாமல் முடித்து வந்தனர்.

**பதஞ்சலியும் வியாக்கிரபாதரும் இறைவனை வேண்டுதல்**

அப்போது [1]**பதஞ்சலி முனிவரும்,** [2]**வியாக்கிரபாத முனிவரும்** எம்பெருமானை வீழ்ந்து வணங்கி நின்று, "பரம கருணா நிதியே! பொன்னம்பலத்திலே ஆடியருளும் தேவரீரது திரு நடனத்தைத் தரிசித்த பின்னரே உண்பது அடியேங்களுக்கு நியமம்" என்று கூறினர்.

**இறைவராகிய சுந்தரபாண்டியர் முனிவர்களுக்குக் கூறல்**

உடனே சிவபெருமான் அவர்களை நோக்கி, "அந் நடனத் தினை இம் மதுரைப் பதியிலே யாம் செய்து காட்டுவோம்;

---

1. பதஞ்சலி - இவர் அத்திரி முனிவரின் மனைவியாகிய அனசூயை யிடம் தோன்றியவர். பாம்புக் காலை உடையவர்; ஆதிசேடனின் அவ தாரம். இவர் மகாபாஷியம் இயற்றிய பதஞ்சலி. யோகசூத்திரம் இயற்றிய பதஞ்சலி இவர்களின் வேறானவர். இவரைத் திருமூலர் "மன்றுதொழு பதஞ்சலி" என்பர்.

2. வியாக்கிரபாதர் - இவர் மத்தியந்த முனிவரின் புதல்வர்; மழ முனிவர் என்னும் பெயருடையவர்; தில்லைப்பதியை அடைந்து சிவ பெருமானை வணங்கி, அருச்சித்தற்கு விடியுமுன் மரங்களில் ஏறி நல்ல மலர்களைக் கொய்யும்பொருட்டுப் புலிக் காலும் கையும் பெற்று, நகக் கண்களைக் கண்களாகவும் கொண்டுள்ளவர். சிதம்பரத்தில் இறைவனது ஆனந்தத் தாண்டவத்தைத் தரிசித்துக்கொண்டிருப்பவர். (வியாக்கிரம் -புலி; பாதர் - காலையுடையவர்.)

உலகமனைத்தும் வடிவமாகியவிராட் புருடனுக்குத் தில்லைப்பதி இதயமாகும்; இம் மதுரைப்பதி **துவாத சாந்தத் தானம்** ஆகும்'' என்று அருளிச் செய்தார். முனிவர்கள் இருவரும், "அரசே! மற்றைய உறுப்புக்கள் யாவை?'' என்று வினவினர். அதற்கு இறைவராகிய சுந்தர பாண்டியர் அவர்களை நோக்கி, "விராட் புருடனுக்குப் பிரமாண்டம் சரீரம்; மேலே மூலகமும் இடைக்கு மேற்பட்டனவாகிய மூலாதரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆஞ்ஞை, பிரமரந்திரம் என்பன என்றும், கீழேழுலகம் இடைக்குக் கீழ்ப்பட்டன வாகிய தொடை மூலம், தொடை நடு, முழந்தாள், கணைக்கால், பரடு, புறவடி, காற்பெருவிரல் என்பன என்றும் நூல்கள் கூறும்; மூலாதாரமாகிய இந் நிலவுலகத்தில் அளவில்லாத தெய்வத் தன்மை பொருந்திய தானங்கள் உள; அவை முழுதும் எடுத்துக் கூறின் ஓரளவுக்கு உட்படா. ஆதலின், சில தானங்களை மட்டும் வகுத்து நாம் கூறுவோம்; **திருவாரூர்** மூலாதாரத் தானம் (குதத்திற்கும் லிங்கத்திற்கும் நடுவிடம்) ஆகும்; **திருவானைக்கா** சுவாதிட்டானத் தானம் (குய்யம் - மறைவிடம்) ஆகும்; **திருவண்ணாமலை** மணிபூரகத் தானம் (நாபி) ஆகும்; தில்லைப்பதி அநாகதத்தானம் (இதயம்) ஆகும்; **திருக்காளத்தி** விசுத்தித் தானம் (கண்டம்) ஆகும்; **காசித்தலம்** ஆஞ்ஞைத் தானம் (புருவ மத்தியம்) ஆகும்; **திருக் கயிலாயம்** பிரமரந்திரத்தானம் (பிரமநாடி - சுழுமுனையின் உச்சியாகிய இடம்) ஆகும்; இம் **மதுரைப்பதி துவாத சாந்தத் தானம்** (உச்சிக்கு மேற் பன்னிரண்டு அங்குல அளவில் உள்ள பாகம்) ஆகும். இஃது எந்த வகையில் மேலாகியது எனின், முன்னர்த் தோன்றிய முறையால் ஆகும்'' என்று அருளிச்செய்து முனிவர்களோடு திருக்கோயிலினுட் புகுந்தருளினர்.

திருவளர் ஆரூர் மூலம்; திருவானைக் காவே குய்யம்;
மருவளர் பொழில்சூழ் அண்ணா மலைமணி பூரம்; நீவிர்
இருவரும் கண்ட மன்றம் இதயமாம்; திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும்; புருவமத் தியமாங் காசி.

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம்; வேதம்
அறைதரு துவாத சாந்தம் மதுரை ;ஈ(து) அதிகம் எந்த
முறையினுல் என்னின் **முன்னர்த்தோன்றிய முறையால்**என்(று) அக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான்.

**வெள்ளியம்பலத் தோற்றம்**

'தன்னை விடுத்துவந்த சிவபெருமானையே தேடிவந்தமர்ந்த திருக்கயிலைமலை தானோ? அல்லது வெள்ளிய இடப வூர்தியோ? சந்திரமண்டலமோ? தம்வடிவம் மாறி இம் மன்றமாய் நின்றது' என்றுகூறுமாறு பொன்னொளி வீசிநிற்கும் இந்திரவிமானத்தின் கீழ்ப்பக்கத்தில் [1] **வெள்ளியம்பலம்** ஒன்று தோன்றியது; அதனிடத்தே திருப்பாற்கடலின்கண் சூரிய தேவன் தோன்றினாற் போல, ஒரு மாணிக்கப் பீடமும் தோன்றியது. அஃது அடியார்களின் உள்ளத் தாமரையே ஆகும்; அல்லது மறைமுடி என்று சொல்லப்படுவதாகும்; வேறு உவமை ஒன்றும்கூற ஒவ்வாதது.

**திருநடனம் புரிதல்**

அம் மணிப் பீடிகையின்மேல், ஆயிரங் கதிர்களையுடைய கோடி சூரியர் ஒரே காலத்தில் நிலைபெற்று உதித்தாற் போல் மனம், மொழி, பக்கம், கீழ், மேல், முன், பின் என்ற இவற்றைக் கடந்த மெய்ஞ்ஞானப் பேரொளி வடிவமாகச் சிவபெருமான் தோன்றிச் சிவகணங்கள் மொந்தை தண்ணுமைகளை முழக்கவும், திருநந்திதேவர் மத்தளம் அடிக்கவும், திருமால் இடக்கை என்னும் இசைக்கருவியை முழக்கவும், தும்புரு நாரதர் இருவரும் இசை பாடவும், பஞ்ச துந்துபிகள் கடல் ஒலிபோல் ஒலிக்கவும், கலைமகள் சுருதி கூட்டவும், நான்முகன் யாழினைத்தடவிச் சாமகீதம் பாடவும், தேவர்கள் பூ மழையை எங்கும் பொழியவும், கடல்நிறம்போன்ற உடல்நிறத்தையும் செந்தீப் போன்ற புறமயிரையும் உடைய முயலகன் மேல் வடவைத் தீப்போல் அவனுடைய சிவந்த கண்கள் பிதுங்கவும், கோபங் கொள்ளவும், முதுகு முறியவும், வலது திருவடியை

1. இஃதன்றித் திருக்கோயிலுக்குத் தென்பால் வெள்ளியம்பலம் என்ற பெயருள்ள ஒரு மண்டபம் உள்ளது. அதில் இக்காலத்துப் பங்குனித் திருவிழா நடைபெறுகின்றது.

ஊன்றிக் கரிய கடலின்கண் தோன்றிய சூரியனின் தோற்றம் போல் விளங்கி நின்று, செந்தாமரை மலர் குவிந்தாற்போலத் தூக்கித் திருக்கூத்தாடும் இடது திருவடித் தாமரையும், பத்துத் திருக்கரங்களும், அவற்றில் வலக்கரம் ஐந்தில் அபய அத்தத்திலே சூலமும், மற்றைய நான்கு கரத்திலே உடுக்கை. அம்பு, வாள், மழு என்பனவும், இடக்கரம் ஐந்தில் வரத அத்தத்திலே பாம்பும், மற்றைய நான்கு கரத்திலே அக்கினி, வில், கேடகம், தண்டு என்பனவும், திருநீலகண்டமும், சங்க குண்டலம் பூண்ட திருச்செவியும், அழகிய செஞ்சடையும் வெள்ளிய திருநீற்ருெளி வீசும் திருமேனியும், மூன்று திருக்கண்களும், அரவக்கச்சையும், உமாதேவியார் வல்லிக்கொடிபோல் ஒதுங்கி நிற்கும் பக்கமும், அவ்வம்மையார் மேல் வைத்த திருநோக்கமும், திருநகையும் தோன்றத் [1] **திருநடனஞ்** செய்தருளினுர்.

அப்போது கங்கையாறு ஒலிக்கும் ஒலியும், கொன்றை மாலையில் நிறைந்துள்ள வண்டுகள் ஒலிக்கும் ஒலியும், மங்கல முழவின் ஒலியும், மந்திர ஒலியும், வேத ஒலியும், செங்கையில் ஏந்திய தீயின் ஒலியும், திருவடியில் அணிந்த சிலம்பின் ஒலியும் ஆகிய இவை ஒன்ருய்க் கலந்து எங்கும் பரவி அடியார்களின் இரு செவிகளுக்கும் அமுதத்தைப் பொழிந்தன.

**முனிவர் இருவரும் திருநடனத்தைத் தரிசித்தல்**

இவ்வாறு சிவபெருமான் திருக்கூத்தாடியருளியதை முனிவர் இருவரும் கைகளைச் சிரமேற் கூப்பித் தரிசித்துத் திருவடியில் வீழ்ந்து வணங்கினுர்கள் ; அளவற்ற மறை மொழி

1. இத் திருநடனம் சொக்கத் தாண்டவம் எனப் பெயர்பெறும் : இது சாந்திக் கூத்தின் வகையினுள் ஒன்ருன சுத்த நிருத்தம் (சுந்தர தாண்டவம்) ஆகும். இத்தாண்டவம் நூற்றெட்டுக் கரணமுடைத்து என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கூறுவர்.

இறைவன் வெள்ளியம்பலத்துள் ஆடியருளியதை, " கொட்டிசைந்த ஆடலாய் " (சம்பந்தர் - திருவாலவாய்) எனவும், " பதஞ்சலிக்கு அருளிய பரம நாடக " (திருவாசகம் - கீர்த்தியகவல்) எனவும், "இருந் தமிழ்க் கூடற் பெருந்தவர்காண, வெள்ளியம்பலத்துட் டுள்ளிய ஞான்று (கல்லாடம்) எனவும் " கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில்வெள்ளியம் பலத்து "(சிலப்பதிகாரப் பதிகம்) எனவும் வருவனவற்ருல் அறியலாம்,

களால் நாவார வாழ்த்திப் பேரின்பக் கடலில் மூழ்கி அன்பு வடிவானார்கள். அம்முனிவரிருவர் பொருட்டு ஆடிய அத் திருக் கூத்தைப் பிற முனிவர், தேவர்கள், கந்தருவர், அவுணர் கள், யோகிகள், கிம்புருடர்கள் முதலான யாவர்களும் தரி சித்து வணங்கி அன்பின் முதிர்ந்த இன்பத்தில் அழுந்தினர்கள்; திருமணம் காணவந்த மக்களும் அதனைக் காணப் பேறுபெற்ற னர். பதஞ்சலி மகாமுனிவர் அளவில்லாத சிவானந்தம் ஊற் றெடுத்து உள்ளத்தில் நிரம்பி மேலும் வழிந்து வருவதுபோல, மார்பில் தரித்த வெள்ளிய திருவெண்ணீறு கரையும் வண்ணம் பொழியா நின்ற ஆனந்தக் கண்ணருவியில் மூழ்கி, இருகைகளை யும் கூப்பி நின்று இறைவனை,

பராபர முதலே போற்றி! பத்தியில் விளைவாய் போற்றி!
சராசர மாகி வேறாய் நின்றதற் பரனே போற்றி!
கராசல வுரியாய் போற்றி! கனகவம் பலத்து ளாடும்
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி! போற்றி!

ஒன்றாகி ஐந்தாய் ஐயைந்(து) உருவாகி வருவாய் போற்றி!
இன்றாகிச் சென்ற நாளாய் எதிர்நாளாய் எழுவாய் போற்றி!
நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்றுள்
நின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றி! போற்றி!

அடியரேம் பொருட்டு **வெள்ளி யம்பலத் தாடல் போற்றி!**
பொடியணி தடந்தோள்போற்றி!புரிசடை மகுடம்போற்றி!
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயல்விழி பாகம் போற்றி!
நெடியதற் பரமா னந்த நிருத்தனே போற்றி! போற்றி!!

என்று துதித்தார்.

**இறைவன் முனிவர்கள் வேண்டும் வரத்தை அளித்தல்**

பின்பு வெள்ளியம்பலத்துள் நின்று திருக்கூத்தாடும் இறைவன், பதஞ்சலி வியாக்கிரபாதர் இருவரையும் நோக்கிக் கருணைகூர்ந்து, 'நன்று; நீங்கள் விரும்பியது யாது?' என்று வினவியருள, முனிவரிருவரும் சிவபெருமானின் திருவடிகளில் மிக்க உண்மையன்போடு வீழ்ந்து வணங்கி நின்று, "எந்தையே! இத்திருக்கூத்துடன் எப்பொழுதும் இவ்வெள்ளியம்பலத்துளே நின்று எல்லோருடைய பாச பந்தங்களைப் போக்கி அருள்

புரியவேண்டும்" என்று வேண்டினர். சிவபெருமான் அவர்களை நோக்கி, "செந்தமிழுக்கு நிலைக்களமாகிய இக் கன்னி நாடு (இப் பாண்டிய நாடு) செய்த தவம் காரணமாக, நீங்கள் விரும்பிய வரத்தையே அளித்தோம்" என்று அருள் செய்தார்,

**பதஞ்சலி முனிவரின் வேண்டுகோள்**

பிறகு, பதஞ்சலி முனிவர் மேலும் சிவபெருமானை நோக்கி, "ஆதியாகிய எமது பெருமானே! பராபரமுதலே! நிராமயமாயும் பரமானந்தமாயும் உள்ள இத் திருக்கூத்தை நேரே தரிசித்தவர் அனைவரும் பூமியில் மீண்டுவந்து பிறவாத சிவகதியை அடைதல் வேண்டும்" என்று கூறி வணங்கினர். சிவபெருமான் அதற்கும் இசைந்து அருள்புரிந்தார்.

**சிவகணத்தவர் முதலியோர் மகிழ்ச்சி**

சிவகணத்தவர் ஆரவாரம் செய்து கைகோத்துக் குரவைக் கூத்து ஆடினர்; தேவர்கள் பூமாரி பெய்தனர்; முனிவர்கள் ஆனந்தக் கண்ணீர் ததும்பி உடல் புளகம் போர்த்து அன்புருவாகி வியாக்கிரபாதர் பதஞ்சலி என்னும் இருவரையும் துதித்துக் கண்களால் விழுங்குகின்றவரைப்போலப் பார்த்துத் தழுவிக் கொண்டனர்.

சிவபெருமான், மாயையோடு இருவினைக் கட்டினின்றும் ஆணவத்தினின்றும் வேறாகித் தனித்து நிற்கும் சிவயோகிகளின் உள்ளத்தில் நிறைந்து ஆடும் தனிப்பெருந்திருக்கூத்தினை ஆடியருளிய திருக்கோலமாகப் புறத்தில் தரிசித்தவர்களுக்கு இம்மை மறுமைப் பயன்களைக் கொடுத்துக்கொண்டு அவ் வெள்ளியம்பலத்துள் எழுந்தருளியிருக்கின்றார். மார்கழித்திங்கள் திருவாதிரைமுதல் அடுத்த மார்கழித்திங்கள் திருவாதிரை வரையில் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, வெள்ளியம்பலத்திருக்கூத்தைத் தரிசித்து அங்கு இனிது அமர்ந்து திருவைந்தெழுத்தை நூற்றெட்டுருச் செபிக்கும் அன்பு நிறைந்த அடியார்கள் அனைவரும் எண்ணிய வரங்களையெல்லாம் எண்ணியபடியே அடைவர்.

செய்யுள் — 28

ஆகச் செய்யுள் – 826

## 7. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

### தடாதகைப் பிராட்டியார் இறைவரிடம் முறையீடு

தடாதகைப் பிராட்டியார், திருமணத்தின்பொருட்டு அரண்மனையில் வந்த முனிவர்கள், வேதியர்கள், அரசர்கள் முதலாய அனைவர்க்கும் முறைப்படி அறுசுவையுடன்கூடிய உணவைப் பொற்கலங்களிலிட்டுப் பேரன்புடன் உண்பித்தார்; சந்தனம், பொன்னுடைகள், அணிகலன்கள் முதலியவற்றை வழங்கினர்; பாக்கும், வாசமும், வெற்றிலையும், பிறவும் அளித்துச்செல்லுங் குறிப்பினர்க்கு விடைகொடுத்து அனுப்பினர். அப்பொழுது மடைத்தொழிலாளர்கள் பிராட்டியார் திருமுன் சென்று வணங்கி நின்று, "அடியேங்கள் சமைத்த உணவிலே ஆயிரத்தில் ஒரு பங்கேனும் செலவழிந்திலது; யாங்கள் மேலே செய்யத் தகுவது யாது" என்று விண்ணப்பித்தார்கள். அது கேட்ட தடாதகைப் பிராட்டியார் தன்கணவராகிய சுந்தர பாண்டியர் திருமுன் சென்று வணங்கி, ஒருபுறம் ஒதுங்கிநின்று "தேவரீர்! முப்பத்து முக்கோடி தேவ கணங்களோடும் இங்கு எழுந்தருளுதலை நினைந்து இனிய சுவை பொருந்திய அமுது அளவின்றிச் சமைக்கப்பெற்று வீணே உலர்கின்றது. யாவரும் உண்டெஞ்சிய அன்னம் இமயமலையும் அதனருகிலுள்ள குன்றுகளும் ஒருங்கு சேர்ந்தாற்போலக் குவிந்து கிடக்கின்றது; கறிவர்க்கமும் அத்தன்மையதே" என்று கூறினர்.

பணிந்தொ துங்கிநின்(று) அடிகள்முப் பத்துமுக் கோடி
கணங்கள் தம்மொடும் இங்கெழுந் தருள்வது கருதி
இணங்கும் இன்சுவைப் போனகம் எல்லையின்(று) ஆக்கி
உணங்கு கின்ற'து)உண் டெஞ்சிய'து) எனைத்தென உரைக்கின்.
இமையக் குன்றமும் அடைகலாய் இதன்புறங் கிடந்த
சிமையக் குன்றுகள் ஈட்டமுஞ் சேர்ந்தென நிமிரச்
சமையக் கொட்டிய வால்அரிப் புழுக்கலுஞ் சாதக்(கு)
அமையக் கொட்டிய கறிகளின் வருக்கமும் ஆகும்.

### சிவபெருமான் குண்டோதரனை அனுப்புதல்

சுந்தர பாண்டியனாகிய எம்பெருமான் தேவியாரிடம் கொண்ட அன்பு காரணமாக ஒரு திருவிளையாடலைச் செய்யக்

கருதியோ? அல்லது குண்டோதரனுடைய வன்மையை அன்று யாவரும் அறியுமாறு காட்டக் கருதியோ? யாம் அறிகிலேம்: சோமசுந்தரப் பெருமான் புன்முறுவல் செய்து அம்மையாரை நோக்கி, "நீ தமிழ் நாட்டு மூவேந்தருட் சிறந்து விளங்கும் மலயத்துவச பாண்டியனின் திருமகள் அன்றோ? உனக்கு அரிதிற் பெறும் பொருள் யாது? கற்பகத்தருவும் நினது பணி செய்யும் பேற்றினைப் பெற்றுள்ளது; பிறருடைய செல்வமெல்லாம் உன் செல்வமன்றோ? நின் செல்வப்பெருக்கை நாம் அறியும் வண்ணம் சமைப்பித்தாய் போலும்! நின்னுடைய விருந்தை உண்ணுவதற்குப் பசியினாலே களைப்புற்றவராகி இருப்பாரை நம் கணங்களுள்ளே கண்டிலேம்; எம்மால் செய்யத் தக்கது யாது?" என்று திருவாய்மலர்ந்து, அருகில் நின்ற **குண்டோதரனுடைய** வயிற்றினிடத்து வடவைத் தீ வந்து புகுமாறு திருவுளங் கொண்டார். உடனே வடவைத் தீ வந்து குண்டோதரன் வயிற்றின்கண் புகுந்து பசியாய் மூண்டெழுந்தது. அவன் நஞ்சுண்டவன்போல, உடல் தளர்ந்து உயிர் ஒடுங்கிச் சிவபெருமானை நோக்கி, "எம்பெருமானே! பசியால் வருந்துகிறேன்" என்று விண்ணப்பித்தான். சிவபெருமான் அம்மையாரை நோக்கி, "எமது குடையைத் தாங்கிவரும் இக் குறுங்கால் பூதத்திற்கு ஒரு பிடி சோறு கொடுப்பாயாக; பின்னர்க் கூறுவோம்" என்று கூறியருளினார். தடாதகைப் பிராட்டியார் அண்ணலை வணங்கிக்கொண்டு சென்றார். பசித்தீயினால் வாடிய குண்டோதரனும் பின்னாகவே தளர்ந்த நடையுடன் கண்குழிந்து, வாய் புலர்ந்திட நடந்து சென்றான்.

**குண்டோதரன் உண்ணும் காட்சி**

தடாதகைப் பிராட்டியாரின் ஏவலினாலே உணவு படைக்கும் ஏவல் மகளிர் குண்டோதரனை அழைத்துக்கொண்டுபோய் அன்னத்தின் முன் விடுத்தனர். அப்போது அவர்கள் குண்டோதரன் சோற்றை அடுத்து இருந்ததையே கண்டனர்; அவன் அன்னமாகிய பெரிய மலையை எடுத்து உண்டதையும், அங்கிருந்த அன்னத்தையும் கண்டிலர்; அங்கிருந்த ஏவற் பெண்டிரில் சிலர் கைகளை நெரித்து வியப்புற்றனர்; சிலர் அஞ்சிப் பயந்தனர்; சிலர் கண்களை மூடிக்கொண்டு ஓடினர். சிவந்த

வரியின்றித் தீட்டப்பெற்ற முனைமுரியாத அரிசியாலாகிய அன்னத்தையும், பால் பெய்து சமைத்த கறி, பொரிக் கறி, பயிற்றெடு கலந்து சமைத்த புளியங் கறி, (துவையல்) பல வகைக் கறிகள், பால், தயிர், நெய், தேன் முதலியவற்றையும், அளவில்லாத பிற பண்டங்களையும் மிடாக்களோடு வாரி வாரி உண்டான்; பலவிதமான பழக்குவியல்கள், வெவ்வேறு வடிவில் அமைந்த பண்ணிகாரங்கள், சருக்கரை, கரும்பு, தேங்காய், அரிசி, பச்சைக் காய்களின் குவியல்கள் முதலியவற்றையும் தின்ருன்; அங்ஙனம் உண்டும் பசி தீராமையினுல் அளவற்ற நவ தானியங்களையும் எடுத்து உண்டான். நிறைந்த பொருள்களைத் தன் பெரிய வயிற்றிடைப்போடவும் துடுவையால் நெய்யை நிரப்பி ஆகுதி செய்த வேள்வித் தீயைப்போல் குண்டோதர னுடைய பசித்தீயானது மிகப்பொங்கி எழுந்து ஒன்பது வாயி லிலும் தீயினைக் கொளுத்தியது.

**பிராட்டியார் குண்டோதரன் செயலை இறைவரிடம் கூறுதல்**

தடாதகைப் பிராட்டியார் அதனைக் கண்டு வியப்புற்றுத் தனது நாயகர் திருமுன்பு சென்று நாணம் உள்ளே கிடப்ப, கூந்தல் பிடரிலே தாழ, ஒதுங்கித் திருவடிப் பெருவிரலால் நிலத் தைக் கிளறிக்கொண்டு நின்ருர். சிவபெருமான் அந்நிலைமை யைக்கண்டு அறியாதவரைப்போலப் பிராட்டியாரை நோக்கி, "அக் குண்டோதரன் உண்ட உணவு எஞ்சியிருக்குமாயின் இன் னும் பூத கணங்களை அனுப்பி உன் மனமகிழுமாறு உண்பிப் போம்" என்ருர், அதுகேட்ட பிராட்டியார், "ஐயனே! இன்னும் குண்டோதரனுடைய பசி அடங்கவில்லை. வேறு பூத கண வீரரை விடுத்தருளுவீராயின், அவர் சென்று உலக முழுவதையும் எடுத்து உண்டுவிடுவர்; அதனுல் உமக்குக் **கால ருத்திரர்** என்னும் திருநாமம் உறுதியாகும்; குண்டோதரன் தன் செயலைத் தானே இங்கு வந்து விண்ணப்பஞ் செய்ய நீர் அறிந்து கொள்வீர்" என்று பணிவுடன் கூறினர்.

**குண்டோதரன் பசியால் வருந்தி இறைவரிடம் வருதல்**

அப்போது பிறைபோன்ற பல்லினையும், மலைக் குகை போன்ற வாயினையும் உடைய குண்டோதரன் பசித்தீச்சுட

வந்து, "வெள்ளியம்பலத்தில் திருக்கூத்தாடிய சுந்தர பாண்டிய! எம்பிராட்டியார் சமைப்பித்தருளிய அன்னம் முதலியவை இமயமலை போற் கிடந்தன. அவற்றை எடுத்து உண்ணவும் என் சுடு பசி தணியவில்லை; [1] **முற்பிறப்பில் ஐயமிட்டு உண்ணாதவர் வயிறு இப்பிறப்பில் வறுமையினால் எரிவதுபோல** என் வயிறு எரிகின்றதே! முன்னாளில் முப்புரத்தில் இட்ட தீ, கடும் பசி வடிவமாய் வந்து என் வயிற்றின்கண் குடி புகுந்ததோ?" என்று கூறிக் கையை ஒன்றோடொன்று தாக்குவான்! பசி தாங்காது அண்டங்கள் வெடிபடக் கதறுவான்! ஐயகோ என்பான்! பெருமூச்செறிவான்! ஆவி சோர்ந்து அயருவான்!

செய்யுள் — 22

ஆகச் செய்யுள் – 848

---

1. இவ்வுவமையே அன்றி, பிறருக்குக் கொடுக்காது சேர்த்துவைத்தவர் அப்பொருளை இழந்தபொழுது அவர் வயிறு எரிவதுபோல என்று கூறுவதும் அமையும்.

## 8. அன்னக் குழியும் வையையும் அழைத்த படலம்

### குண்டோதரன் பசி நீங்க உண்ணுதல்

வேதநாயகனாகிய சோமசுந்தரக்கடவுள் பின்பு, தடாதகைப்பிராட்டியாரை நோக்கித் திருவாய்க்குள்ளே முறுவலித்துப் பசியால் வருந்துகின்ற குண்டோதரனின்பொருட்டுத் தமது சத்தியாகிய **அன்னபூரணியை** நினைத்தருளினார். உடனே நாற்றிசைகளிலும் சூழ்ந்த தயிர்க்கடலானது நிலத்தின் நடுவே கிழித்து ஊற்றெடுத்து நான்கு குழிகளாய்த் தோன்றி எழுந்தாற்போல், சுவை மிகுந்த தயிர் கலந்த அன்னம் நான்கு குழிகளிலும் உயர்ந்து பொங்கி எழுந்தது.[1] அப்போது மலயத்துவச பாண்டியனின் மருகனாகிய சுந்தர பாண்டியர் தம் குடையினைத் தாங்கிவரும் குண்டோதரனைப் பார்த்து, "உன் பசி நீங்குமாறு உண்பாய்" என்று கட்டளையிட்டருளினார். குண்டோதரன் அத்தயிர்ச் சோற்றுக் குழியிலே கடலைக் கலக்கும் மத்தைப்போலத் தன் கையைச் செருகி வாரி வாரி வாயில் வைத்து உண்ண, **சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் அன்பு கொண்டு வீட்டினை உணர்ந்த பெரியோரது சஞ்சித வினையின் தொடர்ச்சி நீங்குதல்போலப்** பசி நோய் நீங்கியது. பசி தணிய வாரி வாரி உண்ட குண்டோதரன் உடலெல்லாம் வயிறாகப் பருத்துப் பூமி கிழியுமாறு மலைபோல வீழ்ந்து மூச்சுவிடமுடியாமல் புரண்டனன்.

### குண்டோதரனின் நீர் வேட்கை

பின்னர், குண்டோதரன் நீர் வேட்கையுற்று எழுந்து அங்குள்ள நீர் நிலைகளைத் தேடலானான்; உயிர்போன்ற தம் தலைவரைப் பிரிந்துறையும் தலைவியைப்போல், நடை கிணறுகளும், ஓடைகளும், குளங்களும் நீரினைப் பிரிந்து வறண்டுபோகுமாறு வாயினை வைத்து உறிஞ்சிக் குடித்தான். அவ்வாறு நீரினைக் குடித்தும் அவன் நீர் வேட்கை தணியாமல் வருந்திச்

---

1. இவ்வன்னக்குழி தோன்றிய இடத்தை அன்னக்குழி மண்டபம் என்பர். இது மதுரை மேலைச் சித்திரை வீதியில் உள்ளது. இங்குப் பல தெய்வ வடிவங்கள் உள்ளன. இவ்விடத்தில் இருந்த குண்டோதரனின் வடிவம் தற்போது திருக்கல்யாண மண்டபத்தில் வைக்கப்பெற்றுள்ளது.

சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் வீழ்ந்து முறையிட்டான். உடனே சோமசுந்தரக் கடவுள் தமது திருமுடியின் மேல் இருக்கும் கங்கையை நோக்கி, "நங்காய்! நீ இந்த மதுரை மாநகரத்தின் புறத்து ஒரு பெரிய நதியாக விரைந்து வருவாயாக" என்று கட்டளையிட்டருளினர்.

**கங்கை இறைவனை வேண்டி நதியாகப் புறப்பட்டு வருதல்**

கங்கை சிவபெருமானை நோக்கி வணங்கி, "எம்பிரானே! பகீரதன் பொருட்டுச்சென்று ஒரு தீர்த்தமாகி உன்னிடத்தே மூழ்குவோரின் பாவத் தொடக்கினைப் போக்கி நடப்பாய் என்று அன்றும் அடியவளுக்குப் பணித்தருளினீர்; இன்றும் ஒரு நதி ஆவாய் என்று பணித்தருளுவீராயின், அடியவளிடத்து மூழ்கினவர்களுக்கும், அடியவளைத் தரிசித்தவர்களுக்கும், பரிசித்தவர்களுக்கும் பிறவித் தொடர்பின் பற்று நீங்கப் பெற்றுப் பத்தியும் அன்பும் மெய்ஞ்ஞானமும் வீடுபேறும் அடியவள் தருமாறு திருவருள் புரியவேண்டும்" என்று வரம் பெற்றுக்கொண்டுவந்து அளவற்ற வேகத்துடன் எழுந்து பெரிய நதி வடிவாய் வானினின்றும் இறங்குபவள்போல வருகின்ருள்.

**கங்கையானவள் நதிவடிவாக வரும் காட்சி**

நதி வடிவாக வரும் கங்கைக்கு அலைகள் கைவளையல்களாக அமைந்தன; முத்துக்கள் பற்களாக அமைந்தன; நுரை ஆடையாகியது; பூங்கொடிகள் இடையாகியது; கருமணல் மணங்கமழும் கூந்தலாகியது; கயல் மீன்கள் கண்களாயின. மணங்கமழும் அகில், வேங்கை முதலிய மரங்களைப் பெயர்த்து மலையோடு தாக்கி அரைத்துக்கொண்டும், குறிஞ்சி நிலத்திலுள்ள வேட்டுவர்களின் சீறூரை அடியோடு பெயர்த்துக் கரைகளில் வீசிக்கொண்டும் கங்கையானவள் பெருங் காற்றுப் போல ஓடிவந்தாள்; பெண்மானேடு ஆண்மானையும், பெண் யானையோடு ஆண் யானையையும், மரக்கிளைகளோடு ஆண் குரங்கையும், வயிற்றில் பற்றிய குட்டியோடு கூடிய பெண் குரங்கையும், வேடர்களின் வில்லையும் அம்புகளையும், கற்களைக் கோத்து எறியும் கவண்கள் நிறைந்த பரணியையும் வெள்ளத்

தில் அடித்துக்கொண்டு வந்தாள். பூமி பிளவுபட வரும் பெரு வெள்ளம் நிறைந்த ஆற்றின் அலைகள் பெரிய மலைகளை மோதிப் பெயர்த்தன; பள்ளங்களை மேடுகளாக்கின; மரங்களைப் பெயர்த்து இடிகரைகள்தோறும் தலைகீழாக நடுவனபோல எறிந்தன.

கங்கையாறு பேரொலியோடு பெரு மரங்களைப் பறித்து இழுத்துவரும் வலியினைப்பெற்று விளாமரங்களை முறித்துத் தாங்கி விரைந்த நடையுடன் முத்துக்களைச் சிந்தி, மான் மதத்துடன் வண்டுகளைத் தன்னிடத்தே கொண்டு நுரையாகிய முகபடாத்தை ஏற்று வருதலால் **களிறு** போன்றது; ஆழ்ந்த பிலத்தில் பொருந்தும் தன்மையாலும், சிவபெருமானுடைய சடைமுடியின்மேல் அசையும் தன்மையாலும், ஒளி வீசும் மணிகளைத் தன்னிடத்தே கொண்டுள்ளமையாலும், விரைந்து வளைந்து ஓடுந் தன்மையாலும், வரிசை வரிசையாகப் பல கால்களின் வழியாக ஓடுகின்ற வலிமையாலும் வளைந்த உடலினையுடைய **அரவம்** போன்றது; நிலத்தைத்தோண்டிச் செல்லுதலால் சங்கினை ஏந்திய **வராக மூர்த்தியை** ஒத்தது; விண் அளாவ அலைமோதி உயர்ந்து எழுவதால் **வாமன மூர்த்தியை** ஒத்தது; சுவை மிகுந்த வெண்ணெயும் தயிரும் கலந்து அடித்துக்கொண்டு வருவதால் **கண்ணபிரானை** ஒத்தது; யானைகள் குதிரைகள், சாமரைகள், முத்துக்கள் முதலியவற்றை வெள்ளத்தில் தாங்கி வருவதால், தம்மோடு மாறுகொண்டு இகழ்ந்த [1]குடபுல மன்னர்களை வெற்றிகொண்டு திறைப்பொருள்களோடு திரும்பிவரும் **பாண்டியனை** அல்லது திறைப் பொருளைத் தாங்கி மதுரைப் பதிக்குப் பாண்டியனைக் காணவரும் **குடபுல மன்னனை** ஒத்தது; ஆத்திமலர் மாலை, பனைமலர் மாலை, வேப்பமலர் மாலை இவற்றோடும் புலியோடும் வில்லோடும் கயலோடும் தழுவி வருவதால் எட்டுத் திசைகளிலும் புகழ் பரவிய தமிழ் வேந்தர்களாகிய **சோழ சேர பாண்டியர் மூவரும்** தம்முட் கூடிப் பலவகைச் செல்வங்களோடும் வருகின்ற செயலை ஒத்தது.

1. குடபுல மன்னன் - சேர மன்னன்.

ஆரொடுமடல் அவிழ்பனையொடு மரங்கரிலை நிம்பத்
தாரொடுபுலி யொடுசிலையொடு தகுகயலொடு தழுவாப்
பாரொடுதிசை பரவியதமிழ் பயில்அரசர்கள் குழுமிச்
சீரொடுபல திருவொடுவரு செயல்அனையது நதியே.

அந்நதி, நூல்களை முறையே கல்லாதவர் இயற்றிய கவி தெளிவின்றி நிற்றல்போல முதலில் கலங்கிக் கலைகளில் மேம்பட்ட கேள்வி வல்லுநர் இயற்றிய கவி பல சிறந்த அகப்புறத் துறைகள் நுண் பொருள்கள் அறம் முதலிய பயன்கள் கொள்ளத் தங்கியதுபோல் பல பெரிய நீர்த்துறைகள் பல விடங்களிலும் பொருந்திச் செல்லும் இடந்தோறும் மணி பொன் முதலாய பொருள்களையுடையதாய் ஆழமுடைத்தாகிப் பின் தெளிவடைந்து உலகத்தவர் அனைவரும் விரும்பிப் பயனைப் பெறுமாறு நிலைபெற்றது.

கல்லார் கவிபோற் கலங்கிக்கலை மாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்துறை தோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்(து)
எல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள இறுத்த(து) அன்றே.

**குண்டோதரன் நீர் வேட்கை தணிதல்**

வண்டுகளின் ஒலி நீங்காத கொன்றை மலரை அணிந்த தம் சடையினின்றும் ஓடிவந்த வெள்ளத்தைச் சிவபெருமான் கண்டு, பெரிய வாயைத் திறந்து "ஐயகோ! என் நீர் வேட்கை தணிந்திலது" என்று வெதும்பி வீழ்ந்த குண்டோதரனை அந்நதியின் அருகே விடுத்தார். அவன் அவ்வாற்றினிடையே போய்த் தனது குறிய இரு கைகளையும் கரையிற் செல்ல நீட்டி நீரைத் தடுத்து மலைபோல் எழுந்துவந்த குளிந்த நீர்ப் பெருக்கை வாயைத்திறந்து பருகினன். தணியாத நீர்வேட்கை தணிந்தது. [1] பிறகு அவன் மகிழ்ந்து சிவபெருமான் திருமுன்

---

1. இங்கு, "பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையைத், திருப்பெரு வதுவை பொருந்திய அந்நாள், சொன்றிப் பெருமலை தின்று நனி தொலைத்த, காருடற் சிறுநகைக் குறுந்தாட் பாரிடம், ஆற்று(து) அலந்த நீர்நசை அடக்க, மறிதிரைப் பெருநதி வரவழைத் தருளிய, கூடலம் பதியுறை குணப்பெருங் கடவுள்" எனவரும் கல்லாட அடிகள் உன்னற் பாலன.

சென்று திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து ஆனந்தக் கூத்தாடினன்; அன்பு நிறைந்த உள்ளத்தோடு பல கீதங்களைப் பாடித் துதித்தான். சொல்லின் பொருளாயுள்ள சுந்தர பாண்டியனாகிய இறைவன், குண்டோதரனுடைய பாடலைக் கேட்டு மகிழ்ந்தார், பூதகணங்களுக்குத் தலைமை வகிக்கும் பதவியை அவனுக்கு அளித்தார்.[1] பிறகு, தடாதகைப் பிராட்டியாரோடு வீற்றிருந்து செங்கோலோச்சி வந்தார்.

**வையை நதியின் பல பெயர்**

குண்டோதரனின் நீர் வேட்கையைத் தணிக்க வந்த கங்கை, **வையை** என்று அழைக்கப்பெறும். இவ் **வையை** சிவபெருமானுடைய சடையினின்றும் இறங்கி வருதலால் **சிவ கங்கை** எனவும், சிவபெருமானுடைய அட்டமூர்த்தங்களில் இஃது ஒன்று எனத் தெளிகின்றவருக்கு ஞானத்தை அருளுவதால் **சிவஞான தீர்த்தம்** எனவும், காற்றைப்போல வேகத்தோடு விரைந்து வருவதால் **வேகவதி ஆறு** எனவும், மாலைபோல் மதுரைப்பதியைச் சூழ்ந்து வருவதால் **கிருத மாலை** எனவும் பெயர் பெறும்.

தீர்த்தன் இதழிச் சடைநின்றும் இழிந்து வரலால் **சிவகங்கை**
தீர்த்தன் உருவந் தெளிவோர்க்கு ஞானந் தரலாற் **சிவஞான**
**தீர்த்தம்** காலிற் கடுகிவரு செய்தி யாலே **வேகவதி**
**தீர்த்தம் கிருத மாலை**யென **வையை** நாமஞ் செப்புவரால்.

செய்யுள் — 27
ஆகச் செய்யுள் — 875

---

1. பின்னர், தாகவேட்கை தீரும்பொருட்டுக் குளம் முதலியவற்றிலுள்ள நீரைப்பருகிய குண்டோதரன் மக்களுடைய தண்ணீர்க் கஷ்டத்தைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமான் கட்டளைப்படி பல குளங்களை உண்டாக்கினன். அக்குளங்களுள் காவணம் (பந்தர்) உள்ள குளத்தைத் தன்பால் பெற்ற ஊர், 'காவண நல்லூர்' என்று கூறப்படும். இது மதுரைக்கு வடக்கே ஒரு காதத்திலுள்ளது. இச் செய்தி திருவாலவாயுடையார் திருவிளையாடலில் கண்ட வேறுபாடாகும். குண்டோதர பூதம் தங்கிய இடம் 'பூதகுடி' என வழங்குவர். அது காவண நல்லூருக்கு மேற்கே சுமார் நான்கு நாழிகை தூரத்தில் உள்ளது. திருப்பரங்குன்றத்திற்கு வடக்கேயுள்ள 'தென்காற் கம்வாய்' என்னும் குளத்தைப் பூதங் கண்ட குளம் என்கின்றனர்.

## 9. எழு கடல் அழைத்த படலம்

**காஞ்சனமாலையும் கௌதம முனிவரும்**

மெய்ப்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள் பாண்டியனின் திருக்கோலம் தாங்கி, உலகமனைத்திற்கும் குளிர்ந்த வெண் குடையால் நிழல் தந்து, அறநூல் வழியே செங்கோலோச்சி வரும் நாளிலே, ஞானநூலின் அரிய பொருள்களை உணர்ந்த இருடிகளும், தூய முனிவராகிய தவப் பெரியாரும் வரன் முறைப்படி அவரைச் சந்தித்து வருவார்கள்.

ஒருநாள் வேதங்களை உணர்ந்த **கௌதம முனிவர்** சுந்தர பாண்டியனாகிய இறைவனை வந்து சந்தித்துத் திரும்பும் பொழுது, **காஞ்சன மாலையின்** அரண்மனையை அடைந்தார். அப்போது அக்காஞ்சனமாலை, அவரை எதிர்கொண்டழைத்து, முகமன்கூறிப் பொன்னாசனத்திலே இருத்தி வணங்கி, "ஐம் பொறிகளைக் கடந்து வேதத்தின் முடிவில் உள்ள பொருள் பரமசிவமே என்று தெளிந்த அடிகளே! பிறப்பின் தொடர்பை நீக்கவல்ல தவத்தினைக் கூறி அருள்க" என்று விண்ணப்பஞ் செய்தாள்.

கருணைக்கு உறையுளும், முனிவர்களுக்கு மன்னனுமாகிய கௌதம முனிவர் திருமுகமலர்ந்து, "வெற்றி பொருந்திய மலயத்துவச பாண்டியனுக்கு வாழ்க்கைத் துணையாகிய அரிய கற்பினையுடைய காஞ்சனமாலையே! நீ முன் செய்த தவத்தின் வலிமையால் உலகமனைத்தையும் ஈன்றருளிய தடாதகைப் பிராட்டியாருக்குத் தாய் ஆனாய்; சிவபெருமானே உனக்கு மருமகன் என்று கூறப் பெறும் சிறப்பினைப் பெற்றாய்; ஆதலால் நீ அறியாத தவங்களை இவ்வுலகின் கண்ணே வேறு யாவர் அறிபவர்? ஆயினும் சொல்லுவோம்; கேட்பாயாக:

**தவச் செயல்கள்**

"நூல்களால் வகுக்கப்பெற்ற தவம் **மானதம், வாசிகம், காயிகம்** என மூன்று வகைப்படும், அவற்றுள் **மானதமாவது** (மனத்தால் செய்யப்படுவன) தான தருமம் செய்வதில் கருத்து வைத்தல், பிறவுயிர்களிடம் கருணை கொள்ளல், பிறர் செய்த

தீமைகளைப் பொறுத்தல், உண்மையே பேசுதல், மௌன நிலையில் சிவபெருமானைச் சிந்தித்தல், ஐம்பொறிகளை அடக்குதல் முதலியனவாகும். **வாசிகமாவது** (வாக்கால் செய்யப் படுவன) திருவைந்தெழுத்தைச் செபித்தல், ஈசானம் முதலிய பஞ்சப்பிரம மந்திரங்களையும் சத உருத்திர மந்திரங்களையும் உபநிடதப் பகுதிகளையும் ஓதுதல், தோத்திரப் பாடல்களைக் கூறுதல், தருமங்களை எடுத்துச் சொல்லுதல் முதலியனவாகும். **காயிகமாவது** (உடலால் செய்யப்படுவன) சிவபெருமானைப் பூசித்தல், திருக்கோயிலை வலம் வருதல், இறைவன் திருமுன் சென்று வணங்குதல், பல திருப்பதிகளிலும் சென்று வணங்குதல், திருப்பணி புரிதல், உடல் வருத்தமுறச் சென்று கங்கை முதலிய நதிகளில் நீராடுதல் முதலியனவாகும்.

இம் மூன்று புண்ணியத்துள்ளும் காயிகமே மிகச்சிறந்தது. அக் காயிகத்தில் சிவ தீர்த்தங்களில் சென்று நீராடுதல் சிறந்தது; அதனிலும் கங்கை முதலிய நதிகளுக்குத் தனித் தனியே சென்று நீராடுதல் சிறந்தது; அதனினும் அந்நதிகளெல்லாம் வந்து கூடும் **'கடலில் நீராடுதல்'** சிறந்தது'' என்று கூறினர்.

### தடாதகைப் பிராட்டியார் சிவபெருமானை வேண்டுதல்

இவ்வாறு கௌதம முனிவர் கூறியதைக் கேட்ட காஞ்சன மாலை, அலைகளையுடைய கடலில் நீராட மிக்க விருப்பங் கொண்டவளாய்த் தன் புதல்வியாகிய தடாதகைப் பிராட்டிக்குத் தெரிவித்தாள். அதனைக் கேட்ட பாண்டியர்களின் தவக்கொழுந்தாகிய பிராட்டியார் சிறிது திருவுள்ளம் தளர்ந்து, "இதனை எம் தலைவர்க்கு விண்ணப்பஞ் செய்வேன்" என்று எம்பெருமான் திருமுன் அன்னத்தைப்போல் சென்று கை குவித்து ஒதுங்கி நின்று, "குண்டோதரன் பொருட்டு அன்று அன்னக் குழியையும் வையையையும் அழைத்துத் தந்த கருணைக் கடலே! இன்று எமது தாய் கடலில் சென்று நீராட விரும்புகின்றாள்" என்று கூறிக் குறையிரந்தார்.

### இறைவன் ஏழு கடலையும் அழைத்தல்

தேவியாரின் திருமொழியினைக்கேட்டுச் சுந்தர பாண்டியனாகிய இறைவன், "கடல் ஒன்றோ, நாம் ஏழு கடலையும் கூவி

வரவழைப்போம்" என்று கூறி, அவை வருமாறு திருவுளங் கொண்டருளினர்.[1] உடனே ஏழுகடல்களும் மதுரைப்பதியின் [2]கீழ்த்திசையிலுள்ள ஒரு வாவியிடத்தே எழுவகைப்பட்ட நிறங்களோடும் வந்து நின்றன. அப்போது, ஏழு கடல்களும் பிறைமதிபோன்ற சுரிந்த முகத்தினையுடைய சங்குகள் வாய் விட்டொலிக்க அலைவீசி வெள்ளிய நுரைகள் ததும்பவும், சுரு மீன்கள் மேலே சுழலவும், முத்துக்களை எடுத்து வீசுகின்ற அலைவரிசைகள் அண்டத்தின் முகட்டினைத் தடவவும் ஆர வாரித்து எழுந்தன. மதுரைப் பதியிலுள்ளார் நடுங்கக் கலியுக முடிவின்கண் உலகம் அழியுமாறுபோலப் பொங்கி எழுந்த ஏழு கடல்களும், சிவபெருமானுடைய திருவாணையினால் அவரது திருவடியைச் சென்றடைந்த அடியார்களைப்போல வாவியில் சென்று அடங்கின. அவ்வாவி, தனது வெண்ணிறத் தோடு தன்னை வந்தடைந்த ஏழுகடல்களின் ஏழு நிறங் களுடன் கலந்து பொலிவுற்று, அழகிய வெள்ளியம்பலத்துள் ஆடுகின்ற [3]சிவபெருமானுடைய எண்வகை நிறங்களோடும் விளங்கியது.

தன்வண்ணம் எழுகடலின் தனிவண்ண மொடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவெய்தி
மின்வண்ணச் சடைதாழ வெள்ளிமணி மன்றுடும்
மன்வண்ண மெனவெட்டு வண்ணமொடும் வயங்கியதால்.

செய்யுள் — 15
ஆகச் செய்யுள் — 890

---

1. இறைவன் ஏழு கடலை அழைத்ததை, "மாமி யாடப் புணரி அழைத்த, காமர் கூடற் கிறைவன்" எனவரும் கல்லாட அடியாலும் அறியலாம்.

2. கீழ்த்திசையிலுள்ள ஒரு வாவி - இஃது எழுகடல் தீர்த்தம் எனப் பெயர் பெறும். இத்தீர்த்தத்தைத் திருவாலவாய்த் திருவிளையாடற் புரா ணத்தில் மதுரைத் தென் கீழ்த்திசையில் உள்ளது என்று கூறுகிறது. எழுகடல் தீர்த்தத்தின் நிருதி மூலையில் மிகப் பழையதாகக் காஞ்சன மாலை கோயில் ஒன்று உள்ளது.

3. சிவபெருமான் அட்டமூர்த்தி ஆதலால் அவரது நிறமும் எட்டாக விளங்கியது.

## 10. மலயத்துவசனை அழைத்த படலம்

### பிராட்டியார் காஞ்சனையைக் கடலாட அழைத்தல்

சுந்தர பாண்டியனாகிய இறைவன் தடாதகைப் பிராட்டியாரோடும் வந்து **ஏழு கடலும் நிறைந்த குளத்தின்** அருகில் சந்தனம், குங்குமம், மந்தாரம், மகிழ், பாதிரி, மா முதலான மரங்கள் சூழ்ந்து நிறைந்த நந்தவனத்தின்கண் சிங்காதனத்தின்மேல் எழுந்தருளியிருந்தார். ஏவல் செய்வோரும், சேடிப்பெண்களும், மல்லிகை, முல்லை, சண்பகம் முதலிய மலர்களைக்கொய்து வந்து இருவர்களிடமும் கொடுத்தனர். அவர்கள் இருவரும் அம்மலர்களை வாங்கி முகந்து சுவாசித்து அன்புடன் மகிழ்ந்திருக்கையில், சுந்தர பாண்டியர் தம் தேவியாரை நோக்கி, “நாம் நின்பொருட்டு ஏழு கடலையும் இந்நகரத்திலே வருமாறு அழைத்தோம்; இங்கு வந்து கடலாடுதற்கு உன் தாயை அழைப்பாயாக!” என்று திருவாய்மலர்ந்தருளினார். அவ்வாறே தடாதகைப் பிராட்டியாரும் தன் அன்னையாகிய காஞ்சனமாலையை அழைத்துக்கொண்டு எழுகடல் வாவிக்கரையின் அருகே வந்தருளினார்.

### மலயத்துவசனைக் கடலாட அழைத்தல்

அப்போது, காஞ்சனமாலை சிவபுராணம் முதலிய நூல்களிலே வல்ல முனிவர்களை நோக்கி, “கடல் நீரில் ஆடுதற்குரிய விதியாது? கூறுங்கள்” என்று வினவினாள். அதற்கு அவர்கள், “கற்பினையுடைய காஞ்சனமாலையே! கணவனுடைய கை, மகனுடைய கை, பசுவினது கன்றின் வால் என்ற இம்மூன்றனுள் ஒன்றைக் கையினாலே பற்றிக்கொண்டு நீராடுதலே முறை” என்று கூறினர். அதனைக்கேட்ட காஞ்சனமாலை, “முற்பிறப்பில் தவத்தைக் குறைவறச் செய்யாத கொடிய பாவியாகிய எனக்குக் கணவனும் புத்திரனும் இல்லையே; இனி, யான் பெறுவது கன்றின் வால் அல்லாமல் வேறுளதோ! ஆதலால், கன்றின் வாலைப் பற்றிக்கொண்டு நீராடக் கடவேனே” என்று தன் மகளை நோக்கித் தெரிவித்தாள். உடனே பிராட்டியார் தன் உயிர்த் துணைவராகிய சிவபெருமான்

திருமுன் சென்று வணங்கித் தன் தாயின் குறையை எடுத்து விண்ணப்பித்தாள். அப்போது சுந்தர பாண்டியர், சுவர்த்கத்திலே இந்திரனோடு ஒரு சேர வீற்றிருந்த மலயத்துவச பாண்டியன்மேலே திருவுளஞ் செலுத்தினர். சிவபெருமானின் திருவுள்ளத்தினை அறிந்த மலயத்துவச பாண்டியன் இந்திரனுடைய ஆசனத்தை விடுத்து ஒரு தெய்வ விமானத்தின்மேல் மதுரை எழுகடல் வாவியினிடத்து வந்து இனிய அருள் அமுதமாகிய தன் மருகரை 'யான் பெண்பெற்றதனல் பெற்ற பெரும் பேறு இது' என்று எதிர் கண்டு திருவடிகளை வணங்க முற்பட்டான். அதனைக் கண்ட சுந்தர பாண்டியர் தமது மாமன் என்ற முறையினலே திருக்கரத்தினல் தடுத்து மலயத்துவச பாண்டியனை எதிர்ந்து தழுவினர்.

**மலயத்துவசனும் காஞ்சனமாலையும் கடலாடுதல்**

சுந்தர பாண்டியர் திருவுளங்களித்து மலயத்துவசனை அருளோடு நோக்கி, 'நின் அன்பு நிறைந்த மனைவியோடும் சென்று தீர்த்தம் ஆடுவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினர். மலயத்துவச பாண்டியன் தான் முற்பிறப்பில் தவங்கிடந்து அரிதிற் பெற்ற தடாதகைப் பிராட்டியார் எதிர்வந்து தன்னைத் தழுவத் தானும் தழுவி மலையரையனைப்போல அளவற்ற பெருமகிழ்ச்சியை அடைந்து, 'பிராட்டியாரின் திருமணக் கோலத்தை என் தவக் குறைவால் காணப்பெற்றிலேன்' என்று கொண்ட கவலையை மகிழ்ச்சியாகிய தேனையுண்டு மறந்தான். தூரத்தே சென்ற தலைவனைச் சில காலம் கழியக் கண்ட தலைவியைப்போலக் காஞ்சனமாலை மங்கல நாண் முதலியஅணிகள் அணிந்து விளங்கிய மலர்ந்த ஒரு பொற்கொடி போல் தன் கணவன் எதிரே நாணத்தோடு சென்று வணங்கினள். பிறகு காஞ்சனமாலை தனது கையிலே [1] பவித்திரம் அணிந்து திருவைந்தெழுத்தை உச்சரித்து, அந்தணர் கூறிய சங்கற்ப முறைப்படி தன் கணவன் கையைப்பிடித்துக்கொண்டு பேருவகையோடு கடல் நீரில் ஆடினள்.

---

1. பவித்திரம் - இது தருப்பையினல் செய்யப்பெற்றது : பரிசுத்தத்தின் பொருட்டுத் தரிப்பது.

**காஞ்சனமாலையுடன் மலயத்துவசன் சிவபுரம் சேர்தல்**

காஞ்சன மாலையும் மலயத்துவச பாண்டியனும் நீராடிக் கரையேறினவுடனே சோமசுந்தரக் கடவுளின் திருவருளினாலே பாசம் ஒழிந்தவர்களாய் உமையொருபாகரது அருள் வடிவத்தைப் பெற்றார்கள். ஒளி பொருந்திய நீலகண்டமும், நான்கு தோள்களும், நெற்றிக் கண்ணும்கொண்ட **சிவசாரூப வடிவை** மண்ணுலகத்தவர் கண்டு வியக்குமாறு விளங்கினர். அப்போது வானின்றும் நழுவி நிலமிசை விழுகின்ற சூரியனைப் போலச் சிவலோகத்தினின்றும் ஒரு தெய்வவிமானம் மண்மிசை வந்து இறங்கியது. முக்கண்ணராகிய சுந்தர பாண்டியரின் ஆணையால் மலயத்துவச பாண்டியன் காஞ்சனமாலையோடும் எல்லாத் தெய்வங்களும் வணங்க அவ்விமானத்தில் ஏறினன். விண்ணவர்கள், தேனைச் சிந்தும்படி பூமழை பொழிந்தனர்; தூய மறைகளும், தேவதுந்துபிகளும் எங்கும் கேட்கும்படி முழங்கின. திவ்விய விமானம் மேலே எழுந்தது. தேவதுந்துபிகளின் ஒலி நாணி அடங்கியதுபோலும் என்று சொல்லும்படி **அர அர** என்னும் முழக்கம் எங்கும் பரவியது. முனிவர்கள் வாழ்த்தவும், தேவர்கள் முதலியோர் துதிக்கவும், சிவலோகத்தை நோக்கிச் செல்வாராயினர்.

அங்ஙனம் செல்பவர் முதலில் தம் வடிவமாகி, உலகினை முறை செய்கின்ற செங்கோலைக் கைக்கொண்டு, பின்பு தமது திருவுருவத்தைக் கொடுத்தருளிய மருகனாகிய சுந்தரபாண்டியரும் அருகில் நின்ற தடாதகைப் பிராட்டியாரும் திரும்பி அரண்மனையிற் சென்று இனிது வீற்றிருக்கத் தரிசித்தார்கள்; "தொன்று தொட்டுள்ள இருவினை வயத்தினாலே உடம்பினைப் பொருந்தும் மனிதரைப்போல முன்னைத் திருவுருவம் மாறி உலகத்திற்கெல்லாம் மாதாவாகிய உமாதேவியே மகளாகவும், தந்தையாகிய சிவபெருமானே மருகனாகவும் வந்தருளுமாறு என்ன தவத்தினை நாம் செய்தோம்! இத்தவம் பிறரொருவராலே செய்தல் அரிது அரிது" என்று எண்ணி வியந்தார்கள். கன்றினைப் பிரிந்து செல்லும் பசு அடிக்கடி திரும்பிப் பார்த்தல்போலச் சிவபெருமானுடைய திருவடிகளிலே ஒன்றிய அன்பு ஈர்த்தெழச் சென்று தமது உள்ளத்துடன் இரு

விழிகளும் அடிக்கடி திரும்பிப்பார்க்க விமானத்தைக் கை கூப்பி வணங்கிக்கொண்டு, பூலோகத்தினின்று நீங்கிச் (சந்திர சூரியர் முதலியோர் வசிக்கும்) புவலோகத்தையும், (இந்திர னிருக்கும்) சுவலோகத்தையும், (இருடிகள், சித்தர்கள் வசிக் கும்) மகலோகத்தையும், (பிதிர், தேவர்கள் முதலியோர் இருக் கும்) சனலோகத்தையும், (சனகர், சனந்தனர் முதலியோர் தவஞ்செய்யும்) தவலோகத்தையும், (பிரமதேவன் இருக்கும் சத்தியலோகத்தையும், திருமால் வசிக்கும் வைகுண்டமாகிய நவலோகத்தையும் கடந்து சிவலோகத்தினை அடைந்தனர்.

**தடாதகைப் பிராட்டியார் மகிழ்ந்து கூறுதல்**

அதன் பின்பு, தருமவல்லியாகிய பிராட்டியார் சுந்தர பாண்டியரின் திருவடிகளை வணங்கித் தம்மைப் பெற்றவர்க்கு வேதப் பொருளாகிய சிவபெருமான் தமது சாரூபத்தை அளித் தருளிய கருணையை எண்ணி மனத்தில் உண்டான மகிழ்ச்சி, வாயுள் அடங்காமல் வெளிப்படுவதைப்போல, இறைவனின் இரு திருச்செவிகளிலும் தமது திருவாயாகிய செங்குமுத மலரிலே நிறைந்த இனிய தேனை நிறைப்பதுபோலப் பன்முறை துதித்துப் பின் வருமாறு கூறலானார்: "அளவில்லாத தேவர் களுக்கும் மற்றவர்களுக்கும் வேண்டுவன அளிக்கும் காமதேனு வின் இளங்கன்றுக்குக் குறைவுமுண்டோ? என்னுடைய தாய் நீராட விரும்பியது கடல் ஒன்றே; என்பொருட்டு ஏழு கடலையும் இங்கே அழைத்தருளினீர்; என்தாய் நீராடுதற்குத் தேவருலகத்திலிருந்த என் தந்தையையும் அழைத்தருளினீர்; நீராடியபின் இருவருக்கும் உம்முடைய சாரூப்பியத்தை நல்கிச் சிவலோகத்தையும் தந்தருளினீர்; பாண்டியர் மரபு ஒழிந்தது என்று சொல்லப்படும் பழி ஏற்படாதவாறு செங்கோல் நடாத்தி வருகிறீர்போலும்; இனி இந் நிலைமைக்கு ஒரு இடையூறும் இல்லையே?" என்று விண்ணப்பஞ் செய்தார். பாண்டியர் பெருமானாகிய சிவபெருமான் தமது நாயகியின் உட்கோளைத் திருவுளங்கொண்டு மகிழ்ந்திருந்தார்.

செய்யுள் — 31
ஆகச் செய்யுள் — 921

# 11. உக்கிர பாண்டியன்[1] திருவவதாரப் படலம்

**பாண்டியர் குலம் மேன்மைபெறக் காரணம்**

பிறை முடித்த சுந்தர பாண்டியனாகிய இறைவன், நில வுலகில் [2]அளவற்றகாலம் தம்முடைய திருவடியின் நிழலைப் போல யாவருக்கும் வெண்கொற்றக் குடையால் நிழல்செய்து கருணையுடன் கூடிய செங்கோல் நடாத்தி, முறைபுரிந்து ஒழுகு வாராயினர். தாம் திருமாலாலும், பிரமனாலும், வேதம் முதலிய கலைகளாலும், காண்டற்கரிய பரம்பொருளாகவும், தம்முடைய அன்பர்களுக்கு எக்காலத்தும் எளியவராகவும் விளங்கும் மேன்மையினை யாவரும் அறியும் வண்ணம், அன்பு மிகுந்த உள்ளத்தினையுடைய மலயத்துவச பாண்டியனுக்கும் அவன் மனைவியாகிய காஞ்சனமாலைக்கும் உமாதேவியைப் புதல்வி யாகுமாறு அருளினார்; அதற்கேற்பத் தாமும் மருமகனாகி, உலகம் முழுவதும் வெண் கொற்றக் கொடையின் நிழலிலே தங்கியிருக்க அரசு செய்தார். அதனால் சேர சோழ பாண் டியரென்னும் மூவேந்தர்களில் சந்திரகுலத்துத் தோன்றிய பாண்டியர் குடியே மிகச் சிறப்புற்று விளங்கியது. மேலும் அச்சுந்தர பாண்டியரே அக்குலம் எஞ்சியுள்ள ஒரு குறை யையும் போக்கத் திருவுளங்கொண்டார்.

**தடாதகைப் பிராட்டியார் கருப்பவதியாக விளங்கல்**

ஆன்மாக்களின்பொருட்டு ஒன்றைச் செய்தலும், அதனைச் செய்யாது விடுத்தலும், மற்றொன்று செய்தலும் ஆகிய இவற்றை உடையவரும், தோற்றமும் அழிவுமில்லாத பரம யோகியும், நன்மை, தீமை, வெறுப்பு, விருப்பு, நட்பு, பகை ஆகிய இவற்றை விளைக்கின்ற மாயையை இயல்பாகவே வென்றவருமாகிய சோமசுந்தரக்கடவுள் செய்கின்ற விநோதச் செயல்களை அளந்து காணவல்லவர் யாவர்? ஒருவரும் இல்லை.

---

1. பா-ம்: உக்கிர குமார பாண்டியரது; உக்கிர பாண்டிய தேவர்

2. அளவற்ற காலம் - இங்குப் பதினாறு தெய்வ வருடமாகும்; இதனை, "ஆண்டகை தெய்வ ஈரெட்டு ஆண்டணி மவுலி சூடித், தூண்டுமா வரசர் போகந் துய்த்துல காள லாலே" எனவரும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராண அடிகளால் அறியலாகும்.

ஒன்றினைச் செய்கை செய்யா(து)
ஒழிகைவே றென்று செய்கை
என்றிவை யுடையோன் ஆதி
ஈறிலாப் பரம யோகி
நன்றுதீ(து) இகழ்ச்சி வேட்கை
நட்(பு)இகல் விளக்கும் மாயை
வென்றவன் செய்யும் மாயை
விருத்தியார் அளக்க வல்லார்?

இந்திர சாலவித்தை காட்டுபவனைப்போலச் சிவபெருமான் தம் நெற்றிக் கண்ணிலே தோன்றியருளிய முருகப் பெருமானை அளவிறந்த உயிர்களையும், உலக முழுவதையும் கருப்பம் எய்தாது பெற்றருளிய அம்மையாகிய தடாதகைப் பிராட்டியாரிடத்தே தோன்றும் வண்ணம் திருவுள்ளங்கொண்டார்.

அச்செல்வனும் அங்கு வருகைக்கேற்ப,அன்னையாரின்தோழிகளும், பிறரும் வணங்கி, "அம்மையே! நினது திருவுருவத்திற்கேற்ப உண்டாகிய கற்பத்தோற்றத்தின் அழகையும் சிறப்பையும் மாதந்தோறும் செய்யும் திருவிழாப்பொலிவையும் கண்டுகளிக்க நாங்கள் பெருவிருப்பங் கொண்டோம்" என்றனர். அம்மையாரும் அவர்கள் விருப்பிற்கு இசையக் **கருப்பவதி**யாயினர். எல்லாப் பெண்களையும் போலவே, அம்மையாருக்குத் திங்கள்தோறும் கருவுற்றதற்கேற்ப மெய்வேறுபாடும் தோன்றிற்று; நாவினுக்கு இனிய சுவையும், விருப்பமும் ஓங்கிற்று; எளிய பொருள்களையும் அரிய பொருள்களையும் அம்மையார் விரும்பலானர். போகபூமியிலுள்ள பெறற்கரிய உணவுகளையும், நாகருலகத்திலுள்ள அமிழ்தினையும், சந்திர மண்டலத்துண்டாகும் சுவைமிக்க அமிழ்தினையும், பொன்னுலகத்திலுள்ள அமிழ்தினையும் சிவகண நாதர்கள் கொண்டு வந்து கொடுத்தனர். புண்ணியமே வடிவமாகிய முனிவர்களும், வேதங்களில் வல்ல அந்தணர்களும் வந்து அரச மரபினர்க்குரிய சடங்குகளை மதுரைப்பதியே மங்கல விழாவில் முழுகி நிற்க மாதங்கள்தோறும் செய்து முடித்தனர்.

**உக்கிர குமாரர் திருவவதாரம்**

கன்னி நாடாகிய பாண்டி நாடு செய்த அறத்தின் பயனை அடையவும், மாசற்ற துறவிகளின் மனத்தைப்போல் ஆகாயம் களங்கமின்றி விளங்கவும் **திங்கட்கிழமையும் திருவாதிரை நாளும்** செய்த வழிபாட்டின் பயனைப் பொருந்தவும், **வியாழன் வந்து கேந்திரத்தில்** ஒளியுடன் ஏறி விளங்கப்பெற்ற நல்ல முகூர்த்தம் வாய்க்கவும், நான்மறைகள் தாமே முழங்கவும், தேவர்கள் மந்தார மலர் மழையைப் பொழியவும், மலர்கள் மலர்ந்து ஆடும் மின்னற்கொடிபோல எங்கும் அரம்பையர் ஆடவும், தேவ துந்துபி ஐந்தும் ஒலிக்கவும், கொற்றவையும், இலக்குமியும், சரசுவதியும் இறுமாப்படையவும், அந்தணர்கள் மகிழ்ச்சி கொள்ளவும், வேள்வித்தீ ஆகுதி செய்து வளர்ப்பதற்கு முன்னே குண்டத்தின்கண் வலஞ்சுழித்து ஓங்கி ஒலித்தாடவும், திசை யானைகள் எட்டும் ஆதிசேடனும் இளைப்பாறவும், இந்திரனுக்கும், மேருமலைத் தலைவனுக்கும், வருணனுக்கும் இடத்தோள் துடிக்கவும், ஆலத்தை அமுதமாக உண்ட அண்ணலும் பிராட்டியும் கொண்டருளிய திருக்கோலத்திற் கேற்பக் காலையில் உதித்த இளங்கதிரவனைப் போலவும், அந்நாளில் அவதரித்த முருகக் கடவுள் போலவும் தடாதகைப் பிராட்டியாரிடத்தே [1] **ஒரு திருக்குமரன்** அவதரித்தருளினன்.

**திருமால் முதலியோர் வந்து கண்டுசெல்லும் பெருமகிழ்ச்சி**

தடாதகைப்பிராட்டியார்,தோன்றிய தம்புதல்வனைஎடுத்து உச்சி மோந்து தழுவி ஏந்தித் தம் கணவரது திருக்கரத்திலே

1. இத்திருக்குமாரன் பிறக்கும்பொழுதே சடையுடன் பிறந்தான்; அதனால் இவனுக்கு 'கோச்சடிலவருமன்' எனப் பெயர் இட்டனர் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணங்கூறும். இதனை, "பனிறலைப் பாந்தட் சுமைதிருத் தோளில், தரித்துலகு அளிக்குந் திருத்தகு நாளில், நெடுநாள், திருவயிற்று அருளுடன் இருந்த, நெடுஞ்சடை உக்கிரற் பயந்தருள் நிமலன்" எனவரும் கல்லாட அடிகளாலும், "வேலோன் விமலைதடா தகைவயின் உக்கிரனுர் என்றோர், நன்மகவாய்ச் சடையொடு முற் பவிக்க" எனவரும் கடம்பவன புராண அடிகளாலும் அறியலாம். இக் கோச்சடில வருமன் (உக்கிரகுமாரன்) தன்னுட்சியில் அந்தணர்களுக்கு முற்றூட்டாகக் கொடுக்கப்பெற்ற அகரம் என்னும் ஊர் 'கோச்சடை' எனப் பெயர் பெறும்; இது மதுரைக்கு மேற்கே உள்ளது.

கொடுத்துப் பின்பு வாங்கித் தம் கொங்கைகளினின்றுஞ் சொரியா நின்ற பாலைச் செவ்வாம்பல் மலரில் சந்திரன் தனது வெள்ளிய நிலவைப் பெய்தல்போலத் திருவாயிற் புகட்டி உண்பித்தார். திருமால், பிரமன், இந்திரன் முதலாகிய தேவர்களும், புண்ணிய முனிவர்களும், மற்றவர்களும் தங்கள் தங்கள் மனைவியர்களோடு சுந்தர பாண்டியரின் திருமாளிகையை அடைந்தனர். சேரனும் சோழனும், வடநாட்டு மன்னர்களும், குறுநில வேந்தரின் வாழ்க்கைச் செல்வமுடைய தொண்டை நாட்டரசனும் எண்ணில்லாத சேனைகள் சூழக் கடல்கள் பொங்கி வருவனபோல் ஆரவாரத்துடன் வந்தார்கள். சுந்தர பாண்டியரையும் தடாதகைப் பிராட்டியாரையும் கண்டு முறைப்படி துதித்து வாழ்த்திப் புதல்வன் பிறந்தது குறித்து மகிழ்ச்சி மொழிகளைப் பேசி, அவர்கள் திருமுகக் கருணையைப் பெற்றுத் தத்தம் இடங்களுக்குச் செல்வாராயினர்.

அப்போது அவர்களில் சிலர், "இப்பாண்டியர் பெருமானுக்கு முருகனே குழந்தையாய் வந்து தோன்றினன்" என்று கூறுவர்; "கற்பிற் சிறந்த தடாதகைப் பிராட்டியார் செய்த புண்ணியத்தின் பயன் இம்மகப்பேறே" என்று சிலர் கூறுவர்; "கட்டழகினால் மன்மதனும் பெண் தன்மையை விரும்பும் இக்குமாரனது செங்கோலின் ஆணை எழுகடல் சூழ்ந்த இந்நிலவுலகம் ஒன்றனைமட்டுமா காக்கும்? ஏழு உலகங்களையும் பாதுகாக்கும்" என்று சிலர் கூறுவர்; "தோற்றமும் முடிவுமில்லாத சோமசுந்தரக் கடவுளது திருவுள்ளத்தில் கனிந்து தோன்றிய கருணைபோலும் இப்புதல்வன் திருவவதாரத்திற்குக் காரணம், மக்களின் உயர்ந்த தவமோ? பாண்டி நாட்டினர் செய்த தவமோ? தேவர்களின் மேலாய தவமோ? வேள்வி புரியும் அந்தணரின் தவமோ? முனிவர்களின் சிறந்த தவமோ?" என்று பலர் கூறுவர். "அறம் பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் பொருள்களும் தனித்தனியே செய்த பெருந் தவத்தின் பயனோ? இச் செல்வப் புதல்வனின் தோற்றம்" என்று ஒருவருக்கொருவர் வினவிக் கொண்டு மகிழ்ச்சிப் பெருக்குடன் சென்றார்கள்.

**மதுரை மாநகர மக்களின் மகிழ்ச்சி**

மதுரை மாநகர மக்கள் எல்லோரும் தத்தம் வீடுகள் தோறும் மங்கலவிழா இசைக்கருவி முழங்க, நெய்யாட்டு விழாக் கொண்டாடினர். அவர்கள் அந்தணர்களுக்குக் கொடுத்த தான நீரின் பெருக்கு அலைகடலில் சென்று புகுந்தது. அத் தான நீர் வெள்ளம், மகிழ்வால் சிந்திய பொற்சுண்ணப் பொடியையும், நெற்பொரியையும், அரிசியையும், அறுகின் குப்பையையும், பனி நீரையும், சந்தனத்தையும், எண்ணெயையும், கத்தூரிக் குழம்பையும் பசை இன்றி வாரிக்கொண்டுபோய் நகர முழுவதையும் தூய்மை செய்தது. செம்பொன்னால் செய்த துருத்தியையும், துளைகளையுடைய குழலையும், வட்டமாகப் பொன்னால்செய்த சிவிறியையும், வெள்ளியாலான அண்டை என்னும் நீர் வீசுங் கருவிகளையுங்கொண்டு மகளிரும் ஆடவரும் ஒருவர் மீது ஒருவர் நீரினை மாறி மாறி வீசி விளையாடினார்கள். அப்போது மன்மதனும் அவர்கள் மேல் ஐங்கணைகளையும் மாறி மாறி விடுவானாயினான்.

**செல்வப் புதல்வனுக்குப் பெயரிடுதல் முதலியன**

இவ்வாறு மதுரையம்பதி களிப்பில் மூழ்கித் திளைத் திருக்கையில் சுந்தர பாண்டியர், திருவாதிரையோடு கூடிய திங்கட்கிழமையாகிய நல்ல நாளில் வியாழன் கேந்திரமேறி இருக்கும் தூய லக்கினத்தில் அவதரித்த தம் திருக்குமாரருக்குச் சாதகன்ம முதலியவற்றை அரசர்க்குரிய வேத முறைப்படி நடாத்தினார்; கடற் செல்வனாகிய **வருணன்,** மலையின் சிறைகளை அறுத்து வெற்றிகொண்ட **இந்திரன்,** உலகத்தினைத் தாங்கும் தெய்வத் தன்மை பொருந்திய மேருவென்னும் **மலையரசன்** முதலிய பகைவர்கள் தன்னைக் கண்டபொழுதே தங்கள் வீரங்கெட இறுமாப்பு நீங்கி அச்சம் தோன்றச் செய்தற்குரிய காரணத்தினாலே, அக் குழந்தைக்கு, '**உக்கிர வருமன்**' என்று நாமகரணஞ் செய்தருளினார்; நான்காம் மாதத்தில் சந்தி மிதித்தலும் (கோயிலுக்குக் கொண்டு போதலும்), ஆறும் மாதத்தில் அன்னம் ஊட்டலும், பதின் மூன்றும் மாதத்தில் மயிர்வினை முடித்தலும் ஆகிய கிரியைகளை

யும், ஐந்தாண்டிலே வேத முறைப்படி பூணூலணியும் விழா வையும் முடித்தருளினர்.

### உக்கிர குமாரரின் கலைப் பயிற்சி

பின்னர் தேவகுருவாகிய வியாழபகவான் சுந்தர பாண்டியர் பணித்தவாறே பதவொழுங்கும், பதங்களை உச்சரிக்கும் முறையாகிய கனமும் சடையும், சாகை (கிளை)யும், ஆரணமும், (ஆரண்யகமும்) நிரம்பிய வேத முதலிய கலைகளையும், வெற்றிக்குரிய சிறந்த விற்கலையையும், வாட்பயிற்சியையும், யானை யேற்றத்தையும், குதிரை யேற்றத்தையும், தேரின் ஏற்றத்தையும், பிறவற்றையும் உக்கிரவருமருக்குக் கற்பித்தார். உக்கிரவருமர் நூல்களை ஆசிரியனிடமிருந்து கற்க வேண்டுமென்னும் ஒரு கோட்பாட்டிலே ஒருமுறை கேட்டவுடனே அறுபத்து நான்கு கலைகளையும் ஒருங்கு அறிந்து கொண்டார்; சிவபெருமான் அல்லது வேறு யாவராலும் அறிவிப்பதற்கு அருமையால், பாசுபதப் படைப் பயிற்சியை மட்டும் சிவபெருமானிடத்தே தெளிந்துகொண்டார். எட்டு வயதினுள்ளே அளவிறந்த கலைகள் அனைத்தையும் கற்றுணர்ந்த பண்டிதராகிய உக்கிரவருமர், பழைய முற்றுணர்வு உடையவராயும், தன் இருமுது குரவரையும் வணங்கி வாழ்த்த வல்லுநராகியும், அவர்கள் மகிழ்ச்சி கொள்ளும் பாத்திரராகியும் விளங்கினர்.

### உக்கிர குமாரரின் திருவிளையாடல்

உக்கிரவருமர் கலை பயின்ற பிறகு வெற்றிச் செல்வத்தையுடைய ஆண் சிங்கம் போன்ற இளைஞர்களோடும் சென்று யானைகளோடு யானைகளையும், ஆட்டுக் கிடாய்களோடு ஆட்டுக் கிடாய்களையும், சேவல்களோடு சேவல்களையும் பொருத்திச் செருக்குடன் போரிடச் செய்து வெற்றியடைந்து மகிழ்வார்; ஒளிவீசும் மணிகள் பதிக்கப்பெற்ற பலகையிலே தேர், யானை, குதிரை, காலாள் என்னும் நான்குறுப்புக்களைக்கொண்ட சதுரங்கம் ஆடி வெற்றி பெறுவார்; காற்றினும் கடிது செல்லும் குதிரை மீதேறிப் பல காததூரம் சென்று திரும்புவார்; கூற்றுவனிலும் கொடிய கோபத்தையுடைய யானைமீதேறிச்

செலுத்துவார்; வையை நதியிலும், பூங்காவிலும், பொய்கையிடத்தும் இன்பம் நுகர்ந்து விளையாடுவார்; இளைஞர்களோடு மற்போர்புரிந்து வெற்றிபெறுவார்; பொதியமலையை அடைந்து வேட்டையாடுவார்; அங்குள்ள முனிவர்களின் வாழ்த்தைப் பெறுவார்; அவர்கள் தவத் தொழில் முட்டின்றி முடிதலை வினவுவார்; அவர்கள் மகிழ்ந்தளிக்கும் கிழங்குகளையும், கனிகளையும் கைக்கொண்டு திரும்புவார். இவ்வாறு பதினைந்து ஆண்டுகள் கடந்தன. பதிஞமாண்டின்கண் சூரபன்மனைத் துணித்த தங்கள் தலைவனாகிய முருகக் கடவுளே இவன் என்று உணர்ந்து மயிலும் வேலும் நீங்காது காக்கும் தன்மைபோல வேற்படையினைத் தாங்கிய உக்கிரவருமர் மங்கைப் பருவமுற்ற மகளிர் சாயலும் அவர்களின் கண்களும் தம் அருகே சூழக் காளைப் பருவமுற்றுத் திகழ்ந்தார்.

**உக்கிரவருமரின் முப்பத்திரண்டு இலட்சணம்**

உக்கிரகுமார பாண்டியரது தாமரைபோன்ற **திருவடியையும்**, கண்டவர் கண்ணையும் மனத்தையும் கவரும் திரண்டு நீண்ட சங்கினைப்போன்ற **கணைக்காலையும்**, என்பின் வடிவுதோன்றாத **முழங்காலையும்**, யானையின் துதிக்கைபோன்ற திரண்ட **தொடையையும்**, சிறுத்த **வயிற்றினையும்**, ஆழ்ந்த **உந்தியையும்**, கண்ணடி போன்ற அகன்ற **மார்பையும்**, வீணைத்தண்டைப் போன்று முழந்தாளளவும் தொடும் நீண்ட **கைகளையும்**, இரண்டு மேருமலையை ஒத்த மாலையணிந்த **தோள்களையும்**, வலம்புரிச் சங்கினைப் போன்ற **கண்டத்தையும்**, செந்தாமரை மலரை ஒத்த **முகத்தையும்**, சுந்தர பாண்டியர் முன்னர் பொது வகையால் பார்த்துப் பின்னர் சிறப்பு வகையால் ஆராயத் தொடங்கினர்.

வயிறு, தோள், நெற்றி, மூக்கினடி, மார்பு, கையடி ஆகிய இந்த **ஆறு** உறுப்புக்களும் உயர்ந்திருந்தால் சிறந்த செல்வமுண்டாகும். கண், கபோலம், கை, மூக்கின் முனை, மார்பு ஆகிய இந்த **ஐந்து** உறுப்புக்களும் நீண்டிருந்தால் அவை, நன்மையை அளிக்கும். குடுமி, தோல், விரலின்கணு, நகம், பல் ஆகியஇந்த **ஐந்து** உறுப்புக்களும் சிறுத்திருந்தால் நீண்ட ஆயுள் மிகும். கோசம் (ஆண்குறி), கணைக்கால், நாக்கு, முதுகு ஆகிய

இங் **நான்கு** உறுப்புக்களும் குறுகி இருந்தால் செல்வப் பயனாகும். தலை, நெற்றி ஆகிய இந்த **இரண்டு** உறுப்புக்களும் அகன்றிருந்தால் நன்மையுண்டாகும். உள்ளங்கால், உள்ளங் கை, கடைக்கண், உதடு, மேல்வாய், நா, நகம் ஆகிய **ஏழு** உறுப்புக்களும் சிவந்திருந்தால் நன்மையுடன் சிறந்த இன்பம் திகழும். மார்பு, கழுத்து, கொப்பூழ் ஆகிய இந்த **மூன்று** உறுப்புக்களும் முறையே வலிமையும், ஓசையும், ஆழமும் பெற்றிருந்தால் உலகில் யாவருக்கும் மேம்பட்ட புகழை உண்டாக்கும்.[1]

வயிறுதோள் நெற்றி நாசி மார்புகை யடி**இவ் வாறும்**
உயரில்வான் செல்வ னாகும் ; ஒளிகவர் கண்க போலம்
புயல்புரை வள்ளற் செங்கை புதுமணங் கவருந் துண்டம்
வியன்முலை நடுமார்(பு) **ஐந்தும்** நீண்டவேல் விளக்கும் நன்மை.

நறியபூங் குஞ்சி தொக்கு விரற்கணு நகம்பல் **ஐந்தும்**
சிறியவேல் ஆயுள் ; கோசம் சங்கைநா முது(கு)இங் **நான்கும்**
குறியவேல் பாக்கி யப்பே றும்;சிரம் குளம்என்(று) ஆய்ந்தோர்
அறியுமிவ் வுறுப்பு **இரண்டும்** அகன்றவேல் அதுவும் நன்றும்.

அகவடி அங்கை நாட்டக் கடையிதழ் அண்ணம் நாக்கு
நகமிவை **ஏழும்** சேர்ந்த நன்மையால் பெறுமா இன்பம் ;
இகல்வலி ஓசை நாபி என்றிவை **மூன்றும்** ஆழ்ந்த
தகைமையால் எவர்க்கும் மேலா நன்மைசால் தக்கோன் என்ன.

**அரசர் தம் குமாரரின் விசேட குணங்களைக்கண்டு மகிழ்தல்**

இவ்வாறு உடலிலுள்ள முப்பத்திரண்டு இலட்சணங் களுடன் நற்குணங்களையும் உக்கிர குமாரரிடத்தே சுந்தர பாண்டியர் ஆராய்ந்தறிந்து 'இவன் பூமண்டல முழுவதையும் பொதுக்கடிந்து அரசியற்ற வல்லவன் ; வாழ்நாள் மிகப் பெறு வான்; புகழ், நீதி, சதுரப்பாடு, நன்மனம், சிவபத்தி, அன்பு, அமைதியுள்ளம், அருள், ஈகை, கல்வி, யாவராலும் வெல்லுதற்

---

1. இங்கு, ஆறு, ஐந்து, ஐந்து, நான்கு, இரண்டு, ஏழு, மூன்று ஆகிய முப்பத்திரண்டு உறுப்புகளும் நூல்களில் கூறியபடி இருத்தல் முப்பத்தி ரண்டு இலட்சணம் என்பர்.

கரியாரை வெல்லுதல், தேவராலும் செல்லற்கரிய தேயங்களினும் சென்று திறைகொள்ளுதல் முதலாய குணங்களை உடையவனாகி, உலகெலாம் ஒரு குடையின்கீழ் ஆளும் ஒப்பற்ற அரசனாக வாழ்வான்' என்பனவற்றை உணர்ந்து மகிழ்ந்தார்; 'இவனுக்குப் பின்பு திருமுடி புனைவோம்; முன்னர்த் திருமணம் செய்தல் வேண்டும்' என்று திருவுளங்கொண்டு சுமதி முதலிய அமைச்சர்களோடு கூடி ஆராய்ந்தார்.

செய்யுள் — 45

ஆகச் செய்யுள் — 966

---

# 12. [1] உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்

**உக்கிரவருமருக்குப் பெண் தேடுதல்**

சுந்தர பாண்டியர் தம் அருமைத் திருக்குமாரராகிய உக்கிர வருமருக்குத் திருமணஞ் செய்யக் கருதும் தன்மையை அமைச்சர்கள் உணர்ந்தார்கள்; உடனே, மூதறிஞர்களோடு கூடி, நிலவுரிமைச் செல்வம், சிறந்த மரபு, குடிப்பிறப்பு, புகழ் ஆகிய இவற்றுல் நம்முடைய அரசருக்கு இசையத் தக்க குலத்தினையுடைய அரசர் யாவர் என்று ஆராய்ந்து, வடநாட்டிலே நீர்வளமிக்க **மணவூர்** (கல்யாணபுரம்) என்னும் நகரத்துக்கு அரசனும், சூரியகுலத்தில் உதித்தவனுமாகிய **சோமசேகரன்** என்பவனிடத்துத் திருமகள்போல் அவதரித்திருந்த [2] **காந்திமதி** என்னும் கன்னியைத் திருமணம் பேசக் கருதி இருந்தார்கள்.

**சோமசேகரன் தன் மகளை மதுரைக்கு அழைத்து வருதல்**

அன்றிரவிலே, சோமசுந்தரக்கடவுள் சூரியன் வழித்தோன்றலும், சிறந்த வள்ளலுமாகிய சோமசேகரனின் கனவில் எழுந்தருளி, "அரசனே! [3] நாம் மதுரைப்பதியில் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரான்; நீ பெற்ற திருமகளையொத்த காந்திமதியை மதுரைப்பதிக்கு அழைத்துக்கொண்டுபோய்ச் செழியர் பெருமானுகிய சுந்தரபாண்டியனுடைய திருக்குமாரனுக்குத் திருமணம் செய்து கொடுப்பாயாக" என்று கூறியருளினுர். அம்மொழிகளைக்கேட்ட சோமசேகரனுடைய மனமும் முகமும் மலர்ந்தன. உடனே அவன் கண் விழித்து எழுந்தான்; கைகளைக் குவித்துச் சிவபெருமான் திருவருள் தனக்கு எளிதில் கிட்டிய செயலை நினைந்து நினைந்து அன்பாகிய வெள்ளத்தில்

---

1. பா - ம்: உக்கிர குமாரனுக்கு.

2. இம்மங்கையை 'வடிவணங்கு' என்றும் பெயர் கூறுவர் பெரும்பற்றப்புலியூர் நம்பி.

3. இங்கு, "அன்னம் பயில் பொழில் ஆலவாயின் மன்னிய சிவன் யான்" எனவரும் திருமுகப் பாசுரமும் சிந்திக்கற்பாலது.

திளந்தான்; வைகறைப் பொழுதிலே, நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு அமைச்சர்களுடன் கலந்து நால்வகைச் சேனைகள் சூழவும், பல்வகை இயங்கள் ஒலிக்கவும், திருமணத் திற்கு வேண்டும் செல்வத்துடன் தனது திருமகளைத் தோழியர் களோடு தேரின்மேல் ஏற்றி அழைத்துக்கொண்டு மதுரைப் பதியை நோக்கி வழிக் கொண்டான்.

**அமைச்சர் முதலியோரும் சோமசேகரனும் சந்தித்தல்**

முன்னை நாளில் மணவினை பேசுதற்கு நினைத்தபடியே அமைச்சர்கள் சுந்தரபாண்டியரின் சுற்றத்தாரோடு மதுரையி னின்றும் புறப்பட்டு மணவூரை நோக்கி வழிக்கொண்டார்கள். அப்போது, அவர்கள் சோமசேகர மன்னனைக்கண்டு, "முருகக் கடவுளை ஒத்தவனாகிய உக்கிர குமாரனுக்கு உன் புதல்வியைத் திருமணஞ் செய்து தருவாயாக" என்றார்கள். அதுகேட்ட சோமசேகர மன்னன், நேற்றிரவு தனக்குக் கனவிலே சோம சுந்தரக்கடவுள் எழுந்தருளிவந்துஅருளிச்செய்த வார்த்தையை யும், தன் குலம், குடி முதலிய மேம்பாட்டையும் அவர்களுக்கு மொழிந்து திருமணஞ் செய்துகொடுக்க உடன்பட்டான். அந்நற்செய்தியைக் கேட்ட அமைச்சர்கள் மனமகிழ்ந்து அதனை முன்னின்று சுந்தர பாண்டியருக்கு உணர்த்தும் பொருட்டுத் தூதர்களை விடுத்துச் சோமசேகர மன்னனோடும் மதுரைப்பதியை வந்தடைந்தார்கள். சூரியன் வழித்தோன்ற லாகிய சோமசேகரன் சந்திரன் வழித்தோன்றலாகிய சுந்தர பாண்டியரை எதிர் சென்று வணங்கினான். அச் சுந்தரபாண்டி யர் அவனை எதிர்கொண்டு தழுவி முகமன்கூறி, அழகிய அரண் மனை ஒன்றிலே தங்கியிருக்குமாறு விடை கொடுத்தனுப்பினார்.

**உக்கிர வருமருக்குத் திருமண ஏற்பாடுகள்**

அதன்பின் அமைச்சர்கள் தம்முட் கூடித் திருமணநாளை நிச்சயித்துக்கொண்டு அரசர்கள் அனைவருக்கும் திருமண வோலை விடுவித்து, மதுரை மாநகரை அலங்கரிக்குமாறு மண முரசம் அறைவித்தார்கள். மதுரை மாநகர மக்கள் தங்கள் தங்கள் வீடுகளைச் சுண்ணம் முதலியவற்றால் புதுக்கிக் கமுக மரங்களையும், வாழை மரங்களையும் வீதிகளெங்கும் கட்டினர்;

முளைப் பாலிகையையும், பொன்னாலாகிய நிறைகுடங்களையும் திண்ணைகள்தோறும் அமைத்தனர்; தோரணங்களையும், கொடிகளையும் கட்டி அழகுக்கு அழகாக மாடங்கள் நிறைந்த மதுரை மாநகரைத் திருமண அழகு பொலிய அலங்கரித்தனர்; முன்னர்த் தடாதகைப் பிராட்டியாரின் திருமணத்தின்போது மதுரைப் பதி தனக்குத்தானே உவமையாகும்படி அழகு செய்தனர்; இன்று தனக்குத்தானே மிக்கது என்னும்படி மதுரை மாநகரை அழகுபடுத்தினர்.

**அரசர் முதலியோர் வருகை**

சுந்தரபாண்டியருடைய திருமுகத்தைப் பெற்று வணங்கி மகிழ்ந்த வேற்று நாட்டு மன்னர்களும், முனிவர் முதலியவர்களும் திருமணங் காணப் புறப்பட்டனர். சூரியன் வழித்தோன்றலாகிய சோழன் நால்வகைச் சேனையுடன் வந்துசேர்ந்தான். வில் வாள் முதலியன ஏந்திய வீரர்களுடன் சேரன் வந்து சேர்ந்தான். குதிரைப் படையினையுடைய துரகபதி என்னும் அரசனும், யானைப்படையினையுடைய கயபதி என்னும் அரசனும் வந்தான். வேற்படையினைத் தாங்கிய நரபதி என்னும் அரசனும் குதிரைகள் மீதேறிப் போர் புரிவதையே வாழ்க்கையாகக்கொண்ட குறும்பராகிய வீரர்களோடு கூடிய குறுநில மன்னர்களும் வந்துசேர்ந்தனர். சீனர், சோனகர், சிங்களவர், கொங்கணர், மாளவர், சாளுவர், சாவகர் முதலான அயல்நாட்டு அரசர்களும் வந்து சேர்ந்தனர். பூணூலோடு கட்டுண்டு அசையும் மான்தோலும், கொய்சக ஆடையும், முஞ்சிப் புல்லாலாகிய அரைஞாணையும், கையில் பலாசக்கோலுமுடைய வேதமோதும் மாணவகர் (பிரமசாரி)களும், கமண்டலமும் தீக்கடைகோலும் கையில் ஏந்தியும், குண்டலமும் திருவெண்ணீறும் அணிந்தும், மனைவியுடன் கானகத்தில் தவம் புரியும் வானப் பிரத்தர்களும், முண்டிதத் தலையுடன் கமண்டலமும் கோவணமுடிந்த தண்டும் ஏந்திய செங்காவி ஆடை உடுத்த உண்மையுணர்ந்த துறவிகளும் வந்துசேர்ந்தனர். பாற்கடல் பவளக்காட்டுடன் வந்ததுபோலத் திருவெண்ணீறு விளங்கும் உடலோடு செஞ்சடைதரித்த - உபநிடதப் பொருளை யுணர்ந்த அரிய தவத்தினையுடைய சைவ முனிவர்களும், ஆதி சைவர்,

மகா சைவர், அநு சைவர், அவாந்திர சைவர், பிரவர சைவர் என்னும் ஐவகைச் சைவர்களும், அகச் சமயத்தவர் அறுவகையினரும் வந்துசேர்ந்தனர். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களும், பதினெண் கணத்தவரும் வந்துசேர்ந்தனர். திருமணங் காணவந்த யாவரும் அரண்மனையடைந்து சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கும் தடாதகைப் பிராட்டியாரையும் சுந்தர பாண்டியரையும் தரிசித்துத் துதித்து வணங்குமுறையால் வணங்கி வாழ்த்தினர். சுந்தரபாண்டியர் அவரவர்கட்கு ஏற்ற முறையில் வரவேற்றுச் சிறப்புச் செய்தருளினர்.

**வியாழ பகவான் காந்திமதியின் சிறப்பினைக் கூறல்**

சுந்தரபாண்டியர் சோமசேகரன் புதல்வியாகிய **காந்திமதி**யின் அழகைக்கண்டு மகிழும் தன்மையினை உணர்ந்து, வியாழ பகவான் உறுப்பியல் நூலின் வழியே ஆராய்ந்து அங்குள்ளார் யாவர்க்கும் காந்திமதியின் அவயவங்களின் இலட்சணங்களைத் தெரிவிக்கலானர்: "மிக நீளாமலும் மிகக் குறுகாமலும் நுனி பிளவாமல் தழைத்து, முகில்போன்றும் கருவண்டின் கூட்டம் போன்றும் கறுத்து, நுனியில் வளைந்து, இயற்கை மணத்துடன் கூடி, நெருங்கி மென்மையும் நெளிவுங் கொண்ட **கருங்குழலாளின்** கணவனுக்கு வளமிக்க செல்வம் உண்டாகும். யானையின் மத்தகம்போல் திரண்டுயர்ந்த **தலையினை** யுடையவளின் கணவன் நீண்ட ஆயுள் மிக்கு எல்லா வுலகங்களையும் அரசாளுவதற்கு உரியவனுவான். எட்டாம் பிறைச் சந்திரன் போல, மயிரும் நரம்பும் இல்லாமல் தசைப் பற்றுடைய தாய்ப் புருவத்திற்கும் கூந்தலுக்கும் இடையே மூன்று விரல் அளவு அகன்று ஒளிவீசும் **நெற்றியைப்** பெற்றவளுடைய கணவன் அளவற்ற செல்வமும் நோயற்ற வாழ்வும் பெறுவான். கடையில் சிவந்து பசுவின் பாலைப்போல வெளுத்து, நடுவிழி மிகவும் கறுத்து, கருமயிர் நிறைந்த இமைகளுடன் கூடிய அழகிய **கண்களை** யுடையவளின் கணவன் இன்பம் பெறுவான். வளைந்த வில்லைப்போன்ற கரிய **புருவங்களும்**, இருதொளையும் வேறுபாடின்றி ஒன்றுபோல் தம்மில் ஒத்து உருட்சியுடைத்தாகி எள்ளின் மலர் தாமரை மலரின்மேல் மலர்ந்தது போன்ற **மூக்கும்**, வள்ளைத்தண்டுபோல் கீழே தாழ்ந்து மடலின் நல்ல

சுழிகளுடன் முன்னே தள்ளிய **காதுகளும்,** அழகும் நன்மையும் உடையனவாம். வட்டமாகத் தசைப்பற்றுக்கொண்டு உயர்ந்து கண்ணுடிபோலத் தெள்ளிய இனிய ஊற்றமுடைய **கன்னங்கள்** நன்மை தருவன. கொவ்வைக்கனிபோல் சிவந்து திரண்டு இருபக்கமும் குவிந்து நேர் இரேகையினைக் கொண்ட வாயின் **இதழ்களைப்**பெற்ற பெண், தன் கணவனிடம் என்றும் நட்புக் கொண்டவளாய் இருப்பாள். மேலும் கீழுமாகிய இருவரிசைகளிலும் இடைவெளியின்றி நெருங்கி ஒழுங்காய்ப் பால்போல் வெண்மை ஒளி வீசும் முப்பத்திரண்டு **பற்களும்** அமையப் பெறுதல் நன்மையினை விளைவிக்கும். மென்மையாய்ச் சிவந்து தடிப்பின்றி அழகியநாவினையுடையாள், தான் விரும்பியவற்றை விரும்பியவாறே எளிதில் பெறுவாள். தசைப்பற்றுடையதாய் வட்டமாக இரண்டங்குல அளவில் அழகுடன் அமைந்த **மோவாய்** நன்மையினைத்தரும். தாமரை மலர்போல் மணம் வீசித் தண்ணொளியுடைய திங்களைப்போல் முகம் திகழ்வது நன்மையளிக்கும். சங்குபோலத் தசைபெற்று நான்கு அங்குல அளவாகத்திரண்டு மூன்று இரேகைகளுடன் திகழும் **கழுத்தினைப்** பெற்றவளின் கணவன் எல்லா உலகிற்கும் அரசனுவான். பதினெட்டு அங்குல அளவு அகன்று மயிரும்நரம்பும் இல்லாமல் உயர்ந்து விளங்கும் **மார்பு** மிகவும் சிறப்பாகும். மயிரின்றித் தசைசெறிந்து, எலும்பு தோன்றுமல் விளங்கும் மூங்கிலைப் போன்ற **தோள்களைப்** பெற்றவள் நன்மைபெறுவாள். நீண்டு உருண்டு கணுக்களைப் பெற்றுச் சிறுத்த செங் **கைகளை**யுடைய பெண்ணினிடத்தில்செல்வமும், இன்பமும் நிலைபெறும். சிவந்து உருண்டு கண்டோரின் கண்ணையும் மனத்தையும் கவரும் தன்மையோடு சரசரப்பில்லாத கூரிய **நகங்களைப்** பெறுதல் நன்மை உண்டாகும். மென்மையாய் இடைவெளி இன்றிச் செந்நிறங் கொண்டு நடுவில் உயர்ந்து அழகிய சில இரேகைகளையுடைய **உள்ளங்கைகளைப்** பெற்றவள் மிகச் சிறப்புடையவள். தசைப்பற்றுடன் வட்டமாக அரும்பி இடையே ஈர்க்கும் செல்லவொண்ணுத இருகுடங்களைப்போல் நெருங்கி, இறுமாப்புடன் விளங்கும் **கொங்கைகளைப்** பெற்றவள் சிறந்த நன்மையினைப் பெறுவள். மெலிந்து நடுவில் மயிர் வரிசைபெற்று அயலில் மயிரும்

நரம்பும் தோன்றாத **வயிற்றினைக்** கொண்டவள் விரும்பியபடியே சிறந்த உணவினைப் பெறுவாள். வலஞ்சுழித்து ஆழ்ந்து அமைந்த **கொப்பூழினை** உடையவள் அழிவற்ற செல்வத்தைப் பெறுவாள். மயிரும் நரம்பும் இன்றி இருபத்துநான்கு விரல் அளவினோடு வட்ட வடிவினதாய்ச் சிறுத்துத் தளர்ந்து விளங்கும் **இடையினைப்** பெற்றவளுக்கு நன்மை பெருகும். யானையின் மத்தகத்தையும் ஆமையின் முதுகையும்போல வடிவு சமமாய் இருக்கும் **அல்குல்** உடையாள் நலம் பெறுவாள். மயிரும் எலும்பும் நீங்கி, யானையின் துதிக்கையினையும் வாழைத் தண்டினையும் ஒத்திருக்கும் **இருதொடைகளைப்** பெற்றவளுக்கு நன்மை உண்டாகும். எலும்பு வெளியே தோன்றாமல் வட்ட வடிவமாய்த் தசையோடு கூடிய **முழங்கால்** உடையாள் நலம் பெறுவாள். மயிரும் நரம்பும் இல்லாமல் உருட்சியாய் முறையே சிறுத்து ஒத்த வடிவாய் இருக்கும் **கணைக்காலைப்** பெற்றவளுக்குப் பல நலங்கள் உண்டாகும். எலும்பும் நரம்பும் தெரியாமல் தசைபெற்று ஆமையின் முதுகுபோல் திரண்டு மேல் உயர்ந்து இனிது விளங்கும் **புறவடியினை யுடைய** பெண் அரசனின் மனைவியாவாள். உயர்ந்து தூயவாய் அழகுடன் செங்கழுநீர்மலரின் இதழ்களை வரிசையாய் வைத்தாற்போல் ஒழுங்குபெறத் திரண்டு, பிறைச் சந்திரனைப் போன்ற நகங்களுடன் கூடிய தாமரை மலர்போல் விளங்கும் **கால் விரல்களை** உடையவளுக்கு நன்மை பயக்கும். தசை நிறைந்து மென்மையோடு சமமாக விளங்கும் **உள்ளங் கால்களைப்** பெற்றவள் நலமடைவாள். அழகிய மாந்தளிர் போலச் சிவந்து பொன்னிறம் பெற்று எப்போதும் வியர்வை அரும்பாது வெப்பமாய் இருக்கும் **உடலைப்** பெற்றவளுக்குச் செல்வ முண்டாகும். பாதிரி, குவளை, தாமரை, மல்லிகை, சண்பகம் ஆகிய இவற்றின் நறுமணங்களைப்போல **உடலின் மணத்தைப்** பெற்றவளும், குயில், கிளி, யாழ் ஆகிய இவற்றின் ஒலிபோல இருக்கும் சொற்களைப் பெற்றவளும் செல்வமுடையவளாவள்.

இவ்வாறு காந்திமதியின் கூந்தலிலிருந்து காலின் வரையுள்ள உறுப்புக்களின் இயல்கள் அனைத்தையும் வாக்கின்

செல்வனுகிய வியாழ பகவான் நூலுணர்வால் ஒருசேர ஆராய்ந்து கூறி, அவ் வணங்கிற்கு ஒப்பானவர் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் இல்லை' என்று கூறினுன். அதனைக் கேட்ட யாவரும் மனங்களித்தனர்.

**திருமணம் நடைபெறுதல்**

பிறகு, உக்கிரகுமாரர் அங்குநின்றும் எழுந்து அட்டமங்கல வரிசைகள் சிறக்க, யானையின் மீது கொண்டுவரப் பெற்ற வையையாற்றின் நீரிலே ஸ்நானம் செய்து, திருமணக் கோலங் கொள்ளத் தொடங்கினுர்; மலர்ந்த மலர் மாலைகளைச் சூடி, மான்மதங்கலந்த சந்தனத்தை அணிந்து, முத்தாபரணங் களைப் பூண்டு, ஒளிவீசும் நிறைமதியினைப்போல் வந்து திருமண மண்டபத்தினில் இடப்பட்ட பூந்தவிசின்மேல் சங்கங்கள் ஒலிக்க ஏறி அமர்ந்தார். அப்போது மணப் பெண்ணுகிய காந்திமதியினை நறுமணம்கமழும் நீரினுல்ஆட்டிப் பொன்னுடை தரித்து, அரிய ஆபரணங்களைப்பூட்டி, நம்பியின் வலதுபுறத்தில் அழகுபெற அமரச் செய்தனர். சோமசேகரன் தன் மனைவி யுடன் எழுந்துவந்து **உக்கிரகுமாரரையும், காந்திமதியையும்** சிவபெருமாளுகவும் உமாதேவியாகவும் கருதி, நறுநீராலே உக்கிரகுமாரரின் திருவடிகளை விளக்கி, மணங்கமழும் மலர் களைச்சூட்டிப் பாலும்பழமும் ஊட்டிக் காந்திமதியின்கையினைப் பிடித்துஉக்கிரகுமாரர் கையில்வைத்துத் தேவர்கள்அறிய வேத மந்திரங்கூறி, "சூரிய குலத்தைச்சேர்ந்த சோமசேகரனுகிய நான், திங்கள் குலத்தை விளக்கும்படி வந்தருளிய சுந்தர பாண்டியரின் திருப்புதல்வரும் உலகாளுபவருமாகிய உக்கிர குமார பாண்டியருக்கு என்னுடைய புதல்வியாகிய காந்தி மதியை இப்பொழுது மனமுவந்து கொடுத்தேன்" என்று தாரை வார்த்துக் கொடுத்தான்.

**வரிசைகள் வழங்கல்**

அதன்பிறகு, முத்துவடம் பூட்டிய வயிரத்தால் செய்யப் பெற்ற ஊசல் (ஊஞ்சல்) ஐந்தும், பதம்செய்த பஞ்சணை பத்துடன் அன்னத்தின் தூவிபெய்த மெல்லிய ஆடையால் அமைந்த அணை (மெத்தை) பத்தும், பாவை விளக்கு எட்டும்,

உணவு சமைப்பதற்குரிய பொற் பாத்திரங்கள் நூறும், மணி கள் பதித்து இழைத்த களாஞ்சிகள் ஏழும், பொற்காம்புகளை யுடைய சாமரைகள் எட்டும், பசும்பொற் கிண்ணவரிசை சூழ்ந்து விளங்க நடுவே பொற்காலுடன் கூடிய மாணிக்கப் பாத்திரங்கள் நூறும், முத்தாபரணங்கள் வைக்கும் பேழைகள் முந்நூறும், ஆயிரம் பொன் விலையுடைய மெல்லிய வெண்மை யான துகில், அரிய பட்டாடை ஆகிய இவற்றை வெவ்வேருக வைக்கப்பெற்ற பேழைகள் முந்நூறும், சித்திரப்பாவையை ஒத்தவர்களாகிய ஏவல்செய்யும் சேடியர் எழுநூற்றைவரும், விளைநிலங்கள் நிறைந்த பெரிய ஊர்கள் மூன்றும், செம்பொன் இரண்டுகோடியும்,பிறபொருள்கள் எண்ணில்லாதஅளவுமாகத் தன் பெண்ணுக்குச் சோமசேகர மன்னன் வரிசைகளாக (சீதனங்களாக) வழங்கினன்.

இசைக் கருவிகள் முழங்கின. தேவர்கள் கற்பக மலர் மழை பொழிந்தனர். வேள்வித் தீ வலம் சுழித்துக் குதித்து எழுந்தது. மகளிர் வாழ்த்துப் பாடல்கள் பாடினர். திருமணத் தைக் கண்டவர்களின் கண்கள் அனைத்தும் நற்பேறு பெற்றன. அந்தணர்கள் செந் தீ வளர்க்க, இன்னிசைக்கருவிகள் முழங்கக் கடம்பமலர் மாலை அணிந்த முருகக் கடவுளை யொத்த உக்கிர குமாரர், காந்திமதிக்கு **மங்கல நாண் பூட்டி** வளையல் அணிந்த சிவந்த கையினைப்பற்றி மற்றைய மணவினைகள் அனைத்தும் வேத விதிப்படி சிறப்புறச் செய்து முடித்தனர்.

**நகர் வலம் வருதல்**

பிறகு திங்களும் உடுக்கணங்களும் தவழ்ந்து செல்லும் வானின்கண் உயர்ந்து விளங்கும் அழகிய மாடங்கள் நிறைந்த மதுரைத் திருநகர் வீதியினை மணமக்கள் வலம் வந்தனர். மின்னலைப்போல் ஒளி வீசும் வளையல்களை அணிந்தவர்களும், கால்களுக்குச் செம்பஞ்சுக் குழம்பு ஊட்டியவர்களும், அழகிய மணிக்கலன் பூண்ட மார்பினையுடையவர்களும், ஒலிக்கும் அழகிய மேகலையை அணிந்தவர்களும், கூந்தலில் மாலையை அணிந்தவர்களுமாகிய மகளிர் தங்கள் கண்களும் மனமும் தொடர்ந்து தூது செல்லுதல்போல முன்னே செல்ல ஊர்

வலத்தின் பின் சென்றனர். உக்கிரகுமாரர் தமது பவனியைத் தொடர்ந்து தரிசித்து வரும் மெலிந்த இடையையுடைய மகளிரிடம் கருணைகொண்டு, அவர்களின் இடையின் கனத்தைக் குறைப்பவரைப்போல, மேகலையைக் கவர்ந்தார்; தோளின் கனத்தை ஒருசேரக் குறைப்பவர்போல வளையல்களைக் கவர்ந் தார்; உள்ளத்தின்கண் மிக்க பொறையைக் குறைப்பவர் போலக் கற்பினைக் கொள்ளைகொண்டார். பிறையை அணிந்த சடையை மறைத்து வந்தருளிய சுந்தர பாண்டியருடைய குமாரர், யானையின் பிடரியில் இளமையாகிய ஆண் சிங்கம் ஏறி வருவதைப்போல் வேற்று மன்னரின் படைசூழத் தொடர்ந்து வருகின்ற திருவுலாக் காட்சிக்குத் தெய்வயானை யாரைத் திருமணஞ் செய்து வருகின்ற முருகக் கடவுளின் திருவுலாச் சிறப்பினையே ஒப்புமை கூறலாம்.

இங்ஙனம் நகர் வலம் வந்த உக்கிர குமாரர் தம் தேவி யோடு இம்மையே நன்மை நல்கும் இறைவரையும், சோம சுந்தரக் கடவுளையும், மீனாட்சியம்மையாரையும் வணங்கி மீண்டு அரண்மனையை அடைந்து தாய்தந்தையர் இருவரையும் முறைப்படி வணங்கினார். சுந்தரபாண்டியர், திருமணத்தின் பொருட்டு வந்திருந்தவர் யாவரையும் அறுவகைச் சுவையுடன் கூடிய அமுது செய்வித்து முறைப்படி பல வரிசைகள் வழங்கி விடை நல்கியருளினார்; பிறகு தேவர்களுக்கும் விடையளித்து ஆட்சிபுரிந்து வரலானார்.[1]

### உக்கிர குமாரர்க்கு வேல், வளை, செண்டு அளித்தல்

ஒரு நாள் சுந்தர பாண்டியர் தம் புதல்வனை அழைத்து, "மைந்தனே! இந்திரனும் கடலரசனும் உனக்குப் பெரும் பகைவராவர்; அழகிய மேரு மலை செருக்குற்று நிற்கும்; ஆதலால், இந்திரனுடைய முடி சிதறும் வண்ணம் இந்த வளை

1. இங்குச் சுந்தர பாண்டியராகிய இறைவர் ஆட்சிபுரிந்து வந்த தால் மதுரைமா நகரம் சிவலோகமாகவும், சிவராசதானியாகவும் விளங் கியது. இதனை, "அப் பாண்டி நாட்டைச் சிவலோகம் ஆக்குவித்த, அப்பார் சடையப்பன்" (திருவாசகம் - திருவம்மானை) எனவும், "தென்னன் பாண்டி நாடு சிவலோக மானதன்றே" (திருவாலவாயுடை யார் திருவிளையாடற் புராணம்) எனவும் வரும் அடிகளால் அறியலாம்.

யினைக் கொண்டு எறிவாயாக; கடல் சுவறும் வண்ணம் இந்த வேலை விடுக; மேருவினைச் செருக்கு ஒழியும் வண்ணம் இந்தச் செண்டினால் அடிப்பாயாக'' என்று கூறி அம் மூன்று படைக் கலங்களையும் எடுத்துக் கொடுத்தருளினார். அப்பொழுது உக்கிர குமாரர் தம் தந்தையாரைத் தொழுது அம்மூன்று படைக் கலங்களையும் கையில் பெற்றுக்கொண்டார். அதன் பிறகு, சுந்தர பாண்டியர் ஆண் சிங்கம்போன்று எதிரே நிற்கும் தம் புதல்வனை, **உக்கிர பாண்டிய மன்னன்** என்று கூறும்படி வேதங்கள் முழங்கவும், பல்லியங்கள் ஒலிக்கவும் **முடிசூட்டித்** தம்முடைய ஆணையையும் அரசுரிமையையும் செங்கோலையும் அவனுக்குக் கொடுத்தருளி, சுமதி என்னும் அமைச்சரையும், நீதி நூலாராய்ச்சியில் வல்ல அறிஞரையும் நோக்கி, "இவ்வுக்கிர வழுதியைக் கண்ணின் இமைபோலவும், அறிவினைக் கொடுக்கும் கல்வி போலவும் நீங்கள் காக்கக் கடவீர்; இஃது உங்கள் கடமையாகும்; இந் நிலவுலகின் ஆட்சி இவனுடையதே'' என்று கூறி ஓம்படை அளித்து, உக்கிர வழுதியைத் தனியாக நோக்கி, "ஐயனே! யாம் நெடுங் காலம் இவ்வுலகினைத் தாங்கி ஆட்சி புரிந்தனம்; இனி, நீயும் இக்குற்றமற்ற உள்ளத்தினை யுடையார் சொல்லும் வாய்மை வழியே ஒழுகிச் செங்கோல் செலுத்தி ஆண்டு செல்வத்தோடு விளங்குக'' என்று வாழ்த்தி யருளினார்.

**மீனாட்சியும் சுந்தரபாண்டியரும் ஆலயத்துள் எழுந்தருளுதல்**

அப்பொழுது, சிவ கணங்களெல்லாம் முன்னைய வடிவங்களை அடைய, தமது இச்சையாலே அருளுருவங் கொண்ட சுந்தர பாண்டியனாகிய இறைவர் தடாதகைப்பிராட்டியோடும் திருக்கோயிலினுள் சென்று எழுந்தருளியிருந்தார். பிறகு உக்கிர குமார பாண்டியன் நான்மறைகளில் கூறிய அறங்கள் வளருமாறு நிலவுலகை ஆட்சி புரிந்துகொண்டிருந்தான்.

செய்யுள் — 66

ஆகச் செய்யுள் — 1032

---

## 13. கடல்சுவற வேல்விட்ட படலம்

### உக்கிரவழுதியாரிடம் இந்திரன் பொருமை கொள்ளுதல்

உக்கிர பாண்டியன் புவிமுழுதும் சந்திரன்போல வெண் குடை நிழற்ற அரசு புரிந்து வரும் நாளிலே, அளவில்லாத பேரறங்களையும் வேள்விகளையும் தேவர்கள் போற்றும்படி செய்துவந்தான். அசுவமேதம் தொண்ணூற்ருறு செய்து முடித்தவிடத்து வச்சிரப்படையினையுடைய இந்திரனுனவன் உக்கிரவழுதியின்மேல் பொருமைகொண்டு கோபித்து எழுந் தான் ; " இத்தனை வேள்விகளை இவன் செய்வதற்குக் காரணம் பொன்னுடுபோலத் திகழும் பாண்டி நாட்டில் மழை வளம் மிகுந்துள்ளதேயாகும்" என்று கருதி ஒரு சூழ்ச்சி புரிய எண்ணினன்; உடனே கடல் வேந்தனுகிய வருணனை அழைத்து, " நீ ஊழிக்காலத்திலே ஏழுலகங்களையும் ஒருசேர அழிக்கும் கடலைப்போன்று சினந்து சென்று காவல் மிக்க மதுரையை வளைந்து அழிப்பாயாக" என்று கூறினன்.

### கடல் பொங்கி மதுரையை அடைதல்

அதுகேட்ட கடல் மன்னன் தனக்கு மேல்விளைவதை அறி யாமையால் அவ்வாறே செய்யத் துணிந்து, பேயும் கண்ணுறங் கும் நள்ளிரவின்கண் வளம் பொருந்திய [1] மதுரைப் பதியை விரைந்து சூழ்ந்து அழிக்கக் கருதினன். பொங்கிய கடலானது தனது அலைகளாகிய கைகள் அண்ட கூடமெங்கும் ஊடுருவிச் சென்று நடுக்கமுண்டாக்கிவர, ஊழிக்காலத்தில் ஆரவாரித்து அழிக்கும் பெருவெள்ளமாய்ச் சந்திரமண்டலத்தை முட்டி எழுந்துவருகின்ற ஒரு கரிய மலை தோன்றினற்போல, மண்ணுல கத்தாரும் விண்ணுலகத்தாரும் அஞ்சுமாறு வந்தது. மாடங்களை யுடைய மதுரைப் பதியின்மீது கடல் வெள்ளமானது வரும் காட்சியானது, நஞ்சு பொருந்திய வாயினையும், கரிய உடலையும், கொடிய கண்களையும் கொண்ட இராகு என்னும் பாம்பு விரைந்து சென்று திங்களை விழுங்கவருதலை ஒத்திருந்தது;

---

1. இம்மதுரை பழமதுரை என்பர்.

ஏழுமேகங்களும் மதுரையை மறைத்தற்கு வருதலையும் ஒக்கும். கடலினுள்ள வட்ட வடிவமான ஆமைகள் கேடகங்கள்போல் விளங்கின. வாளை மீன்கள் வாள்களை ஒத்திருந்தன. சுரு மீன்கள் யானைகளைப்போல் விளங்கின. அலைக்கூட்டங்கள் தாவிச் செல்லும் குதிரைகளைப்போன்றிருந்தன. ஓடவிட்ட தோணிகள் தேர்களைப்போல் திகழ்ந்தன. இவ்வாருகிய பல் வகைச் சேனைகளுடன் கடலானது உக்கிரவழுதியின்மேல் படையெடுத்து வந்த பகைவன்போன்றிருந்தது.

வட்ட யாமை பலகை ; வீசு வாளை வாள்கள் ; மகரமே
பட்ட யானை ; பாய்தி ரைப்ப ரப்பு வாம்ப ரித்திரள்
விட்ட தோணி இரதம் ; இன்ன விரவு தானை யொடுகடல்
அட்ட மாக வழுதி மேல மர்க்கு எழுந்த தொக்குமே.

**உக்கிரவழுதியாரின் கனவு**

இவ்வாறு எழுந்த கடலானது முகில்கள் உறங்கும் மதில் சூழ்ந்த மதுரையின் கிழக்குத் திக்கில் வந்து நெருங்கும் பொழுது நள்ளிரவுஆகும். அப்போது உக்கிரகுமாரன் உறங்கிக் கொண்டிருந்தான். அவன் கனவில் வெள்ளியம்பலவாணர் ஒரு சித்தமூர்த்தி வடிவுகொண்டு தோன்றி, "பாண்டியனே! உனது நகரத்தை அழிக்கும் பொருட்டுக் கடல் பெருகி வருகின்றது; ஆதலால், நீ விரைந்து போய் உன் வேற்படையை எறிந்து வெற்றி பெறுவாயாக" என்று கூறியருளினுர். உடனே உக்கிர பாண்டியன் கைகளிரண்டும் சிரசின்மேல் குவிய நாத் துதிக்க விழித்தெழுந்து நள்ளிரவில் தான் கண்ட கனவினை உணர்ந்து, சயனத்தினின்றும் நீங்கி அரண்மனை வாயில் பல வற்றையும் கடந்து, அமைச்சர்களோடு விரைந்து சென்று, நிலவுலகு அழிந்ததென்று கூறுமாறு பேரொலியோடு வரு கின்ற கடலினைக் கண்டு அளவிறந்த வியப்படைந்து நின்ருன். அப்போது, கனவில் தோன்றியருளிய சித்த மூர்த்தி, நனவிலும் எழுந்தருளி வந்து, "அப்பனே! நீ காலந் தாழ்த்து நிற்பது என்னை? கடல் வடிவமாக வந்த பகையை அதனது வலி கெடும் வண்ணம் கூரிய வேற் படையை எறிந்து வென்று உலகிற்கு வரும் அழிவை நீக்குவாயாக" என்று கூறியருளினுர்.

**உக்கிரவழுதி கடலின்மேல் வேற்படையை எறிதல்**

உடனே, உக்கிரபாண்டியன் வேற்படையை எடுத்து வலமாகச் சுழற்றிக் கடலின்மேல் எறிந்தான். அவ்வேலின் நுனி கடலைத் தொட்ட அளவிலே கடல் சுஃறென்னும் ஒலியுண்டாக நீர் வற்றி மிக்க வலி இழந்து, வெற்றிமாலை குன்றித் தோல்வி யுற்று அடிவணங்கும் பகைவரைப்போல், உக்கிரவழுதியின் கணைக்கால் அளவில் குறைந்து நின்றது.[1] வேதமுறைப்படி இயற்றிய வேள்வியைத் தடுப்பதுடன் உலகனைத்தும் அழிக்கச் சூழ்ச்சிசெய்த இந்திரனின் ஏவலினுல் பெருகி எழுந்துவந்த கடல் வலி இழந்தது. **வஞ்சகருக்கு உதவிசெய்து, அதனுல் வலிமையை இழப்பது எக்காலத்தும் இக்கடலின் செயலே போலும்**[2].

**இறைவன் பாண்டியனுக்குக் காட்சியளித்து மறைதல்**

அப்பொழுது உக்கிரபாண்டியன் முன் நின்றருளிய சித்த மூர்த்தி மறைந்து, ஆகாயத்திலே உமாதேவியோடும் இடப வாகனத்தில் வெளிப்பட்டு நின்றருளினுர். மூன்று கண்களும், நான்கு தோள்களும், இளம்பிறை அணிந்த சடைமுடியும், நீலகண்டமுமாகக் காட்சி தந்தருளிய பெருமானை உக்கிர பாண்டியன் பேரன்போடு தரிசித்து அடியற்ற மரம்போலப்

---

1. இங்கே "மற்றவன் தன்னுல் வடவையின் கொழுந்துசுட்(டு), ஆற்று(து) உடலமும் அமைக்குறு முத்தமும், விளர்த்துநின்(று) அணங்கி வளைக்குலம் முழங்கும் கருங்கடல் பொரிய ஒருங்கு வேல்விடுத்(து), அவற்கருள் கொடுத்த முதற்பெரு நாயகன்" (கல்லாடம்) என்ற அடிகளை யும், "முந்நீர் விழவின் நெடியோன்"(புறநானூறு–9) என்ற அடியையும், "முந்நீர்க்கண் வடிம்பலம்ப நின்றுனென்ற வியப்பால்,நெடியோன் என்றுர் என்ப" (புறநானூறு–9 உரை) என்ற உரைநடையினையும், "அடியிற் றன்னள வரசர்க் குணர்த்தி, வடிவேலெறிந்த வான்பகை பொருது.... கொடுங் கடல் கொள்ள,....தென்றிசை யாண்ட தென்னவன்" (சிலப் பதிகாரம் - காடுகாண்காதை) என்ற அடிகளையும் நோக்குக.

பாண்டியன் கடலில் வேல் எறிந்தபோது அக்கடல் வடிந்து அவன் காலைக் கழுவியது ; அதுபற்றி உக்கிர பாண்டியனுக்கு, 'வேலை வடிம்பலம்ப நின்றுன்' என்ற பெயர் வழங்கலாயிற்று.

2. முன்பு கடல் சூரபன்மனுக்கு இடங்கொடுத்து முருகக் கடவுள் வேலால் வலிகெட்டு அழிந்ததும், விருத்திராசுரனுக்கு இடங்கொடுத்து அகத்தியர் ஆசமனத்தால் வலிகெட்டு அழிந்ததும் இங்குக் குறிப்பிடுவ தாகும்.

பூமியில் வீழ்ந்து வணங்கி எழுந்து அஞ்சலி செய்து துதித்த வண்ணம் பூமியின்மேல் நடந்து சென்றான். பஞ்ச துந்துபி கள் ஒலிக்க, சிவகணங்கள் வணங்கிச் சூழ்ந்துவர, கீதத்தோடு வேத சிவாகமங்கள் எட்டுத் திசைகளிலும் முழங்க, தேவர்கள் துதிக்க, [1]போக்கும் வரவும் அற்ற பெரு வள்ளலாகிய இறைவன் விண் வழியாகத் தமது திருக்கோவிலினுட் புகுந்தருளினார். அஞ்சலி கூப்பியவாறு தொடர்ந்து அருகிலே வந்த பாண்டியன் திருக்கோயிலை அடைந்து இறைவனை வணங்கி அவரிடம் விடை பெற்றுக்கொண்டு, மீண்டு, மகளிர் அட்ட மங்கலங்களையும் ஏந்தி எதிர்நோக்கி வரத் தன் மாளிகையை அடைந்தான்.

**உக்கிரபாண்டியன் கடவுளுக்கு நிலம் வழங்கி அரசாளுதல்**

பின்னர் உக்கிரபாண்டியன் மதுரை நகருக்கும் கடலுக்கும் நடுவிலுள்ள விளை நிலங்களும் ஊர்களுமாகிய எல்லாவற்றையும் வெள்ளியம்பலத்துள் ஆடும் கொன்றை வேணிப் பெருமானுக்கே உரிமையாக்கி, உலகங்களுக்கெல்லாம் பற்றுக்கோடாகி வீற்றிருந்தான்.

செய்யுள் — 20
ஆகச் செய்யுள் —1052

---

1. இங்கு, "போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" (திருவாசகம் - சிவபுராணம்) என்ற அடி சிந்திக்கற்பாலது.

## 14. இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்

**பாண்டிநாடு மழையின்றி வருந்துதல்**

உக்கிரபாண்டியன், செங்கோல் நடாத்தி வருங்காலத்தில் [1]கோள் நிலை பிறழ்ந்தமையால் மேகங்கள் மழை பெய்யா தொழிந்தன; பயிர்கள் தீய்ந்தன; புல்லின் தலைகள் கருகின; தமிழ்நாடாகிய சேர சோழ பாண்டிய நாடுகள் மூன்றும் வறுமையில் வாடி வருந்தின.

**மூவேந்தரும் அகத்தியரை அடைதல்**

அதுகண்ட சேர சோழ பாண்டியரென்னும் தண்டமிழ் நாட்டு மூவேந்தரும் தத்தம் நாட்டின் வறுமையை ஒழிக்கக் கருதி அகத்திய முனிவரின் இருப்பிடமாகிய பொதிய மலையை அடைந்தனர். மூவேந்தரும் அகத்திய முனிவரைக் கண்டு தங்கள் நாட்டிலே மழையின்மையால் வறுமை மிக்கதை எடுத்துக்கூறினர். அதுகேட்ட அகத்திய முனிவர் கிரகங்கள் நிற்கும் நிலையை ஆராய்ந்து அம்மூவரையும் நோக்கி, "அரசர்களே! இனியும் மழை பெய்தல் இல்லை; ஏனெனில், சூரியன் செவ்வாய்க்கு முன்னே செல்ல, சுக்கிரன் இவர்கள் பின் செல்வதனால் உலகில் பன்னிரண்டு ஆண்டுகள் மழை பெய்யாது என்று நூல்கள் கூறின; ஆதலின், நீங்கள் மழையைப் பெய்விப்போனாகிய இந்திரனிடத்தே சென்று இதனைக் கேளுங்கள்" என்றார். தமிழ் வேந்தர் மூவரும் அகத்திய முனிவரை நோக்கி, "யாம் இந்திரனைக்காண வானுலகத்திற்கு எங்ஙனம் செல்வோம்" என்று வினவினர். அதற்கு ஐம்பொறிகளையும் வென்ற குறு முனிவர், "நீர் **சோமவார விரதம்** அனுட்டித்து, வெள்ளியம்பலவாணனின் திருவருளைப் பெற்றுக்கொண்டு விண்வழியே செல்வீராக" என்று கூறிச் சோமவார விரதம் நோற்கும் முறையினைக் கூறத்தொடங்கினர்.

**சோம வார விரதம்**

உத்தம தேவர்களுள்ளே உத்தமர் சிவபெருமான் ஆவர். உத்தம சத்திகளுள்ளே உத்தமி உமாதேவியார் ஆவர். உத்தம

---

1. இங்கே, "கோணிலை திரிந்திடின் மாரி வறங் கூரும்" என்ற மணிமேகலை அடி கருதற்பாலது.

விரதங்களுள்ளே உத்தமம் **சோம வார** (திங்கட் கிழமை) **விரதம்** ஆகும் என்று வேத முதலிய நூல்கள் கூறுகிற்கும்.

உத்தம வானோர் தம்முள் உத்தமன் ஆகும் ஈசன்
உத்தம சத்தி மாருள் உத்தமி உருத்தி ராணி
உத்தம விரதந் தம்முள் உத்தமந் திங்கள் நோன்பென்(று)
உத்தம மறைநூ லாதி உரைக்கும்**இச் சோம வாரம்.**

இத்துணைப் பெருஞ் சிறப்பினதாகிய சோம வார விரதத்தை மேருமந்தரம் காசி முதலிய திருப்பதிகளிலிருந்து அனுட்டித்தலால் வரும் பயனைக் காட்டிலும், மதுரைப் பதியிலிருந்து அனுட்டித்தலால் வரும் பயன் கோடி மடங்கு அதிகமாகும். அதற்குக் காரணம் சோம வாரம் சோமசுந்தரக் கடவுளுக்குரிய நாளாகும். சிவபெருமான் உமையொடு கூடுவதால் **சோமன்** என்று அழைக்கப்பெறுவர். சோமருக்கு உரிய வாரம் ஆதலால் **சோம வாரம்** எனப்படும். இது பற்றியே சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் மதுரையிலிருந்து இவ்விரதத்தினை நோற்றல் விசேடம் எனப்பட்டது. இன்னும் சூரியனும் சந்திரனும் ஒன்று கூடும் **அமாவாசையொடு வரும் சோமவாரம்** [1] மிக மிக விசேடமாம். பாவத்திற்கு அஞ்சி நீதி நெறியின் நின்றும் தேடிய பொருளைக்கொண்டு இயற்றும் சோமவார விரதப் பயன் ஒன்று பலவாகப் பெருகும்.

**சோம வார விரதம் நோற்கும் முறை**

கார்த்திகை மாதத்திலேனும் மார்கழி மாதத்திலேனும் இரண்டு அமாவாசை சேர்ந்த மலமாதம் ஒழித்த மற்றைய மாதங்களிலேனும் சுக்கில பட்சத்தில் முதற் சோமவாரந் தொடங்கி நோற்றல் வேண்டும். ஞாயிற்றுக் கிழமையின் இரவிலே உணவு கொள்ளாது நிலத்திலே நித்திரை செய்ய வேண்டும். திங்கட்கிழமை விடியற்காலையில் எழுந்து மீனாட்சியம்மையோடு கூடிய சோமசுந்தரக் கடவுளைத் தியானித்து, அன்று செய்யவேண்டிய நித்திய கடன்களைச் செய்து முடித்து,

1. சோமவாரத்திலே உதயந் தொடங்கி இரவிலே கடையாமம் வரையிலும் அமாவாசை இருப்பின், அது மூன்றுகோடி சிவராத்திரியோடு ஒக்கும்; கடையாமத்தில் அரை நாழிகை இருப்பினும் நன்றும்.

காம முதலிய குற்றங்களை மனத்தினின்றும் அகற்றிப் பொற்றாமரைப் பொய்கையை அடைந்து, விபூதி, வில்வத்தடிமண், தருப்பை, கோமயம் (பசுச் சாணம்), எள் என்பவற்றைச் சிரசிலே வைத்துக் கையிலே பவித்திரம் தரித்து, மனம் வாக்குக் காயம் என்னும் மூன்றும் ஒன்றுபடச் சங்கற்பஞ் சொல்லிச் சோமசுந்தரக் கடவுளைத் தியானித்து, "இந் நில வுலகிலுள்ள தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் மூழ்கிய பயனை இங்கேயே உறுதிபெறத் தந்தருள்க" என்று வேண்டி நீராட வேண்டும். பிறகு, தோய்த்துலர்ந்த வஸ்திரத்தினால் ஈரம் துவட்டித் தோய்த்துலர்ந்த வெண்ணிற வஸ்திரம் இரண்டு தரித்துத் திருவெண்ணீற்றினை விதிப்படி அணிந்து, உருத்திராக்கம் பூண்டு, வெள்ளைமந்தாரம், முல்லை, மல்லிகை, சாதி, இருவாட்சி, வெள்ளெருக்கு, வெண்டாமரை முதலிய வெள்ளை மலர்களையும் வில்வம், அறுகு, அட்சதை, எள், விபூதி முதலியவற்றையும் கைக்கொண்டு திருக்கோயிலை அடையவேண்டும்.

முன்னர், சித்தி விநாயகக் கடவுளை வழிபட்டு 'எடுத்த காரியம் நிறைவேறவேண்டும்' என்று இரந்து வேண்டிப் பின்னர்த் திருக்கோயிலினுள் செல்லவேண்டும். அங்குத் துவாத சாந்தத்தில் உண்மை அறிவு ஆனந்த வடிவாய் விளங்குகின்ற சோமசுந்தரக் கடவுளை மனத்திலே சிந்தித்து, அச்சிவ வடிவமாகத் தன்னை ஆக்கிக்கொண்டு, மண் முதலாகச் சிவம் ஈறுகவுள்ள தத்துவாத்துவாவின் வடிவமான சிவலிங்கப் பெருமானை ஆசனம், மூர்த்தி, மூலம் முதலிய மந்திரங்களாலும் சிவாகம விதிப்படி பூசை செய்தல் வேண்டும். பஞ்சாமிர்தம், பஞ்ச கவ்வியம், ஐவகைக் கனிகள், தேன், சந்தனம், நீர் முதலியவற்றால் திருமஞ்சனஞ் செய்தல் வேண்டும். அழகிய வெண் பட்டாடை அணிவித்துப் பச்சைக் கர்ப்பூரம் கலந்த சந்தனம் பூசி, மணங் கமழும் மல்லிகை முதலிய மாலைகளையும் பொன்னாபரணங்களையும் சாத்தித் திருவடியிலிருந்து திருமுடி ஈறாக அங்கங்களைப் பூசித்தல் வேண்டும். பிறகு, பராசத்தியை இவ்வாறே திருவைந்தெழுத்தைப் பெண்பாற்கு இசைய உச்சரித்துப் பூசை செய்து, பசுவின் பாலுடன் கலந்து சமைத்த திருவமுது, பலகார வகைகள், பானீயம், தாம்பூலம் முதலிய

வற்றைப் படைத்துச் சோமசுந்தரக் கடவுள் திருமுன் மணங் கமழும் தூப தீபங் காட்டிக் கண்ணுடி முதலிய உபசாரங் களைப் புரிந்து, வில்வத்தினுல் அருச்சனை செய்யவேண்டும்.

வில்வம் சிவபெருமானுடைய **இச்சை ஞானம் கிரியை** என்னும் சத்திகளின் வடிவாய் உள்ளது. அவ் வில்வ மரத் தடியைச்சார்ந்து மூன்று நாட்கள் ஊணும் உறக்கமும் இன்றி **ஹரஹர** முழக்கம் செய்பவர் செய்த பஞ்சமகா பாதகங்களும் வஞ்சனையாற் புரிந்த கொலைகளும் நீங்கும். ஆதலின், வில்வம் சிறந்தது. இதழ் மடங்கியும், சுருங்கியும், வாடியும், உலர்ந்தும், மயிர் சிக்கியும், சிலம்பிக் கூடு கட்டியும், புழுக்கள் அரித்தும், பறவை எச்சம் பெற்றும் இருக்கும் வில்வத் தளங்கள் பூசைக்கு ஒவ்வா. வேறு ஒன்றும் கிடையாவிடின் இத்தகைய குற்றங்களுள்ள வில்வத் தளங்களைச் சுத்திசெய்து பூசிக்கலாம். ஏனெனில் வில்வம் சிறந்ததாகும்.

சிவபெருமானுடைய ஆயிரந் திருநாமங்களையுங் கூறி வில்வ மிட்டு அருச்சித்து, "[1]எழுதுவதற்கரிய எழில்கொண்ட மங்கை பங்கனே! ஒவ்வொரு நாளும் அடியேன் செய்யும் குற்றங்கள் எண்ணிறந்தனவாம்; கொடிய நஞ்சினையும் அமுதாக் கொண்ட வள்ளலே! அடியவன் செய்யும் [2]குற்றங்களையும் குணமாகக் கொண்டு காத்தருள்க" என்று வேண்டி, நிலமிசை வீழ்ந்து வணங்கி எழுந்து மும்முறை வலம் வந்து துதித்துக் கல்மனமும் கரைந்துருக நின்று விரும்பிய வரங்களை வேண்டினுல், நல்ல மணப்பேறு, மக்கட்பேறு, நல்வாக்கு, கல்வி, செல்வம், போகம். பகைவரை வெல்லுதல், நோய் நீக்கம், அகால மரண மின்மை, அரசுரிமை முதலான நலன்கள் யாவும் எண்ணிய வாறே கைகூடும்.

---

1. இங்கு, "படியெழுத லாகாத மங்கையோடு.:மேவனை" (அப்பர் தேவாரம் - திருவாலவாய்) எனவரும் அடிகள் உன்னற்பாலன.

2. இங்கே, "குற்றம் செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை கண்டு", "பின்னை என் பிழையைப் பொறுப்பானைப் பிழையெலாம் தவிரப் பணிப்பானை" (சுந்தரர் தேவாரம், திருப்புன்கூர், திருவாரூர்) எனவும் "குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீ கொண்டால்" (திரு வாசகம்-குழைத்த பத்து) எனவும் வருகின்ற அடிகள் நினைக்கற்பாலன.

சொக்கலிங்கப் பெருமானைத் தொட்டுப் பூசித்தற்கு உரியவர் அல்லாத வேதங்களை உணர்ந்த அந்தணர் முதலோர் ஆன்மார்த்த இலிங்கத்தை இவ்விதிப்படி பூசித்துச் சோமவார விரதம் நோற்கக் கடவர். ஆன்மார்த்த பூசைக்குரிய உரிமை அளிக்கப்படாதவர் பொருள் கொடுத்துச் சிவப்பிராமணரைக் கொண்டு சோமசுந்தரக் கடவுளைப் பூசை செய்வித்து இவ் விரதம் நோற்கக் கடவர்.

**சோமவார விரத வகை**

இச் சோமவார விரதம் ஐவகைப்படும். அவை உச்சிப் பொழுதில் உண்ணுதல், இரவில் உண்ணுதல், இருவேளையும் உண்ணாதிருத்தல், உறங்காதிருத்தல், நான்கு யாமமும் சிவ பூசை செய்தல் என்பன. இவ்வைந்து வகையும் ஒன்றைக் காட்டிலும் ஒன்று மிகவும் சிறந்ததாகும். இவற்றை நோற்கும் ஆண்டுகள் முறையே ஓராண்டு, ஈராண்டு, மூன்றாண்டு, பன்னிரண்டாண்டு, வாழ்நாளெல்லை உரியனவாகும். வாழ்நாள் எல்லையளவும் கருதி நோற்பவருக்கு [1] உத்தியாபனம் இல்லை. தாம் விரும்பிய விரதகால வெல்லை முடிவிலே விதிப்படி உத்தியாபனம் செய்தல் வேண்டும். இடையே விடுவோரும் உத்தியாபனஞ் செய்யாதவரும் விரத பலத்தை அடையார். ஆதலால், முறைப்படி விரதத்தை அனுட்டித்து முடிவிலே உத்தியாபனம் பண்ணல் வேண்டும்.

**சோமவார விரதம் முடிக்கும் முறை**

[2] மண்டபம், குண்டம், மண்டலம் இவற்றை முறைப்படி வகுத்து, [3] முப்பது கழஞ்சு வெள்ளியினால் சிவபெருமானின்

---

1. உத்தியாபனம் - குறித்த ஆண்டின் எல்லைவரை விரதம் நோற்று முடிக்கும்பொழுது செய்யும் கிரியை.

2. மண்டபம் - இஃது இரவி சூத்திரம் முதலிய யாகசாலை. குண்டம் - இது சதுர குண்டம். மண்டலம் - இது வேதிகையின்மேல் போடும் கௌரீ லதை, உமாகாந்தம் முதலிய மண்டலேசுவரர்.

3. இங்குக் குறிப்பிட்ட முப்பது கழஞ்சு வெள்ளி உத்தமம்; இருபது கழஞ்சு மத்திமம்; பத்துக் கழஞ்சு அதமம். (கழஞ்சு - பன்னிரண்டு பணவெடை கொண்ட அளவு.) இதனை, "ஒருபான் கனிட்டமுப் பான்உத் தமமே, இருபான் கழஞ்சிடை என்(று) எண்" எனவரும் சோம வார கற்பக் குறட்பாவால் அறியலாம்.

திருவுருவத்தை அமைப்பிக்கவேண்டும். ஆசாரியர் சொற்படி திங்கட்கிழமை விடியற்காலையில் நித்திய கடன்களை முடித்து, உச்சிப்பொழுது தொடங்கி மாலைப்பொழுதுவரையும் சிவ புராணங்களைக் கேட்டு, இரவு நான்கு யாமத்திலும் சிவபெரு மானைப் பூசித்தல் வேண்டும். அப் பூசனை முடிவில் சிவமூலமந் திரத்தினால் நூற்றெட்டு ஆகுதி யாமந்தோறும் செய்தல் வேண் டும். ஒவ்வொரு யாமத்திலும் ஆயிரம் நாமஞ் சொல்லி ஆயிரம் வில்வம் சாத்தி வழிபடவேண்டும். திருவைந்தெழுத்தினாலே இறைவனுக்கு அருக்கியம் கொடுக்கவேண்டும். சிவமூல மந்திரத் தினாலும் மற்றைய மந்திரங்களினாலும் அக்கினியை வளர்த்துப் பூரணாகுதி செய்து வேள்வியை முடிக்கவேண்டும். பொழுது விடிந்த பின் நித்திய கருமங்களை முடித்துப் பதிமூன்று வாழை யிலையின் மேலே அரிசியும் காய் கறிகளும் பரப்பிப் பசுவின்பால் நிறைந்த குடம் பதிமூன்றனை அரிசியின்மேல்வைத்துச் சிவார்ச் சனைக்குரிய சிவப்பிராமணர்களை அழைத்து நியமித்து, அவர் களுக்குக் காதிலணியும் குண்டலமும் மோதிரமும் அளித்து, அவர்களைச் சிவபெருமானாகவே கருதி அருச்சித்துத் தக்கிணை யோடு பாதுகை, விசிறி, குடை, வஸ்திரம் முதலியவற்றைத் தானஞ்செய்து விடையளித்து அனுப்புதல் வேண்டும்.

பிறகு, ஆசாரியரை அவரது மனைவியுடன் ஆசனத்தில் அமரச்செய்து, பொன்னாடையும் அணிகலன்களும் அணிவித்து, மலர்களிட்டு வழிபட்டுச் சிவபெருமானை நிருமித்துப் பூசிக்கப் பெற்ற திருவுருவத்தையும், பொன் நிலம் முதலியவற்றையும், ஆடை, மாலை, கொம்பணி முதலியன அணிந்த கன்றுடன் கூடிய பசுவையும் தானம்செய்தல் வேண்டும். இவ்வாறு உத்தி யாபனத்தை முடித்தபிறகு ஆசாரியரின் கட்டளைப்படி சிவனடி யார்களோடும், மக்களோடும், சுற்றத்தாரோடும் சேர்ந்து அமுது செய்தல் முறையாகும்.

**சோமவார விரதத்தின் பயன்**

இச் சோமவார விரதத்தை முன்பு திருமால், நான்முகன், இந்திரன் முதலிய தேவர்களும் முனிவர்களும் பதினெண் கணத்தவர்களும் அனுட்டித்தார்கள். மனிதரும் அனுட்

டித்துப் பெறுவதற்கரிய போகத்தையும் வீடுபேற்றையும் பெற்றனர். இவ் விரதத்தை அனுட்டிப்பவர், கொடிய பகையும் மனத் துன்பமும் நீங்கி அளவிறந்த பிறவிகளில் செய்த தீவினைகள் ஒழியப்பெற்று, எடுத்த பிறப்பிலேயே சிவகதியை அடைவர். இவ் விரதத்தைக் கூறினவர்களும் கேட்டவர்களும் மனைவி, மக்கள், சுற்றத்தார் முதலியவர்களோடும் இனிது வாழ்ந்து தேவருலகத்தில் பதினான்கு இந்திரப்பட்டமளவும் இனிது வீற்றிருப்பார்கள்.

### மூவேந்தர்களும் இந்திரனிடம் செல்லுதல்

இவ்வாறு அகத்திய முனிவர் சோமவார விரத முறையினைச் சொல்லக்கேட்ட தமிழ் வேந்தர் மூவரும், அவரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு மதுரையை அடைந்தனர்; பொற்றாமரை வாவியிலே நீராடிச் சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண் அம்மையையும் வணங்கி வழிபட்டுச் சோமவார விரதத்தினை அனுட்டித்தனர்; அவ்விரதத்தின் பயனைப் பெற்று ஆகாயமார்க்கமாகப் புறப்பட்டுச் சென்றனர். தேவேந்திரன் அதனை அறிந்து வந்த மன்னர் மூவரும் இருக்கும் பொருட்டுத் தனது சிங்காசனத்தில் தாழ்ந்திருக்குமாறு வேறு மூன்று சிங்காதனங்களை இடுவித்தான். ஆகாயமார்க்கமாகச் சென்ற அரசர் மூவரும் தேவருலகத்தை அடைந்து இந்திரன் அருகில் உற்றனர். அப்போது பனைமாலை அணிந்த சேரனும், ஆத்திமாலை அணிந்த சோழனும் இந்திரன் காட்டிய ஆசனங்களில் அமர்ந்தனர். உக்கிரபாண்டியன் மட்டும் இந்திரனுடைய சிங்காதனத்தில் ஏறி அவனோடு நிகராக அமர்ந்தான். இந்திரன் பாண்டியன்மீது பொறாமையுற்று, அருகிலிருந்த மற்றைச் சேரனையும் சோழனையும் நோக்கி முகமன்கூறி, "நீங்கள் வந்த காரணம் யாது?" என்று வினவினான். அவர்கள் இந்திரனை நோக்கி, "மகபதியே! எங்கள் நாட்டிலே மழை இன்மையால் அதனை வேண்டி இங்கு வந்தோம்" என்று கூறினர். இந்திரன் மனமகிழ்ந்து அவ்விருவர் நாடுகளில் மாத்திரம் மழை பெய்ய அருளி, இரத்தினாபரணங்களையும் பொன்னாடைகளையும் கொடுத்து, "நீவீர் செல்லுங்கள்" என்று விடையளித்தான்.

### தேவர்கோன் பாண்டியனுக்குப் பூணாரம் அளித்தல்

அம்மன்னர்கள் மீண்ட பின்பு இந்திரன், உக்கிர பாண்டியன் தனது சிங்காதனத்தின்கண் சமமாக இறுமாப்புடன் வீற்றிருத்தலையும், பின்னும் மழைவேண்டாத பெருமிதத்தையும் நோக்கி ஒரு சூழ்ச்சி செய்யக்கருதினன். உடனே மிக[1] உயர்வாகிய சிறப்புச் செய்கின்றவனைப்போல அளவில்லாத கிங்கரர்களாலே தாங்கி வரப்பெற்று அவர்கள் தோள்வலி மிக மெலிந்து வருந்துதற்குக் காரணமாகிய ஒரு முத்து மாலையை அவனுக்கு அன்புடன் கொடுத்தான். உக்கிர பாண்டியன் அதனை வாங்கி, மலர்மாலை போல விரைந்து தனது கழுத்திலே அணிந்து கொண்டான்.[1] இந்திரன் அதனைக்கண்டு பெருவியப்பெய்திப் பாண்டியனை நோக்கி, "வேப்பமலர் மாலையை அணிந்த மார்பனே! இன்றுதொட்டு உன்னை '**ஆரம் தாங்கு பாண்டியன்**' என்று உலகமெல்லாம் நன்கு மதிப்பதாக" என்று புகழ்ந்து கூறினன். உக்கிர பாண்டியன், அப் புகழ்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாது அவ்வரியணையினின்றும் இறங்கித் தனது மதுரை மாநகரை அடைந்தான்.

### உக்கிரபாண்டியன் முகிலைத்தளை இடுதல்

பிறகு, இந்திரனுடைய ஆணையினாலே சேர நாட்டிலும் சோழ நாட்டிலும் வளம்பெருகுமாறு மழை நிறையப் பெய்தது. பாண்டி நாடு மட்டும் முன்போல மழை இன்றி இருந்தது. ஒரு நாள் உக்கிர பாண்டியன், பொதிய மலையை அடுத்த சந்தன மரங்கள் அடர்ந்த சாரலை அடைந்து, அங்குள்ள யானை சிங்கம் பன்றி புலி கரடி மான் முதலிய

---

1. இங்குப் பாண்டியன் முத்தாரம் பூண்டதை, "திங்கட் செல்வன் திருக்குலம் விளங்கச், செங்கணாயிரத்தோன் திறல்விளங்கு ஆரம், பொங்கொளி மார்பிற் பூண்டோன் வாழி" (சிலப்பதிகாரம் - காடு காண் காதை) எனவும், "தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே" (சிலப்பதிகாரம் - ஆய்ச்சியர் குரவை) எனவும், 'வானவர்கோன்:ஆரம் வயங்கிய தோட் பஞ்சவன்றன், மீனக் கொடிபாடும் பாடலே பாடல்" (சிலப்பதிகாரம் - வாழ்த்துக்காதை) எனவும் வருகின்ற அடிகளாலும் உணரலாம்.

விலங்குகளை வேட்டையாடும்பொழுது [1]**புட்கலாவருத்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி** என்னும் மேகங்கள் நான்கும் அப்பொதியமலையின்மேல் வீழ்ந்து மேய்ந்துகொண்டிருத்தலைக் கண்டான்; உடனே அவற்றைப் பிடித்து, யானைகளைத் தளையிடுவதுபோல, கடிய விலங்கிட்டுக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையில் இடுவித்தான்.[2] அதனை இந்திரன் கேட்டு விறகில் பற்றிய தீப்போல் கடுங்கோபங்கொண்டு போரிடக் கருதிப் புறப்பட்டான்.

**இந்திரனும் உக்கிரவழுதியும் போரிடுதல்**

அப்போது, கடல் வறக்கும் வண்ணம் வேல் விடுத்ததனையும், மிக வலிய ஆரத்தைத் தாங்கிய பெருமிதத்தையும், மேகத்தை விலங்கிட்ட செருக்கையும் இந்திரன் நினைந்து நினைந்து, "இங்கு ஒரு மனிதனுக்கு இத்துணை வலிமை வந்ததற்குக் காரணம் யாது?" என்று மனமழிந்தான்; உடனே உக்கிர பாண்டியனுடன் போர் புரியும்பொருட்டுத் தேவ சேனைகளோடு மதுரையைச் சூழ்ந்தான். அதுகண்ட ஒற்றர்கள் ஓடிச் சென்று, உக்கிரவழுதியின் திருவடிகளை வணங்கி, "அரசே! நம்முடைய நகர்ப்புறத்தே தேவ சேனைகள் வந்து சூழ்ந்தன" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அப்போது உக்கிரபாண்டியன் கோபமும் மானமும் மிக்கவனாய் அரியணையினின்றும் நீங்கி, "போருக்குத் தேரையும் யானையையும் குதிரையையும் புறப்படுதற்கு ஏற்ப ஒப்பனை செய்க! வீரர்களெல்லோரும் விரைந்து முன் செல்லுக!" என்று கூறி, அவற்றை முன்னே நடப்பித்து, "போருக்கு வந்தவர் யாவர்"

1. இம்மேகங்கள் நான்கும் முறையே பொன், பூ, மண், கல் என்பவற்றைச் சொரிவன.

2. இதனை, "இடியுடைப் பெருமழை யெய்தா தேகப், பிழையா விளையுட் பெருவளஞ் சுரப்ப, மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்க" (சிலப்பதிகாரம் - காடுகாண் காதை) எனவும், "அடுபடைப் பூழியன் கடுமுரண் பற்றி, இட்டவெங் கொடுஞ்சிறைப் பட்ட கார்க்குலம்" (கல்லாடம்) எனவும் வருகின்ற அடிகளாலும் அறியலாம். பாண்டியன் மேகங்களைப் பிடித்துக் கட்டிய இடம் "கட்டு நல்லூர்" எனவும், சிறைப்படுத்திய இடம் "இருஞ்சிறை" எனவும் பெயர் பெறும். இருஞ்சிறை, கட்டுநல்லூருக்குச் சமீபத்தில் உள்ளதால் 'கட்டு நல்லூர் இருஞ்சிறை' எனவும் வழங்கும். இவை மானுமதுரைக்கு அண்மையில் உள்ளன.

என்று கருதாமல் யானைமீதேறி நகரின் மதிலைக் கடக்குமுன், தேவர்கள் நெருங்கி ஆரவாரித்துப் பல படைகளை எடுத்து வீசினர்; கணைகளை ஊழிக் காலத்தில் பொழியும் மழைபோலச் சொரிந்தனர்.

அதுகண்ட பாண்டியனின் படைவீரர்கள் ஆரவாரித்துப் பல்வேறு படைக்கலங்களை வீசி, அம்புகளால் அமரர்களின் உடலைத் தைத்து மூடும்படி செய்தனர். சிலருக்குக் கால்கள் அறுபட்டன; சிலருக்குத் தலைகள் உடைந்தன; சிலருக்குத் தோளும் கையும் குறைபட்டன. உதிர நீர் வெள்ள மாகப் பெருகிக் கடலை நோக்கி ஓடியது. பூதங்களும் கழுகு களும் பேய்களும் போர்க்களத்தில் வந்து நெருங்கின. வானவர் தலைவனுகிய இந்திரனுடைய சேனைகள் புறமுதுகு காட்டி ஓடின. போர்க்களத்தில் தலையற்ற உடல்கள் ஆடின; பூதங்கள் பாடின; கூளிகள் கொற்றவையின் திருவடிகளைத் தம் முடியில் சூடிக் கொண்டன; பிணக் குவியல்கள் வானத்தை அளாவ நிலவுலகை மூடின.

இந்திரன், தன் வீரச் சேனைகள் அழிந்தனவற்றைக்கண்டு, தீயினைச் சிந்தும் கண்களோடு பஞ்சிற்பட்ட நெருப்புப்போல் சினந்து, பதைபதைத்து வஞ்சினங்கூறித் தெய்வப் படைக்கலங் கொண்டு போரிடக்கருதி முன்னர்க் கதிரவன் படையைவிடுத்து ஆரவாரித்தான். உக்கிரபாண்டியன் திங்கட் படையினை விடுத்து அதனைத் தடுத்தான். வானவர்கோன் நரசிங்கப் படையை விடுத்தான். பாண்டியன் சரபப்படையை விடுத்து அதனை அழித்தான். இந்திரன் மோகக்கணையை விடுத்தான். மீனவன் ஞானக் கணையால் அதனை அழித்தான். பிறகு இரு வரும் மற்போர் புரிந்தனர். இந்திரன் பாண்டியன்மேல் வச்சிரப் படையை வீசி ஆரவாரித்தான். சிங்கம் போன்ற பாண்டியன் தன் கையிலிருந்த **வளையை** (திகிரிப்படையை)ச் சுழற்றி விரைந்து வீசினன். அவ்வளை, வச்சிரப்படையை வீழ்த்தி இந்திரனுடைய முடியைக் கீழே தள்ளிச் சிதைத்தது[1]. உடனே

1. இங்கு, "வச்சிரத் தடக்கை அமரர் கோமான், உச்சிப் பொன்முடி ஒளிவளை யுடைத்தகை" (சிலப்பதிகாரம் - கட்டுரைக் காதை) எனவரும் அடிகள் கருதற்பாலன.

இந்திரன் நாணமும் அச்சமும் கொண்டு புறங்கொண்டோடினான்; [1]"கிரவுஞ்ச மலையினைப் பிளந்த முருகக்கடவுளைப்போல் வலிமையுடைய உக்கிரபாண்டியன் வீசிய வளையானது என் தலையினைச் சிதையாது என் முடியை மட்டும் சிதைத்ததற்குக் காரணம் யான் முன்பு சோமசுந்தரக்கடவுளைப் பூசைசெய்ததே ஆகும்" என்று சிவபெருமான் திருவருளைப் பாராட்டினான்,

**இந்திரன் வேண்டுகோளால் பாண்டியன் முகிலை விடுவித்தல்**

போருக்கு ஆற்றாது புறங்கொடுத்தோடிப் பொன்னுலகத்தில் புகுந்த இந்திரன் பின்பு, "நினது நாட்டிலுள்ள ஊர் முழுவதுக்கும் மழை வளம் தருகிறேன்; ஆதலின், தளையினை நீக்கி என்னுடைய மேகங்களைத் தருவாயாக" என்று உக்கிர வழுதிக்குத் திருமுகம் ஒன்று அனுப்பினான். முடங்கல் கொண்டு வந்த தேவதூதன் உக்கிரபாண்டியன் திருவடிகளை வணங்கி ஒதுங்கி வாய்புதைத்து நின்று ஓலையை நீட்டினான். அருகிலுள்ள ஒருவன் அதனை வாங்கிப் பாண்டியனின்முன் வாசித்துக் காட்டினான். உக்கிரபாண்டியன் அதுகேட்டு இந்திரனுடைய வார்த்தையை நம்பாமையால் மேகங்களைச் சிறை நீக்க மறுத்து விட்டான். அப்பொழுது அங்கிருந்த, இந்திரனுக்கு எக்காலத்தும் நண்பனாயுள்ள ஒரு [2]வேளாளன் (ஏகவீரன் என்பவன்) பாண்டியனை நோக்கி, "**அரசே! நான் பிணை**" என்று சொல்லி வணங்கினான். இடுக்கண் வந்து, உயிருக்கே இடையூறு விளை

1. உக்கிர பாண்டியன் இந்திரனைத் தனித்து நின்று வெற்றி பெற்றதனால் இவ்விடம், 'தனிச்சயம்' எனப் பெயர்பெறும். இஃது, 'ஐயங்கோட்டை தனிச்சயம்' எனவும் வழங்கும். இவ்வூர் மதுரைக்கு மேற்கே சோழவந்தானுக்குச் சமீபத்தில் உள்ளது.

2. இவ் வேளாளன் பாண்டி மண்டலத்துக் களவேள்வி நாட்டில் (காட்டு நாட்டில்) உள்ள ஏழூர்களுள் ஒன்றான நாமனூரை உடையவன். மதுரைக்கு நேர் கிழக்கே வீரசோழன் என்னும் ஊருக்கு அண்மையில் களவேள்வி நாடு உளது. இவ் வேளாளன் இந்திரனுக்கு உபகாரம் செய்யும் பொருட்டுப் பிறரையெல்லாம் தள்ளிவிட்டு 'நாம் முன்' என்று சொல்லிக் கொண்டு வந்தமையால் அவன் ஊர் 'நாமுனூர்' என வழங்கியது.

மேகத்திற்கு (மழைக்கு), வேளாளன் பிணை கொடுத்த இடம், கப்பிஞ்சி நாட்டைத் தன்னிடத்தே கொண்ட "கார்வளங்கொள் மண்டலம்" அல்லது "மழைக்குப் பிணைகொடுத்த மங்கலநாடு" எனப் பெயர்பெறும். இது பரமக்குடிக்கு வடக்கே உள்ளது.

யினும் [1]வாய்மையைப் பாதுகாத்துக்குற்றமறஒழுகும் வேளாள மரபிற் பிறந்த அவனுடைய வார்த்தையை இறைவன் உயிர்களின் பொருட்டு எடுத்துக்கூறிய வேதமொழிபோல நம்பி உக்கிரபாண்டியன் சிறையின்கண் இட்டிருந்த மேகங்களின் தளையினை நீக்கி விடுவித்தான். மேகங்கள் நான்கும் யானைகள்போல் மீண்டு சென்றன.

**பாண்டிநாடு செழித்து விளங்கல்**

அதன்பின்னர், இந்திரன் கட்டளையினாலே பாண்டி நாட்டில் மாதம் மும்மாரி பெய்துவர, வாவி, குளம், ஆறு, மடு முதலியன நிறைந்து வயல்களிலும் படுகைகளிலும் செந்நெல்லும் கரும்பும் செழித்து ஓங்கின. பூஞ்சோலைகள் பொலிவுடன் விளங்கின. முன்போல் கன்னிநாடாகிய பாண்டிநாடு பொலிவு பெற்று விளங்கியது.

செய்யுள் — 59
ஆகச் செய்யுள் — 1111

---

1. வேளாளர் வாய்மையினைப் பாதுகாத்தல் பின்வரும் சேக்கிழார் புராணச் செய்யுளால் அறியலாம்: " மாறுகொடு பழையனூர் நீலி செய்த வஞ்சனையால் வணிகனுயிர் இழப்பத் தாங்கள், கூறியசொல் பிழையாது செந்தீக் குழியிலெழு பதுபேரும் முழுகிக் கங்கை, ஆறணிசெஞ் சடைத் திருவா லங்காட் டப்பர் அண்டமுடி நிமிர்ந்தாடும் அடியின் கீழ்மெய்ப், பேறுபெறும் வேளாளர் பெருமை எம்மால் பிரித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ " என்பது.

## 15. மேருவைச் செண்டால் அடித்த படலம்

***வீரபாண்டியன் பிறப்பு***

உக்கிரபாண்டியன் முன்பு அகத்திய முனிவர் தனக்குச் சொன்ன சோமவார விரதத்தை அன்றுதொட்டு அனுட்டித்து வரலும், அதன் பயன்போலக் காந்திமதியின் திருவயிற்றிலே ஒரு சற்புத்திரன் வந்து உதித்தான். மன்மதனைப்போன்ற அக்குழந்தை பிறந்த காலத்து நகர மக்கள் இசைக்கருவிகளை ஒலிப்பித்து மகிழ்ந்தனர். சயந்தன் பிறந்த காலத்து இந்திரன் பெற்ற மகிழ்ச்சியைக் காட்டிலும் மிகுந்த மகிழ்ச்சியினை உக்கிர பாண்டியன் அடைந்தான்; சாதகன்ம முதலிய சடங்குகளைச் செய்து முடித்து அப்புத்திரனுக்கு, '**வீர பாண்டியன்**' என்று பெயரிட்டான். உரியகாலத்தில் அப்புதல்வன் மறைகள் முதலிய பல கலைகளையும், யானை யேற்றம், குதிரை யேற்றம், தேர் செலுத்துதல், படைக்கலப் பயிற்சி முதலியவற்றையும் பயின்று விளங்க உக்கிரபாண்டியன் அதனைக்கண்டு மன மகிழ்ச்சி அடைந்தான்.

***மீண்டும் கோள்நிலை திரிதலால் மழை மறுத்தல்***

அக்காலத்தில் மீண்டும் ஒருமுறை கிரகங்கள் தத்தம் நிலை திரிந்தன. அதனால், பாண்டி நாட்டில் மழை வளம் குறைந்தது. ஆறு குளம் முதலியன நீரற்று வறண்டன. பருவம் மாறி உயிர்களெல்லாம் உணவின்றிப் பசியால் வருத்தமுற்றன. நாடு முழுதும் வறுமைத் துன்பத்தில் ஆழ்ந்தன.

பாண்டியன் சோதிடர்களை நோக்கி, "மழை வளம் குறைந்ததற்குக் காரணம் யாது" என்று வினவினன். அதற்கு அவர்கள் "அரசே! பிற கிரகங்கள் சூரியனை நோக்கி நிற்றலால் ஓராண்டு வரை மழை பெய்யாது" என்று கூறினர். அதனைக் கேட்ட பாண்டியன், குழந்தையுற்ற நோயைக்கண்டு வருந்தும் தாய்போல் வருந்திச் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, "ஐயனே! உயிர்களெல்லாம் பசியினாலே மிக மெலிந்து வருந்துகின்றனவே" என்று கண்ணீர் ததும்பக் கூறி நின்று முறையிட்டு வேண்டினன்.

சோமசுந்தரக் கடவுள், காலத்தின் செவ்வியை உணர்ந்து ஒன்றும் கூருது இரக்கமில்லாதவர்போல வாளா இருந்தார். பாண்டியன் கரையற்ற துன்பக்கடலில் மூழ்கியவனுய்த் தனது அரண்மனைக்குச் சென்றுன். கதிரவனும் மேற்குக் கடலில் மூழ்கினுன்.

**இறைவன் பாண்டியன் கனவில் தோன்றியருளல்**

உக்கிர பாண்டியன், தனது குடைக்கீழ்த் தங்கிய உயிர் களின் பசி வருத்தம் அனைத்தையும் கவர்ந்துகொண்டிருந்த தன் உள்ளத்திஞலே முகப் பொலிவு குன்றிப் பெருந் துன் பத்தில் மூழ்கி நிலத்திலே கிடந்து நித்திரை செய்தான். அப்போது அவனது கனவின்கண் வெள்ளியம்பலவாணர் சித்தமூர்த்தியாய் எழுந்தருளி வந்து, "ஒளி சிறந்த வேலோய்! இப்போது மழை பெய்யாது; நீ அதனை விரும்பி வருந்தற்க; மலைகட்கு வேந்தனுய் விளங்கும் மேருமலையின் பக்கத்தில் ஒரு பெரிய குகையிலே அளவற்ற திரவியம் சேமித்து வைக்கப் பட்டிருக்கின்றது. நீ அங்கே சென்று அம் மேரு மலையை அதன் செருக்கு அடங்குமாறு செண்டால் அடித்து, உனது ஆணை வயத்ததாக்கிப் பொன் வைத்திருக்கும் அறைமேல் மூடியுள்ள பாறையை நீக்கி, நீ வேண்டுமளவும் பொன்னை வாரி எடுத்துக்கொண்டு அவ்வறையை மீள அடைத்து உனது இலச்சினையை அதன்மேல் இட்டு வரக்கடவாய்" என்று அருளிச் செய்தார்.

**உக்கிர பாண்டியன் வடநாடு செல்லுதல்**

உடனே உக்கிர பாண்டியன் விழித்துக் கதிரவன் தோன்று முன் எழுந்து, நித்திய கருமங்களை முடித்துக்கொண்டு திருக் கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வலம்வந்து வணங்கிக் கடல்போல் பெருகிவரும் சேனைக்கூட்டம் புறத்தே சூழ்ந்துவரக் கோபுர வாயிலினைக் கடந்து கீழ்த்திசை நோக்கிச் சென்றுன். அப்போது முரசங்கள் அதிர்ந்தன. சங்கங்கள் ஒலித்தன. இசைக் கருவிகள் ஆர்த்தன. வெண் கவரிகள் துள்ளி வீசின. வேதியர்கள் ஆசி கூறினர். புலவர்கள் புகழ்ந்து பாடினர். அரசன் தேரில் ஏறினுன்; பாகன் விரைந்து

தேரை முன்னே செலுத்தினான். பவளக் காம்பினை
பீலிக் குடை, பொற் காம்பினையுடைய முத்துக் குடை, மு
கள் கோத்த காம்பினையுடைய வெற்றிக் கொடிகள், யா
கள், குதிரைகள், வீரர்களின் கூட்டம், தேர்களின் கூட்டம்
யாவற்றையும் நிலமகள் சுமந்து உடல் மெலிந்தாள். வளைந்த
நகமும், புலால் நாறும் பிளந்த வாயும், மிகுந்த கோபமும்
கொண்ட புலி எழுதிய பெரிய கொடியும், வளைந்த வில்
லெழுதிய கொடியும் இருபுறமும் வர, நிலத்தைத் துழாவுகின்ற
துதிக்கையையுடைய யானையின்மேலே **மீனக்கொடி** பெரிய
விசும்பிலே வீறுடன் பறந்தது.

இவ்வாறு தென்கடல் வடதிசையை நோக்கிச் செல்வது
போல உக்கிரபாண்டியன் தனது சேனையோடு தமிழ் வழங்கும்
கன்னி நாட்டைக் கடந்து சோழ நாட்டை அடைந்தான்.
அப்போது சோழ மன்னன் எதிரேற்று உபசரித்து வழி
அனுப்பினான். பிறகு மீனவன், தொண்டை நாட்டையும்,
தெலுங்க நாட்டையும், தாழையினை வேலியாகக்கொண்ட
கருநட நாட்டையும், காடு, மலை, ஆறு முதலாயவற்றையும்
கடந்து சோலைகள் நிறைந்த மாளவ நாட்டை அடைந்தான்;
அங்குநின்றும் கொடிய பாலைவனத்தைத் தாண்டி விராட
நாட்டை அடைந்து, அங்கு நின்றும்முல்லை நிலத்தையும் குறிஞ்சி
நிலத்தையும் கடந்து தென்னைமரங்கள் சூழ்ந்த மத்திய
தேசத்தைச் சார்ந்து, புனிதம் பொருந்திய **கங்கை பாயும்
காசிமா நகரை** அடைந்து கங்கையில் நீராடி, அகிலேசனை
வணங்கிக்கொண்டு அநேக காததூரம் கடந்த பின்னர் சிங்கம்,
யாளி, யானை முதலியன இயங்கும் மக்கள்செல்லாத இடங்களைக்
கடந்து சென்றான். இவ்வாறே ஆயிரம் யோசனை அளவை
யுடைய குமரிக்கண்டத்தைக் கடந்து இதுபோல் இன்னும்
எட்டுக் கண்டங்களைக்கொண்ட பாரத கண்டத்தைத் தள்ளி
இமயமலையை அடைந்து, அதன் அப்புறமுள்ள கிம்புருட கண்
டத்தை அடைந்து, அதனைக்கடந்து ஏமகூடத்தை அடைந்து,
அதனைக் கடந்து அரிவருட கண்டத்தை அடைந்து அதனைக்
கடந்து அப்பாற் போய் நிடதவெற்பை அடைந்து, அதனையும்
கடந்து சம்பு நதி பாயும் இளாவிருத கண்டத்தை அடைந்து

மேருமலையைக் கண்டான். உடனே தன்னுடைய சேனை பிரிந்து தனியே சென்று, வலமாகச் சூழ்ந்து ஓடும் சம்பு நதியின் அருகில் பசிய கொல்லைகளையும் காட்டையும் நோக்கி வியந்து, மேருமலையை வலமாக வந்து நாவல்மரம் நிற்கும் தென்றிசையிலே நின்றான்.

**உக்கிர வழுதி மேருவைச் செண்டால் அடித்தல்**

அப்போது உக்கிரபாண்டியன் மேருமலையைநோக்கி, "மலைகளுக்கு அரசே! என் தந்தையாகிய சிவபெருமானது திருக்கரத்திலுள்ள வில்லே! பூமிக்குப் பற்றுக்கோடே! கிரகங்களும் நட்சத்திரங்களும் வலஞ்செய்யும் தெய்வத்தன்மையுடைய மலையே! தேவர்கள் வசிக்கும் ஆலயமே!" என்று அழைத்தான்; மகா மேருமலை உடனே வாராது காலந் தாழ்த்தமையால், இந்திரனை வெற்றிகொண்ட அப் பாண்டியன் நாணமுற்றுத் தன் கோபமும் மேருவின் செருக்கும் நீங்குமாறு அம்மலையின் சிகரத்திலே **செண்டினால்** அடித்தான்.[1] உடனே ஒருகாலும் அசையாத மேருமலை அசைந்து பொற்பந்து துடித்தாற்போல் துடித்தது. அதன் சிகரங்களும் அச்சிகரங்களிலே தேவர்கள் வசிக்கப்பெற்ற ஆலயங்களும் வெடித்தன; கதிரவன் மண்டலம் பிளந்து துகளாகிப் பூமியில் சிந்தினாற்போல் பலமணிகளும் சிதறின; மேருவின் அருகில் சூழ்ந்து நின்ற [2]மலைகள் எட்டும், செம்பொன்னுலாகிய [3]அடைகல் (பக்கமலைகள்) நான்கும், [4]கிடங்குகள் (ஓடைகள்) நான்கும்,

---

1. ஒருசமயம் கரிகாலனும் இமயஞ் சென்று அதனைச் செண்டினால் தாக்கினன் என்ற வரலாறு உளது. இதனை, "செண்டுகொண்டு கரிகாலன் ஒருகாலில் இமயச் சிமயமால் வரை திரித்தருளி மீள" எனவரும் கலிங்கத்துப்பரணி அடிகளாலும் அறியலாம்.

2. மலைகள் எட்டு - நிடதம், ஏமகூடம், இமயம், நீலம், சுவேதம், சிருங்கம், கந்தமாதனம், மாலியவான் என்னும் எட்டு மலைகள்.

3. அடைகல் நான்கு - மந்தரம், கந்தமாதனம், விபுலம், பார்சுவம் என்னும் நான்கு பக்க மலைகள்.

4. கிடங்கு நான்கு-அருணம், மானசம், அசிதோதம், மாமடு என்னும் நான்கு நீர் ஓடைகள்.

[1]பொழில் நான்கும், [2]தருக்கள் நான்கும் நடுங்கின. **தலைவனுக்கு இடையூறு நேர்ந்தால் அவனைச் சார்ந்தவர்க்கு மகிழ்ச்சி உண்டாகுமோ? ஆகாது.** இவ்வாறு உக்கிரபாண்டியனின் செண்டால் அடிபட்ட பின்பு, மேருமலைத் தெய்வம் எட்டுத் தோள்களும் நான்கு தலைகளும், ஒரு வெண் குடையுங்கொண்ட உருவத்தோடு எழுந்துவந்து நாணி அவன்முன் நின்றது.

**மேருமலையும் உக்கிரபாண்டியனும்**

அதுகண்ட உக்கிரபாண்டியன் கோபந்தணிந்து மேருவை நோக்கி, "நீ இது காறும் வாராது காலந் தாழ்த்தியது என்னை?" என்று வினவினன். மேருமலை, "வித்தக நம்பியே! கேளும்; அடியேன் நாடோறும் இவ்வுருவத்தோடு சென்று அங்கயற்கண் அம்மையையும் சோமசுந்தரக் கடவுளையும் வழிபடும் நியமம் பூண்டேன்; இன்று ஒரு பெண்ணின் காமமாகிய கடலில் அகப்பட்டு மோகமாகிய சுழியில் ஆழ்ந்து வெள்ளியம்பலத்தில் ஆடும் பெருமான் திருவடிகளை வணங்குதலை மறந்து இதுகாறும் காலந் தாழ்த்து நின்றேன்; இப்பெரும் பாவத்தினால் அடியும் பட்டேன்; தமியேன், இறைவன் திருவடிக்குத் தவறுசெய்த தீமையினை நீக்கினை; இதற்கு அடியேன் செய்யும் கைம்மாறு யாது? அதுநிற்க, நீர் இங்கு வந்த காரணம் யாது? சொல்லும்" என்று கூறிற்று. அதற்குப் பாண்டியன், "நான் பொருளை விரும்பி வந்தேன்" என்றான். மேருமலை, "ஐயனே! நீர் விரும்பிய மாற்றுயர்ந்த செம்பொன், அதோ அந்த மாமரத்தின் நிழலின்கீழ் ஓர் அறையில் பாறையால் மூடப்பட்டுக் கிடக்கிறது" என்று தன் கையினாலே சுட்டிக் காட்டியது.

**பாண்டியன் செம்பொன் பெற்றுத் தன்னாடு திரும்புதல்**

உக்கிரபாண்டியன் அப்பொன்னறையின் அருகே சென்று, அதனை மூடிய பாறையை நீக்கித் தனது அவாவின் அளவினதாய பொன்னை வாரி எடுத்துக்கொண்டு முன்போல மூடி, எஞ்சிய

1. பொழில் நான்கு - சயித்திரம், நந்தனம், வைப்பிரசம், திருதாக்கியம் என்னும் நான்கு சோலைகள்.

2. தருக்கள் நான்கு - கடம்பு, நாவல், அரசு, ஆல் என்னும் நான்கு மரங்கள்.

பொன்னையும் தன்னுடையதாக வைத்து, அப்பாறையின் மேலே தனது பெயரையும் [1]குறி (மீன் முத்திரை)யையும் பொறித்து விட்டு மீண்டும் தன்னுடைய சேனையை அடைந்து, தென்றிசையினை நோக்கித் தேரேறிப் புறப்பட்டான்; பொன் திகழும் மேருமலையையும், போக பூமியையும், பிறவற்றையும் கடந்து, மக்கள் வாழும் நிலப்பகுதியினை வந்தடைந்தான்; மத்திமம், விராடம், மாளவம், தெலுங்கம் என்னும் நாட்டிலுள்ள அரசர்களெல்லோரும் தம்தம் நகரங்கள்தோறும் தனது வருகையை எதிர்நோக்கி, எண்ணில்லாச் சேனைகளோடும் எதிர்கொண்டு, உபசாரம்செய்ய, அதனை ஏற்றுத் தண்டமிழ் வழங்கும் பாண்டி நாட்டை அடைந்து, மதுரை மாநகரை நெருங்கினான்; சோமசுந்தரக் கடவுளுடைய திருக்கோபுரத்தைக் கண்டவுடனே விரைந்து தேரினின்றும் கீழே இறங்கி அட்டாங்க பஞ்சாங்கமாக நிலத்தில் வீழ்ந்து வணங்கி எழுந்து மதுரையை நோக்கி நடந்தான்; அப்போது அந்தணர்களும், துறவிகளும், சைவப் பெருமக்களும், திருக்கோயிலில் பணியாற்றும் அகத்தொண்டர்களும் ஒருங்கு கூடி எதிர்கொள்ள வையையாற்றினைக் கடந்து மதிலின் வாயிலில் புகுந்து மங்கலம் நிறைந்த மதுரைத் திருவீதியின் வழியே சென்று, மறைகள் முழங்கும் திருக்கோயிலை அடைந்து மதுரை நாயகனை வலம் வந்து வணங்கி எழுந்து துதித்துக்கொண்டு தனது திருமாளிகையினை அடைந்தான்.

**பாண்டிநாடு மீண்டும் செழித்தல்**

பின்பு, உக்கிரபாண்டியன் மேருமலை அளித்த பொற்குவியலை மலைபோலக் குவித்துப் பல குடிகளுக்கும் அளித்துப் பாதுகாத்துத் [2]தெய்வம், தென்புலத்தார், சுற்றத்தார், விருந்தினர் என்னும் நால்வகையோரையும் ஓம்பிக் களிப்புற்றிருந்தான். அப்போது நாட்டில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்

1. இங்கே, "'கயலெழுதிய இமய நெற்றியின்'' (சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர் குரவை) எனவரும் அடி நினைக்கற்பாலது.

2. இங்கே, 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு), ஐம்புலத்தா(று) ஓம்பல் தலை'' எனவரும் திருக்குறள் கருதற்பாலது.

என்னும் ஐந்து தொழில்களை நடாத்தும் சிவபெருமானின் ஆணையினால் நடக்கும் கிரகங்கள் மீண்டும் தத்தம் பழைய நிலையை அடைந்தன. பாண்டிநாடு முழுதும் மீண்டும் மழை வளம் பெற்று எங்கும் பெருவளங்கள் பெருகின. அதனால் உயிர்களெல்லாம் பசி நீங்கித் தழைத்தோங்கின.

பொன்மலைக் கடவுள் ஈந்த புண்ணிய நிதியை அந்த
நன்மலை மானக் கூப்பி நல்கிப்பல் குடியும் ஓம்பித்
தென்மலைக் கிழவன் தெய்வம் தென்புல வாணர் ஒக்கல்
தன்மனை விருந்து காத்துத் தருக்கினன் இருக்கும் நாளில்.

ஐவினை நடாத்தும் ஈசன் ஆணையால் நடக்கும் கோளும்
செய்வினைத் திரிவு மாறத் தென்னன்நா(டு) எங்கும் மாரி
பெய்வினை யுடைய தாகிப் பெருவளம் பகிர்ந்து நல்க
உய்வினை யுடைய வாகி உயிரெலாந் தழைத்த அன்றே.

**உக்கிரவழுதி தன் மகனுக்கு முடி சூட்டிச் சிவபதமடைதல்**

இங்ஙனம் **ஆரம் பூண்ட பாண்டியன் என்னும் உக்கிரவழுதி** ஆட்சிபுரிந்து, தன் திருமகனாகிய **வீரபாண்டியனுக்கு** முடிசூட்டித் தன் அரசுரிமையைத் தந்து, சச்சிதானந்த வடிவாகிய சோம சுந்தரக் கடவுளின் திருவடி நீழலில் இரண்டறக் கலந்தான்.

செய்யுள் — 41
ஆகச் செய்யுள் — 1152

———

# 16. வேதத்துக்குப் பொருளருளிச் செய்த படலம்

## உலகம் அழிந்து தோன்றுதல்

ஒரு காலத்திலே ஐம்பெரும் பூதங்களும் தத்தம் நிலையில் மாறுபட்டுப் பதினன்கு உலகங்களும், அவற்றுள் அடங்கிய நான்முகன், திருமால், இந்திரன் முதலாய தேவர்களின் பெரிய பதங்களும் தோன்றியவாறே ஒடுங்கின. ஒரு ஊழிக்காலம் வர மறைகளும் ஒடுங்கின. பின்னுளிலே **கதிரவன் முன்னே மலரும் தாமரை மலர்போல்**, சிவபெருமான் [1]திருமுன்னர் மீண்டும் யாவும் தோன்றின. [2] முன்புபோலவே பின்னும் சிவபரஞ்சுடர் முத்தொழில்களை நடாத்தியருளத் திருவுளங்கொண்டு திருமாலைப் படைக்க அத்திருமாலினுடைய உந்திக் கமலத்தினின்றும் வண்டுபோல நான்முகன் தோன்றி மூன்றுலகங்களையும் முறையாகப் படைத்தான்.

## முனிவர்கள் வேதப்பொருளை அறிய இயலாது கவலையுறுதல்

அப்போது நஞ்சினையுண்டு வானவருக்கு உயிர் அளித்த தேவதேவனுகிய சிவபெருமான் திருவாக்கில், [3] **பிரணவம்** தோன்றிற்று. அதினின்றும் வேதங்களெல்லாம் தோன்றின. நைமிசாரணிய வாசிகளாகிய **கண்ணுவர், கருக்கர்** முதலிய முனிவர்கள் அவ்வேதங்களை ஓதி அவற்றின் உட்பொருளை அறியாது மயங்கி மனமும் முகமும் வாடிக் கவலையுற்றிருந்தார்கள். அச்சமயம், ஆணவமலத்தின் வலியை வென்றவராகிய **அரபத்தர்** என்னும் ஒரு முனிவர் அங்கு வந்தார். அங்கிருந்த முனிவர்கள் வந்த அம்முனிவரை எதிர்கொண்டு வணங்கி வரவேற்று ஆசனத்தில் இருத்தி வழிபட்டனர்.

---

1. திருமுன்னர் - சந்நிதி - சத்தி சங்கற்பம்.

2. இங்கே, "விண்முதல் பூதலம், ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும், படைத்தளித்(து) அழிப்பமும் மூர்த்திக ளாயினை" (சம்பந்தர் தேவாரம் - திருவெழு கூற்றிருக்கை) எனவும், "அவனவ ளதுவெனும் அவைமூ வினைமையின்" (சிவஞானபோத முதற் சூத்திரம்) எனவும் வரும் அடிகள் நினைக்கற்பாலன.

3. பிரணவம் - இது சத்த வடிவாகிய அபரப் பிரணவம்.

**அரபத்தர் முனிவர்களின் வாட்டத்தை வினவுதல்**

அரபத்தர் முனிவர்களைப் பார்த்து, "பற்று, துன்பம், அவா, வெறுப்பு முதலியவற்றை நீக்கிய நீங்கள் சிந்தை வேறுபட்டு முகம் வாடி இருக்கும் காரணம் யாது?" என்று வினவினர். முனிவர்கள் அரபத்தரை நோக்கி, "ஐயனே! நாங்கள் மயக்கத்திற்கேதுவாகிய மாயையை இயல்பாகவே நீங்கிய சிவபெருமான் அருளிச்செய்த வேதங்களைப் பயின்றோம்; அவற்றின் உட்கிடைப் பொருளை உணர்த்தும் குரவன் இல்லாமல் இருண்ட மனத்தையுடையேமாக இருக்கின்றோம்; ஆதலால் இதற்கு ஆலோசனை யாது?" என்றனர்.

**ஆலவாய்க் கடவுளே வேதப்பொருளை உணர்த்துவர்**

அதனைக்கேட்ட அரபத்தர், "முனிவர்களே! வேதத்தை அருளிச்செய்த சிவபெருமானே அருளுருக்கொண்டு வந்து அவ்வேதத்தின் பொருளையும் உணர்த்தும்; அஃதன்றி வேறு ஆலோசனை யாது உளது கூறீர்? செய்த தவத்தினால் அன்றி வேறு யாதொன்றினாலும் கைகூடும் பொருள் இல்லை. அத்தவங்களும் புண்ணிய தலத்தின் அன்றிப் பயன்படாது. அப்புண்ணிய தலங்களினும் சிறந்த சிவத்தலங்களே எளிதில் பயனளிக்கும்; அச்சிவத்தலங்களினும் உத்தமோத்தம சிவத்தலத்திலேயே பெருந்தவம் எளிதில் விரைந்து பயனளிக்கும். இந்த உத்தமோத்தம சிவத்தலம், உலகமனைத்தும் தனது வடிவமாக உள்ள விராட் புருடனுடைய பிரமரந்திரத்தினின்றும் பன்னிரண்டங்குலம் மேற்பட்டு விளங்குஞ் சீவன் முத்திபுரமாகிய **மதுரைப்பதி**யேயாம். அங்கு அளவற்ற தேவர்களும், முனிவர்களும் பெருந்தவம்செய்து தவத்தின்பேற்றை எளிதில் துய்த்து வசிக்கின்றார்கள் என்று அறநூல்கள் கூறும். அம்மதுரையின்கண்ணே சோமசுந்தரக் கடவுளுடைய விண்ணிழி விமானத்திற்குத் தென் பக்கத்தில் கல்லால மரத்தின் நிழலினின்றும் நீங்காது எழுந்தருளியிருக்கும் முழுமுதற் கடவுளாகிய **தட்சணாமூர்த்தி**, தம்மை வழிபடாநின்ற சனகர் முதலிய முனிவர்களுக்குக் கருணையோடு முகமலர்ந்து அளவிறந்த அருங்கலைகள் அனைத்தையும் தெளிவுறுத்தி விளங்கா நிற்பர். அந்த

தட்சணாமூர்த்தியே உங்களுக்குத் தாம் அருளிய வேதத்தின் பொருளை உணர்த்தியருளுவர்; நீங்கள் அவர் திருமுன் இருந்து அருந்தவஞ் செய்தற்கு அங்கே செல்லுங்கள்'' என்று கூறினர்.

**முனிவர்கள் மதுரைக்குச்சென்று இறைவனை வழிபடுதல்**

கண்ணுவர் முதலிய முனிவர்கள் அதுகேட்டு மகிழ்ந்து அரபத்தரை வணங்கி அவர் பின் சென்று மதுரையை அடைந்து திருக்கோயிலினுட் புகுந்து பொற்றாமரை வாவியிலே நீராடினார்கள்; பின்பு எல்லைகடந்த அன்பு மேலோங்க, விரைந்து சென்று, எட்டு வெள்ளிமலைகளின் பிடரியிலே ஒரு பொன்மலை விளங்குவதுபோல் காட்சிதரும் இந்திர விமானத்தின்கண் எழுந்தருளிய தேவதேவனாகிய சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்துப் பேரின்பக்கடலில் மூழ்கி, நிலத்தில்வீழ்ந்து வணங்கி எழுந்தார்கள்; கைகள் தலைமீது குவிய, கண்கள் ஆனந்தக் கண்ணீராகிய அருவி சொரிய, கால்களும் கைகளும் நடுங்க, வாய்குழறி நின்று இறைவனைநோக்கி, "பிரமனும் திருமாலும் இன்னமும் காணப்பெறாத கரிய திருமிடற்றை யுடையவனே! வெள்ளிம்பலத்தில் திருக்கூத்தாடியருளும் தேவதேவனே! வானோர் உய்ய நஞ்சினை அருந்தி அமுதத்தை அளித்தருளிய உத்தமனே! எங்களைக் காத்தருள்க'' என்று துதித்து, மேலும் எம்பெருமானை நோக்கி, "வேதத்தின் பொருளை உணராது உள்ளம் மயங்கி வாடிய எங்களுக்கு நீரே அவ்வேதங்களின் உட்பொருளாய் நின்றருளினீர்; அவ்வேதங்களுக்கு உம்மையன்றி வேறு பொருள் யாது?'' என்று கூறி வணங்கினார்கள்; அதன் பின்பு, அங்கயற்கண் அம்மையையும் அவ்வண்ணமே துதித்து, வணங்கி, முறைப்படி வலம்செய்து விண்ணிழி விமானத்திற்குத் தென்பக்கத்தில் வந்து, கல்லாலமர நீழலின்கண் எழுந்தருளிய தட்சணாமூர்த்தியின் திருமுன்னர் அடைந்தார்கள்.

**முனிவர்கள் தட்சணாமூர்த்தியை உபாசித்தல்**

அங்கே கண்ணுவர் முதலிய முனிவர்கள், குளிர்ந்த பளிங்கு மலை போன்ற வெள்ளிய திருமேனியும், அப் பளிங்கு மலையின் அடியில் பதித்த பவளம்போன்ற திருவடிகளும், சிவந்த திருவாயாகிய தாமரை மலரும், மூன்று கண்களும், திருக்கைகள்

நான்கும், வேதபுத்தகமும், அமுத கும்பமும், உருத்திராக்க வடமும், [1] சின்முத்திரையும் உடைய மேலான பரமாசாரிய ராகிய தட்சணாமூர்த்தியின் திருமுன் வீழ்ந்து வணங்கித் துதித்தார்கள்; கல்லால மரத்தின் நிழலில் அமர்ந்தருளிய வேதமுத லாகிய பெருமானை வழிபடும் [2] இருபத்திரண்டெழுத்தாகிய மேதா மந்திரத்தை அரபத்த முனிவரால் உபதேசிக்கப் பெற்றுக் கார்த்திகை மாதத்தின் பௌர்ணமி முதற்கொண்டு அடுத்த கார்த்திகை மாதத்தின் பௌர்ணமி வரையும் நாடோறும் முப்பொழுதும் செபித்துத் தருப்பணம், ஓமம், பிராமண போசனம் முதலியன செய்து கொண்டுவந்தார்கள்.

**முனிவர்களின் முன்னே கடவுள் குருமூர்த்தியாக வருதல்**

அக்காலை, கண்ணுவர் முதலிய முனிவர்கள் அதிசயிக்குமாறு கல்லாலின் நீழலில் அமர்ந்தருளிய மௌன பரம குருமூர்த்தி யாகிய இறைவன் முப்பத்திரண்டு இலக்கணமும் அமையப் பெற்ற பதினாறு வயது நிரம்பிய ஒரு பிராமணக் குருவடிவங் கொண்டு எழுந்தருளி வந்தார். அவர் நெற்றியில் அணிந்திருந்த திரிபுண்டரம் நெற்றியிலுள்ள அனற்கண்ணை மறைத்தது; கழுத்திலணிந்த கண்டிகையோடு திருச்செவியில் அணிந்த குண்டலங்கள் இளங்கதிரவனைச் சிரிப்பதுபோல் ஒளி வீசின. திருமார்பில் உத்தரீயமும் முப்புரி நூலும் முத்துக்களை இடையிட்டுக் கோவை செய்த உருத்திராக்கமாலையும் அடியார்களின் ஆணவ மல இருளைப் போக்கும் ஒளிபோல் ஒளிவீசி விளங்கின. இரு கைகளிலும், தோள்களிலும் கண்டிகைகள் திகழ்ந்தன. வெள்ளிய ஆடையாலாகிய கோவணத்தின் அருகில் பட்டிகை சூழ்ந்து ஒளி வீசியது. தாமரை மலர்போன்ற பாதங்களில் சிலம்புகள், வண்டுகள் இசை பாடுதல்போல ஒலித்தன. தொண்டர்களுடைய மாசினை அகற்றும் திருவடியின்மேல் வீரக்கழல் முழங்கியது. வலக்கையில் குற்றமற்ற பவித்திரமும்,

---

1. சின்முத்திரையின் பொருட் குறிப்பினை, "மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயிர், அம்மலர்த் தாணிழல் அடங்கும் உண்மையைக் கைம்மலர்க் காட்சியிற் கதுவ நல்கிய, செம்மலை அலதுளஞ் சிந்தி யாதரோ" எனவரும் திருவானைக்காப் புராணச் செய்யுளால் அறியலாம்.

2. இம் மேதா மந்திரத்தைக் குருமுகமாக உணர்தல் வேண்டும்.

இடக்கையில் **சிவஞானபோதம் எழுதிய புத்தகமும்** விளங்கின. மறைகள் திருவடிகளுக்குப் பாதுகைகளாகத் திகழ்ந்தன. தேன் நிறைந்த தாமரை மலரினுள் முழங்கும் வண்டின் ஒலிபோல, நாவும் இதழும் புடைபெயர்ந்து துள்ளத் தோன்றும் வேதவொலி தொண்டர்களின் செவியாகிய வாய்க்கால் வழியாக ஓடி, உள்ளமாகிய வயலில் பாய்ந்து, உவகையாகிய பயிர்களை வளர்த்தது. திருவாயிலே புன்னகை திகழ்ந்தது. இவ்வாறு நாத தத்துவ முடிவாய் நான்மறைகளின் முடிவில் ஞான வடிவாய், எங்கும் நிறைந்த பூரணத் தன்மையாய் விளங்கும் பழம்பொருளாகிய **தட்சணாமூர்த்தி** முனிவர்கள் தரிசிக்குமாறு எளிதின் வந்து வெளியே நின்றருளினார்.

**குருமூர்த்தியினிடத்தில் முனிவர்களின் வேண்டுகோள்**

அதுகண்ட பெருமை மிக்க முனிவர்கள் முழுமதியினைக் கண்டு ஆரவாரிக்கும் கடலைப்போல், ஆசாரிய வடிவு கொண்டு எழுந்தருளிய இறைவனை வணங்கி நின்று, "அளவற்ற கலைகளின் உறைவிடமே! மறைகளின் பொருளாய் நின்ற மறையோனே! உன் அடைக்கலம்" என்று துதித்து மகிழ்ந்தனர். தேசிக வள்ளல் அவர்கள்மீது திருக்கண் சாத்தி, "குற்றமற்ற தவமுடையீர்! நீங்கள் விரும்புவது யாது?" என்றார். முனிவர்கள் அஞ்சலி செய்து, "எம்பெருமானே! அடியேங்களும் சகல உலகத்தாரும் உய்யும்பொருட்டு வேதங்களின் பொருளை இப்பொழுது உபதேசித்தருளவேண்டும்" என்று விண்ணப்பித்தனர்.

**குருமூர்த்தி முனிவர்களுக்கு வேதப்பொருளைக் கூறல்**

உயிர்களின் மிகக் கொடிய பாசங்களைப் போக்கியருளும் பரங்கருணைத் தடங்கடலாகிய ஆசாரியர், அம் முனிவர்களுடன் திருவாலவாயுடையாராகிய சிவலிங்கப் பெருமான் திருமுன்பு சென்று வேதங்களின் பொருளை அருளிச் செய்வாரானார்; "முனிவர்களே! கேளுங்கள்: வேதங்களின் பொருள்களனைத்தும் பெரிதும் இரகசியமாகும்; அவ் வேதப் பொருளை அறிதலே இம்மை இன்பப் பயனுக்கும், பாசபந்தத்தைப் போக்கும் வீடுபேற்றின் பயனுக்கும் கருவியாகும். சுயம்புவாய்

(தானேதோன்றியதாய்), உத்தமோத்தமமாய், தத்துவங்களின் வடிவமாய் விளங்கும் இச்சொக்கலிங்கம் நித்தமாய் வேதங்களனைத்திற்கும் ஆதிகாரணப் பொருளாய், சுத்தாத்துவிதப் பொருளாய், சுயம்பிரகாசமாய் விளங்குவது. எங்குநிறைந்த பராபரன் (பராசத்திக்கு மேலானவன்) என்றும், விஞ்ஞானன் (மேலான ஞானவடிவானவன்) என்றும், நிராமயன் (நோயில்லாதவன்) என்றும் நூல்கள் கூறுகின்ற பரப்பிரமமாகிய இம் மூர்த்தியின் திருவுருவமே வேதமாகும். இவ் வேதத்தின் பொருளும் இச் சுந்தர மூர்த்தமாய் இங்கே எழுந்தருளிய சிவலிங்கமே ஆகும். இச் சிவலிங்கமும் வேதமும் வேறல்ல என்று உண்மை நூலோர் கூறுவர். ஆதலால் வேதமும் ஒன்றே; அவ்வேதத்தின் பொருளும் ஒன்றே.

**பிரணவத் தோற்றம்**

அவ்வேதம், சாகைகளின் பேதத்தினுல் அனந்த பேதமாகத் தழைத்துள்ளது. அச்சாகைகளனைத்தும் இம்மூர்த்தியையே துதிக்கும். படைத்தல் காத்தல் அழித்தல் என்ற முத்தொழிற்கும் ஒருவனுகிய இச்சொக்கலிங்க மூர்த்தி, தனது சத்தியால் மும்மூர்த்தியாய் இருந்தருளினுர். மூன்றுலகங்களையும் நான்முகனுகிப் படைத்துத் திருமாலாகி நிலைபெறச் செய்து உருத்திரனுகி அழித்து அம் மூவருக்கும் தலைவனுய்ச் சிதாகாயமே திருமேனியாய் ஆதி அந்தமின்றி அழிவற்ற பேரொளியாய் உள்ள இச்சொக்கலிங்க மூர்த்தியின் வடிவத்தில் கீழ்ப் பாகம் ஆன்ம தத்துவமான பிரமனின் பாகமும், நடுப்பாகம் வித்தியா தத்துவமான திருமாலின் பாகமும், நுனிப் பாகம் சிவ தத்துவமான உருத்திரனின் பாகமும் தோன்றும். இம் மூவகைத்தத்துவங்களிலிருந்துஎல்லாத்தத்துவமும்தோன்றும். ஆன்ம தத்துவத்திலிருந்து **அகாரமும்**, வித்தியா தத்துவத்திலிருந்து **உகாரமும்**, சிவ தத்துவத்திலிருந்து **மகாரமும்** தோன்றும். **விந்து நாதங்களோடு** அகர உகர மகரம் மூன்றும் கூடுதலால் **பிரணவம்** தோன்றும். தாரக மந்திரமாகிய இப் பிரணவத்தினின்றும் மூன்று வாக்கிய வடிவமான பதங்களைக் கொண்ட

காயத்திரி தோன்றும். இக் காயத்திரி [1] **சமட்டி, வியட்டி** என இருவகையாக நின்று விரும்பிய பொருள்களனைத்தையும் பெறுதற்குக் காரணமாய் விளங்கும்.

**வேதாகமோற்பத்தி**

சமட்டி, வியட்டி ஆகிய இவ்விரண்டும் இச்சொக்கலிங்க மூர்த்தியின் திருவருட் சத்தியால் நான்கு வேதங்களையும் ஈன்றன. அந் நான்கு வேதங்களும் பின்பு அளவிறந்தனவாய் விரிந்தன. பிரணவத்தை முதலில் கொண்ட மந்திரங்களும் அளவிறந்தனவாய் விரிந்தன. இன்னும் அப் பிரணவத்தினின்றும் அகரம் முதலிய எழுத்துக்களெல்லாம் தோன்றின. அவ்வெழுத்துக்களினாலே இச் சொக்கலிங்கமூர்த்தியின் உச்சி முகமாகிய ஈசான முகத்திலே **சிவாகமங்கள் இருபத்தெட்டும்** தோன்றின. கிழக்கு முகமாகிய தற்புருட முகத்தினின்று இருபத்தொரு சாகைகளோடும் **இருக்கு வேதம்** தோன்றியது; தெற்கு முகமாகிய அகோர முகத்தினின்று நூறு சாகைகளோடும் **யசுர் வேதம்** தோன்றியது; வடக்கு முகமாகிய வாமதேவ முகத்தினின்று ஆயிரஞ் சாகைகளோடும் **சாம வேதம்** தோன்றியது; மேற்கு முகமாகிய சத்தியோசாத முகத்தினின்று ஒன்பது சாகைகளோடும் **அதர்வ வேதம்** தோன்றியது. வேதங்கள் நான்குவகை; ஆதலால் [2] வருணங்களும் ஆச்சிரமங்களும்தனித்தனியேநான்காயின. தருமங்களும் யாகாதி கருமங்களும் வேதங்களின் நெறியிலே தோன்றின. அவ் வேதங்களும் **கரும காண்டம், ஞான காண்டம்** என இருவகைப்படும். அவற்றுள் கரும காண்டம் (கருமம் - செய்கை) இச் சொக்கலிங்கமூர்த்தியின் பூசா விதிகளை அறிவிக்கும். ஞான காண்டம் (ஞானம் - அறிவு) இத்திருவாலவாயுடையாருடைய சச்சிதானந்த வடிவத்தை அறிவிக்கும்.

---

1. சமட்டி - தொகுத்துச் சொல்வது; அஃது 'ஓம்' என நிற்பது. வியட்டி - பகுத்துச் சொல்வது; அஃது அகார உகார மகார விந்து நாதம் என்னும் ஐந்தும் கூடி நிற்பது.

2. வருணம் - சாதி; அஃது அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என நான்காம். ஆச்சிரமம்-நிலை; அது பிரமசாரியம், கிருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என நான்காம்.

**சிவபெருமானே வீடளிப்பவர்**

வேர் பருகும் நீரினாலே கிளைகள் தளிர்த்தாற்போல இம் முழுமுதற் கடவுளுக்கு ஊட்டும் அவியுணவு இவ்விறைவன் வடிவமாகிய தேவர்களுக்கும் பிறர்க்கும் நிறைவினைச்செய்யும். இப்பரமன் திருமுன் இயற்றும் **நித்தியம், நைமித்தியம், காமியம்** என்னும் இம் மூன்று கருமங்களுக்கும், உலகத்தவர் இன்பப் பேற்றினையும் வீடுபேற்றினையும் வேண்டிய வண்ணமே பெறும்பொருட்டுப் புரியும் சிவார்ச்சனைக்கும் இச்சிவலிங்கமே காரணமாயுள்ளது.

**ஞான காண்டம் – கரும காண்டம்**

வேதங்கள் பல சாகைகளைக்கொண்டு தேடியும் உணராது கதறிவாய்சோர்ந்து மயங்க, அகண்ட பரிபூரணமாய் நிறைந்த சொரூப சிவமாகிய இச்சிவலிங்கத்தைக் கருமகாண்டத்தில் கூறிய முறையினின்றும் தவறாத பூசை முறையினாலும், ஞான காண்டத்தில் கூறிய நெறியினின்று திருவருளால் ஒன்று மாகாது கலக்கும் (அல்லது சிவோகம்பாவனை புரியும்) உணர்வினாலும் தெளிக. உங்கட்கு நாமுணர்த்திய அரிய வேதங்களின் உட்கிடைப் பொருள் மற்றவர்கள் அறிந்து கொள்வதற்கு அரிதாகும்.

**வைதிகமும் – வைதிக சைவமும்**

சிவபூசை முதலிய நற் கருமத்தாலே ஞானம் கைகூடும்; அந்த நற்கருமம் [1]சித்த சுத்தி (உள்ளத் தூய்மை)யை அளிக்கும்; அச்சித்த சுத்தியைத் தருமம் கொடுக்கும்; அத் தருமத்தாலே சாந்தி உண்டாகும்; அச் சாந்தியினாலே அட்டாங்கயோகம் தோன்றும். அட்டாங்கயோகமே **ஞானங்கம்** எனப்படும். [2]கிரியையினாலும் ஞானத்தினாலும், சிவபத்தி, சிவபூசை, சிவ தரிசனம், சிவலிங்கம் தாபித்தல், மெய்யடியார் வழிபாடு, சிவச்

---

1. சித்த சுத்தி - சற் கருமங்களைச் சிவார்ப்பணமாகச் செய்வதால் வரும் பயன்.

2. கிரியையினாலும் ஞானத்தினாலும் - இங்கு வேதத்தின் கரும காண்டத்தாலும் ஞான காண்டத்தாலும் அல்லது சிவாகமத்தில் கிரியா பாதத்தாலும், ஞான பாதத்தாலும் என்று பொருள் கொள்ளினும் கொள்ளலாம்.

சின்னம் தாங்குதல், குருபத்தி ஆகிய இவையெல்லாவற்றையும் அறியலாம். [1]வேதத்தின் வழியே நடக்கும் மதங்களனைத்திற்கும் வேதமே பிரமாணமாகும். அவ் வேதத்தின் வழியே சென்று அதற்குப் பொருந்தக்கூறும் ஸ்மிருதிகள் அனைத்தும் அம்மதங்களுக்குஅனுகுண (உதவி)ப்பிரமாணம் ஆகும். வேதத்திற்கு அனுகுணப் பிரமாணமாகிய ஸ்மிருதிக் கொள்கைகள் **ஸ்மார்த்தம்** என்று கூறப்படும். ஸ்மார்த்தத்தைத் தழுவிய வேதநெறிகள் **வைதிகம்** எனப்படும். அவற்றுள் மிக மேன்மையாகக் கூறப்படுவது [2]சுத்த சன்மார்க்கமாகிய **வைதிக சைவம்** ஆகும்.

**இறைவன் முனிவர்களுக்கு ஆசிகூறி மறைதல்**

போகத்திற்கும் வீட்டிற்கும் காரணமாக விளங்கும் சிவமயமாகிய மறைகளின் உட்பொருளை உங்கள் அறியாமை நீங்கும் வண்ணம் உரைத்தோம்.[3] நாம் கூறிய இப்பொருளைக் காட்டிலும் மேலான பொருள் வேறில்லை; இப்பொருள்கள்அனைத்தும் உங்களுக்கு மயக்கந்தீர விளங்குவதாக" என்றருளி அருள் கனிந்த திருவுருவத்தையுடைய சிவபெருமானாகிய ஞானமூர்த்தி கண்ணுவர் முதலிய முனிவர்களின் முதுகுகளில் தமது அருளாகிய திருக்கரத்தாலே தடவிக்கொடுத்துவிட்டுச் சிவலிங்கத்தினுள் மறைந்தருளினார்.

செய்யுள் — 42
ஆகச் செய்யுள் — 1194

---

1. இங்கு, வேதம் பொது நூல் என்பதும் வேதாந்தத் தெளிவாகிய சைவ சித்தாந்தம் கூறும் சிவாகமம் சிறப்பு நூல் என்பதும் பெறப்படும்.

2. இச் சுத்த சன்மார்க்கமாகிய வைதிக சைவமே வீடு பேற்றை அளிப்பது. இதனை, "சன்மார்க்கஞ் சகலகலை புராண வேத சாத்திரங்கள் சமயங்கள் தாம்பலவும் உணர்ந்து, பன்மார்க்கப் பொருள்பலவுங் கீழாக மேலாம் பசுபதிபா சந்தெரித்துப் பரசிவனைக் காட்டும்" என வரும் சிவஞான சித்தி அடிகளாலும் உணரலாம்.

3. இங்கு, "நால்வேதமும் பொருள்களும் அருளி, அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே" (சம்பந்தர் தேவாரம் - திருவாலவாய்) எனவரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

## 17. மாணிக்கம் விற்ற படலம்

### *வீரபாண்டியன் புலியால் பற்றப்பட்டு இறத்தல்*

வீரபாண்டியனுக்கு ஐந்து போகங்களும் விளையும் நிலம் போல[1] ஐம்புல இன்பங்களை விளைவிக்கும் காமக்கிழத்தியர் பலர் இருந்தனர். அவர்களிடத்தே மன்மதனை ஒத்த புதல்வர்கள் பலர் பிறந்து நல்ல பயிருக்குக் களைபோல வளர்ந்து வந்தனர். ஆனால், தன் குல மனைவியின் மூலம் வீர பாண்டியனுக்கு ஒரு குழந்தையேனும் பிறக்கவில்லை. வீர பாண்டியனும் அவன் குல மனைவியும் சோமசுந்தரக்கடவுளை நோக்கி, **அட்டமி, சதுர்த்தி, சோமவாரம்** ஆகிய சிவ விரதங்களை அனுட்டித்து ஒழுகுவாராயினர். சிவபெருமான் திருவருளால் சில நாட்கள் சென்றபின் கங்கையினும் தூய்மையுள்ள அருந்ததிபோன்ற கற்பினையுடைய அரசி வயிற்றிலே சிறிய ஆலம்வித்தில் தோன்றிய முளைபோல **ஒரு சற்புத்திரன்** வந்து தோன்றினன். அப்புத்திரனுக்கு வேத முறைப்படி சாதகன்ம முதலாகப் பிற சடங்குகளை வீரபாண்டியன் சிறப்புறச் செய்து முடித்தான். அச் செல்வப் புதல்வன் அழகுபெற வளர்ந்து வருங்காலத்தில், வீர பாண்டியன் வேட்டையாடச்சென்று ஊழ்வினைப் பயனால் புலியினால் பற்றப்பட்டுத் தேவர்க்கு நல்விருந்து ஆயினன்.

### *வீர பாண்டியனுக்கு இறுதிக்கடன் செய்தல்*

வீர பாண்டியன் விண்ணுலகம் அடைந்ததை அறிந்த அரசியும், காமக்கிழத்தியரும், நகர மக்களும் துயரக் கடலில் ஆழ்ந்தனர். அப்பொழுது காமக்கிழத்தியரின் புதல்வர்கள் இதுவே ஏற்ற சமயம் என்று கருதி யானை குதிரை முதலானவற்றையும், பலவகைத் திரவியங்களையும், ஆபரணங்களையும், கிரீடத்தையும் கவர்ந்துகொண்டு போய் மறைந்தனர். அமைச்சர்கள் இளங்குமரனைக்கொண்டு விண்ணுலகமடைந்த வீர பாண்டியனுக்கு இறுதிக்கடன்களைச் செய்து முடித்தனர்.

---

1. இங்கு, 'கண்டுகேட் டுண்டுயிர்த்(து) உற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள'' எனவரும் திருக்குறள் உன்னற்பாலது.

**அரசகுமாரனுக்கு முடிசூட்ட எண்ணுதல்**

பிறகு, அமைச்சர்கள் வீர பாண்டியனின் புதல்வனுக்கு முடிசூட்ட நினைந்து கருவூலத்தினைத் திறந்து பார்த்தனர்; அங்கு நவமணிகள் இழைத்த முடியையும், வேறு சில பொருள்களையும் காணாது திகைத்துவாடி மனம் வருந்தினர்; அவையாவும் பகைவர்களே (காமக்கிழத்தியர்களின் புதல்வர்களே) கவர்ந்து கொண்டு போயினர் என்று கருதினர்; "வேறு சிறந்த மணி முடி ஒன்றைச்செய்வோம் என்று கருதினாலோ விலையுயர்ந்த பெரிய மணிகள் இல்லை; முடி இல்லையாயின் அரசிருக்கையும் இல்லை; அரசியல் இல்லையாயின் உலகம் துன்பமடையும்; 'இங்கு நம்மால் செய்யத் தகுவது யாது' என்று தங்களுக்குள்ளே ஆலோசித்துச் சொக்கலிங்கப் பெருமானின் திருவருளை அறிவோம்" என்று தெளிந்தனர்; கவலை மிகுந்த உள்ளத்தோடு அரண்மனையினின்றும் அரச குமாரனை அழைத்துக் கொண்டு புறப்பட்டுத் திருக்கோயிலின் திருக்கோபுர வாயிலை அடைந்தனர்.

**சோமசுந்தரக்கடவுள் வணிகராய்த் தோன்றி வருதல்**

அப்போது, சோமசுந்தரக்கடவுள் இடையில் கோவணமாகப் போக்கிய வெள்ளிய ஆடை விளங்கவும், பிடரியின்மேல் பல ஒளிவீசும் இரத்தினப் பொதி தொங்கவும், தோளின் மேல் விலையுயர்ந்த வாகுவலயம் சூரியனைப்போல ஒளிவீசவும், வலப்பாலில் பூணூல் புரளவும், மார்பிலே இந்திர வில்லைப்போல இரத்தின மாலை விளங்கவும், காதணிகளான குழையும் குண்டலமும் தோளில் புரண்டு ஆடவும், திருவடிகள் நிலத்திலே பொருந்தவும் **ஒரு வணிகராய்** வேடங்கொண்டு அவர்கள் எதிர் வந்து தோன்றியருளினார்.

அங்ஙனம் தோன்றிய வணிகர் எதிர் வருகின்ற அமைச்சர் முதலியோரை நோக்கி, "நீங்கள் கவலை கொண்ட மனத்தராய் வரும் செய்தி யாது?" என்று வினவினார். மந்திரிகள் முன் நிகழ்ந்தவற்றையெல்லாம் முறைப்படி அவருக்குக் கூறினர். அதுகேட்ட வணிகர், "நீங்கள் ஏன் கவலை கொள்ளுகின்றீர்கள்? என்னிடத்தே நவரத்தினங்களும் உள்ளன; அவை பதினாயிரம்

கோடி பொன் விலைகொண்டன; அவற்றையெல்லாம் இதோ காட்டுகிறேன்; பாருங்கள்!" என்று கூறிக் கீழ்த்திசையினை நோக்கி அமர்ந்தார்; ஒரு கரிய கம்பலத்தை விரித்து அதன் நடுவில் மாணிக்கத்தையும், அதனைச் சுற்றிக் கிழக்கு முதலிய எட்டுத் திசைகளிலும் முறையே, முத்து முதலிய எட்டு மணிகளையும் எடுத்து வைத்து, "இம்மணிகள் **வலன்** என்னும் அசுரனுடைய உடலின் கூறுகள்" என்று கூறினர். அதனைக் கேட்ட அமைச்சர்கள் வியந்து, "வலன் என்னும் அச் செம்மல் யார்? அவன் உடல், மணிகள் ஆயினமை எப்படி? கூறியருள வேண்டும்" என்று வேண்டினர்.

**வலன் என்னும் அசுரன் வரலாறு**

வணிகர் அமைச்சர்களை நோக்கி, "வலன் என்பவன் ஓர் அசுரன். அவன் முன்னொருகாலத்தில் சிவபெருமானுடைய திருவடிகளைப் பூசித்து வழிபட்டான். அப்போது சிவபெருமான் அவனுக்கு முன்தோன்றி, "உனக்கு யாது வேண்டும்" என்று வினவியருளினர். வலாசுரன் சிவபெருமானை வணங்கி நின்று, "யான் போரின்கண் யாராலும் பிளவுண்டு இறவா வரத்தையருளுக; அங்ஙனமன்றி ஊழ்வினை உற்று இறப்பேனாயின், என் உடல் துறவிகளும் விரும்பும் வண்ணம் நவரத்தினங்களாக வேண்டும்" என்று வேண்டினான். சிவபெருமான் அவனுக்கு அவ்வாறே வரம் அருளினர். அப்பொழுதே வலாசுரன் தேவலோகம் சென்று இந்திரனை எதிர்த்துப் போரிட்டான். இந்திரன் வலனை எதிர்த்துப் போரிடும் வலியிலனாய்ப் புறங்கொடுத்து ஓடினான். தோல்வியுற்ற இந்திரன், "வலன், இறவாத வரம்பெற்றவன்; அவனை மீண்டும் எதிர்த்துப் போர் புரிந்தாலும் வெல்லுதல் அரிது; ஆதலால், அவனைச் சூழ்ச்சியால் இயமன் உலகிற்கு அனுப்புதல் வேண்டும்" என்று கருதிப் படைக்கலம் இன்றித் தேவர்களனைவரும் தன்னைச் சூழ்ந்துவரத் தேவயானைமேல் போர்க்களத்தை அடைந்து சிங்கம்போன்ற வலனை நோக்கி, "வெற்றி மிகுந்தவனே! வருக! நின் தோள் வலிமையும் வெற்றிப் புகழும் எத்திசைகளிலும் பரவியுள்ளன; அப்புகழ்ச்சியைக் கண்டு மகிழும் நான், உனக்கு ஏற்ற வரம் அளிப்பேன்; ஆதலால், நீ வேண்டிய வரம் யாதோ? அதனைக்கேள்"

என்றான். இந்திரன் கூறியதைக்கேட்ட வலன் இருகையினையும் புடைத்து உடல் நிமிர்ந்து இடிபோல நகைத்து இகழ்ந்து அவனை நோக்கி, "நீ எவரும் நகைக்கும்படி கூறியது மிக நன்று! நீ என்னைப் புறங்கண்ட வெற்றியும், அதனால் பெற்ற கீர்த்தியும், நின் பெருமிதமும், இன்று நீ என்னோடு செய்த போரில் காணப்பட்டனவல்லவோ? இவற்றால் உன் புகழ் எங்கும் பரவி நிலைபெற்றுள்ளது; இதுபோலவே உன் கொடையும் நிலை நிற்கும்; சிவபெருமான் எனக்கு அருளிய நல்ல வரங்கள் இருக்கவும், அவற்றிற்கு வேறாக நான் உன்னிடம் பெறத்தக்க வரம் ஒன்று உண்டோ? என்னிடம் உனக்கு வேண்டியது யாது? கேள்; அதனை இப்பொழுதே கொடேனாயின், இப் போர்க்களத்தில் உன்னைப்போன்றே தோற்ற பழியாகிய புகழைப் பெற்றவனாவேன்" என்று உறுதி கூறினான்.

வலாசுரன் வார்த்தையினைக்கேட்ட இந்திரன் பெருமகிழ்ச்சி கொண்டு, "வலனே! நான், மேருவை வில்லாகக்கொண்டு திரிபுரத்தை அழித்த சிவபெருமான் எழுந்தருளிய வெள்ளி மலைச் சாரலை அடைந்து, அங்கு ஒரு வேள்வியினைச் செய்வேன்; அப்போது தேவர்களுக்கு அவியூட்ட நீ வேள்விப் பசுவாகி விரைந்து வருதல் வேண்டும்" என்றான். இந்திரன் வேண்டியதைக் கேட்ட வலாசுரன், "ஒரு காலத்தில் [1] **ததீசி முனிவர்** தம் பூத உடலில் முதுகெலும்பு ஒன்றை உனக்கு வச்சிரப்படையாக அளித்துப் புகழுடம்பு ஒன்றை பெற்றார். பிறரை வெல்லும் வெற்றியினாலும், பிறரால் அழியாத உடல் முழுதும் நவமணிகள் ஆகுமாறு இறத்தலாலாகும் கொடையினாலும் என்னைப்போல் அம் முனிவனுக்குப் புகழுடம்பு இரண்டு உள்ளனவோ? நீ எனக்குப் பகைவன் அல்லை; நீயே நண்பன்; தேவர்களனைவரும் உண்ணும் இயல்பினால் புண்ணியமும் புகழும் எனக்கு உளவாகப் பசுவின் வடிவாகி வருதி

1. ததீசி முனிவர் - இவர் அதர்வ ரிஷிக்கும் சாந்தி என்பவளுக்கும் உதித்த குமாரர். இவருக்குத் 'தத்தியங்கர்' என்ற ஒரு பெயரும் உண்டு. இவர் தவத்தில் வலியவர்; தக்கனுக்கு நல்ல அறிவுரைகளைக் கூறியவர்; அருள் உடையவர்.

என்றாய்! அங்ஙனமே வருவேன்!" என்று மொழிந்தான், எஞ்ஞான்றும் ஈவதே பெருமை அல்லாமல் இரத்தல் இழிபல்லவா?[1]

**வலன் வேள்விப் பசுவாக வந்து மடிந்து பிரமன் உலகடைதல்**

இந்திரன் விருப்பத்திற்கிணங்கிய அவுணர் தலைவனாகிய வலன், இந்திரனை முன்னே அனுப்பிவிட்டுத் தன் புதல்வனுக்கு அரசுரிமையை அளித்துவிட்டு வேத நூலில் கூறிய முறைப்படி இலட்சணம் அமைந்த பசுவாகித் தேவர்கட்கு அவியுணவு ஆக்கும் வேள்விச்சாலையின்கண் வந்து அசையாது நின்றான். அப்போது இந்திரன் வலனை நோக்கி, "உன்னைப்போல் வாய்மையால் புகழ்பெற்ற வள்ளல் யார்?" என்று வியந்து கூறினன். செருக்கினை மேற்கொண்ட வலன் மேரு மலையோடு பகைத்து ஓங்கிய விந்தமலைபோல உயர்ந்து, "வேள்விக்குப் பயன்படும் என்னை யூபத் தம்பத்தோடும் கட்டுங்கள்" என்று கூறி அதனை அடுத்து நின்றான். உடனே தேவர்கள் தருப்பைக் கயிற்றால் வலனாகிய பசுவை வேள்வித் தூணோடு சேர்த்துக்கட்டினர்; பிறகு சிலம்பி நூலினால் கட்டப்பெற்ற ஆண் சிங்கம் போல நின்ற அவன் வாயினைப் பொத்தி, மூச்சு அடங்கக் கொன்றனர். இறந்த வள்ளலாகிய வலாசுரனும், கற்பக மலர் மழை பொழிய இந்திர விமானத்தில் ஏறி நான்முகன் உலகத்தை அடைந்தான்,

பிறகு இந்திரன், தூணிலே கட்டி உயிர்போக்கப்பட்ட வள்ளன்மையும் பெருந் தகுதியும் உடைய வலனாகிய பசுவினிடத்திருந்து வச்சிரப் படையினால் வபையினை எடுத்து வேள்வித் தீயானது முன்னே சுவை பார்க்க இட்டு, அதன்பின் குறிப்பிட்ட தேவர்களுக்கு உண்பித்து வேள்வியைச் செய்து முடித்தான்.

**நவமணிகளின் தோற்றம்**

வேள்விப் பசுவாய் வந்து உயிர் நீத்த வலாசுரனின் இரத்தமே **மாணிக்கம்**; பற்களே **முத்து**; மயிரே **வயிடூரியம்**;

---

1. இங்கே, "நல்லா றெனினுங் கொளல் தீது; மேலுலகம், இல்லெனினும் ஈதலே நன்று" என்னும் திருக்குறளும், "ஈயென இரத்தல் இழிந்தன்று....கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று" என்னும் புறநானூற்று அடிகளும் கருதற்பாலன.

எலும்பே **வயிரம்**; பித்தமே **மரகதம்**; வெள் நிணமே **கோமேதகம்**; தசையே **பவளம்**; கண்களே **நீலம்**; கோழையே **புருடராகம்**, இவையே நவமணிகள் தோன்றிய முறைமை ஆகும்.

அத்தகை ஆவின் சோரி மாணிக்க மாம்;பல் முத்தம் ;
பித்தைவை டூயம் ; என்பு வச்சிரம் ; பித்தம் பச்சை ;
நெய்த்தவெண் ணிணங்கோ மேதம்; தசை துகிர்;நெடுங்கணீலம்;
எய்த்தவை புருட ராகம்; இவைநவ மணியின் தோற்றம்.

இவ்வாறு வடிவங்களை எடுத்துத் தோன்றி ஒளிவிடும் நவமணிகள் தோன்றும் இடங்களையும், அவற்றின் நிறங்களையும் சாதியினையும், தெய்வத்தையும், ஒளியினையும், ஆராய்ந்து குற்றங்களை நீக்கி நல்லனவற்றை உடலில் அணிகின்றவர் அடையும் பயனையும் முறைப்படி கேளுங்கள் :

### 1. மாணிக்கம்

மாணிக்கம் கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களிலும் முறையே **மக்கம்**, **காளபுரம்**, **தும்புரம்**, **சிங்களம்** என்னும் நான்கு இடங்களிலும் தோன்றும். இது, தாமரை மலர், மாதுளம் பூ, மாதுளை விதை, நெருப்பு, செங்கழுநீர்ப் பூ, மின்மினிப் பூச்சி, நாரத்தம் பழம், தீபம், இந்திரகோபம் என்னும் ஒன்பது வகை நிறங்களில் ஒன்றைப் பொதுவாகக் கொண்டு திகழும்.

இந்த மாணிக்கம் [1] **சாதரங்கம்** (பதுமராகம்) **குருவிந்தம்** (இரத்த விந்து), **சௌகந்திகம்** (நீலகந்தி) **கோவாங்கம்** (படிதம்) என்ற பெயர்களால் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நான்கு சாதியாக விளங்கும். அவற்றுள் **சாதரங்கம் என்னும் பதுமராகம்** என்ற சாதி: தாமரை மலர், கருநெய்தல் மலர், கதிரொளி, நெருப்பு, மின்மினி, மாதுளம் பூ, மாதுளை

1. இங்கு, "பதுமமும் நீலமும் விந்தமும் படிதமும், விதிமுறை பிழையா விளங்கிய சாதியும்" என்று சிலப்பதிகாரம் கூறுவதை அறிக. இந்நால்வகைச் சாதியில் குருவிந்தம் தவிர மற்றைய சாதரங்கம், சௌகந்திகம், கோவாங்கம் என்னும் மூன்றும் சிறிது உருவுதிரிந்தே காணப் படுகின்றன என்பர்.

வித்து, [1] மேகம், தீபம், இந்திரகோபம் என்னும் பத்து வகை நிறங்களில் ஒன்றைக்கொண்டதாகும். **குருவிந்தம் என்னும் இரத்த விந்து** என்ற சாதி: குன்றிமணி, முயலிரத்தம், [2] வெள்ளலோத்த மலர், பலாசமலர், மஞ்சாடிமலர், [3] செவ்வரத்தமலர், முள்ளிலவ மலர், பொன் என்னும் **எட்டு வகை** நிறங்களில் ஒன்றைப் பெற்றதாகும். **சௌகந்தி என்னும் நீலகந்தி** என்ற சாதி: இலவ மலர், குயிலின்கண், அசோகந்தளிர், செம்பஞ்சு, [4] பொன், மருதோன்றி என்னும் ஆறுவகைநிறங்களில் ஒன்றைக்கொண்டதாகும். **கோவாங்கம் என்னும் படிதம்** என்ற சாதி: குராமலர், [5] குசும்பைமலர், செங்கல், கொவ்வைக் கனி என்னும் நான்கு வகை நிறங்களில் ஒன்றைப் பெற்றதாகும்.

**மாணிக்கத்தை அணிவதால் ஏற்படும் பயன்கள்**

**பதுமராகம்** திட்பமுடையதாக அமைந்து மேற்புறமாக ஒளி வீசினுல் உத்தமம் என்றும், பக்கங்களில் ஒளி வீசினுல் மத்திமம் என்றும், கீழ்ப்புறமாக ஒளி வீசினுல் அதமம் என்றும் கூறுவர். இதனை அணிவோர் கல்வி, பசு, கன்னி, அறுசுவை உணவு முதலான தானங்களையும், அசுவமேத யாகம் செய்த பயனையும் அடைவர். **குருவிந்தம்** தரிப்போர் உலக முழுவதையும் ஒரு குடை நிழலின்கீழ் ஆள்வர்; நிறைந்த செல்வத்தோடும், சிறந்த வெற்றியோடும் வாழ்வர். **சௌகந்திகம்** அணிவோர் செல்வமும், புகழும் பெற்று வாழ்வர்.

---

1. இங்குக் கல்லாடம் என்ற நூலில் மேகத்திற்குப் பதில் சாதகப் பறவையின்கண் என்று கூறப்பெற்றுள்ளது.

2. வெள்ளலோத்தம் - விளா; ஒரு துவர் மரமுமாம். இதனைக் கல்லாட நூலார் 'உலோத்திரம்' என வழங்குவர்.

3. இங்குச் செவ்வரத்தமலர், முள்ளிலவமலர், பொன் இவற்றிற்குப் பதில் முறையே செம்பருத்திப் பூ, சிந்தூரம், குக்கிற்கண் இவற்றைக் கொள்க எனச் சில நூலும், முள்ளிலவ மலர், பொன் இவற்றிற்குப் பதிலாக முறையே செம்பஞ்சு, சிந்தூரம் இவற்றைக் கொள்க எனக் கல்லாட நூலும் கூறும்.

4. இங்குப் பொன், மருதோன்றி என்பவற்றிற்குப் பதிலாக முறையே பலாச மலர், குவளை மலர் என்ற இவற்றைச் சில நூலும், செம்பு, அலரி என்ற இவற்றைக் கல்லாட நூலும் கூறும்.

5. இங்குக் குசும்பை மலருக்குப் பதில் மஞ்சளைக் கூறிக் குங்குமம் ஒன்று அதிகமாகக் கல்லாட நூல் கூறுதல் அறிதற்பாலது.

**கோவாங்கம்** பூண்பவர் வீடுகளில் பால் வளமும் நெல் வளமும் பெருகுவதோடு செல்வப் பெருக்கமும் உண்டாகும். குற்றங் களின்றிக் குணமிகுந்து ஒளி வீசும் சிவந்த பதுமராக மணியை அணிகின்றவரிடத்து மற்றைய முத்து முதலிய பல மணிகள் வந்து சேரும்; அதற்கேற்பத் திருமகளோடு நற் செல்வமும் பாற்கடலைப்போல வளரும்.

**மாணிக்கத்தின் குற்றங்கள்**

அவ்வவற்றிற்குரிய நிறமொழிந்த வேறு நிறம், புள்ளி, காகபாதம், கீற்று (தாரை), தராசம் (ஒளிசலித்தல்) என்னும் [1]ஐவகைக் குற்றங்களை ஒழித்துக் குணம்நிறைந்தமாணிக்கத்தை அணியும் அரசன் பகையரசனின் வாளினுல் ஊறுபடாது வெற்றியோடு விளங்குவான். குறுநில மன்னன் அணிந்தால் உலகமெல்லாம் ஆள்வான். அவன் பாம்பு, சிங்கம், புலி முதலிய விலங்கு, பேய், பூதம், சிறு தெய்வம், வறுமை, நோய், தீ, கூற்றுவனின் கோபம் முதலியவற்றுல் துன்பமுருன்.

**2. முத்து**

முத்து **சலசம்** (நீரில் தோன்றுவது), **தலசம்** (நிலத்தில் தோன்றுவது) என இருவகைப்படும். அது சங்கு, முகில், மூங்கில், பாம்பின் தலை, பன்றிக்கொம்பு, வெண்சாலி (வெண் ணெல்) சிப்பி, மீன் தலை, கரும்பு, யானையின் கொம்பு, சிங்கத் தின் கை, பெண்களின் கழுத்து, கொக்கின் கண்டம் என்னும் [2] **பதின்மூன்று** இடங்களில் தோன்றும். சிங்கத்தின் கை,

---

1. இங்குக் கூறிய ஐவகைக் குற்றங்கள் பொதுக் குற்றங்களாகும். இன்னும் சரைமலம், சம்படி, பிளத்தல், துளை, கரி, மிருத்து, கோடி யில்லன, கோடி முரிந்தன, கருகல், வெள்ளை, கல், மணல், பரிவு, தார், சாயையிறுகுதல், கருப்பத் துளை, கல்லிடை முடங்கல், திருக்கு என்ற குற்றங்கள் உள்ளதையும் நீக்குதல் வேண்டும்.

2. இப் பதின்மூன்று இடங்களே அன்றி முத்துப் பிறக்கும் இடம் இருபது என்று பிற்காலத்தவர் கூறுவர். இதனை, "தந்தி வராகம் மருப் பிப்பி பூகம் தனிக்கதலி, நந்து சலஞ்சலம் மீன்றலை கொக்கு நளின மின்னர், கந்தரஞ் சாலி கழைகன்னல் ஆவின் பல் கட்செவிகார், இந்து வுடும்பு கராமுத்தம் ஈனும் இருபதுமே" என வரும் இரத்தினச் சுருக்கச் செய்யுளால் உணரலாம்.

பெண்களின் கழுத்து, கொக்கின் கண்டம் என்னும் மூன்றிடங்களில் தோன்றும் முத்துக்கள் கிடைத்தற்கரியனவாம்.

**முத்தின் நிறம்**

சிப்பியினிடத்தும், சங்கினிடத்தும் மாடப்புருவின் வெள்ளிய முட்டையின் வடிவினைப்போலத் திரட்சியுடையனவாய்த் தோன்றும் முத்துக்கள், வெள்ளை நிறங்கொண்டு விளங்கும். முகிலிடைத் தோன்றும் முத்துக்கள், செந்நிறங்கொண்ட சூரியனைப்போன்ற நிறத்தினைப் பெற்று விளங்கும். மூங்கிலில் தோன்றும் முத்துக்கள், மழையோடு கலந்து விழும் ஆலங் கட்டி (ஆலம்-நீர்; கட்டி-திரட்சி) யின் நிறத்தோடு ஒத்து விளங்கும். பாம்பினிடம் தோன்றும் முத்துக்கள், நீல நிறத்தினையுடையவாய் விளங்கும். பன்றிக் கொம்பினில் தோன்றும் முத்துக்கள் இரத்த நிறத்தினையுடையவாய் விளங்கும். வெண்ணெலில் தோன்றும் முத்துக்கள் பசிய நிறங்கொண்டுவிளங்கும். மீன்தலையில் தோன்றும் முத்துக்கள் பாதிரி மலர்போன்றநிறங்கொண்டு விளங்கும். யானைக்கொம்பு, கரும்பு இவ்விரண்டினும் தோன்றும் முத்துக்கள் பொன்னிறத்தினையுடையனவாய் விளங்கும்.[1]

**முத்திற்குரிய தெய்வங்கள்**

பால்போன்று வெண்மையாய் விளங்கும் முத்துக்களுக்கு **வருணன்** தெய்வமாகும். சூரியனைப்போலச் செந்நிற வொளி பொருந்திய முத்துக்களுக்குச் **சூரியன்** தெய்வமாகும். நீல நிறம் வீசும் முத்துக்களுக்குத் **திருமால்** தெய்வமாகும். இரத்தம் போல் விளங்கும் முத்துக்களுக்கு **வாயுதேவன்** தெய்வமாகும். பசுமை நிறமுடைய முத்துக்களுக்கு **இயமன்** தெய்வமாகும். பொன்னொளி வீசும் முத்துக்களுக்கு **இந்திரன்** தெய்வமாகும்.

**நற்குணமுடைய முத்தினை அணிவதால் ஏற்படும் பயன்**

விண்மீன் போன்ற தோற்றமும் உருட்சியும், காற்றேறு, மணலேறு, கல்லேறு, நீர்நிலை என்ற குற்றங்களில்லாமையும்,

1. சிங்கத்தின் கை, பெண்களின் கழுத்து, கொக்கின் கண்டம் என்னும் மூன்றிடத்திலும் தோன்றும் முத்துக்கள் கிடைத்தல் அரியன; ஆதலால், இங்கு அவற்றின் நிறங்கள் கூறப்படவில்லை.

கையினால் எடுத்தால் திண்மையும், பார்வைக்கு இனிமை அளித்தலும், பளிங்குபோன்று தெளிந்திருத்தலும் ஆகிய ஆறு குணங்கள் பொருந்திய முத்துக்களை அணிந்தால் வறுமைநீங்கும்; செல்வம் பெருகும்; வாழ்நாள் ஓங்கும்.

**3. வயிரம்**

சிறந்த தவத்தினையுடைய **ததீசி முனிவர்** முதுகந் தண்டெலும்பும், **வலாசுரனுடைய** எலும்பும் வீழ்ந்த [1]கோசலம் முதலிய நாட்டினில் தோன்றியதும், குணங்களால் மாட்சிமைப் பட்ட விளக்கமுடையதும், கையால் எடுப்பின் இலேசாய்த்திகழ் வதும், சருச்சரை இன்றித் தெளிவாய் ஒளி வீசுவதும், விலையினை வரையறுத்துக்கூற இயலாத அளவுகடந்த மதிப்பினையுடையதும் ஆகியது மேலான [2] **வயிரம்** ஆகும். இதனைக் குறுநில மன்னன் அணியினும் குறைவற்ற செல்வம் பெற்று மிக்க பகைவரை வென்று தனது செங்கோல் உலகமுழுதும் செல்ல ஆட்சி புரிவான். வறுமையும், நோயும், விலங்குகளும் அவனைச் சார்ந்து வருத்தாவாம்; குறித்த நாளன்றி இயமனும், பேய் களும், பூதங்களும் துன்புறுத்தாவாம்.

**வயிரத்தின் உயர்வு**

இரத்தினங்களில் [3]வயிரமே மேலான முதற் சாதியாம் என்று மணிநூல் ஆராய்ச்சி வல்லுநர் கூறுவர். ஏனெனில்,

---

1. கோசலம் முதலியன என்றதனால் இன்னும் மேருமலை, கயிலைமலை, ஏமகூடம், அவந்தி, மதங்கம், அருணம் முதலிய இடங்களும் கொள்க.

2. பிறவாசிரியர், வயிரத்தின் குற்றம் பன்னிரண்டு எனவும் குணம் ஐந்து எனவும் கூறுவர். இதனை, "சரைமலங் கீற்றுச் சம்படி பிளத்தல், துளைகரி விந்து காக பாதம், இருத்துக் கோடிகள் இலாதன முரிதல், தாரை மழுங்கல் தன்னொ(டு), ஈராறும் வயிரத் திழிபென மொழிப," "பலகை யெட்டும் கோணம் ஆறும், இலகிய தாரையும் சுத்தியும் தராசமும், ஐந்துங் குணமென்(று) அறைந்தனர் புலவர், இந்திர சாபத் திகலொளி பெறினே" (சிலப்பதிகாரம் - ஊர்காண் கதை (180-183) விசேடவுரை) எனவரும் மேற்கோள் நூற்பாக்களினால் அறியலாம்.

3. வயிரமே மேலான முதற்சாதி என்றதனால் மரகதம், மாணிக்கம், முத்து ஆகிய இம்மூன்றும் தலையாய மணிகள் என்றும், நீலம், புட்பராகம், வயிடூரியம் ஆகிய இம்மூன்றும் இடையாய மணிகள் என்றும், கோமேதகம், பவளம் ஆகிய இவ்விரண்டும் கடையாய மணிகள் என்றும் சுக்கிர நீதி கூறுகின்றது.

அவ்வயிரமணியே மற்றைய மணிகளனைத்திற்கும் துளையிடும் கருவியாகும்; தனக்கும் தானே துளைசெய்யும் கருவியாக விளங்குவதும் ஆகும்.[1]

**4. மரகதம்**

[2]வலாசுரனின் பித்தத்தைத் தமக்கு உணவாகக் கௌவிப் பறந்த கருடன் மிக்க தண்ணிய **டில்லி** நாட்டினில் சிதறியதால் வீழ்ந்து தங்கிய இடங்களில் தோன்றிய மணி **மரகதம்** எனவும், தக்கன் மகளும் காசிப முனிவரின் மனைவியுமாகிய வினதை என்பவள் அருணன் உதித்த முட்டையின் ஓட்டினைக் கருடனது அரையில் கட்ட, அம் முட்டையின் ஒடு அதன் அரையி னின்று தவறிக் கடல்சூழ்ந்த ஒரு தீவில் வீழ, அங்குத் தோன்றிய மணி **மரகதம்** எனவும், "திருமால் மோகினிப் பெண் வடிவங்கொண்டு ஓடச் சிவபெருமான் ஒரு திருவிளையாட்டாகப் பின் தொடர்ந்து மந்தர மலையின் எல்லைவரையும் சென்று செந் தீயாகிய இந்திரியத்தைச் சிந்தினர்; அப்போது அவ்விந்திரியத் தில் ஐயனர் (அரிகரபுத்திரர்) கானகத்தில் உறையும் பரிவார தெய்வங்களோடு தோன்றினர்; அந்த விந்தினைக் கருடன் கௌவிச் சென்று கடலிலும் துருக்க நாட்டிலும் சிந்தியது". அங்குத் தோன்றிய மணி **மரகதம்** எனவும் கூறுவர். இவ்வாறு தோன்றிய மரகதம் **கருடப் பச்சை** என வழங்கப்பெறும்.

**மரகத்தின் வகைகளும் நிறங்களும்**

கருடப் பச்சை **காடம், சுப்பிரம், காளம்** என்ற மூன்று குணங்களில் ஒன்றையுடையது. அவற்றுள், அறுகம்புல்லின் இதழ்போலும் நிறங்கொண்ட காடம் **சகுணம், சதோடம்** என இருவகைப்படும். (சகுணம்-குணசம்பந்தமுள்ளது; சதோடம்-தோஷ சம்பந்தமுள்ளது.)

---

1. இங்கு, "வயிர வூசியு மயன்வினை இரும்பும், செயிரறு பொன்னைச் செம்மைசெய் ஆணியும், தமக்கமை கருவியுந் தாமாம் அவைபோல், உரைத்திறம் உணர்தலும் உரையது தொழிலே" எனவரும் சூத்திரம் நோக்கற்பாலது.

2. வலாசுரனுடைய வயிற்றின் புறத்தைக் கொத்தி விழுங்கிய கருடன் நகைத்ததால் உமிழ, அஃது இமயம் முதலிய பல மலைகளிலும் ஊறிப் பிறந்த மணி, மரகதம் ஆயிற்று என்று அடியார்க்கு நல்லார் கூறுவர். மரகதம், 'கருடோற்காரம்' எனவும் பெயர் பெறும்.

சகுணம், **காடம், உல்லசிதம், பேசலம், பித்தகம், முத்தம், பிதுகம்** என ஆறு வகைப்படும். அவற்றுள், காடம் புல்லின் பசிய நிற முடையது. உல்லசிதம் மென்மைத் தன்மையினைக்கொண்டது. பேசலம் குளநீரால் விளையும் செந்நெற்பயிரில் தோன்றிய பசிய முத்துப்போன்ற நிறத்தினைக்கொண்டது. பித்தகம் பசுங்கிளி யினது சிறகின் நிறத்தினைப்போன்றது. முத்தம் துளசியின் நிறத்தினைக் கொண்டது. பிதுகம் தாமரை இலையின் நிறத் தினை யுடையது.

சதோடம் **தோடலேசாஞ்சிதம், துட்டம், தோட மூர்ச்சிதம், தோடலேசம், மந்ததோடம்** என ஐந்து வகைப்படும். தோடலே சாஞ்சிதம், எலுமிச்சை யிலையின் நிறத்தினையுடையது. துட்டம் அலரி யிலையின் நிறத்தினையும் கருங்குவளை இதழின் நிறத்தினை யும் உடையது. தோட மூர்ச்சிதம், புல்லின் நிறத்தினை யுடையது. தோடலேசம், தாமரையிலையின் நிறத்தினை யுடையது. மந்த தோடம், மயிலிறகின் நிறத்தினையுடையது.

இங்ஙனம் கூறின குற்றங்களற்ற குணம் பொருந்திய [1]மரகதத்தை அணிபவர், நால்வகைச் சேனைகளோடு வாழ் நாளும் பெருக வாழ்வர்.

### 5. நீலம்

நீலம் **இந்திர நீலம், மாநீலம்** என இருவகைப்படும். இந்திரன் விச்சுவரூபனைக் கொன்ற பழியினைப்போக்கும் பொருட்டுச் செய்த அசுவமேத யாகத்தில் எழுந்த நறுமணப் புகையானது குதிரையின் இமையாத கண்ணுள் நுழைந்து பீளையினைச் சிந்தச்செய்தது. அப் பீளை சிந்திய இடத்தினின்றும் தோன்றிய மணி **நீலம்** ஆகும். இஃது [2] **இந்திர நீலம்** எனப் பெயர்பெறும். சூரியனின் மனைவியாகிய **சஞ்சை** என்பவள் தன் கணவனின்

1. இங்கு, மரகதத்தின் குணம் மட்டும் கூறியதால் குற்றமும் அறிதல் வேண்டும்; மரகதத்தின் குற்றம் எட்டு ஆகும்: இதனை, "கருகுதல் வெள்ளை கல்மணல் கீற்று, பரிவுதார் சாயை இறுகுதல் மரகதத்(து) எண்ணிய குற்றம் இவையென மொழிப" (சிலப்பதிகாரம்-ஊர்காண்காதை (184-185)விசேடவுரை) எனவரும் மேற்கோள் சூத்திரத்தால் அறியலாம்.

2. இந்திர நீலம்-இந்திர வில்லிற் பொருந்திய நீல நிறம் போன்றது.

தழல் வடிவான உடலினைத் தழுவப்பெறாமல் அஞ்சித் தனது உடல் நிழலினைத் தனது வடிவமாக (சாயாதேவியாக) நிறுத்திக் காட்டினை அடைந்து தவம் செய்தாள். அதனைச் சூரியன் ஞானத்தால் உணர்ந்து அவள் பின் தொடர்ந்து செல்ல, அது கண்டு சஞ்சை அஞ்சிப் பெண் குதிரை வடிவாக ஓடினாள். சூரியனும் ஆண் குதிரை வடிவாய் அவளைப் பின் தொடர்ந்து சென்று காமத்தைப் பொறுக்கலாற்றாது இந்திரியத்தைச் சிந்தினான். அவ்விந்திரியம் சிந்திய இடங்களில் தோன்றிய மணி **நீலம்** ஆகும், இது **மாநீலம்** எனப் பெயர்பெறும். இம் மாநீல மணியினை வானவர்களும் மனிதர்களும் விரும்பி அணிவர்.

**மாநீல சாதியின் வகையும் பயனும்**

மாநீலம் பிறிதொன்றும் கலவாத வெண்மை, செம்மை, பொன்மை, கருமை ஆகிய இந்நிறம் பொருந்தும்; இவை முறையே அந்தணர் முதலிய நால்வகைச் சாதியினருக்கும் உரியதாகும். மாநீலத்தை அணிபவர் எந்நாளும் நலங்கள் எய்தி வாழ்ந்திருப்பர்.

மாநீலத்தினும் பதினாயிரமடங்கு பெருவிலையினை உடையது இந்திர நீலமாகும். அதனைப் பசுவின் பால் நிறைந்த குடத்தி லிட்டால் அப்பாலின் நிறத்தைக்கீழ்ப்படுத்தி நூறுமடங்கு தன் நீலநிறம் மேம்பட்டு ஒளி விளங்கச் செய்யும்.[1] இந்த இந்திர நீலம் உலகில் கிடைப்பது மிக அரியது.

நவமணிகளில் மாணிக்கம், முத்து, வயிரம், மரகதம் நீலம் என்னும் ஐந்தும் மிக்க ஒளியும் பெருவிலையும் உடையன. கோமேதகம், புருடராகம், வயிடூரியம், பவளம் ஆகிய நான்கும் மிக்க ஒளியினையுடையவேனும் சிறிய விலையுடையன. யாவும் மக்களால் விரும்பப்படுவன ஆகும்.

**6. கோமேதகம்**

வலாசுரனுடைய நிணங்கள் சிந்திய இடத்தினின்றும் தோன்றிய மணி [2] **கோமேதகம்** ஆகும். இஃது உருக்கிய

---

1. பாலில் ஒளி தோன்றச் செய்வது மாநீலம் என்று உரைப்பாரும் உளர். "கருமணியம் பாலகத்துப் பதித்தன்ன படியவாய்" என்பது சீவக சிந்தாமணி. 2. இதன் நிறம், 'மஞ்சளும் சிவப்பும் கலந்தால் ஒத்த நிறத்தையுடையது' என்று அடியார்க்கு நல்லார் கூறுவர்.

நெய்த்துளி, தேன் துளி, கோசலம் (பசுவின் சிறுநீர்) ஆகிய இவற்றை ஒத்துச் சிவந்து பசும்பொன்னின் நிறத்தையும் பெற்று மேன்மையாய்த் தூயதாய்த் திண்மைபெற்று விளங்கும். இதனை அணிந்தால் அஞ்ஞானத்தாலாகிய பாபம் நீங்கித் தூய்மை உண்டாகும்.

**7. புருடராகம்** (புட்பராகம்)

வலாசுரனுடைய கபம் விழுந்த இடத்தினின்றும் தோன்றிய மணி **புருடராகம்** என்றும், பூமியைப் பாயாகச் சுருட்டிப் பாதலத்தில் சென்று ஒளித்த இரணியாக்கனின் உயிரைப் பருகிய திருமாலாகிய வெள்ளைப்பன்றி, வாயினைத் திறந்து நகைத்துக் கத்தியதால் பொன்போல் சிதறி வீழ்ந்த கபம் பொருந்திய தீவில் தோன்றிய மணி **புருடராகம்** என்றும் கூறப்பெறும். அஃது உச்சியில் வட்டவடிவாய் மெல்லியதாய்ப் பொன்போலவும் தீப்போலவும் சுற்றிலும் ஒளிவீசிக் கண்டோர் மனத்தைக் கவரும் பொலிவுடையதாய் விளங்கும். இப் புருடராக மணி பாரியாத்திர மலையின் சிகரமாய் விளங்கும்; மந்தர மலையின் புறத்தில் சூழ்ந்த மேகலைபோலவும் திகழும். இம்மணியினைக்கொண்டு தேவதச்சன் தேவேந்திரனுடைய நகரத்தையும், அரசாட்சி மண்டபத்தையும் அமைத்தான். இதனை அணிபவர் பகைவர்களை வென்று வெற்றிமாலை சூட வல்லவராவர்.

**8. வயிடூரியம்**

வலாசுரனுடைய மயிராகிய **வயிடூரியம்** இளாவிருத கண்டத்தில் முதலில் தோன்றியது; இப்போது வயிடூரியம், கோரக்கம், மகதம், சிங்களம், பாரசீகம், பொதியமலை, திரிகூடம் முதலாய இடங்களிலும் பிற தீவுகளிலும் உண்டாகிறது; அன்றியும் அலைகடலிலும் மேகங்கள் இடிக்கும்போதும் தோன்றும்.

**வயிடூரியத்தின் நிறம்**

[1] வயிடூரியம் மூங்கிலின் இலை, மயிலின் கழுத்து, பூனையின் கண் ஆகிய இவற்றில் ஒன்றன் நிறத்தினைக்கொண்டு கனத்ததா

1. வயிடூரியம் சூரியனின் ஒளியும், தேன் துளியின் நிறமும்போன்று விளங்கும் என்று சிலப்பதிகாரம் கூறும்.

யும் தெளிவுள்ளதாயும் திண்ணியதாயும் மெலியதாயும் விளங்கும்; வலம், இடம், மேல், கீழ் என்ற நான்கு இடங்களிலும் ஒளி வீசும். இவை முறையே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வருக்கும் உரியனவாகும். அறிவுடையோர் இம்மணியினை நாடோறும் பூசித்து அணியக் கடவர்.

**9. பவளம்**

வலாசுரனுடைய தசை வீழ்ந்த இடத்துத் தோன்றிய மணி **பவளம்** ஆகும். இது, பிரமன் தன் உடலை விடுத்துச் சந்திக் கால வடிவமாக இருந்து பிதிரரைப் படைக்கும்பொழுது அவனது உடலின் அழுக்கு வீழ்ந்த இடத்திலும், திருமால் மது கைடவர்களைச் சேதித்த இரத்தம் ஒழுகிய இடத்திலும், இந்திரன் மலைகளின் சிறகு அரிந்த இரத்தம் சிதறிய இடத்திலும் வந்து குடிகொண்டு விளங்கும்.

**பவளத்தின் நிறம் முதலியன**

[1] பவளம் முருக்கமலர், பச்சைக்கிளியின் மூக்கு, செவ்வரத்த மலர், கொவ்வைக்கனி ஆகிய இவற்றில் ஒன்றன் நிறத்தைப் பெற்று விளங்கும். திருகிக்கோணுதல், புழு அரித்தல், முகம் ஒடிதல் பவளத்தின் குற்றங்களாகும்.

பவளம் [2] பெரும்பாலும் பெண்களே தரித்தற்கு உரியது. இதனை அணியும் பெண்களுக்கு மகப்பேறு முதலான பயன்கள் யாவும் உண்டாகும்.

சூரியன்முன் தீயை உமிழும் **சூரிய காந்தக் கல்லும்**, சந்திரன் முன் நீரைச் சிந்தும் **சந்திர காந்தக் கல்லும்** இந்த நவமணிகளுள் ஒன்றன் உட்கிடையாக அடங்கித் திகழும்.

**நவ மணிகளின் சாதி**

வயிரமும் முத்தும் **அந்தணர் சாதி**; பவளமும் மாணிக்கமும் **அரசர் சாதி**: புருடராகமும் (புட்பராகம்) வயிடூரியமும் கோமேதகமும் **வணிகர் சாதி**; நீலமும், மரகதமும் **வேளாளர் சாதி**.

---

1. இன்னும் பவளத்திற்கு சிந்துரம், ஈச்சங்காய், முசுமுசுக்கைக் கனி, தூதுவழுதுணம் பழம் போன்ற நிறமும் உருட்சியும் கொள்க. இஃது அடியார்க்கு நல்லார் உரையில் கண்டதாகும்.

2. பெரும்பாலும் பெண்கள் என்றதனால் சிறுபான்மை பிறமணிகளுடன் பவளத்தைக் கலந்து ஆடவர் அணிதலும் உண்டு.

### நவ மணிகளின் முக்குணங்கள்

முத்தும் பச்சையும் **சாத்துவிக குணம்** உடையன; பளிங்கு மணியும் சாத்துவிக குணமுடையது. பவளமும் மாணிக்கமும் கோமேதகமும் புருடராகமும், வயிடூரியமும், வயிரமும் **இராசத குணம்** உடையன. நீலம் **தாமத குணம்** உடையது.

### நவ மணிகளை மதிப்பிடும் நாட்கள்

மாணிக்கத்தையும் கோமேதகத்தையும் ஞாயிற்றுக் கிழமையன்றும், முத்தையும் வயிடூரியத்தையும் திங்கட்கிழமை யன்றும், பவளத்தைச் செவ்வாய்க்கிழமையன்றும், மரகதத் தைப் புதன்கிழமையன்றும், புருடராகத்தை வியாழக்கிழமை யன்றும், வயிரத்தை வெள்ளிக்கிழமையன்றும், நீலத்தைச் சனிக்கிழமையன்றும் ஆராய்ந்து மதிப்பிட்டுப் பார்த்தல் மிக நன்றாம். இவற்றை உள்ளும் புறமும் தூய்மையாய் அற நெறியில் செல்பவரே ஆராய்ந்து கூறுதற்கு உரியவர் ஆவர்.

### நவ மணிகளை வழிபடும் முறை

செந்தாமரை மலர், சிறு சண்பக மலர், செவ்வல்லி மலர், செங்காந்தள் மலர், மல்லிகை மலர், வெண்டாமரை மலர், மரமஞ்சள் மலர், செங்கழுநீர் மலர், வெள்ளை மந்தார மலர் ஆகிய இம் மலர்களைத் தம் முடியிற் சூடிக்கொண்டு ஓர் இடத்தைத் தூய்மை செய்து, ஆதனத்தை இட்டு அதன்மேல் வெள்ளிய ஆடை ஒன்றை விரித்து மாணிக்கத்தை நடுவிலும் முத்து முதலிய மணிகள் எட்டினையும் கிழக்கு முதல் எட்டுத் திசைகளிலும் முறையே வலப்பக்கமாகச் சூரிய மண்டலம் போலச் சூழ வைத்து, [1] மாணிக்கம் முதலாகிய ஒன்பது மணி களின்மேலும் ஒன்பது கிரகங்களைத் தாபித்து முற்கூறிய செந்தாமரை மலர் முதலிய ஒன்பது மலர்களையும் சாத்தி விதி முறை தவறாமல் வழிபடவேண்டும்.

---

1. நவமணிகளில் மாணிக்கம் சூரியனுக்கும், முத்து சந்திரனுக்கும், பவளம் செவ்வாய்க்கும், மரகதம் புதனுக்கும். புருடராகம் வியாழனுக் கும், வயிரம் சுக்கிரனுக்கும், நீலம் சனிக்கும், கோமேதகம் இராகுவுக்கும் வயிடூரியம் கேதுவுக்கும் மகிழ்ச்சி தருவன என்று சுக்கிர நீதி என்னும் நூல் கூறுகின்றது.

**இறைவனாகிய வணிகர் மாணிக்கங்களை அளித்து மறைதல்**

இவ்வாறு இறைவனாகிய வணிகர் ஒன்பது வகை இரத்தினங்களைப்பற்றித் தனித்தனியே எடுத்துக் கூறினர்;[1] பின்னர் அவர்[2] வடக்குத் திசையினை நோக்கி இருந்து இரத்தினங்களை வணங்கித் துதித்துப் பூசித்து மணிகளைக் கையிலெடுத்துச் சோமசுந்தரக் கடவுளை எதிர்நோக்கி அஞ்சலித்துத் திருவுளக் குறிப்போடு, "இவ்வரசிளங் குமரனுக்கு அளவற்ற வாழ் நாளும் செல்வமும் ஓங்குக" என்று வாழ்த்தி வழங்கியருளினர். அரசகுமாரனும் விண்ணிழி விமானத்தை நோக்கிச் சொக்கலிங்க மூர்த்தியின் திருவடிகளைப் பணிந்த வண்ணம் இரு கைகளையும் விரித்து மகிழ்வுடன் வாங்கினன். அப்பொழுது வணிகராய சோமசுந்தரக் கடவுள் அரசிளங்குமரனையும் அவனைச் சூழ்ந்து நின்ற மந்திரிகளையும் முக மலர்ச்சியுடன் நோக்கி, "இந்த ஒன்பது வகை மணிகளைக் கொண்டு புதிய மகுடம் செய்து முடி சூட்டி, இவ்வரசிளங் குமரனுக்கு **'அபிடேக பாண்டியன்'** என்று பெயரிட்டு அழைப்பீராக" என்றார். அப்பொழுது செம்பொன்னைத் துலையால் தூக்கி வணிகருக்கு விலை கொடுப்பதற்கு வருகின்ற அமைச்சர்கள், அரசகுமாரன்மேல் அருள்நோக்கினை மிகச் செலுத்திப் புன்னகை தவிழ நின்ற வணிகேசரை அவ்விடத்தில் காணாது திகைத்து நின்றனர்; உடனே வணிகர் பெருமான் இடபத்தின் மீது உமாதேவியாரோடும் இரண்டு திருவுருவமாய் முக்கண்ணும் நான்கு திருக்கரமும் நீலகண்டமும் தோன்றச் செய்து தம் திருக்கோயிலினுட் போதலைக் கண்டனர்; இப் பூமியில் வணிகராய் வந்தவர் சிவபெருமானே என்பதை

---

1. இங்கு, "கதிர்நிரை பரப்பு மணிமுடித் தேவர்கள், கனவிலுங் காணாப் புனைவருந் திருவடி, மாநிலந் தோய்ந்தோர் வணிகனாகி.... இவை யெனக் கூறிய நிறையருட் கடவுள்" என வரும் கல்லாட அடிகள் உன்னற் பாலன.

2. முன்னர்க் கீழ்த்திசையினை நோக்கியிருந்து மணிகளின் இயல்பு கூறியவர், இப்பொழுது வடக்குத் திசையினை நோக்கியிருந்து பூசித்தார் என்பது மரபு போலும். மதுரை நாயகனை எதிர்நோக்குதற்பொருட்டு வடக்குத்திசை நோக்கினர் எனினுமாம்.

அறிந்த அரசிளங் குமாரனும் அமைச்சர்களும் அவரைப் பின் தொடர்ந்து சென்றனர்.

**அரசகுமாரன் கடவுளைத் துதித்தல்**

அரசிளங் குமரன் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று பணிந்து எழுந்து தன் சிவந்த கைகளைத் தலைமேற் குவித்த வண்ணம், "எம்பிரானாகிய தேவரீருக்கு அடியவன் செய்யத்தக்க கைம்மாறு ஒன்று உண்டோ? [1] அடியேனுடைய உடல், பொருள், ஆவி இம்மூன்றும் உம்முடையனவே ஆகும்; மேலும், **வான் செய்யும் நன்றிக்கு வையகத்தோர் செய்யும் கைம்மாறு உண்டோ?** [2]" என்று துதித்தான்.

**சான்றோர் இளவரசனை வாழ்த்துதல்**

அப்போது வீரபாண்டியன் புதல்வனை அங்கிருந்த பெரியோர்கள், "வீரமகள் விரும்பும் இவ்வழுதிக்கு மனம் வாக்கிற்கு எட்டாத மதுரைநாதன் மணிமுடிக்கு நவமணிகளையும் அளித்தமையால் இவன் அளவற்ற காலம் புவியில் செங்கோல் செலுத்துவான்" என்று வாழ்த்தினார்கள்.

**அரச குமாரன் அரண்மனையை அடைதல்**

பின்பு, அரசிளங்குமரன் துதித்துத் திருக்கோயிலை வலம் வந்து எட்டு யானைகளால் சுமக்கப்பெற்ற இந்திர விமானத்தில் எழுந்தருளிய சொக்கலிங்கப் பெருமானின் அருள் விடை பெற்று முனிவர்கள் ஆசி கூற அரண்மனையை அடைந்தான்.

**நவமணிகளைக்கண்டு யாவரும் வியத்தல்**

நவமணிகளின் குணங்களை ஆராய்ந்தறியும் வல்லுநர்களும் அமைச்சர்களும் மணிகளைக்கண்டு வியப்புற்று "முருகக் கடவுளைப்போல வந்த வணிகர் சோமசுந்தரக்கடவுள் எனில் அவர் நாட்களையும் கோள்களையுமே பிடித்து நவமணிகளாகச் செய்து நல்கி அருளினரோ? அன்றித் தம் தாள்களிலும் தோள்

1. இங்கு, "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங், குன்றே அனையாய்! என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ?" (திருவாசகம் - குழைத்த பத்து) எனவரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

2. இங்கே, "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்(டு), என்னாற்றுங் கொல்லோ உலகு" எனவரும் திருக்குறள் கருதற்பாலது.

களிலும் மார்பிலும் அணிந்துள்ள நீண்ட நாகங்கள் அளித்த மணிகளைத் தந்தருளினரோ? யாதென்று கருதுவோம்; இம் மணிகள் இந்திரன் உலகத்திலும் கிடைத்தற்கரியனவே" என்று கூறி ஐயமுற்று வியந்தனர்.

### அரசிளங்குமாரனுக்கு முடிசூட்டல்

அமைச்சர்கள், மயனைக்காட்டிலும் சிற்பநூல்வல்ல பொற்கொல்லர்களை அழைத்து அவர்கள் மன மகிழப் பல வரிசைகளை நிறைய அளித்து அம் மணிகளைக் கொடுத்து அரசகுமாரனுக்கு மகுடம் செய்வித்தனர்; ஒரு சிறந்த நன்னாளில் மணிமகுடத்தை அரசிளங்குமாரக்குச் சூட்டி, "**அபிடேக பாண்டியன்**" எனப் பெயரிட்டனர்.[1] அபிடேக பாண்டியன் சகல சிறப்புடன் நகர் வலம் வந்து சோமசுந்தரக்கடவுளின் திருவடிகளை வணங்கித் தன் அரண்மனை அடைந்தான்.

### அபிடேக பாண்டியன் ஆட்சிபுரிதல்

வீர மகளுக்கு உறைவிடமாகிய தோள்களையுடைய அபிடேக பாண்டியன் பகைவர்களை வென்று, மழைபொழிந்து பயிர்களைக் காக்கும் முகில்போலக் கருணைமிகுந்து உலகத்தை ஆண்டுவந்தான். அப்போது அபிடேக பாண்டியன், தன் தந்தையின் காமக்கிழத்தியர் பெற்ற புதல்வராய்த் தனக்கு மூத்தவர்களாய், முன்னாளில் தன் தந்தையின் கருவூலத்தில் முடி முதலிய பொருள்களைக் கவர்ந்து அதனால் அஞ்சியவர்களாய் வேற்றூரில் புகுந்து ஒளித்த பகைவரைச் சிலர் பிடித்துக் கொண்டுவந்து விடுக்க, அவர்கள் கவர்ந்த பொருள்களனைத்தையும் திரும்ப வாங்கிக்கொண்டான்.

செய்யுள் — 93
ஆகச் செய்யுள் — 1287

---

1. இம் மகுடாபிஷேக விழாவைத் தொல்காப்பியர் 'மண்ணுமங்கலம்' என்பர்.

## 18. வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம்

### அபிடேக பாண்டியன் சோமசுந்தரக்கடவுளைப் பூசித்தல்

அபிடேக பாண்டியன் சித்திரை மாதத்துச் சித்திரை நட்சத்திரத்தில் வெள்ளியம்பலத்துள் ஆடும் பெருமானாகிய சொக்கலிங்கக்கடவுளுக்கு எல்லையற்ற பேரன்போடு சிவாகம விதிப்படி பூசைப்பொருள்கள் பலவற்றை அளித்து விசேட பூசை செய்யத் தொடங்கி நறுமணங்கமழும் நெய் முதலாக சந்தனம் ஈறாக அபிடேகஞ் செய்த பின்பு பச்சைக்கர்ப்பூர நீரினால் அபிடேகித்து அச் சோமசுந்தரக்கடவுளை வியப்புடன் தரிசித்து வணங்கி, "எறிநீர் வையைத் துறையையுடைய பெருமானே! **நீர் அடியேனுடைய கர்ப்பூர சுந்தரரேயோ**" என்று கூறித் துதித்தான்.

இங்ஙனம் அபிடேக பாண்டியன் பூசை செய்யும்பொழுது ஆண்டுகள்தோறும் சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தில் வந்து பூசிக்கும் நியமம்பூண்ட இந்திரனானவன், அப் பாண்டியனது பூசை முடியும்வரையில் தாமதித்து நின்று முடிந்தபின் பூசையினைச்செய்து முடித்துக்கொண்டு தன் சுவர்க்கத்துக்குச் சென்றான்.

### வருணனும் இந்திரனும்

அப்பொழுது வருணதேவன், தன் நோய் நீங்கும் காலத்தின் நிகழ்ச்சி கைகூட இந்திரனுடைய சபையை அடைந்து நின்று இந்திரனை நோக்கி, "நீ இன்று சிறிது வருத்தமுற்றிருக்கின்றாய்; இதற்குக் காரணம் யாது" என்று வினவினான். அதற்கு இந்திரன், "மதுரையில் எழுந்தருளியிருக்கின்ற [2]அன்பு வலையில் அகப்படும் சொக்கலிங்கப் பெருமானைப் பூசை புரிய இன்று பாண்டியனால் காலந் தாழ்ந்தது; அதனால் இப்போது என் உள்ளம் சிறிது அலைவுறத் துன்பமெய்தியதுண்டு" என்றான். அதுகேட்ட வருணன், "அச்சொக்கலிங்கம் தான் மற்றைய தலங்களின் இலிங்கங்களைவிடச் சிறந்த இலிங்கமோ?" என்று வினவினான். இந்திரன், "முன்னாளில் என்னுடைய பிரமப் பழியையும், வெள்ளையானையின் சாபத்தையும் இச் சிவலிங்க மூர்த்தியே போக்கியருளினாரல்லவா? அதனை நீ அறியாயோ?"

என்ருன். அதற்கு வருணன், "அங்ஙனமாயின் தெய்வ மருத்துவர்களாலும் தீர்க்கப்படாததாய் என்னை வருத்துகின்ற பெரிய வயிற்று நோயை அச் சிவலிங்கமூர்த்தியால் போக்க முடியுமோ? என்று வினவினன். இந்திரன் புன்னகைசெய்து "நீ இத்தகைய சந்தேகங்கொண்டு வினவியது என்னை?" பிரம விட்டுணுக்களாலும் தீர்க்கமுடியாத பிறவி நோயினைத் தீர்க்கவல்ல சொக்கலிங்கமூர்த்தி இந்த உடலிலுள்ள பெரிய பிணியையும் பிற நோயையும் தீர்ப்பதற்கு அரியவரோ? எம் பெருமான் செய்யும் திருவிளையாடலை இப்பொழுதே விளங்க நீ சோதிப்பாய்" என்று கூறினன். உடனே வருணன் "இந்திரனே! நான் இங்கு வரும்பொழுது காமதேனுவும், அதன் கன்றும் வழியில் எதிர்ப்பட்டன. அப்பொழுது கண்ட அந்த நற்சகுனத்தால் இந்த நன்மொழியினைக் கேட்டேன்" என்று கூறியவாறு விடைபெற்றுச் சென்ருன்.

**கடல் வெள்ளம் மதுரையை அழிக்க வருதல்**

பிறகு வருணதேவன், வெள்ளி மன்றினுள் ஆடும் பெருமானின் திருவிளையாடலைக்கண்டு தன் **வயிற்று நீர் நோயினைப்** போக்கிக்கொள்ளக் கருதிக் கடலினை விரைந்து அழைத்து, "நீ மதுரை நகரமுழுதையும் அழிப்பாயாக" என்று ஏவினன். உடனே கடல் பொங்கி மேலெழுந்தது; அப்போது மரங்கள் முறியும்படி கல்லி எடுத்து ஆரவாரித்து எல்லாத் திசைகளிலும் வீசியது; மலைகளையெல்லாம் அகழ்ந்து பொடிசெய்து திசைப்புறங்களில் செல்லும் வண்ணம் எறிந்தது; மாட வரிசைகளைப் பெயர்த்து வீசியது. இங்ஙனம் கடல் ஊழிக்காலத்தில் பொங்கி மேலெழுந்து வருதல் போலப் பெருக்கெடுத்து வாரா நின்றது.

அதுகண்ட தேவர்களெல்லாம் வருணன் செய்த சூழ்ச்சியினை அறியாதவர்களாய், "பிரம கற்பத்தினும் அழியாத இம் மதுரைநகரத்திற்கும் அழிவு வந்தது; இனி எமது நகரத்திற்கு அழிவுகாலம் வந்தது போலும்" என்று எண்ணிக் கலங்கிய உள்ளத்தோடு வந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கினர். மதுரை மாநகரத்து உள்ளார் எல்லாரும் "இது சூலமொடு

அழலேந்தும் சொக்கர் திருவிளையாட்டோ? அன்றி, நாம் செய்த தீவினையின் பாகுபாடோ? தேவர்களை அழிக்கவந்த ஆலகாலமோ? உலக முழுதும் அழியும்படி வரும் பேரூழிக்காலமோ?" என்று பலவாறு கூறி மனங்கலங்கி நடுங்கினர். பூமியும் திக்குக்களும் புதையும் வண்ணம் பேரிருள்போல் வரும் கடல் மதுரைத் திருநகரின் புறத்தில் சூரியனும் அச்சத்தால் கண்ணை மூடுமாறு வரும்போது அபிடேக பாண்டியன் அதனைக்கண்டு மிக நடு நடுங்கி, "சிவபெருமானுடைய திருவடிகளே புகலிடம்" என்று துணிந்து, பாற்கடலினின்றும் தோன்றித் தேவர்களைக் கொல்லவந்த நஞ்சினைக் கண்டு அஞ்சிய திருமால் போலவும், உயிரைக் கவரவந்த இயமனைக்கண்டு அஞ்சிய மார்க்கண்டனைப் போலவும், சோம சுந்தரக்கடவுளின் திருவடிகளில் சென்று வீழ்ந்து, "ஓலம், ஓலம்" என்று முறையிட்டான்.

**சிவபெருமான் கடலை வற்றச்செய்தல்**

அப்போது முறையிட்டு வருந்திய அபிடேக பாண்டியன் முன் சோமசுந்தரக்கடவுள் புன்னகை புரிந்து, "அஞ்சாதே! அஞ்சாதே!" என்று திருவாய்மலர்ந்து தமது திருச்சடையில் உள்ள நான்கு மேகங்களையும் நோக்கி, "இம் மதுரைமா நகரத்தை அழிக்கவரும் கடலை அது வற்றும்வண்ணம் நீங்கள் விரைந்து போய்ப் பருகுங்கள்" என்று பணித்தருளினர். உடனே அந் நான்கு மேகங்களும் நிமிர்ந்து முழங்கிக் கடல்நீரை வாரி உறிஞ்சின. அங்ஙனம் உறிஞ்சிய அளவிலே அக்கடல் சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்று தெளிந்த மெய்யன்பர்களுடைய எழுவகைப் பிறவிக்கடல் வற்றுதல்போலப் பசையற வறந்தது. அப்பொழுது நகரமக்களும், தேவர்களும் அபிடேக பாண்டியனும் சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலை நோக்கிப் பெருமகிழ்ச்சியுற்றுப் பலமுறை புகழ்ந்து பாடி அளவிலா இன்பக்கடலில் ஆழ்ந்தார்கள்.

செய்யுள் — 19

ஆகச் செய்யுள் — 1306

**மதுரைக் காண்டம் முற்றிற்று.**

---

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# இரண்டாவது

# கூடற் காண்டம்

—o—

## 19. நான்மாடக் கூடலான படலம்

### பரமசிவம்

பூதங்க ளல்ல; பொறியல்ல; வேறு புலனல்ல; உள்ள மதியின்
பேதங்க ளல்ல; இவையன்றி நின்ற பிறிதல்ல என்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப; கூடல் மறுகில்
பாதங்கள் நோவ வளையிந்த ளுதி பகர்வாரை ஆயு மவரே.

### சிவ சத்தி

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப்
பெருமகள் நுதற்க ணாகப் பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ(டு) அளிப்பாள் யாவள் அவள்உயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி ஒசிந்தபூங் கொம்பின் நின்றாள்.

### வருணன் மேகங்களை மதுரையில் மழை பொழியச் செய்தல்

கடலின் தலைவனாகிய வருணன் தன் செயல் தவறினமையால் நாணுதலுற்று மானமும் வலியுங்கொண்டு இரண்டு கண்களும் சிவப்பக் கோபாக்கினி பற்றிட உடல் கருகிக் கடலும் ஆறும் வெந்து வற்ற வெகுண்டு நின்று, மதுரைப் பதியில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலைத்தெளியானாகி மீளவும் ஏழு மேகங்களையும் அழைத்து, "நீங்கள் கடல் வற்றியது என்று சொல்லுமாறு நீரினைக் குடித்து மேலெழுந்து இடித்து மழையினைப் பெய்து மதுரை நகரமுழுதையும் விரைந்து அழிக்கக்கடவீர்கள்" என்றான்.

### மதுரையில் ஏழு மேகங்களும் மழையைப் பொழிதல்

உடனே ஏழு மேகங்களும் விரைந்துசென்று பூமி தெரியும் வண்ணம் கடல்நீர் முழுதும் வற்றும்படி நீரினை முடியக் குடித்து

உடம்பு கருகி மேலே எழுந்தன; மின்னலை வீசின; திசைகளும் வானுலகமும் செவிடுபடவும், பாதலமும் நிலவுலகமும் பிளக்கவும், பெரிய மலைகள் எட்டும் வெடிக்கவும், மேருமலை சாயவும் ஊழிக் காலத்தில் வெடிக்கும் அண்ட கடாகத்தின் ஒலிபோல ஒலித்து வலிய இடியேறுகள் விழுந்தன. அப்போது உலகினைச் சுமக்கின்ற ஆதிசேடன் தன் ஆயிரம் படங்களிலுள்ள இரத்தினங்களைச் சிந்தி உடலைநெளித்தான். அட்ட திக்கிலுள்ள பெரிய யானைகளும் தங்கள் தங்கள் நிலைகெட்டு நடுநடுங்கின. வெண்மையான நீறு பூக்கப்பெற்று மத்தளம்போல் பருத்த பூசணிக் காய்கள் (சாம்பற் பூசணிக் காய்கள்) போல ஆலங்கட்டிகள் (மழைத்துளிகள்) விழுந்தன. திரண்ட பளிங்குத் தூண்களைப்போல் மழைத் தாரைகள் சொரிந்தன. விண் மீன்கள் நீரில் விழுந்தனவோ என்று கூறும்படி கடலின் அலையிலே தவழ்ந்த மீன்கள் துள்ளிக் குதித்தன. ஏழு மேகங்களும் சராசரம் அனைத்தையும் சூழ்ந்து மூடின. உலகினை அழிக்கப் புகும் ஊழிக்கால உருத்திர மூர்த்தியைப்போல் ஆகாயமும் பூமியும் திசைகளும் தெரியாவண்ணம் பரவி இருளைத் தோற்றுவித்தன. பின்னர் மேகங்கள் பசுமையான ஒளி வீசும் மரகதங்களையும், கரிய ஒளியினைப் பரப்பும் நீல மணிகளையும், விண்மீன்களை ஒத்த முத்துக்களையும், பொற் குவியல்களையும், சிவந்த ஒளியினையுடைய மாணிக்க மணிகளையும், பவளங்களையும் விஞ்சைய மகளிர்கள் தம் கணவரோடு ஊடல் கொண்டு வெறுத்து எறிகின்ற அணிகலங்கள்போல எங்கும் சிந்தின. கொடிய பெருங் காற்றும் சூழ்ந்து தாக்கி அடித்தது. மதுரை நகர் மேகங்களால் முற்றுகை இடப் பெற்றது.

### அபிடேக பாண்டியன் முதலியோர் வருந்துதல்

உலகமனைத்தையும் தனிச் செங்கோல் நடாத்திப் பாது காக்கும் அபிடேக பாண்டியனும், நகரத்திலுள்ள மக்கள் பலரும் இதனைக் கண்டு. "உலகம் அழியும் நாள் இதுவே" என்று மனமயங்கி வாடினார்கள். சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை முன்னரும் உணர்ந்து கைவந்த பாண்டி

மன்னன், "சிவபெருமானே இன்னமும் காத்தருளுவார்" என்று தெளிந்து நகர மக்கள் சூழ விரைந்து திருக்கோயிலை அடைந்து விண்ணிழி விமானத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவடியில் வீழ்ந்து,

"விடையினை! ஆல முண்ட மிடற்றினை! கங்கை தாங்குஞ்
சடையினை! கூற்றை வென்ற தாளினை! மேருச் சாபப்
படையினை! அடியேம் துன்பப் பாட்டினை நீக்கி யாளும்
நடையினை யாகி எங்கள் நல்லுயிர் காத்தல் வேண்டும்"

என்று விண்ணப்பஞ் செய்தான்.

**நான்மாடக்கூடல்**

பாண்டியர்களுக்கு உண்டாகும் துன்பங்களை எப்பொழுதும் போக்கியருளும் சோமசுந்தரக் கடவுள் நான்கு முகில்களையும் முன்போலவே நோக்கி, "நீங்கள் இம் மதுரைப்பதியின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்து நான்கு மாடங்களாகி ஏழு மேகங்களையும் விலக்குங்கள்" என்று விடுத்தருளினர். உடனே அம் மேகங்கள் நான்கு மாடங்களாகி வளைந்து, நான்கு திசைகளிலும் சூழ்ந்து சந்து வாய் தெரியாவண்ணம் ஒன்றுபட்டுத் தாம் ஒரு குடிசையாகி, மாடங்களும், கோபுரங்களும், செய் குன்றுகளுமாகிய இவை தூண்களைப்போல நின்று தாங்க மதுரை நகரமுழுவதையும் மூடிக்கொண்டன.[1] அந்த நான்கு மாடங்களினுள்ளும் நகரத்தார்களும் மந்திரிமார்களும் பாண்டியனும் அவன் சேனைகளும் இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய பிற வுயிர்களும் தங்கி முன்னை நாளினும் இன்பக் கடலில் திளைத்து மகிழ்ந்து இருந்தனர். அவர்கள் சிவ புண்ணிய முதிர்ச்சியால் இருவினையொப்பு முதலியன எய்தப்பெற்று இறைவன் திருவடி நிழலில் புகுந்து மகிழ்வுடன் இருப்பவரை ஒத்தனர். மலையின் உச்சியில் பெய்யும் துளிகள் உடைந்து சிதறுதல்போல் சிவபெருமான் விடுத்த நான்கு

1. நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாகித் தடுத்த இடம், 'மாடக் குளக்கீழ் மதுரை' எனப் பெயர் பெறும் என்பர். இவ்வூர் மதுரைக்கு மேற்கே இருக்கின்றது. இவ்விடத்தில் ஒரு பெரிய குளமும் உள்ளது. இம் "மாடக்குளம் பெருகினால் மதுரை பாழ்" என்ற ஒரு பழமொழியும் உலகில் வழங்குகின்றது.

மேகங்களால் சூழ்ந்து இயற்றப்பட்ட மாடத்தின்மேல் பெய்யும் மழைத்துளிகள் உடைந்து சிதறக் கடலானது வறண்டு போகும் வண்ணம் நீரினை முகந்து, தம் உடல் பசை வறளுமாறு பொழிந்து, வருணன் விடுத்த மேகங்கள் நாணமுற்று நின்றன. அதுகண்ட வருண தேவனும் வெட்கி நின்றான்.

**வருணன் வயிற்று நோய் நீங்கப்பெற்றுப் பூசித்தல்**

அங்ஙனம் நின்ற வருணன், நடுநடுங்கி மிக்க அச்சமும் நாணமும் மேலிட மானம் ஒடுங்க உள்ளத்துள்ளே ஒரு மகிழ்ச்சி வந்தெய்தப் பொற்றாமரைத் தீர்த்தத்தை அடைந்தான். அதனை அடையும் முன்னரே அவனுடைய வயிற்று நோய் நீங்கிற்று. பின்பு வருணன் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிச் சோமசுந்தரக் கடவுளைப் பூசிக்கக் கருதிப் பேரன்போடு தூய விபூதியும் உருத்திராட்ச மாலையும் தரித்துக் கங்கை முதலிய மாதர்கள் பசும் பொற் குடங்களிலே நறுமணங் கலந்த திருமஞ்சனங் கொண்டுவந்து தரவும், கற்பகத்தரு பனிமலர், சந்தனம், சுகந்த மணப் பொருள்கள், மணிக்கலன்கள், பொன்னுடை முதலானவற்றை எடுத்துக் கொடுக்கவும், காமதேனு [1] ஐந்து கனிகள் ஐந்து அமிர்தங்கள் ஐந்து கௌவியங்கள் திருவமுது தூபம் தீபம் முதலானவற்றை எடுத்து வழங்கவும், சோமசுந்தரக் கடவுளை விதிப்படி பூசித்து ஆயிரம் திருநாமங்களைக் கூறிக்கொண்டு ஒவ்வொரு முத்துக்களைச் சாத்தித் திருவடியை வணங்கிக் கும்பிட்டு நின்றான்.

**இறைவனும் வருணனும்**

சோமசுந்தரக் கடவுள் வருணன் செய்த வழிபாட்டிற்குத் திருவுள மகிழ்ந்து, "வருணனே! நீ வேண்டுவது யாது?

---

1. ஐந்து கனிகள் - இவை எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், தமரத்தம்பழம், குளஞ்சிப்பழம், மாதுளம்பழம் என்பன. ஐந்து அமிர்தங்கள் - இவை பால், தயிர், நெய், தேன், சருக்கரை என்ற ஐந்தும் விதிப்படி சேர்க்கப்பெற்றவை. இவற்றை ரச பஞ்சாமிர்தம் என்பர். இவற்றோடு வாழைப்பழம் பலாப்பழம், மாம்பழம் என்னும் மூன்றையும் கூட்டிற் பல பஞ்சாமிர்தம் எனப்படும். ஐந்து கௌவியங்கள் - இவை விதிப்படிக் கூட்டி யமைக்கப்பெற்ற பால், தயிர், நெய், கோசலம் (பசுவின் சிறுநீர்), கோமயம் (பசுவின் சாணம்) என்பன,

சொல்'' என்று பணித்தருளினர். வருணன் விரைந்து வணங்கி, "எந்தையே! தமியேன், மணி மந்திரம் மருந்து என்பவற்றுள் ஒன்ருலும் போக்குதற்கரிய இக் கொடிய என் வயிற்று நோய் உமது பொற்ருமரைத் தீர்த்தத்தில் நீராடுவதற்கு முன்னே நீங்கப்பெற்றேன்: வேத முதலிய கலைகளுள்ளும், காட்சி முதலிய ஏனை அளவைகளுள்ளும், நான்முகன் முதலிய தேவர்கள் செய்யும் சோதனையுள்ளும் அகப்படாத பரஞ்சோதியே! ஐயோ! ஒன்றுக்கும் பற்ருத யானும் நின்னைச் சோதிக்கத் துணிந்தேனே! அறிவிலியாகிய அடியேனிடத்து என்ன குண நலத்தினைக் கண்டு எனது நோயைத் தீர்த்தீர்! அதனுல் யாது பயன் பெற்றீர்! விருப்பு வெறுப்பில்லாத பெருமானே! அடியார் செய்யும் குற்றத்தையே குணமாகக் கொள்வது உமது அருட் குணமோ?

"வேதமுதற் கலைகாட்சி முதலளவை
விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ்
சோதனையுள் அகப்படாச் சோதி!உனைச்
சோதிக்கத் துணிந்தேன்; அந்தோ!
பேதைமையே னிடத்தென்ன குணங்கண்(டு)என்
பிணிதீர்த்(து)என் பெற்ருய்? ஆசை
கோதமிலாய்! குற்றமே குணமாகக்
கொள்வதுநின் குணமோ? ஐயா!"

"இந்திரன் காலந்தாழ்த்து உம்மைப் பூசித்து அயர்ச்சியுடன் தன் நகருக்குத் திரும்பியதும், இஃது என்னை என்று தமியேன் வினவியதும், இந்திரன் அதற்கு விடை தந்ததும், அவ்விடைக்குப்பின் தமியேன் வினவியதும், அவன் சொல்லியபடியே தமியேன் உம்மைச் சோதித்ததும் ஆகிய இவையனைத்தும் எம்பெருமானே! உமது திருவருளினுல் தமியேனுடைய நோய்க்கு மருந்தாய் முடிந்தன. பெருங்கருணைக் கடலே! தமியேனுடைய வயிற்று நோயே அல்லாமல் தொன்றுதொட்டுத் தமியேனுடன் மாறுபட்டுவரும் இருவினைகளும் ஆணவமலத்தின் வலியும் கெட வீட்டு நெறியையும் பெற்றுக் கொண்டேன். இனித் தமியேனுக்கு மந்திரம் எதற்கு? மணி

எதற்கு? மருந்து எதற்கு? [1] உண்மையாகத் தெளிய வல்லோர்க்கு இப் பொற்றாமரைத் தீர்த்தமே பிணியனைத்தையும் தீர்ப்பதன்றோ! அடியேன் முன் செய்த பிழை இரண்டையும் பொறுத்தருளவேண்டும்'' என்று பன்முறை துதித்து வணங்கிச் சில வரங்களைப் பெற்றுக்கொண்டு தன் நகரினை அடைந்தான்.

**மதுரை நான்மாடக்கூடல் எனப் பெயர்வரக்காரணம்**

வருணன் விடுத்த மேகங்களைத் தடுக்கும்பொருட்டுச் சிவபெருமானது சடையினின்று நீங்கிய நான்கு மேகங்களும் மலைபோல் உயர்ந்து நான்கு மாடங்களாய்க் கூடுதலினாலே மதுரைமாநகரம் அந்நாள்தொட்டு [2] **நான்மாடக்கூடல்** எனப் பெயர் பெற்றது[3].

வன்றில் வருணன் விட்ட மாரியை விலக்க ஈசன்
மின்றிகழ் சடையி னின்று நீங்கிய மேக நான்கும்
குன்றுபோல் நிவந்து நான்கு கூடமாக் கூட லாலே
அன்றுநான் மாடக் கூடல் ஆனதால் மதுரை மூதூர்.

செய்யுள் — 26
ஆகச் செய்யுள் —1332

---

1. இங்கு, "மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித், தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை" எனவரும் திருநாவுக்கரசர் தேவார அடிகள் சிந்திக்கற்பாலன.

2. கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்ற நான்கும் கூடியதால் நான்மாடக்கூடல் எனவும் பெயர்பெறும் என்பர்.

3. இங்கு "உம்பருநாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத் தோரும், அம்புத நால்களா னீடுங் கூடல் ஆலவா யின்கண் அமர்ந்த வாறே" (திருஞானசம்பந்தர் தேவாரம்) எனவரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

# 20. எல்லாம் வல்ல சித்தரான படலம்

**சோமசுந்தரக்கடவுள் ஒரு சித்தராய்த் தோன்றிவருதல்**

நவமணிகள் பதித்த முடியினைத்தரித்த அபிடேக பாண்டியனும், பாண்டிநாட்டிலுள்ளவர்களும் இம்மை மறுமைக்குரிய எல்லா நலன்களையும் அடையும்பொருட்டுக் கூடற்பதியாகிய மதுரையில் எழுந்தருளிய குணங்குறி கடந்த உருவினையுடைய சோமசுந்தரக்கடவுள் ஒரு சித்த வடிவமாகிய திருவேடங் கொண்டருள்வாராயினர்.

அப்போது அவர், வட்டமாகக் கட்டிய நீண்ட சடையாகிய சிகையும், விபூதியின்மேல் திலகம் தரித்த திருநெற்றியும், இரு குண்டலங்கள் தரித்த திருச்செவியும், படிகமாலை தரித்த திருமிடறும், பூணூல் அணிந்த திருமார்பும், திருநீற்றுப் பொக்கணம் தூக்கிய வலத்தோளும், யோகப்பட்டம் தரித்த இடத்தோளும், மழுப்படையும் இடையிடையே பொன்கட்டிய பிரம்புங்கொண்ட திருக்கைகளும், புலித்தோல் அரைஞாணும், புலித்தோல் கௌபீனமும், புலித்தோல் ஆடையும், கண்டோர் களிக்கும்வண்ணம் இறுகக் கட்டிய உதரபந்தனமும், வேதமாகிய கிண்கிணியும் சிலம்பும் தரித்துப் பாதுகை மாட்டப் பெற்ற திருவடிகளும், ஞானானந்தமாகிய தேனைப்பருகி மலர்ந்த திருப்புன்முறுவலோடு குறுவேர்வை அரும்பும் திருமுகமுமுடைய ஒரு [1] சித்த வடிவங்கொண்டு விளங்கினார்.

**சித்தமூர்த்தியின் திருவிளையாடல்**

சித்த வடிவங்கொண்ட மூர்த்தியானவர் கடைவீதி, சித்திர கூடம் (தெற்றியம்பலம்), நாற்சந்தி, குளிகை (நிலா முற்றம்), உப்பரிகை, மாளிகை, திண்ணை ஆகிய இவ்விடங்கள் தோறும் சென்று விளங்குவர்; தெற்கில் இருப்பவர்போற் காட்டி வடக்கே போயிருப்பர்; கிழக்கில் இருப்பவர்போற் காட்சி அளித்து மேற்கே போயிருப்பர்; யாவரும் தேடிக் காணுவண்ணம் இந்திரசாலம்போல் திடீர் என்று மறைவர்.

---

1. இச்சித்தர் 'ஆக்கினைச் சித்தர்' என்ற பெயர் பெறுவர் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும்.

அதிதூரத்திலுள்ள மலையை மிக அருகில் உள்ளதாகச் செய்வார்; மிக அருகிலுள்ள மலையை அதிதூரத்திலே செல்ல விடுப்பார்; முதியவரை இளைஞர் ஆக்குவார்; குதலைமொழி பேசும் சிறுவர்களை முதியவராகக் காட்டுவார்; ஆணைப் பெண் வடிவமாக ஆக்குவார்; பெண்ணினை ஆண் வடிவமாகக் காட்டுவார்; மலடியை மகப்பேறு அடையச் செய்வார்; கூன், செவிடு, ஊமை, குருடு, முடம் ஆகிய இவற்றை யாவரும் காணப் போக்குவார்; வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம் ஆகிய நால்வகை உலோகங்களையும் பொன்னாக்குவார்; செல்வர் மனையிலுள்ள பொருள்களையெல்லாம் வறுமையில் மிக்கோர் வீடுகளில் சென்றடையச் செய்வார்; நண்பர்கள் தம்முள்ளே பகைத்துப் போரிடச் செய்வார்; எட்டிமரத்தில் சுவைமிகுந்த பழங்கள் பழுக்கச் செய்வார்.

காலமல்லாத காலத்தில் வையை ஆற்றில் நீர் பெருக்கெடுத்தோடச்செய்வார்; பெருக்கெடுத்தோடும் அவ்வாற்றை மீள வற்றச்செய்வார்; இனிய சுவை அமைந்த ஓடை நீரையும், பொய்கை நீரையும் உவர் நீராக்குவார்; கடல்நீரை நன்னீராக்குவார்; மாத்திரைக்கோலை விண்ணிலே வீசி நிறுத்தி அதன்மேல் ஊசியை நாட்டி அவ்வூசியின்மேல் காற்பெருவிரலை ஊன்றி ஆடுவார்; அவ்வூசியின் மேலே தலையினைவைத்துத் திருவடித் தாமரைகளை மேலே தூக்கியவண்ணம் சுழன்று ஆடுவார்; ஆகாயத்திலே கருடனைப்போலப் பறந்து மேகத்தைப்பிடித்து இடியோடு நீரைப் பிழிந்து காண்போருக்கு அதிசயம்பெறக் காட்டுவார்; மீண்டும் அம்மேகத்தை முன்போல் ஆகாயத்தில் விடுப்பார்; பகலில் தோன்றும் சூரியன் முதலிய பொருள்களை இரவில் தோன்றுமாறு செய்வார்; இரவில் தோன்றும் சந்திரன் முதலிய பொருள்களை பகற்காலத்தில் வரச்செய்வார். நெருப்பு, நீர், காற்று இவற்றின் வலி கெட நோக்குவார்; மலரும், காயும், கனியும் இல்லாத நாளில் தழைத்து விளங்கச் செய்வார்.

பீளை ஒழுகும் விழியினைக்கொண்ட கிழவர்களைத் தன் கைப் பிரம்பினால் தடவிக் காளைப்பருவத்தினையுடைய ஆடவராக

ஆக்குவார்; அவர்களுக்குத் தகுதியாக அவர்களின் முதுமைப் பருவமுடைய மனைவியர்களை இள மங்கையராக்கிக் கருப்பம் உண்டாக விபூதி அளிப்பார்; [1] **ஆகருடணம்** (சேய்மையி லுள்ளதை அண்மையில் வர இழுத்தல்), **அதிரிச்சியம்** (விழி களுக்குப் புலப்படும் பொருளை மறையச் செய்தல்), **அஞ்சனம்** (மறைந்துள்ள பொருளை வெளிப்படுத்திக் காட்டல்), **வசியம்** (பகைவரையும் தன் வசப்படுத்தல்), **வாதம்** (இரும்பு முதலான வற்றைப் பொன்னாக்குதல்), **வயத்தம்பம்** (முதியோரை இளையராகவும் இளையோரை முதியராகவும் செய்தல்) ஆகிய இவற்றைச் செய்வார்; கல்வியில்லாதவருக்கு எல்லாக் கலைகளும் விளங்க நாவினில் விபூதியைச் சிதறுவார்; பாண்டியன் தன் காதல் மகளிரோடு விளையாடும் பூங்காவிலுள்ள தென்னை மரத்தைப் பனைமரமாகச் செய்வார்; மரங்களையும், பறவை களையும், யானை முதலாய விலங்குகளையும் ஒன்று மற்றொன்று மாறு ஞானப்பார்வையால் பார்த்தருள்வார்; கண்ட இளை யோர் நாம் பெண்ணாகப் பிறக்கவில்லையே என்று வருந்தும் வண்ணம் பேரழகோடு கூடிய ஆண்மை வடிவங்கொண்டு அமர்ந்திருப்பார்; பாதலத்திலும் பொன்னுலகத்திலும் உள்ள பொருள்களனைத்தையும் மதுரைப்பதியிலே தோன்றுமாறு செய்வார்; இவ்வாறு அளவில்லாத வித்தைகளைச் சோம சுந்தரக் கடவுள் திருவிளையாடலாகப் புரிந்து இருந்தருளினார். மதுரைப்பதியிலுள்ள மாந்தர்கள் யாவரும், சித்தமூர்த்திகள் செய்தருளும் திருவிளையாடலின்மேல் செலுத்திவைத்த கண் களையும் உள்ளத்தையும் அடக்கி ஆள முடியாதவர்களாய்த் திகைப்புற்றுத் தத்தமக்குரிய தொழில் முயற்சிகளை மறந் திருந்தனர்.

### சித்தமூர்த்தி அரசன் முன் வர மறுத்தல்

இந் நிகழ்ச்சியை யெல்லாம் அபிடேக பாண்டியன் ஏவ லாளர்களால் அறிந்து, "அந்த வித்தக சித்த மூர்த்தியை இங்கு அழைத்து வாருங்கள்" என்று அருகே நின்ற சிலரை

1. இங்குத் தம்பனம், மோகனம் என்னும் இரண்டையும் ஒழித்து ஆகருடணம் முதலிய ஆறையும் கூறினார்; இவை எட்டும் தாமத குண சித்தி ஆகும்.

விடுத்தான். அவர்கள் சித்தரை அடைந்து அச் சித்தமூர்த்தியின் திருவிளையாடலை நோக்கி வியந்து தம்மை மறந்து நின்று விட்டனர். அவர்கள் வாராமையைக்கண்ட பாண்டியன் பின்னும் அமைச்சர்களை விடுத்தான். அமைச்சர்கள் சித்தமூர்த்தியை அடைந்து வணங்கி, "அரசன் முன் எழுந்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அதற்குச் சித்தமூர்த்தி, "எமக்கு மன்னவனால் எய்தும் பயன் யாது?" என்று கூறி மறுத்து விட்டார். அமைச்சர்கள் சித்தமூர்த்தியினை வணங்கிப் புறப்பட்டுச் சென்று மன்னவனை அடைந்து சித்தமூர்த்திகள் மறுத்துக் கூறியதை மொழிந்தனர்.

**பாண்டியன் சித்த மூர்த்தியின் பெருமையினைப் பேசுதல்**

அதுகேட்ட பாண்டியன் அமைச்சர்களை நோக்கி, "இறைவன் திருவருளைப்பெற்று, இம்மை, மறுமைப் பயன்களை வெறுத்த யோகிகள், [1] இந்திரன் பிரமன் திருமால் முதலியவர்களையும் மதியாரே! இப் பூமியை ஆளும் மன்னரையா மதிப்பார்!" என்று சொல்லிக்கொண்டு வாளா இருந்தான்.

செய்யுள் — 24

ஆகச் செய்யுள் — 1356

---

1. இங்கு, "சென்று நாம் சிறு தெய்வஞ் சேர்வோ மல்லோம்" என வரும் திருநாவுக்கரசர் தேவார அடி கருதற்பாலது.

## 21. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

### அபிடேக பாண்டியன் சித்தமூர்த்தியினைக் காண எண்ணுதல்

பின்பு அபிடேக பாண்டியன், தன் மனத்திலே அன்பும் அச்சமும் பெருக, "யான் பெரியோரை நன்கு மதியாது எளியாரைப்போலக் கருதி அவமதித்து இங்கு வரும்படி சொல்வித்தேன்; என் அறியாமை இருந்தவாறு என்னே! என்னை நாடி வரத்தக்க குறைபாடு அவர்க்கு யாதுளது? ஆதலின் அச் சித்த மூர்த்திகளை யானே தேடிச் சென்று காணத் தக்கவனுவேன்" என்று எண்ணினுன். பாண்டியனது உள்ளக் குறிப்பினை அறிந்த மௌன நிலையினைப் பூண்ட சிவயோகியாகிய சித்தமூர்த்திகளும் முன்னதாகவே தமது இந்திர விமானத்திற்கு வடமேற்குத் திசையின்கண் எழுந்தருளியிருந்தார்.

### அபிடேக பாண்டியனும் சித்தமூர்த்திகளும்

அன்று தை மாதம்தோன்றும் முதல்நாள் (தைச் சங்கராந்தி புண்ணிய காலம்) ஆதலின், பாண்டியன் திருக்கோயிலுக்குச் சென்று மதுரை நாயகனுகிய சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்து அன்புடன் உள்ளே வலமாக வரும்போது அவனுக்கு முன்னர் வருகின்ற காஞ்சுகி மாக்கள் (சட்டையிட்ட மெய்க்காப்பாளர்) புலித்தோல் ஆசனத்தில் ஐம்புலன்களையும் வென்ற திருவேடந் தாங்கி, யோக பட்டிகை அணிந்து, மழுப்படையின் மேல் திருக்கரத்தினை வைத்துக்கொண்டு இறுமாப்புடன் வீற்றிருக்கும் சித்தமூர்த்தியை நோக்கி, அவர் சமீபத்தில் வந்து பிரம்பினை நீட்டி, "இவ்விடத்தைவிட்டு எழுந்து போகக் கடவீர்" என்றனர்.

பின்னுக வரும் தென்னர் பெருமான் அச் சித்தமூர்த்தியை நோக்கி, "நுமது நாடும் ஊரும் எவை? உமக்கு யாது வரும்? யாது வேண்டும்? உமது பெயர் என்ன? சொல்வீராக" என்று வினவினுன். அதற்குச் சித்தமூர்த்திகள், "அப்பா! நாம் எந்த நாட்டிலும் எந்த நகரினும் திரிவோம்; ஆயினும், இப்பொழுது நாம் இருக்கும் தலம் காசுமீர நாட்டின்கண் உள்ள காசி மாநகரம் ஆகும். ஒரு பற்றும் இல்லாதவராய்ப் பிச்சை

எடுத்தலாகிய பெருவாழ்வினையுடைய அடியார்களே நம் உறவினர் ஆவர்; எந்நாளும் வித்தை செய்துகொண்டு திரிகின்ற சித்தர் யாம்; தில்லைவனம் முதல் இங்குள்ள சிவத் தலங்கள் பலவற்றையும் வணங்க வந்தோம்; ஞானத்தைப் பாலிக்கும் இந்த மதுரை மாநகர் இம்மையிலே சீவன் முத்தியையும், மறுமையிலே பரமுத்தியையும் அளிக்கும்; இங்குள்ளவர்களுக்கு எமது திருவிளையாடல்களைக் காட்டி, அவர்கள் விரும்பும் பல சித்திகளையும் அருளுவோம்; வேதம் முதலிய அறுபத்து நான்கு கலை ஞானங்களிலும் வன்மையுடையோம்; அன்றியும்,சேய்மையிலுள்ள பொருளனைத்தையும் அண்மையில் வரச்செய்தலில் வல்ல சித்தர் யாம். பாண்டியனே! உன்னிடத்தே நாம் பெறத்தக்கது ஒன்றுமில்லை'' என்று கூறிப் புன்னகை புரிந்தருளினர்.

**கல்லானைக்குக் கரும்பு அளித்தல்**

சித்தமூர்த்திகள் மொழிந்தவற்றைக் கேட்ட பாண்டியன், "இவருடைய இறுமாப்பும் செருக்கும் பெருமிதமுமாகிய இவற்றை யாதினுல் அளந்து அறிவேன்!'' என்று எண்ணி அதற்கு வேண்டும் திறத்தை ஆராய்வானாயினன். அப்பொழுது ஒரு வேளாளன் காண்போர் யாரும் கமுகோ என்று ஐயுறும் வண்ணம் செழித்தோங்கிய ஒரு கரும்பினைக் கையிற்கொண்டு வந்து வணங்க, அரசன் அக் கரும்பினைக் கையில் வாங்கிக் கொண்டு சித்தமூர்த்திகளை நோக்கி, "வல்லவர்களில் வல்லவரென உம்மை மதித்துக் கொண்டவரே! நீர் இங்கு நிற்கும் இந்தக் கல்லானைக்கு இக் கரும்பினை உண்பித்தால் எல்லாம் வல்ல சித்தரும் நீரே; மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளும் நீரே அன்றி வேறு யாவர்? மேலும், நுமது மனம் விரும்பியதை அளிப்பேன்'' என்று கூறினன்.

"வல்லாரில் வல்லேம் எனவும்மை மதித்த நீர்இக்
கல்லானைக்(கு) இந்தக் கரும்பை அருத்தின் எல்லாம்
வல்லாரும் நீரே; மதுரைப்பெரு மானும் நீரே;
அல்லால் எவர்? நும் மனம்வேட்ட தளிப்பன்'' என்றான்.

பாண்டியன் மொழிந்ததைக் கேட்ட சித்தமூர்த்திகள் புன்னகை புரிந்து, "பாண்டியனே! வா, எமக்கு உன்னால் வரும் பயன் யாது உளது? உன்னுடைய ஆசை தீரும் வண்ணம் நாமே உனக்கு வேண்டுவனவற்றைத் தருகின்றதல்லாமல் வேறு உண்டோ? ஏதேனும் ஒரு வித்தையைக் கற்றவர் செல்லுதற்கரிய உலகத்திலும் சென்று பல்லோரும் நன்கு மதிக்க அவ் வித்தையைக் காட்டிப் பயன் அடைவர். ஆனால் எல்லா விஞ்சைகளையும் அறிந்த நமக்கு ஒன்றிலும் ஆசையில்லை. இந்தக் கல்லானை இதோ கரும்பினைக் கடிக்கின்றதைப் பார்" என்று கூறினார்.

"செல்லா வுலகத் தினுஞ்சென்றொரு விஞ்சை கற்றோர்
பல்லாரும் நன்கு மதிக்கப்பயன் எய்து வார்கள்;
எல்லா மறிந்த எமக்(கு) ஒன்றிலும் ஆசையில்லை;
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி" என்றார்.

**கல்லானை கரும்பு தின்னுதல்**

பின்பு அந்தக் கல்லானையின்மீது சித்தமூர்த்திகள் சிறிது கடைக்கண் சாத்தியருளினார்[1]. என்னே! ஆச்சரியம்! உடனே அக் கல் யானை கண்ணைத் திறந்தது; மும்மதங்களும் ஒழுக வாய் திறந்து மேகத்தின் வாய் அடைக்குமாறு பிளிறியது; துதிக்கையினை நீட்டிப் பாண்டியன் கையிலுள்ள கரும்பைப் பிடுங்கிக் கடைவாயால் சாறு ஒழுகும் வண்ணம் கடித்து மென்று தின்றது; துதிக்கை ஊஞ்சல்போல்ஆடத் தருக்குற்று நிழலைச் சீறி நிமிர்ந்து நின்றது.

**கல்லானை அரசனின் கண்டமாலையைப் பறித்து விழுங்குதல்**

பின்னர், சித்த மூர்த்திகள் கல் யானையை மீண்டும் சிறிது கடைக்கண் சாத்தியருளினார். உடனே கல் யானை பாண்டியன் கழுத்திலுள்ள முத்தாலாகிய கண்டமாலையை எட்டிப் பிடுங்கியது. அதனைக் கண்ட மெய்க்காவலர் சீற்றங்கொண்டு யானையை அடித்தற்கு நெருங்கிக் கோலினைக்கொண்டு ஓங்கச்

1. இங்கு, "நதிமதந் தறுகண் புகர்கொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்புகொள வைத்த, ஆலவாய் அமர்ந்த நீலநிறை கண்டன்" என வரும் கல்லாட அடிகள் சிந்திக்கற்பாலன.

சித்தமூர்த்திகள் கண் சிவந்து யானையைக் கோபித்துப் பார்த்தார். உடனே கல் யானை முத்துமாலையை உண்டுவிட்டது. பாண்டியன் கண் சிவந்து சிவயோக சித்தமூர்த்தியின்மேல் கோபங்கொண்டான். அதனைக்கண்டு அரசனின் மெய்க்காப்பாளருட் சிலர் கோபித்துச் சித்தமூர்த்தியை அடிக்க வந்தனர். அப்போது அச் சித்தமூர்த்திகள் புன்னகை புரிந்து, தம்மீது வெகுண்டு வந்தோரைக் கை யமர்த்தி, '**நில்லுங்கள்**' என்று கூறினர். உடனே அவ் வீரர்கள் வைத்த அடியைப் பெயர்க்க முடியாமல் நடுங்கி ஓவியம்போல் நின்றூர்கள்.

**பாண்டியன் வேண்டுகோள்**

பாண்டியன் அதுகண்டு கோபமாறி அன்பும் அற்புதமும் பொங்கி வழியச் சித்தமூர்த்திகளின் திருவடிகளில் தன் முடி படும் வண்ணம் வீழ்ந்து வணங்கி, "பாசத்தாற் கட்டுண்ட எளியேன் செய்த பிழையைப் பொறுத்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்தான். அன்புக்கு இரங்கும் பரங் கருணைத் தடங் கடலாகிய சித்தமூர்த்திகள் மகிழ்ந்து, "வேண்டும் வரத்தினைக் கேள்" என்று பணித்தருளினர். உடனே அபிடேக பாண்டியன் வணங்கி, 'நற்புத்திரப்பேறு அருள்க' என்று வேண்டினன். சித்தமூர்த்திகள் அங்ஙனமே அருள்புரிந்து தமது திருக்கரத்தை யானையின்மேல் வைத்து அருள் நோக்கம் புரிந்தருளினர். உடனே கல் யானை தனது துதிக்கையினை நீட்டி முத்து மாலையைப் பாண்டியனிடம் கொடுத்தது. பாண்டியன் கையினை நீட்டி அதனை வாங்கினன். வாங்குமுன் எதிரே நின்றருளிய சித்த மூர்த்திகளின் திருவுருவத்தைக் காணுயினன். யானையின் உருவமும் அங்கு நின்ற மற்றைய கல்லானைகளைப் போல ஆயிற்று.

**பாண்டியன் சோமசுந்தரக்கடவுளைத் துதித்தல்**

இவற்றைக் கண்ட பாண்டியன் அஞ்சி, "இத் திருவிளையாடல் எம் உயிர்க்கு உயிராக விளங்கும் சோமசுந்தரக் கடவுளின் அருள் விளையாடலே" என்று தெளிந்து வேதநாயகனுகிய சோமசுந்தரக் கடவுளை மீண்டும் வந்து வணங்கி, "முற்றும் உணர்ந்த முதல்வனே! அறிவில்லாதவனுகிய நான்,

அறியாமையால் உமது திருவிளையாடலை அளந்தறியத் தொடங்கினேன்'' என்று அழுது வணங்கி [1]அபராதங் கொடுத்துக் கைகூப்பி நின்று துதிப்பானாயினான்.

''வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியாய் ஈறாய் நடுவாய் அவைகழிந்த
சோதியாய் நின்றாய் !என் சோதனைத்தோ ? நின்னியல்பே''

''நின்னால் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னாள் அருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னாமம் வாசித்தும் உன்னையறி யேன்என்று
சொன்னால் அடியனேன் சோதனைத்தோ ! நின்னியல்பே''

''பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினும் சிறியதுமாய்
அரியதினும் அரியதுமாய் எளியதினும் எளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமாய் அவைகடந்த
துரியமுமாய் நின்றாய்!என் சோதனைத்தோ? நின்னியல்பே''

என்று பலமுறை துதித்துத் தனது அரண்மனையை அடைந்து வீற்றிருந்தான்.

### அபிடேக பாண்டியன் இறைவன் திருவடியினை அடைதல்

பின்பு அபிடேக பாண்டியன் சித்தமூர்த்தியின் திருவருளால் **விக்கிரமன்** என்னும் புதல்வனைப் பெற்றுப் பலகாலம் செங்கோல் நடாத்தி விக்கிரமனுக்கு முடிசூட்டி அரசினை அளித்துவிட்டுப் பாசத்தினை வென்று சித்தமூர்த்தியின் திருவருட் பார்வையால் விளைந்த பேரின்பத்தின்கண், தேனின்கண் வீழ்ந்த வண்டினைப் போல, இரண்டறக் கலந்திருந்தான்.

செய்யுள் — 29

ஆகச் செய்யுள் — 1385

---

1. அபராதம் - குற்றம் புரிந்ததற்குக் கழுவாகச் சமர்ப்பிக்கும் காணிக்கை.

# 22. யானை எய்த படலம்

**விக்கிரம பாண்டியன் ஆட்சி புரிதல்**

பிறரால் வெல்லுதற்கரிய செங்கோலையுடைய **விக்கிரம பாண்டியன்** எட்டுத் திக்குகளிலும் புவி முழுதிலும் உள்ள அரசர்களாலே திறையாகத் தரப்படும் செல்வம் நிறைவு எய்த, கொடிய வறுமை தீமை முதலாய பகைஓட்டச் செங்கோலோச்சிக் குடிகளின் துன்பத்தைப் போக்கி முறை செய்வானாயினன்; அப்பொழுது புத்தம், சமணம் முதலிய புறச் சமயங்களாகிய களைகளைக் களைந்து எறிந்து, வேத நெறியாலும் சிவாகம நெறியாலும் உணர்த்தப்படும் சைவமாகிய பயிரினைச் செழித்து வளரச் செய்தான்; விதி மார்க்கத்தினும் பத்தி மார்க்கத்தினும் யாவரும் வழுவாது ஒழுகி அவற்றின் பயன்களை நுகர அரசுபுரிந்து வந்தான்; விண்ணினின்றும் இழிந்த விமானத்தின் அருகில் வடபால் திருக்கோயில் ஒன்று எடுப்பித்தான்; அதனில் உருவமும் அருவமும் அற்று அருளுருக்கொண்டு வந்த சித்த மூர்த்திகளின் திருவுருவத்தை அமைத்து, அதற்குத் தொண்டு செய்து வந்தான்.

**சோழ மன்னனின் சூழ்ச்சி**

இவ்வாறு விக்கிரம பாண்டியன் ஒழுகு நாளிலே, சூரியன் மரபில் வந்த சோழமன்னன் ஒருவன் காஞ்சி நகரத்தில் இருப்பானாயினன். அவன் சமண மதமாகிய புறநெறியில் நின்று, சந்திரன் மரபில் வந்த பாண்டியனோடு பகைமை பூண்டிருந்தான்; சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை எந்நாளும் மனத்திற் கொண்ட விக்கிரம பாண்டியனை நேரில் வந்து எதிர்த்துப் போரிட ஆற்றாது ஓடி ஒரு சூழ்ச்சியினால் கொல்லக் கருதினான்; அப்போது **அஞ்சனம்,** **கிரவுஞ்சம், கோவர்த்தனம், திரிகூடம், அத்திவெற்பு, சையம், ஏமகூடம், விந்தம்** என்னும்[1] எட்டு மலைகளிலும் வாழும் சமண குரவர்கள்

---

1. இவை பலவாறு வழங்கும்; அவற்றைச் சமணர்கள் வேறு விதமாக வழங்குவதை, "பரங்குன்(று) ஒருவகம் பப்பாரம் பள்ளி, அருங் குன்றம் பேராந்தை யானை - இருங்குன்றம், என்றெட்டு வெற்பும் எடுத்

எண்ணுயிரவர்க்கும் தனித்தனியே ஓலை எழுதி அனுப்பினான். தம் வடிவு போலவே உள்ளம் முழுதும் கறுத்து நின்ற சமண குரவர்கள் எண்ணுயிரவரும் சோழ மன்னன் அனுப்பிய ஓலையைப் பிரித்துப் படித்தனர்; மேகக் கூட்டங்களைப் போல் மலைகளினின்றும் இறங்கிக் காஞ்சிநகரை நோக்கிப் புறப்பட்டனர்; அனைவரும் இருட் கூட்டம்போல் ஒன்று சேர்ந்து காஞ்சி மாநகரை வந்து சூழ்ந்தனர்; பின்பு சோழனுடைய அரண்மனையின் தலைவாயிலை அடைந்து, அரசனுடைய ஏவலாளர் விடுக்க உள்ளே சென்று அரசன் இருப்பிடத்தை அடைந்தனர்; அப்போது சோழனுடைய முடியின்மேல் மயிற்றோகையை வைத்து ஆசி மொழி கூறினர். சோழ மன்னன் அச் சமண குரவர்களைப் பார்த்து, "வசியம் முதலாகிய ஆறு தொழில்களிலும் வன்மை மிகுந்தவர்களே! நீங்கள் அபிசார வேள்வி செய்து விக்கிரம பாண்டியனைக் கொல்வீரேல் எனது நாட்டில் உங்களுக்குப் பாதி தருவேன்; சென்று அதனைச் செய்யுங்கள்" என்றான்.

### அபிசார வேள்வி

தவத்தில் மறைந்து தீச்செய்கையே செய்தொழுகும் எண்ணுயிரம் சமண குரவர்களும் சோழனின் விருப்பத்திற்கு உடன்பட்டுச்சென்று, பாலியாற்றங்கரையிலே மூன்று காதமளவினதாகிய பரந்த யாகசாலை ஒன்றை அமைப்பித்தனர்; அதில் ஒரு யோசனை அகலந் தோண்டி எட்டுக் கோணமுடைய ஒரு ஓமகுண்டத்தினைச் செய்து, நஞ்சு பொதிந்த எட்டி முதலிய விறகுகளையிட்டு வேம்பின் நெய்கலந்த நச்சுப் பிராணிகளின் கொழுவிய ஊனையும், மிளகுப்பொடி கலந்த எண்ணெயையும் நிறையப் பெய்து அபிசார வேள்வியைச் செய்தார்கள். கொல்லாமையாகிய விரதம் பூண்ட அச் சமண குரவர்கள் செய்த

---

இயம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் தீங்கு" எனவரும் ஒரு பழைய வெண்பாவால் அறியலாம். அன்றியும், சமணர்களுடைய எட்டு மலைகளை மதுரையைச் சுற்றியுள்ள யானைமலை, பன்றிமலை, நாகமலை, பசுமலை இடபமலை, இலத்திமலை, பிரான்மலை முதலிய எண் பெருங்குன்றங்கள் எனவும் கூறுகின்றனர். "ஆனை மாமலை யாதியாய விடங்களில் பல வல்லல்சேர் ஈனர்கள்" என்பது திருஞானசம்பந்தர் தேவாரம்.

கொடிய வேள்வித் தீயினால் அருகிலுள்ள நந்தவனம், சோலைகள், காடுகள் முதலானவை கருகித் தீய்ந்தன; ஓடைகள், வாவிகள், குளங்கள் எல்லாம் நீர் வற்றின; மேகமும் தீய்ந்து கருகியது.

**வேள்வியினின்று கொல்களிறு தோன்றுதல்**

அப்பொழுது கடலின்கண் எழுந்த நஞ்சினைப்போல வெகுண்டு அவ்வேள்விக் குண்டத்தினின்றும் காற்றினை எழுப்புகின்ற காதினையும், தொங்குகின்ற வாயினைப்பற்றிய கொம்பினையும், ஊஞ்சல் போல் ஆடும் துதிக்கையினையும், ஆறாகச் சுரந்து ஒழுகுகின்ற மதத்தினையுமுடைய ஒரு பெரிய யானையானது எழுந்தது. அது நீல மலை எழுந்த தோற்றம் போலவும், இயமன் எழுந்த தோற்றம் போலவும் காட்சி யளித்தது.

**சமணர்கள் யானையை மதுரைமீது ஏவுதல்**

அஞ்சாமையினையுடைய அந்த யானையினைச் சமண குரவர்கள் நோக்கி, "நீ விரைந்துசென்று விக்கிரம பாண்டியனை மதுரைப்பதியோடு அழித்துவிடக் கடவாய்" என்று கூறித் தென்றிசைக்கண் முற்படச் செல்லுமாறு ஏவி விடுத்தனர். அப்போது நிலவுலகம் பிளக்கும் வண்ணம் இடிபோல் பிளிறிக் கொண்டு யானை புறப்பட்டுச் சென்றது. அருள் சிறிதும் இல்லாதவர்களாகிய சமண குரவர்களும் அறிவு, நன்னெறி, இம்மை மறுமைப்பயன், வீடுபேறு இவற்றைச் சிறிதும் பெறாத சோழனுடைய சேனைகளோடு ஒன்றுசேர்ந்து அவ்வி யானையின் புறத்தே சூழ்ந்து சென்றார்கள்.

**யானை மதுரையை அழிக்கச் செல்லும் காட்சி**

பாதலத்தைத் தொடும் கால்களையும், வானத்தை முட்டும் தலையையுங்கொண்ட அந்த யானை, இடியொலிபோல் பிளிறியது; ஊழிக்காலத்தில் வீசும் காற்றுப்போல் எழக் காதுகளை வீசியது; ஏழு கடல்போல் மதநீரைப் பொழிந்தது; கண்களினின்றும் வடவாமுகாக்கினிபோலத் தீயினைச் சிந்தியது; கூற்றுவனும் திக்குயானைகளும் கண்டு கண் புதைந்து அஞ்சி நடுநடுங்கச்சென்றது. செல்லும் வேகத்தில் அவ்வியானையானது மேகத்தின் வயிற்றைக்கிழித்து இடியினை உதிர்க்கும்; திசை

கள் செவிடுபடப் பிளிறும்; துதிக்கையினை வீசிப் பெரிய குன்றுகளைச் சுற்றிப்பிடிக்கும்; பின்பு, அக்குன்றுகளைக் கடலினைக் கலக்குகின்ற பெரிய மத்தாகிய மந்தர மலையைப் போலச் சுழற்று நிற்கும்; வடவைத் தீ நடந்து வருவதுபோல நிலவுலகில் நடந்து சென்றது.

**வழுதி வானொலிகேட்டு அட்டாலை மண்டபம் அமைத்தல்**

ஒரு கொடிய கூற்றுவன் போல மதுரையை நோக்கி வருகின்ற யானையினைக் கண்டவர்கள் விரைந்து ஓடிப்போய் விக்கிரம பாண்டியனுக்குக் கூறினர். அதனைக்கேட்ட பாண்டியன் சுழிபட்டு அலைகின்ற நீர்போல மனம் சுழன்று வருந்தினான்; உடனே யானைகளால் சுமக்கப்பெற்ற இந்திர விமானத்தில் எழுந்தருளியிருக்கும் யானையை உரித்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று, பன்முறை மனமுற வணங்கிநின்று, "எம்பெருமானே! இந்த யானையைக் கொன்று அடியேனைக் காத்தருளவேண்டும்" என்று குறையிரந்தான். அப்பொழுது விண்ணிலிருந்து, "பாண்டியனே! யானையை ஏவியவர்களின் மனவன்மை கைவிடுமாறு நாம் ஒரு வில் ஏந்திய சேவகனாய் வந்து அக் கொடிய யானையின் உயிரைக் கவருவோம்; அதற்கு முன்னே இந்நகரின் அருகில் கீழ்த்திசையில் ஒரு [1] **அட்டாலை மண்டபம்** செய்விக்கக் கடவாய்" என்ற ஒரு திருவாக்கு எழுந்தது. பாண்டியன் அது கேட்டு மன மகிழ்ந்து வணங்கி விரைந்து சென்று பொன் மலையே உரு மாறி வந்தது போலப் பதினாறு தூண்கள் அமைத்து ஒரு அட்டாலை மண்டபத்தைச் செய்வித்தான்.

**இறைவர் வில்லேந்திய சேவகராக வருதல்**

சோமசுந்தரக் கடவுள், நீல நிறக் கடலில் நீந்திச் செல்லும் இரண்டு குளிர் மதியங்களைப்போல் இரண்டு திருச்செவிகளிலும்

---

1. அட்டாலை - விலங்குகளை வேட்டையாடுபவர் ஏறியிருக்கும் பரண். அட்டாலை மண்டபம் - பரண் வடிவாகச் செய்த மண்டபம். இம் மண்டபம் பண்டைக்காலத்தில் கீழை மதிலைச்சார இருந்ததென்று தெரிகிறது. தற்போது மண்டியூர்த் தெப்பக்குளத்தின் வாயுமூலையில் பதினாறு கால்களால் ஆகியதோர் மண்டபமாக இருக்கின்றது. இதற்கு வடக்கே யானை மலை உள்ளது.

சங்கக் குண்டலங்களைத் தரித்துப் படர்ந்த சடையினை மறைத்துக் குடுமியிலே மயிலின் தோகையினை அணிந்து, கருங் கடலில் தோன்றும் செங்கதிரவனைப் போலச் சிவந்த கச்சை யினை அரையில் கட்டி, அதன் புறத்தே குருதி தோய்ந்த உடைவாளைக் கட்டி, திருவடிகளில் வீரக் கழலை அணிந்து முதுகிலே அம்புப் புட்டிலைக் கட்டித் தடந்தோளிலே நீண்ட வில்லை மாட்டி உமாதேவியார் இடப்புறமே யன்றி உடல் முழுதையும் பெற்றதைப்போலவும், அல்லது திருமால் வலப் புறத்தைப் பெற்றதைப்போலவும் ஒளி வீசும் வடிவம் முழுதும் கருநிறங்கொண்டு விளங்கினர். இவ்வாறு இறைவர் காமனும் விரும்பி அஞ்சத்தக்க கட்டழகு நிறைந்த காளைப்பருவமுடைய வேட்டுவ வீரராய்த் தோன்றி அட்டாலை மண்டபத்தின்மீது ஏறிப் பாண்டியனின் துன்பத்தை நீக்கும்பொருட்டு அவ்வி யானையின் வரவை எதிர் நோக்கியவாறு நின்றருளினர்.

**விற்சேவகர் யானையை வீழ்த்துதல்**

ஐந்து கூப்பிடு தூரத்தில் அவ்வியானை வருதலைக் கண்டு விற்சேவகர், அறநெறியில்லாத அச்சோழனது கொடுங்கோலைப் போல வில்லைத் தமது வலிய தாளால் மிதித்து உடல் வளைய அதனை வளைத்து நீண்ட நாணினைப் பூட்டினர்; திருவிரலினலே தெறித்துப் பேரொலி செய்து திசை யானைகள் எட்டும் அஞ்சும் வண்ணம் சிங்கத் தொனியைக் காட்டி, வில்லினை இடக் கையிலே எடுத்துக் கொடிய நாரசிங்கக் கணையைப் பூட்டித் தமது உடல் திருகவும், இடதுகால் முன்னே செல்லவும், வலது கால் மண்டலிக்கவும்[1] இரு விரல்களாலே செவிவரை நாணினை இழுத்து விட்டார். அக் கணை விரைந்து சென்று மேகம்போல் முழங்கி வந்த அவ்வியானையின் மத்தகத்தைக் கிழித்தது. கொடிய அவ்வியானை மேகம் போலக் கதறிச் சீறி நிலத்தில் வீழ்ந்தது. அந்த யானையினைத் தாங்கலாற்ருது பூமியும் பிளவுபட்டது; ஆதிசேடனின் ஆயிரம் முடிகளும் பிளந்தன; முன்னர் அஞ்சித் திடுக்கிட்டு ஓடிய திசை யானைகள் பண்டைய செருக்கையும் இறுமாப்பையும் பெற்றன.

1. இது பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்னும் வில்வீரர் நிலைகளுள் 'ஆலீடம்' எனப் பெயர் பெறும்.

**யானை இறந்து கிடந்த காட்சி**

கீழே இறந்து வீழ்ந்த [1] யானையானது சிவபெருமானின் திருவடியால் உதைபட்டுக் கீழேவீழ்ந்து கிடந்த இயமனை ஒத்தது. விக்கிரம பாண்டியன் சிவபெருமானை அடைக்கலம் புகுந்த மார்க்கண்டனை ஒத்தான். யானை இறந்தது கண்டு பந்தைக் கின்ற சமணர்கள் காலதூதர்களைப் போலத் துன்பத்தில் அழுந்தினர்.

புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால்
உதைபடக் கிடந்த கூற்றம் ஒத்தது மத்த யானை ;
சுதைபடு மதிக்கோ வேந்தன் தொழுகுலச் சிறுவன் ஒத்தான் ;
புதைபடும் அமணர் கால படரெனப் படரிற் பட்டார்.

இறந்து கிடந்த யானையானது இருள் கிடந்தால் ஒத்தது; அதன் நெற்றியில் இட்ட சிந்தூரமானது சூரியனது சிவந்த கிரணத்தை ஒத்தது; அண்ணலார் விட்ட கணையினாலே பிளக்கப்பட்ட இடத்திலிருந்து வெளிப்படும் குருதியானது இருள் முழுதையும் உண்ணுதற்குக் காலையில் எழுந்த இளஞாயிற்றை ஒத்தது; சமணர்களின் புன்னெறியில் ஒழுகும் கொடிய சோழனுடைய கொடுங்கோலை வெள்ளிய கொம்பாக ஏந்தி யானையின் வடிவத்தைக் கொண்டுவந்த கொடுங்கலியை விக்கிரம பாண்டியனின் செங்கோலானது சிவபெருமான் விடுத்தருளிய நரசிங்கக்கணை வடிவந்தாங்கி அழித்தது. இடி வீழப்பட்ட மலைபோல் வீழ்ந்த யானையின் வாயினும், அம்புபட்ட வாயினும் அருவி போலக் குருதிகள் பெருகின. அம்மலையில் தவழும் கரிய மேகத்தைப்போலப் பருந்துகளும், பசாசுகளும், பூதங்களும் தசையை உண்ணும்பொருட்டு மொய்த்தன. இறந்துகிடந்த யானையைக் கண்ட விக்கிரம பாண்டியன் மகிழ்ச்சி அடைந்தான்.

யானையின் குருதியைக் குடிப்பதற்கு வந்த கரிய உடலையுடைய பேய்க்கூட்டம் போலச் சோழனது சேனை பின்னே தொடர்ந்து வந்த சமணர்களைப் பாண்டியன் கண்டு சீறினான்.

---

1. இந்த யானை வீழ்ந்து இறக்கும்போது இலத்தியைச் சொரிந்தது: அஃது 'இலத்தி மலை' எனப் பெயர் விழங்குகிறது. இறந்த யானையின் உடல் 'யானைமலை' எனப் பெயர் பெறுகின்றது.

அவன் குறிப்பின் வழி ஒழுகும் வேற்படை ஏந்திய வீரர்கள் விரைந்தோடிப்போய்ச் சமணர்களைத் துரத்தினர்; அவர்களில் சிலரைத் தண்டத்தால் அடித்தனர்; சிலரைக் குறுக்காக வளைத்து தடுத்து அவர்களுடைய கையில் தாங்கிய கமண்டலங்களைத் தூளாக உடைத்தனர்; சிலர் உடுத்தியபாயை மயிற்றோகையோடும் துண்டாகக் கிழித்தனர்; பலரை வாய்க்காலில் விடுத்தனர்; சிலரை மானத்தைப்போக்கி ஓட்டினர். சமணர் அனைவரும் அடிபட்டுச் செய்த மாயத்தை இழந்து படைகளோடும் முறிபட்டு நடுக்கத்திலும் பாவத்திலும் மூழ்கி, மயங்கி வாடிப் பழிப்படைந்து ஒளிந்துப் பதுங்கி ஓடினர்.

பின்னர் விக்கிரம பாண்டியன், யானையைக்கொன்று அட்டாலை மண்டபத்தில் எழுந்தருளியிருந்த வீரராகிய இறைவரின் திருவடிகளைத் தன் கைகளால் பற்றிக்கொண்டு, "பசு ஞானம் பாச ஞானங்களைக் கடந்தவரே! நீர் இங்கே இக்கோலத்துடன் எக்காலத்தும் வீற்றிருப்பீராக" என்று வேண்டிப் பிரார்த்தித்தான். சிவபெருமான் அவன் வேண்டுகோளுக்கு உடன்பட்டருளினர்.[1]

மாதங்கந் தடிந்(து)அட் டாலை
மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப்
பாண்டியன் இரந்து வேண்டிப்
"போதங்கள் கடந்தாய்! என்றும்
பொலிய இங்(கு) இருத்தி" என்ன
வேதங்கட்(கு) அருத்தம் சொன்ன
வேதியன் அதற்கு நேர்ந்தான்.

பாண்டியன் பின்னும் சில வரங்களைப் பெற்றுக்கொண்டு அரண்மனையை அடைந்தான்; சோமசுந்தரக் கடவுளைக் காலந்தோறும் சென்று வழிபட்டு வந்தான். அப்போது மன்மதன் என்று சொல்லப்படும் அழகு நிறைந்த **இராசசேகரன்** என்னும் புதல்வனைப் பெற்றுப் புவியினைப் பாதுகாத்து வந்தான்.

---

1. அன்று முதல் சிவபெருமானுக்கு, "அட்டாலைச் சேவகர்" என்ற ஒரு திருநாமம் வழங்கலாயிற்று.

**நரசிங்கப் பெருமான்**

சிவபெருமான் யானையின்மீது எய்த கணையானது, அங்கே உக்கிர நரசிங்கமாக எழுந்தருளியிருந்தது. எல்லா உலகங்களையும் அழித்து அவற்றை மீளவும் படைத்தருளும் உருத்திர மூர்த்தியின் வீரசத்திகளுட் சிலவற்றை அவனருளால் பெற்று இறவாத அவுணனாகிய இரணியனின் மார்பைப் பிளந்த [1] நரசிம்ம மூர்த்தியை உரோமச முனிவர் அங்கே வந்து வணங்கி வழிபட்டுப் பெரிய தவங்களைச்செய்து தம் பெயர் விளங்க ஒரு தீர்த்தம் உண்டாக்கிப் பெரும் பேற்றினை அடைந்தார். பிரகலாதனும் அங்கே வந்து தவஞ்செய்து அழியாத பெருவரங்களைப் பெற்றான்.

உலகெலாம் அழித்து மீளவுண் டாக்கும்
　　உருத்திரன் வீரசத் தியினிற்
சிலதரித்(து) இறவா அவுணன்மார்(பு) இடந்த
　　**சிங்கநா யகனை**யங்(கு) எய்தி
அலகில்மா தவஞ்செய்(து) உரோமசன் தன்பேர்
　　அறியலர் தீர்த்தமுண் டாக்கி
இலகுபே(று) அடைந்தான்; பிரகலா தனுநோற்(று)
　　ஈறிலாப் பெருவரம் அடைந்தான்.

செய்யுள் — 42
ஆகச் செய்யுள் — 1427

---

1. இந் நரசிம்ம மூர்த்தியை விக்கிரம பாண்டியன் யானைமலையில் பிரதிஷ்டைசெய்து வழிபட்டான் என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறுகிறது.

## 23. விருத்த குமார பாலரான படலம்

### கௌரியின் பிறப்பு

விக்கிரம பாண்டியனுடைய ஆட்சிக்காலத்தில் மதுரையில் [1] **விருபாக்கன்** என்னும் அந்தணன் ஒருவன் இருந்தனன். அருந்ததிபோலும் கற்பினையுடைய [2] **சுபவிரதை** என்பவள் அவன் வாழ்க்கைத் துணைவியாக விளங்கினாள். அவர்கள் இருவரும் நெடுங்காலமாக மகப்பேறின்மையால் அளவிறந்த சிவதருமங்களைச் செய்தனர்; பல விரதங்களை மேற்கொண்டனர்; சத்த மாதர்களை வழிபட்டுப் பெரிய தவத்தைச் செய்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றனர்; அக்குழந்தைக்கு, "**கௌரி**" என்னும் பெயரிட்டு அழைத்தனர்.

### கௌரியானவள் பராசத்தி மனுவைச் செபித்து வருதல்

கௌரிக்கு ஐந்தாண்டுகள் நிரம்பப் பெற்றன; அவள் பிறவிப் பிணியைப் போக்குதற்குச் சிறந்த வழியை ஆராயுஞ் சிந்தையுடையவளாய்த் தன் தந்தையை வணங்கி, "ஐயா! இப்பிறவியை ஒழிக்கும் தெய்வத்தன்மை பொருந்திய மந்திரம் யாது?" என்று வினவினாள். விருபாக்கன் அதிசயித்து மன மகிழ்ந்து தன் புதல்விக்குப் பராசத்தியின் திருமந்திரத்தை அன்புடன் உபதேசித்தான். முற்பிறப்பில் செய்த அரிய தவத்தின் குறையினை இப்பிறவியில் நிரப்புதற்கு வந்த கௌரியம்மை தந்தைபால் அம்மந்திரத்தைச் சிரத்தையோடு கேட்டுத் தெளிந்து அதனை நாத்தழும்பேறச் செபித்துக் கொண்டு வந்தாள்.

---

1. விருபாக்கன் - மேல் நோக்கிய விழியையுடையவன்; இப் பெயர் சிவபெருமான் திருப்பெயர்களுள் ஒன்று; இவ் வந்தணன் மதுரையை அடுத்துள்ள பெருங் கிராமத்தில் வாழ்ந்து வந்தவன் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும். பெருங் கிராமம் - இஃது ஐந்நூறு குடிகள் நிறைந்த ஊர் ஆகும். இதனைப் 'பெருங் கருணை' என்ற ஊர் என்றும் கூறுவர். இங்கு வைணவர்கள் மிகுதியாக உள்ளனர் என்பர்.

2. சுபவிருதை - இது நல்ல விரதமுடையவள் என்னும் பொருளைத் தருவது.

**விரூபாக்கன் கௌரிக்குத் திருமணம் செய்ய எண்ணுதல்**

விரூபாக்கன், "நான் பெற்ற தவக் கொழுந்தாகிய புதல்விக்கு நன் மரபினனாய், பிரமசரிய நெறியில் ஒழுகுபவனாய், வேதங்களை அறிந்தவனாய், மாண்பு மிகுந்த மகா சைவனாய் உள்ளானொருவன் எப்பொழுது மணவாளனாக வருவானோ!" என்று தன் உள்ளத்தில் இடைவிடாது சிந்தித்துக்கொண்டிருந்தான். கௌரிக்கு உற்ற வயதாகத் திருமணப் பருவமும் வாரா நின்றது.

**கௌரியின் திருமணம்**

அப்பொழுது ஒருநாள் அயலூரில் உள்ளவனும் வீடுகள் தோறும் பிச்சைஏற்று உண்பவனுமாகிய வைணவப் [1]பிரமசாரி ஒருவன் கௌரியின் வீட்டிற்கு வந்து பிச்சைவேண்டி நின்றான். அங்ஙனம் வந்து பிச்சை கேட்ட அப்பிரமசாரிக்கு, விரூபாக்கன் தனது பெண்ணைக் கொடுக்க விருப்பங்கொண்டு தன் மனைவியாகிய சுபவிரதையையும், அவனுடைய சுற்றத்தாரையும் கலந்து ஆராயாமல் சிறிதும் அச்சமின்றித் துணிந்து நீரினை எடுத்து அவனுடைய கையில் வார்த்தான்; சிலம்பினை அணிந்த செல்வியாகிய கௌரியின் ஊழ்வினையும், பிச்சைக்கு வந்த பிரமசாரியின் நல்வினையின் பகுதியும் ஒன்று சேர்ந்ததனாலே விரூபாக்கன் மந்திரத்துடன் தாரை வார்த்தான். அதனைக் கேட்டுச் சுபவிரதையும், உறவினரும் மனந் தளர்ந்து, "குலமும் கோத்திரமும் ஆராய்ந்து பார்த்தானா? குடிப்பிறப்பின் மேன்மையை அறிந்தானா? ஒழுக்கமும், கல்வியும் நிறைந்தவன் என்று கண்டானா? எந்த ஊர் என்றாவது உணர்ந்தானா? ஒன்றினையும் அறிந்துகொள்ளாமல் தன் மகளைத் தத்தம் செய்துவிட்டானே! எல்லா நூல்களையும் கற்றறிந்த இவன் இங்ஙனம் செய்தது, **விதியின் வழியே மதி செல்லும்** என்பதனையே புலப்படுத்துகிறது" என்று கூறி வருந்தினர். பிறகு பிரமசாரியின் குடி, கோத்திரம், சூத்திரம் முதலாயவற்றை அறிந்து, "இவன் குடி முதலியவெல்லாம் நம் மரபுக்கு ஒருவகையில் ஒத்திருக்கின்றன; ஆயினும் வைணவ மதக் கட்டுண்டு ஒழுகும்

1. இவன், பாலிய முதல் விவாக காலம் வரையும் விரத நியமத்துடன் இருக்கும் பௌதிகப் பிரமசாரி ஆவன்.

குற்றம் ஒன்றுதான் அவனிடம் உளது; முன்னரே நீர்வார்த்துத் தத்தஞ் செய்தபின் இனி எங்ஙனம் மறுப்பது? ஆதலால் அவனுக்கு மணம் செய்து கொடுப்பதே தகுதி" என்று உடன் பட்டனர். இங்ஙனம் சுபவிரதையும் சுற்றத்தாரும் இசைந்த பின் விருபாக்கன் வேதத்துள் விதிக்கப்பட்ட[1] எட்டு வகை மணங்களுள்[2]பிரம மணத்திற்குக் கூறிய விதிப்படி கௌரிக்குப் பொன்னுபரணங்களை நிறையப் பூட்டி அழகு செய்து ஓமத் தீயின் முன் அப் பிரமசாரிக்கு விவாகஞ் செய்துகொடுத்தான்; பின் மங்கல வரிசைகள் (சுப சீதனங்கள்) பலவற்றையும் நல்கிக் கௌரியை மணவாளனோடு அவன் நகருக்கு அனுப்பி வைத்தான்.

**கௌரியின் புக்ககத்தார் வெறுப்புக்கொள்ளல்**

வறுமையில் வாடுபவனுக்குப் பொற்கிழி கிடைத்தாற் போலவும், பலர் இல்லந்தோறும் சென்று ஐயம்பெற்று உண்டு திரிந்த மகன் மணமகளாகத் திருமகளை மணஞ்செய்து வருவான் போலவும், வைணவப் பிராமணன் கௌரியோடு தன் மனை யினை வந்தடைந்தான். வைணவ மதத்தை மேற்கொண்டு ஒழுகுகின்ற அவனுடைய தாய் தந்தையர்கள் அதனைக் கண்டு மனம் பொறாது வாடினர்; தமது இல்லிற்கு மருமகளாய் வந்த கௌரியின் சிவ வேடத்தையும், சிவ சிந்தனையையும் கண்டு பொறாமையினாலே தமது கருகிய உடல்போல் மனமும் வெந்து அவளை வேறாக ஒதுக்கி வைத்துச் சிறிதும் விரும்பாராய் நிந் தித்து ஒழுகுவாராயினர். தாம் ஒரு நாள் அயலூரில் நடக்கும் தம் உறவினரின் திருமணத்திற்குச் செல்ல நினைந்து, கௌரி யைத் தனியே வைத்துவிட்டு, வீட்டைப் பூட்டிக்கொண்டு சென்றனர்.

---

1. எட்டு வகை மணம் - பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசம் என்பன; இவற்றை "மறை யோர் தேஎத்து மன்ற லெட்டு" என்று தொல்காப்பியமும், "அந்தணர் அருமறை மன்றல் எட்டு" என்று இறையனாரகப் பொருளும் கூறும்.

2. பிரம மணம் - பிரமசரியங் காத்தவனுக்குக் கன்னியை அலங் காரஞ் செய்து ஓமத்தீ முன்னர்க் கொடுப்பது.

**கௌரி தன் சிந்தையில் பலவாறு எண்ணுதல்**

திருநீறே உள்ளத்திலுள்ள மாசினைப் போக்கித் தூய்மை செய்ய வல்லது என்று [1] உபநிடதங் கூறுவதைக் கேட்டும், மண்ணை அழுக்குண்டாகப் பூசும் வடிவினையுடைய வைண வர்கள் அகன்ற பின்பு, வீட்டிலே தனித்திருக்கும் கௌரி யானவள், குற்றம் ஒழியுமாறு ஒரு சிவனடியாரைக் காணப் பெறுமல், "இன்று என் கண் மாசடைகின்றது" என்று முதிர்ந்த தலையன்பினுல் கவலையுறுவாளாயினுள்: "[2] சிவனடி யார்களிடத்து அன்பில்லாத மனமே இரும்பு; சிவனடியார் களுக்கு நாடோறும் தொண்டு செய்யாத உடலே மரம்; காது கண் முதலிய ஐம்பொறிகளையும் சிவனடியாரிடத்துச் செலுத்தாத வடிவமே பாவை; வேதத்திலே துதிக்கப்படும் சைவமாகிய தவநெறி அல்லாத பிற நெறிகளே பிறவிக்கு ஏது வாகிய நெறிகள்; எல்லா வுயிர்களுக்கும் உறுதிகளாயுள்ளவை இம்மை மறுமை இன்பங்களே என்று கூறுவர்; அவற்றை அருள வல்லவர் எல்லாமும் தாமேயாகி எவ்வுயிர்க்கும் உயிரா யுள்ள சிவபெருமானே என்பர்; அவரைச் சிந்திப்பார்க்கு மனம் வாக்குக் காயம் என்னும் மூவகையாலும் செய்யப்படும் உண்மையாகிய பத்தி நெறி வந்து கைகூடும் என்பர்; அப்பத்தி வழியில் நிற்பவருக்கு வினைகளால் வரும் துன்பங்களைப் போக்குதற்பொருட்டு எடுத்த வடிவம் அச் சிவபெருமானின் அடியார்களுடைய திருவேடமன்றே!" என்று இங்ஙனம் கௌரி பலவாறு சிந்தித்துக் கவலைகொண்டிருந்தாள்.

---

1. இங்குப் பஸ்மஜாபாலம், காலாக்கினி ருத்திரம் முதலிய உபநிட தங்கள் ஆகும்.

2. இங்கு, "ஈசனுக்கன் பில்லார் அடியவர்க்(கு)அன் பில்லார் எவ் வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும்அன் பில்லார், பேசுவதென் னறிவிலாப் பிணங்களைநாம் இணங்கில் பிறப்பினெடும் இறப்பினெடும் பிணங்கிடுவர் விடு நீ, ஆசையொடும் அரனடியார் அடியாரை அடைந்திட்(டு) அவர் கரும முன்கரும மாகச் செய்து, கூசிமொழிந்(து) அருள்ஞானக் குறியி னின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே" என வரும் சிவ ஞான சித்தியார் திருவிருத்தமும் நோக்கற்பாலது.

சிவனடியார்க்(கு) அன்பிலாச் சிந்தையே
இரும்(பு);ஏவல் செய்து நாளும்
அவனடியார் திறத்தொழுகா ஆக்கையே
மரம்;செவிகண் ஆதி ஐந்தும்
பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே
பாவை ; மறைபரவுஞ் சைவ
தவநெறியல் லாநெறியே பவநெறியென்
றளியளாய்த் தளர்வாள் பின்னும்.

எனைத்துயிர்க்கும் உறுதிஇக பரம்என்ப ;
அவைகொடுப்பான் எல்லாந் தானுய்
அனைத்துயிர்க்கும் உயிராகும் அரன்என்ப ;
அவன்அறிவார்க்(கு) அங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப ;
அப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப(து)
அவனடியார் வேடம் அன்றே !

**சோமசுந்தரக் கடவுள் கிழவேதியராய் வருதல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் கௌரியின் கவலையைப் போக்கத் திருவுளங்கொண்டு, சிரசிலும் காதுகளிலும் கழுத்திலும் மார்பிலும் புயங்களிலும் கைகளிலும் உருத்திராட்சம் தரித்துக் கையிலே தம்மைப்போலப் பன்னெடுங் காலம் பழகியதாகிய ஒரு பெரிய புத்தகந் தாங்கிக் கயல் மீனின் முள்ளைப்போன்ற நரையும், திரைந்த கபோலமும், அடிக்கடி கனைக்கின்ற நெஞ்சும், ஒரு புறம் சரிந்த கௌபீனவுடையும், தலை நடுக்கமும், மேலாடை தவழும் தோளும், முப்புரி நூல் தவழும் திருவெண்ணீறு அணிந்த மார்பும், ஒரு கையிற் பிடித்த குடையும், தண்டினை ஊன்றி அதனோடு குனிந்தசைகின்ற திருமேனியுங்கொண்டு முதிர்ந்த ஒரு விருத்த வேதியர் வடிவுடன் பலநாள் உணவு இல்லாத பெரும்பசியினர்போல மிக வருந்தி வாட்டமுடன் கௌரி இருக்கும் வீட்டின்கண் வந்து புகுந்தார்.

## கௌரி அன்புடன் கிழவேதியர்க்கு அமுது படைத்தல்

அதுகண்டு கௌரி மிக்க அன்போடு எழுந்து அவ் விருத்த வேதியரை எதிர்கொண்டு அழைத்து ஆசனத்தில் அமர்த்திக் கைகூப்பி வணங்கி நின்று, "எம்பெருமானே! தங்களை இங்குத் தரிசிக்கத் தமியேன் என்ன மாதவம் செய்தேனோ!" என்று முகமன் கூறினாள். விருத்த வேதியர், "நாம் பசியுற்று உன்னிடத்தில் வந்தோம்" என்றார். அதற்குக் கௌரி, "அந்தோ! எம்மவர்கள் வீட்டைப் பூட்டிக்கொண்டு போய் விட்டார்களே" என்று மனங் கசிந்தாள். சிவபெருமானாகிய வேதியர் கௌரியை நோக்கி, "நீ உன் கையாலே பூட்டைத் தொடு; கை பூட்டில் படுமுன்னரே பூட்டுத் திறந்துவிடும்; நீ கதவைத் திறந்து விரைவில் சமைக்கக் கடவாய்" என்றார். இறைவியின் திருவடியில் அன்பு செலுத்தும் கௌரி, அங்ஙனமே செய்து மடைப்பள்ளியினுள்ளே புகுந்து திருவமுது சமைத்துப் புறத்தே விருத்த வேதியரிடம் வந்து கையில் கமண்டல நீரை ஏந்தி, "ஐயனே! திருவமுது செய்ய எழுந்தருளுவீராக" என்று வேண்டினாள். அங்ஙனமே எழுந்த பெரியாரின் திருவடியாகிய செந்தாமரை மலர்களைப் பெரிய தவக் கொழுந்தாகிய கௌரி கமண்டல நீரால் விளக்கி, அந் நீரைத் தன் சிரசின்மீது தெளித்துக்கொண்டு அவரை உள்ளே அழைத்துச் சென்று ஆசனத்தின்மீது இருத்தி நறுமலர்களால் அருச்சித்தாள்; பின்பு நல்ல உண்கலத்தைத் திருத்திவைத்து, முல்லை அரும்புபோன்ற பால்வார்த்துச் சமைத்த திருவமுதை வெள்ளி மலைபோலவும், பருப்பினை அம் மலையின் பொன்முடி போலவும், பல வேறு பொரிக் கறிகளை அம்மலையின் புறத்தில் சூழ்ந்து கிடந்த சிறு மலைகளின் கூட்டம் போலவும், நெய்யினை அம் மலையில் ஓடிவரும் அருவி போலவும் படைத்தாள்; வேறு வேறு சிற்றுண்டிகளையும் அவ்வாறே படைத்தாள்; சிவந்த வாயானது இடை இடையே இனிய மொழிகளாகிய அமுதினைச் செவியில் உண்பிக்கவும், கையானது அறுசுவையோடுங் கூடிய அமுதினை வாயில் உண்பிக்கவும், மூப்புக் காரணமாகத் தளர்ச்சியுற்ற திருமேனியினையுடைய அவ் வேதியர் உண்டருளினார்.

அப்போது அக்கிழ வேதியர் தேவாமுதம் உண்டவர்போல மூப்பு நீங்கப்பெற்று மன்மதனை வென்ற கட்டழகு பெற்ற வராய்க் கௌரி பார்க்குமாறு இருந்தார். அச் சமயம் அவர் திருமேனியில் அணிந்த திருவெண்ணீறு மாறிக் கலவைச் சந்தனமாகியது; உருத்திராட்சங்கள் மாறிப் பசும் பொன்னுற் செய்த குண்டலங்களும் கடகங்களுமாக விளங்கின; முதுமை மாறிக் காளைப் பருவத்தினராய்த் திகழ்ந்தார். கற்பிற் சிறந்த கௌரி அது கண்டு நடுநடுங்கி வளைக்கரங்களை நெரித்தாள்; மனந் திகைத்து உடல் வியர்த்து அஞ்சி ஒரு புறம் ஒதுங்கி நின்றுள்.

## குமரர் குழவியாக மாறுதல்

அப்பொழுது திருமணத்தின் பொருட்டு அயலூருக்குச் சென்றிருந்த மாமி முதலியோர் திரும்பிவந்து வீட்டிற்புகப் பதினறு வயதுடன் திகழ்ந்த இறைவராகிய அந்தணர் உடனே நெற்றியில் விபூதி அணிந்த ஒரு பசுங் குழவியின் வடிவத்தைக் கொண்டருளினர்.[1] எழுதுதற்கரிய வேதமாகிய சிலம்புகள் புறத்தே சூழ்ந்து கிடந்து ஒலிக்க - அன்பர்களின் இதயமாகிய செழுமலர் ஓடையில் மலர்ந்து, சிவானந்தமாகிய தேன் ததும்பி வழியும் தாமரைமலர் போன்ற சிறிய திருவடியின் பெருவிரலை வாயில் வைத்துச் சுவைத்து, மைதீட்டிய கண்களில் நீர் ததும்ப வாயைத் திறந்து அழுதுகொண்டு உலகத்து உயிர்களையெல்லாம் படைத்துக் காத்து அழித்தருளும் ஐயன் அணையாக விரித்த ஆடையின்மீது கிடந்தருளினர்.

"எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத்(து)
அலம்பஅன்பர் இதய மென்னுஞ்
செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத்
தேன்ததும்பு தெய்வக் கஞ்சத்

---

1. இங்கு, "பால விருத்தரு மாளுர் தாமே" (திருநாவுக்கரசர் தேவாரம்-திருப்பழனம்) எனவும், "பால, விருத்தனு மானுன் கண்டாய்" (திருநாவுக்கரசர் தேவாரம் - திருமறைக்காடு) எனவும் "விருத்தராகும் பாலனுர் பசுபதியார்" (திருநாவுக்கரசர் தேவாரம்-திருக்கச்சி மேற்றளி) எனவும் வருவனவற்றைச் சிந்திக்க.

தொழுதகுசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து
மைக்கணீர் துளும்ப வாய்விட்(டு)
அழுதணை ஆடையிற்கிடந்தான்; அனைத்துயிரும்
ஈன்றுகாத்(து) அழிக்கும் அப்பன்."

**மாமியும் கௌரியும்**

தாய் கைவிட்டுப்போனதொரு குழந்தையைப் போலக் கலங்கி, நான்முகன் ஒருபால் அழவும் - நான்மறைகள் ஒருபால் அழவும் - அன்புடைய கௌரியின் அன்பிலகப்பட்டு வாய் திறந்து அணை ஆடையிற் கிடந்து அழுகின்ற குழந்தையைக் கௌரியினுடைய மாமி கண்டு கௌரியை நோக்கி, "இக் குழந்தை ஏது?" என்று கேட்டாள். அதற்குச் சிவபெருமானிடம் அன்பு பூண்ட கௌரி, "[1] தேவதத்தன் என்பவன், தன் மனைவி யுடன் இங்குவந்து, 'பெண்ணே! இக்குழந்தையைச் சிறிது பொழுது பார்த்துக்கொள்வாயாக' என்று வைத்துவிட்டுப் போனான்" என்றாள். இதனைச் சொல்லுமுன்னரே வைணவ நெறியினைக் கைக்கொண்டு, பொறுமை, கருணை, மானம் இவற்றை விட்ட மாமியும், மாமனும் மனங் கலங்கக் கண்கள் சிவப்பக் கோபித்து, "எலும்புகளை அணிந்து சுடுகாட்டிலே சாம்பலைப் பூசி ஆடுகின்ற உருத்திரனுக்கு இடையறாத அன்பு பூண்டவனுடைய குழந்தையின்மேலே அன்புகொண்டவளே! நீயும் எங்களுக்கு ஆகாதவளாயினை" என்று சொல்லித் துன்பத் தில் ஆழ்ந்து சோருகின்ற கௌரியை, அக்குழந்தையையும் கைக்கொண்டு வீட்டைவிட்டுப் போகும்படி துரத்தினார்கள்.

**கௌரிக்கு இறைவன் அருள்புரிதல்**

வீட்டிலிருந்து வெளியேறித் தெருவிற்கு வந்த கௌரி திகைத்தாள்; தாயில்லாப் பிள்ளையின் திருமுகத்தை நோக்கி உளம் தளர்ந்தாள்; தனது உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டு எழுந்தருளியிருக்கும் கூடல் நாயகனாகிய சோமசுந்தரக்கடவுளை மனத்தினுள்ளே தியானித்துக்கொண்டு உமாதேவியாரின்

1. தேவதத்தன் - இஃது ஓர் அந்தணன் பெயர் என்பர்; குறிக்கப் படாத ஒருவனைக் குறிப்பிட்டுக் கூறவேண்டின் 'தேவதத்தன்' என்று கூறுதல் வடநூல் வழக்குமாம்.

திருமந்திரத்தை உச்சரித்தாள். என்னே வியப்பு! குழந்தையாய்க் கிடந்து அழுத கொன்றைவேணியர் ஆகாயத்திலே இடபவாகனத்தின்மேல் உமாதேவியோடு காட்சி தந்தருளினார். அக்காட்சியைக் கௌரி தரிசித்துச் சிவானந்தக் கடலில் ஆழ்ந்தாள்.

சிவபெருமான் தமது இடப்பாகத்துள்ள உமாதேவியாரின் திருமந்திரத்தை உச்சரித்துக் கைவந்த அக் கௌரியை உமாதேவியின் வடிவாக்கி ([1]சாரூபத்தை அளித்தருளி)ப் பலரும் கண்டு வணங்க, தேவர்கள் மலர்மழை பொழிய, இடபவூர்தியில் ஏற்றிக்கொண்டு ஆகாயமார்க்கமாக எழுந்தருளினார். புவியிலுள்ளோர்கள் அதனைக்கண்டு களிப்புற்று அதிசயித்தார்கள்.

மழவுருநீத்( து) அடலேற்றின் வருவார்தம்
இடத்தணங்கின் மனுவை ஓதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின்
வடிவாக்கிப் பலருங் கண்டு
தொழவிடைமேல் ஏற்றிவிசும் பாருக
மலர்மாரி சுரர்கள் தூற்ற
அழகர்எழுந் தருளினார்; களிதூங்கி
அதிசயித்தார் அவனி மாக்கள்.

செய்யுள் — 33
ஆகச் செய்யுள் — 1460

---

1. சாரூபம் - இது சத்தி யுலகத்தின் மூன்றாவது பதவி ஆகும்.

## 24. கான்மாறி யாடின படலம்

### இராசசேகரன் ஆட்சி

விக்கிரம பாண்டியன், தன் ஆட்சியை மகனுன **இராச சேகரனிடம்** அளித்துவிட்டு இந்திரன், பிரமன், திருமால் இவர்கள் உலகத்திற்குமேலே விளங்கும் சிவலோகத்தை அடைந்தான். இராசசேகர பாண்டியன், சிவபெருமான் ஆனந்த வடிவாய் வெள்ளியம்பலத்தின்கண் நின்று புரிந்தருளும் திருநடனத்தில் வைத்த பேரன்பினுல் பரதநூல் ஒன்றெழிந்து ஏனைய அறுபத்துமூன்று கலைகளையும் நன்கு கற்று இந்நிலவுலகைப் பொது நீக்கிச் செங்கோல் நடாத்தி மக்களைப் பாதுகாத்து வந்தான்.

### இராச சேகரன் பரதநூல் கற்க எண்ணுதல்

அக் காலத்தில் சோழ நாட்டைக் [1]**கரிகாற் பெருவளத்தான் என்னும் சோழ மன்னன்** ஆண்டு வந்தான். அவன் காவிரியாற்றின் வட கரையிலுள்ள திருவானைக்கா என்னும் தலத்தில் சிலந்தி, வாயின் நூலாற் செய்த பந்தரின்கண் திருமால் வணங்க வீற்றிருக்கும் செல்வரிடம் பேரன்பு கொண்டவன்; அறுபத்து நான்கு கலைகளையும் கற்று அறிவில் மேம்பட்டு விளங்குபவன். அக் கரிகாற் சோழனது அரண்மனைப் புலவன் ஒருவன் பாண்டி நாட்டிற்கு வந்து, வேப்பமலர் மாலையை அணிந்த இராசசேகரனைக் கண்டு முன்னின்று துதிக்கும்போது, "தென்னர் பெருமானே! எம்முடைய கரிகால் பெருவளத்தான் என்னும் அரசனுக்கு அறுபத்து நான்கு கலைகளும் கைவரும்; உனக்கு அவற்றுள் ஒன்று வராது. அது பரதநூல் ஆகும்; ஆதலால் நீ கலைகள் முற்றும் அறிந்திலை" என்று சொன்னுன். அதனைக் கேட்ட பாண்டியன் வேற்றரசன் வாயிற் புலவன்

1. இவன், உருவப் பஃறேர் இளஞ்சேட் சென்னியின் புதல்வன்; தாயத்தாரால் சிறையிலிடப்பட்டு அச் சிறைச்சாலை கொளுத்தப்பட்டபோது அதினின்றும் தாண்டிவந்ததில் கால் தீய்ந்து கரிந்ததால் 'கரிகாலன்' எனப் பெயர் பெற்றவன். காவிரிக்குக் கரையிடுவித்து நீர் நிலைகளைப் பெருக்கித் தன்னுட்டை வளப்படுத்தி 'வளவன்' எனவும் அழைக்கப் பெற்றவன். இமயமலையைச் செண்டால் அடித்த வீரன்; பெருங் கொடையாளி.

கூறிய வார்த்தை மானத்தையும் பகைமையையும் மிக மூட்டத் துன்பத்துள் அழுந்திய மனத்தனாகி, "சிவபெருமான் ஆடியருளும் திருநடனத்தைச் சிறியேனாகிய யானும் ஆடுதற்கு என் உள்ளம் விரும்பியதோ? இதுவும் எம்பெருமானுடைய திருவருளேபோலும்" என்று எண்ணினான்.

### இராசசேகரன் பரதநூலைக் கற்றல்

பிறகு இராசசேகரன், பரதநூலை நன்கு கற்றவராய் அந்நூலின் வழியே ஆடுதலிலும் பழகித் தேர்ச்சி பெற்றவராய் உள்ள புலவரைத் தேடி வந்த அப்புலவர் அனைவர்க்கும் அவர்கள் மகிழும் வண்ணம் ஆடை, அணிகலன், பொன் முதலியவற்றை வெறுப்ப வெறுப்பக் கொடுத்து அவர்களிடம் பரத நூலைக் கசடறக் கற்கலானான்.[1]

இராசசேகர பாண்டியன் பரத நூலிற் கூறிய கூத்தினைப் பயிலும்போது தனது உடலில் அயர்வு நோய் உண்டாவதை

1. இங்குப் பரத நூலிற் கூறிய நடனக் கலையின் வகை முதலாய நுட்பங்களைப் பரஞ்சோதி முனிவர் 8-ஆம் செய்யுள் முதல் 18-ஆம் செய்யுள் வரை விவரித்துக் கூறுகின்றார். அவற்றின் விரிவை மகாபரத சூடாமணி - நாட்டியப் பகுதியில் காண்க.

பரதம் - இது பாவம், ராகம், தாளம் என்பவற்றின் முதற் குறிப்பாகிய ப, ர, த என்னும் மூன்றெழுத்துக்களாலாயது. பாவம் - எடுத்த பொருளுக்கு இயைந்த தன்மையைப் பாவகம் தோன்ற நிகழ்த்திக் காட்டுவது. இஃது அவிநயம் எனவும் பெயர் பெறும். இதில் வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, இன்பம், அவலம், நகை, வெகுளி, நடுவு நிலை என்னும் ஒன்பது சுவையும், அவைபற்றி உள்ளத்தே நிகழும் குறிப்பும், அக் குறிப்பின் புறத்தே வெளிப்பட்டுத் தோன்றும் மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்க மடுத்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு என்னும் மெய்ப்பாடு பத்தும் அடங்கும். அவிநயம், வெகுண்டோன் அவிநயம் முதல் நஞ்சுண்டோன் அவிநயம் வரை இருபத்து நான்கு வகையாம். ராகம் - இசை; இது பைரவி முதலாகச் சொல்லப்படும் இராகங்களாம். தாளம் - இது சச்சபுடம், சாசபுடம், சட்பிதா புத்திரிகம், சம்பத்து வேட்டம், உற்கடிதம் என்னும் பஞ்சதாளமும், துருவம், மட்டியம், ரூபகம், சம்பை, திரிபுடை, அடதாளம், ஏக தாளம் என்னும் சப்த தாளமும் பிறவுமாம். இதன் இலக்கணங்களைப் பரத சாஸ்திரம் தாள வியலிற் காண்க.

அறிந்தான். "இத்தகைய அயர்வு நோய் ஞானவடிவாய் வெள்ளியம்பலத்துள் ஆடியருளும் சிவபெருமானுக்கும் உண்டே! பிரம விட்டுணுக்களாலுங் காணுதற்கரிய திருவடிகளுள் ஒன்றே துன்பமுறப் பலநாளாக ஆடி நிற்கின்றதே! அந்தோ! இப் பரத நூலைக் கற்று அதனால் நேரும் வருத்தம் அனைத்தையும் அறிந்து வைத்தும் இதனை நான் உயிருடன் பார்த்துக்கொண்டிருப்பதோ தருமம்! பிறவிக் கடலின்கரையைக் காணுதற்குரிய நன்னாள் வந்தடுப்பவர் யாவராயினும் அவரனைவருக்கும் இன்பத்தையும் வீடு பேற்றையும் அளித்தருளும் எம்பெருமான் செய்கின்ற இத் திருக்கூத்தினை நான் எப்படிப் போய்த் தடுப்பது! இது தகாது; தடுக்காவிடிலோ அவருடைய திருவடி வருந்துமே" என்று பலவாறு சிந்தித்து வருத்தமுற்றான்.

**சிவபெருமான் கால் மாறி ஆடுதல்**

பின்பு, பாண்டியன், "இதற்கு இதுவே துணிவு" என்று ஒன்றை நினைந்து எழுந்துபோய்ச் **சிவராத்திரியிலே** திருக்கோயிலை அடைந்து, விண்ணிழி விமானத்தில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளுக்கு நான்கு யாமமும் சிவாகமப்படி விசேட பூசையினைச்செய்வித்து,மனமுருகித் துதித்துத் திருவடிகளை வணங்கிக்கொண்டு சென்று,வெள்ளியம்பலத்திலே பேரொளியாய் விளங்கும் பரமபதியின் மெய்ஞ்ஞானத் திருக்கூத்தினைத் தரிசித்து மனமகிழ்ந்து வணங்கிக் கண்களில் ஆனந்த அருவி பொழியச் சிரசின்மீது இரு கைகளையும் கூப்பி நின்று, "எம்பெருமானே! ஊன்றிய திருவடியை மேலே எடுத்து வீசி, தூக்கிய திருவடியை நிலத்தின்மீது ஊன்றி இன்று அடியேன் காணுமாறு கால்மாறி ஆடுதலைச் செய்து தமியேன் வருத்தம் அனைத்தும் தீர்த்தருளும்; அங்ஙனம் செய்தருளாவிடில் அடியேன் இறந்துவிடுவேன்" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு சிவபெருமான் எதிரே தன் உடைவாளை நாட்டி அதன்மேலே குப்புறவிழப் புகுந்தான். உடனே அன்பிற்கெளியராகிய சிவபெருமான், தமது இடத்தாளைக்கீழே ஊன்றி, வலத்தாளை மேலே எடுத்து வீசிக் கால் மாறி ஆடிக்

காட்டி யருளினர்;[1] பாண்டியனுடைய கவலையையும் மும்மலங்களையும் போக்கி, அவனைப் பேரின்பக் கடலுள் வீழ்த்தினர்.

**பாண்டியன் இறைவனைத் துதித்தல்**

இனிமை மிகுந்த மதுவில் வீழ்ந்த வண்டைப்போல உண்மை, அறிவு, இன்பம் (சச்சிதானந்தம்) என்று சொல்லப் படும் கடல் வெள்ளத்தில் மூழ்கிய பாண்டியன் எழுந்தான்; மனம் வாக்குக் காயம் என்னும் இம் மூன்றையும் சிவபெருமானுக்கே உரிமையாக்கி அன்பே வடிவமாய் நின்று துதிக்கத் தொடங்கினன்:

பெரியாய் சரணம்! சிறியாய் சரணம்!
கரியா கியஅங் கணனே சரணம்!
அரியாய் எளியாய் அடிமா றிநடம்
புரிவாய் சரணம்! புனிதா சரணம்!

நதியா டியசெஞ் சடையாய்! நகைவெண்
மதியாய்! மதியா தவர்தம் மதியிற்
பதியாய்! பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணம்! சுடரே சரணம்!

பழையாய்! புதியாய் சரணம்! பணிலக்
குழையாய் சரணம்! கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம்! உருகா தவர்பால்
விழையாய் சரணம்! விகிர்தா சரணம்!

இருளாய்! வெளியாய் சரணம்! எனையும்
பொருளா கநினைந் துபுரந் தரன்மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாய் சரணம்! அழகா சரணம்!

---

1. இங்கு, இந்திரனுக்கு முன்னர் ஆடிய வடகீழ் மூலையிலே சிவபெருமான் கால் மாறியாடித் திருவடியின்மேல் கொடி கட்டினர் என்றும், அதனல் சிவபெருமானுக்கு 'அதிர வீசி யாடுவார், மாறியாடிக் கொடியிட்ட பெருமான்' என்ற திருநாமங்கள் உண்டாயின என்றும் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும். "அதிர வீசி யாடுவாய் அழகன் நீ! புயங்கன் நீ" என்பது திருஞானசம்பந்தர் - திருவாலவாய்த் தேவாரம்.

அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவ! நால்
வயனத் தவ! வா னவர்வா னவ! சேல்
நயனத் தவள்நா யகனே சரணம்!

என்று இவ்வாறு துதித்து வணங்கி, "வெள்ளிமன்றினுள் ஆடும் பெருமானே! இந்த மாறியாடிய திருக்கூத்தினை யாவரும் தரிசிக்கும்படி எக்காலத்தும் இவ்வாறே நின்று தேவரீர் அருள் செய்யவேண்டும். இதுவே, அடியேன் வேண்டும் வரமாகும்" என்று விண்ணப்பம் செய்தான். அன்று முதல் இன்று வரையும் சோமசுந்தரக் கடவுள் [1] **கால் மாறி ஆடிய திருக்கோலத்தினராகவே** நின்று அருள் புரிந்து வருகின்றார்.

செய்யுள் — 29
ஆகச் செய்யுள் — 1489

---

1. இங்கு, "பஞ்சவன் நிறைந்த அன்புடன் வேண்ட, மாறிக் குனித்த நீறணி பெருமான்" என வரும் கல்லாட அடிகள் கருதற்பாலன.

# 25. பழியஞ்சின படலம்

### குலோத்துங்க பாண்டியன் ஆட்சி

சிலகாலம் சென்ற பின்பு இராசசேகரன் தன் அன்பிற்குரிய புதல்வனாகிய **குலோத்துங்கனுக்குத்** தனது அரசியலை அளித்து விட்டுத் தன் வினைகளையெல்லாம் வென்று போக்கி வெள்ளியம்பலத்துள் ஆடியருளும் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நீழலில் இரண்டறக் கலந்து பேரின்பத்தை அடைந்தான். தந்தையின் செங்கோலைக் கையிற்கொண்ட [1] குலோத்துங்க பாண்டியன் நாடோறும் மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை அன்புடன் துதித்து வழிபடும் பத்தி நியமத்தை மேற்கொண்டான். அவனுக்கு மனைவியர் பதினாயிரவர் இருந்தனர்; அவர்கள் ஒவ்வொருவர்க்கும் அவ்வாறு புதல்வராக அறுபதினாயிரம் புதல்வர்கள் பிறந்தார்கள். அப் புதல்வர்களுள்ளே முதலில் தோன்றிய புதல்வன் வலிய ஆண்மையையுடைய இளம் சிங்கத்தை ஒத்தவன்; சேமநிதியைப் போன்றவன்; **அனந்தகுணன்** என்னும் பெயருடையவன்; அவன் கற்றற்குரிய கலைகளையும், குதிரை, யானை, தேர் என்பவற்றைச் செலுத்தும் திறமும், விற்போர், வாட்போர் முதலாயவற்றையும் கற்றுச் சிறப்புடன் திகழ்வதைத் தந்தையாகிய குலோத்துங்க பாண்டியன் கண்டு மகிழ்ந்தனன்.

### திருப்புத்தூர் மறையவன் மனைவி இறத்தல் - வீண் பழி

குலோத்துங்க பாண்டியன் அரசியற்றுநாளிலே, வயல்கள் சூழ்ந்த திருப்புத்தூரினின்றும் ஒரு மறையவன், தன் மனைவியோடும், பால்மணமாறாத வாயினையுடைய கைக் குழந்தையோடும் தன் மாமன் வீட்டிற்கு மதுரையை நோக்கிக் காட்டின் மார்க்கமாக வந்துகொண்டிருந்தான். அங்ஙனம் வரும் அம்மறையோன், தண்ணீர்த் தாகங்கொண்டு வருந்துகின்ற மனைவியை வழியிலே நிற்கின்ற ஒரு பெரிய ஆலமரத்தின் நிழற்கீழே இளங் குழந்தையோடும் இருக்கச்செய்து தான் நீர் நிலையினைத் தேடிச் சென்றான். அவள் தன் குழந்தையை

---

1. இவன் இரண்டாம் குலோத்துங்க பாண்டியன் என்க.

அருகிலிட்டு அயர்ந்து படுத்தாள். இலைகள் நிறைந்த அந்த ஆலமரத்தின்மேல் முன்னொரு நாளில் ஒரு வேடனால் எய்யப் பெற்ற, ஒரு கூரிய அம்பு கோப்புண்டு கிடந்தது. காற்றினால் அலைக்கப்பட்டு மரம் அசைதலால் அவ்வம்பு வீழ்ந்து, அங்கே தங்கியிருந்த பார்ப்பனியின் வயிற்றிலே ஊடுருவத் தைத்தது. முன்னை வினைப்பயன் முடியப் பார்ப்பனி உயிர் நீத்தாள். அப்பொழுது, ஆண் சிங்கத்தை ஒத்த ஒரு வேடன் செவ்வாளியினை ஏறிட்ட வில்லையுடையனாய் வெயிலுக்கு ஒதுங்கி இருக்கத்தக்க நிழலினைத்தேடி அந்த ஆலமரத்தின் நீழலை யடைந்து இளைப்பாறுதற்கு அம்மரத்தின் பக்கத்தில் நின்றான். தண்ணீரினைக் கொணர்தற் பொருட்டுச்சென்ற பிராமணன், உண்ணும் நீரினைக் கைக்கொண்டு திரும்பி வந்தபொழுது, ஒருங்கு இருந்த குழவியோடும் இரத்த வெள்ளத்தில் அழுந்தி உயிர் துறந்த தன் மனைவியைக் கண்டான்; கணை தைத்துக் குருதியொழுக உயிர் நீங்கிக் கிடக்கின்ற மனைவியின் அருகிற்சென்று "எனது உயிர்போன்றவளே! உனக்கு இத்தீமை நேர்ந்தது என்னையோ!" என்று மத்தினால் கலக்கப்பட்ட தயிர்போலக் கலக்கமுற்று அறிவிழந்து மனஞ்சோர்ந்தான்.

**மறையவன் வேடனை இழுத்துக்கொண்டு மதுரை அடைதல்**

பிராமணன் சிறிது தெளிந்து, "இங்கு ஒரு பெண்பழியை ஏற்றுக்கொண்டவர் யார்?" என்பதை ஆராயப் புகுந்தான்; அப்பொழுது, அவ்வாலமரத்தின் ஒருபக்கத்திலே ஒரு அம்போடும் வளைந்த வில்லைக் கையிலேந்தித் தனக்கு வாய்க்கும் வேட்டைத் தொழிலினை ஆராய்ந்து எதிரில் நின்ற வேடனைக் கண்டு, "இவ்வேடன் காலில் செருப்பும், இடையில் வாளொடு கட்டிய கச்சும், கையில் கூரிய அம்பினை ஏறிட்ட வில்லுங் கொண்டு நின்றான்; இவனே என் மனைவியைக்கொன்று பழி பூண்டவன்" என்று நினைந்து வேடனை நெருங்கி, "ஏண்டா வேடா! என் மனைவியைக் கொன்றவன் நீயே" என்று கூற்றுவனைப்போல வாய்திறந்து முழக்கஞ்செய்து, "மன்னவன்மேல் ஆணை" என்று கூறி, மன்னவன் ஆணையாகிய பாசத்தை வீசி வேடனை வலிந்து இழுத்துக்கொண்டும், இறந்துபோன தன் மனைவியைத் தனது முதுகிலிட்டுக்கொண்டும், குழந்தை

யைத் தன் அரையின் பக்கத்தில் அணைத்துக்கொண்டும், தாயின் முலைப்பாலை விரும்பி அழுகின்ற குழந்தையைக் காணும்தோறும் கண்ணீர் சோர விம்மி அழுதுகொண்டும் விரைந்து சென்று மதுரையை அடைந்தான்.

**அந்தணன் அரண்மனை வாயிலிலே நின்று முறையிடல்**

பிறகு, பிராமணன் பாண்டியனுடைய அரண்மனை வாயிலே வந்தடைந்து வேடனை முன்னே விட்டுத் தன் மனைவியின் உயிரற்ற உடலை எதிரே கிடத்திப் பாண்டியனின் அமைச்சர் முதலியோர் கேட்ப அவர்கட்கு எதிரே கையை மேலே ஓச்சிக் கண்ணீர் பெருக முறையிடாநின்றான் :

"கோமுறை கோடாக் கொற்றவர் ஏறே! முறையேயோ!
தாமரை யாள்வாழ் தண்கடி மார்பா! முறையேயோ!
மாமதி வானோன் வழிவரு மைந்தா! முறையேயோ!
தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ!

வெற்றிமிகுந்த [1] அரசன் உறங்கும்போதும் அவனுடைய அருளாணையானது உலகமுற்றும் தருமநெறி வழுவாமல் காக்கப்படும் என்பார்கள் பெரியோர்கள். அவ்வாணை இவ்வேடன் செய்த கொலையைக் காவாவிடத்து என்ன பயனுடைத்து" என்றான்.

**காவலர் அரசனிடம் அந்தணன் முறையீட்டைக் கூறல்**

வாயிற் காப்போர் பாண்டியன் முன் சென்று, "அரசே! நம் அரண்மனை வாயிலின் பக்கத்தில் ஒரு பிராமணன் உயிரிழந்த தன் மனைவியின் உடலை எடுத்து வந்து அங்குப்போட்டு அவளைக் கொலை செய்தானென்று ஒரு வேடனை முன்னே விட்டுத் தனியே வருந்துகின்றான்" என்றனர். அதனைக் கேட்டலும் பாண்டியன் அஞ்சி, "என் வெண்கொற்றக் குடை நன்றாய் இருந்தது! என் செங்கோல் குடிகளுக்கு [2] ஐவகை

---

1. இங்கு, "உறங்கு மாயினு மன்னவன் தன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என வரும் சீவக சிந்தாமணி அடிகள் கருதற்பாலன.

2. ஐவகை அச்சம் - இஃது அரசராலும், அரசன் தமராலும், பகைவராலும், கள்வராலும், ஏனை உயிர்களாலும் உண்டாகும் பயமாம்.

அச்சமும் உண்டாகாமல் அவற்றைப் போக்கி ஆட்சிபுரியும் முறையும் நன்ருய் இருந்தது! நாடு வறுமையில் மூழ்காமல் முயற்சியுடன் தாங்கும் பொறையும் நன்ருய் இருந்தது!'' என்று தன்னை வெறுத்துக்கொண்டு வெளியே வந்தான்.

**மறையவன் பாண்டியனிடம் முறையிடுதல்**

அந்தணன் வந்து நிற்கும் நிலைமையினைக்கண்ட பாண்டியன் உள்ளம் மெலிந்து அவனை நோக்கி, "ஐயா! நீ ஏன் வருந்துகின்றனை? உனக்கு நேர்ந்த துன்பம் யாது? சொல்லக்கடவாய்'' என்ருன். அம் மறையோன் மன்னனை நோக்கி, "புகழ் அமைந்த நீதியுள்ளவனே! நான் இன்று இவளை அழைத்துக்கொண்டுவந்து ஒரு ஆலமரநிழலில் இருத்திவிட்டுத் தண்ணீர் கொண்டுவரச் சென்றேன்; தண்ணீரினை முகந்து கொண்டு யான் வருவதற்குள் இச் சிலைவேடன் இவளைக் கொன்றுவிட்டு அருகே நின்றுகொண்டிருந்தான்'' என்ருன். அப்போது மறையவன் கூறிய அச்சொற்கள் உலையிலிட்டுக் காய்ச்சிய வேல்போல் பாண்டியனின் செவிகளில் புகுந்தன.

**வேடன் பதில் கூறல்**

பாண்டியன், அந்தணன் சொல்லையுங்கேட்டு வேடனை நோக்கினுன். உடனே அவ்வேடன், அரசனை வணங்கி நின்று, "எந்தையே! அரசர் பெருமானே! நாயிலும் கடைப்பட்டவனுகிய யான் இன்று இளைப்பாறும் பொருட்டு அந்த ஆலமரத்தின் அடியில் ஒருபக்கத்தில் வந்து நின்றேன்; நான் இவளைக் கொலை செய்தவன் அல்லேன்; கொன்றவரைக் கண்டவனும் அல்லேன்'' என்ருன். அதற்கு எதிர் நின்ற அமைச்சர்கள், "ஆயின், இவள் உடலிலே அம்பு தைத்து உருவியது எங்ஙனம்?'' என்று வினவினர். வேடன், "ஐய! இந் நிகழ்ச்சியை உண்மையாகவே நானென்றும் அறியேன்'' என்று கூறினுன்.

---

இதனை, "மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத், தானதனுக் கிடையூறு தன்னுல்தன் பரிசனத்தால், ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரால் உயிர்தம்மால், ஆனபயம் ஐந்துந் தீர்த்(து) அறங்காப்பான் அல்லனே?'' என வரும் திருத்தொண்டர் புராணச் செய்யுளால் அறியலாம்.

### அமைச்சர் வேடனைப் பலவாறு தண்டித்து உண்மை வினுதல்

அதுகேட்ட அமைச்சரும் பிறரும், "இவ்வேடன் இக் கொலையினைச் செய்தவன் யானல்லேன் என்று சொல்வதன்றி யான் செய்தேன் என்று உண்மை கூறும் தகுதியை உடையவனோ? இவன் கூறும் சொல் உண்மையாகுமோ? இவனை மிகத் தண்டித்தாலன்றி உண்மை சொல்லான்" என்று ஒருசேரக் கூறினர். அரசனும், "அப்படியே செய்யுங்கள்" என்று ஆணை தந்தான். தண்டிப்பவர்கள் வேடனைப் பலவாறு தண்டித்துக் கேட்டனர். குற்றமற்ற அவ்வேடன் முன்பு சொன்ன சொல்லினின்றும் சிறிதும் பிறழாமலே சொல்லி, "இன்னும் நன்ருக ஆராயுங்கள்" என்று கூறினுன், இதையன்றி அவன் வேறு யாது செய்ய வல்லன்?

### அரசன் அறநூலை ஆராயவேண்டும் என்றல்

அப்பொழுது பாண்டியன், "இவன் கடுந் தண்டத்திற்கும் சிறிதும் அஞ்சுகின்ருனில்லை; இவன் கூறுகின்ற மறுமொழியும் வேறுபாடின்றி ஒன்றேயாயுள்ளது; இவன் முகத்திலே சிறிதும் கொலைக்குறிப்புத் தோன்றப்பெற்றிலது; தனக்குப் பகைவரோ, அன்றி விலங்கோ, பறவையோ, வழியில்வந்த இப் பார்ப்பனியைக் கொல்லுதலால் இவனுக்கு வரும் பயன்யாது? இக் கொலையினைப் புரிந்தவர் இவ் வேடன்ருனே? அன்றிப் பிறரோ? யாரோ? அல்லது வேட்டை யாடுவோர் விலங்கினை எய்த குறிப்பினின்றும் தப்பிய அம்புதான் தைத்தலால் இவள் இறந்தனளோ? ஒன்றும் அறிந்திலேன்" என்று நினைத்து, "இன்னும் இஃது அறநூலால் ஆராய்ந்து தெளியத் தக்கது" என்ருன். உடனே அமைச்சர்கள் அவ் வறநூலை ஆராய்ந்து "அரசே! இது நூலாராய்ச்சியாலே தெளியத் தக்கதன்று; தெய்வத்தினுலே தெளியும் நெறியினை யுடையது" என்றனர். அதனைக்கேட்ட பாண்டியன் வேதியனை நோக்கி, "நான் இதனைத் தீர ஆராய்ந்து உனது மனக்கவலையை ஒழிப்பேன்; நீ சிறிதும் அஞ்சற்க! இப்போது உன் மனைவியின் ஈமக்கடனை முடித்துக்கொண்டு வருக" என்று போக்கிவிட்டு வேடனைச் சிறையிட்டான்.

**பாண்டியன் சோமசுந்தரக்கடவுளிடம் முறையிடுதல்**

பின்பு பாண்டியன், மனைவிக்குரிய ஈமக்கடன்களைச் செய்து முடித்துத் திரும்பிவந்த மறையோனைத் தன் அரண்மனை வாயிலிலே இருக்கச் செய்தான்;[1] தனது குடிக்கு ஒரு குல தெய்வமாக எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, "வெள்ளி மன்றினுள் ஆடும் மணியே! இவ் வேடன்தான் அப் பார்ப்பனியைக் கொன்றானோ? அல்லது பிறர் வேறு காரணத்தால் கொன்றதோ? இதனை அறநூல் களால் அளந்து அறிய முடியவில்லை; உமது திருவருளினாலே அடியேனது குறைவுதீரத் தெளிவித்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்தான்.

மன்றாடு மணியே!இம் மறவன்றான் பார்ப்பனியைக்
கொன்றானோ? பிறர்பிறிதாற் கொன்றதோ? இதுஅறநூல்
ஒன்றாலும் அளப்பரிதாக் கிடந்ததால்; உன்னருளால்
என்றாழ்வு கெடத்தேற்றாய் என்றிரந்தான் (அவ்வேலை).

அப்போது, ஆகாயத்தினின்றும், "பாண்டியனே! இத் திரு நகரத்தின் புறத்தே ஒருசார் செட்டித் தெருவிலுள்ள ஒரு வீட்டிலே இன்றிரவு திருமணம் நடைபெறும்; அங்கு அம் மறையவனோடு நீ ஒரு சேர வருவாயாக; உன் உள்ளம் தெளியாத மாறு பாட்டினையெல்லாம் தெளியும்படி செய்விப்போம்" என்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. அத் திருவாக்கினைக் கேட்டுப் பாண்டியன், தன் கடைவாயிலுள்ள அந்தணனோடும் ஒருங்கு கூடிப் பகற்பொழுது கழிந்து மாலைப் பொழுதின் இருளில், தான் வேறு வேடம்பூண்டு அக் கலியாண வீட்டிற்குச் சென்று ஒருவரும் அறியாமல் ஒரு பக்கத்தில் இனிதே இருந்தனன்.

**இயமதூதர்களின் பேச்சை அரசனும் அந்தணனும் கேட்டல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், அங்கே பாண்டியனும் மறையோனும் கேட்குமாறு, கூற்றுவனால் அனுப்பப்பட்ட எமதூதர் இருவர் உரையாடிக்கொண்

1. இங்கு, அந்தணன் ஆசௌசி ஆதலால், அரசன் அவனைத் தன்னுடன் சிவாலயத்திற்கு அழைத்துச்செல்லாது தன் அரண்மனை வாயிலில் இருக்கச் செய்தான் என்க.

டிருந்தது காதில் விழுந்தது. ஒருவன், "இன்றே இங்கு இம் மணமகன் உயிரைக் கொண்டு வரும்படி பெரிய எருமைக் கடாவாகிய மலையிலேறும் நம் தலைவன் கூறிய ஆணையால் இவனுயிரைக் கவர்வது எங்ஙனம்? இவன் உடலின்கண் ஒரு பிணியும் இல்லையே! ஒரு காரணமுமின்றி ஒருயிரைக் கொள்வது இயல்வதன்றே! இதற்கு யாது செய்வோம்" என்று வினவ, அதற்கு மற்றவன், "இன்றைப் பகலிலே ஆலமரத்தின் கண் முன்னரே சிக்கிக் கிடந்த அம்பினை அதன் கீழிருந்த பார்ப்பனிமீது காற்றினால் வீழ்த்தி எங்ஙனம் அவளுயிரைக் கவர்ந்தோமோ அவ்வாறே[1] இப்பொழுது புறத்தேநின்ற கன்றினையீன்ற பசுவினை இம் மணவிழாவின் ஆரவாரத்தினாலே கயிற்றை அறுத்துக்கொண்டு வெருண்டோடச் செய்து, இவனுயிரைக் கவர்வோமாக" என்றான். இம் மொழிகளைக் கேட்ட பாண்டியன், அந்தணனைப் பார்த்து "இந்த வார்த்தை யைக் கேட்டாயோ" என்றான். அதற்கு அம் மறையவன், "இம் மணமகன் இங்குக் கூறியபடியே இறந்தால் என் மனைவி இறந்ததும் அப்படியேதான். ஆகையால், இந் நிகழ்ச்சியைக் காண்பேன்" என்று கூறிப் பாண்டியனோடும் ஒரு சேர இருந்தனன்.

**மணமகன் பிணமகனாதல்**

மணமகன் இல்லத்தில் அவனது நெருங்கிய சுற்றத்தார் யாவரும் வந்து சேர்ந்து ஒல்லென்னும் ஒலியுடன் மணவினை

---

1. இங்கு இன்னும் எமதூதர், 'அயோத்தியில் இரகுவின் புதல்வனும் தசரதனின் தந்தையும் ஆகிய அசமகாராசன், விதர்ப்பநாட்டு மன்னனாகிய போசன் மகள் இந்துமதியை மணந்து வாழ்ந்துகொண்டிருக்கும் போது, ஒரு நாள் ஆகாயத்திலிருந்து நாரத முனிவர் வீணையில் அணிந்திருந்த பூமாலை காற்றினால் இந்துமதியின்மேல் விழ அவள் இறந்தனள். என்ற ஒரு பழங்கதையினையும் கூறியதாக, நம்பி திருவிளையாடல் கூறுகின்றது. இஃது இரகு வம்சம் என்ற நூலில் கண்டது. இதனை, "நன்னாள் மதியக் குடையோன் குலோத்துங்கன் நாகைவெற்பில், பொன்னாள் அயோத்தி யில்உண் டாயபா வம்புவ னத்துமுண்டோ, அந்நாளும் பெண் பழி கொண்டது மாலையென்(று) ஆருஞ் சொல்வார். இந்நாளும் பெண்பழி கொள்ளஇம் மாலை எதிர்ப்பட்டதே" என வரும் குலோத்துங்க சோழன் கோவைச் செய்யுளாலும் அறியலாம்.

யைத் தொடங்கினர். அப்போது பல இசைக் கருவிகள் ஒருங்குடன் பேரொலிகொண்டு முழங்கின. இங்ஙனம் முழங்கி எழுந்த ஓசையால் அங்குக் கட்டியிருந்த ஒரு பசு வெருண்டு அலறிக் கயிற்றை அறுத்துக்கொண்டோடி மணமகனை முட்டித் தள்ளியது. அவன் இறந்தான். [1]மணமகனே பிண மகனும், மணப் பறையே பிணப்பறையாயும், மங்கல மகளிரின் வாழ்த்தொலியே அழுகையொலியாயும் மாறி முடிய, கணப் பொழுதினுள்ளே பிறந்து இறக்கின்ற [2]இவ்வுடலினாலே பெறற் பாலதாகிய பயனை அறிவுடையவரே பெறுவர். அறிவு சிறிதும் இல்லாதவர்க்கு அப்பயன் எய்தல் சிறிதும் இல்லையாம்.

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறும்இக் காயத்தின் வரும்பயனை
உணர்வுடையார் பெறுவர்;உணர்(வு) ஒன்றுமிலார்க் கொன்றுமிலை.

மறையவன் அதனைக் கண்டு, "[3]என்ன காரியம் செய்து விட்டேன்!" என்று கூறி இரங்கித் தன் மனைவி இறந்ததனால் உண்டாகிய துன்பத்தினும் மிக்க துன்பத்தைக் கொண்டான். பாண்டியன், அவனோடு தனது மாளிகையை அடைந்து அமைச்சர்களுக்கும், ஏனையோர்க்கும் இதனைக் கூறினான்.

**பாண்டியன் யாவரையும் அன்புடன் அனுப்புவித்தல்**

பின்பு குலோத்துங்க பாண்டியன் அந்தணனை நோக்கி, "நீ இன்னும் ஒரு கலியாணம் செய்துகொள்வாயாக" என்று

---

1. இங்கு, "மன்றங் கறங்க மணப்பறை யாயின, அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை. ஒலித்தலும் உண்டாமென்(று) உய்ந்து போமாறே, வலிக்குமா மாண்டார் மனம்" எனவரும் நாலடியார்ச் செய்யுளின் பொருளும் கருதற்பாலது.

2. "மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம், ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக்காக அன்றோ" (சிவஞான சித்தியார்) எனவும், "பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" (அப்பர் தேவாரம்) எனவும் வருவனவற்றால் இங்கு உடலால் வரும் பயனை அறிக.

3. என்ன காரியம் செய்துவிட்டேன் என்றது குற்றமில்லாத வேடன்மேல் இவ்வடாத பழியைச் சுமத்தி அவனைத் தண்டிக்குமாறு செய்துவிட்டேனே என்று கழிந்ததற்கு இரங்கியதைக் குறிக்கும்.

அரிய பொருளை நிறையக் கொடுத்து, "செல்க" என்று விடை கொடுத்தனுப்பிவிட்டுச் சிறைச்சாலையின்கண் மனக் கவலையோடும் கிடந்த வேடனை விடுவித்து, அவனைத் தன் அருகில் அழைத்து, "உண்மை அறியாமல் யாம் செய்த தண்டத்தைப் பொறுத்துக்கொள்ளக் கடவாய்" என்று கூறி, அவன்மேல் அருள்சுரந்து அவனுக்கு வேண்டுவனவற்றை மிகவும் அளித்து அவன் இருப்பிடத்திற்குப் போக விடுத்தான்.

அதன்பின்பு, குலோத்துங்க பாண்டியன் திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருமுன் வணங்கி நின்று, "எம்பெருமானே! தேவரீர் பாவியேன்பொருட்டுப் [1] **பழியஞ்சுநாதராய் இருந்தீர்!** என் தந்தையாகிய உமக்கு நான் செய்யத் தக்க கைம்மாறு ஒன்று உளதோ?" என்று பேரன்போடு புகழ்ந்து பன்முறை துதித்து விசேட பூசை செய்வித்து, உலகினுக்கு ஓர் உயிராய் இருந்து அரசியற்றினன்.

செய்யுள் — 44

ஆகச் செய்யுள் — 1533

---

1. இங்கு, "ஓவமே யன்னாள் உயிர் விற்றுப் பெண்பழிகொள், பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே" என வரும் மதுரைக் கலம்பக அடிகள் கருதற்பாலன.

# 26. மா பாதகம் தீர்த்த படலம்

## தாயிடம் இன்பம் நுகர்ந்த தனயன்

குலோத்துங்க பாண்டியன் புவிமுழுதும் தனி அரசு புரிந்துவரும் நாளிலே, **அவந்தி நகரத்தில்** ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு மனைவி என்னும் பெயர் மட்டுங்கொண்டு மனைமாட்சி சிறிதுமின்றித் திருமகளும் இரதியும் மட்பாவையும் விரும்பத்தக்க ஒப்பற்ற அழகினைப்பெற்ற ஒருத்தி இருந்தாள். அவளிடத்து மகன் என்ற ஒரு கொடியபாவி பிறந்தான். அவன் கொலை முதலிய கொடிய பாவங்களாகிய சரக்குகளை ஏற்றிய மரக்கலம்போல் இளமை செழிக்க வளர்ந்து வந்தான். அவனுக்குப் பலகோடி மன்மதர்கள், பலகோடி விற்களை வளைத்துப் பலகோடி கொடிய [1]மலர்க்கணைகளைப் பூட்டிப் பலகோடி [2]விகாரங்களைக் கூட்டி எய்தார்களோ? யாம் அறியோம்.

கோடி கோடி அடுஞ்சிலை கோட்டியே
கோடி கோடி கொடுங்கணை பூட்டியே
கோடி கோடி விகாரமுங் கூட்டியே
கோடி கோடி அனங்கர்எய் தார்கொலோ?

மிக்க இளமைப் பருவமுடைய உடலைப் பெற்றவனாகிய அவன் கட்டுக்கடங்காத காமமும் வலிய தீவினையும் [3]நிறையாகிய கட்டினை விடுவித்து இழுத்தலால் தன்னைப் பெற்று வளர்த்த தாயினையே விரும்பினான். அன்னை ஆகிய அந்த

---

1. மலர்க்கணை - மலராகிய அம்பு; இது தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து மலர் அம்புகளாம்.

2. விகாரங்கள் - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்னும் அவத்தைகள். சுப்பிரயோகம் - சொல்லும் நினைவும் மாறுபடுதல்; விப்பிரயோகம் - பெருமூச்செறிந்து வருந்துதல்; சோகம் - வெதும்புதல், உண்பன தெவிட்டல்; மோகம் - வருந்துதல், சொற்பல பிதற்றல்; மரணம் - அயர்த்தல், மயங்கல். இவை முறையே தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து கணைகளால் வருவனவாகும்.

3. நிறை - இஃது ஆண் மகனுக்குரிய குணங்களில் ஒன்று; மனத்தை நன்னிலையில் நிறுத்தல்.

அழிதகையாளும் தன் உள்ளத்தில் இனிய உயிர்த்துணையாகவும், மனத்துக்குக் காவலாகவும் விளங்கிய [1] நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நால்வரும் விட்டு நீங்கப் பெற்றவளாய் அவன் விருப்பத்திற்கு இணங்கினாள்.

**காமம் அறிவினை அழித்தல்**

காமத்தால் வரும் இன்பமோ மிகச் சிறியது; அதனால் வரும் துன்பமோ கரையில்லாத கடல்போலப் பெரியது என்ற உண்மையினை அப் பாவியின் மூலம் யாவரும் அறிந்து கொள்ளும் வகையில், அவன் இக் கொடிய தீவினையால் வருந்து வானாயினான். காம மயக்கமாகிய (இராகு என்னும்) பாம்பு, அறிவாகிய மதியை (திங்களை) விழுங்கியது.

**தனயன் தந்தையைக் கொல்லுதல்**

அந்தக் கீழ்மகன் தாயினைக்கூடி ஒழுகும் செயலினை அவன் தந்தை குறிப்பால் அறிந்து பிறர் செவிப்படாவண்ணம் அதனை உள்ளத்தின்கண் அடக்கி ஒழுகினான்; மற்றொரு நாளில் வெளிப் படக் கண்டும் யாதொன்றும் கூறானாயினன். அப்பொழுது அவன் மகன் கோபங்கொண்டு, "எனது தந்தையைக் கொல் வேன்" என்று எதிர்ந்து எழுந்தான். அதனைக் கண்டு பெற்றவள். "நீ தாயினிடத்துக் காமவின்பத்தினை நுகர்ந்தாய்; இன்னும் தந்தையைக் கொன்றனையாயின் என்ன பயனை அடைவாய்" என்று கூறித் தடுத்தாள். அதற்கு அக் கொடியவன், "காமுகர்களுக்குத் தாயாலும் தந்தையாலும் என்ன பயன்? இனிய அருளைப் பெறின் என்ன பயன்? அறத் தைப்பெறின் என்ன பயன்?" என்றனன். காமமாகிய கள்ளை உண்டு அறிவிழந்த அப்பாவி, ஒரு மண் வெட்டியை எடுத்துத் தன் தந்தையை [2] ஐங்குரவருள் ஒருவன் என்றும் அறியாதவ னாய் அவனைத் துண்டுபட வெட்டிக் கொன்றான்.

---

1. நாணம் - தன் கணவனை அன்றி மற்றோரைக் காண நாணுதல்; மடம் - குரவர் உணர்த்தக்கொண்டு கொண்டதை வெளிவிடாமை; தன் கணவன் குணத்தையன்றி மற்றோர் குணத்தை அறியாமையுமாம். அச்சம் - தனித்திருத்தல் முதலியவற்றிற்கு அஞ்சுதல். பயிர்ப்பு-பயிலாத பொருளில் அருவருப்புக் கொள்ளுதல்.

2. ஐங்குரவர் - இவர் அரசன், ஆசான், தாய். தந்தை, தமையன் என்போர்.

**மாபாதகன் தன் பொருளையும் தாயையும் பறிகொடுத்தல்**

பிறகு அப் பாதகன் இரவின்கண் தன்னாற் கொல்லப்பட்ட தந்தையைத் தகனஞ் செய்துவிட்டுச் சுமக்கத் தகுந்த பொருளோடும் தன் தாயோடும் கற்கள் நிறைந்த காட்டின் வழியே நெடுந்தூரம் சென்றான். அப்பொழுது இடிபோன்ற சொல்லையும், கூரிய கணையைப் பூட்டிய வில்லையுங் கொண்ட ஆறலைக்கும் வேடர்கள் அவனைச் சூழ்ந்துகொண்டு, "செல்லாதே நில்" என்று நிறுத்தி, அவன் கையிலிருந்த பொருளினையும் தாம் பறித்துக் கொண்டு அப் பார்ப்பனியையும் கைக்கொண்டு போயினர்.

'தூர தேசத்தில் சென்று இடையூறின்றி வாழலாம்' என அவன் கருதிய எண்ணம் ஒன்று; அவனுக்கு நிகழ்ந்த செய்தி மற்றொன்று. "**நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது**" என்னும் பழமொழி இந்த மாபாதகனிடத்தே பலித்தது.

**மாபாதகன் பிரமகத்தியால் துன்புறுதல்**

வெட்டுண்டு இறந்த தந்தையானவன், "தாயை வேடர் கையிலே சிக்கவிட்ட தன் தனயனுக்குத் துணையாவர் இனி யாவர் என்று வருந்தித் துணை இழந்த இப்பொழுது யானே துணையாவேன்" என்று தொடர்பவனைப்போல **மாபாதக வடிவாய்** வந்து அவனைப் பற்றினான். அவ்வாறு பற்றிய கொலைப் பாவம் ஐயோ! என்று அலறும்; அழும்; சிவதா! என்று முறையிடும்; பாவம் கொலைப்பழி இத்தன்மையதோ! பாவம்! பாவம்! ஐயகோ என்று புலம்பும்; கையை அசைத்து நிலத்தில் மோதும்; உடம்பின் நிழல்போல் விடாது பின்பற்றும்; புண்ணிய தீர்த்தத்தினும், புண்ணிய தலத்தினும், பெரியோர் அருகிலும் செல்லவொட்டாது; சிவ சரிதமும், சிவ நாமமும் காதுகளில் புகவொட்டாது; ஒரு கால் புகினும் மனத்தில் புக விடாது; அவற்றை நாவினால் கூற விடாது; கண்ணுறங்க விடாது; முன்னும் பின்னும் சூழ்ந்து தன் கொய்சகத்தைப் பிடித்து நின்று இழுக்கா நிற்கும். இப்படியே மாபாதகத்தினால் அலைந்து, "இனி என் செய்வேன்; இனி என் செய்வேன்" என்று கருதிப் பெருந்துன்பமுற்றுப் பன்னெடுநாள் தனியே உலகெங்கும் திரிந்து அஞ்சி வருந்தினான்.

**மாபாதகன் மதுரையை அணுகுதல்**

உலகின்கண் கண்டோர் அனைவரும் வருந்துமாறு திரியா நின்ற மாபாதகன் தனது வலிமுழுதும் குறைந்தவனுய்ச் சிவ பெருமானுடைய திருவருட் செயலினல் அக் கொலைப்பாவம் குறுகி நீங்கு நாள் அணுக மதுரைப்பதியை அணுகினன்.

**அம்மையப்பர் வேடுவனும் வேடுவச்சியுமாக வருதல்**

அப்போது அங்கயற்கண் அம்மையார் தந்தத்தாலாகிய குழைகளை இரு செவிகளிலும், புலிப் பல்லாகிய தாலிகோத்த மங்கல நாணைக் கழுத்திலும் தரித்த ஒரு வேடுவிச்சி யாகவும், சோமசுந்தரக் கடவுள் வேங்கை மலரைச் சிரசிலும், கலை மானின் இரு கொம்பைப்போல் வளைந்து காதுவரையில் சென்ற மீசையினை முகத்திலும், பெரிய வில்லை நீண்ட கையிலும் கொண்ட வேடுவனகவும் திருவுருக்கொண்டு மேகங்கள் தவழும் திருக்கோபுர வாயிலின் பக்கத்தில் வந்திருந்தனர். அங்குப் பனங்கருக்குப்போன்ற வாயினையுடைய நாய்கள் சிறிதும் அவர்களை விட்டு நீங்காது காவல் புரியவும், அம்பும் வில்லும் ஒருபுறத்தில் கிடந்து விளங்கவும் இறைவனகிய வேடுவன் இறைவியாகிய வேடுவச்சியோடும் சூதாடிக்கொண்டிருந்தார்.

**இறைவன் இறைவிக்குக் காமக்கேட்டைக் கூறுதல்**

[1] **வேழமுண்ட விளாங்கனிபோலச்** சிறிதும் உள்ளீடு இல்லாத வனுய்த் துன்பத்துடன் அங்கே வருகின்ற மாபாதகனது வருகையைச்சோமசுந்தரக்கடவுள் கண்டு இறைவியை நோக்கி, "ஒருவரும் மனத்தாலும் நினைத்தற்கரிய கொடிய பாதகன் வருவதைக் காண்பாயாக; யாவர்க்கும் காம நோயை உண் டாக்கும் மாரனலே அலைப்புண்டு உயிர் சோர்ந்தவர்களின் உள்ளங்கள், செல்லுதற்குரிய இடத்தினை அறிந்து சென்று சேரா; குணமும், குலமும், ஒழுக்கமுங் குறைதலையும் கொலை யும் பழிபாவங்களும் உண்டாதலையும் பார்க்கமாட்டா; தம் உயி

---

1. வேழம் - விளங்கனிக்கு வருவதோர் நோய். அஃது இளநீர்க்குத் தேரை என்னும் நோய்போல விளங்கனியை உள்ளீடில்லாததாகச் செய்வது. இது வேழம் என்னும் பெயர் ஒற்றுமையால் 'வேழமுண்ட விளாங்கனி என்று வழங்கலாயிற்று.

ருக்கும் அவ்விடத்தே அழிவு வருதலேயும் எண்ணமாட்டா; கள்ளுண்டலும் காமமும் அறிவைக் கெடுக்கும்; அவற்றுள்ளே [1] காமமானது நினைக்கினும், காணினும், கேட்கினும் விஷம் தலைக்கேறியதுபோல அப்பொழுதே அறிவைக் கெடுத்து விடும்; கள்ளோ அவ்வாறு கெடுக்காது; உண்டபொழுதில் மட்டுமே அறிவைக் கெடுக்கும். காமமே கொலைகளுக் கெல்லாம் காரணம்; கண்ணோட்டமில்லாத காமமே களவு களுக்கெல்லாம் காரணம்; கூற்றுவனும் அஞ்சும் காமமே கள்ளுண்டலுக்கும் காரணம்; ஆதலால் காமமே நரகபூமியைக் காணியாட்சியாகக் கொடுக்க வல்லதாகும்" என்று கூறி யருளினர்.

காமமே கொலைகட் கெல்லாங் காரணம்; கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணம்; கூற்றம் அஞ்சும்
காமமே கள்ளுண் டற்குங் காரணம்; ஆத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

**இறைவன் மாபாதகனுக்குப் பிரமபழி நீங்கும் வழி கூறல்**

கொலைப் பாவத்தால் பெருந்துயருழந்து அங்கு வந்த கொடியபாதகனுடையமுகத்தைச் சிவபெருமானாகிய வேடுவன் நோக்கி, "ஏடா பார்ப்பானே! நீ துன்பத்தால் அலைப்புண்டு வருந்தி வாடுவது என்னை" என்று வினவியருளினர். திங்கள் வேணியினையுடைய வேடனாகிய சிவபெருமானின் திருவருட் பார்வை சிறிது தலைப்படப் பாவந்தீர்ந்து தனது முன்னை உணர்வு தோன்ற, அவன் முற்பிறப்பிற் செய்த பாவ முதிர்ச்சியாலே பிறந்து தாயைக்கூடியதையும், அது காரணமாகத் தந்தையைக் கொன்றதையும், பின்னாளில் அக் கொலைப் பாவம் பிரமகத்தி வடிவமாக வந்து பிடித்து வருத்த எங்கும் திரிந்து அது நீங்கப் பெறாமல் இப் பதி வந்தடைந்ததையும் எடுத்துக் கூறி அழுது கொண்டு நின்றான். வேட்டுவ வடிவங்கொண்டு அகத்தில் அருள்

1. இங்கு "உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும், கள்ளுக்கில் காமத்திற்(கு) உண்டு" (திருக்குறள்) எனவும். "உள்ளினும் சுட்டிடும் உணருங் கேள்வியில், கொள்ளினுஞ் சுட்டிடுங் குறுகி மற்றதைத். தள்ளி னுஞ் சுட்டிடுந் தன்மை ஈதினால், கள்ளினும் கொடியது காமத் தீயதே" (கந்த புராணம்) எனவும் வருவன சிந்திக்கற்பாலன.

சுரந்துநின்ற கருணை மூர்த்தி அப்பாவியையநோக்கி, "இப்பாவம் எங்கே போனாலும் இப்பதியிலன்றி நீங்காது; உனது பெயரைக் கூறினவரின் மரபிலுள்ளோரும் நரகத்தினை அடையுமாறு கொடிய பாவத்தை நீ அறிந்து செய்துள்ளாய்; இதனைப்போக்க வல்லவர் யாவர்? நாம் உன்மீது திருவருள்நோக்கஞ் செய்தமையால் இப் பாவம் எளிதினில் நீங்கும் வண்ணம் கூறுகின்றோம்: கையினில் பிச்சை ஏற்று ஒருபொழுது மட்டும் உண்பாய்; சிவனடியார்களுக்குக் குற்றேவல் செய்வாய்; சூரியன் உதிக்கு முன்னே நித்திரைவிட்டு எழுந்து பசிய அறுகம் புல்லைக் கொய்து, பசுக்களுக்குக் கொடுக்கக் கடவாய்; நாடோறும் முக்காலத்தினும் திருக்கோயில் புறத்தொட்டித் தீர்த்தத்திலே நீராடிச் சிவபெருமானை நூற்றெட்டு முறை அங்கப் பிரதட்சணம் செய்யக்கடவாய்;[1] இத்தவ நெறியில் நின்றால் இக் கொலைப்பழி நீங்கும்" என்று கூறியருளினர்.

**அழியக்கடவோனைக் காத்தலே பாதுகாப்பு**

அதுகேட்ட வேட்டுவிச்சியாகிய மீனாட்சியம்மையார் சிவபெருமானை நோக்கி, "எம்பெருமானே! இக்கொடியவன், தான்செய்த பாவத்திற்கு அளவிறந்தகாலம் வரையும் இருபத்தெட்டுக்கோடி நரகத்தில் விழுந்தாலுமினும் உய்யும் வகையில்லாத பாவியாவான்; இவனுக்கு உய்யும் வகையினை அருளிச் செய்தல் என்னை?" என்று வினவினர். அதற்குச் சிவபெருமான், "கொல்லும் பெரும்பழிக்கு அஞ்சாத புலையராயினும், அவரும் நினைத்தால் அச்சமுண்டாக்கும் கொடும் பழியினை அஞ்சாதுசெய்த மாபாதகத்தால்கட்டப்பட்டு எங்கும் தீரும் வகையில்லாமல் வேறு பற்றுக்கோடும் இன்றி அழியக் கடவோனைக் காப்பதல்லவா பாதுகாப்பாகும்" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

அடுபழி அஞ்சா நீச ராயினும் நினைக்கின் அச்சம்
படுபழி அஞ்சான் செய்த பாதகத் தொடக்குண்(டு) எங்கும்

---

1. இவற்றுடன், மெய்ம்முழுதும் விபூதியணிந்து திருவைந்தெழுத்தினைச் செபிக்க; காயத்திரியை ஆயிரத்தெட்டு முறை உச்சரிக்க; உருத்திர மந்திரத்தை நாளும் அத்தியயனம் செய்க என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணங் கூறும்.

விடுவகை இன்றி வேறு களைகணும் இன்றி வீயக்
கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணை மூர்த்தி.

**உமாதேவியார் இறைவரைப் புகழ்தல்**

அப்போது அங்கயற்கண்ணி யம்மையார் சிவபெருமானை நோக்கி, "நீர் யாதொன்று [1]செய்தற்கும், செய்யாமைக்கும், வேறொன்று செய்தற்கும் உண்மையான ஆற்றலுடைய கருணை வள்ளல்; நீர் விரும்பினால் எத்தகைய கொடிய பாவிகளும் உய்யுமாறு செய்தல் உமது அருள் விளையாட்டன்றோ" என்று மனக் களிப்பு மீதூர விண்ணப்பஞ் செய்தருளினார். உடனே வேட்டுவ வடிவங்கொண்ட சோமசுந்தரக்கடவுள் மறைந்தருளினார். மேகம் மறைய உடன் மறைந்து செல்லும் மின்னல் போல விடாது பின் செல்லும் மீனாட்சி யம்மையாரும் மறைந்தருளினார்.

**மாபாதகன் சிவப்பேறு அடைதல்**

கொடிய பாதகனை பார்ப்பானும் அதனைக்கண்டு பெருவியப்புக் கொண்டான்; மதுரை நாயகன் கூறி யருளிய வண்ணமே நன்னெறிக்கேதுவாகிய விரதச்செயலையும், தவஒழுக்கத்தையும் மேற்கொண்டு செய்து மூன்றுமாதத்திலே மாபாதகம் முற்றும் நீங்கித் தெய்வத்தன்மை பொருந்திய பிராமண வடிவம் பெற்றான்; சொல்லின் எல்லையைக் கடந்த சோமசுந்தரக்கடவுளின் திருவடியிலே பற்பலவடமொழியாலாகிய பாமாலைகளைப் பத்தியுடன் தொடுத்துச் சாத்திப் பணிந்து வணங்கினான்; பின்பு சச்சிதானந்த வடிவாகிய சோமசுந்தரக்கடவுளின் அழகிய திருவடியின்கண்ணே கலந்தனன்.

**புறத்தொட்டித் தீர்த்தப் பெருமை**

தாயிடம் காமவின்பம் நுகர்ந்து தந்தையும் குரவனுமாகிய அந்தணனையும் கொன்ற மாபாதகத்தையும் போக்கி வீடு பேற்

---

1. இங்குச் செய்தல், செய்யாமை, வேறொன்று செய்தல் என்பன முறையே கர்த்திருத்துவம், அகர்த்திருத்துவம், அந்நியதா கர்த்திருத்துவம் என்று சொல்லப்படும் இறைமைக் குணங்களாம். கர்த்திருத்துவம் - தாமே நேரில் ஒன்றைச் செய்தல். அகர்த்திருத்துவம் - வேறு முன்னிலையாகச் செய்தல். அந்நியதா கர்த்திருத்துவம் - ஒன்றை மற்றொன்றாகச் செய்தல்.

றினைப் [1]**புறத்தொட்டித் தீர்த்தம்** அளித்தது என்றால் பின் நீரிழிவு, குட்டம், பெருவயிறு, ஈளை, (இருமல், கபநோய்), வெப்பு முதலாகிய இந் நோய்களைத் தீர்க்கும் தீர்த்தம் [2] என்று கூறுவதோ இதற்கு மேன்மை ஆகும்! நிலையழிந்த வேதியனது மாபாதகத்தைப்போக்கியதை அறிந்து, குலோத்துங்க பாண்டியனும், அமைச்சர்களும், பாண்டியநாட்டு மக்களும், பிறநாட்டினரும், தேவர்களும் ஆச்சரியமடைந்து, "உரையுணர்வு கடந்தபெரிய திருவருளை இக்கயவன்மீது வைத்தருளியகாரணம் யாதோ?" என்று கண்களினின்றும் ஆனந்த அருவி பொழிய, நான்மாடக்கூடல் நாயகனாகிய சோமசுந்தரக்கடவுளைத் துதித்துப் பேரானந்தப் பெருங்கடலில் மூழ்கினார்கள்.

செய்யுள் — 41

ஆகச் செய்யுள் — 1574

———

1. புறத்தொட்டித் தீர்த்தம் - இது புறத்தொட்டி நிருமாலியத் தீர்த்தம் எனவும் பெயர் பெறும். இத் தீர்த்தம் சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளிய இரண்டாவது பிரகாரத்தின் வடக்குப் பகுதியில் கரிய மாணிக்கப் பெருமாள் திருக்கோயிலுக்கு எதிர்ப்புறம் அமைந்துள்ளது. இது சொக்கலிங்கப் பெருமானுக்கு அபிஷேகமாகிய தீர்த்தம் விழும் இரண்டாவது தொட்டி ஆகும்.

2. இன்னும் இத்தீர்த்தம் போக்கும் வியாதி முதலியவற்றைக் கடம்ப வன புராணம் - இலீலா சங்கிரக வத்தியாயம் - புறத்தொட்டி நின்மாலிய தீர்த்தம் அகற்றும் நரக சேடானுபவ வியாதிகள் (94—152 செய்யுட்கள்) என்ற பகுதியில் விரிவாய்க் காணலாம்.

## 27. அங்கம் வெட்டின படலம்

**வாளாசிரியனும் நன்றிமறந்த சித்தனும்**

குலோத்துங்க பாண்டியன் உலகைப் பாதுகாத்து ஆட்சி புரியும் காலத்திலே அயல்நாட்டைச்சார்ந்த முதிர்ந்த வயதுடை யான் ஒருவன் மதுரைத் திருநகரில் வந்து குடியேறி, வாட்போர் வித்தையினைக் கற்பித்து வாழ்ந்து வந்தான். அவன் சோம சுந்தரக்கடவுளை நாடோறும் இடையறாத அன்பும் தானுமாகச் சென்று வணங்கி வழிபடலால் வினையின் வலியை வெல்லும் பேரறிவுடையனாகும். வாளினைக் கைக்கொண்டு போர்புரியும் வித்தையில் சிறந்த அம் முதியோனைப் பல இளைஞர்கள் அடைந்து வணங்கி வாள் வித்தை பயின்று வந்தனர். வாள் வித்தை பயிலும் ஆண் சிங்கத்தை ஒத்த மாணவர் பலருள்ளே உய்யும் வகையறியாத பாவியாகிய **சித்தன்** என்ற ஒருவன் இருந்தான். அவன் ஆகூழின் வலியினால் அவ்வாள் வித்தையை நன்கு பயின்று சிறந்து விளங்கினான். அதனால் அவன் தன்னைப் பலரும் நன்கு மதித்தலை அறிந்து மிகச் செருக்குக்கொண்டான். அன்றியும், தன்னாசிரியனுக்கு மாறாய்த் தானும் ஒரு வித் தைக் கூடமும் (சிலம்பக் கூடமும்) அமைத்தான். பலரும் வந்து அவனிடம் வாள் வித்தை பயின்றனர். அப்போது அவன் தன்னாசிரியனைக்காட்டிலும் அதிகமாகிய ஊதியத்தைப் பெறுவானாயினான்.

**சித்தன் தன்னாசிரியன் மனைவியை விரும்புதல்**

சித்தன் தானொருவனே இருவரின் வாள்வித்தைபயிற்றலால் வரும்வருவாயையும்ஒருசேரஅடையும்கருத்தினையுடையவனாய், அவ்வாசிரியனை அவ்வூரினின்றும் வெளியேற்ற எண்ணின்; அவ னிடத்தே வாட்போர் பயிலும் மாணாக்கர்களைத் தன்னிடம் பயில வருமாறு மனந்திரித்து நாடோறும் அவனுக்கு இடை யூறே செய்வானாயினான். தாயினிடம் இன்பம் நுகர்ந்த மாபாதகனுக்கு இளையான்போல்வானாகிய சித்தன் அத்துடன் நில்லாமல் பொறுமையிலே நிலத்தினை ஒத்த அவ்வாசிரியன் இல் லாதபொழுது அவனுடைய மனைவியிடத்தே சென்று, "இடன் உண்டோ, இடன் உண்டோ" என்று அடுத்தடுத்துச் சிறிதும்

அஞ்சாது கேட்டுக் கேட்டு நீங்க, அவள் ஒன்றும் பேசாது சும்மா இருந்தாள். சித்தன் மற்றொரு நாட் சென்று அவள் கையினைப்பிடித்து இழுத்தனன்; மனமாகிய காவலையுடைய அவள் அவனை வெளியேதள்ளிக் கதவினைச்சாத்தித் தாழிட்டுத் தனது கற்புநிலையைக் காத்துக்கொண்டனள். அப்பொழுது தன் எண்ணம் தவறிய சித்தன் காமத்தீ வெதுப்பப் போயினன். பாவிகள் எல்லாருள்ளும் பெருங் கொடும்பாவியாகிய சித்தன் செய்த இழி செயலை அறக்கற்பினையுடைய அப்பெண்ணனவள் தன் கணவனுக்குத் தெரிவியாது உள்ளத்தின்கண் அடக்கிக்கொண்டு உயிர்கள்தோறும் நிறைந்துள்ள நான்மாடக் கூடலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுளை நினைந்து வருந்தினள்.

**சோமசுந்தரக்கடவுள் சித்தனைப் போருக்கழைத்தல்**

கொன்றை மலர் மாலையை அணிந்த சடையினை யுடையவனும் வேற்றுநாட்டில் செய்த மாபாதகத்தையும் தொலைத்த மதுரைப் பெருமானும், பக்குவமான உயிர்களுக்கும் தானே உணர்த்தும் புண்ணிய வடிவினனுமாகிய சோமசுந்தரக்கடவுள் நீசனாகிய சித்தன் செய்த தீங்கினை மனத்திலுணர்ந்து அவனைத் தண்டிக்கத் திருவுளங்கொண்டு, வாள் வித்தை பயிற்றும் அவ்வாசிரியனைப்போலத் திருவுருவந்தாங்கிச் சித்தனிடம் சென்று, "சித்தா! காளையாகிய நீயும், மிகுந்த மூப்படைந்த யாமும் வாட்போர் புரிந்து நம் தம் வலிமைகளை அளந்தறிவோம்; நாளைக்கு நீ நகரின் புறத்தே வருக; நாமும் வருவோம்" என்று கூறியருளினார். அதற்குச் சித்தன் மகிழ்ந்து, 'நல்லது' என்று மகிழ்ந்து அதனுக்கு உடன்பட்டான்.

வாளாசிரியர் வடிவந்தாங்கிய சோமசுந்தரக்கடவுள் சித்தனிடமிருந்து மீண்டுபோகும்பொழுது உலகமானது நிறைந்த இருள்வெள்ளத்தில் முழுகும்படி சூரியன் மேற்குக்கடலில் மூழ்கினன் பிறகு, குற்றமற்ற குரவனுக்குத் துன்பஞ்செய்த சித்தனுடைய பாவச் செறிவுபோலக் கரிய இருள்நிறைந்த இரவின் வலிமை கெடுமாறு வாளாசிரியனாகிய இறைவன் அச்சித்தனுடைய உடலைச் சிதைப்பதற்குத் தீட்டுகின்ற வாட்படை போலக் கதிரவன் கிழக்கு மலையிலே தோன்றினன்.

ஆசில்நன் குரவற்(கு) இன்னா
ஆற்றினேன் பாவம் போல
மாசிருள் திணிந்த கங்குல்
வலிகெட வடிவாள் விஞ்சைத்
தேசிகன் ஒருவன் அன்னான்
திணியுடல் சிதைப்பத் தீட்டுங்
காய்சின வாள்போற் கீழைக்
கல்லிடை முளைத்தான் வெய்யோன்.

செய்ந்நன்றி கொன்றவனாகிய சித்தன் சிவபெருமான் ஆணைக்குட்பட்ட துர்க்கையையும் வாட்படையையும் வழிபட்டுத் துதித்துக் கச்சினை இறுக்கிக்கட்டி வாளையும், கேடகத்தையும் கையிலேந்திச் சென்று வாளாசிரியர் சொல்லிய போர்க்களத்தை அடைந்தான். முதிய கடிய புலியேற்றினை ஒத்த வளைந்த உடலையுடைய இறைவனாகிய ஆசிரியனும், வீரக் கழலையணிந்து கச்சினையுங்கட்டித் திருவெண்ணீறு தரித்து வாளையும் கேடகத்தையும் கையில் தாங்கிக்கொண்டு அக் கீழ்மகனாகிய சித்தனுக்கு எதிரே வந்தனன்.

**இறைவனாகிய வாளாசிரியனும் சித்தனும் போர்புரிதல்**

ஆண் சிங்கம் ஒன்றும் நரி ஒன்றும் எதிர்த்துப் போர் புரிந்தாற்போல வெள்ளிய பிறையும், மூன்று கண்களும், நான்கு திருத்தோள்களும், நஞ்சக்கறை விளங்கும் திருமிடறுமாகிய இவற்றைத் தோன்றாது மறைத்து வந்த முதிய வாளாசிரியனாகிய இறைவனும், சித்தனும் எதிர்த்துப் போரினைச் செய்யத் தொடங்கினர். இருவரும் ஒருவரை ஒருவர் எதிர்ப்பர்; பின் செல்லுவர்; மீளவும் எதிர்சென்று மேலெழுந்து இடிபோல முழங்குவர் ; கேடகத்துள்ளே பதுங்கி மறைவர் ; பின்பு வெளித் தோன்றுவர் ; ஏந்திய வாளை அசைப்பர் ; இடசாரி வலசாரியாகச் சென்று வாளை வீசி வெட்டுவர்; அவ் வெட்டினை விலக்கித் திரும்புவர் ; வெகுள்வர் ; நகைப்பர் ; வீர வாதம் பேசுவர் ; சாரிகைமாறி எதிர்ப்பர் ; புறங்காட்டிச் செல்வார் போலப் போவர் ; சுழன்று போருக்கு அழைத்துத் திரும்புவர் ; வாள்வெட்டினைத் தம்மார்பில் ஏற்பர்; தாம் கொண்ட குறியின்

நெறிதவற நிற்பர். இவ்வாறு இருபது நாழிகை வரையும் நின்று இருவரும் போர்புரிந்தனர்.

**இறைவன் சித்தனுடைய அங்கங்களை வெட்டுதல்**

அப்பொழுது வாளாசிரியனாகிய சிவபெருமான், போரினைக் காண்போர் அனைவரும் கேட்குமாறு, "உன் குரு பத்தினியை விரும்பிய உள்ளத்தையும், அவளை நோக்கித் தகாத மொழிகளைப் பேசிய நாவினையும், தொட்ட கையையும், விரும்பி நோக்கிய கண்களையும் காத்துக்கொள்வாய் காத்துக்கொள்வாய்" என்று சொல்லிச் சொல்லி அவ்வங்கங்களையெல்லாம் வெட்டி வெட்டி எறிந்து இறுதியிலே தலையினையும் வெட்டிக் கீழே வீழ்த்திவிட்டு மறைந்தருளினர்.[1]

"குரத்தியை நினைத்த நெஞ்சைக்
குறித்துரை நாவைத் தொட்ட
கரத்தினைப் பார்த்த கண்ணைக்
காத்தனை கோடி" என்றென்(று)
உரைத்துரைத்(து) அவற்றுக் கெல்லாம்
உறுமுறை தண்டஞ் செய்து
சிரத்தினைத் தடிந்து வீட்டித்
திருவுரு மறைந்து நின்றான்.

**சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை யாவரும் அறிதல்**

அப்போர்க்களத்தில் பார்த்துக்கொண்டு நின்றவர்களுள்ளே வாள்வித்தைபயிலும் மாணவர்கள் தமது முதியஆசிரி

1. இங்கு, "ஒரு தனி அடியாற்கு உதவுதல் வேண்டி, மண்ணவர் காண வட்டணை வாளெடுத்(து), ஆதி சாரணை அடர்நிலைப் பார்வை, வாளுடன் நெருக்கல் மார்பொடு முனைத்தல், பற்றிநின் றடர்த்தல் உட்கையின் முறித்தல், ஆனனத் தொட்டல், அணிமயிர்ப் புரோகம், உட்கலந்(து) எடுத்தல் ஓசிந்திடம் அழைத்தல், கையொடு கட்டல் கடிந்துள் அழைத்தலென்(று), இவ்வகை பிறவும் எதிரமர் ஏறி, அவன் பகை முறிந்த அருட்பெருங் கடவுள்" எனவரும் கல்லாட அடிகளும், "இருவருக்குங் காண்பரிய ஈசர்மது ரேசனார், விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனர்காண் அம்மானை, விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே யாமாகில், அருமையுடம்(பு) ஒன்றிரு கூ(று) ஆவதேன்? அம்மானை, ஆனாலுங் காயமிலை ஐபரவர்க்(கு) அம்மானை" என வரும் மதுரைக் கலம்பகச் செய்யுளும் சிந்திக்கற்பாலன.

யனைக் காணாது வீட்டிற்குச் சென்று தேடி, ஆசிரியரின் கற்பிற் சிறந்த மனைவியை நோக்கி, "ஆசிரியர் எங்குச் சென்றுள்ளார்?" என்று வினவினர். அவள், "திருக்கோவிலுக்குச் சென்றனர்" என்று கூறினாள். என்ற அப்பொழுதே கோயிலுக்குச் சென்ற குரவனும் திரும்பி வந்தனன். மாணவர்கள் குரவனை நோக்கி, "நீர் போர்க்களத்திலே சித்தனோடு போர்புரிந்து அவனுடைய அங்கங்களை வெட்டி வெற்றிபெற்றீரே! பின்பு யாங்கள் உம்மை அங்கு எங்கும் தேடிக் காணாமல் இங்கு வந்தோம்; எங்குப் போனீர்?" என்றார்கள். அதனைக் கேட்ட ஆசிரியன் வியப்புற்று, "யான் சித்தனுடைய உடலை வெட்டினேனல்லேன்; நீங்கள் இங்ஙனம் கூறுவது என்னை? என்போல் வந்து போர்புரிந்து சித்தனைக் கொன்றவர் யாவரோ? 'இது மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவுளச் செயலோ?" என்று கூறினான். அப்போது ஆசிரியன் மனைவியும் தன்னைச் சித்தன் நெருங்கி வந்து பலமுறையும், 'இடன் உண்டோ' என்று கேட்டதையும், நேற்று வந்து தன் கையைப் பிடித்து இழுத்ததையும், மனம் நொந்து அவனை வெளியில் தள்ளிக் கதவைத் தாழிட்டுக் கொண்டிருந்ததையும் கூறினாள். அதுகேட்ட மாணாக்கர்கள், "சித்தனை வாள் வீரர் கொல்லும்பொழுது இவ்வம்மையார் சொல்லியபடியெல்லாம் சொல்லியே கொன்றார்; இஃது உண்மையாம்" என்றார்கள். அப்போது ஆசிரியன், "இஃது எம்மை ஆண்டருளும் சோம சுந்தரக் கடவுளின் திருவிளையாடலே" என்று சொல்லிக் கொண்டு தன் மனைவியோடும், வாள் வித்தை பயிலும் மாணாக்கர்களோடும் விரைந்து திருக்கோயிலை அடைந்து சோம சுந்தரக் கடவுளை வணங்கி, "எம்பெருமானே! திருமாலாலும், பிரமனாலும் அறியப்படாத உமது திருவிளையாடலை அறிவிலியாகிய அடியனேன் அறியும் அளவினதோ? தேவரீர் அருள் விளையாட்டை என்னென்பேன்!" என்று துதித்தான்.

**பாண்டியன் வாளாசிரியனுதியோரைச் சிறப்பித்தல்**

திங்கள் மரபில் வந்து தோன்றிய குலோத்துங்க பாண்டியனும், மதுரை நகரத்துள்ளோரும் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை நோக்கி ஆனந்தக் கண்ணீர் வெள்ளத்தாழ்ந்து

எம்பெருமானின் திருவடிகளை வணங்கி இசைப் பாட்டுக்களைப் பாடி ஆனந்தக் கூத்தாடித் துதித்து நின்றார்கள். குலோத் துங்க பாண்டியன், "அடியவருக்கு எளியவராகிய இச் சோம சுந்தரக்கடவுள் **பரதேசி காவலர்**" என்று கூறி அவர் திருவடி களில் வீழ்ந்து வணங்கித் துதித்து, வாளாசிரியனையும் அவன் மனைவியாகிய **மாணிக்கமாலையையும்** யானையின்மேலேற்றி நகர் வலம் செய்வித்துச் சிறப்பித்தான்.

**குலோத்துங்க பாண்டியன் சிவகதி அடைதல்**

பிறகு குலோத்துங்க பாண்டியன் தன் புதல்வனாகிய **அனந்த குண பாண்டியனுக்கு** முடி சூட்டித் தன்னரசை அவனிடத்து ஒப்பு வித்தான்; நிலையுள்ள பொருள் இதுவெனவும், நிலையில்லாத பொருள் இதுவெனவும் உணர்ந்து நிலையற்ற பொருள்களின் மேலிருந்த பற்று முழுதும் விடுத்து, ஐம்புலன்களின் நெறியி னின்றும் நீங்கித் திருவருளின் வழியே சென்று தன்னைப் பதிந்து நின்ற ஆணவ மல வலி விட்டுஅகல இராகு உமிழ்ந்த சந்திரனைப்போல் விளங்கிச் சிவபெருமானுடைய திருவடி நிழலைப் பிரியாத பேரின்ப வீட்டினை அடைந்தான்.

செய்யுள்—28

ஆகச் செய்யுள்—1602

---

1. பரதேசி - வேற்று நாட்டவன்; இங்கு வாளாசிரியன். வேறு ஆதரவு இன்றி இருந்த வாளாசிரியனை இறைவன் பாதுகாத்தமையால் 'பரதேசி காவலர்' எனப் பெயர் பெற்றார்.

# 28. நாகமெய்த படலம்

### அனந்தகுண பாண்டியனின் சிவநேயம்

குற்றமற்ற பண்புடைய **அனந்தகுண பாண்டியன்** முழுமுதற் கடவுளாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவைந்தெழுத்து, விபூதி, உருத்திராட்சம் என்னும் இம் மூன்றுமே **மெய்ப் பொருள்** என்று தெளிந்து, அவற்றினிடம் அளவிறந்த பத்திமை பூண்டு தன் தந்தை முதலாகிய அரசர்களினும் மிகச் சிறந்து விளங்கினான். '**மன்னவனெப்படி மன்னுயிரப்படி**' ஆதலாலே, மன்னனிடம் தோன்றிய சிவபத்தி அவன் நாட்டு மக்களிடமும் பெருகியது; அங்கு அறியாமையாகிய அக இருளும், புற இருளும் நீங்கித் திருவைந்தெழுத்து ஒலியும், திருவெண்ணீற்று ஒளியும் எங்கும் பரவின. பாண்டி நாடு சிவபெருமானின் திருவேடம்போல் பொலிந்து விளங்கியது.

### சமணர்களின் சூழ்ச்சி

இங்ஙனம் பாண்டிநாடு சிவநேயமுற்றுத் திகழ்வதை, இருள்நிறைந்த உள்ளத்தினையுடையவராகிய சமண குரவர் எண்ணாயிரவரும் அறிந்து சினந்து, 'நெருப்பிற் காய்ச்சிய இரும்புபோல' மானமாகிய நெருப்புச் சுடப் பொறாமை கொண்டு பாண்டியனைக் கொல்ல வகை தேடினர்; ஒரு காத அளவு அளந்து வேள்விச் சாலை ஒன்று அமைப்பித்து, அதில் தீ வளர்க்கும் வேள்விக் குண்டமும் தோண்டித் தீயினை அதிலிட்டுப் புகை எட்டுத்திசைகளிலும் பரவவும், விண்மீன்கள் பொரிந்து பொரிபோல் சிந்தவும், வானுலகத்தைத்தாவி முட்டவும் நெருப்பினை எழுப்பி மூட்டினார்கள். அவ்வேள்விக் குண்டத்திலிருந்து பிலத்தினின்றும் எழுகின்றவனைப்போல், படமுடைய இருள் தங்கிய வாயினையும், வாயினிருபக்கங்களில் பிறைச் சந்திரன்போன்று முளைத்த நச்சுப் பற்களையும், ஊழித் தீயை உமிழும் கண்களையுங் கொண்டு ஒரு மலை அசைந்து வந்தாற் போல ஒரு அவுணன் எழுந்து வெளிவந்தான். அங்ஙனம் வந்த அவுணன் வெகுண்டெழுந்து அமணர்களை நோக்கி, "வடவைத் தீயைப்போல வருத்துகின்ற பசியும், நீர்வேட்கையும் மிகக்

கொடியன; நீவிர் எனக்கு இடும் பணி யாது?" என்று வினவ, சமணர்கள், "நீ விரைந்து போய்ப் பாண்டியனை மதுரையோடும் எதிர்த்து எடுத்து விழுங்கிவிட்டு வருக" என்று விடுத்தனர்.

**நாக வடிவுடைய அவுணன் தன்மை**

அதுகேட்ட அவுணன், வானத்தைத் தீண்டும் பெரிய உடலையும், விஷத்தைச் சொரிகின்ற துளையினையுடைய பெரிய பற்களையும், வடவைத் தீயைப்போல் எரிகின்ற கண்களையும், மலையின் குகைபோலத் திறந்த வாயினையும் உடைய **ஒரு பாம்பின்** வடிவங்கொண்டு மலைபோல எழுந்து விரைந்து நடந்தான். அப்போது அவனுடைய பாதி உடல் புதைபடுதலால் நிலம் பிளவுபட்டது; அவனது பெருமூச்சின்முன் காற்றினது வலிமை இழந்தது; விழிகளுக்கு எதிர்ப்பட்ட பசிய பயிர்கள் கருகி வாடின; காடுகளும் சோலைகளும் கருகின; மரங்களில் வசிக்கும் பறவைகள் சிறகுகள் கருகிச் சுருண்டு கீழே விழுந்தன; நிலவுலகம் நடுங்கியது; உலகத்தைச் சுமக்கும் ஆதிசேடன் அஞ்சினன்; சூரியனும் சந்திரனும் திடுக்கிட்டனர்; இராகு கேதுக்கள் அஞ்சினர்; திசை யானைகள் கலங்கின; கூற்றுவன் அஞ்சித் திகைத்தான்.

**பாண்டியன் சோமசுந்தரக் கடவுளின் திருவருளைப் பெறுதல்**

நாகவடிவுடைய அவுணன் மதுரைப்பதியின் மேற்குத் திசையை நோக்கி வந்துகொண்டிருந்தான். அவனைக் கண்ட மக்கள் பாண்டியனை அடைந்து, அவன் அடிகளை வணங்கி, "அரசே! மதுரைப் பதியின் மேற்றிசையில் ஒரு பெரியபாம்பு அண்டங்களையும் மற்றையவற்றையும் ஒரு வாயிற் போட்டு உண்ணுதற்கு வருவதுபோல், பெரிய வாயினைத் திறந்து கொண்டு வருகின்றது" என்று முறையிட்டனர். அது கேட்ட அனந்தகுண பாண்டியன் சிறிதும் அஞ்சாது, "முன்னே மத யானையை ஏவிய சமணர்களே இதனையும் விடுத்தார்கள் போலும். அதைப்போலவே இப் பாம்பினையும் கொல்லுதற்குப் பாம்புகளை அணிகலமாக அணிந்த சோமசுந்தரக் கடவுள் இருக்கின்றார்" என்று நினைந்து, இறைவன் திருமுன் சென்று, "எம்பெருமானே! அடியேன் ஒருபோதும் உம்மை மறவாது

வழிவழி அடிமை செய்யும் இயல்பினேன்; நின் ஆணை வழியே ஆட்சிபுரிந்து வாரா நின்றேன்; சமணர்கள் இந் நகரமுழுதையும் அழிக்கக் கருதி விடுத்த பாம்பு வருகின்றது. உமது திருவருளின் வழியே அதன் உயிர் கழிவதைக் கருதினேன்; அடியேனுக்குக் கருணை செய்தருள்க; இது நினது கடனாகும்'' என்று தொழுது குறையிரந்தான்.

**பாண்டியன் பாம்பினைத் துண்டித்தல்**

பிறகு, பாண்டியன் சிவபெருமானிடத்தே அனுமதிபெற்று வணங்கி, அவருடைய திருவடிகளைச் சிந்தையிற்கொண்டு புறத்தே வந்து அம்பும் வில்லும் எடுத்துக்கொண்டு மேற்றிசை வாயிலை அடைந்தான்; அங்கு மலையென்று சொல்லத் தக்க வடிவத்தோடு சினத்தீ சிந்தும் கண்களையுடைய பாம்பினை எதிரே வரக்கண்டான். அப்பொழுது பாம்பின் வடிவத்தையுடைய அவுணன், பலபுள்ளிகளையும் பிளந்த வாயினையுமுடைய படத்தைப்பரப்பி, எட்டுத்திக்குகளையும், கதிரவனையும் மறைத்துச் செறிந்த இருளைப் பரப்பிப் பல்லை அதுக்கிப் பெருமூச்சுவிட்டு, அகன்ற வாயைத் திறந்து, பெரிய நகர் முழுதையும் ஒருங்கே விரைந்து கௌவி விழுங்குதற்குச் சீறிச் சினந்தான்.

அப்போது ஆண்சிங்கம்போன்ற அனந்தகுணபாண்டியன் இடியேறும் அஞ்சும்படி ஆரவாரம் செய்தான்; கையில் வில்லையெடுத்து, நாணைப்பூட்டித் தீ முகக் கணைகளைத் தொடுத்து விடுத்தான். பாம்பின் வடிவமாக வந்த அவுணன், வழுதி விடுத்த கணைகள் அனைத்தையும் துகள்படும்படி கடித்து உமிழ்ந்து சிதைத்தான். அதனைக்கண்ட பாண்டியன் மனம் பொறுமல் சோமசுந்தரக்கடவுளின் திருவடியை மனத்தில் சிந்தித்துக் கொண்டு, கொடியதாகிய ஒரு பிறைபோலும் வாயினையுடைய கணையை விடுத்துப் பாம்பின் உடலைத்துண்டுபடுத்தினான். அப் பாம்பாகிய அவுணன் இடிபோல் பேரொலிசெய்து, இரத்தம் அருவிபோலப்பெருக உடல் புரளத் துடித்து வால்நெளிய இறக்கும்போது கொடிய ஆலகால விஷத்தின் பெருக்கைப்போலக் கரிய நஞ்சினைக் கக்கினான்.

**பாம்பின் நஞ்சு எங்கும் பரவுதல்**

அக்கொடிய நஞ்சு இருள் பரவியதுபோல் மதுரைத் திருநகர் முழுதும் இடையீடின்றிப் பரவியது; சோலைகள், கிணறுகள், குளங்கள், நான்கு தெருக்கள் கூடுமிடம், கல்விச் சாலைகள், கடைவீதி, அகழி, மதில், அரண்மனை, மாடங்கள், உப்பரிகைகள், மேடைகள், கோபுரங்கள் அரங்குகள் ஆகிய எல்லா விடங்களிலும் தாவிப் பரவியது. அந்நகரமக்கள் யாவரும் நஞ்சினால் மயங்கி, உறங்கினவர்போல வாடி, உடல் கம்பித்து வியர்வை அரும்பிப் புலன்களும் பொறிகளும் அந்தக்கரணங்களும் தலைதடுமாறி, மொழி குழறி, நாத்தழுதழுப்புற்று வரண்டு, கபம் மேலிட்டு அறிவழிந்து மயங்கி உயிப்பு அடங்கி உள்ளேயுள்ள உயிர் அலைய ஊசல்போல ஆடிக் கிடந்தனர்.

**பாண்டியனின் வேண்டுகோள்**

அனந்தகுணபாண்டியன் ஆலகால விஷத்தைக்கண்டு அஞ்சிய திருமால் போலத் திருக்கோயிலை அடைந்து வணங்கி, "எந்தையே! யாவருக்கும் முற்பட்டவனே! ஆதி முதல்வனே! வித்தின்றித் தோன்றியவனே! முடிவில்லா முனிவனே! எனக்கு உரிமையானவனே! அன்பர்க்கெளியவனே! எல்லோருக்கு தலைவனே! இந்நகர்க்கு எக்காலத்திலும் அரசே! அநாதி யுள்ள மறையவனே! முக்கண்ணனே! அடியேன் உம்மிடத் அடைக்கலம் புகுந்தேன்; முன்னே கடலைச் சுவறச் செய் ஏழு முகில்களும் ஒன்றாகத் திரண்டு வந்து பெய்த மழையை தடுத்தருளினீர்! துதிக்கையால் விண்ணினைத் துழாவி வெண் பிறைபோன்ற கோட்டுடன் வந்த களிற்றினைக் கொன்றருளினீர்! இவ்வாறு இம்மதுரைத் திருநகரைப் பாதுகாத்து அருளிய தேவரீர் இப்பொழுது கொடிய விஷத்தினால் வருந்தும் வருத்தத்தையும் நீக்கியருளும்" என்று விண்ணப்பஞ் செய்தான்.

**மதுரை மாநகரம் விஷம் நீங்கித் தூய்மை அடைதல்**

**அருட்கடலாகிய சோமசுந்தரக்கடவுள் தம் திருச்சடையின்கண் அணிந்த இளம் பிறையினுடைய அமுதத்திலிருந்து சிறிது துளியைச் சிந்தியருளினார். அச்சிறிய துளி, விரைந்து**

பாலிற் பிரை போல நகரமெங்கும் பரவி முன்னு.. மதுரை மாநகரமாகத் தூய்மை செய்தது[1].

அருட்கடல் அனைய ஆதிநா யகன்றன்
அவிர்சடை யணிமதிக் கொழுந்தின்
பெருக்கடை அமுதத் தண்டுளி சிறிது
பிலிற்றினன்; பிலிற்றிட லோடும்
பொருக்கென எங்கும் பாலினிற் பிரைபோற்
புரையறக் கலந்துபண் டுள்ள
திருக்கிளர் மதுரா நகரமாப் புனிதஞ்
செய்த(து);அச் சிறுதுளி அம்மா!

சூரியன் முன்னர் இருள் ஓடுதல் போலவும், இறைவனது திருவருளின் முன்னே ஆணவமலத்தின் வலிமை கெடுதல்போலவும் எங்கும் பரவிய அமுதத்தினல் நஞ்சு நீங்கப்பெற்று மயக்கம் நீங்கி யாவரும் இன்பமுற்று மகிழ்ந்து இருந்தனர். அனந்தகுண பாண்டியன் அரவணிந்த சடையையுடைய சோமசுந்தரக் கடவுளுக்கு அன்பேவடிவமாகி அரசுசெய்துகொண்டிருந்தான்.

செய்யுள்—23

ஆகச் செய்யுள்—1625

---

1. முன்பு மதிக்கலையின் அமிழ்தால் சாந்தி செய்யப்பெற்று அதனல் மதுரை எனப் பெயர் எய்தினமை திருநகரங்கண்ட படலத்துட் காண்க.

## 29 மாயப் பசுவை வதைத்த படலம்

### சமணர்கள் மாயப் பசுவினை ஏவுதல்

அனந்தகுண பாண்டியன், படம்பொருந்திய பெரிய பாம்பினைத் துணித்த பின்பு, அப் பாம்பினைப் பின் தொடர்ந்து கூட்டமாக வந்த சமணர்கள் காற்றினால் தள்ளப்பட்டு ஓடும் மேகங்கள்போல உடைந்து மனங் கலங்கி ஓடினர். அங்ஙனம் ஓடினவராகிய சமணர்களனைவரும் ஓரிடத்தில் ஒருங்கு கூடி, "நாம் முன்பு விடுத்த யானையைக் கொன்றதுபோலவே இன்று சென்ற பாம்பினையும் அழித்தனர்; இனிமேல் நாம் யாது சூழ்ச்சி செய்வது?" என்று ஆலோசித்து, "பசுவிற்கு ஊறு செய்யார்கள்; அதற்குத் துன்பஞ் செய்தலால் வரும் பழிக்கு அஞ்சுவார்கள்; ஆதலால், பசுவை விடுப்போம்; இதுவே தக்க உபாயம்" என்று கருதி முடிவு கொண்டனர். பின்னர், பாவகாரிகளாகிய அச் சமணர்கள் முன்போலவே கொடிய வேள்வி ஒன்றினைச் செய்தனர். அப்போது, ஓமகுண்டத்தினின்றும் பசுவின் வடிவங்கொண்ட ஒரு அவுணன் வந்து தோன்றினன். 'அத்தி நாத்தி' என்று கூறிய அருகனது உரையினைக் கொண்டுழலும் சமணர்கள் அப் பசு வடிவாகிய அவுணனை முன்போல் மதுரைத் திருநகரின் மேல் விடுத்தனர்.

### மாயப் பசு மதுரை மாநகரத்தின்மீது பாய வருதல்

அந்த மாயப் பசு, தன் கொம்புகளினால் மேகங்களைக் குத்தி மேலே கோத்துக்கொண்டு ஆதிசேடன் முடியும், மேரு மலையும் புழுதியாட அடி பெயர்த்து வைத்தது; காற்றும் அஞ்சுமாறு விடுகின்ற மூச்சின் எதிரே சராசரப் பொருள்களுமாகிய எல்லாம் பூளைப்பூப்போல் சிதறி ஓடின; அதன் கோபத் தீயினுக்கு உலகமனைத்தையும் அழிக்கும் தீக் கடவுளின் அனல் குளிர்புனலை ஒப்பதாம்; பறவைகளும் விலங்குகளும் அலறி ஓலமிட்டு ஓடின; செறிந்த காடுகளையும் குன்றுகளையும் வெகுண்டு கொம்பினால் அடியோடு பெயர்த்துக் காற்றினைப் போல எறிந்து, அளவிறந்த மக்களைப் பின் தொடர்ந்து

அவர்கள் உடலைச் சிதைத்து உயிரைத் தொலைத்து இடி போலப் பேரொலி செய்து, கூற்றுவன் வரும் தன்மைபோல மதுரையை நோக்கி வெற்றிகொண்டு பாய வந்துகொண்டிருந்தது. அதனைப் பாண்டியன் அறிந்தான்.

**பாண்டியனும் நகர மக்களும் இறைவனை வேண்டல்**

முக்கண் மூர்த்தியும், மதுரை மன்னவனும், சலந்தரனை ஆழிகொண்டு அழித்தவனுமாகிய சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலைப் பாண்டியனும், மதுரை நகரத்திலுள்ள பெரியோர்களும் அடைந்து, "நாதனே! இது முறையோ! வெள்ளியம்பலத்திலே கால் மாறி ஆடியருளும் திருவடிகளையுடையவனே! இது முறையோ! எல்லா உயிர்களுக்கும் அறிவினை ஊட்டும் அறிவே! இது முறையோ! தூயவனே! எங்கும் நிறைந்தவனே! பழம்பொருளானவனே! வேதத்தை அருளியவனே! இது முறையோ!" என்று கூவி முறையிட்டார்கள். அப்போது சோமசுந்தரக் கடவுள், தம் திருமுன் வந்து முறையிட்டவர்கள்பால் திருவருள் நோக்கினைச் செலுத்திக் கருணை புரிந்து, இடப நந்தியை அழைத்து, "நீ சென்று சமணர்கள் விடுத்த கொடிய பசுவை வென்று வருவாயாக" என்று கூறி விடுத்தருளினர்.

**இடப நந்தி தோற்றப் பொலிவுடன் வரும் காட்சி**

உடனே இறைவரின் ஆணையினைப் பெற்ற அவ் விடப நந்தி கூற்றுவனும் அஞ்சும் வண்ணம் சினந்து எழுந்தது; அதன் கண்கள், வேள்விக் குண்டத் தழல்போல் கொதித்தன: நாக்கு நாசியினைத் துழாவியது; கடைவாய் நுரை வழிந்து ஒழுகியது; தலை வானுலகத்தைத் தொட்டு நின்றது. நெற்றியிலே பட்டம் சிறந்து விளங்கியது, வளைந்த கொம்பிலே செம்மணிப் பூண், பிறைச் சந்திரனைக் கேது என்னும் பாம்பு சுற்றிக் கிடந்தாற்போலத் திகழ்ந்தது; முதுகிலே பொற்கவசம் கதிரவனைப் போல் விளங்கியது; கொம்பிலே கட்டப்பெற்ற கவரிக் குஞ்சம் பிறைமதிக் கதிர்போல் தொங்கியது; நெற்றிக்கு முன்னே முத்தாலாகிய முகவட்டுப் பொலிந்து விளங்கியது; பின்னலாகிய மாட்டுச் சதங்கை மாலை கல்லென்று வாய்விட்டு

ஆர்த்தது; பாம்பு நாவினை அசைத்தல்போலக் கழுத்தில் வீர மணி நா அசைந்து ஒலித்தது. நான்கு கால்களிலும் தண்டையும், சிறுசதங்கையும், அரசிலை வடிவாகச்செய்த மாலையும் சிலம்பும் ஒன்றுசேர்ந்து ஒலித்தன. காளையானது தன் அடியினால் நிலத்தைக் கிளறி அண்டத்தையும், எட்டுத் திசைகளையும் மூடுமாறு புழுதி எழுப்பியது. பெருமூச்செறிந்து கொம்பினால் குத்தி மண்ணைக் கோத்துக்கொண்டு மேகத்தை எதிர்கக எழுந்ததுபோல வானத்தை நோக்கிய வண்ணம் கண்களினின்றும் தீயினைச் சிந்த விரைந்து நடந்தது.

**இடபநந்தி மாயப்பசுவைக் கொல்லுதல்**

வெள்ளிய இடபமானது தனது பிறைச்சந்திரனை ஒத்த கொம்பினால் சூல்கொண்ட மேகத்தின் வயிற்றைக் கிழித்துத் துள்ளிக்கொண்டு வெள்ளிமலையொன்று கால்பெற்று நடந்தாற் போல விரைந்துசென்று பகைத்துச் சீற்றங்கொண்டு நிலத்தை மோந்து பெருமூச்செறிந்து பசுவினை அணுகியது: அப்பொழுதே மேற்கே உள்ள பசுவைக் கிழக்கே உள்ளது என்றும், கிழக்கே உள்ளதை மேற்கே உள்ளது என்றும், வடக்கே உள்ளதைத் தெற்கே உள்ளது என்றும், தெற்கே உள்ளதை வடக்கே உள்ளது என்றும் சொல்லும்படி இடையறாது துரத்தியது; கொம்பிற் கோத்து டூதுகுகீழாமாறு தள்ளியது; மீண்டும் எடுத்தது; மலையைக் காற்றுப் பெயர்த்து வீசியது போலத் திசைப்புறத்திலே எறிந்தது; மலைச்சிகரங்கள் தூளாகும்படி தூக்கி எற்றியது; மரச்செறிவுகளின் கிளைகள் முறியுமாறு எடுத்து வீசியது; விண்ணுலகத்தினின்றும் கடலில் விழும் காமதேனுவைப்போலக் கடலின்கண் எடுத்து வீசியது. இவவாறு இடபம் போர் விளையாடலைப் புரிந்து, சமணர்கள் முன் எண்ணியபடியே பொருது அதன் உயிர்க்குத் துன்பஞ் செய்யாது தனது பேரழகைக் காட்டிற்று. உடனே மாயப்பசு அவ் விடபத்தின்மீது இச்சைகொண்டு மலரம்பால் ஏறுண்டு காமம் மிகுந்து உயிரோடு வீரியத்தையும் விட்டுக் கீழே வீழ்ந்தது. உடனே அதன் உடல் [1] மலை வடிவமாயிற்று.

1. இது மதுரையை அடுத்துள்ள பசுமலையாகத் திகழ்கின்றது. "... கோவுயிர்விட்ட பின்னர்ச், சீரிய பிறங்கலாக்கித் திருவிளையாடல்

அதுகண்ட மதுரை நகர மக்கள் யாவரும் நீங்காத மகிழ்ச்சி யடைந்தனர். அனந்தகுணபாண்டியனின் திண்ணிய தோள்கள் பூரித்தன. சூரியன் உதித்தகாலை இருள்கெட்டு ஓடுதல்போலச் சமணர்கள் யாவரும் நாணத்துடன் புறங்கொடுத்து ஓடினர்.

**இடபமலை**

உலகத்தார் அறியுஞ் சான்றாக இடபநந்தி தனது தூல சரீரத்தை [1] **இடபமலையாக** அங்கே விளங்க நிறுத்திவிட்டுச் சூக்கும சரீரத்தோடு மதுரை நாயகனை அடைந்து வணங்க, அவர் திருவருள்புரிந்து, "முன்னைய வடிவமாகி இங்கே இரு" என்று இருத்தி யருளினார். அப்பொழுது நகர மக்களும் அனந்தகுண பாண்டியனும் பெருமகிழ்ச்சிகொண்டு சந்நிதியில் இருந்த இடபதேவரின் திருவடியை அடைந்து வணங்கிக் கொண்டு சென்றனர். சோமசுந்தரக்கடவுள் அந்த நந்தி தேவரின் வெற்றிமிக்க பெருமிதத்தினைக்கண்டு மீனாட்சியம்மை யோடும் களிப்புற்று இருந்தருளினார்.

**இராமபிரான் இடபமலையில் வந்து தங்குதல்**

[2] இராமபிரான் இலங்கைக்குப் போகும்போது வானரப் படைகள் சூழ இலக்குவன், அனுமான், சுக்கிரீவன் முதலாய வீரர்களோடும் அந்த இடபக் குன்றின்மேல் வந்து தங்கினான், அதனையறிந்த அகத்தியமுனிவர் அங்குவந்து இராமபிரானுக்கு ஆக்கமொழிகூறி மதுரைப்பதியின் மான்மியத்தை அருளிச் செய்தார்.

**இராமபிரான் சொக்கலிங்கமூர்த்தியை வழிபட்டு வேண்டுதல்**

சொக்கலிங்கப் பெருமானின் பெருமைகளைக் கேட்ட இராமபிரான் சிரமேற் கூப்பிய கைகளுடன் அகத்திய முனி வரோடு பொற்றாமரைத்தீர்த்தத்தை அடைந்து நீராடி, சொக்க

---

காணப், பார்மிசை வழங்கு வித்தான் பசுமலை என்ன வாங்கு" என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.

1. இவ் விடபமலை சோலைமலை எனவும், அழகர்மலை எனவும் பெயர் பெறும்.

2. இங்கு, இது முதலாய வரலாறு திருவாலவாயுடையார் திருவிளை யாடற் புராணத்தில் கூறப்படவில்லை.

லிங்கப் பெருமானின் திருவடிகளை அன்போடு வணங்கி, வேத சிவாகம முறைப்படி பூசித்துத் துதித்து நின்று, "தேவர் யாவர்க்கும் உயர்ந்தோனே! சிவன் முத்தி புரத்திற்குத் தலைவனே! தூயபோக நலங்கள் எவற்றுக்குங் காரண வடிவாகிய சங்கரனே! இந்நிலவுலகத்தின்கண் நின்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய பதிகள் பல உள்ளன; அவற்றுள் இம் மதுரையே மிக்க அற்புதமுடைய சிறந்த பதியாகும்: இது மிக்க மேன்மையுடைத்து என்று கூறுவது யாதெனின், எல்லா வுலகமும் நின்னிடத்தே அன்பு வைத்து உய்யும் பொருட்டு நீர் செய்தருளிய திருவிளையாடல்களின் வரலாறு [1] **மலை வடிவங்களாகி** இத் திருநகர்ப்புறத்தே நின்று விளங்குதலினலாம்; தரிசித்த மாத்திரத்திலே சகல துன்பங்களைப் போக்குதற்கும், சகல செல்வங்களை அருளுதற்கும் கருணை கொண்டு தேவரீர் வீற்றிருக்கும் சிறப்பினாலே இச் சொக்கலிங்கத்திற்கு வேறொன்று ஒப்பாகுமோ? தன்னில் நீராடும்போது பழவினைத்தொகுதியைச் சிதைத்து நினது மங்கல போகத்தை அருளும்படி அமைந்த இப் பொற்றாமரைத் தீர்த்தத்திற்கு மற்றொரு தீர்த்தம் ஒப்பாகுமோ? எத் தலங்களிலும் மூர்த்தி, தீர்த்தம், தலம் என்னும் மூன்றனுள் ஒவ்வொன்றே சிறப்புற்று விளங்கும். இங்கே இம்மூன்றும் சிறந்திருக்கின்றன. ஆதலால், இறைவனே! இப் பதியானது தன்னை அடைந்தவர் அனைவர்க்கும் சித்த சுத்தியும், அணிமா முதலிய பல்வகைச் சித்திகளையும் அருளா நிற்கும்.

கண்ட வெல்லையில் துன்பங்கள் களைதற்கும் அளவைக்(கு)
அண்ட ரும்பெருஞ் செல்வங்கள் அளித்தற்குங் கருணை
கொண்டு நீயுறை சிறப்பினுல் குளிர்மதிக் கண்ணி
அண்ட வாண!இவ் விலிங்கத்துக்(கு) ஒப்புவே றுமோ?

தோய்ந்தி டும்பொழு(து) ஈட்டிய தொல்வினைப் படலம்
மாய்ந்தி டும்படி மாய்த்துநின் மங்கல போகம்
ஈந்தி டும்படிக்(கு) இருந்தமா தீர்த்தத்தின் இயல்பை
ஆய்ந்தி டும்பொழு(து) அதற்கொரு தீர்த்தமொப் பாமோ?

---

1. மலை வடிவங்கள் - இவை பசுமலை, இடபமலை என்னும் மலை வடிவங்கள் ஆகும்.

எத்த லத்தினும் ஒவ்வொன்று விழுமிதாம்; இந்த
மெய்த்த லத்தில்இம் மூவகை விழுப்பமும் விளங்கும்;
அத்த! ஆதலால் இத்தலம் அடைந்தவர் எவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும்.

அடியேன் எண்ணிய கருமமும் உண்மையாக முடியுந் தன்மை அரிதோ! அச் செயல் எப்படி முடிதல் வேண்டுமோ அப்படி விரைந்து முடியும்பொருட்டு அருள்புரிதல் வேண்டும்'' என்று இரந்து வேண்டினன்.

**இராமபிரானுக்கு இறைவன் அசரீரியாக மொழிதல்**

அப்போது சோமசுந்தரக் கடவுள், ''சூரியன் மரபில் வந்த இராமனே! நீ நாமிருக்கும் இந்நகருக்குத் தென் கீழ்த் திசையிற் சென்று கடலிலே சேதுபந்தனம் செய்து, இலங்கையினை அடைந்து, இராவணனுடைய பத்துத் தலைகளையும் துணித்துச் சீதையைச் சிறையினின்றும் நீக்கி, மீளவும் நினது அயோத்தியை அடைந்து உலகினை [1]நெடுங்காலம் ஆட்சி புரிந்து இனிதாக இருந்து பின்னளில் வைகுண்டத்தை அடைவாயாக; இப்பொழுது நீ கவலைகொள்ளாதே'' என்று அசரீரி வாக்காக அருளிச் செய்தார்.

**இராமபிரான் வெற்றியுடன் தன்னாடு அடைதல்**

இராமபிரான் அதுகேட்டு மனமகிழ்ந்து இறைவனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு போய்ச் சேதுபந்தனஞ் செய்து இலங்கையை அடைந்தான்; அறத்தை அழித்த பாவியாகிய இராவணனைக் கொன்று, அவனுடைய அரசச் செல்வங்களை அவன் தம்பியாகிய விபீடணனுக்கு அளித்துவிட்டுச் சீதையோடும் மீண்டுவந்து **சேது என்னும் [2] இராமேச்சுரத்தில்** சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்து அவனருளைப் பெற்றுத்

---

1. நெடுங்காலம் - இது பதினோராயிரம் ஆண்டு என்பர்.

2. இராமேச்சுவரத்தில் இராமபிரான், வேதங்களில் வல்லவனும், சிவ வழிபாட்டை மேற்கொண்டவனுமான இராவணனைக் கொன்ற கொலைப்பழி நீங்கும் பொருட்டுச் சிவவழிபாடு புரிந்ததனை, ''தேவியை வவ்விய தென்னிலங்கைத் தசமாமுகன், பூவிய லும்முடி பொன்றுவித்தபழி போயற, ஏவியலுஞ்சிலை யண்ணல் செய்தவிரா மேச்சுரம், மேவிய சிந்தையி னார்கடம் மேல்வினை வீடுமே'' எனவரும் திருஞான சம்பந்தர் தேவாரத்தாலும் அறியலாம்.

தன்னைப் பற்றித் தொடர்ந்த கொலைப் பழியினின்றும் நீங்கினுன்; அதன்பின்பு சோமசுந்தரக் கடவுளை மீளவும் வந்து வணங்கிக்கொண்டு சீதையுடன் [1]அயோத்தி நகரத்தை அடைந்தான்.

**அனந்தகுண பாண்டியன் இறைவன் திருவடி அடைதல்**

பின்பு அனந்தகுண பாண்டியன் குலபூடணனைப் பெற்று அரசாட்சியை அவனிடத்தில் அளித்துவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் சிவபுரத்தை அடைந்தான்.

செங்கோல் அனந்த குணமீனவன் தேயங்காப்பக்
கொங்கோ(டு) அவிழ்தார்க் குலபூடணன் தன்னைஈன்று
பொங்கோத ஞாலப் பொறைமற்றவன் பாலிறக்கி
எங்கோன் அருளால் சிவநகர் ஏறினுனே.

செய்யுள்—38

ஆகச் செய்யுள்—1663

---

1. அயோத்தி - இது யுத்தத்தில் பகைவரால் வெல்லப்படாதது என்னும் பொருளது.

## 30. மெய்க் காட்டிட்ட படலம்

### குலபூடணன் சேனைகளைப் பெருக்கக் கட்டளையிடுதல்

குலபூடண பாண்டியன் செங்கோலேந்தி உலகினைச் செவ்வனே பாதுகாத்து வந்தான். அவனுக்குச்[1] **சவுந்தர சாமந்தன்** என்னும் பெயர்கொண்ட சேனைத்தலைவன் ஒருவன் இருந்தான். அவன் சிவனடியார்களையே சிவமாக மனத்திற் கொண்டு வழிபட்டொழுகும் கடப்பாட்டு நெறியில் நின்றவன்; அரசனுக்கு இம்மைக்கும் மறுமைக்கும் துணையாக நின்று ஒழுகுபவன். அக்காலத்தில் வேடர்களுக்குத் தலைவனாகிய[2] **சேதிராயன்** என்னும் வேடன் ஒருவன் விளங்கினான். அவன் பல வெற்றியின் வலியினால் மேம்பட்டு இறுமாப்புடன் பாண்டியன்மீது பகைமை பூண்டு படையெடுத்துச் செல்லக் கருதினான். அதனைக் குலபூடண பாண்டியன் அறிந்து, தன் படைத் தலைவனாகிய சவுந்தர சாமந்தனை நோக்கி, "நீ நமது நிதி அறையினைத் திறந்து வேண்டும் பொருளை எடுத்துக் கொடுத்துப் புதிதாக இன்னும் சில சேனைகளைச் சேர்த்துப் பதிவுசெய்து கொள்வாயாக" என்றான்.

### சேனாதிபதி அரனுக்கும் அடியார்க்கும் பொருளை வழங்கல்

அதனைக்கேட்டு, இறைவன் திருவடிக்கு அன்புபூண்டவனாகிய சுந்தர சாமந்தன், பாண்டியன் இட்டபணி பின்னே நின்று தள்ளச் சிவபெருமானின் திருவருள் முன்னே வந்து இழுக்க விரைந்துசென்று பொன்னறையினைத் திறந்தான்; அறநெறியால் தேடிக் குவித்துவைத்த திரவியக் குவியலுள் தனது அவா

---

1. இவன், 'சுந்தர சாமந்தன்' எனவும் பெயர் பெறுபவன்' சாமந்தன்-படைத் தலைவன். இவன், 'கொந்தகக் குலத்தில் பிறந்தவன்' என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணங் கூறும். மதுரைக்குத் தென் கிழக்கில் சுமார் ஐந்து மைல் தூரத்தில் கொந்தகை என்னும் ஓர் ஊர் உண்டு; அதில் கொந்தக வேளாளர் என்ற மரபினர் இன்றும் உளர்.

2. சேதிராயன் - சேதிநாட்டு அரசன்; இவன் குறுநில மன்னன் ஆவன். ஒருகாலத்தில் தமிழ்நாட்டு மூவேந்தரல்லாத குறுநில மன்னர்களை வேடர், காடவர் முதலிய பெயர்களால் இழித்துக் கூறி வந்தனர் என்பர். சேதி நாடு - திருமுனைப்பாடு நாடு.

அடங்கத்தக்க திரவியங்களைக் கைக்கொண்டு எல்லையற்ற மகிழ்ச்சியோடு திருக்கோயிலை அடைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடினான்; தன் உள்ளத்திலே நிறைந்த மெய் யன்பினாலே ஒளிவடிவாயும் வேதப்பொருளாயும் விளங்கும் சோமசுந்தரக்கடவுளின் திருமுன் சென்று கும்பிட்டு வணங்கி நின்று, "பண் அமைந்த நான்மறைகளை விரித்துரைத்தருளிய மேலோனே! அடியார்கள் எண்ணிய கருமங்களை யெல்லாம் முடிக்கும் எம்பெருமானே! இத்திரவியங்களெல்லாம் உமக்கும் உம்முடைய மெய்யடியார்களுக்குமே ஆகக் கடவன" என்று வேண்டிக்கொண்டு அத்திரவியங்கள் முழுதையும் சிவ புண் ணியவழியிலே செலவழிப்பானாயினான்; சிவபெருமானுக்குத் திருக்கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் எடுத்தான்; கண் டிகை, வயிரமணியாற் செய்த தோளணி, குண்டலங்கள், முத்துக்குடைகள், கொடிகள் முதலியவற்றைச் செய்தமைத் தான். தேவர்களுக்கு ஊட்டும் அவியுணவின் வகைகளும், பூணூல் கலியாணம் முதலிய பலவகையான சிறு வேள்விகளும், அந்தணர்க்கு அறுசுவை நிறைந்த பேருண்டிகளும், துறவி கட்கு ஊட்டும் திருவமுதும், பல்வேறு தருமங்களும் பெருகச் செய்தான்; யாவராயினும் விபூதியும் உருத்திராட்சமும் தரித் தவர்களைக் கண்டால், "இவரே நம் பிறப்பைப் போக்கத் திருவுருவமெடுத்து வந்த சிவபெருமான்" என்று நிறைந்த அன்பால் உள்ளம் நெக்குருக அவரை விரைந்து எதிர்கொண்டு வணங்கி அழைத்துவந்து வழிபட்டு அறுசுவையோடு கூடிய திருவமுதைச் செய்வித்து, அவர் உண்டு எஞ்சியவற்றையே உண்பான்[1].

எவரேனும் உருத்திரசா தனங்கண்டால் எதிர்வணங்கி
அவரேநம் பிறப்பறுக்க வடிவெடுத்த அரன்என்று
கவராத அன்புள்ளங் கசிந்தொழுக அருச்சித்துச்
சுவையாறின் அமுதருத்தி எஞ்சியஇன் சுவைதெரிவான்.

---

1. இங்கு, "எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ் சாதன மும் கண்டா லுள்கி, உவராதே அவரவரைக் கண்ட போதே உகந் தடிமைத் திறநினைத்தங் குவந்து நோக்கி, இவர்தேவர் அவர்தேவர் என்று சொல்லி இரண்டாட்டா தொழிந்தீசன் திறமே பேணிக், கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே" என வரும் அப்பர் திருத்தாண்டகம் சிந்திக்கற்பாலது.

இவ்வாறு சுந்தர சாமந்தன் கொன்றைச்சடையாருக்கும், அடியார்களுக்கும் இன்றைக்கு ஆயிரம் பொன்னும், நாளைக்கு இரண்டாயிரம் பொன்னும், அடுத்துவரும் நாட்களுக்கும் அன்றைக்கு அன்று இருமடங்குமாக அரசனுடைய பொருள்க ளெல்லாவற்றையும் அள்ளி வழங்கினான். இதனைக் குலபூடண பாண்டியன் ஒற்றர்மூலம் கேள்வியுற்றான்.

**பொய் ஓலை எழுதுதல்**

சேனாதிபதியாகிய சுந்தரசாமந்தன், தன்மேல் அரசன் ஐயுறுவண்ணம் அரசவையினை அடைந்து, அரசகாரியம் பார்ப் பவர்களோடு கலந்து, பிறநாட்டிலுள்ள வீரர்களுக்குப் பொருளை அனுப்பிப் பாண்டியன் சேனையில்வந்து பதிவுசெய்து கொள்ள ஓலைவிடுத்து அவர்களை அழைப்பவன்போலப் பாவனை காட்டி, ''தெலுங்கர்களுக்கு ஓலை எழுதுக! கலிங்கர்களுக்கு ஓலை எழுதுக! விராடர்களுக்கு ஓலை எழுதுக! மராடர்களுக்கு ஓலை எழுதுக! கொங்கர்களுக்கு ஓலை ஒழுதுக! வங்கர்களுக்கு ஓலை எழுதுக! துருக்கர்களுக்கு ஓலை எழுதுக! என்று கூறிப் பொய்யோலை எழுதுவித்து அனுப்பினான். எங்கும் இப்படியே பொய்யோலை அனுப்பிவிட்டிருக்க, ஆறுமாதங்கள்வரையும் அந்த வீரர்கள் வரவினைக் காணாமல் பாண்டியன், சுந்தரசாமந் தனை அழைத்து, ''நாளைச் சூரியன் மறையுமுன்னே ஓலை விடுத்த படைவீரர்கள் அனைவரையும் அழைக்கக் கடவாய்'' என்றான்.

**சேனாதிபதிக்கு இறைவன் அசரீரியாக மொழிதல்**

அதற்கேற்பச் சுந்தர சாமந்தன் உடன்பட்டுத் திருக் கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுள் திருவடியின் கீழே வீழ்ந்து வணங்கி, ''எம்பெருமானே! அரசனளித்த மலை போன்ற பொருள்களெல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு அடி யேனைப் பணிகொண்டருளினையே! இனிச் சேனைகளைத் திரட் டும் வகை யாது?'' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு நின்றான். அப்பொழுது அடியாரின் குறையினைத் தீர்த்து ஆண்டருளுவதையே விரதமாகக் கொண்டருளிய கூடலம் பதிக்கு நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளாலே,

"நாளைக்குச் சேனை வீரர்களோடுநாமும் வந்து தோன்றுவோம்; நீயும் வீரர் வரவை விரும்பிய பாண்டியனது அவையின்கட் சென்று இருப்பாயாக" என்று விண்ணினின்றும் ஓரசரீரி வாக்கு எழுந்தது. அத் திருவாக்கினைக் கேட்ட சுந்தர சாமந்தன், மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தான். சூரியனும் மேலைக் கடல் வெள்ளத்தில் மூழ்கினுன்.

**இராப்பொழுதைச் சேனுதிபதி கழித்தல்**

மேருவினை வில்லாகக் கொண்ட சோமசுந்தரக் கடவுள், தம் சிவ கணங்களை வேலேந்திய வீரர்களாகச் செய்து, தாமும், ஒரு குதிரை வீரனுகக் கோலம் பூண்டான், திருக்கூத்தாடு வதற்கு இடப்பட்ட நீலநிறத்தையுடைய எழினி(திரை)போலக் கரிய இருள் எங்கும் வந்து பரவச் சுந்தர சாமந்தன் தன் இல்லத்தினை அடைந்து, "விடிவது எப்போது" என்று கருதித் தூங்காமல் அடிக்கடி எழுந்தெழுந்து விண்மீன்களை நோக்கி, நாழிகையை எண்ணி எண்ணிச் சோமசுந்தரக் கடவுளின் வருகையைக் காணுதற்கு இரவு முழுதையும் அளந் தனன்.

**காலையில் சேனுதிபதி இறைவனைவணங்கி அரசவையடைதல்**

வேதங்களாலும் உணரமுடியாத சிவபரஞ்சுடர், ஒரு அன்பனின் பொருட்டுத் திருவுருவங்கொண்டு குதிரைமேல் எழுந்தருளிவருகின்ற அருட்படை எழுச்சியைக் காணவந்தவன் போலக் கதிரவனும் கிழக்கே வந்து தோன்றினுன். சுந்தர சாமந்தன் காலையில் எழுந்து திருக்கோயிலை அடைந்து பொற் றுமரை வாவியிலே நீராடிக் கருணைவடிவமாக விளங்கும் சோம சுந்தரக்கடவுளைப் பணிந்து கைகூப்பிக் குறையிரந்து வேண்டித் துதித்து அரசவையை அடைந்தான்.

**சிவபெருமான் குதிரைச் சேவகனுக எழுந்தருளி வருதல்**

அப்பொழுது சிவபெருமான், சங்கு கன்னன் முதலிய பிரதம சிவ கணங்களும், குண்டோதரன் முதலிய பூத வீரர் களும் வீரக் கழலையணிந்த சேனை வீரர் வடிவங்கொண்டு கைகளில் வாள், குந்தம், உலக்கை, திகிரி, மழு, வில், வேல் முதலிய பதினெட்டுப் படைக்கலங்களையும் ஏந்தி விரைந்து

வந்து புறங்காப்ப, நந்தி, மாகாளன், பிருங்கி, நிகும்பன், கும்போதரன் முதலிய சிவகணத் தலைவர் அனைவரும் போர்க்குரிய கவசம் பூண்டு நெற்றியிலே திருநீறணிந்து வாளேந்திக் குதிரை வீரர்களாய்ச் சூழ, வெண்சாமரைகளும், பீலிக் குஞ்சங்களும், குடைகளும், கொடிகளும் நெருங்கப் பலவித வாத்தியங்கள் இடியொலிபோல் ஒலிக்கத் தமது இடப வூர்தியையே குதிரையாக ஆக்கி, அதன்மேல் ஏறிக்கொண்டு ஒற்றைச் **சேவகராய்** எழுந்தருளிவந்தார். அப்போது பல வாத்தியங்கள் ஒலிக்கும் ஒலியும், குதிரைகள் கனைக்கும் ஒலியும், வீரர்கள் அதட்டும் ஒலியும் ஒன்று கலந்து பேரொலியுடன் வரும் சேனையானது முன்னாளில் மதுரை நகரின்மேல் கோபித்து எழுந்துவந்த கடலினைப்போல் விளங்கியது.

**பாண்டியன் சேனைவீரர்களைக் கண்டு மகிழ்ந்து வினவுதல்**

சேனையின் வருகையைக் கண்ட சேனாதிபதியாகிய சுந்தர சாமந்தன் குலபூடண பாண்டியனின் முன் சென்று வணங்கி விண்ணப்பஞ் செய்ய, உடனே பாண்டியன் மனமகிழ்ந்து கடைவாயிலில் வந்து அங்குள்ள மண்டபத்திலே அரியணையின்மீது வீற்றிருந்து, பகைவனாகிய சேதிராயனைக் கொல்லும் மகிழ்ச்சி மிகுந்து, சேனைப் பெருக்கத்தின் சிறப்பினை நோக்கி, "இவர்கள் எந்தெந்தத் தேசத்தில் உள்ளவர்கள்?" என்று வினவினான். சுந்தர சாமந்தன் பாண்டியன் எதிரே நின்று அவ்வத் தேசத்தாரெல்லாரையும் அணியணியாக நிறுவிக் கொண்டு கைப்பிரம்பினால் சுட்டிக் காட்டி, "ஐய! இவர்கள் கொங்க நாட்டினர்; இவர்கள் குரு நாட்டினர்; இவர்கள் கங்க நாட்டினர்; இவர்கள் கருநாட நாட்டினர்; இவர்கள் அங்க நாட்டினர்; இவர்கள் ஆரிய நாட்டினர்; இவர்கள் வங்க நாட்டினர்; இவர்கள் மாளவ நாட்டினர்; இவர்கள் குலிங்க நாட்டினர்; இவர்கள் கொங்கண நாட்டினர்; இவர்கள் தெலுங்க நாட்டினர்; இவர்கள் சிங்கள நாட்டினர்; இவர்கள் கலிங்க நாட்டினர்; இவர்கள் கவுட நாட்டினர்; இவர்கள் ஒட்டிய நாட்டினர்; இவர்கள் கொல்ல நாட்டினர்; இவர்கள் கூர்ச்சர நாட்டினர்; இவர்கள் பல்லவ நாட்டினர்; இவர்கள் பப்பர நாட்டினர்; இவர்கள் சேர நாட்டினர்; இவர்கள் விதேக

நாட்டினர்; இவர்கள் கடார நாட்டினர்; இவர்கள் கேகய நாட்டினர்; இவர்கள் மகத நாட்டினர்; இவர்கள் மராட நாட்டினர்; இவர்கள் சோழ நாட்டினர்; இவர்கள் நம் பாண்டி நாட்டினர்'' என்று அவரவர் [1] **மெய்யினைக் காட்டித்** தெரிவித்தவுடன், "இத்துணைச் சேய்மை நாடுகளிலுள்ள வீரர்களை இங்கே வருவித்த சாமர்த்தியம் யாது என்று வினவியருளற்க; உமது அரிய பொருளனைத்தும் வரையறையின்றிச் செலவு செய்தமையால் இவர்கள் யாவரும் வந்தார்கள்'' என்று கூறினன்.

**பாண்டியன் ஒற்றைச்சேவகரை நோக்கி 'இவர்யார்' என்றல்**

பாண்டி மன்னன், அப் பெரிய சேனையினுள் தூரத்திலே குதிரையினைச் செலுத்திப் பின்னாக நிற்கின்ற ஒற்றைச் சேவகராகிய சோமசுந்தரக் கடவுளை நோக்கி, "**அவர் யாவர்?** என்றான். அப்போது சுந்தர சாமந்தன் வணங்கி, "ஐயனே! இந்தச் சேனைப் பெருக்கத்துள் இவரை யாவர் என்று அறிந்து கூறுவேன்?'' என்றான். பாண்டியன், "அவரை இங்கே அழைத்து வருக'' என்று கட்டளையிட்டான். அரசனது வழிப்பட்டுச் செல்பவனைப்போல அவ்வொற்றைச் சேவகரும் அப் பாண்டியன் எதிரே வந்தார். பாண்டியன் மகிழ்ந்து, நவமணியிழைத்த அணிகளையும் பொன்னாடைகளையும் கொடுத்தான்; ஒற்றைச் சேவகர் தம் அன்பனாகிய சுந்தர சாமந்தன்பொருட்டு வாங்கித் தரித்துத் தம் பரிசனங்கட்குக் கொடுத்தருளினார்; பிறகு தம் குதிரையினைத் தூண்டி [1] **ஐந்து கதி**களிலும் நடத்திக் காண்பித்துத் தமது சேனை வெள்ளத்தினுள்ளே புகுந்தார்.

**பாண்டியன் சுந்தர சாமந்தனைப் போற்றிப் புகழ்தல்**

அப்பொழுது ஒற்றன் ஒருவன் ஓடிவந்து பாண்டியனை வணங்கி, "சேதிராயன் என்பான் வேட்டைக்குச் சென்று புலி

---

1. மெய்யினைக் காட்டல் - திருமேனியைக் காட்டுதல்,

2 ஐந்து கதி - மல்லகதி. மயூர கதி, வானர கதி. வல்லிய கதி. சர கதி என ஐந்து வகையான நடை; இவை முறையே மெல்லிய நடை, விரைந்த நடை, இருகால் தூக்கியாடிவரு நடை, சுற்றியோடல், முழுவோட்டம் ஆகும்.

யினால்கௌவப்பட்டு இறந்துவிட்டான்'' என்றுகூறினான். முரசு முழங்கும் சேனையைக் கண்டு மகிழ்ச்சியுற்ற பாண்டியன், சேனைத்தலைவனாகிய சுந்தர சாமந்தனுக்கு அளவில்லாத சிறப்பினையுடைய தலைமையோடு வரிசைகளையும் நிரம்பக்கொடுத்து "இந்தச் சேனைகளைத் தங்கள் தங்கள் நாட்டிற்குச் செல்லுமாறு விடைகொடுத்தனுப்புக'' என்றான்.

**சேனைவீரர் யாவரும் மறைதல்**

சுந்தர சாமந்தன், சேனைகளைத் தத்தமக்குரிய செய்மையிலுள்ள நாடுகளில் செல்லுமாறு செலுத்துவான்போன்று பாவனை செய்து நிற்க, மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள் அங்கு நின்றபடியே மனித வேடங்கொண்ட வீரர்களாகிய சிவகணங்களோடும் திடீரென்று மறைந்தருளினார்[1].

குலபூடண பாண்டியன் அதனைக்கண்டு அற்புதமடைந்து கருத்தில் ஐயுறவுகொண்டு உய்த்துணர்ந்து, "இது நமது கூடற் பெருமானாகிய சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய திருவிளையாடல்'' என்று துணிந்து ஆனந்தக்கண்ணீர்பெருக, உரோமஞ் சிலிர்க்க, [2]மெய்யன்பே வடிவமாயினன்; தனக்கு உயிர்த்துணையாகநின்ற சுந்தர சாமந்தனை நோக்கி, "உமக்குச்சோமசுந்தரக் கடவுள் எளிவந்தார் என்றால், எனக்கு அக் கடவுள் நீயே'' என்று கூறி அவனுக்குப் பல்வகைச் சிறப்புக்களையும் நல்கினான்; பிறகு சிறிதும் மனத்தில் கவலையின்றி அரசுபுரிந்து வாழ்ந்து வந்தான்.

செய்யுள்—41
ஆகச்செய்யுள்—1704

---

1. இங்கு, "மெய்க்காட் டிட்டு வேண்டுருக்கொண்டு, தக்கா னொருவனாகிய தன்மையும்'' என வரும் (திருவாசகம் - கீர்த்தியகவல்) அடிகள் சிந்திக்கற்பாலன.

2. மெய்யன்பே வடிவம் - இது பசுகரணங் கெட்டுச் சிவகரணமாக நிற்கும் வடிவம்.

# 31. உலவாக்கிழி அருளிய படலம்

### பாண்டி நாட்டில் வறுமை

சிறந்த வள்ளலாகிய குலபூடண பாண்டியன் சோமவார விரதம் [1]முதலாக உள்ள சிவ புண்ணியங்கள் அனைத்தையும் வழுவாது அனுட்டித்துக்கொண்டு வந்தான். அச்செருக்கினாலே, தன்னாட்டிலுள்ள மறையோர்களை அவமதித்தான். அதனாலே மழைவளம் குன்றியது; மழையின்மையால் நாட்டில் விளைவுகுன்றி வளங்குறைந்தது; அந்தணரெல்லாம் வறுமையில் ஆழ்ந்தனர்; வேதம் ஓதுதலை இழந்தனர்; வேள்வி முதலாய கருமங்களைக் கைவிட்டனர்; இழிந்த தொழிலைச் செய்தேனும் உயிரை ஓம்புதற்பொருட்டு வேற்றுநாடுகளுக்குச் சென்றனர். அவரொழிந்த குடிமக்களெல்லாம் பசியினாலே வாடி மனம் புழுங்கி, "எந்நாட்டிற்குப் போவோம்" என்று. வருந்தலுற்றனர்.

### பாண்டியன் இறைவனிடம் முறையிடுதல்

நாட்டில் வறுமை தாண்டவமாடுவதைக் கண்ட குலபூடணன் மனம் வருந்தினான்; சோமவாரத்தன்று பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் [2]**சித்தி விநாயகரை** வணங்கிக் கொண்டு அங்கயற்கண்ணியோடு அமர்ந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கி எழுந்து கைகுவித்து நின்று, "எம்பெருமானே! உலகத்திலுள்ள உயிர்களுக்கெல்லாம் உயிர் நீர் அன்றோ? அவ்வுயிர்களெல்லாம் பசியால் வருந்தும் வருத்தம் தேவரீரைச் சாராது அடியேனைச் சார்ந்து வருத்தக் காரணம் யாது? அடியேன் தேடிவைத்த பொருள்களெல்லாம் சிவ புண்ணிய நெறியிலே செலவாயின. இனி, நீர் திருவுள்ளமலர்ந்து அடியேனுடைய துன்பம் நீங்குமாறு திருவருள் நோக்கம் செய்தருளுக" என்று வேண்டினான்.

---

1. முதலாக என்றதனால் அட்டமி, சதுர்த்தசி முதலிய விரதங்களும் கொள்க.

2. இச் சித்தி விநாயகர் தல விநாயகர் ஆவர்.

அத்த வுலகில் உயிர்க்குயிர்நீ
அல்லே யோ ? அவ் வுயிர்ப்பசியால்
எய்த்த வருத்தம் அடியேனை
வருத்து மா(று)என் ? யானீட்டி
வைத்த நிதியந் தருமத்தின்
வழியே சென்ற(து); இனியடிகள்
சித்த மலர்ந்(து)என் இடும்பைவினை
தீர அருட்கண் செய்கவென.

அப்போது சோமசுந்தரக்கடவுள் பாண்டியனுடைய பிழையினைச் சிறிது திருவுளத்திற்கொண்டு அவன் மொழியைத் தமது திருச்செவியிற் கேளாதவர்போலச் சும்மா இருந்தார். பாண்டியன் தனது அரண்மனைக்குச் சென்று சிவபெருமானைச் சிந்தித்த வண்ணம் தரையிலே படுத்து நித்திரை செய்தான்.

**இறைவன் வழுதி கனவில் தோன்றி உலவாக்கிழி அருளல்**

அப்பொழுது வெள்ளியம்பலத்துள் ஆடியருளும் சோமசுந்தரக்கடவுள் பாண்டியனது கனவின்கண், சங்கக் குண்டலமும், வெள்ளிய திருநீறும், சரிந்த கோவணவுடையும் விளங்கச் சிங்காதமென்னும் ஒரு [1] வாச்சியம் மார்பிலே கிடந்து அசைய, **சித்த மூர்த்தியாய்** எழுந்தருளிவந்து, குலபூடணனை நோக்கி, "பாண்டியனே! நம்மிடத்து நீங்காத அன்பும் கெடாத விரதமுமாகிய சிறந்தசெல்வத்தை உடையவனே! உலகில் தீமையைப்போக்கிக் கெடுதலின்றிப் புரக்கும் செங்கோலை உடையவனே! நின்பால் ஒரு குறையுளது. நீ மறையவர்களைப் போற்ற மறந்தாய்; அதனுல் உனது நாட்டிலே இப்பொழுது வேள்வியாகிய செல்வம் குறைந்தது.

வேதமே நமது ஆசனம்; வேதமே நமது பாதுகை; வேதமே நமது ஊர்தி; வேதமே காற்சிலம்பு; வேதமே நமது கோவணம்; வேதமே நமது திருக்கண்; வேதமே நமது திருவாக்கு; வேதமே நமது திருமேனி; வேதமே நமது ஆணையாகிய சத்தியின் வடிவமாய் ஆன்மாக்களுக்கு விதி விலக்குகளை

1. இது மான் கொம்பினுல் செய்த ஒருவகை வாத்தியம்; இவ்வாத்தியம், சிங்கம் போலக் கர்ச்சித்தலினுல் இப்பெயர் பெற்றது என்பர்.

அறிவித்து, அறிவுகொளுத்தி நன்னெறியில் நிறுத்திப் போகம் அளித்துப் பின் ஆணவமலக்கட்டினை அவிழ்த்து, வீடு பேற்றை அளிக்கவல்லது. அவ்வேதமே நமது செங்கோலும் ஆகும்.

மறையே நமது பீடிகையாம் ;
மறையே நமது பாதுகையாம் ;
மறையே நமது வாகனமாம் ;
மறையே நமது நூபுரமாம் ;
மறையே நமது கோவணமாம் ;
மறையே நமது விழியாகும் ;
மறையே நமது மொழியாகும் ;
மறையே நமது வடிவாகும்.

வேதந் தானே நமதாணைச்
சத்தி வடிவாய் விதிவிலக்காய்ப்
போதங் கொளுத்தி நிலைநிறுத்திப்
போகங் கொடுத்துப் பல்லுயிர்க்கும்
பேதஞ் செய்யும் பிணியவிழ்த்தெம்
பிரியா வீடு தருவதுதேன்
நாதஞ் செய்யுந் தார்வேந்தே !
நமது செங்கோ லதுவாகும்.

இத்துணைச் சிறப்புடைய வேதங்களுக்கு உறுதியாவார் வறுமைத் துன்பம் நீங்க வேள்வித் தீயினை வளர்த்து எம் மிடத்துச் சிந்தையைச் செலுத்தும் அந்தணர் ஆவர் ; அவ் வந்தணர்கள் செய்யும் வேள்வியே மழைக்குக் காரணமாகும் ; மைந்தனே ! நீ இவர்களை இகழ்ந்து கைவிட்டனை ; அதனால் மழை பெய்யாதொழிந்தது. இனி, மூன்று உலகங்களும் உய்யும்பொருட்டு முத்தீயை வளர்க்கும் அந்தணர்களை நம்மைப் போலவே கருதி ஒழுகி, நாடோறும் பல வளங்களைப் பெருக்கிச் செங்கோல் நடாத்தி வாழ்வாயாக ; நாம் உனக்கு இதோ **உலவாக்கிழி** (பொற்கிழி) ஒன்று தருகின்றோம் ; இந்த உலவாக் கிழியிலிருந்து எவ்வளவு பொன்னை எடுத்துச் செலவழிக்கினும் அது நாம் கொடுத்த அளவினின்று சிறிதும் குறையாது; இதனை

வைத்துக்கொண்டு உனது நாட்டில் ஏற்பட்ட வறுமையைப் போக்குவாயாக'' என்று திருவாய்மலர்ந்து உலவாக்கிழியை [1]அவன் கையிற் கொடுத்து அவனது மனக்கவலை நீங்கும் வண்ணம் நெற்றியிலே திருவெண்ணீறு சாத்தி மறைந்தருளினர்.

**பாண்டியன் உலவாக்கிழி பெற்று மகிழ்தல்**

குலபூடண பாண்டியன் உடனே விழித்தெழுந்தான்; தான் கண்ட கனவு நனவாக விளங்கியதைக் கண்டான்; சோமசுந்தரக் கடவுளின் திருவடியைப்போல உலவாக்கிழியினைச் சிரமேற்கொண்டு மகிழ்ச்சி மேலோங்க நின்று ஒரு முகூர்த்த நேரம் வரை ஆனந்தக் கூத்தாடினன்; பிறகு அமைச்சர்களுக்கும் சேனைத் தலைவர்களுக்கும் அதனைக் காண்பித்து நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்தான்.

**பாண்டியன் உலவாக் கிழியினைப் பூசித்துப் பயன்படுத்தல்**

பிறகு பாண்டியன் உலவாக் கிழியினை அரியணையின்மீது ஏற்றிச் சங்கங்கள் ஒருபால் முழங்கவும், வேதம் ஒரு பால் ஒலிக்கவும், சந்தனம் பூசி, மலர்மாலை சூட்டித் [2]தசாங்க உபசாரம் புரிந்து [3]நறும் தூபமும் நெய்த் தீபமும் காட்டிச் சோமசுந்தரக் கடவுளைப்போல அவ்வுலவாக்கிழியினைப் பாவித்துப் பூசை முடித்து வலம் வந்து வணங்கினன். அதன் பிறகு அவ்வுலவாக் கிழியைக் கட்டவிழ்த்துப் பொன்னை எடுத்து அந்தணர்களுக்கும் வேள்விகளுக்கும் மற்றவர்களுக்கும் வாரி வழங்கினன். இவ்வாறே நாடோறும் வரையறையின்றிக் கொடுக்கக் கொடுக்க அப் பொற்கிழி, சிறிதும் குறைவுபடாத முத்தியின்ப வீட்டைப்போலாயிற்று.

---

1. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் இறைவன் பாண்டியனின் படுக்கையின்மேல் தலைப்பக்கம் பொற்கிழியினை வைத்து விட்டு மறைந்தார் எனக் கூறப்படுகிறது.

2. தசாங்க உபசாரம் - ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவகுண்டனம், தேனு முத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அர்க்கியம், புட்பதானம் என்னும் பத்து உபசாரங்கள்.

3. நறுந்தூபம் - இது குந்துருக்கம், பச்சைக் கருப்பூரம், காரகில், வெண்சந்தனம், கருஞ்சீதாரி என்னும் வாசனைப் பொருள்களைக் கலந்து இடும் தூபம்.

அந்த உலவாக் கிழியினின்றும் விளைந்த பொன்னைக் கொண்டு வேதத்தின் பெருமையினை அறிந்த குலபூடண பாண்டியன் சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளிய விண்ணிழி விமானத்தை உள்ளும் புறமும் இழைத்தான்; ஞானக் கொழுந்தாகிய அங்கயற்கண்ணம்மையின் திருக்கோயிலையும், [1] **அறுகாற் பீடத்தையும்**, பெரிய திருக்கோபுர வாயிலையும் மற்றுள்ளவற்றையும் அழகுபெறச் செய்தான்.

**பாண்டி நாடு செழித்து விளங்கல்**

குலபூடண பாண்டியனாகிய மேகம், உலவாக்கிழியாகிய கடலை முகந்து முகந்து நாடோறும் பொழிந்து தருமமாகிய பயிரை வளர்க்கும்பொழுது, மேகங்கள் கடல் நீரைப் பருகி மழையினைப் பொழியப் பல்வளங்களும் மிகுந்து விளங்கின. அதனால் பாண்டிநாடு அளகாபுரியைப்போலச் செல்வந் தழைத்தோங்கப் பெற்றது.

முந்திக் குறையா நிதிக்கடலை முகந்து முகந்து நாடோறும்
சிந்திக் குலபூ டணக்கொண்டல் தெய்வ தருமப் பயிர்வளர்ப்பப்
பந்தித் திரைமுந் நீர்மேகம் பருகிச் சொரியப் பல்வளனும்
நந்திக் கன்னி நாடளகை நகர்போற் செல்வந் தழைத்தன்றே.

அப்போது வேதத்தில் வல்லவர்களும் உபநிடதங்களில் வல்லவர்களும், மிருதியில் வல்லவர்களும், வியாகரணத்தில் வல்லவர்களும். நியாய நூலில் வல்லவர்களும் விரதங்களை ஏற்பவர்களும். வேள்வி செய்பவர்களும், சிவாகமங்களைப் போதிப்பவர்களும், சந்நியாசிகளும், வறுமையால் வருந்தாது செழுமையுடன் வாழ்ந்து விளங்கினர்,

செய்யுள்—19
ஆகச் செய்யுள்—1723

———

1. இவ்வறுகாற்பீடம் சுவாமி சந்நிதியில் உள்ளது; இது மீனாட்சியம்மையார் சந்நிதியிலும் உள்ளது.

## 32. வளையல் விற்ற படலம்

### சிவபெருமான் பிட்சாடனராகத் தாருக வனம் அடைதல்

முன்னொரு காலத்தில் சிவபெருமான், தாருக வனத்துள்ள இருடி பத்தினிகளின் கற்பு நிலையினை அளந்து காட்டும் பொருட்டுத் திருவுளங்கொண்டு, கட்டிய வேதமாகிய கோவணமும், திருமேனியில் விபூதிப் பூச்சும், [1] உள்ளாளமாகிய கீதம் பாடும் கனிவாயும், புன்முறுவல் பூத்த திருமுகமும், கிண்கிணி பொருந்திய திருவடிகளும், திருவடிகளில்தரித்த பாதுகைகளும், பலியேற்கும் கபாலமும், (தலையோடும்), தமருகமும் (உடுக்கையும்) ஏந்திய திருக்கைகளுங்கொண்ட **பிட்சாடனர்** திருக்கோலம் பூண்டு, மன்மதன் தவவேடம் எடுத்து வந்தாற்போன்ற பேரழகினராய்த் தாருக வனத்துக்கு எழுந்தருளினர்.

அப்பொழுது அவருடைய திருவடியிற் சூழ்ந்த சிலம்பின் ஒலியும். திருமிடற்றினின்று வரும் கீதவொலியும், திருக்கரத்தில் ஏந்திய உடுக்கையின் ஒலியும் ஒன்றுகூடிக் காற்றிலே தவழ்ந்து காதுகளின் வழியே உள்ளத்திலே பரவி இருடி பத்தினிகளைப் பரவசப் படுத்தின. அவர்கள் நிறையழிந்து தம்மை மறந்து அவ்வொலியிலே ஈடுபட்டுப் பள்ளத்தை நோக்கி ஓடிவருகின்ற நீரைப்போல விரைந்து கையில் பிட்சையினைக்கொண்டு வீட்டின் புறத்தே வந்தனர், பிட்சாடன மூர்த்தியின் பேரழகைக் கண்டு காம மயக்கத்துடன் அவரது பிட்சை ஏற்கும் கலத்திலே பிட்சையிடுவதோடு அன்றிக் கைகளில் அணிந்திருந்த அழகிய வளையல்களையும் சொரிந்து நின்றனர்; நாணத்தை இழப்பதோடு இடையிலிருந்த மேகலையையும்

---

1. உள்ளாளக் கீதம் - இஃது இடைகலையோடு பிங்கலையிலும் இயங்கும் இயக்கம் ஒழிந்து மூலாதாரத்தினின்று காற்றினை எழுப்பிச் சுழுமுனையின் தொழிலினால் பிரமரந்திரம்வரை செல்லுமாறு இசைக்கின்ற இசை (கானம்) ஆகும். இஃது அமைந்த பாடலை, மிடறு வீங்காமலும், கண் மூடாமலும், பற்கள் வெளிப்படாமலும், புருவங்கள் மேல் ஏறாமலும், கபோலந் துடியாமலும் பாடவேண்டும் என்பர். இதனை, "கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா, பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா-எண்ணிலிவை, கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர், உள்ளாளப் பாடல் உணர்" எனவரும் வெண்பாவால் அறியலாம்.

இழந்தனர்; மன்மதனது வில்லிலிருந்து வரும் அம்பே (கணையே) அன்றித் தம் கண்களினின்றும் வரும் அம்பும் (கண்ணீரும்) தம் மார்பிலே சொரிய நிலைதளர்ந்தனர்.

**இருடி பத்தினியர்க்கும் இறைவர்க்கும் நிகழ்ந்த சல்லாபம்** [1]

**இருடி பத்தினியர்**: "ஐயரே! எங்கள் வளையினை (வளையலை)த் தாரும்!"

**இறைவர்**: "அஃது உங்கள் கழுத்தில் இருக்கிறதே!" (வளை - சங்கு; மகளிர் கழுத்துக்குச் சங்கு உவமை.)

**இருடி பத்தினியர்**: "அந்தோ! எங்கள் கலையினை (ஆடையினை)க் கொடுத்துவிடும்!"

**இறைவர்**: "அஃது உங்கள் முகமாகிய சந்திரனிடத்து உள்ளதே!" (கலை - ஒளிக்கதிர்.)

மடமயில் அனையார் '**எங்கள் வளையினைத் தருதிர்**' என்றார்;
கடல்விடம் அயின்றான் '**உங்கள் கந்தரத் துள்ள(து)**' என்றான்;
தடமதிக் கொம்ப னார்'**எம் கலையினைத் தருதிர்**' என்றார்;
முடமதி மிலைந்தான் '**நுங்கள் முகமதி இடத்த(து)** என்றான்.

**இருடி பத்தினியர்**: "இடையறிந்து (சமயமறிந்து) எம்மைச் சேர்மின்!"

**இறைவர்**: "கடலில் தோன்றிய அமுதத்தினை ஒத்த பெண்களே! உங்களுக்கு இனி இடை (மருங்குல்) காணப்பெறாதே!"

**இருடி பத்தினியர்**: "அங்ஙனமாயின் எமது முன்னை நிறத்தை அளித்து, எங்கள் வீட்டிற்குச் செல்ல விடை (சென்று வருமாறு உத்தரவு) கொடுத்தருளும்!"

**இறைவர்**: "எம்முடைய விடை (திருமால்) பாற்கடலில் பள்ளி கொண்டுள்ளதே!"

---

1. சல்லாபம் - இது கூடிப் பேசும் பேச்சு; இப் பேச்சு வினாவிடையுடன் கூடிச் சிலேடைப் பொருளிலே வரும் இவ்வாறு வரும் செய்யுளைச் '**சல்லாபக் கவி**' என்பர். இங்கு வரும் இரு பொருள்களுள்ளே இருடி பத்தினியர் முதலாம் பொருளைக் கருதியே வினவினர்; இறைவர் இரண்டாம் பொருளைச் சுட்டியே விடை கூறினர். இதனைத் தார்க்கிகர், 'சலஞ் சாதித்தல்' என்பர். (சலஞ் சாதித்தல் - ஒரு கருத்துப்பற்றிக் கூறிய சொல்லுக்கு மற்றொரு பொருள் படைத்துக்கொண்டு நகுதல்.)

'இடையறிந்(து) எம்மைச் சேர்மின்' என்றனர் இளையர்; எங்கோன்
'கடலமு தனையீர்! நுங்கட்(கு) இடையினிக் காணுது' என்றான்;
மடநலார் அஃதேல் 'பண்டை வண்ணமீந்(து) இல்லிற் செல்ல
விடையளித் தருள்மின்' என்றார்: 'வேலைபுக் குறங்கும்' என்றான்.

**இருடி பத்தினியர்**: "இக் கபாலிக்கு எப்பொழுதும் நடுவு (நடுவு நிலைமை) இல்லை போலும்!"

**இறைவர்**: "நடுவில்லாமை (இடையில்லாமை) நும்மைப் போல்வார்க்கே அடுத்தது."

**இருடி பத்தினியர்**: "அடிகளின் நெஞ்சு வன் கல்லே (மலையை) ஒக்கும்."

**இறைவர்**; உங்கள் கொங்கையே வன் கல் (மலை) ஆகும்."

நங்கையர் 'கபாலிக்கு என்றும் நடுவிலை போலும்' என்றார்;
அங்கணன் 'நடுவி லாமை நும்மனோர்க்(கு) அடுத்தது' என்றான்;
மங்கையர் 'அடிகள் நெஞ்சம் வலியகற் போலும்' என்றார்;
கொங்கலர் கொன்றை யான்'நும் கொங்கையே வன்கல்' என்றான்.

**இருடி பத்தினியர்**: "நீர் கங்கை (கங்கையாறு) சுமந்தது ஏன்?"

**இறைவர்**: "அஃது (கம்+கை: கம் - தலையோடு) உங்களிடம் உணவு ஏற்கவே."

**இருடி பத்தினியர்**: "இந்த ஐயன் உரைத்த செப்பு(சொல்) யாதுபோல் இருந்தது?"

**இறைவர்**: அது (செப்பு - கிண்ணம்) உங்கள் கொங்கை போல் இருந்தது.

காதுவேல் அன்ன கண்ணார் 'கங்கைநீர் சுமந்த(து) ஏதுக்கு
ஓதுமின்' என்றார்; 'நும்பால் உண்பலி ஏற்க' என்றான்;
'ஏதுபோல் இருந்த(து) ஐயன் இசைத்த செப்பு' என்றார்; ஈசன்
கோதுரு அமுதன் னீர்! 'நும் கொங்கைபோல் இருந்த(து) என்றான்.

**இருடி பத்தினியர்**: "ஐய! கந்தரம் (கழுத்து) கறுத்தது ஏன்?"

**இறைவர்**: "மழை பெய்வதற்கு" (கந்தரம் - மேகம்).

**இருடி பத்தினியர் :** "உத்தரம் (பதில்) யாது என்று கூறினீர்."

**இறைவர் :** "அது தெற்கே நின்று எதிர்முகமாக நோக்கின் தெரியப்பெறுவது." (உத்தரம் - வடக்கு.)

'**கறுத்ததை எவன்கொல் ஐய! கந்தரம்**' என்றார்; வேலை
வெறுத்தவன் '**மாரி பெய்தற்கு**' என்றனன்; விழியால் வேலை
ஒறுத்தவர் '**யாவ(து) என்றீர் உத்தரம்**' என்றார்; கூற்றைச்
செறுத்தவன் '**தென்பால் நின்று நோக்கினுல் தெரிவது**' என்றான்.

***இறைவன் மங்கையரிடம் அகப்படுவாரா?***

தாருகவனத்து இருடிகளின் பத்தினியர் பிட்சாடன மூர்த்தியின் கண்களில் தங்கள் வடிவம் புலப்படும்படியாக நோக்கி, "இக் கொடிபோன்ற மகளிரைப்போல நும் விழியுள் எம்மையும் வைத்துக்கொள்ளும்" என்று இரந்து வேண்டினர். இறைவனும் தம்மை அப்பெண்களின் விழியுட்கண்டு நகைத்து, "நம்மைப்போல் பேரழகுடையவர் உங்கள் கண்களிலே உள்ளார்; அவரை நன்றாக விழித்துப் பாருங்கள்" என்றார்.

உடனே இருடி பத்தினிகளெல்லாம் அஞ்சலியாகக் கை குவித்துப் பிட்சாடனமூர்த்தியின் திருவடிகளில் வீழ்ந்து, "நீரே துணை" என்று தளிர்க்கரங்களை நீட்டித் தழுவ நெருங்கினார்கள். அவர்கள் நெருங்குந்தோறும் இறைவன் அப்பாற் படுவாராயினன். நேர் நின்று துதிக்கும் வேதங்கள் எட்டுந்தோறும் அகப்படாது நீங்கும் பெருமான் காம மயக்கத்தையுடைய இருடி பத்தினிகளுக்கு அகப்படுவாரோ? [1] அப்போது இருடி பத்தினிகள் இறைவரை நோக்கி, "ஐயரே! நீர் எம்மை நெருங்கித் தழுவாது போவீரேல் அவிழ்த்த ஆடையையேனும் மீள உடுத்தி விடுமின்!" நாங்கள் உம்மைக்கண்டு காம மயக்கத்தாலே துன்பமுற எங்கள் கணவர் அதனை நோக்கி எங்களைச் சினந்து வெறுக்காமுன் கைகளை விட்டுக் கழற்றிய வளையல்களையும் கையில் எடுத்து இடுமின்!" என்றுவேண்டினர். "நாளைவந்து

1. இங்கு, "புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க" (திருவாசகம் - சிவபுராணம்) என வரும் அடி சிந்திக்கற்பாலது.

இடுவோம்'' என்று அவர்களுக்குப் பதில் கூறிவிட்டுப் பிட்சாடனமூர்த்தி மறைந்தருளினர்.

**இருடி பத்தினியர் தம் கணவரால் சாபம் பெறுதல்**

தாருகவனத்து இருடி பத்தினிகள், பிறைச் சந்திரனை அணிந்த பெருமான் கவர்ந்து சென்ற நாணினையும் மனத்தையும் மீட்க முடியாமல் வாட்டமுற்று, ஆடைகளும் வளையல்களும் நெகிழ, ஐங்கணைகள் உடலைத் துளைக்க, உடம்பு முழுவதும் பசலை படர நின்றனர்.[1] அந்நிலைமையை அவர்கள் கணவராகிய தாருகவனத்து இருடிகள் கண்டனர். தவவலிமையால் முக்காலச் செய்திகளையும் அறியவல்ல அந்த இருடிகள். பொய்த்தவ வேடம்பூண்டு வந்து நமது மனையிலுள்ள மனைவியரின் கற்பினையும் நாணினையும் அடியோடு கவர்ந்து சென்றவர் நான்மாடக்கூடலில் வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுளே என்று சிந்தித்துணர்ந்தார்கள்; பின்பு கற்பு நிலை திரிந்த தம் மனைவியரைப்பார்த்து, ''நீங்கள் கருத்திழந்தீர்கள்; ஆதலால் கூடல் நகரில் வசிக்கும் வணிகப் பெண்களாக அழகு சிறிதும் குறையாமல் பிறப்பீர்கள்; செல்லுங்கள்'' என்று சாபமிட்டனர். அப்போது அம்மகளிர், ''எங்கட்கு இச்சாபம் அகல்வது எப்பொழுது?'' என்று வினவினர். இருடிகள், ''மதுரை மாநகருக்கு அரசாகிய சோமசுந்தரக்கடவுள் வந்து உங்களைத் தீண்டும்போது இச் சாபம் நீங்கும்'' என்றனர்.

**இறைவன் வளையல் விற்கும் வணிகராய்த் தோன்றி வருதல்**

பின்பு, இருடி பத்தினியர் எல்லோரும் சாபத்தால் சிந்தை தளர்ந்து மதுரை மாநகரின்கண் வணிகர்களின் மகளிராய் வந்து தோன்றினர்கள். அவர்கள் வளர்ந்து இளமையாகிய பேதைப்பருவம் கடந்து மங்கைப்பருவம் அடைந்தார்கள். அப்பொழுது **குலபூடண பாண்டியன்** அரசியற்றும் நாளிலே

---

1. தாருகவனத்து இருடிகள் சிவ வழிப்பாட்டைக் கைவிட்டு வேள்வியே பொருள் எனக்கொண்டு இறுமாந்து இருக்க, அவர்கள் பத்தினியாரும் கற்பிலே தமக்கு நிகராவார் ஒருவருமிலர் எனச் செருக்குற்று இருந்தனர்; அவர்களின் செருக்கை ஒழிக்கும்பொருட்டுச் சிவபெருமான் பிட்சாடனமூர்த்தியாகப் போந்து இருடி பத்தினியர் கற்பினின்றும் வழுவுமாறு செய்தனர் என்னும் கந்தபுராண வரலாறு இங்கு அறியத்தக்கது.

சோமசுந்தரக்கடவுள் முடியில் சூடிய கங்கையையும், நீல கண்டத்தையும், நெற்றிக்கண்ணையும் இடப்பாகத்திலுள்ள உமாதேவியார் திருவுருவையும் மான் மழுவையும் மறைத்து, வளையல் விற்கும் வணிக வேடங்கொண்டு, தம் திருவடிகள் இரண்டினையும் நிலமகள் தனது முடியில் சூட, முன்னே இருடி பத்தினிகளினிடத்துக் கவர்ந்த வளையல்களையே பட்டுக் கயிற்றால் கோத்துவந்து மீண்டும் அம் மகளிர்க்கே இடுவேம் என்னும் கருத்துடையார்போல் அடியார்கள் தொடுத்துச் சூட்டும் மலர்மாலையைப்போல் தோளில் சுமந்து வளையல்களை விலை கூறிக்கொண்டு வணிக வீதியில் நடந்து வந்தார்.

**இறைவன் வளையல் விற்றல்**

வணிக வேடங்கொண்ட சோமசுந்தரக் கடவுள் வேதத்திற்குப் பொருள் அருளிய திருவாயைத் திறந்து, "வளையல் வாங்குமின்! வளையல் வாங்குமின்!!" என்று பகர்ந்தருளினார். அப்பொழுது கார்காலத்துக் கருமேகம் ஒலிக்கும் ஒலியினைக் கேட்டு ஆடுதற்கு எழும் மயில்போல மேகலை ஒலிக்க வணிககுல மகளிர் தம்மாளிகையினின்றும் புறப்பட்டு வீதியின்கண் வந்தார்கள்; கைக்கு வளையல் அணிய வருபவர்போலத் தோன்றித் தங்கள் மனம் முழுதும் தம்மிடம் ஒதுங்குமாறு, அவற்றை விலங்கிடுதற்கு வருகின்ற அவ்வணிகரைக் கண்டார்கள்; கண்டவுடன் பேரன்பு கொண்டு அவருடன் கூடி இன்பம் நுகர்தற்கு ஒரு பால் ஆசையின் வழியே கொண்டுபோக, மற்றொரு பக்கம் தங்கள் குணமாகிய அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நான்கும் நெருங்கித் தடுக்க, அதனால் மனம் சுழன்று தடுமாற நிலை கலங்கி, அவரை வந்து சூழ்ந்து மொய்த்தனர்.

**வணிக மகளிர்க்கு ஐயன் வளையலிட்டு மையலூட்டுதல்**

ஒலிக்கின்ற மேகலையும், சிலம்பும், குழையும், தொடியும், கண்டிகையுமாகிய இவற்றைப் பெண்கள் இடை முறியுமாறு அணிந்தாலும் கைகளில் வளையல் இல்லையேல் அவர்களுக்கு அழகு ஏது? ஆதலின், அம் மங்கையர்கள், "செல்வமிக்க நல்ல வணிகரே! எம்முடைய சிவந்த கைகளுக்கு ஏற்ற நல்ல வளையல்களைத் தேர்ந்தெடுத்து இடுவீராக" என்று கடக

மணிந்த காந்தள் மலர் போன்ற தங்கள் மெல்லிய கைகளை வணிகர் முன்னே நீட்டினார்கள். வணிகராகிய இறைவர் அங்கயற்கண் அம்மையாரின் திருக்கரங்களைப் பிடித்த கையால் வணிக மங்கையரின் கைம்மலரைப் பிடித்து முகிழ்ப்பித்துப் பல வரிகளையுடைய வளையல்களை இடுவதுடன் அவர்கள் மனத்தில் காம மயக்கத்தையும் மிகுவித்தார்.[1] வளையல்கள் அணியப்பெற்ற பெண்கள், தாம் அணிந்த வளையல்களை உடைத்து விட்டு மீளவும் வந்து, "எங்களுக்கு இன்னும் வளையல் இடவில்லையே! இப்பொழுது இடுக!" என்று கழுத்தினை வளைத்து முகத்தினை மறைத்து நின்று அழகிய கைகளை நீட்டித் தமது காதலையும் தோற்றுவிப்பார்கள். வணிக மங்கையர் மதவேளின் மலர்க்கணைக்கு ஆற்றாது, அதனைப் போக்க ஒரு துணையும்இன்றி நாணம் முதலிய காவலினின்றும் நீங்கி, ஒருவர் பின் ஒருவராக வந்து, "எமக்கு வளையல் இடும்! எமக்கு வளையல் இடும்!! என்று வேண்டுவர். முன்னே இட்ட வளையல்கள் அனைத்தும் கழன்றுவிட அம்மகளிர் வணிகர் முன் வந்து நெருங்கி "இவ்வளையல்கள் அளவிற் பெரியன; ஆதலின் கழன்றன; வேறு சிறிய வளையல்கள் இடுமின்!" என்று கூறி அங்ஙனம் இட்ட பின் அவையும் அங்ஙனமே கழன்று ஓட, மீண்டும் வந்து "இன்னும் சிறிய வளையல்களாக இடுக!" என்று கைகளை நீட்டுவர்; பின் இட்ட வளையல்களும் கழன்று ஓட, மனமயங்கி அவர் முன்னே போய் நின்று, "நீர் இட்ட வளையல்களோடு மேகலைகளும் சுழல்கின்றனவே" என்று கூறித் துவண்டு வெட்கி நிற்பர்.

பின்பு வணிக குல மங்கையர் வளையல் வணிகரை நோக்கி, "வளை வணிகரே! இவ்வளையல் போன்ற வளையல்களை யாம் முன்னே எங்கும் கண்டிலோம்; இஃது உண்மை; இவை

---

1. இங்கு, "வளைவிலியாய் எல்லார்க்கும் அருள்செய் தானை" (திருநாவுக்கரசர் தேவாரம் - திருவாலவாய்) என வரும் அடியும், "இதழியுந் தும்பையும் மதியமுங் கரந்து, வளைவிலை மாக்கள் வடிவெடுத்தருளி, முத்தமிழ் நான்மறை முளைத்தருள் வாக்கால், வீதிகூறி......கண்ட நீள் கதுப்பினர் கைகுவி பிடித்துக், குருகணி செறிந்த தனிமுதல் நாயகன்" (கல்லாடம்) என வரும் அடிகளும் உன்னற்பாலன.

எங்குள்ளன? இன்று எம் உடம்பு புளகாங்கிதம் அடையுமாறு செய்தன; நாளைக்கும் வளையல் இட இங்கு வருவீராக! இதோ நாங்கள் கொண்ட வளையலுக்கு உரிய விலைப் பொருளைப் பெற்றுக்கொண்டுபோங்கள்'' என்று கூறினர்.

**வணிகராகிய இறைவன் வணிகமகளிராதியர்காண மறைதல்**

வணிகேசர் அம் மகளிரை நோக்கி, ''வாள் விழியீர்! நாளை வாங்கிக்கொள்வோம்'' என்று கூறிவிட்டு ஆண் சிங்கம் போல் சென்றருளினர். அங்ஙனம் சென்ற வணிகராகிய பெருமானார் தம் பக்கத்தில் பரந்துநின்ற வணிக மகளிரும், மற்றவர்களும்கண்டு வியக்கும்வண்ணம், விண்ணிழி விமானத்துள் விளங்கும் பேரொளி மயமாகிய சிவலிங்கத் திருவுருவில் கலந்து தோன்றியருளினர். மதுரை மாநகரிலுள்ளார் அனைவரும், மகளிர் முன்னே வளையல்விற்ற வணிகரானவர் மங்கைப் பாகராகிய சோமசுந்தரக்கடவுளே ஆவர் என்று அறிந்து வியப்புற்று ஆனந்தக்கண்ணீர்பொழிந்து மகிழ்ச்சிப்பெருக்கில் திளைத்தனர்.

**வணிக மங்கையர் சிவப்பேறு அடைதல்**

சோமசுந்தரக்கடவுள் தம் திருக்கையினாலே தொட்டு வளையல் இட்ட தன்மையினாலே வணிகமங்கையரெல்லாரும் கருவுற்று முருகக்கடவுளைப்போல அளவற்ற புதல்வர்களைப் பெற்றனர். அங்ஙனம் பிறந்த புதல்வர்கள் அளவற்ற பெருமை கொண்ட களிப்பும் மிக்க வீரமும், தக்க வெற்றியும் பெற்று வாழ்ந்து வந்தனர். வணிக மகளிர் அனைவரும் சிவபெருமான் திருவருளைப்பெற்றுச் சின்னாள் இருந்து சிவலோகத்தை அடைந்தார்கள்.

செய்யுள் — 36

ஆகச் செய்யுள் — 1759

———

## 33. அட்டமாசித்தி யுபதேசித்த படலம்

### கார்த்திகை மாதர் அட்டமாசித்தி அருளும்படி வேண்டுதல்

முன்னொரு காலத்திலே ஊழிக்காலந்தோறும் வளருகின்ற திருக்கயிலாய மலையிலே கல்லால நீழலின்கீழ்ச் சிவபெருமான் வீற்றிருந்தார். அப்போது வெள்ளிமலையின் அருகே மரகதக் கொடி இருப்பதுபோலச் சிவபெருமானின் இடப்பாகத்திலே உமாதேவியார் எழுந்தருளித் தம் மலர்க்கைகளாலே வெற்றிலைச் சுருளைமடித்துக்கொடுக்க, அச் சிவபெருமான் அன்பு சுரக்கும் [1] **போக குரு மூர்த்தியாய்** இருந்தருளியவாறே திருநந்தி தேவர், பிருங்கி, மகாகாளர் முதலிய சிவகணத்தலைவர்க்கும், சனகர் முதலிய பெருந்தவ முனிவர் நால்வர்க்கும், கேட்கக் கேட்க அமுதம் ஊற்றெடுக்கும் சிவகதையினைத் திருவாய் மலர்ந்தருளிக்கொண்டிருந்தார். அந்நிலையிலே முருகக்கடவுளுக்குப் பால்கொடுத்த **கார்த்திகைப் பெண்களான இயக்கமாதர் அறுவரும்**, திருநீற்றினை உடல் முழுவதும் தரித்துச் சிவந்த சடையையும் உருத்திராக்க வடத்தையும் தாங்கிச் சைவத் தவவேடம் பூண்டு சிவபெருமான் திருமுன் வந்து மறைச்சிலம்புகள் ஒலிக்கும் தாமரை மலர் போன்ற திருவடியின்கண் வீழ்ந்து வணங்கி நின்று, "எம்பெருமானே! அடியேங்களுக்கு அட்டமாசித்தியை உபதேசித்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்தார்கள்.

### இறைவன் இயக்கியர்க்கு அட்டமாசித்திகளை உபதேசித்தல்

அப்பொழுது கயிலாயபதியாகிய சிவபெருமான் தம் இடப்பாகத்தில் வீற்றிருக்கும் உமாதேவியாரைச் சுட்டிக்காட்டி, "இவ் வுமாதேவியார் பூரணத்தன்மையால் எங்கும் நிறைந்த பராசத்தியாகியும் மகேச்சுவரியாகியும் உள்ளவள்; அணிமா முதலிய அட்டமாசித்திகளும் சேடியர்களாய்த் தன்னைச் சூழ்ந்து பணிந்து குற்றேவல் புரிய வீற்றிருப்பவள். இவளை நீங்கள் சிந்திப்பீர்களாயின், இவள் உங்கள் வினைகளைப் போக்கி

---

1. இஃது இறைவன் ஆன்மாக்களுக்குப் போகம் அருளுதற்கும், அனுக்கிரகம் புரிவதற்கும் கொண்டருளும் திருவுருவங்களில் ஒன்றும்.

அட்டமாசித்திகளையும் தந்தருள்வாள்" என்று திருவாய் மலர்ந்து **அட்டமாசித்திகளை**யும் அவ்வியக்கியர் அறுவருக்கும் உபதேசித்தருளினுர்.

**சிவபெருமான் இயக்கிமார் அறுவருக்கும் சாபமிடுதல்**

பின்னர், அவ்வியக்கியர் அறுவரும் முன்னைய ஊழ்வினையின் வலியினுல் உமாதேவியைச் சிந்தியாமல் சிவபெருமான் அருளிய அட்டமாசித்திகளை மறந்துவிட்டனர். சிவபெருமானும் அக்குற்றம் நோக்கி அப்பெண்களைச் சினந்து, "நீங்கள் [1] **பட்டமங்கை** என்னும் தலத்திலுள்ள ஆலமரத்தடியிலே கற்பாறையாய்க் கிடக்கக் கடவீர்கள்" என்று சபித்தருளினுர். இயக்கிமார்கள் மனந்தளர்ந்து வணங்கி, 'எம்பெருமானே! இச் சாபம் நீங்குவது எப்பொழுது?' என்று வினவினர். சிவபெருமான், "ஆயிரம் வருடம் கருங்கற் பாறையாய்க் கிடவுங்கள்; அதன்மேல் யாம் மதுரையினின்றும் அவ்விடத்திற்கு வந்து உங்களைப்பற்றிய சாபத்தைப்போக்கி உங்கள் பழைய வடிவத்தையுங் கொடுத்து, அட்டமாசித்திகளையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயந்திரிபு இன்றிக் காட்டுவோம். நீங்கள் போங்கள்" என்று அருளிச்செய்தார்.

**இயக்கியர்க்குப் பட்டமங்கையில் அட்டமாசித்தி யருளல்**

இயக்கிமார்கள் அறுவரும் பட்டமங்கை என்னும் தலத்திலுள்ள ஆலமரத்தின் அடியில் கருங்கற் பாறையாகிக் கிடந்தார்கள். அவர்கள், வேட்கோவர் வனைந்த புதுக்கலம் வீழுந் தோற்றம்போல உதிர்கின்ற ஆலம்பழத்தினுல் உடல் முழுதும் புதையக் கிடந்தனர். இவ்வாறு ஆயிரம் வருடம் சென்றபின் மதுரையின்கண் எழுந்தருளிய [2] எண் குணத்தினனுகிய சோமசுந்தரக் கடவுள் தனது இச்சையினுலே ஒப்பற்ற ஞானுசாரிய

---

1. பட்டமங்கை - இது பட்டமங்கலம் எனவும் பெயர் பெறும்; இவ்வூர் இராமநாதபுரத்தையடுத்த சிவகங்கையைச் சார்ந்தது.

2. எண் குணம் - இவை தன் வயத்தனுதல், தூயவுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருளுடைமை, முடிவில்லாத ஆற்றலுடைமை, வரம்பற்ற இன்பமுடைமை என்பன.

வடிவங்கொண்டு நீண்ட கற்பாறையாய்க் கிடக்கும் அப் பெண்களின் முன் வந்து தோன்றி அப் பெண்களின் வினை கெடத் திருநோக்கம் செய்தருளினர். உடனே அக் கற்பாறைகள் தாமரை, நெய்தல், காந்தள், முல்லை, ஆம்பல் முதலிய மலர்களைத் தம்மேல் பொருந்துமாறு பூத்தனபோல இயக்கிமார்கள் அறுவரும் கற்பாறை வடிவம் நீங்கி முன்னைய வடிவம் பெற்று எழுந்தார்கள். [1]பரிசவேதியில் இரும்பு தன் தன்மை கெட்டுப் பொன்னுவதுபோல் இறைவன் திருவருட் பார்வையால் அவர்கள் ஆணவமாகிய மாசு நீங்கித் தூய்மை அடைந்தனர்; அன்பு என்னும் ஆறு, பொறுமை என்னும் கரையைக் கடந்து இறைவனின் திருவருளாகிய கடலை அடைந்து கலத்தல்போலச் சிவபெருமான் திருவடியின்கண் வீழ்ந்து வணங்கினர். பின்னர், சிவபெருமான் அவர்களின் சிரமீது தமது திருக்கையை வைத்து[2] **அட்டமாசித்திகளையும்** அங்கையின்கண் வைத்த முத்தினைப்போலத் தெளிவுபட உபதேசிப்பாராயினர்.

*அட்டமாசித்திகள்*

சித்திகள் **அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்** என எட்டு வகைப்படும். இவை உள்ளத்தின்கண் அஞ்ஞானம் நீங்கிய ஞானிகளின் விளையாட்டின் வகையாகும்,

*அணிமா*

மிக நுண்ணிய உயிர்கள்தோறும் தான் மிக்க சிறுமையாகிய பரமாணுவாய்ச் சென்று தங்கும் நுண்மையே **அணிமா**வாம்.

*மகிமா*

மண் தத்துவம் முதல் சிவதத்துவம் ஈறுக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீங்காது நிறைந்திருக்கும் பெருமையே **மகிமா** வாம்.

---

1. பரிசவேதி - இஃது இழிந்த உலோகங்களைப் பொன்னுக்கும் மருந்து ஆகும்.

2. சிரசின்மீது கையை வைத்தல் பரிச தீக்கை ஆகும்.

அறவுஞ் சிறிய உயிர்தொறுந்தான்
பரம காட்டை அணுவாய்ச்சென்று
உறையுஞ் சிறுமை **அணிமா**வாம் ;
உவரி ஞால முதன்மேலென்(று)
உறையுஞ் சிவாந்தம் ஆறுறும்
உள்ளும் புறனும் அகலாதே
நிறையும் பெருமை தனைஅன்றோ
**மகிமா** என்னும் நிரம்பியநூல்.

**இலகிமா**

மேருமலையின் பாரம்போலக் கனத்திருக்கும் யோகியை எடுத்தால் இலேசான பரமாணுவைப்போலத் கனமற்று இருப்பதுவே **இலகிமா**வாம்.

**கரிமா**

இலேசான பரமாணுவைப்போல் மெலிந்திருக்கும் யோகியை எடுத்தால் மேருமலையின் பாரம்போலக் கனமாக இருப்பதுவே **கரிமா**வாம்,

இலகு மேரு பாரம்போல்
இருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு வான பரவணுப்போல்
இருப்பது **இலகி மா**வாகும் ;
இலகு வான பரவணுப்போல்
இருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு மேரு பாரம்போல்
இருப்ப தன்றோ **கரிமா**வாம்.

**பிராத்தி**

பாதலத்திலுள்ள ஒருவன் பிரமலோகத்தில் புகுதலும் மீண்டும் பாதலத்தை அடைதலும் **பிராத்தி**யாம்.

**பிராகாமியம்**

வேறு உடலிற் புகுதலும், விண்ணில் சஞ்சரித்தலும், தான் விரும்பிய இன்பங்களனைத்தையும் தானிருக்கும் இடத்தில் நினைத்தவண்ணமே வரச்செய்தலும் **பிராகாமிய**மாம்.

சூரியன் தனது உடலின் ஒளியால் எல்லாவற்றையும் விளங்கச் செய்தல்போல, நிலவுலகிலுள்ள பொருள்களனைத்தையும், மூன்று காலங்களையும், விண்ணுலகத்துப் பொருள்களையும் தன் உடம்பின் ஒளியினால் விளங்கச்செய்து, தான் இருந்தவிடத்திலேயே இருந்து அறிதலும் **பிராகாமியம்** ஆகும் என்பர்.

பிலத்தில் இருந்தோன் அயனுலகிற்
புகுதல் மீண்டும் பிலமடைதல்
பலத்தின் மிகுந்த **பிராத்தியதாம்;**
பரகா யத்தின் நண்ணுதல்வான்
புலத்தின் இயங்கல் இச்சித்த
போகம் அனைத்தும் தானிருக்கும்
தலத்தில் நினைந்த படிவருதல்
**பிராகா மியமாம்;** தவக்கொடியீர் !

விண்ணில் இரவி தன்னுடம்பின்
வெயிலால் அனைத்தும் விளக்குதல்போல்
மண்ணில் உளவாம் பொருள்பலவும்
கால மூன்றும் வானத்தின்
கண்ணி லுளவாம் பொருளுந்தன்
காயத் தொளியால் இருந்தறிதல்
எண்ணில் இதுவும் மறையொருசார்
**பிராகா மியம்**என்(று) இயம்புமால்.

**ஈசத்துவம்**

சிவபெருமானைப்போல ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் தன் இச்சையின்படியே இயற்றிச் சூரியன்முதல் ஒன்பது கோள்களும் ஏவல் கேட்க வீற்றிருப்பதுவே **ஈசத்துவமாம்.**

**வசித்துவம்**

அவுணர், பறவை, விலங்கு, பூதம், மனிதர் முதலிய பல்வகை உயிர்களையும், இந்திரன் முதலிய திக்குப் பாலர் எண்மரையும் தன்வசமாகச் செய்து கொள்வதுவே **வசித்துவமாம்.**

ஈச னெனமுத் தொழிலுந்தன்
இச்சை வழிசெய்(து) எழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத்
திகழ்வ(து) **ஈசத் துவ**மாகும்;
பூசல் அவுணர் புள்விலங்கு
பூத மனிதர் முதலுலகும்
வாச வாதி எண்மருந்தன்
வசமாக் கொள்கை **வசித்துவ**மாம்.

எம்மை யறிந்த சிவயோகியர் இச்சித்திகளை விரும்பார்கள், ஆயினும், இச்சித்திகள் அவர்கள் உடம்பின் நிழல்போலத் தொடர்ந்து உலகினர்க்கு அவர்களின் பெருமைதனை உணர்த்தும் தகுதியை உடையன என்று சிவபெருமான் இயக்கியர் அறுவர்க்கும் அட்டமாசித்திகளைத் தெளிவுபட அறிவித்தருளினர்[1].

**இயக்கியர் அறுவரும் சித்திபெற்றுக் கயிலைமலை அடைதல்**

இவ்வாறு சிவபெருமான் தெளிவுபட உபதேசித்தருளிய அட்டமாசித்திகளையும், இயக்கிமார்கள் அறுவரும் உமாதேவியாரின் தியானவலியாலே நன்கு பயின்றனர்: பிறகு விண் வழியே சென்று கயிலைமலையை அடைந்தனர்.

செய்யுள் — 29
ஆகச் செய்யுள் — 1788

———

1. இங்கு, "பட்டமங்கையிற் பாங்கா யிருந்தங்(கு), அட்டமா சித்தி யருளிய வதுவும்" (திருவாசகம் கீர்த்தித் திருவகவல்) என வரும் அடிகளும், "இத்தி தன்னின் கீழிரு மூவர்க்(கு) [அத்திக்கு] அருளிய அரசே போற்றி" (திருவாசகம் போற்றித் திருவகவல்) என வரும் அடிகளும் உன்னற்பாலன,

## 34. விடையிலச்சினையிட்ட படலம்

### காடு வெட்டிய சோழன் தன்மை

உமாதேவியார் தழுவக்குழைந்த குறியினைக்கொண்ட ஏகம்பநாதர் எழுந்தருளியிருக்கும் காஞ்சி நகரில் **காடு வெட்டிய சோழன்** என்னும் மன்னன் ஒருவன் இருந்தான். அவன் அக் காஞ்சியிலுள்ள காடு முற்றும் வெட்டி நகராகத் திருத்திய காரணத்தால் 'காடு வெட்டிய சோழன்' எனப் பெயர்பெற்றான். அம் மன்னன் உத்தம சிவ பத்தர்களெல்லாரினும் மிக உத்தம சிவபத்தன்; நறு மணங் கமழும் சந்தனமும் அணிகலனும் அழியும் பொருள் என்று கருதி வெள்ளிய திருநீறும், உருத்திராக்க மாலையும் அணிந்த மேனியை யுடையவன்; வேதங்களும், புராணங்களும் முடிவாகக் கூறும் பொருள் சிவபெருமானே என்பதையும், அச் சிவபெருமானே மேலான உண்மைப் பொருள் என்பதையும் அளந்தறிந்த கேள்வியையுடையவன்; நான்கு வேதங்களையும், வேதாங்கம் ஆறையும் ஐயம் திரிபற ஓதி வுணர்ந்தவன்; சிவ புராணங்களை நாடோறும் நியமமாகக் கேட்டு இறைவன் திருவடியின்கண் வைத்த அன்புடையவன்; மதுரைச் சொக்கலிங்கப் பெருமானின் திருவிளையாடலையும் செவியினாலே மொண்டு சுவையினையுடைய தேனும் பாலும் கலந்து உண்டு களிப்பவன்.

### சோமசுந்தரக் கடவுள் சோழன் கனவில் தோன்றியருளுதல்

காடு வெட்டிய சோழன், மதுரையில் அங்கயற்கண் அம்மையுடன் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளைக் கண்டு தொழவேண்டுமென்னும் விருப்பம் மேன்மேலும் கொண்டு, "நான் எப்பொழுது மதுரைப் பிரானின் திருவடிகளைக் கண்டு வணங்குவேன்?" என்று அன்பு கூர்ந்து அப் பெருமானைச் சிந்தித்துக்கொண்டே ஒருநாள் இரவில் நித்திரை செய்தான். அப்பொழுது வெள்ளியம்பலத்தில் ஆடியருளும் பெருமான், சித்தமூர்த்தி வடிவம் தாங்கிச் சோழனுடைய கனவின்கண் தோன்றி, "சோழனே! நின் மனத்தின்கண் சிறிதும் அஞ்சற்க; நீ ஒருவனாய் மாறு வேடம் பூண்டு துணை

யின்றி இன்றே புறப்பட்டு மதுரைக்கு வந்து தரிசனஞ்செய்து கொண்டுபோவாயாக" என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர்.

**சோழன் மதுரையை நோக்கிப் புறப்பட்டுச் செல்லல்**

உடனே காடு வெட்டிய சோழன், இறைவன் அருளிப் பாட்டினைக் கேட்டு விழித்துணர்ந்து மிக வியப்படைந்து சேனைகளும் அமைச்சர்களும் பிறரும் இன்றி அவ்விரவிலேயே திருவருள் துணையாய் நின்று வழிகாண்பிக்க, அன்பு என்னும் குதிரையிலேறித் [1] திருவைந்தெழுத்தென்னும் வாட்படையினைக் கொண்டு மதுரையை நோக்கி வழிக்கொண்டான்; மலைகளும், பாலை நிலமும், பல காட்டாறுகளும், பல பெரிய ஆறுகளும், வானோங்கி நிற்கும் கரும்புகளும், செந்நெற் பயிர்களும் மிகுந்த மருத நிலங்களும் பிற்பட்டுப் புறத்தே கழிய நடந்து சென்று வையையாற்றின் கரையை அடைந்தான்.

**வையை வெள்ளத்தைக் கண்டு சோழன் உள்ளம் தளர்தல்**

சோழன் அங்கு வருவதற்கு முன்னரே வையையாறு வெள்ளம் பெருகிக் கொந்தளித்து ஆரவாரித்துக் கரையை அகழ்ந்து, மரங்களை வேர்கள் அறவும் அக் கிளைகள் முறியவும் தள்ளிச் சுழன்று ஓடியது. வையையாற்றின் கரையிலே நின்று வெள்ளத்தைக் கண்ட சோழமன்னன் மனங்கலங்கி, "சோம சுந்தரக் கடவுளைத் தரிசித்து வணங்குதற்கு இடையூறு விளைந்ததே! நெய்கலந்த அறுசுவை உண்டியைப் பசித்தவனுக்குப் பொற்கலத்தில் இட்டிருக்க, அவன் அதனை உண்ணப்போகும் சமயத்தில் வந்து தடுத்து விலக்கிக் கண்கலங்கச் செய்பவரைப் போல இந்நதி தடுத்ததே! சூரியன் உதிக்கும்பொழுது வந்தாலோ பகைகொண்டுள்ள பாண்டியன் துன்பஞ்செய்வான்; பாண்டியனைத்தான் பகைவன் என்று கருதினேன்; இவ் வையையும் பகையாக ஆயிற்றே!" என்று எண்ணி வருந்தினன்.

---

1. இங்கு, "படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்செ னாவிற் கொண்டேன்" (திருநாவுக்கரசர் தேவாரம்) எனவரும் அடி சிந்திக்கற் பாலது.

### இறைவன் சித்தராய் வந்து சோழனை அழைத்துப்போதல்

அப்பொழுது சிவபெருமான் வெள்ளத்தைக்கண்டு மனம் வருந்தும் சோழனுடைய மெலிவை நோக்கிக் கனவிலே வந்த சித்தர்போல் அவன் அருகிலே எழுந்தருளி வந்து பள்ளத்தை நோக்கி ஓடிவருகின்ற வெள்ளநீரை நோக்கி வற்றும்படி திருநோக்கஞ்செய்தார். உடனே வெள்ளம் வற்றியது. சித்தமூர்த்திகள், அச் சோழமன்னனை அழைத்துக்கொண்டு வற்றிய வையையாற்றினைக் கடந்துசென்று வடக்கு மதில் வாயிலினைத்திறந்து உள்ளேபோய்ப் போர்வீரர்கள் நிறைந்த காவல்களையும், பல வீதிகளையும், தாண்டிப் பொற்றாமரைத் தீர்த்தத்தையும் அடைந்து அதில் சோழனை நீராடச் செய்வித்துத் தமது திருக்கோயிலுட் புகச்செய்து இந்திரவிமானத்தில் எழுந்தருளியிருக்கும் தம்மை வணங்குவித்து அதன்பின் மீனாட்சியம்மையையும் வணங்குவித்து உள்ளத்தைத் தூய்மை செய்து பேரின்பப் பெருக்கில் ஆழச்செய்தருளினார்.

### சோழமன்னன் சோமசுந்தரக்கடவுளை வணங்கித் துதித்தல்

காடுவெட்டிய சோழமன்னன் சோமசுந்தரக் கடவுளையும் மீனாட்சியம்மையையும் தரிசித்து வணங்கிப் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கிநின்று, "அடியேன் எண்ணியவற்றை எண்ணியபடியே முடிவுபெறச் செய்தவனே போற்றி! பண் அமைந்த மறைகளால் அறியப்படாத அங்கயற்கண் அம்மையின் தலைவனேபோற்றி! கண்ணுவர் முதலிய முனிவர்கட்கு வேதத்தின் பொருளை அருளிச்செய்த மெய்ப்பொருளே போற்றி! விண்ணிலிருந்து இறங்கிய விமானத்தில் எழுந்தருளிய சோமசுந்தரன் என்னும் பேரழகுடையவனே போற்றி! அடியவன் முன்னுளில் [1]எண்ணிறந்த பிறவிகள்தோறும் எவ்வெவ்வுடல்கள் எடுத்தேனோ அவ்வுடல்களெல்லாம் நல்வினையும் தீவினையுமாகிய அவ்விரண்டின் பொருட்டே ஆகும்; அடியேன் இப்போது தாங்கியுள்ள உடல் ஒன்றே உமது திருவடிகளுக்கு அடிமைபூண்டது;

---

1. பிறவிகள் எண்ணிலாதன என்பதை, "தொல்லை நம் பிறவி எண்ணில் தொடுகடல் மணலு மாற்றா, எல்லைய" என வரும் சீவக சிந்தாமணி அடிகளாலும் அறியலாம்.

ஆதலின், ஐயனே! இந்த உடலே எனக்கு உற்ற உடலாய் நின்று பயன்தந்தது" என்று பல கூறி இறைஞ்சிப் பல வரங்களையும் வேண்டிக்கொண்டான்.

எண்ணிய வெண்ணி யாங்கே
யான்பெற முடித்தாய் போற்றி!
பண்ணியல் மறைகள் தேருப்
பான்மொழி மணாள போற்றி!
புண்ணியர் தமக்கு வேதப்
பொருளுரை பொருளே போற்றி!
விண்ணிழி விமான மேய
சுந்தர விடங்க போற்றி!

எவ்வுடல் எடுத்தேன் மேனாள்
எண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுடல் எல்லாம் பாவம்
அறம்பொருட் டாக அன்றோ!
தெவ்வுடல் பொடித்தாய்! உன்றன்
சேவடிக்(கு) அடிமை பூண்ட
இவ்வுடல் ஒன்றே அன்றோ?
எனக்(கு)உடல் ஆன(து) ஐயா!

**சித்தமூர்த்திகள் வடக்கு வாயிலில் இடபக்குறி யிடுதல்**

சோமசுந்தரக்கடவுளாகிய சித்தமூர்த்திகள் சோழனை நோக்கி, "மன்னனே! நீ இங்கு வந்த செய்தியைப் பாண்டியன் அறிந்தால் உனக்குத் துன்பஞ் செய்வான்" என்று சொல்லி, அவனை வடக்குவாசல் வழியாக அழைத்துக்கொண்டு வையை யாற்றின் வடகரை வரையுஞ் சென்று, அவன் நெற்றியிலே விபூதியைத் திரிபுண்டரமாகச் சாத்தி, "உன்னுள்ளத்திலே நிறைந்த கருத்துக்கேற்க உனக்கு நல்லதுணை உண்டாகப் பெற்றுச் செல்லக்கடவாய்" என்று சொல்லி அவனை வழி விடுத்துத் திரும்பிவந்து தாம் முன் திறந்த [1]வடக்குமதில்

1. இவ்வடக்கு மதில் வாயிலுக்கு, "இலச்சினை வாயில்" என்று பெயர்.

வாயிற்கதவினை மூடி அதன்கண் **இடப முத்திரையை** இட்டுத் தமது விண்ணிழி விமானத்தின்கண் எழுந்தருளியிருந்தார்.

**காவலர் வடக்குவாயிலில் இடபக் குறியைக்கண்டு ஐயுறல்**

இரவாகிய அரக்கியின் கருமையாகிய கையினைக் குறைப்பவன்போலக் கதிரவன் தன் கிரணங்களாகிய கைகளை நீட்டித் தோன்றினான். அப்பொழுது வாயில் திறப்பவர்கள் வடக்கு வாயிலின் கதவிலே **இடபக்குறி** பொறிக்கப்பட்டிருப்பதைக் கண்டு ஐயுற்றனர்; உடனே மற்றைய மூன்று வாயில்களினும் விரைந்துசென்று கதவுகளை உற்றுநோக்கினர்; அவ்விடங்களில் தாம் நேற்றுவைத்த **கயல் முத்திரை** பிறழாமல் இருப்பதைக் கண்டனர்; "இது யாதாய் விளையுமோ?" என்று அஞ்சிக் குலபூடண பாண்டியன் முன்னே சென்று, "அரசே போற்றி! நமது வடக்கு வாயிற் கதவின்கண் இட்டிருந்த மீனக்குறியை மாற்றி இடபக்குறியினை இட்டவர் யார் என்று அறிகிலோம்" என்றனர். உடனே பாண்டியனும் வந்து இடபக் குறியைக் கண்டு, "இஃது ஓர் அற்புதம்! இம் மாயையைச் செய்யவல்லவர் யாவர்? ஒன்றும் அறிகிலேன்" என்று ஐயங்கொண்டவனாய்த் தன் அரண்மனையை அடைந்தான். அவன் அன்று பகல் முழுதும் உணவை நீக்கி இரவினும் உணவின்றி மலர்ப்படுக்கையை வெறுத்துக் கவலைமிகுந்தவனாய்த் தரையின்மீது படுத்து நித்திரை செய்தான்.

**பாண்டியன் கனவில் இறைவன் தோன்றி அருள்புரிதல்**

அன்றிரவு சிவபெருமான் குலபூடண பாண்டியன் கனவில் தோன்றியருளி, "பாண்டியனே! ஆத்தி மாலையை அணிந்த சோழன், உள்ளத்தில் நிறைந்து வழிந்த அன்பினாலே காஞ்சியிலுள்ள காடெல்லாம் வெட்டி நம்மிடத்தும் பத்தியாகிய விதையை விதைத்தவன்; அவன் இங்கு வந்து நம்மை வணங்க விரும்பினான்; நாம் இந்த வடக்கு வாயிலைத் திறந்து அவனை உள்ளே அழைத்துக்கொண்டு வந்து தரிசனம் செய்வித்தோம்; பிறகு அவனை மீண்டும் அனுப்பிவிட்டுப் பின் தாழிட்டு நமது இடபக்குறியை இட்டோம்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார்.

**குலபூடண பாண்டியன் இறைவன் செயலையறிந்துமகிழ்தல்**

உடனே குலபூடண பாண்டியன் விழித்தெழுந்து ஐயுறவினின்றும் நீங்கி, அஞ்சி, வெயர்த்து, உடல் பூரித்துப் பல பாக்களினாலே சோமசுந்தரக் கடவுளைத் துதித்தான்; அன்புக் கெளிவந்த சிவபெருமானின் மாட்சிமையை நோக்கி நினைக்குந்தோறும் இடையறாது சுரந்து எழுகின்ற [1] அற்புத வெள்ளமும் [2] சிவானந்த வெள்ளமும் தன்னைக் கொள்ளை கொள்ளத் தன் அரண்மனையினின்று நீங்கிச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை யாவருக்கும் தெளிவித்து அவர்களையும் தன்னைப்போல் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கச் செய்தான்,

**குலபூடண பாண்டியன் சிவபதம் அடைதல்**

பின்பு, குலபூடண பாண்டியன் தன் மகன் **இராசேந்திர பாண்டியனிடம்** வெண் கொற்றக் குடையினையும் செங்கோலையும் அரசமுடியையும் அளித்துவிட்டுக் கொன்றை மாலை அணிந்த சிவபெருமானின் திருவடி மலரைத் தனது முடியில் அணிந்து விண்ணுலகை ஆளும் அரசுரிமையைப் பெற்றனன்.

செய்யுள்—30

ஆகச் செய்யுள்—1818

---

1. அற்புத வெள்ளம் - இங்குச் சிவஞானப் பெருக்கம் ஆகும்.
2. சிவானந்த வெள்ளம் - இங்குச் சிவபோகப் பெருக்கம் ஆகும்.

## 35. தண்ணீர்ப் பந்தல் வைத்த படலம்

**சோழன் தன் மகளை வழுதிக்குக் கொடுக்க விரும்புதல்**

இராசேந்திர பாண்டியன் செங்கோல் செலுத்தும் நாளிலே, **காடு வெட்டிய சோழன்** சோமசுந்தரக் கடவுளை யாவருமறிய வெளிப்படையாக வந்து வந்து தரிசனஞ் செய்து கொண்டு போகக் கருதி இராசேந்திர பாண்டியனுடைய நட்பினைப் பெறற் பொருட்டு அவனுக்கு வரிசையாகிய கையுறையை அனுப்பினன். இராசேந்திர பாண்டியன் காவிரி நாடனாகிய சோழ மன்னன் அனுப்பிய பொன்னாபரணம், பொன்னுடை முதலாகவுள்ள பிற பொருள்களையும் ஏற்றுக் கொண்டு, தானும் சோழனுடன் மனம் ஒன்றுபடும் நட்பினைப் பெறக் கருதி வேறு கையுறை அனுப்பி நட்புப் பூண்டான். காடு வெட்டிய சோழன் மகிழ்ச்சியுற்றுத் தன் மகளை இராசேந்திர பாண்டியனுக்கு மணம் செய்து கொடுக்க உடன்பட்டான்.

**சோழன் தன்மகளை அரசசிங்கனுக்கு மணஞ்செய்தளித்தல்**

இராசேந்திர பாண்டியனுக்குச் சோழன் தன் மகளைக் கொடுக்க உறுதி செய்த செய்தியினை இராசேந்திரனுடைய தம்பியும் பழிக்கு அஞ்சாதவனுமாகிய **அரச சிங்கன்** (இராச சிங்கன், இராச சிம்மன்) என்பவன் கேள்வியுற்றான். தன் தமையனுக்குப் பேசப்பட்ட சோழனுடைய மகளைத் தானே மணந்துகொள்ளக் கருதித் தமையனை வஞ்சித்துக் காஞ்சி நகரை அடைந்தான். அது கேட்ட சோழன் கடல்போன்ற சேனைகள்சூழ அரசசிங்கனை எதிர்கொண்டு அழைத்துச்சென்று இராசேந்திர பாண்டியனுக்கு என்று வரையறுத்திருந்த தன் மகளைத் திருமணம் புரிவித்தான்.

**சோழன் தன் மருகனோடு பாண்டியன்மீது படையெடுத்தல்**

பிறகு, காடுவெட்டிய சோழன் பாண்டிநாட்டு அரசுரிமை தன் மருமகனாகிய அரசசிங்கனுக்குக் கிடைத்தலை விரும்பி, இராசேந்திர பாண்டியனைப் பிடிக்கக் கருதினன்; உடனே மருமகனாகிய அரசசிங்கனோடு எண்ணில்லாத சேனைகள்சூழ

இராசேந்திரபாண்டியன்மேல் போர் குறித்து முரசு அறை வித்துப் புறப்பட்டுச்சென்று மதுரைக்கு இரண்டு யோசனை தூரத்தில் தங்கிப் பாடி வீடு அமைத்தான்.

**இறைவன் வருந்திய பாண்டியனுக்கு அருள்புரிதல்**

காடுவெட்டிய சோழமன்னன் அரசசிங்கனோடு படை எடுத்து வந்திருப்பதை ஒற்றர்கள்மூலம் இராசேந்திர பாண்டியன் அறிந்தான்; திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை வணங்கி நின்று, "எம்பெருமானே! நள்ளிரவிலே தனியனாய் வந்து உமது திருவடியைப் பணிந்து சென்ற உமது பத்தனாகிய காடுவெட்டிய சோழன், பின்பு தமியேனுக்குப் பலவரிசைகள் விடுத்துக் கலந்த நட்பினைப்பெற விரும்பியவன், இப்பொழுது தமியேனுக்கு விரோதமாகப் படை எடுத்து வந்துள்ளான். அறத்தினை விடுத்த அசுரர்களின் முப்புரங்களையும் நீறுபடுத்திய புண்ணியனே! அன்று அவனுடைய அறச்செயலுக்குத் துணையாகின்ற நீர் இன்று அவன் செய்யும் மறச்செயலுக்கும் துணையாகின்று அருள் வீரோ!" என்று குறையிரந்து வேண்டினான். அப்போது சோமசுந்தரக்கடவுளின் திருவருளால், "பாண்டியனே! நீ நாளைக்கு உன் சேனையோடு போர்க்களத்திற்குச்சென்று உன் பகைவனோடு எதிர்த்துப் போரிடுக; வெற்றி உன்னுடைய தாகச் செய்வோம்" என்று வானில் ஓரசரீரிவாக்கு எழுந்தது. அவ்வானொலியினைக் கேட்ட இராசேந்திர பாண்டியன் மகிழ்ச்சிக் கடலிலே மூழ்கியவனாய்ச் சோமசுந்தரக்கடவுளைப் பன்முறை வணங்கி விடைபெற்றுக்கொண்டு அங்குநின்றும் நீங்கித் தன்னிருக்கையை அடைந்து இரவு விடியும் எல்லையை எதிர்நோக்கிக்கொண்டிருந்தான்.

**பாண்டியன் சோழனோடு போருக்கெழுதல்**

நீண்ட இரவு கழிய வானம் வெளுக்குமுன்னரே இராசேந்திரபாண்டியன் துயில் நீங்கி எழுந்தான்; சந்திமுதலிய நித்திய கடன்களையும், சிவபூசையையும் முடித்துக்கொண்டு எழுந்து தன் சேனைகள்சூழப் புறப்பட்டுப் போர்க்களத்தை அடைந்தான். அலைமோதும் கடலின்மேல் ஒரு ஆறு சென்று-பாயு

மாறு போலச் சோழனது பெரும்படை வீரராகிய கடலின்மேல் பாண்டியனது சிறு சேனைசென்று வருத்தி நின்றது.

**சோழன்படையும் பாண்டியன்படையும் கலந்து போரிடுதல்**

இடிபோன்ற குரலினை உடையவரும், காற்றைப்போல் கடிதுசெல்லும் செலவினை யுடையவரும், தீப்போன்ற சின முடையவரும், வீரநகையினை உடையவரும், போரில் மானமாகிய அணியினை யுடையவரும், சீற்றங்கொண்டு மடித்த வாயினை யுடையவருமாகிய இருதிறத்துப் படைவீரரும் எதிர்த்துக் கை கலந்து போர்புரியத் தொடங்கினர். சோழனுடைய சேனைகட்கெல்லாம் பாண்டியனுடைய சேனைகள் சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் ஒன்று அனந்தமாக உருக்கொண்டு வந்து தோன்றின. தேர்செல்லும் ஒலியும், குதிரைகள் கனைக்கும் ஒலியும், யானைகளின் பிளிறொலியும், பெரிய வாத்தியங்கள் ஒலிக்கும் ஒலியும், வீரர்கள் புரியும் போரின் ஒலியும், அவர்கள் தோளினைத் தட்டும் ஒலியும் ஒன்றுபட்டுக் கடல் ஒலியுடன் கலந்தன. வில்வீரர்களோடு வில்வீரர்களும், வாள்வீரர்களோடு வாள் வீரர்களும், வேல் வீரர்களோடு வேல் வீரர்களும், மல்லர்களொடு மல்லர்களும், யானை வீரர்களோடு யானை வீரர்களும். குதிரை வீரர்களோடு குதிரை வீரர்களும், தேர் வீரர்களோடு தேர் வீரர்களும் தீயுங் காற்றுங்கூடி எதிர்த்துப் பொருதாற் போலப் போரிட்டனர். சோழனுடைய வீரர்கள் பாண்டியனுடைய படைவீரர்கள் செலுத்தும் கணைகளை எதிர்த்து நின்று தடுப்பர்; கொடிய கணைகளைத் தாம் விடுத்துப் பின்பு அவர்கள் தொடுக்கும் அம்புகளை வில்லோடு துண்டுபடுத்துவர்; அதன் பின், அவர்கள் அளவின்றிச் செலுத்தும் அம்புகள் தம் மார்பில் தைக்க அவற்றைப் பிடுங்கிப் பகைவர்மேல் எய்து கொல்லுவர்;[1] பாண்டியனுடைய படைவீரர்கள் சோழனுடைய படைவீரர்களின்மேல் மழைபோலக் கணைகளைப் பொழிந்து களித்து நின்று துள்ளுவர்; பகைவர் சொரிந்த அம்புகளுக்கு எதிர் தப்பி ஒதுங்கி நின்று, அவர்களின் அம்பும் வில்லும் முறியுமாறு கணைகளைத் தொடுத்து வீரமுழக்கஞ் செய்வர்.

---

1. இதனைத் தொல்காப்பியர் 'நூழிலாட்டு' என்பர்.

படைவீரர்களின் கால்கள் முறிந்தன; அறுபட்ட தலைகள் நிலத்தில் உருண்டன; மலைபோல் திரண்ட தோள்கள் துண்டாகிச் சரிந்தன; தேர்கள் அழிந்தன; போர்க் கருவிகள் முறிந்தன; யானைகள் துதிக்கை அறுந்து அலறி வீழ்ந்தன; இரத்த வெள்ளம் ஓடியது; கழுகுகளும், பூதங்களும், பேய்களும் போர்க்களமெங்கும் நெருங்கின. இவ்வாறு இரு மன்னர்களின் படைவீரர்களும் உடம்பின் நிழல் அடியில் ஒடுங்குமாறு வான் உச்சியில் சூரியன் வருமளவும் இடைவிடாது போர் செய்தனர்.

**வேனிலின் கொடுமை**

இறுதிக் காலத்தில் எல்லாவற்றையும் அழிக்குமாறு நின்ற உருத்திர மூர்த்தியின் நெற்றிக் கண்ணினின்று சிந்திய தீயைப்போலச் சூரியன் கொதித்து நின்று எரித்தலால், எல்லா ஆறுகளிலும் நீர் வறண்டது; இந் நிலவுலகமே அல்லாமல் வானுலகும் கருகி ஆகாய கங்கையும் வற்ற **வேனிற் காலம்** வந்துற்றது. சூரியனுடைய வெய்ய கிரணங்கள் நில வுலகத்தைப் பிளந்து சென்று பாதலத்தையும், மலைகளையும் பிளந்தன; சோலைகளின் இலைகள் கருகி விழுமாறு செய்தன; யாவரையும் கண்கூசுமாறு கானல் எங்கும் வீசிற்று. கானல் நீரும் வேர்வை நீரும் தவிர வேறு நல்ல நீர்கள் சிறிதும் இன்றி வற்றின.

**சேனை வீரர் முதலியோர் வேனில் வெப்பத்தால் வருந்துதல்**

**தீயவரோடு சேர்ந்த நல்லவரும் தீயவர் ஆவார்**; ஆதலால், வெப்பு நிலத்தில் படிந்து வரும் காற்றும், திங்களின் ஒளியும் சுடா நின்றன. கொடிய வெம்மைக்கு ஆற்றாத யானைகள் மதநீர் சுரத்தல் மாறிச் சீற்றமும் செருக்கும் ஒழிந்து வாடிச் சோர்ந்தன; ஊழிக் காற்றைப்போல் விரைந்து ஓடும் குதிரைகள் தென்றலைப்போலத் தளர்ந்த நடையினைக் கொண்டன. சூறைக் காற்று என்னும் பாகனால் செலுத்தப்பட்ட கானலாகிய தேரின்மேல் வேனிற்காலமென்னும் அரசன் ஏறிச் சினந்து வெப்பமாகிய படைக்கலங்களை வீச இரண்டு மன்னர்களின் சேனைகளும் அவ் வெம்மைக்குத் தோற்று நீர் வேட்கை வருத்த வாடின. **சிறிதும் இரக்கமில்லாத செல்வரிடம் சென்று**

**இரப்பவரைப்போலச்** சிலர் வெப்பத்தை அள்ளி வீசுகின்ற கள்ளி மரத்தின் நிழலில் சென்று ஒதுங்கினர்; மிக **வறுமை அடைந்தோர் தம்மிலும் மிகுந்த வறுமையையுடையாரிடம் சென்று இரந்தல்போலச்** சிலர் இலைகள் கருகி உதிர்ந்த மரத்தின் நிழலின்கீழே சென்று ஒதுங்கினர்; யானை, குதிரை, தேர் இவற்றின் சிறு நிழலில் சிலர் ஒதுங்கினர்; கேடகத்துள்ளும் வெள்ளிய குடையினுள்ளும் சென்று சிலர் ஒதுங்கினர்; வீர சுவர்க்கஞ் சென்ற வீரர்களின் பெயர் குறித்து நின்ற கற்களின் நிழலின் கீழே சிலர் ஒதுங்கினர்.

**சோமசுந்தரக் கடவுள் தண்ணீர்ப் பந்தல் வைத்தல்**

இவ்வாறு வெப்பத்தால் வருந்துஞ் சமயத்தில் அளவிறந்த உயிர்களனைத்திற்கும் ஈன்ற தாயைப்போல் விளங்கும் பெருங் கருணையாளரும், தராசுக்கோல்போல் நடு நிலைமை தாங்குபவரும், கூடற்பெருமானுமாகிய சோமசுந்தரக் கடவுள், இராசேந்திர பாண்டியன் படையின் நடுவுள், நான்கு வேதங்களும் நான்கு கால்களாகப் பொருந்தியதொரு தண்ணீர்ப் பந்தர் வைத்து, அதன் கீழே நெற்றியில் அணிந்த திரிபுண்டரமும், காதின்மீது அணிந்த மலரும், திருவடியிலே தரித்த ஒற்றைக் கிண்கிணியின் ஒலியும், இடுப்பில் கச்சினால் இறுகக்கட்டப்பட்ட புலித்தோலாடையும், கண்டோர் மனத்தைக் கவரும் திருப்புன்முறுவலும், திருவுள்ளத்திலெழுந்த அருட்குறிப்பும் புலப்பட, வேதத்தில் கூறப்படும் தவக்கோலம் உடையவராய் எழுந்தருளியிருந்து சடையில் அணிந்த வற்றாத கங்கை நீரை நிரப்பிய **ஒரு கெண்டியை** ஏந்தி ஒருவருக்கு ஒன்றேயாய் இலட்சம் பேருக்கு இலட்சமாய் உள்ள துவாரத்தினாலே தண்ணீர் வார்த்துத் தாகத்தைத் தணித்தருளினார்.[1]

**இராசேந்திர பாண்டியன் வெற்றிபெறுதல்**

பாண்டியனுடைய படைவீரர்கள் சிவபெருமான் வைத்தருளிய மணம் மிகுந்த மலரால் மணம் ஊட்டிய தண்ணீர்ப்

1. இங்கு, "தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து, நன்னீர்ச் சேவகனாகிய நன்மையும்" (திருவாசகம், கீர்த்தித் திருவகவல்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

பந்தலை அடைந்து தண்ணீர் குடித்து இளைப்பு நீங்கினர்; மீண்டும் வலிமை பெற்றுச் சோழன்மேல் போருக்குச் சினந் தெழுந்து அளவிறந்த அவன் படைகள் சிதறும்படி தும்பை மாலை அணிந்து போரினைப் புரிந்தனர். சோர்வடைந்திருந்த சோழன் படை கலங்கிக் கடலுடைந்தாற்போலப் புறங் கொடுத்து ஓடியது. அப்போது இராசேந்திர பாண்டியன் வாகை மாலை சூடினன். படைவீரர்கள் காடு வெட்டிய சோழனை அவன் மருகனாகிய அரசசிங்க பாண்டியனோடு பிடித்து வந்து இராசேந்திர பாண்டியன்முன் நிறுத்தினர்.

**பாண்டியன் சோழன் முதலியோரை விடுவித்து அரசாளுதல்**

இராசேந்திரபாண்டியன், தன்னிடம் கொண்டுவரப்பட்ட சோழனையும் தன் குலத்திற்கு [1]வடு உண்டாகும்படி செய்த தம்பியையும் சோமசுந்தரக் கடவுள் திருமுன் கொண்டுபோய் விடுத்து, "எம்பெருமானே! உமது திருவுளம் யாது?" என்று வணங்கி நின்றான். அப்போது ஆகாயத்தினின்றும் இறைவன் திருவருளால், "பாண்டியனே! நீ அறநெறி பிழையாதவன் அல்லவா? உன் கருத்துக்கு இசைந்ததைச் செய்யக் கடவை" என்று ஓரசரீரி வாக்கு எழுந்தது. பாண்டியன் அதுகேட்டு அறநெறியால், காடுவெட்டிய சோழனுக்குச் சிலயானைகளையும், குதிரைகளையும், அணிகலன்களையும், பிறவற்றையும் கொடுத்து அனுப்பிவிட்டான்; பின்பு தனது தம்பியாகிய அரசசிங்கனை, அவனது அஞ்சாமையும் ஆண்மைச் செருக்கும் நீங்க, அவன் அனுபவிக்கும் செல்வங்களுள்ளே சிலவற்றை மாற்றி அவனை வேறாக ஒதுக்கிவைத்துவிட்டு எல்லா வுயிர்களுக்கும் அன்னை போல இருந்து நிலவுலகில் பல வளங்களும் சிறக்க வாழ்ந்து வந்தனன்.

செய்யுள்—37

ஆகச் செய்யுள்—1855

---

1. வடு - குற்றம்; அது தனக்கு மனைவியாகக் குறித்தவளை மணஞ் செய்ததும், தன் அரசை வௌவப் போருக்கு வந்ததும் ஆகும்.

# 36. இரசவாதஞ் செய்த படலம்

**திருப்பூவணத் தலத்தின் பெருமை**

இராசேந்திரனின் பைந்தமிழ்ப் பாண்டி நாட்டிலே **திருப்பூவணம்** என்னும் பெயர்கொண்ட ஒரு சிவ தலம் உள்ளது. அங்குச் சிவபெருமான், வையையாறு தன் அலைகளாகிய கைகளால் பக்கங்களிலுள்ள பூஞ்சோலையில் மலர்ந்த பல மலர்களையும் எடுத்துத்தூவி வணங்க எழுந்தருளியுள்ளார். அத் தலத்தில் அசையும் பொருள் அசையாப் பொருள் எல்லாம் சிவலிங்க வடிவம் என்று கருதிக் கோள்களும் விண்மீன்களும் சற்று விலகிச் செல்லும்; இந்திரன், சூரியன் முதலிய பல தேவர்கள் வந்து வழிபட்டுத் தாம் விரும்பிய வரங்களைப் பெற்றுள்ளனர். இத்தகைய திருப்பூவணத்தின் சிறப்புத்தான் என்னே !

**பொன்னனையாளின் தன்மை**

கிளிகள் நிறைந்து வாழும் சோலை சூழ்ந்த திருப்பூவணப் பெருமானின் திருக்கோயிலிலே பணிபுரியும் [1]உருத்திர கணிகையர்களுள்ளே **பொன்னனையாள்** என்னும் பெண் ஒருத்தி இருந்தாள். அவள், உருத்திர கணிகையர்களின் தவப்பயன் போன்றவள்; வண்டு மிழற்றும் கூந்தலையுடைய தெய்வப் பெண்ணை ஒத்தவள்; தேவர்கட்கும் உள்ளத்தில் மயக்குகின்ற அமுதம் போன்றவள்; ஏழிசைகளையுடைய யாழின் வழியே பாடுவதினும், பரத நூல் முறைப்படி ஆடுவதிலும் மிக வல்லவள்; பெண்களுக்குரிய அழகின் தன்மையினும், பிற வற்றிலும் அரம்பை மகளிரை நிகர்த்தவள்; ஆயினும் சிவ புண்ணிய நெறியில் நடக்கும் ஒழுக்கத்தினால் அவ்வரம்பை மகளிரினும் மேலானவள்.

இத்தகைய சிறப்புக்களுடன் விளங்கிய பொன்னனையாள் நாடோறும் தன் தோழியர்களுடன் வைகறையிலே எழுந்து

---

1. உருத்திரகணிகையர் - இவர்கள் முன்னொரு காலத்திலே தாருக வனத்தில் பிட்சாடன வடிவோடு சென்ற சிவபெருமான் அங்குள்ள இருடி பத்தினிகளை அன்போடு நோக்க, அவர்கள் கருப்பமுற்றுப் பெற்ற பெண்கள் ஆவர். இந்த உருத்திரகணிகையர் ஆலயத்து எழுவகை நடனமாதருள் முதலானவர்; தேவதாசியுமாம்.

தூய நீரிலே மூழ்கிச் சிவ பூசையை முடித்துக்கொண்டு திருக்கோயிலை அடைந்து திருப்பூவண நாதரை வணங்கிச் [1]**சுத்த நிருத்தம்** ஆடுவாள்; பிறகு வீட்டிற்கு வந்து சிவனடியார்களைச் சிவனெனப் பாவித்து வரவேற்றுப் பணிந்து பூசித்து அவர்கள் மகிழுமாறு இனிய சுவையுடன் கூடிய திருவமுது செய்விப்பாள்; அதன் பிறகு அவர்கள் புசித்து எஞ்சியதையே புசிப்பாள்; அஃது அவளுடைய நியமமாகும்.

**சிவபெருமானின் திருவுருவத்தைச் சமைக்க எண்ணுதல்**

இவ்வாறு பொன்னனையாள் ஒழுகும் நாளிலே அவளுடைய அன்பை உலகத்தாருக்கு அறிவிக்கும்பொருட்டுச் சிவபெருமான் தமது திருவுருவத்தை வார்ப்பிக்கவேண்டுமென்னும் ஆசையை அவள் மனத்தின்கண் கொடுத்தருளினர். பொன்னனையாள் சிவபெருமான் கொடுத்தருளிய அன்பேவடிவமாகமாறி, மழுவையும் மானையும் திருக்கரத்தில் ஏந்திய சிவபெருமானது திருவுருவைக் [2]கருவினால் செய்வித்தாள்; நாடோறும் ஆடல்பாடல் முதலியவற்றால் வருகின்றபொருள் முழுதையும் மெய்யன்பினால் அடியார் பூசையிலே செலவழித்தாள்; கிடைக்கும் பொருள் யாவும் அடியார் வழிபாட்டிற்கே அல்லாமல் சிறிதும் மிஞ்சாமையினால் சிவபெருமானின் திருவுரு வார்ப்பிப்பது எங்ஙனம் என்று கருதி வருத்தமுற்றாள்; குலபூடண பாண்டியனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத பொற்கிழியினை அருளிய சோமசுந்தரக் கடவுளை மனத்திலே சிந்தித்திருந்தாள். சிவபெருமான் அவள் நினைவைத் தம் திருவுளத்தில் கொண்டருளினர்.

**சிவபெருமான் சித்தர் வடிவங்கொண்டு வருதல்**

ஒரு நாள் சிவபெருமான், தூய திருநீறு அணிந்த திருமேனியும், கட்டுவாங்கம் (மழு) பிடித்த திருக்கரமும், யோக

---

1. சுத்த நிருத்தம் - சொக்க நடனம்: இது சாந்தமாக ஆடும் சாந்திக் கூத்தின் வகை நான்கனுள் ஒன்று; நூற்றெட்டுக் கரணமுடையது. இனி மத்தளம் முதலியன இன்றிச் செய்யப்படும் நிருத்தமுமாம்.

2. கரு - குழவியுருத் தோன்றும் தாயின் கருப்போன்று உலோகங்களினால் உரு வார்க்கப்படுதற்கு மெழுகினால் அமைக்கப்பெறும் வடிவம் இம் மெழுகு உரு அமைத்தலைக் 'கருக் கட்டுதல்' என்று கூறுவர்.

பட்டிகை கட்டிய இடையும், கோவணமீது கட்டிய ஆடையும், விபூதிப்பையும், பவளம்போன்ற செஞ்சடையுமுடைய **ஒரு சித்த மூர்த்தியின்** வேடம் பூண்டு பொன்னனையாளின் வீட்டினை அடைந்து, அளவில்லாமல் வந்து அமுது செய்யும் அடியார்களோடும்கூடித் திருவமுது செய்யாமல் திருவுள்ளத்தில் ஏதோ ஒன்றைக் கருதியவராய்க் கடைவாயிலின் ஒரு பக்கத்தே எழுந்தருளியிருந்தார். சிவனடியார்களெல்லாரும் திருவமுது செய்துகொண்டு திரும்பிச் சென்றனர். வேறாக இருந்த சித்தமூர்த்தியைப் பொன்னனையாளின் தாதியர் கண்டு வணங்கி, "ஐயனே! திருவமுது செய்ய உள்ளே எழுந்தருளவேண்டும்" என்று வேண்டினர். அதற்குச் சித்தர், "உங்கள் அமுதம்போன்ற தலைவியை இங்கே அழையுங்கள்" என்றார். அந்த ஏவல் மகளிர் தங்கள் தலைவியிடம் சென்று, "அம்மையே! சிவனடியார்களனைவரும் திருவமுது செய்து சென்றனர்; ஓர் அடியார் சித்தமூர்த்தியாய்ப் புன்முறுவலுடையவராய் இவ்வுலகில் கிடைத்தற்கரியவராய் இன்னும் அமுது செய்யாது இருக்கின்றார்" என்று தெரிவிக்க, உடனே பொன்னனையாள் அணிகலன்கள் மலர்ந்த பூங்கொம்பர்போல நடந்து சித்தமூர்த்தியின் திருமுன்சென்று, "தேவரீர் வரவு நல்வரவாகுக" என்று கூறிச் சித்தமூர்த்திகளுக்கு அருக்கியமும் ஆசனமும் கொடுத்துத் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி எழுந்து, சித்தமூர்த்திகளின் திருமேனியினது அழகின் செல்வத்தைக்கண்டு புன்னகை தோன்ற நின்று, "தேவரீர் இங்கு எழுந்தருளுவதற்கு என்ன தவம் செய்தேனோ" என்று கூறிச் சிரசின்மீது கைகூப்பித் தொழுதாள். சித்தமூர்த்திகள் அன்புடன் பொன்னனையாள்மீது [1] திருநோக்கம் வைத்தருளினார். பொன்னனையாள், பத்திவலையிற்பட்ட பரமனது திருவருளாய வலையில் அகப்பட்டனள்.

### சித்தமூர்த்தி பொன்னனையாளை மெலிந்த காரணம் யாதெனல்

பொன்னனையாள் சித்தமூர்த்திகளை நோக்கி, "எம் பெருமானே! உள்ளே எழுந்தருள்க; தேவரீர் திருவுள்ளத்

---

1. இங்குத் திருநோக்கம் 'சட்சு தீட்சை' ஆகும்.

திற்கு ஏற்றவாறு தொண்டினைச் செய்ய வல்லேன்'' என்று கூறி வணங்கினாள். சோமசுந்தரக் கடவுளாகிய சித்தமூர்த்திகள் உள்ளே நகைத்துப் பொன்னனையாளை நோக்கி, "மாவடுவின் பிளவினையொத்த விழிகளையுடையாய்! பேரழகுடைய நீ உனது கொடிபோன்ற இடையினைப்போல் சிறிது உடல் மெலிந்திருக்கின்றாய்; அதன் காரணம் யாது?'' என்று வினவினார். அதற்குப் பொன்னனையாள் சித்தமூர்த்திகளின் திருவடிகளை வணங்கி, "எம்பெருமானே! அடியேற்கு வேறு ஒரு மெலிவும் இல்லை; எங்கள் தலைவராகிய சிவபெருமானின் திருவுருவத்தினை ஆக்குவதற்குப் பெருவிருப்பங்கொண்டு, மெழுகினால் கருக்கட்டி வைத்தேன்; அதனைப் பொன்னினால் செய்துமுடிக்கக் கருதிய அடியாளுக்கு நாடோறும் கையில் வரும் பொருள் முழுதும் மகேசுர பூசைக்கே செல்கின்றன; சிறிதும் எஞ்சுகின்றதில்லை'' என்றாள்.

**சித்தமூர்த்திகள் சிவனடியார் பெருமையினைக் கூறல்**

பொன்னனையாள் கூறிய இன்சொல்லாகிய தேனைச் சித்தமூர்த்திகள் தமது திருச்செவி வாய் மடுத்து, "பெண்ணே! நீ யாக்கையும் இளமையும் செல்வமும் நீர்க்குமிழிபோலச் சிறிதும் நிலையில்லாதவை என்று உணர்ந்தாய்; தருமம் ஒன்றே நிலையுடையது என்று துணிந்தாய்; தருமங்களுள் **சிவதருமமே** (சிவபுண்ணியமே) சிறந்தது என்றும், சிவதருமத்துள் **சிவ பூசையே** சிறந்தது என்றும், சிவ பூசையுள் [1] **மகேசுர பூசையே** சிறந்தது என்றும் தெளிந்து மகேசுர பூசை செய்கின்றாய்; ஆதலால், நீ இம்மைப் பயனையும், மறுமைப் பயனையும் பெற்றுக் கொண்டாய். பொன்னனையாள் என்னும் உன் பெயருக்

---

1. இங்கு, மகேசுர பூசையாகிய சிவனடியார் பூசையே மிகச்சிறந்தது என்பதனை, "ஆறிடும் வேள்வி அருமறை நூலவர், கூறிடும் அந்தணர் கோடிபேர் உண்பதில், நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை, பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே", "அகர மாயிரம் அந்தணர்க்(கு) ஈயிலென் சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென், பகரு ஞானி பகலூண் பலத்துக்கு' நிகரிலை யென்பது நிச்சயந் தானே", "படமாடக் கோயிற் பகவற் கொன்(று) ஈயின், நடமாடக் கோயில் நம்பர்க்கங்(கு) ஆகா, நடமாடக் கோயில் நம்பர்க்கொன்(று) ஈயில், படமாடக் கோயிற் பகவற்க தாமே" என வரும் திருமந்திரச் செய்யுட்களானும் அறியலாம்.

கேற்றவாறு அழிவில்லாத இறைவன் திருவுருவைப் பொன்னாற் செய்யப் பெறுவாயாக. அதற்கு உன் மனையிலுள்ள பித்தளைப் பாத்திரம், ஈயப் பாத்திரம் முதலிய எல்லாவற்றையும் இங்கே கொண்டுவருவாய்'' என்று கூறியருளினார்.

**சித்தமூர்த்திகள் இரசவாதம் புரிதல்**

உடனே பொன்னனையாள் வெள்ளி, செம்பு, இரும்பு, ஈயம், பித்தளை, வெண்கலம், தரா முதலிய உலோகங்களெல்லாவற்றையும் கல்லென்று ஒலிக்கக் கொண்டுபோய்ச் சித்த மூர்த்திகளின் முன்னர் வைத்தனள். அங்ஙனம் கொண்டுவந்து வைத்த வெவ்வேறு வகையான உலோகங்களெல்லாவற்றின் மீதும் சித்தமூர்த்திகள் [1] திருநீற்றினைச் சிதறி, '**இவை யாவும் பொன்னாக**' என்று சிந்தித்து, அவளை நோக்கி, ''இவற்றை நீ இன்றிரவு நெருப்பிலிட்டு எடுக்கின் யாவும் பொன்னாய்விடும்; அப் பொன்னினால் இறைவன் திருமேனியை வார்ப்பிக்கக் கடவாய்'' என்றார். பொன்னனையாள், ''எம்பெருமானே! நீர் இன்றைக்கு இங்கிருந்து இரவிலே திருவமுது செய்து கொண்டு, இக்காரியத்தையும் முடித்துவிட்டுப் பொழுது விடியுமுன் போவீராக'' என்று வேண்டினாள். அங்கயற்கண் அம்மையாரைச் சற்றும் பிரியாதவராகிய சோமசுந்தரப் பெருமானார் அதற்கு உடன்படாமல், ''யாம் மதுரையில் வசிக்கும் சித்தர்'' என்று கூறி மறைந்தருளினார் [2].

**பொன்னனையாள் உலோகங்களைத் தீயிலிடப் பொன்னாதல்**

பொன்னனையாள், இங்குச் சித்தராய் வந்தவர் வெள்ளியம்பலத்திலே திருக்கூத்து ஆடியருளும் சோமசுந்தரக்கடவுளே என்று உணர்ந்தாள்; சித்த மூர்த்திகள் மறைந்து போயினரே என்று சிறிது மனஞ்சோர்ந்தாள்; ஆனால் அவர் தன் மனத்தில் நிறைந்துள்ளதாகிய ஒரு பெரிய கவலையை நீக்கினார் என்று

---

1. இங்கு, 'மருந்து பூசித் திருக்கையினால் பரிசித்தார்' என்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணங் கூறும்.

2. இங்கு, ''பூவண மதனிற் பொலிந்திருந் தருளித், தூவண மேனி காட்டிய தொன்மையும்'' (திருவாசகம் கீர்த்தித் திருவகவல்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

சிறந்ததாகிய ஒரு பெரிய மகிழ்ச்சியும் அடைந்தாள்; பிறகு சித்தமூர்த்திகள் கட்டளையிட்ட வண்ணமே உலோகங்களனைத்தையும் அன்றிரவு தீயிற் புடமிட்டாள். **ஆணவமல வலிகெட்டு இறைவனின் திருவடி நீழல் அடைந்தவர் சிவமாக விளங்குதல் போல** உலோகங்கள் நெருப்பினைச் சேர்ந்தவுடன், களிம்பு நீங்கப் பொன்னாக மாறின.

**பொன்னனையாள் பொன்னால் இறைவனை வார்ப்பித்தல்**

பொன்னனையாள் அப் பொன்னினைக்கொண்டு, ஒரு வடிவமுமில்லாத [1]இறைவனுக்கு ஒரு திருவுரு வார்ப்பித்தாள்; பொன்னினால் செய்யப்பெற்ற சிவபெருமானின் திருவுருவத்தின் பேரழகினைக்கண்டு "**அச்சோ! அழகிய பிரானோ** (சுந்தரநாதனோ) **இவன்**" என்று சொல்லிக் கன்னத்தில் அள்ளி முத்தமிட்டாள்; தனது மெய்யன்பினால் இடைவிடாதிருந்த பெருமானின் திருவுருவத்தைப் பிரதிட்டை செய்வித்துத் திருவிழாவும் தேரும் நடாத்திச் சில நாள் சென்றபின் [2]வீடுபேற்றினை அடைந்தாள்.

**இறைவன் குறியும் பெயருங்கொண்டு விளங்குதல்**

பொன்னனையாள் அப்பெருமானின் கன்னத்தின்கண் அள்ளுதற்கிட்ட கையிலுள்ள நகக் குறியையும், 'அழகிய பிரானோ' (ஏமநாதர், சுந்தரநாதர், திருப்பூவணநாதர்) என்று கூறிய காரணப்பெயரையும் இறைவன் கொண்டு கலியுகத்திலே பொன்னாலாகிய திருமேனி வேறுபட்டுத் தக்க உருவாக எழுந்தருளி இன்பம் நல்கி வருகின்றார்.

செய்யுள் — 30

ஆகச் செய்யுள் — 1885

---

1. இங்கு இறைவன் "சோமாஸ்கந்த மூர்த்தி" ஆவர்.

2. இங்கு வீடுபேறு என்றது பராசத்தியின் சாரூப பதவியைக் குறிக்கும்.

## 37. சோழனை மடுவில் வீட்டிய படலம்

### சுந்தரேச பாதசேகரன் தன்மை

இராசேந்திர பாண்டியன் இந்திரன் முதலிய பல பெரிய தேவர்களும் புகழச் சிவலோகத்தை அடைந்தான். பின்பு, அவன் குமாரன் **இராசேச பாண்டியனும்**, அவன் குமாரன் [1] **இராசகம்பீர பாண்டியனும்**, அவன் குமாரன் [2] **பாண்டி வங்கிய தீபனும்**, அவன் குமாரன் [3] **புரந்தரசித்தும்**, அவன் குமாரன் [4] **பாண்டிவங்கிய பதாகனும்**, அவன் குமாரன் **சுந்தரேச பாதசேகரனும்** ஒருவர் பின் ஒருவராகப் பாண்டிநாட்டை அரசுபுரிந்தனர்.

இவர்களில் **சுந்தரேசபாதசேகரன் என்னும் பாண்டியன்** நான் மாடக்கூடலின்கண் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக்கடவுளுக்கு மெய்யன்பனுகி, வேற்படையால் குறுநில மன்னர் என்னும் களைகளைப்போக்கி, உலகிலுள்ள உயிர்கள் என்னும் சிறந்த பயிரைச் செவ்வனே வளர்த்து வந்தான். அவன் தன் படையைப் பத்துத்தேரும், நூறு யானையும், ஆயிரங் குதிரையும், பதினுயிரங் காலாளுமாகிய இவ்வளவே வைத்துக்கொண்டு, இத்துணைச் சேனைக்கு மட்டும் பொருந்திய பொருளைக் கொடுத்து எஞ்சிய பொருள் முழுதையும் அறிவே வடிவமாக மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளுக்கே செலவிட்டுவந்தான். சிவபெருமானுக்கு முடி, கண்டிகை முதலாகிய இரத்தினுபரணங்களைச் செய்வித்தான்; வானளாவும் திருக்கோபுரம், திருமாளிகை முதலியவற்றைக் கட்டி

---

1. இராசகம்பீர பாண்டியன்-இவன் ஆட்சி புரிகையில் தன்னுட்சிக்குட்பட்ட இடங்களிலுள்ள வீடுகள்தோறும் சிவபூசை செய்வித்தவன்; பெரிய சிவ பத்தன்.

2. பாண்டி வங்கிய தீபன் - இவன் பாண்டி நாட்டை நெடுங்காலம் ஆட்சிபுரிந்து சிவபதம் அடைந்தவன். (வங்கியம் - வமிசம்).

3. புரந்தர சித்து - இப் பாண்டியன் இந்திரனை வென்று இப்பெயர் பெற்றவன்.

4. பாண்டி வங்கிய பதாகன் - இவன் தன்னுட்சியில் யாவரையும் சிவபத்தியுடையவராகச் செய்தவன்.

ஒளிவிடும்படி பன்மணிகளால் இழைப்பித்தான்; இன்னும் இவைபோன்ற பிற திருப்பணிகளையும் செய்வித்தான்.

**ஆயிரம்பரிக்கோர்சேவகன் என்ற சோழன் படையெடுத்தல்**

சுந்தரேசபாதசேகர பாண்டியனுடைய சேனையின் சிறுமையைக் கருதிய **ஆயிரம் பரிக்கோர் சேவகன் என்னும் சோழ மன்னன்** ஒருவன் தானே வெற்றி கொள்ளத் துணிந்து வஞ்சி மாலை சூடிப் பாண்டியனோடு போருக்குப் புறப்பட்டுவந்தான். கடலானது சீறிச் செல்வதுபோலப் பல்வகைப் படைக்கலங்களை ஏந்திய சோழனுடைய சேனைகள் பாண்டி நாட்டை நோக்கி முன்னேறி வருதலை மீனவன் தன் ஒற்றரால் அறிந்து விரைந்தெழுந்து இறைவன் திருமுன்சென்று வணங்கி நின்று, "பொன்னனைய செஞ்சடைப் புனிதனே! உமது திருவருள் வலிமையினால் இப் பூமியை அரசாளும் அடியேனுடைய வலிமையை நோக்காது என் சேனையின் சிறுமையைமட்டும் நோக்கிச் சோழன் தன்னுடைய சேனையின் வலியினால் எனது நாட்டைக் கைப்பற்றிக்கொள்ள எண்ணினான் போலும். சோழன் அளவில்லாத சேனையோடு வடவைத் தீப்போலச் சினந்து வந்தனன்" என்று விண்ணப்பஞ் செய்தான். அப்பொழுது சிவபெருமான் திருவருளினாலே ஆகாயத்தினின்றும், "பாண்டியனே! நீயே வாகை மாலை சூடுமாறு நாம் வந்து போர் செய்வோம்" என்று ஓரசரீரி வாக்குத் தோன்றிற்று. அம்மொழிகளைக் கேட்ட பாண்டியனுடைய முகம் சூரியனைக்கண்ட தாமரைமலரின் பொலிவைப்போல மலர்ச்சியடைந்தது. பாண்டியன் சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளை உள்ளத்தில் கொண்டு வெளியே வந்தான்; பின்னர் பல வாத்தியங்களும் ஒலிக்க, ஒரு குதிரைமீதேறிச் சேனைகள் சூழக் கொல்லிமலையையுடைய சோழனது சேனைக்கடலின் எதிரே சென்றான்.

**சோழ வீரர்களுக்கு வழுதியின்படை மிகுந்து தோன்றுதல்**

சோழனுடைய பெரிய சேனைக்கடலுக்கு நேரே ஓர் ஆறு செல்லுதல்போலச் சென்ற பாண்டியனுடைய சிறிய சேனை, சோழனுடைய பேர்வீரர்கள் எல்லார்க்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவருளினாலே ஒரு பெருங்கடல்போலத் தோன்றிற்று.

### இறைவன் வேட்டுவ வடிவுடன் வழுதி படைமுன் நிற்றல்

மேருமலையாகிய வில்லை வளைத்து, வாசுகியாகிய நாணை ஏற்றித் திருமாலாகிய அம்பைப் பூட்டி நகையாலாகிய நெருப்பினால் முப்புரத்தை எரித்து வெற்றிகொண்ட கூடல் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுள், வேட்டுவத் திருவுருவந்தாங்கிக் கடலின் அலைபோல விரைந்து செல்லும் குதிரைமீதூர்ந்து பாண்டியனது சேனையின் முன்னணியிற்சென்று நின்றருளினார். அப்போது இருளில் ஒளிவீசும் சந்திரனைப்போல் விளங்கும் காதின்கண் அணிந்த தந்தத்தாலாகிய தோடும், இரவில் தோன்றிய விண்மீனைப்போல ஒளிவீசும் முத்துமாலையும், வானவில் போலச் சிகையில் அணிந்த வெட்சிமாலையுடன் மயிர்ப்பீலியாலாகிய நுதலணிமாலையும், இருளினைப்போக்கும் தந்தக்காப்பும் ஒளிவீசிநின்றன. தேவர்கள்பொருட்டு நஞ்சுண்ட அந்நாள் முதல் திருமிடற்றிலே தோன்றிய கருநிறம் உடல்முழுதும் பரந்தாற்போன்று கரிய திருமேனிகொண்டு வேற்படையினை ஏந்திக் காவிரி நாடனுக்கு உற்ற கூற்றுவனைப்போல அவன்காண நின்றருளினார்.

### சோழன் புறங்கொடுத்து ஓடுதலும் இறைவன் மறைதலும்

அதனைக்கண்ட சோழன் சினந்து, "ஆயிரங் குதிரைகட்கு ஒரு வீரனாகிய யான் வந்தேன்" என்று சொல்லிக்கொண்டு போய் எதிர்த்தான். வேட வடிவங்கொண்ட சிவபெருமான், "ஆயிரங் குதிரைகட்குமட்டும் ஒரு சேவகன் நீ அன்றோ? எண்ணில் முடிவுபெறாத குதிரைகளுக்கும் ஒற்றைச்சேவகன்யானே" என்றார். அச்சொற்கள் இடியேற்றின் ஒலியினைப்போல இரு காதுகளையும் துளைக்கக் கேட்டுநின்ற சோழன் எதிரே, மின்னல் வீசும் முகிலைப்போலச் சிவபெருமான் விரைந்துசென்று வேற்படையை வலமாகச் சுழற்றிச் சினந்து முழங்கிச் சீற, ஆயிரங் குதிரைகட்கு ஒரு சேவகனாகிய சோழன் பயந்து, "இனி யாம் இந்த வேற்படையால் இறப்பதற்கு ஐயமில்லை" என்று நினைந்து குதிரையோடு புறங்கொடுத்து ஓடினான். உடனே வேட வடிவம் தரித்துவந்த சிவபெருமான் மறைந்தருளினார்[1].

---

1. இங்கு, "வேடுவனாகி வேண்டுருக் கொண்டு, காடது தன்னிற் கரந்த கள்ளமும்" (திருவாசகம்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

**சோழன் மீண்டு வந்து பாண்டியனைத் துரத்துதல்**

அதுகண்ட சுந்தரேச பாதசேகர பாண்டியன் புறங் கொடுத்து ஓடுகின்ற சோழனைத் துரத்திச்சென்றான். புறங் காட்டி ஓடிக்கொண்டிருந்த சோழன் சற்றுத் திரும்பிப்பார்த் தான்; அப்போது வேடுவனைக் காணாமையால் துன்பமும் அச்சமும் நீங்கித் திரும்பிவந்து பாண்டியனை மதுரைவரையும் தொடர்ந்து துரத்திக்கொண்டு வந்தான்.

**பாண்டியனும் சோழனும் மடுவில் வீழ்தல்**

காற்றொன்றினாலே முடுக்கப்பெற்ற கனல் ஒன்று நடந் தாற்போலச் சோழ மன்னனால் துரத்தப்பட்டு ஓடுகின்ற பாண்டியன் தனது மதுரை நகர்க்கண் விரைந்து ஓடுகின்றவன் மதமயக்கமுடைய யானைபோல **மடுவொன்றிலே** விழுந்தான். அவனைத் துரத்திவந்த சோழனும் குதிரையோடு வீழ்ந்தனன். மதுரையின் மேலைத் திசையிலுள்ள [1] மடுவில் வீழ்ந்த இருவரில் பாண்டியன் மட்டும், சோமசுந்தரக்கடவுளின் திருவருளால் தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைய அதில் தோன்றிய வெள் ளானைபோல அம்மடுவினின்றும் வெளியேறினான். சோழன் மடுவினில் ஆழ்ந்து இறந்தான்.

**பாண்டியன் இறைவனுக்கு அன்புபூண்டு ஒழுகுதல்**

சுந்தரேசபாதசேகர பாண்டியன் பாதலம்வரை ஆழ்ந் துள்ள மடுவில் வீழ்ந்து இறந்த சோழனுடைய ஆடை, அணி, அணிகலப் பெட்டி, காலாள், குதிரை, யானை, தேர் ஆகிய இவற்றையெல்லாம் கைப்பற்றினான்; பிறகு சோமசுந்தரக் கடவுள் அணியத்தக்க ஆடைகளையும் அணிகலன்களையும் தந்து, அவ்விறைவனது திருவருளாகிய கடலுக்குத் தனது அன்பானது நதிபோலப் பெருக வீற்றிருந்தான்.

செய்யுள்—22

ஆகச் செய்யுள்—1907

---

1. இம் மடு, 'கொண்டாழி' எனப் பெயர் பெற்றுள்ளது. "கொண் டாழி என்னும் நாமம் பெற்றது குடபால் ஓடை" என்பது நம்பி திருவிளையாடல்.

## 38. உலவாக்கோட்டை அருளிய படலம்

### அடியார்க்கு நல்லான் இயல்பு

திருவெண்ணீறு அணிந்த திருமேனியையும் இடபக் கொடியையும் கொண்ட சோமசுந்தரக் கடவுளின் மறை முடிக்கு இணையான புவிமுழுதும் நிறைந்த கீர்த்தியையுடைய மதுரைப் பதியிலே வேளாளர் குலத்திலே [1] **அடியார்க்கு நல்லான்** எனப் பெயர் பெற்ற ஒருவன் இருந்தான். அவன் அறத்திற்கும் அதனாலாகும் புகழுக்கும் நல்லனுயுள்ளவன். அவன் செய்யும் அறத்திற்கு அருள்போன்றவளாகிய கற்பினையுடைய மனைவி **தருமசீலை** என்பவள். அவள் தன் மரபிற்குரிய ஒழுக்கத்தினின்று சிறிதும் தவறாதவள்; தன் கணவனே அன்றிப் பிறரும் நன்கு மதிக்கும் மனையறம் புரியும் தன்மையள்; கணவன் வீடுபேறு அடைவதற்கு ஏற்ற தனித்துணைபோன்றவள்.

அடியார்க்கு நல்லான் பல ஏர்களைக்கொண்டு உழவுத் தொழில் புரிந்து அதனால் வரும் ஊதியத்திலே, அரசன் ஆறிலொன்ருகிய தனது கடமையைக்கொள்ள, எஞ்சிய பொருளனைத்தையும் சிவனடியார்களுக்குத் திருவமுது படைப்பதில் செலவிடுவானுயினன். அளவிறந்த அடியார்கள், அடியார்க்கு நல்லான் மெய்யன்போடு அளிக்கும் [2] அறுசுவை பொருந்திய நால்வகை உண்டியைப் போதும் போதும் என்று விருப்புடன் உண்டு செல்வர். மணற்கேணியைத் தோண்டுந் தோறும் ஊற்று நீர் பெருகுதல்போல அடியார்க்கு நல்லானின் செல்வமும் மேன்மேலும் பெருகிற்று.

### அடியார்க்கு நல்லான் வறுமையால் வாடுதல்

அடியார்க்கு நல்லான் தன் பெருஞ்செல்வம் குறைந்தாலும் தன் இனிய பண்பினின்று சிறிதும் குன்றமாட்டான் என்னும்

---

1. அடியார்க்கு நல்லான் - சிவனடியார்களுக்கு இனிய தொண்டு புரிந்து நல்லவனுய் விளங்குபவன்: காரணப் பெயர். அடியார்க்கு நல்லான் என்பது இறைவன் திருப்பெயருமாம். "கருவூரு ளானிலை, அண்ணலார் அடியார்க்கு நல்லரே" என்பது திருஞானசம்பந்தர் தேவாரம்.

2. அறுசுவை - தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. நால்வகை உண்டி - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்பன.

தன்மையைப் பிறர்க்கு உணர்த்தும்பொருட்டுச் சோமசுந்தரக் கடவுள் அவனுடைய நீர்வளமிக்க நிலங்களில் விளைவு குன்றும் படி செய்தருளினர். விளைவு குன்றியதைக் கண்டும் அவ் வேளாளன் சிறிதும் பொருட்படுத்தாமல் வட்டிக்கும் வட்டி கொடுக்கும் கடன் வாங்கி அடியார்க்கு அன்னம் அளித்தலைச் செவ்வனே நடத்தத் தொடங்கினன்; பின்பு அக் கடனும் கிடைக்காமல், தான் கொண்ட கொள்கையினை நிறைவேற்ற வலியில்லாமல் நின்ற அடியார்க்கு நல்லான் செய்வதொன்றும் அறியாது தன் உடலை உணவின்றி யிருத்தலால் வருத்தும் கடப்பாட்டினை மேற்கொண்டான். அடியார்களுக்குக் கொடுக்கின்ற இறைவரே நிலத்தின் விளைவையும், கடன் கோடலையும் மாற்றித் தடுப்பாராயின் அதனைத் தடுக்கவல்லவர் யாவர்? ஒருவருமில்லை. அதனால் அவன் கைக்கொண்ட கொள்கை தடையுற்று நின்றது. சிவனடியார்க்குத் திருவமுது செய்வித்தன்றி உண்ணுதல் செய்யாமையை நியமமாகக் கொண்ட அடியார்க்கு நல்லான் தன்னுயிர்த் துணையாகிய மனைவியோடும் பட்டினி கிடந்து கவலையினால் உள்ளம் புண்ணாக, உடம்பு பசி என்னும் நெருப்பனால் வாட்டப் பட்டான்.

**அடியார்க்கு நல்லான் இறைவனிடம் சென்று முறையிடுதல்**

அதன் பின்பு, அறத்தின் குன்றுபோல் விளங்கிய அடியார்க்கு நல்லான், "அழியும் இவ் வுடம்பினால் நமது விரதந் தடைப்பட்டபின் நாம் அடையும் பயன் யாது? என்று கருதி மனைவியோடுஞ் சென்று இச் செய்தியைச் சோமசுந்தரக் கடவுளுக்கு விண்ணப்பஞ் செய்துவிட்டு உயிர் துறத்தலே முடிவு" என்று துணிந்தான். தன் மனைவியுடன் சோம சுந்தரக் கடவுள் திருமுன்னர்ச் சென்று திருவடியில் வீழ்ந்து வணங்கி நின்று, "தேவர்கள் உய்யுமாறு நஞ்சினை அமுதாக உண்டருளிய ஒப்பற்றவனே! உமது மெய்யடியார்கள் வழிபாடு தடையுறும் வண்ணம் என்னுடைய நன்செய்யும், புன்செய்யும் விளைவு சுருங்கிக்கெட்டன; கடன் கொடுப்பார் வேறு ஒருவரையும் யான் அறிந்திலேன்; ஆதலின், கடன் கொடுக்க வல்லாரைத் தேவரீர் காட்டியருளவேண்டும்;

இன்றேல் அறியாமை பொருந்திய இவ்வுடற் பொறையை இப்பொழுதே மாற்றிவிடுவேன்" என்று குறையிரந்து வேண்டினன்.

அப்பொழுது [1]பஞ்சாதி என்னும் உறுப்பினையுடைய வேதத்திற்குப் பொருளருளிச்செய்த பெருமானின் திருவாக்கு ஒன்று, "வேளாண்குடித் தலைவனே! நீ அஞ்சாதே! உன் வீட்டில் இன்று செந்நெல்லாகிய வெள்ளிய அரிசிக்கோட்டை ஒன்று சேர்த்துள்ளோம்; அஃது எப்பொழுதும் எடுக்க எடுக்கக் குறையாமலிருக்கும்; நீ அதனை நாடோறும் பூசித்து அதில் வேண்டும் அளவு எடுத்துக்கொண்டு, சிவநேயம் குறையாத அடியார்களுக்கு அமுதளித்துப் பிற தருமங்களையும் செய்யக் கடவை; முடிவில் வீடுபேறு தந்தருளுவோம்" என்று ஆகாயத்தினின்றும் எழுந்தது.

**அடியார்க்கு நல்லான் உலவாக்கோட்டை பெறுதல்**

அசரீரிவாக்கைக் கேட்டு மகிழ்ச்சியும் அதிசயமும் அடைந்த அடியார்க்கு நல்லான், சோமசுந்தரக்கடவுளைப் பன்முறை பணிந்து மனையை அடைந்தான்; தான் முற்பிறப்புக்களிலே தேடிய தவத்தின் பயனைக் கண்டாற்போல அங்கே என்றும் குறையாத பேரின்பம்போல எடுக்குந்தோறும் குறையாதிருக்கக் கொடுத்தருளிய **அரிசிக் கோட்டையைக்** கண்டு மகிழ்ந்தான்; இறைவன் அருளிய [2]உலவாக்கோட்டையை நாடோறும் தன் மனைவியுடன் புட்பம், சந்தனம், தூபம், தீபம் என்பவற்றால் பூசைசெய்து அன்னத்தின்பொருட்டும், அதற்குவேண்டிய கறிப்பொருள் முதலிய பலபொருள் பெறும் பொருட்டும் வேண்டியஅளவு கைக்கொண்டு சிவனடியார்க்கும், அந்தணர்க்கும், தென்புலத்தவர்க்கும், தெய்வங்கட்கும், உறவினர்க்கும், விருந்தினர்க்கும், நட்பினர்க்கும் மேகம்போல

---

1. பஞ்சாதி: பஞ்சாசது என்பதன் மரூஉ. அது சந்தை கூட்டி ஓதுவோர் நிறுத்துதற்பொருட்டு வேதத்தில் வகுக்கப்பட்ட ஐம்பது பதங்கொண்ட ஒரு முடிவு.

2. உலவாக்கோட்டை - இஃது, எடுக்க எடுக்கக் குறையாத அரிசிக் கோட்டை ஆகும்.

வரையாது வழங்கி, எஞ்ஞான்றும் வறுமைநோயின்றிக் குபேரன்போல் வாழ்ந்து வந்தான்.

மின்னார் சடையான் தமர்ஆய்ந்தவர் வேதச் செல்வர்
[1]தென்னாடர் தெய்வம் விருந்(து)ஒக்கல் செறிந்து நட்டோர்
முன்னும் எவர்க்கும் முகில்போல் வரையாமல் நல்கி
எந்நாளும் நோயின்(று) அளகாதிபன் என்ன வாழ்ந்தான்.

இவ்வாறு அடியார்க்கு நல்லான், பன்னெடுங்காலம் அறம் செய்து வாழ்ந்த பின்னர் தன் மனைவியோடும், சுற்றத்தாரோடும் சிவசாரூப்பியம்பெற்றுச் சிவபுரத்தை அடைந்தான்.

செய்யுள்—18

ஆகச் செய்யுள்—1925

---

1. இங்கு, "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்(கு), ஐம்புலத்தா(று) ஓம்பல் தலை" என்ற திருக்குறளின் கருத்து அமைந்திருத்தலை அறிக.

## 39. மாமனாக வந்து வழக்குரைத்த படலம்

### தனபதி - சுசீலை

எக்காலத்தும் அழியாத நான்மாடக்கூடல் என்னும் மதுரைப் பதியில் வணிகர் குலத்திலே **தனபதி** என்னும் பெயர் கொண்ட ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன், குபேரனை ஒத்த பெருஞ் செல்வமுடையவன் ஆவன். அவனுக்குத் திருமகளைப் போன்ற அழகுடையவளும் கற்பிற் சிறந்தவளுமாகிய **சுசீலை** என்பவள் மனைவியாவள். அவ்விருவரும் நெடுங்காலம் மகப் பேறின்றி வருத்தமுறும்பொழுது, தனபதி தன் மருமகனையே (தங்கையின் மகனையே) தகுதி அமைந்த மகனாக ஏற்றுக் கொண்டு மனமகிழ்ந்து சிறப்போடு மனையாள் கைக்கொடுக்க அவள் தொழுது வாங்கி, அச் சிறுவனுக்கு அணிகலன்கள் பல அணிவித்துப்பேணிப் பொலிவுற அன்போடுவளர்த்துவந்தாள்.

### தனபதி தங்கையிடம் பூசல்கொண்டு தவத்திற்குச் செல்லல்

தனபதி, தன் தங்கை வருந்திப் பெற்ற பிள்ளையைத் தனக்குத் தந்த நன்றியைச் சிறிதும் பாராட்டாமல் தன் மனைவிமேல் வைத்த ஆசை மயக்கத்தினாலே அத் தங்கையோடு நித்தமும் தீராச் சண்டையிட்டுக்கொண்டு வந்தான். ஒரு நாள் தங்கை சினந்து, "உனக்குப் பெருமிதம் (செருக்கு) ஏன்? நீ பிள்ளைப்பேறு அற்ற பாவி! நீ என் அருமைப் பிள்ளையினால் அன்றோ? இம்மை மறுமைப் பயன்களையும் அடைவாய்" என்றாள். தனபதி அம் மொழிகளைக் கேட்டுப் பெரிதும் நாணி' "மறுபிறப்பிலாயினும் மகப்பேற்றினைத் தருதற்குரிய தவத்தினைச் செய்யவேண்டும்" என்று முடிவு செய்து அளவிடற்கரிய தன் செல்வமெல்லாவற்றையும் மருகனுக்கே உரிமை ஆக்கிவிட்டு அன்பு மிகுந்த தன் மனைவியோடும் அரிய [1]தவ நெறியிற் சென்றான்.

### தாயத்தார் தனபதி மருகன் பொருளைக் கவர்தல்

பின்பு, தவ நெறியிற் சென்ற அத் தனபதியின் வருகை காலந்தாழ்ந்தமையால் அவனது மருகன் அடைந்த செல்வம்

---

1. தவநெறி - இங்கு வானப்பிரத்த நிலை.

அனைத்தையும் தாயத்தார்கள் வல் வழக்குறப் பேசிக் கவர்ந்து கொண்டனர்.

**தனபதியின் தங்கை மதுரை நாயகன் திருமுன் முறையிடுதல்**

விளை நிலங்கள், அடிமைகள், அணிகலன்கள், பொருள்கள், பசுக்கள், பிற வளங்கள் முதலானவற்றைத் தாயத்தார்கள் கைப்பற்றிக்கொள்ள, வலிய சிறைகளை இழந்த பறவைபோல, புதல்வனும் அவனைப் பெற்ற தாயும் தளர்வடைந்து, "சார்பில்லாதவர்கள் எல்லாருக்கும் ஒரு பற்றுக்கோடாயிருப்பவர் சோமசுந்தரக் கடவுளே ஆவர்; அவரே நமக்குப் புகலிடம்" என்று கருதி, விண்ணிழி விமானக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கிநின்று, "யாவர்க்குந் தந்தையும் தாயும் ஆகிய தம்பிரானே! தேவரீரே அடியேங்கட்கும் தாயும் தந்தையும் ஆவீர்; அடியேனுடைய தமையன், தனக்கு மகப்பேறின்மையால் என் மகனை யாவரும் அறிய முறைப்படி தனக்குச் சுவீகார புதல்வனாகக் கொண்டு, அப்பொழுதே விளை நிலம், செல்வம், மனை, பிறபொருள் யாவற்றையும் இவனுக்கே கொடுத்துவிட்டுத் தவத்திற்குப் போயினான். பின்பு, என் தமையனின் தாயத்தார்கள் அப் பொருள்களனைத்தையும் தங்கள் வன்மையால் கவர்ந்து கொண்டார்கள்; ஐயனே! நானோ யாருமற்ற ஒருத்தி; ஒருத்தியாகிய எனக்கு இவன் ஒரே புதல்வன்; இவனும் நன்மை தீமைகளை ஆராயுங் கருத்து இல்லாத சிறுவன்; அடியேங்களுக்கு ஒரு பற்றுக்கோடும் இல்லை. அறவோர் தேறும் அருட் பெருங் கடலே! எங்கும் நிறைந்திருக்கும் நீர் இவற்றை அறியீரோ?" என்று விண்ணப்பஞ் செய்து நிலத்தின்மீது வீழ்ந்து அழுதாள்.

ஒருத்திநான் ஒருத்திக் கிந்த ஒருமகன் இவனுந் தேருங்
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணேன் ஐய!
அருத்திசால் அறவோர் தேறும் அருட்பெருங் கடலே! எங்கும்
இருத்திநீ அறியாய் கொல்லோ என்றுபார் படிய வீழ்ந்தாள்.

அச்சமயம் மாறுகொண்ட வழக்கினைத் தீர்க்க வல்ல மதுரேசர் திருவருளினாலே சோர்ந்து வீழ்ந்த தனபதியின் தங்கை சிறிது உறக்கங் கொண்டனள்.

**இறைவர் தனபதி தங்கையின் கனவில் தோன்றியருளல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் அவளுக்குச் சூக்கும உடம்பினின்று அறியும் சொப்பனத்திலே ஒரு அந்தணராய் எழுந்தருளி வந்து, "கேளாய் பெண்ணே! பொழுது விடிந்த பின்னர் தாயத்தார்களை நீ அரசன் ஆணையினாலே தடுத்துத் தரும சபையின்கண் ஏற்றியிருப்பாயாக; யாம் வந்து அறிவில் சிறந்த பெரியோர்கள் அனைவரும் ஒப்பும் வண்ணம் அந்தப் பொய்வழக்கினைத் தீர்த்து உன் பொருள்களை மீட்டுத்தருவோம்; நீ செல்க" என்றருளிச் செய்தார். உடனே வணிகமாது விழித்தெழுந்து அதிசயித்து, "நான் ஏதேதோ எண்ணிக்கெட்டேன்! **யாரும் இல்லாதவருக்குத் தெய்வந் துணை** என்னும் பழமொழியை அறிந்தேன்" என்று கூறி அங்கயற்கண் அம்மையின் தலைவராகிய சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்துக்கொண்டு மகனோடு தன் இல்லின் கண் சென்றாள்; இனிதே துயின்றாள்.

**வணிகமாது தாயத்தார்களை நியாயசபைக்கு அழைத்தல்**

மறுநாள் விடியற்காலையில், வணிகமாது எழுந்து வெள்ளியம்பலவாணரது திருக்கோயில் வாயிலையடைந்து வணங்கிக் கொண்டு, இறையவன் கூறியருளியவாறே கொடியவழக்கினைத் தொடுத்துவென்ற தாயத்தார்களின் இருப்பிடத்தை அடைந்து பலருங்கேட்க, அவர்களை நோக்கி, "அடுப்பில் நெருப்பிடாதீர்கள்! ஓர் அடியும் எடுத்துவையாதீர்கள்! அறநெறியால் அல்லாமல் பொய்வழக்கினால் வென்றுபோக விடேன்; அனைவரும் சான்றாக [1] **அரசன்மீது ஆணையிட்டேன்**; தருமசபைக்கு வந்து பெரியோர்கள் ஆய்ந்து கூறும் தீர்ப்பினைக்கேட்டு எங்கள் உரிமைப் பொருளைக் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்" என்றுசொல்லி மறித்தாள்.

அட்டில்வாய் நெருப்பி டேல்! ஓர்
அடியிடேல்! அறத்தா(று) அன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று
போகொட்டேன்; பலருங் கேட்க

---

1. அரசன்மிது ஆணை கூறி யழைப்பின் மீறிச் செல்லார் என்பது பண்டைய மரபு.

இட்டனன் அரசன் ஆணை ;
அறத்தவி(சு) ஏறி ஆன்றோர்
ஒட்டிய படிகேட்(டு) எங்கள்
உரிப்பொருள் தந்து போமின்.

அப்பொழுது மிக்க வலியுடைய தாயத்தார்கள் அவளைத் தீயசொற்கள் கூறி வைது நிலத்தில் தள்ளி அடித்தார்கள். அவள், தன் புதல்வனுடனே, "இது முறையோ! இது முறையோ!" என்று கூவிக்கொண்டு தரும சபையை அடைந்து சபையார்க்குத் தன் வழக்கைக் கூறினாள். அதுகேட்ட நீதி நூல் வல்ல சபையார் ஏவலர்களை விடுத்தனர்; தனபதி தங்கை அவர்களோடு சென்று தாயத்தார்களை மறித்து நியாய சபை யின்கண் கூட்டி வந்தாள். அந்நிலையில் சோமசுந்தரக்கடவுள் தாம் தவமேற்சென்ற **தனபதியே போலத்** திருவுருவந்தாங்கி அங்கு எழுந்தருளி வரலானார்.

**சோமசுந்தரக்கடவுள் மாமனாக எழுந்தருளி வருதல்**

அங்குத் தனபதியே போல உருக்கொண்டு வந்தருளிய சிவபெருமானின் திருச்செவிகளில் அணிந்த இரத்தின குண் டலங்கள் பிடரியில் ஒளி வீசவும், திருத்தோள்களில் வாகு வலயங்கள் ஒளிவீசவும், திருமார்பில் மணிக் கண்டிகை விளங்க வும், வண்டுகள் மொய்த்துக்கிடக்கும் செந்தாமரைமலர்போல நீலமணியால் செய்த மோதிரங்களை அணிந்த திருக்கரத்தை வீசிக்கொண்டு கோபநோக்கினையுடைய சிங்கம்போலப் பெரு மிதத்தோடு நடந்துவந்தார். அப்பொழுது, அவரது முகம் தாயத்தாரை நோக்கும்போதெல்லாம் வாடிய தாமரைபோல் மாறிவிடும்; மைந்தனை நோக்கும்போதெல்லாம் அன்றலர்ந்த தாமரைபோல் விளங்கும். இத்தகைய தோற்றத்தோடு இறைவர் நியாயமன்றினை அணுகும்போதே, "இங்கு அரசன் இல்லையோ! ஆன்றோர்கள் இல்லையோ! அரசனுடைய செங் கோல் கொடுங்கோலாயிற்றோ! வேத சிவாகமங்களை அருளிய கடவுளும் இல்லையோ! தருமமும் எங்கே சென்று ஒளித் ததோ!" என்று சொல்லி முறையிட்டுக்கொண்டு தரும சபையினை அடைந்தார்.

அரசனிங்(கு) இல்லை கொல்லோ!
ஆன்றவர் இல்லை கொல்லோ!
குரைகழல் வேந்தன் செங்கோல்
கொடியதோ! கோதில் நூல்கள்
உரைசெயுந் தெய்வந் தானும்
இல்லைகொல்! உறுதி யான
தருமமெங்(கு) ஒளித்த தேகொல்!
என்(று)அறத் தவிசிற் சார்வார்.

அப்பொழுது தனபதியின் வருகையைக் கண்டு தாயத்தார்கள் மனந்தளர்ந்து பெருவியப்பு அடைந்து, "வெல்வோம்" என்று கொண்ட மனவலியை இழந்து, முன்பு பொய்வழக்கால் வென்ற தீச் செயலை நினைந்து நினைந்து அச்சமும் நாணமுங் கொண்டு நின்றார்கள். **மாமனாகி வந்த சிவபெருமான்,** தன் மருமகனையும் தங்கையையும் தழுவிக்கொண்டு தம் திருமிடற்றினின்றும் நீங்காத சாமவேதத்தினைப் பாடுபவர்போல் வாய் திறந்து, "ஐயகோ! நீங்கள் வறியவர்களானீர்களே! என்று புலம்பி வருந்தினார்.

மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பின் வந்த
தாதுல ராத கோதை [1] தன்னொடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதம்ஆர்ப் பவர்போல் வாய்விட்(டு)
**ஆதுல ரானீர் அந்தோ!** ஐய! என்(று) அழுது நைந்தார்.

அப்போது வணிகமாதும் அவள் மகனும் வணிகராக வந்த இறைவனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிக் கண்ணீர்விட்டு அழுதனர்.

**வணிகமூர்த்தி மகனையும் தங்கையையும் தழுவித் தேற்றுதல்**

வணிகமூர்த்தி அவர்களைத் திருக்கரங்களால் எடுத்து தழுவித் தமது கண்ணீராகிய கடல் வெள்ளத்தில் மூழ்குவித்துப் பின்பு புதல்வனைப் பார்த்து, "உன் மார்பிலே [2] ஐம்படை

---

1. தாதுலராத கோதை - (தாயத்தார்கள் பூமியில் தள்ளிப் புரட்டி அடித்ததனால்) மண் நீங்காத கூந்தலையுடைய வணிகமாது. (தாது-மண்.)

2. ஐம்படை - பஞ்சாயுதம் என்னும் ஓர் ஆபரணம். காவற் கடவுளாகிய திருமாலின் சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்னும் ஐம்படை

என்னும் அணியைக் காணேன்; காலிலே சிறிய சிலம்பினைக் காணேன்; தோளிலே தோளணியைக் காணேன்; முகத்திலே அசையும் சுட்டியைக் காணேன்; காதுகளிலே ஒளி வீசும் குண்டலங்களைக் காணேன்; இப்போது அணிகள் நீங்கிய வெற்றுடம்பை மட்டுங் கண்டேன்; அப்பா! எத்துணை விலைபெறு மென்று கருதிப் பிள்ளைப்பணிகளையும் கவர்ந்துகொண்டனர்?''.

ஐம்படை மார்பிற் காணேன்; சிறுசிலம் படியிற் காணேன்;
மொய்ம்படை மதாணி காணேன்; முகத்தசை சுட்டி காணேன்;
மின்படு குழைகள் காணேன்: வெற்றுடல் கண்டேன்; அப்பா!
என்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தார் (என்னு).

என்று சொல்லி அனைவரும் மனமிரங்கும்படி வாய்விட்டு அழுதார். தங்கையையும் புதல்வனையுங் கண்ணீர் மாற்றிக் கையினால் முதுகைத் தடவி, "வருந்தாதீர்கள்! என் முன்னே [3]வேறு ஒன்றினையும் நினையாதீர்கள்! 'நான் வருவேன்' என்று சிறிதும் நினையாத வஞ்சகத் தாயத்தார்களின் வழக்குத் தோற்றுவிடும்! பாருங்கள்!'' என்றார். பின்னும் அவர்களை நோக்கி, "நண்பர்களிடத்து வஞ்சனை புரிந்தும், நம்பி வைத்தவர் பொருளைக் கவர்ந்தும், இரப்பவர்களுக்கு இம்மியளவுங் கொடாது உலோபஞ் செய்தும், வரம்பின்றி வட்டி வாங்கியும் சிலர் தேடுதல்போலத் தேடப்பட்டதோ? அன்று; அறவழியில் தேடப்பட்ட நமது பொருள் அழியுமா?'' என்றார்.

நட்பிடை வஞ்சஞ் செய்தும் நம்பினோர்க்(கு) ஊன்மா றட்டத்து
உட்படக் கவர்ந்தும் ஏற்றோர்க்(கு) இம்மியும் உதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போல் ஈட்டப்
பட்டதோ? அறத்தா(று) ஈட்டும் நம்பொருள் படுமோ? என்னு.

---

வடிவாகச் செய்யப்பெற்றதோர் அணி; இது குழந்தைகட்குக் காவலாக ஐந்தாம் மாதத்தில் தரிப்பது மரபு என்பர். இந்த அணி ஐம்படைத் தாலி எனவும் பெயர் பெறும்.

3. வேறு ஒன்றினையும் நினையாதீர்கள் என்பதற்கு இத்துணை நாள் உங்களை விட்டுவிட்டு மறந்திருந்தேன் என்றும் நினையாதீர்கள் என்றேனும், இவ் வழக்குத் தோற்றுவிடுமோ என்றும் நினையாதீர்கள் என்றேனும் பொருள் கொள்க.

பிறகு, மதுரைக்கு நாயகனாகிய சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் திக்கை நோக்கித் தம் திருக்கரங்களைத் திருமுடிமேற் குவித்து, "மாணிக்கம் விற்றருளிய எமது வணிகர் குலத் தலைவரே! எங்கள் வழக்கை இந்த அற மன்றத்தவர் வாயிலாகத் தீர்த்து எமது பொருளைத் தருக" என்று புலம்பி முறையிட்டார்.

இவ்வாறு வாய் புடைத்து ஆர்த்து அழுத வணிகமூர்த்தி வஞ்சகர்களாகிய தாயத்தாரை வெகுண்டு நோக்கினார்; பின்பு நீதி மன்றத்தாரை நோக்கி, "அரசனது செங்கோலாகிய நூலினால் கட்டிய அறமாகிய தட்டிலே உங்கள் நாவாகிய துலாக்கோலையிட்டு எமது வழக்கையும் தாயத்தார்களின் வழக்கையும் சீர்தூக்கி நியாயம் வழங்குங்கள்[1]" என்று தெளிவுபடக் கூறியருளினார்.

**வழக்கு முடிவில் ஞாதிகள் இவர் தனபதி அல்ல என்றல்**

நரைத்த முதிய புலியினைப் போன்ற வணிகமூர்த்தியின் சொல்லைக் கேட்ட சபையார்கள் நடுங்கி, இருதிறத்தாருடைய வழக்கினையும் ஏற்றுக்கொண்டு [2] அநுவாதஞ் செய்து இரண்டு வழக்குகளையும் தடை விடைகளால் கேட்டு அவற்றைச் சீர்தூக்கி ஆராய்ந்து உண்மை தெரிந்து, "தாயத்தாரின் வழக்குப் பொய் வழக்கு" என்று முடிவு கூறினர்.

தாயத்தார்கள் அது கேட்டு அச்சமுற்று வேறு வகையிலே தம் வழக்கைக் கூற முயன்று, "இவர் தனபதிச் செட்டியார் அல்லர்" என்றார்கள்.

**வணிகமூர்த்தி அவரவர் செய்திகளை விடாமல் கூறல்**

அப்பொழுது இறைவராகிய தனபதிச் செட்டியார் இரு கைகளையும் கொட்டிச் சிரித்து, அவரவர் குடிப் பெயரும், பட்டமும், காணியும், தந்தை, தாய், மாமன், மாமி, தாயத்தார், அவர்களைப் பெற்றவர், பிள்ளைகள், உடன் பிறந்தார், மனைவியர், சுற்றத்தார் என்பவர்களுடைய பெயர்களும்,

---

1. இங்கே, "சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல் அமைந்தொருபால், கோடாமை சான்றோர்க்(கு) அணி" என வரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.

2. அநுவாதம் - முற் கூறியதனைப் பின்னும் எடுத்துரைத்தல்.

அவரவர் குணங்களும் செய்தொழில்களும், பிறவும் முன்னுள்ள படியே சிறிதும் வழுவா வண்ணம் முறைப்படி மொழிந்தனர்.

**நீதிசபையார் தீர்ப்பைக்கேட்டு ஞாதிகள் சபைவிட்டு நீங்கல்**

அதனைக் கேட்ட பெரியோரனைவரும் ஞாதிகளைப் பார்த்து, "இவர் அந்தத் தனபதிச் செட்டியாரே யாவர்" என்றார்கள். உடனே தாயத்தார்கள், "நம் வழக்குத் தோற்றது; இதனைப் பாண்டியன் அறிந்தால் நம்மைத் தண்டிப்பான்" என்று கருதி, "வீட்டிற்குச் சென்று வருகிறேன்" என்றும், "குளத்திற்குச் சென்று விரைவில் வருகிறேன்" என்றும் ஒவ்வொரு வார்த்தைக் கூறிவிட்டுப் பெருங்காற்றுத் தள்ளுத லால் சிதறியோடும் மேகங்களைப்போலக் கலைந்து ஓடிப்போய் விட்டார்கள்.

**நீதிமன்றத்தார் தீர்ப்பும் வணிகமூர்த்தி மறைதலும்**

அத்தாயாதிகள் போனவுடன் அங்கிருந்த அறங்கூறும் அவையினர், "தனபதிச் செட்டியார் முன்கொடுத்த பொருள்க ளனைத்தும் தத்துப்புத்திரனுக்கே உரியன" என்று தீர்ப்புக் கூறி, அவர்களால் சாசனம் எழுதி வாங்கி வணிகமங்கையிடம் கொடுத்தனர். அப்போது தனபதியுருவம் தாங்கிவந்த சோமசுந்தரக்கடவுள் பலருங்காண மறைந்து தம் திருக்கோயி லுட் புகுந்தருளினர்.

**வழுதி வணிகச்சிறுவனுக்கு வரிசை நல்கிச் சிவனடி சேர்தல்**

இதனைச் சுந்தரேச பாதசேகர பாண்டியன் கேள்வி யுற்றுத் தனபதியுருவங்கொண்டுவந்து திடீரென அனைவருங் காண மறைந்தவர், சோமசுந்தரக்கடவுள் என்று அறிந்து வியப்புற்று, வணிகச் சிறுவனுக்கு மகிழ்ச்சி மிக வரிசைகள் பல வழங்கினன். சிவபெருமானின் திருக்கோயிலைப் பொன்னி னாலே புதுப்பித்தான். சிலகாலஞ் சென்றபின் தன் மகனாகிய **வரகுண பாண்டியனுக்கு** முடிசூட்டித் தன்னரசைக் கொடுத்து விட்டுச் சிவபெருமான் திருவடி நீழலை அடைந்தான்.

செய்யுள்—37

ஆகச் செய்யுள் 1962

---

## 40. வரகுணனுக்குச் சிவலோகம் காட்டிய படலம்

**வரகுண பாண்டியன் தன்மை**

[1] வரகுண பாண்டியன் ஞாயிறு, திங்கள், ஆன்மா, நிலம், நீர், நெருப்பு, வளி, வான் என்னும் எண்பகுதியின் [2] மயமாகிய சோமசுந்தரக் கடவுளை மனம், மொழி, மெய்யென்னும் மூன்று கரணங்களினாலும் மெய்யன்போடு வழிபடும் சிறந்த குணத்தினன்: மன்மதனை வென்ற அழகினன்; சூரியனைப்போன்ற மெய்யொளியினன்; வெற்றி பொருந்திய நூறு வேள்வியினைச் செய்த இந்திரனைப்போன்ற பெருஞ் சிறப்பினன். அவன் வேத முதலிய பல நூல்களையும், வேள்வி முதலிய பல கருமங்களையும் வழுவாது நிலைபெறச் செய்தலால் **நான்முகனைப்** போலவும், அட்ட லட்சுமிகளால் இம்மை இன்பம் விளைய அரசுபுரிவதால் சக்கரமும் சங்கும் ஏந்திய **திருமாலைப்** போலவும், மாறுபாட்டினைச் செய்யும் ஐம் பொறிகள், அந்தக் கரணங்கள் முதலிய பகையினை வெல்லும் ஒழுக்கத்தாலும், மெய்யுரையாலும், முற்றுமுணர்தலினாலும், எல்லா வுயிர்களிலும் நிறைந்த **சிவபெருமானைப்** போலவும் விளங்கி உலகினைப் பாதுகாத்து வந்தான்.

**வரகுண பாண்டியன் வேட்டைமீது சென்று மீளுதல்**

ஒரு நாள் வரகுண பாண்டியன் வேட்டையாட விரும்பிக் காடும் மலையுமாகிய எங்குஞ்சென்று தீயினைக் கக்கும் கண்களையுடைய புலிகளையும், நீண்ட துதிக்கையினை நீட்டும் யானைகளையும், பன்றிகளையும் பிற விலங்குகளையும் சூரியன் அத்தமிக்கும் வரையும் வேட்டையாடினான்; பிறகு மதுரை மாநகரத்தை நோக்கிக் காற்றினைப்போல் விரைந்து செல்லும் தனது கனவட்டம் என்னும் குதிரையின்மேல் திரும்பி வந்துகொண்டிருக்கும்பொழுது, அக் காட்டின்கண் வழியில் துயில் மயக்கங் கொண்டு சோர்ந்து முகத்தில் வியர்வை தோன்றப் படுத்து

---

1. வரகுணன் - மேலாகிய குணமுடையவன்; இவனை முதலாம் வரகுண பாண்டியன் என்பர்,

2. எண் பகுதி - அட்ட மூர்த்தம். "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான னாயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி" என்பது அப்பர் தேவாரம்.

நித்திரை செய்யும் ஒரு அந்தணன்மேல் அக் குதிரை காலை வைத்து மிதித்துவிட்டது. உடனே அவ்வந்தணன் இறந்து விட்டான். வரகுண பாண்டியன் அதனை அறியாது தன் அரண்மனையை அடைந்தனன்.

**வரகுண பாண்டியனைப் பிரமகத்தி பற்றுதல்**

அப்பொழுது குதிரையின் கால் பட்டு இறந்த பிராமணனுடைய உடலை அவன் சுற்றத்தாராகிய அந்தணர்கள் கொண்டுவந்து பாண்டியனுடைய கடைத் தலைவாயிலிலே போட்டு நிகழ்ந்ததைக் கூறினர். வரகுண பாண்டியன் அதனைக்கேட்டு வருந்தி அம்மறையவர்களை அழைத்து அவர்கள் கையில் நிறைய பொற்குவைகளை, அளித்து இறந்தவன் உடலை எடுத்துத் தகனஞ் செய்வித்து இறுதிக் கடன்களை முடிப்பித்தான். எனினும் அக் கொலைப் பாவம் **பிரமகத்தியாக** வந்து அவனைப் பற்றிக்கொண்டது.

**பிரமகத்தியைப் போக்கப் பரிகாரம் புரிதல்**

வரகுண பாண்டியன் தன்னைப் பிடித்து வருத்தும் பிரமகத்தி நீங்கும்பொருட்டுப் பிராயச்சித்தமாக அந்தணர்கள் கூறியபடியே [1] ஐவகைப்பட்ட உணவினை ஆற்றங்கரையின்கண் வேதநூற் கேள்விமிக்க அந்தணர்க்கு அளித்தான்; மும்மூர்த்திகளின் வடிவமாகிய அரச மரத்தைப் பிரதட்சிணஞ் செய்தான்; அறுகம் புல்லைக் கொய்து பசுக்கள் உண்ணக் கொடுத்தான்; அகமருடண மந்திரத்தால் ஓமம் புரிந்தான்; பஞ்சகவ்வியமும், பசுவின் கொம்பு தோய்ந்த தீர்த்தமும் உட்கொண்டான்; பல வகையான தானங்களைச் செய்தான். அப்பழி சிறிதும் நீங்காத வலியினையுடையதாய் நெய் சொரிந்த அக்கினியைப்போல மேலிட்டு அவன் கண்ணுக்குப் புலனும்படி சூழ்ந்துகொண்டது.

**பிரமகத்தி துன்புறுத்தல்**

அந்தப் பிரமகத்தி ஏங்கும்; பெருமூச்சு விடும்; கை தட்டும்; மலைபோல் வளரும்; அணுவாகச் சிறுகும்; சினந்து

---

1. ஐவகைப்பட்ட வுணவு - இவை கறிப்பன, நக்குவன, பருகுவன, விழுங்குவன, மெல்லுவன என்பன.

ஆரவாரஞ் செய்யும்; முன்னிலும், பின்னிலும் இரு புறங்களிலும் தொடரும்; சிரிக்கும்; பிளந்த வாயை மெல்லும்; சிறிது விலகும்; பின் நெருங்கும்; "**பழிதா**" என எதிர்ந்து வரகுணனைப் பிடிக்கும்.

**பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை வேண்டுதல்**

அப்போது வரகுண பாண்டியன் மாசுபடிந்த மாணிக்கம் போலவும், இராகு என்னும் பாம்பின் வாய்ப்பட்ட தண்மதியினைப் போலவும் பொலிவு குன்றி, யானையுண்ட விளங்கனி போல் உள்ளீடில்லாத மனமுடையவனுனன். மீண்டும் கொலைப் பாவம் நீங்காது ஓங்கி வளரும் தன்மையைக் கண்ட மறையோர்கள் பாண்டியனை நோக்கி, "அரசே! நீ விரத நியமத்துடன் நாடோறும் சோமசுந்தரக் கடவுளை ஆயிரத் தெட்டுத் தரம் பிரதட்சிணஞ் செய்யக் கடவாய்; இவ்வாறு பத்து நாட்கள் செய்துவரின் இப் பிரமகத்தி நீங்கும் வண்ணம் சிவபெருமான் உனக்கு வழிகாட்டி யருளுவர்" என்று கூறினர். அது கேட்ட வரகுண பாண்டியன் திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "கங்கையைத் தாங்கிய எம்பெருமானே! தேவரீர் இந்திரனுடைய பழியைத் தீர்த்தருளினீர்! மறையோனுடைய மாபாதகத்தைப் போக்கியருளினீர்! அதுபோல அடியேனைப் பற்றி வருத்தும் கொலைப் பழியினையும் தீர்த்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்து அடியற்ற மரம்போல் நிலத்தில் வீழ்ந்து வணங்கினுன்; பின்பு அந்தணர்கள் கூறியபடியே ஆயிரத்தெட்டு பிரதட்சிணஞ் செய்து துதித்தான்.

**இறைவன் விண்மொழியாகப் பாண்டியனுக்கு அருளுதல்**

அப்பொழுது சிவபெருமானின் திருவருளினுலே ஆகாயத்தினின்றும், "பாண்டியனே! ஒவ்வோர் அடிக்கு ஒவ்வோர் அசுவமேத யாக பலன் கொடுப்பது பிரதட்சிணம்; அத்துணைச் சிறப்புடைய பிரதட்சிணம் நாள் ஒன்றுக்கு ஆயிரத்தெட்டுச் செய்து வந்தாய்; அதனுலே நாம் மிக மகிழ்ந்தோம்; இனி நீ அஞ்சாதே! காவிரி நாடாகிய சோழ மன்னன் நின்னோடு போர் செய்யக் கருதி வருவான்: நீயும் அவனை எதிர்ப்பாய்,

அப்போரிலே சோழன் உனக்குப் புறங்காட்டி ஓடுவான்; நீயும் அவன் பின்னேயே ஓடி அவனை எட்டிப் பிடிப்பவன் போலத் துரத்தும்பொழுது நம்மை நாமே பூசித்துக்கொண்டிருக்குந் தலமாகிய [1]**திருவிடை மருதூரை** அடைவாய்; அங்கு உனது கொடிய பழியை நீக்கியருள்வோம்'' என்று ஓரசரீரி வாக்குத் தோன்றிற்று. வரகுண பாண்டியன், அது கேட்டு மன மகிழ்ந்து சோமசுந்தரக் கடவுளின் திருவருளைத் துதித்து வணங்கிக்கொண்டு தன் அரண்மனையை அடைந்தான்.

**வரகுணன் சோழனோடு போர்புரிந்து துரத்திச் செல்லல்**

சிலநாள் கழிந்தபின் ஆத்தி மாலையை அணிந்த முடியுடைய சோழன் ஒருவன் வரகுணபாண்டியனுடன் போர்புரியக்கருதிப் புவியை மறைக்கும்படி புலிக்கொடியை உயர்த்தித் தனது பெரிய சேனையோடு கடல் நிலைபெயர்ந்து வந்தாற்போல் முரசங்கள் முழங்க வந்து பாண்டி நாட்டினை வளைத்தான். அதனைக் கண்ட மீனக் கொடியை உயர்த்திய பாண்டியன் தன் சேனையோடு பாற்கடலைக் கடைய எழுந்த மந்தர மலையைப்போல் எழுந்து கலக்கிப் போரிட்டான்; அப்போது சோழனுடைய படைகள் நிலைகலங்கித் தோற்றோடின. சோழனும் போருக்காற்றாது தோற்றுப் புறமுதுகு காட்டி மனம் வெள்கி ஓடினான். மீனக்கொடியோனாகிய வரகுண பாண்டியன் அங்ஙனம் ஓடிய சோழனை விடாது பின்தொடர்ந்து துரத்திச் சென்றான்.

---

1. திருவிடை மருதூர் - இது மூவர் தேவாரப் பாடல் பெற்ற பெருமையுடைய சிவ ஸ்தலம். இத்தலம் வட நாட்டில் உள்ள மல்லிகார்ச்சுனம் (ஸ்ரீசைலம்) என்ற சீபர்ப்பதத்திற்கும், தெற்கே பாண்டி நாட்டிலுள்ள திருப்புடை மருதூர் என்ற தலத்திற்கும் இடையில் உள்ளதால் இடைமருது எனப் பெயர்பெற்றது. இம் மூன்று தலத்திற்கும் தலமரம் 'மருது' ஆகும். (அருச்சுனம் - மருது) இத்தலத்திற்குப் பரிவார சந்நிதிகளாக விநாயகர் சந்நிதி திருவலஞ்சுழியாகவும், முருகர் சந்நிதி சுவாமி மலையாகவும், நடராசர் சந்நிதி சிதம்பரமாகவும், தட்சிணாமூர்த்தி சந்நிதி ஆலங்குடியாகவும், சண்டீசர் சந்நிதி திருச்சேய்ஞலூராகவும், வைரவர் சந்நிதி சீகாழியாகவும், நவக்கிரகக் கோயில் சூரியனார் கோயிலாகவும் தனிச் சிறப்புடன் தனித்தலங்களாக ஆங்காங்கு அமைந்து விளங்குதல் இதன் பெருமையினைப் புலப்படுத்தும்.

**வரகுணன் திருவிடை மருதூர் சென்று வழிபடல்**

வரகுண பாண்டியன் சோழனைப் பிடிக்கும் பொருட்டுத் துரத்திக்கொண்டோடும்போது தேன்சிந்தும் மணங் கமழும் முல்லை மலரையும், தாமரை மலரையும், ஏந்திக் கழிசூழ்ந்த நெய்தல் நிலத்துச் சோலையின் மருங்கில் இருல் மீனின் புலால் நாற்றத்தைப் போக்கும் குளிர்ந்த நீர்த்துறையையுடைய காவிரியை அடைந்தான்; [1] **பூசத்துறை** என்னும் அத் துறையிற் சென்று நீராடி, அக் காவிரியின் தென் பக்கத்தில் மணமிக்க பெருமை பொருந்திய திருவிடைமருதூரில் எழுந்தருளிய மகா லிங்கப் பெருமானை வணங்கத் திருக்கோயிலினது கீழ்த்திசை வாயிலைக் கடந்து உள்ளே சென்றான். அப்போது அவனைத் தொடர்ந்து செல்ல இயலாத பாசத் தளையும். கொலைப் பழியும் புறத்தே நின்றுவிட்டன. உள்ளே சென்ற பாண்டியன் வேத மாகிய வண்டுகள் சூழ்ந்து ஒலிக்கத் தெய்வத் தன்மை பொருந்திய இடைமருதிலே குடிகொண்ட **பெருந் தேனைத்** [2] தன் கண்களாகிய வாயைத் திறந்து பருகி அதிலே தோய்ந்து அனல் வாய்ப்பட்ட வெண்ணெயாலாகிய பாவைபோல் உருகிச் செயலும் வாக்கும் அற்று உணர்ச்சியுருவமாகி நெடுநேரம் நின்றான்.

சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழறத் தெய்வ
மருதிற் சிறந்த **பெருந்தேனைக்**கண் வாயங் காந்து
பருகிப் படிந்து தழல்வாய் வெண்ணெய்ப் பாவை யொப்ப
உருகிச் செயலற்(று) உரையற்(று)உணர் வாகி நின்றான்.

---

1. பூசத்துறை - இது தை மாதம் பூச நட்சத்திரத்தில் மருதவாணர் தீர்த்தம் ஆடும் திருக்காவிரித் துறை ஆகும்; இதன் சிறப்பினை. "பூசம் புகுந்தாடிப் பொலிந்தழ காய, ஈசன் உறைகின்ற இடைமரு தீதோ" (திருஞானசம்பந்தர் தேவாரம்) எனவும், "ஈசனெம்பெரு மானிடை மருதினில், பூச நாம்புகு தும்புனல் ஆடவே" (திருநாவுக்கரசர் தேவாரம்) எனவும் வருவனவற்றால் அறியலாம்.

2. இங்கு மருத மரத்தடியில் வீற்றிருக்கும் பெருமானை மருத மரத்திலுள்ள தேனாகவும், வேத ஒலியை வண்டுகளின் ஒலியாகவும் கூறப் பெற்றுள்ளன. (மரத்தின் பொந்தில் தேன் கூடு கட்டி இருத்தல் காண்க.) "அந்த விடைமருதில் ஆனந்தத் தேனிருந்த, பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ" என்பது திருவாசகம். இத்தேன் நினைத்தொறும், காண்டொறும், பேசுந்தொறும் எப்பொழுதும் இன்பம் செய்வதாம்.

பின்பு, "நிராமயனே! பேரின்பத் திருக் கூத்தனே! நான்மாடக் கூடலில் வீற்றிருக்கும் பராபரனே! இமையா முக்கட் பகவனே; பார்ப்பதி மணாளனே! பழம் பொருளே! அகில நாதனே! புண்ணியனே! மருதவாணனே! அராவணி சடையனே!" என்று **மகாலிங்க மூர்த்தியைப்** பலவாருகத் தோத்திரஞ் செய்தான்.

**பிரமகத்தி கீழை வாயிலில் தங்கிவிடுதல்**

அப்பொழுது சொற்பதங் கடந்து நின்ற சோதிவடிவான பெருமான், வரகுண பாண்டியனை நோக்கி, "மற்போரில் வல்ல பெருந் தோளாய்! உன் **பிரமகத்தி** கீழை வாயிலிலே நிற்கின்றது. ஆதலால், நீ அவ்வழியாலே போகாதே; மேலை வாயில் வழியாக நம் மதுரைப் பதிக்குச் செல்வாயாக" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

வரகுண பாண்டியன் அதனைக்கேட்டு இறைவன் வீற்றிருக்கும் இடைமருதினை வலம் வந்து பிரிதலாற்ருமையால் வாயில்கள் தோறும் அடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து வணங்கி மேலை வாயிலால் போவாஞயினன்; அப்போது அவன் சில நாள் அங்குத் தங்கி [1]மேலைக் கோபுரத்தைத் தன் பெயரால் கட்டினன்; வேறு பல திருப்பணிகளையும் செய்துமுடித்தான்[2]; அதன் பின்னர் தென்றிசை நோக்கிச் செல்லுங்கால் வழியிலுள்ள திருக்கோயில்களில் எழுந்தருளிய சிவபரம்பொருளை வணங்கித் துதித்துக்கொண்டே மதுரையை அடைந்தான்.

---

1. மேலைக் கோபுரம் - இது பாண்டியன் கோபுரம் என வழங்குகின்றது.

2. வரகுண பாண்டியன் இடை மருதில் திருப்பணிகளைப் புரியும் போது அவனது அன்பின் பெருக்கும் திருத்தொண்டின் திறமும் அளவிடற்கரியனவாகும். இதனை, "வெள்ளை நீறு மெய்யிற்கண்டு, கள்ளன் கையிற் கட்டவிழ்ப்பித்தும், ஒடும் பல்நரி ஊளைகேட்(டு) அரனைப், பாடின என்று படாம்பல அளித்தும், குவளைப் புனலில் தவளை அரற்ற, ஈசன் தன்னை ஏத்தின என்று, காசும் பொன்னும் கலந்து தூவியும், வழிபடும் ஒருவன் மஞ்சனத் தியற்றிய, செழுவிதை எள்ளைத் தின்னக் கண்டு, பிடித்தலும் அவனிப் பிறப்புக்(கு) என்ன, இடித்துக்கொண்ட வன் எச்சிலை நுகர்ந்தும், மருத வட்டத்(து) ஒருதனிக் கிடந்த, தலையைக் கண்டு தலையுற வணங்கி, உம்மைப் போல எம்மித் தலையும், கிடத்தல்

**சிவலோகம் காண விழைதல்**

பிறகு வரகுண பாண்டியன் தன்னை விடாது தொடர்ந்த பிரமகத்திப் பழியைப் போக்கிக் காத்தருளிய சோமசுந்தரக் கடவுளை நாடோறும் அடைந்து தரிசனம் செய்துகொண்டும், உலக முழுதும் நீதி தவறாது செங்கோ லோச்சிக்கொண்டும் இறைவன் புகழை அறிஞர்களைக்கொண்டு கேட்டுக்கொண்டும் வாழ்ந்து வந்தான். ஒரு நாள் வேதம், ஆகமம், புராணம் மிருதிகள் முதலாய நூல்கள் அனைத்தும் 'உலகங்களில் மேம்பட்டது **சிவலோகம்**' என்றுசொல்வதை மனத்திற்கொண்டு அந்தச் சிவலோகத்தைக் காண்டற்கு ஆசை கொண்டு அன்றிராத்திரியிலே (சிவராத்திரியிலே) திருக்கோயிலை அடைந்து, சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "எம்பெருமானே! எழு பிறப்பையுங் கடந்து உம்முடைய நீழலைப் பெற்ற மெய்யன்பர்கள் சூழத் தேவரீர் சிவலோகத்தில் எழுந்தருளி யிருப்பதைத் தரிசித்து வணங்க அடியேன் ஆசை கொண்டேன்" என்று விண்ணப்பஞ் செய்தான்.

**திருநந்தி தேவர் பாண்டியனுக்குச் சிவலோகங் காட்டல்**

உடனே சிவபெருமான் வரகுண பாண்டியன் அன்பிற்கு எளியவராகி, "நாம் இன்றைக்கு அச் சிவலோகத்தை இவ் வுலகத்தில் வருவித்து இவ்வன்பனுக்குக் காட்டுவோம்" என்று திருவுளங் கொண்டருளினர். அப்பொழுது சோம சுந்தரக் கடவுளின் திருவுள்ளத்தை அச் சிவலோகம் உணர்ந்து, சூரிய சந்திரர்களின் சுடர்கள் மின்மினிப்பூச்சிபோல் ஒளி மழுங்கக் கோடி சந்திரர்கள் பேரொளி பரப்பி ஒருங்குதித்தாற்போல, விண்ணினின்றும் இறங்கித் தோன்றியது. சோமசுந்தரக் கடவுள் திருநந்திதேவரை அழைத்து, "நமது மெய்யன்பனுகிய

---

வேண்டும்என்(று) அடுத்து அடுத்(து) இரந்தும்,: கோயில் முற்றத்து மீமிசைக் கிடப்ப, வாய்த்தன என்று நாய்க்கட்டம் எடுத்தும், காம் புகுத்(து) உதிர்ந்த கனியுருக் கண்டு, வேம்புகட்(கு) எல்லாம் விதானம் அமைத்தும், விரும்பின கொடுக்கை பரம்பரற்(கு) என்று, புரிகுழல் தேவியைப் பரிவுடன் கொடுத்த, பெரிய அன்பின் வரகுண தேவரும்" என வரும் திருவிடை மருதூர் மும்மணிக் கோவையின் அடிகளால் நன்கு அறியலாம்.

வரகுண பாண்டியன் நமது உலகத்தைக் காண விரும்பினன்; ஆதலின், அவனுக்குக் காட்டுக'' என்று பணித்தருளினர். அது கேட்ட திருநந்தி தேவர் சிவபெருமானை வணங்கிக்கொண்டு புறத்துவந்து வரகுண பாண்டியனை நோக்கி, ''வழுதி வருக'' என்று அழைத்தார். அப்பொழுது வரகுணன் அவரை வணங்கி எழுந்து பின்செல்லத் திருநந்தி தேவர், ''வரகுணனே! திருமாலும் பிரமனும் வேத முதலிய அளவைகளால் ஆராய்ந்து அறியமுடியாத பேரொளியினையுடைய ஞான சூரியனாகிய சோமசுந்தரக் கடவுள் ஆண்டருளுகின்ற **சிவலோகம்** இதுவே; இதனைக் காண்பாயாக'' எனப் பணித்தருளினர்.

**சிவலோகக் காட்சிகள்**

வரகுண பாண்டியன் கண்ட காட்சியை எழுதவும் இயலுமோ? கருப்பூர மணம் கமழும் தென்றற் காற்றினல் மொத்துண்டு, அரும்புக் கூட்டங்கள் மலர்ந்து, பதினயிரம் யோசனை தூரம் சென்று மணம் வீசி, நூறுயிரம் இதழ்களைக் கொண்ட வெண்டாமரை மலர்கள் விளங்குகின்ற ஓடைகள் பக்கந்தோறும் பொருந்திய ஆறுகளும், தெய்வ மாதர்கள் இனிய வாயினைத் திறந்து தேனைப் பொழிவதுபோற் பாடும் ஏழிசைகளும், யாழின் இசைகளும், மலர்களில் மொய்க்கும் வண்டுகளின் அழகிய இசைகளும், நாரதரும் தும்புருவும் பாடுகின்ற இனிய் இசைகளும் உள்ள எல்லா விடங்களும், அமுதமயமான நீரினையுடைய வாவிகளும் (நடைக் கிணறுகளும்), பொற்றமரைத் தடாகங்களும், தேவ மகளிராகிய குயிற் கூட்டங்கள் விளையாடும் பூஞ்சோலைகளும், தேவர்கள் வாழ்கின்ற பதங்களும், பாற்கடல்போன்ற அமுதநீர் நிறைந்த அகழியும், பொன்னுற்செய்த உறுப்புக்கள் அமைந்த திருமதிலும், திருக்கோபுரங்களும், அழகுமிக்க வீதிகளும், நவமணிகள் இழைக்கப்பெற்ற திருமாளிகை வரிசைகளும், அவற்றின் சூளிகை வரிசைகளும், ஐம்புலன்களும் நாடோறும் விருந்தாக உண்ணுதற்கு அமைந்த நால்வகை உண்டிகளும், யாழிசையும், கலவைச் சாந்தும், பொன்மாலையும் ஆடலாகிய செல்வமும், சித்திரப் பாவையையொத்த மகளிரும், நீண்ட சடைய்யையுடைய உருத்திரர்கள் தங்கள் உருத்திரர் மகளி

ரோடு அமர்ந்திருக்கும் மாளிகை வரிசைகளும், பகையும் துன்பமும் கடந்த செல்வமும், கவலையின்றித் துய்க்கும் போகங்களும் ஆகிய இவையனைத்தையும் தனித்தனியே காண்பித்தார்.

இத்தகைய காணற்கரிய காட்சிகளைக் கண்டுகளிக்கும் வரகுணபாண்டியனை நந்தியெம்பெருமான் மேலும் அழைத்துச் சென்று, "இது நான்முகன் வாழும் பதம் என்றும், இது மூன்றுலகங்களையும் அளந்த திருமாலின் பதி என்றும், இவை சிவபெருமானின் திருவுருவத்தைப் பெற்ற உருத்திரர்களின் நகரங்கள் என்றும், இவை எட்டுத்திசைகளையும் பாதுகாக்கும் இந்திரன் முதலிய திக்குப் பாலகர்கள் வாழும் இருப்பிடங்கள் என்றும் சுட்டிக் காண்பித்தார்.

பிறகு சிவனடியார் கூட்டத்தைக் கைப்பிரம்பினால் சுட்டி, "இவர்கள், சூரியன் உதிக்கு முன்னே நீராடித் திருவெண்ணீறணிந்து நம் இறைவனுடைய திருக்கோயிலைத் திருவலகிடுதலும், திருமெழுக்கிடுதலும், திருநந்தனவனப் பணி புரிதலும். புட்பங் கொய்து திருமாலை கட்டிக்கொடுத்தலும், சுகந்த தூபமிடுதலும், திருவிளக்கேற்றலும், சிவ தோத்திரஞ் செய்தலும், சிவபெருமானின் புகழைக் கேட்டலுமாகிய தொண்டுகளைச் செய்து **சிவ சாலோக்கிய பதத்தில்** வாழும் **தாத மார்க்கத்தினர்** ஆவர்."

"இவர்கள் புனிதமுடையவராய்ப் [1]பஞ்சசுத்தி செய்து உள்ளும் புறமும் ஒத்த அன்புடன் சிவலிங்கப்பெருமானைச் சிவாகம விதிப்படி மனமொழி மெய்களின் ஒருமைப்பாட்டுடன் சோடசோபசாரத்தோடு பூசித்துச் **சிவ சாமீப்பிய பதத்தில்** வாழும் **புத்திரமார்க்கத்தினர்** ஆவர்."

"இவர்கள், மூலக்கனலை வாயுவினால் எழுப்பி, பிரமரந்திரம் வரையில் கொண்டுபோய், அங்குள்ள சந்திரமண்டலத்தை இளகச்செய்து பிங்கலைக்கும் இடைகலைக்கும் நடுவிலுள்ள

---

1. பஞ்ச சுத்தி - பூத சுத்தி, ஆன்ம சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பன.

சுழுமுனையின் வழியாக ஒழுகும் அமுதத்தை உண்டு, சிவ பெருமானைப் புருவ நடுவில் தியானித்துச் **சிவ சாருப்பிய பதத்தில்** வாழும் **சக மார்க்கத்தினர்** ஆவர்.''

''இவர்கள் சிவபெருமான் பொருட்டு வேள்விகளைச்செய்து சிவபதம் அடைந்த அந்தணர்கள் ஆவர். இவர்கள் தண்ணீர்ப் பந்தல் வைத்தல் முதலிய பெரிய புண்ணியங்களைப் புகழும் பயனும் கருதாது நிராசையுடன் செய்தவர்கள். இவர்கள் வேத முறைப்படியும் சிவாகம முறைப்படியும் திருவெண் ணீற்றினை உடலில் அணிந்தவரும், திருவைந்தெழுத்தை உச் சரிக்கின்ற நாவினை உடையவரும், சிவபெருமானின் திருப் புகழைக் கேட்டு வினையின் வலியைப் போக்குபவரும் ஆவர். இவர்கள் வேதங்களிலுள்ள சதவுருத்திர மந்திரத்தைக் கூறிய வரும், உருத்திராட்ச மாலையும், திருநீறும் அணிந்தவர் எவரா யினும் அவர்கள் பெயரையும் குணத்தையும் குலத்தையும் கருதாமல், சிவபெருமானுகவே கருதிப் பிறப்பினை ஒழித்தவரும் ஆவர். இவர்கள் சிவஞானத்தைத் தானம் புரிந்தவரும், சிவ தருப்பணம் செய்தவரும், சிவபிரானுக்கு ஆலயம் எடுத்துப் பிரதிட்டை செய்தவருமாய்ப் பிறப்பினை ஒழித்த உத்தமர் ஆவர். இவர்கள் சிவபூசை செய்பவருக்கு வேண்டுங் காரியங் களை விரும்பிச் செய்தவரும், சிவனடியார்களுக்கு அறுசுவை அமுது அளித்தவரும், **'அடியார் பணியைச் செய்தலே தவம்'** என்று கருதிச் செய்து மேன்மை அடைந்தவரும் ஆவர். இவர்கள், சோமசுந்தரக் கடவுளுக்குத் திருக்கோயிலும், பிற திருப்பணிகளும், அர்ச்சனைகளும் செய்து, திருநீறு முதலிய சிவசாதன நெறியினுல் உலகினைக்காத்துச் சிவபதம் அடைந்த நின் குடியில் தோன்றிய அரசர்கள் ஆவர்'' என்றருளினுர்.

இவ்வாறு நந்தியெம்பெருமான் பிரம்பினுல் சுட்டிக்காட்டி அடியார் கூட்டத்தினரின் இயல்பைத் தெரிவித்துவர, வரகுண பாண்டியன் முறைப்படியே ஒவ்வோரிடத்தினும் நின்று பல முறை கீழே வீழ்ந்து வணங்கிக் கைகூப்பி வந்தான்; முடிவில் நந்தியெம்பெருமான் பாண்டியனைச் சிவபெருமான் திருமுன்னர் அழைத்துவந்து விடுத்தனர்.

**சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் காட்சி**

சிவபெருமான் திருமுன்பு வேதங்களும் சிவாகமங்களும் வடிவெடுத்து இருபக்கங்களிலும் நின்று வாழ்த்தின. தும் புருவும் நாரதரும் ஒருபால் நின்று இசை பாடினர். வண்டுகள் ஒலிக்கும் பூங் கொம்புபோலத் தேவ ரம்பையர்கள் ஆடினர். குறை வேண்ட வந்த தேவர்கள் சமயம் பெருது தூரத்தே காத்திருந்தனர். விநாயகக் கடவுளும், கந்தக் கடவுளும், வீரபத்திரக் கடவுளும் வணங்கி நின்று ஏவிய பணிகளைக் கேட்டு ஒரு பால் நின்றனர். திருமாலும் நான்முகனும் முன்னுடையினை ஒதுக்கி வாய்பொத்தி ஒதுங்கி நின்று தத்தங் குறைகளைச் சொல்லி நின்றனர். இந்திரன் முதலிய அட்ட திக்குப் பாலகர்கள் தாங்கள் செய்துவருங் காரியக் குறைகளை நடுநடுங்கி விண்ணப்பஞ் செய்து நின்றனர். வளை தடியையும் தண்டத்தையும் ஏந்தி வாயினைமென்று பற்களை அதுக்கிய பூதத் தலைவரும், அளவிறந்த கூற்றுவர்களும், முத்தலைச் சூலமேந்திய சிவகணத் தலைவரும் வாயில்கள் தோறும் காவல் பூண்டு நின்றனர்.

அமரர், சித்தர், அவுணர், சாரணர், கின்னரர், மாதவர்' இயக்கர், பாரிடர், கருடர், நாகர், சிவயோகியர் முதலாகிய கணத்தவரெல்லாம் ஒரு பால் துதித்து வணங்கி நின்றனர். முனிவர்கள், "இனி வரும் எங்கள் பிறப்பினை ஒழித்து எங்களைக் காத்தருள்க" என்று வேண்டி, அருள் நிறைந்த சிவப்பேறமுதினைத் தம் கண்களாகிய வாயால் பருகி, மெய் சிலிர்க்க, "**சங்கர! சிவ! சிவ!**" என முழங்கக் கைகுவித்து வாழ்த்தி நின்றனர். அப்போது அனைவருக்கும் அவரவர் தகுதிக்கேற்ப வேண்டிய வரங்களை அருளிச்செய்து, உமா தேவியார் புன்னகை செய்ய, அளவிறந்த ஒளி வீசும் இரத்தின சிம்மாதனத்தின்மேல் எழுந்தருளியிருந்த சிவபெருமானை வர குணபாண்டியன் கண்டு வணங்கினன்; அப்போது சொற்கள் தடுமாற உரோமஞ் சிலிர்ப்பத் திருவருளாகிய அருட்பெருங் கடலின்கண் தனது அன்பாகிய அலை இல்லாத நதி இழுத்துச் செல்ல, அதனில் மிதந்துசென்று பரமானந்தமாகிய திவ்விய அமிழ்தத்தை உண்டான்.

உரைக ளுந்தடு மாறமெய் யுரோமமுஞ் சிலிர்ப்பக்
கரையி றந்தஇன் னருட்பெருங் கடலில்அன் பென்னுந்
திரையி றந்தஆ(று) ஈர்த்திட மிதந்துபோய்ச் செப்பின்
வரையி றந்தஆ னந்தஆ ரமுதைவாய் மடுத்தான்.

**சிவலோகம் பாண்டியன் கண்களுக்கு மறைதல்**

தன் ஐம்புலங்களையும் அந்தக்கரணங்களையும் தன்னுடையனவாகவே செய்து அன்பே வடிவமாகக்கொண்டு நின்ற வரகுணபாண்டியன் எதிரே அருள்வடிவாகிய சிவலோகம், பின்பு முன்புபோல் மதுரையாக மாறியது. சோமசுந்தரக்கடவுள் உமாதேவியாரும் தாமும் முன்னிருந்தபடியே எழுந்தருளியிருந்தனர்.

**வரகுண பாண்டியன் இறைவனைத் துதித்தல்**

அரசர்களுக்கரசனாகிய வரகுண பாண்டியன், விண்ணினின்று இழிந்த விமானத்தில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளைப் பணிந்து திருமுன் நிற்க, அப்போது திருவருட்பெருக்கம் தன்னுட்புகுந்த அளவில் பேரின்பத்திலும் அன்பினும் மூழ்கிக் கண்களினின்றும் ஆனந்த நீர் ததும்ப நாக்குழறத் துதிக்கலானான்; "நாய்போன்ற அடியேனை வருத்தும் கொலைப்பாவத்தினின்றும் அகற்றித் தாய்போன்று தலையளி செய்து ஆட்கொண்டவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! நின் திருவருளுக்குச் சேய்மையிலுள்ள யானும் கண்டு களிக்கச் சிவலோகத்தினைக் காண்பித்தருளிப் பின்னர்த் திருக்கோயிலில் அடியேன் எதிரே நின்றருளிய அருட்குன்றே! நின் திருவடிகட்கு வணக்கம்! வினைவழியே சென்று நரகில் ஆழாது அடியேனுக்கு அன்பினை அளித்தவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! எழுவகைப்பட்டு நால்வகைத் தோற்றமாக வாரா நின்ற பிறவிகள் அனைத்தும் பாழ்பட அடியேனைப் பணிகொண்டவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! தீவினையேனைக் கொடிய பழியினின்றும் வேறுபடுத்தித் திங்கள் குலத்தவரின் களங்கத்தினைத் தொலைத்தவனே! நின் திருவடிகட்கு வணக்கம்! அன்புடையவர்களுக்குச் சிவலோகம் உண்டு என்று நூல் கூறுவதை இப்பொழுது அடியேனுக்குக் காட்டி அருளிய

வனே! நின் திருவடிகட்கு வணக்கம்!'' என்று பலவாறு வரகுண பாண்டியன் துதிசெய்து இனிய திருவருளை முகந் துண்டு, அன்பினால் சோமசுந்தரக் கடவுளுக்குப் பூசை முதலிய வற்றை விசேடமாகச் செய்வித்துச் செங்கோலோச்சி வாழ்ந்து வந்தான்.

**முனிவர்களின் ஐயம் தெளிவு படலம்**

இவ்வாறு கூறியருளிய அகத்திய முனிவரை மற்றைய முனிவர்கள் நோக்கி, ''முன்பு சோமசுந்தரக் கடவுள் இந்திர னுடைய பழியையும், வெள்ளையானையினுடைய சாபத்தையும், மாபாதகம் செய்த அந்தணனுடைய பழியினையும் மதுரை யிலேயே போக்கியருளினரன்றோ! அங்ஙனம் தீர்த்தருளிய பரமன் வரகுணனைப் பிடித்த பிரமகத்தியை மதுரையிலே நீக்காது திருவிடைமருதூரிலே நீக்கியருளியமை என்னை? இதனை எங்களுக்கு ஐயம் தீரும் வண்ணம் கூறியருளுவீராக'' என்று வேண்டினார்கள். அதுகேட்ட அகத்திய முனிவர் அவர் களை நோக்கி, ''முனிவர்களே! சோமசுந்தரக் கடவுள் புண் ணியமூர்த்தி ஆகையால் தமது மதுரைப்பதியில் வசிக்கும் அடி யார்கள் வேண்டியபடியே பாதகஞ்செய்து கெட்டுப்போகாது பயந்து நடக்கும்படி திருவுளங்கொண்டே வரகுணனுடைய பழியினைத் திருவிடைமருதூரில் தீர்த்தருளினர்'' என்றார். அப்பொழுது முனிவர்கள் 'நன்று' எனச் சிரமசைத்துச் சோம சுந்தரக் கடவுளின் திருவருளை நினைந்து வியந்து பேரானந்தக் கடலில் மூழ்கினார்கள்.

ஒப்பற்ற அம் மதுரை மாநகரம், அன்று முதல் இன்று வரையும் தனக்கொப்பில்லாததாய், எல்லாத் தலங்களுக்கும் ஒரு மணிமுடியாய்த் தேவ உலகத்தினும் வளம்மிக்கதாய்ப் பதி னான்கு உலகங்களினும் **பூலோக சிவலோகம்** என்று கூறப் புகழுடன் விளங்கியது.

செய்யுள்—68

ஆகச் செய்யுள்—2030

---

# 41. விறகு விற்ற படலம்

**ஏமநாதன் பாண்டியனால் சிறப்புப் பெறுதல்**

வேப்ப மாலையை அணிந்த வரகுண பாண்டியன் இந்திரனைப்போலச் சிறப்புடன் அரசுபுரிந்து வரும் நாளிலே, **ஏமநாதன்** என்னும் ஒரு யாழ்ப்பாணன் வட நாட்டினின்றும் வந்து வெற்றி விருதுகளோடும் மதுரை நகரை அடைந்தான். அவன், வரகுண பாண்டியனின் அரசவையை அடைந்து பாண்டியனை வணங்கிப் பலவாறு புகழ்ந்து பாராட்டித் தன் யாழினை எடுத்து இடப்பால் தழுவிச் சுருதி கூட்டி, இன்னிசையாகிய தேனை அரசனது அகஞ்செவி நிரம்பி வழியுமாறு பொழிந்தான். இசையினைக் கேட்டு மகிழ்ந்து தலையசைத்த பாண்டியன் ஏமநாதனுக்குப் பல ஆடைகளையும் அணிகலன்களையும் கொடுத்து, உணவுக்கு வேண்டிய பல பொருள்களையும் அளித்துத் தங்குவதற்கு ஒரு பெரிய வீடு காண்பித்துச் சிறப்புச் செய்ய, ஏமநாதன் பெரு மகிழ்ச்சியோடும் தனக்கு அமைத்த வீட்டிற்குச் சென்றான்.

**ஏமநாதன் செருக்கைப் பாண்டியன் அறிதல்**

பாண்டியன் செய்த வரிசைகளைப் பெற்ற செருக்கினாலும் முன் பல அரசர்களிடம் பெற்ற விருதினாலும் ஏமநாதன் பெருமை மிக்குத் தன்னோடு இசை பாடுதற்கு வல்ல யாழ்ப் புலவர் இங்கு வேறு ஒருவருமில்லை என்று கருதி இறுமாப்புக் கொண்டான். அதனைப் பாண்டியன் அறிந்து ஏவலாளரை விளித்து, "நமது பாணபத்திரனை அழைத்து வாருங்கள்" என்று ஏவினான். அவ்வொற்றரால் அழைத்துவரப்பெற்ற பாணபத்திரன் பாண்டியன் அடிகளை வணங்கி அருகு நின்றான். அப்போது பாண்டியன் பாணபத்திரனை நோக்கி, "நீ இசையில் வல்லவனாகிய ஏமநாதனோடும் பாட வல்லையோ?" என்று வினவினான். அதற்குப் பாணபத்திரன் வணங்கி நின்று, "தென்னவர் பெரும! அடியேன் உமது திருவுள்ளக் கருத்தின் வலிமையும், கூடற்பெருமானின் திருவருளும் கூட்டும் முயற்சியால் பாடி அந்த ஏமநாதன் விருதுகளை வாங்கி அவன் செருக்கினையும் ஒழிப்பேன்" என்று கூறினான். மன்னவன்,

"நாளைக்கு வந்து அவனோடு பாடுக; இன்று போகக் கடவை" என்று காலம் வரையறுத்துக் கூறினன். பாணபத்திரன் வரகுணனை வணங்கித் தன் வீட்டிற்குச் சென்றான்.

**பாணபத்திரன் கவலைகொண்டு இறைவனிடம் முறையிடல்**

பாணபத்திரன் தன் வீட்டின்கண்சென்று இருக்கும்போது ஏமநாதனிடம் இசை கற்கின்ற மாணவர்கள் கடைவீதி, இரண்டு தெருக்கள் கூடுமிடம், பலர் கூடும் இடம், மாடவீதிகள் ஆகிய எவ்விடத்தும் சென்று சென்று சொற்கள் மாத்திரை குன்று வகையால் இசை பாடிக்கொண்டு வீறு தோன்றத் திரிந் தனர். பாணபத்திரன் அவ்விசையினைக் கேட்டு 'நன்று' என்று வியந்து, "ஏமநாதனிடம் இசை கற்கும் மாணவர்கள் இசை பாடும் முறை இது, ஏமநாதன் பாடும் முறை எத்தன்மை யதோ! நான் நாளைக்கு இசை பாடி அவனை வெல்வது எப்படி!" என்று நினைத்துக்கொண்டு திருக்கோயிலை அடைந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "ஐயனே! உண்மை வடிவானவனே! அடியேனுக்கு இன்று நினது திருவருளாகிய துணையை அளித்தல் வேண்டும்" என்று போற்றி வேண்டிக்கொண்டு தன் இல்லத்தை அடைந்து கவலையின்றி இருந்தான்.

**சோமசுந்தரக் கடவுள் விறகாளாய் வருதல்**

பின்பு, உண்மை, அறிவு, ஆனந்த வடிவாகிய சோம சுந்தரக் கடவுள், தன்னை வருத்தத்துடன் வந்தடைந்து குறை யிரந்த பாணபத்திரனது பகைவனை ஓட்டத் திருவுளங்கொண்டு வயது முதிர்ந்து இளைத்த **விறகாளைப்போலத்** தமது இச்சை யானே திருமேனி கொள்வாராயினர்; அப்போது இடையினில் அழுக்கு நிறைந்த கந்தையை உடுத்தி, வலப்புறத்தில் அமுதத் தைச் சிந்தும் வெண்பிறையினையே வாங்கிச் செருகியதுபோல வளைந்த கொடுவாளைச் செருகி, வேத முடியைக் கடந்த திருவடிகளில் தேய்ந்த செருப்பினை மாட்டி, பழைய உறையில் இட்ட யாழைத் தோளில் தொங்கவிட்டுத் திருச்செவிகளில் களாவின் சிறிய காயினைத் தொங்கவிட்டுத் தழைந்து நீண்ட சிகை சரிந்திடச் சும்மாடு தாங்கி எழுந்தருளினர். அப்பெரு

மானார் நாடோறும் விறகினைச் சுமந்து நீண்ட உரோமம் கழியப்பட்டுத் தேய்ந்து பள்ளமாகிய தலையினை உடையவராய், முடியில் மடங்கிய கங்கையும், இடப்பாகத்தில் உறையும் உமாதேவியும் காணுமல் வெட்டிய விறகின் சுமையைத் தலைமேல் சுமந்து, என்பு தோன்றித் தசை சிறிதும் இன்றி இளைத்த உடலினைக் கொண்டவராய் வரலானார். அக் காட்சி யைக் கண்டவர்கள் அன்புமிக்கு உள்ளங் கனிந்து இரங்க, மனமொழி கடந்த திருவடிகளை நிலமகள், முன்னர்ச்செய்த தவப் பேற்றினால் முடிமிசை தாங்கத் திருமுகத்தில் வேர்வை அரும்பத் திருவாய் குவிந்து சோர்வுக்குரிய ஒலியினை உண்டாக்க வரலானார். கல்லாகிய சுமைதாங்கியின்மேல் சுமையினைத் தாங்க லாற்றாதவர்போல் சார்த்துவர்; மடுவிலுள்ள நீரைப் பருகு வர்; மீண்டும் சுமையினை எடுத்துத் திருமுடிமேல் வைப்பர்; தலையில் விறகினைத் தாங்குவதால் ஏற்படும் வெப்பத்தா லாகிய வேர்வை நீங்க இரு கைகளாலும் அடிக்கடி சுமையை மேலே எடுத்து ஏந்தி மதுரை நகருக்குள் புகுவாராயினர்.

**விறகாளாகிய இறைவன் ஏமநாதன் தலைவாசலை அடைதல்**

அப்போது விறகாளாய் வந்த இறைவர், விறகின் விலையை வந்து கேட்பவர்களுக்கு மிக்க விலை பகர்ந்து, பல மாட மாளிகைகள் நிறைந்த வீதிகளையும், இரண்டு தெருக்கள் கூடு மிடங்களையும், மூலை முடுக்குகளையும், பின்பற்றிய மறையினையும், திருமால் பிரமன் இவர்களின் சூழ்ச்சியையும், பகற் பொழுதை யும் கடந்து சென்று ஏமநாதன் கடைவாயிலின்கண் செல்வா ராயினர்.

**மாலைக் கால வருணனை**

அப்பொழுது காதலரின் வருகையை நோக்கி அழைப்பவர் போல ஆம்பல்கள் வாய் மலரத் திங்கள் புன்முறுவல் தோன்ற எழுந்தது. உயிர்த் துணைவரின் பிரிவினைக் கண்ட மகளிர் கண்ணீர் உகுத்து முகம் வாடுதல்போலத் தாமரை மலர்கள் குவிந்தன. கதிரவன் மேற்குக் கடலில் நீந்திச் சென்றான். ஆண் பறவைகள் வாய்திறந்து ஒலிக்காமல் தன்னருகு வந்து அணையும் குஞ்சுகளையும் பெட்டைகளையும் சிறகினால் அணைத்

துப் பெரிய பொழில்களிலுள்ள தங்கள் தங்கள் கூடுகளில் அடங்கின. வண்டுகள் தாமரையாகிய படுக்கையுள் புகுந்து உறங்கின. குரங்கின் கூட்டங்கள் சோலைகளை அடைந்து துயின்றன. முல்லை நிலத்து ஆயச் சிறுவர்கள் நடாத்திச் செல்லும் பசுவின் கூட்டங்கள் கன்றுகளை நினைந்து வீடுகள் தோறும் முற்பட்டுச் சென்றன. ஆரம்பக் கல்வி பயிலும் மாணவச் சிறுவர்கள் தமிழ் நெடுங்கணக்கை முறைவைத்து ஓதும் ஒலி அடங்கியது. நிலமகள், தான் இடையில் உடுத்திருந்த கடலாகிய கரிய ஆடையை உடல் முழுதும் போர்த்து உறங்குவதுபோலக் கரிய இருள் மெல்லென வந்து உலகினைக் கவிந்தது. பிரிவினால் வருந்திய காதலர்களின் நெஞ்சில் மன்மதன் மலர்க்கணைகளை நாட்டினான்.

உமாதேவியார், திங்களாகிய ஒளிபொருந்திய நெற்றியில் முயற்களங்கமாகிய பொட்டும், செவ்வானமாகிய ஆடையும், இருளாகிய கூந்தலும், விண்மீன்களாகிய ஆரமும் ஆகிய இவற்றால் பொலிவுற்றுத் தனது நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளைத் தேடிவந்தாள் என்னும்படி மாலைப்பொழுது வந்தது.

திங்கள் வாணுதல் முயற்கறைத் திலகமுஞ் சிவந்த
மங்குல் ஆடையும் மயங்கிருள் ஓதியும் வான்மீன்
பொங்கும் ஆரமும் பொலிந்துதன் கொண்கனைப் பொருப்பன்
மங்கை தேடிவந் தாள்என வந்தது மாலை.

**விறகாளாகிய இறைவனும் ஏமநாதனும்**

விறகாளாய் வந்த சோமசுந்தரக் கடவுள், தாம் சுமந்து வந்த விறகு கட்டை ஒரு புறத்தில் இறக்கி ஊன்றிவைத்து, ஏமநாதனது வீட்டின் வெளித் திண்ணையின்மேல் அமர்ந்து வந்த இளைப்பாறினார்; பிறகு இனிய இசையைச் சிறிது எழுப்பிப் பாடினார். இசையில் வல்ல ஏமநாதன் அவ்விசையினைக் கேட்டுப் பாடுகின்றவன் யாவன் என்று கருதி, விறகாளாய் வந்த இறைவன் திருமுன் வந்து நின்று, "நீ யாவன்?" என்று வினவினான். திருமால், பிரமன், இந்திரன் முதலிய தேவர்களைத் தனது குற்றேவல் செய்யும் அடிமைகளாகக்

கொண்ட இறைவன் ஏமநாதனைப் பார்த்து, "நான் யாழ் வல்லோனாகிய பாணபத்திரன் அடிமை; அப் பாணபத்திர னிடத்தே இசை பயிலும் மாணாக்கர்கள் பலர். இசை கற்றற்கு மிக விரும்பி நானும் அவர்களுள் ஒருவனாய் இசை கற்கும் தொழிலுடையனானேன். அப்பாணபத்திரன் என்னை நோக்கி, "நீ தசையெல்லாம் ஒடுங்க வயசிலே மிக முதிர்ந்து விட்டாய்! இனிமேல் நீ இசையினைக் கற்பதற்குத் தகுதியற்ற வனாகினை!" என்று சொல்லி என்னைத் தள்ளிவிட்டான்; ஆதலால், "ஐயனே! உலர்ந்த விறகினை வெட்டிக் கட்டி விற்று யினும் வயிறு வளர்க்கலாம் என்று கருதி இத் தொழில் பூண்டேன்" என்றார். அப்பொழுது ஏமநாதன் விறகாளை நோக்கி, "ஏ விறகு மள்ளா! நீ முன் பாடிய அந்த இசையை இன்னும் ஒரு தரம் பாடு" என்று கூறினான்.

**விறகாளாய் வந்த இறைவன் யாழினை வாசித்தல்**

விறகாளாய் வந்த ஐயன், மடுவின் நீர் வறந்தாற்போன்ற நீண்ட சுரைக்கொடியிலிருந்தெடுக்கப்பெற்ற உள்ளீடும் நீரும் வற்றிய குண்டான சிறிய சுரக்காயாகிய பத்தர் அமைந்த கோட்டினையும் மிக்க [1] நிறத்தினையுமுடைய நல்ல யாழினை இடத்தோளில் சாத்தி, நரம்பைத்தெறித்துத் தாக்கிப் பண்ணை எழுப்பிப் பார்த்து, முறுக்காணியைச் சுழற்றித் திவவில் (வார்க்கட்டில்) கவ்வும்படி நரம்பைப் பிணித்து, இருலிலிருந்து தேனொழுகினாற்போலப் பரவும்படி மென்மையாகச் சுருதியை எழுப்பிச் சுரங்கள் எழும் தானங்கள்தோறும் விசையுடன் விரல் சென்று போக்கு வரவு செய்ய, ஏழிசைகளுக்கும் முதலாயுள்ள [2] ஏழு சுரங்களில் பல்வேறு வகைப்பட்ட இனிய இசைகளில் ஒன்றாய் எழும் [3] **சாதாரிப் பண்ணினை** [4] அசையும்

1. நிறம் - இஃது ஐந்து வகைப்படும். அவை, ஒன்பது மாத்திரை, எட்டுத் தானம், பத்துக் கிரியை, பதின்மூன்றெழுத்து, ஐந்து தொழில் என்பன.

2 ஏழு சுரம் - அவை குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் (ச, ரி, க, ம, ப, த, நி) என்பன.

3. சாதாரிப் பண் - முல்லைப்பண்; இதனைத் 'தேவகாந்தாரம்' என்பர். 4. இது கொட்டு, அசை, தூக்கு, அளவு என்னும் தாளம் நான்கனுள் ஒன்று.

(ஒரு மாத்திரையளவுபடத் தாக்கி எழும் தாளமும்), வீதிப் போக்கும் (நகர முதலிய நாலெழுத்துக்கள் நேராய்ச் செல்லுதலும்), வண்ணமும் (பெருவண்ணம், இடை வண்ணம், வனப்பு வண்ணம் என்பனவும்), திறமும் (பாலையாழ்த்திறமும்) ஆகிய இவற்ருல் எவர்க்கும் விருப்பம் தரும் நரம்பின் ஒலியும் மிடற்றின் ஒலியும் தம்முள் வேறின்றி ஒலிக்கப் பாடினுன்.

பாடும்பொழுது, வயிறு குழிய வாங்குதல், அழுமுகங் காட்டுதல், வளைந்த புருவம் நெற்றியிலேறுதல், தலை நடுக்குறல், கண் ஆடுதல், மிடறு வீங்குதல், பையைப்போல் வாய் திறத்தல், பற்களைக் காட்டுதல் ஆகிய **உடலில் உண்டாகும் தொழிற் குற்றங்களும்**, நிறமற்ற வெள்ளோசை, இன்னுவோசை (பேய் கத்தினுற்போற் பாடும் ஓசை), கீழோசை (நிறமும் தாளமும் குறைந்த கட்டையிசை), வெடித்த குரல், மூக்கோசை (ஒரு தானத்தே பாட மற்ருெரு தானத்தே நழுவுமோசை) ஆகிய **மிடற்ருேசையின்** (சாரீர வோசையின்) **குற்றங்களும்**, ஒரு பண்ணைப் பாடும்போது வேருெரு பண்ணிலே விலகி நின்று ஒலித்தல், அளவு கடந்த ஓரோசை நீங்கிப் பல வோசையாய் வருதல், ஓசை புரிதல் (காகங் கத்தினுற் போலக் கத்துதல்), பெருமூச்செறிந்து துள்ளல் ஆகிய **பாடுந் தொழிற் குற்றங்களும்**, பிற குற்றங்களும் இன்றிப் பாடினுன்.

வயிறது குழிய வாங்கல் அழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவம் ஏறல் சிரநடுக் குறல்கண் ணுடல்
பயிரரு மிடறு வீங்கல் பையென வாயங் காத்தல்
எயிறது காட்டல் இன்ன **உடற்ருெழில் குற்றம்** என்ப.

வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுரல் நாசி இன்ன
எள்ளிய எழாலின் குற்றம் எறிந்துநின்(று) இரட்டல் எல்லை
தள்ளிய கழிபோக்(கு) ஓசை இழைத்தல்நெட் டுயிர்ப்புத் தள்ளித்
துள்ளல்என் றின்ன **பாடற் ருெழிற்குற்றம்** பிறவுந் தீர்த்தே.

குற்றங்களின்றிப் பாடுங் காலத்து எழுதிய ஓவியம்போல் அசைவற இருந்து. இடையருது வீழும் இழும் என்று ஒலிக்கும் அருவியின் ஓசை, முழவின் ஓசை, கஞ்சக் கருவிகளின் ஒலி, வலம்புரிச் சங்கு முழங்கும் ஓசை, வண்டுகளின் ரீங்கார ஒலி ஆகிய

**மிடற்றோசையின் குணங்களும்**, மூங்கிலினின்று விழும் இலையின் வீழ்ச்சி, மீன் குத்திப் பறவை மீனின்மேல் விழுகின்ற வீழ்ச்சி, ஆகிய இவை போன்ற **பாடலின் குணங்களும்** [1] தோன்றும்படி படுத்தல், நலிதல், எடுத்தல் முதலிய ஓசைகளில் துள்ளல், தூங்கல், மெலிதல் என்னும் இசைகள் சிறக்கச் செய்து அமுதம் போன்ற பாடலின் ஓசையும், இசையின் ஓசையும் வழுவாது யாவருக்கும் இசை விருந்து அளித்தான்.

விரைசார் மலரோன் அறியா விகிர்தன்
அரசாய் மதுரை அமர்ந்தான் என்னே!
அரசாய் மதுரை அமர்ந்தான் அவனென்
புரைசார் மனனும் புகுந்தான் என்னே!

பாடல் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டான் என்னே!
கூடல் போலக் கொடியேன் அகமும்
ஆடல் அரங்கா அமர்ந்தான் என்னே!

நீல வண்ணன் தேரு நிமலன்
ஆல வாயில் அமர்ந்தான் என்னே!
ஆல வாயான் அலரின் வாசம்
போலென் னுளமும் புகுந்தான் என்னே!

பாணர்களின் தலைவனாகிய பாணபத்திரனைக் காக்கும் பொருட்டுப் [2] **பருந்தும் அதன் நிழலும்போல** யாழின் இசை பின் தொடரப் பாடிய இனிய இசைத் தேன், தேவர்களின்

---

1. இங்கே, "வண்டின் தாரியுங் கஞ்ச நாதமும், சிரல்வான் நிலையுங் கழையிலை வீழ்வதும், அருவி யோசையும் முழுவின் முழக்கமும், வலம்புரிச் சத்தமும் வெருகின் புணர்ச்சியும் இன்னுமென் றிசைப்பப் பன்னிய விழியொடு" என வரும் கல்லாட அடிகளும் சிந்திக்கற்பாலன.

2. பருந்தும் அதன் நிழலும் போல - பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்தும் பின்னும் அம்முறையே தாழ்ந்தும் பறத்தலையும் அவ்வாறு பறக்குங்கால் அதன் நீழல் அதனோடு செல்லுதல்போல. இங்கு, மிடற்றோசைக்குப் பருந்தின் இயக்கமும், அம் மிடற்றோசையை யாழோசை தொடர்ந்து செல்லவேண்டுதலின் அதற்குப் பருந்தின் நிழல் இயக்கமும் உவமையாயின.

செவியாகிய கால்வாய் வழியாக ஓடி, உரோமத் துவாரத்தில் வழியும்படி நிரப்பி அமுதமாகிய அவர்கள் உடலை இசை மயமாகச் செய்தது. அவ்வின்னிசையைக் கேட்டபோது மரங்களும் அசையவில்லை; கடலும் ஒலிக்கவில்லை; மலைகளிலிருந்து விழும் அருவிகளும், ஆறுகளும் புரண்டு துள்ளவில்லை. அருட்கடலாகிய இறைவன் பாடியருளிய இன்னிசை அமுதத்தைப் பருகியன யாவும் தீட்டி வைத்த சித்திரமே போலாயின.

இறைவனின் தேவகானத்தினைக் கேட்ட [1]விஞ்சையர்களில் சிலர் வீணையினைக் கையினின்றும் நழுவிவீழச் சோர்வர்; வேறு சிலர் தம் விரலால் வருடி எழுப்பப்படும் யாழ் நரம்பின் இசையும் மிடற்றினது இசையும் வேருகுமாறு வியர்த்து நிற்பர்; வேறு சிலர் நாணம் ஒருபாலும், உவகை ஒருபாலும் தள்ள, நாக்கு நடுங்க, மதி மயங்கித் தத்தம் மனைவியர் மேல் வீழ்வர்; தாமரைமலரில் இருக்கும் பிரம தேவன் அவ் விறைவனின் திருவடித் தாமரையின்கீழ் உள்ளவனுனன்; திருப்பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் திருமால் பேரின்பக் கடலில் உள்ளவனுனன்; இந்திரன், "தனக்குக் கிடைத்த கண்களைப்போல உடல் முழுதும் செவிகள் பெற்றிலேனே" என்று வருந்தலானுன்.

போதுளான் பரமன் பாதப் போதுளா னுனன்; வேலை
மீதுளான் பரமா னந்த வேலைமீ(து) உள்ளா னுனன்;
தாதுளாங் கமலக் கண்போற் சதமகன் உடலம் எல்லாம்
காதுளான் அல்லேன் என்றுன்; கண்ணுளான் கானங் கேட்டு.

முனிவர்களும், அருந்தவம் புரிபவரும், சீவன்முத்தரும், பெரிய சித்தரும் பாணபத்திரனின் துன்பத்தையும் அதனுல் நேர்ந்த மெலிவையும் நீக்குவாராகிய சோம சுந்தரக் கடவுளின் இசையாகக் கனிந்த கருணைக் கடலில் அன்பாகிய ஆற்ருேடும் ஆனந்தக் கண்ணீர் வெள்ளம் பாய இன்பத்தில் ஆழ்ந்தனர். மண்ணவர்களில் ஊடல் காரணமாக வேருக ஒதுங்கித் துன்பக் கடலில் மூழ்கிய மகளிர் தாமாகவே தலைவர்களைக் கூடி வேற்றுமையில்லாத இன்பக் கடலிலே

---

1. விஞ்சையர் - விச்சாதரர்; இவர் மாலிகாஞ்சன முதலிய வித்தையில் வல்லவராவர்.

ஆழ்ந்தனர்; மகளிர், பொருள் முதலியவற்றை நாடி மறு புலத்துப் பிரிந்து சென்ற தம் கணவர்பால் மனத்தைச் செலுத்திக் காம நோயால் உடல் வாடி உள்ளஞ் சோர்ந்து வருந்தினர்.

படமெடுத்தாடும் பாம்புகளும், பல பொறிகளையுடைய மயில்களும், யானைகளும், சிங்கங்களும், மான்களும், புலிகளும், இன்னும் ஒன்றற்கொன்று பகைமையுடைய ஏனைய விலங்கு களும், பறவைகளும், இசையால் மயங்கித் தத்தம் பகை மையை அறியாதனவாய் ஆங்காங்கு ஒன்றோடொன்று கலந்து சேர்ந்து இசையாகிய வலையிற்பட்டன. வலிய நிலம் பிளக்குமாறு விழுது வீழ்த்திப் பெரிய கிளைகள் உலர்ந்துநின்ற ஊறு என்னும் ஓரறிவுடைய மரங்களெல்லாம் செவி யறிவு பெற்று, மெல்லிய தளிரினை ஈன்று, பூக்கள் மலர்ந்து கண்ணீர் (கள் + நீர்) பொழிய நன்று அறிந்த மக்களைப் போல் நகையொடு முகமலர்ந்தன.

இவ்வாறு தேவர்களும், மனிதர்களும், பறவைகளும், மற்றவைகளும் இசையில் பதிந்த மன முதலிய கரணங்கள் அனைத்தும் அசைவின்றி அடங்க, இறைவர் பாடிய ஏழிசை மயமேயாகி இருந்தன. அது மெய்யுணர்ந்தோரின் உள்ளம் இறைவன் திருவடியின்கண் சென்று ஒடுங்கிய தன்மையை ஒத்தது.

சோமசுந்தரக் கடவுளின் சாம வேதம் பாடும் திருமிடற்றி னின்றும் எழுந்த சாதாரிப் பண்ணுகிய தேவகானம், அசையும் பொருள்களையும், அசையாப் பொருள்களையும், நிலவுலகத்தையும், விண்ணுலகத்தையும், எட்டுத் திசைகளை யும் விழுங்கித் தன்மயமாகவே செய்து, இசையில் வல்ல ஏம நாதனுடைய உள்ளத்தையும், உயிரையும், உடலையும் உருக்கியது; அப்போது [1] மனத்துடன் பொருந்தும் ஐம்பொறி களும் செவிகளாகவும், ஐம்புலன்களும் ஓசையாகவும் பொருந்த

1. இங்கே, "ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள அளப்பரும் கரணங்கள் நான்கும், சிந்தையேயாக" எனவரும் பெரிய புராண அடிகள் சிந்திக்கற்பாலன.

ஏமநாதன் மயங்கி இருந்தான். அச்சமயத்தில் பாணபத்திரனின் அடிமையாக வந்து பாடியருளிய சோமசுந்தரக் கடவுள் விறகு சுமையோடும் மறைந்தருளினர்[1].

**ஏமநாதனின் வியப்பு**

விறகாளாய் வந்த இறைவனின் இசையினைக் கேட்டு மயங்கிய ஏமநாதன், "இது நான் அறிந்த **சாதாரிப்பண்** அன்று; இவ்வுலகத்துள் ஒருவராயினும் இதனை நான் அறிந்தது என்று கூறினரில்லை. இது **தேவகானம்** ஆகும். இதனை இவனுக்கு அறிவித்தவர் கடவுளேயன்றி மற்றைய மனிதர்கள் அறிவிக்க வல்லரோ! இஃது ஆச்சரியம்! பாணபத்திரனுல் தள்ளப்பட்ட இம் முதியோன் இசை இதுவாயின், அப் பாணபத்திரனுடைய இசை எத்தன்மையதோ!" என்று கருதிக் கவலையில் ஆழ்ந்தான்; உடனே அவ்விடத்தினின்றும் எழுந்து தன்னிடம் பயிலும் மாணவர்களும் தலை தடுமாறிச் செல்ல, இரவிலேயே ஓடத் தலைப்பட்டான். அவனுடைய பல்வகை வஸ்திரப் பெட்டிகளும், ஆபரணங்களும் பிற பொருள்களும் அடங்கிய பெட்டிகளும், யாழும், யாழ்க் கோலும் ஆங்காங்கே கிடந்தன. மானமும் அச்சமும் முன்னே இழுத்துச் செல்லச் சிவிகை ஒரு வழியும், பாடினிகள் ஒரு வழியும், குடை ஒரு வழியும், மாணவர்கள் ஒரு வழியும், பணியாளர் ஒரு வழியும், பாண்மக்கள் ஒரு வழியும் விரைந்து செல்ல ஏமநாதனும் வடதிசையை நோக்கி ஓடினன்.

**பாணபத்திரன் கனவில் இறைவன் தோன்றியருளுதல்**

சோமசுந்தரக் கடவுள் அன்றிரவே பாணபத்திரன் கனவில் தோன்றி, "பாணபத்திரனே! உன் வேண்டுகோளின் படியே நாம் இன்று ஏமநாதனிடத்தே விறகாளாய்ச் சென்று, **'யாம் பாணபத்திரன் அடிமை'** என்று கூறி, இசை பாடி

---

1. இங்கே, "முரன்றெழு கானம் முயன்றுவா(து) இயைந்த, வடபுல விஞ்சையன் வைகிடத்(து) அகன்கடைத், தென்றிசைப் பாணன் அடிமை யான்எனப், போகா விறகுடன் தலைக்கடை பொருந்தி,...... சாதாரி, உலகுயிர் உள்ளமும் ஒன்றுபட் டொடுங்க, இசைவிதி பாடி இசைப்பகை துரந்த, கூடற்(கு) இறையோன்" என வரும் கல்லாட அடிகள் நினைக்கற்பாலன.

வென்று நின்னைக் காத்தனம்" என்று அருளிச் செய்தார். சிவபெருமான் கூறியருளிய — மனத்தினாலும் நினைத்தற்கரிய அம் மொழிகளைக் கேட்டளவில் பாணபத்திரன் உள்ளம் நடுங்கி, "இக் காரியம் செய்தற்கோ அடியேன் மறைகட்கு எட்டாத இறைவரை இன்று குறையிரந்து வேண்டினேன்" என்று கண்விழித்து எழுந்தான்.

**பாணபத்திரன் மதுரை நாயகனை அடைந்து வணங்குதல்**

பிறகு, பாணபத்திரன் அளவற்ற மகிழ்ச்சியும் அன்புங் கொண்டு சூரியன் உதிக்குமுன் சென்று சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை வணங்கி அஞ்சலி செய்துநின்று, "எம்பெருமானே! கொடிய கானகத்தின்கண் செல்லவோ! விறகு சுமையைத் திருமுடியில் ஏற்றுதற்கோ! தாமரை மலர் போன்ற திருவடிகள் நோவுமாறு நடந்துவந்து, அடியேன் பொருட்டுப் 'பாணபத்திரன் அடிமை' என்று தகாத சொல்லைக் கூறுதற்கோ! கொடியேனாகிய அடியேன் குறை யிரந்து வேண்டினேன்; ஐயையோ! அடியேனிடத்துப் பெரும் பிழை விளைந்துவிட்டதே! இதற்கு என்செய்வேன்! திருமால் முதலிய தேவர்களின் உள்ளங்களையும், எண்ணிறந்த வேதங்களின் முடிகளையும் கடந்து நின்றருளிய உமது அருமைத் திருவடிகள் எளியேன் பொருட்டு இந்நில வுலகத் தின்கண் தோய்ந்தனவே! ஐயனே! நின் பெருமை அடியேன் திறத்தும் எளிதாயிற்றோ? நாதாந்தத்தைக் கடந்த சச்சிதா னந்த வடிவமே தேவரீருடைய திருவுருவம் என்று பெரியோர் கூறுவர். அத் திருவுருவம் இன்று இவ்வுலகத்தின்கண் ஒரு மனித வடிவாய் வெய்யிலிலே விறகினைச் சுமந்து, பேதையே னுடைய அன்பின் அளவாகியதோ? தேவரீருடைய திருமுடி திருமாலாலும், நான்முகனாலும் அறிந்ததன்று; அரிய பொருள் களின் முடிவாயது; வானினையும் அண்டங்களையும் கடந்தது; அஃது இன்று சிறியேனின் பொருட்டு விறகினைச் சுமந்ததோ?" என்று துதித்து வணங்கி வலம் செய்து வெளியே வந்தான்.

**பாணபத்திரன் வரகுண பாண்டியனை அடைதல்**

பிறகு பாணபத்திரன், மன்னர் மன்னனாகிய வரகுண பாண்டியனை அடைந்து அவன் அடி பணிந்து நின்றான்.

வரகுண பாண்டியன் பாணபத்திரனின் வருகையைக் கண்ட வுடனே, "வடபுலத்தினின்றும் வந்த ஏழிசை வல்ல ஏமநாதனை அழைத்து வாருங்கள்" என்று ஏவலாளர்களை விடுப்ப, அவர்கள் ஏமநாதனின் இருப்பிடத்திற்குச் சென்று அங்கு அவனைக் காணாது வருந்தித் தேடினார்கள். அதுகண்டு அயல் வீட்டிலிருந்தார் சிலர், அவர்களை நோக்கி, "ஏமநாதன் நேற்று வரையில் இங்கு இருந்தான்; ஒரு கிழவன் விறகு சுமந்துகொண்டு இவ்வேமநாதனிடத்து வந்து, தான் 'ஏழிசை யில் வல்ல பாணபத்திரனுடைய அடிமை' என்று கூறி இசை பாடினான்; பின்னர் நிகழ்ந்த செய்தியை அறியோம்; அவ் வேமநாதன் நள்ளிரவில் ஓடிவிட்டான்" என்றார்கள். அது கேட்ட ஏவலர்கள் விரைந்து அரசனின் அவையைச் சார்ந்து அவ்வயலோர் சொல்லியபடியே விண்ணப்பஞ் செய்தார்கள்.

வரகுண பாண்டியன், உழையோர் கூறியவற்றைக்கேட்டு அதிசயித்து ஐயமுற்றுத் தன்னெதிர் நின்ற பாணபத்திரனை நோக்கி, "ஏமநாதன் ஓடிய வகை என்னை! நீ நேற்று இங்கு நின்றும் சென்ற பிறகு யாது செய்தாய்?" என்று வினவினான். அப்போது பாணபத்திரன் பாண்டியனை வணங்கி, "அரசே! அடியேன் நேற்று இங்குநின்றும் போனபின் சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துன்பமிக்க என் குறைபாடுகளை இரந்து கூறி மீண்டு வீட்டிற்குச் சென்று விட்டேன். சோமசுந்தரக் கடவுள் நேற்று என் கனவின்கண் தோன்றியருளி, 'நாம் உன்பொருட்டு ஓடி விறகு சுமந்து நகரெங்கும் திரிந்து வாடி உன் பகைவனாகிய ஏமநாதன் தலைவாயிலில் சென்று **சாதாரிப் பண்ணைப்** பாடி வென்று அவனைத் துரத்திவிட்டோம்' என்று திருவாய்மலர்ந்தருளினார். யானும் கண் விழித்துவிட்டேன்; இதுவே நிகழ்ந்த சமாசாரம்" என்றான்.

**வரகுணன் பாணபத்திரனையானைமீதேற்றி நகர்வலம்செய்தல்**

அப்பொழுது வரகுண பாண்டியன், ஏவலாளர்கள் போய் அறிந்துவந்து கூறியதும் பாணபத்திரனுடைய கனா நிகழ்ச்சி யும் ஒத்திருந்ததால், "இது சோமசுந்தரக் கடவுளின் திரு விளையாட்டே" என்று தெரிந்து, இயமனை உதைத்தருளிய

திருவடிகட்கு இடையறாத நேயம் பூண்ட பாணபத்திரனது அன்பையும், நஞ்சினை அமுதாக உண்டருளிய சிவபெருமா னுடைய திருவருளையும் பாராட்டிப் புகழ்ந்து, திருக்கோயிலை யடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கிக்கொண்டு, பாண பத்திரனை யானையின் மேல் ஏற்றி நகர்வலம் செய்வித்தான்.

**வரகுணன் பாணபத்திரனை வேண்டிக்கொள்ளுதல்**

அதன்பிறகு வரகுண பாண்டியன், பாணபத்திரன் மனம் மிக மகிழும் வண்ணம் வரிசைகள் பலவற்றை நிறையக் கொடுத்து அவனை நோக்கி, "தேவர்களும் முனிவர்களும் திருமால் முதலிய அனைவரும் தமக்குக் குற்றேவல் புரிய வீற்றிருந்தருளும் சிவபெருமான், தம்முடைய அருமைத் திருத்தாள் நோவ வந்து உமக்கு ஏவல்செய்து, உமது குறை யினை முடித்தருளினாராயின், உமக்கு எல்லோரும் ஏவலாளர்கள் அன்றோ! ஆதலால், நீர் என்னுடைய தலைவர்; நான் உம் முடைய அடிமை. இம்முறையே அன்றி, [1]உம்மோடு எனக்கு வேறு வழக்கில்லை: இன்னும் நான் உம்மிடத்தே குறையிரப்ப தொன்றுண்டு, அஃது இன்று முதல் சோமசுந்தரக் கடவுளைப் பாடுதலே உமக்குக் கடமை" என்று வேண்டி விடைகொடுத்து அனுப்பினான்.

**பாணபத்திரன் மகிழ்ச்சியுடன் வாழ்தல்**

பிறகு பாணபத்திரன், தனக்கு வரகுண பாண்டியன் அளித்த செல்வத்தையும், அணிகலன்களையும், ஆடைகளையும், மற்றைப் பொருள்களையும் நாவலர்க்கும் மாணவர்கட்கும் ஏனையோர்க்கும் பங்கிட்டுக் கொடுத்துப் பாண் சுற்றத்தோடும் அரசன் அளித்த வரிசையோடும் மனையின்கண் வந்தடைந்து அளவிறந்த மகிழ்ச்சியுற்று இனிது இருந்தான்.

செய்யுள்—70

ஆகச் செய்யுள்—2100

---

1. உம்மொடு எனக்கு வேறு வழக்கில்லை என்றது, நீர் முன்போல் அரசவைக்கண் வந்து பாடுதல் மரபு அன்று என்பதனைக் குறிப்பதாகும்.

## 42. திருமுகங் கொடுத்த படலம்

### இறைவன் பத்திரனுக்குப் பாண்டியனின் பொருளை ஈதல்

பாணபத்திரன், ''இனி எமக்கு அறிவாவது இதுவே'' என்று கருதி, அன்று முதல் வரகுண பாண்டியனுடைய சபையில் இசை பாடுகின்ற உரிமையை விடுத்துச் சோம சுந்தரக் கடவுளின் திருக்கோயிலிலே மூன்று காலங்களிலும் சென்று கனிந்த அன்போடு இசை பாடும் நியமம் பூண்டான். இங்ஙனம் இறைவன் திருமுன் பாடுதலேயன்றிப் பிற தொழில் இவனுக்கு இல்லாமையால் வறுமையினை அடைந்தான். அதனைக் கூடல் சித்தர் பொறுப்பரோ? பொருர்; ஆதலின் அவர் பாண்டியனது கருவூலத்திலுள்ள செல்வங்களைக் கவர்ந்து கவர்ந்து பாணபத்திரன் முன் ஒவ்வொரு நாளும் வைப்பா ராயினர். சில நாள் பொற் காசும், சில நாள் மணிகள் பதிக்கப்பெற்ற அணிகலன்களும், சில நாள் பொன்னுடை வகைகளும், சில நாள் சாமரையின் பொற் காம்புகளும், சில நாள் சிங்காதனத்தின் பொற்றகடுகளும், சில நாள் பல சாதி மணிக் குவியல்களும் இறைவன் அளிக்கப் பாணபத்திரன் பெற்றுக்கொண்டு போவானாயினன்.

### பாணபத்திரன் உறவினராதியோர்க்குப் பொருள் வழங்கல்

அங்ஙனம் கைக்குக் கிடைத்த பொருளைத் தனக்கு அளித்த கள்வரும் தானுமே அல்லாமல் வேறு எவ்வகையினர்க்கும் அறியாமல், பாணபத்திரன் நெருப்பிலிட்டு உருக்கவேண்டிய வற்றை உருக்கியும், உரு மாற்றவேண்டியவற்றை உரு மாற்றியும் அவற்றைக்கொண்டு தன்னைச் சார்ந்தவர்க்கும், இல்லை என்று யாசித்தவர்க்கும், தன் கை வரவு பார்த்து வாழ்வோர்க்கும், பிறர்க்கும் இடையறாது அளித்து அவர்களின் உள்ளக் கவலையைத் தவிர்த்து வருவானாயினன்.

### இறைவன் பாணபத்திரன் கனவில் தோன்றிக் கூறல்

இவ்வாறு நாடோறும் கொடுத்துக்கொண்டிருந்த சிவ பெருமான், சில காலஞ் சென்றபின் ஒன்றுங் கொடாதொழிந் தார். பாணபத்திரன் நாடோறும் சென்று சென்று

கைதொழுது வணங்கி ஒன்றும் பெறாதவனாகத் திரும்பி வந்து கொண்டிருந்தான்; வேறு பிழைக்கும் வகை அறியாமல் வறுமைக் கடலில் அழுந்திப் பசியினால் தன் சுற்றத்தாரும் ஒரு சேரவாடித் துன்பமுறப் பொறுக்கலாற்றாது துயின்றான். அப்போது அவன் கனவின்கண் சோமசுந்தரக்கடவுள்தோன்றி, "அப்பனே! நாம் பாண்டியனது பொன்னறையில், யானை உண்ட விளாங்கனிபோல் அது ஆகுமாறு பொருளைக் கவர்ந்து இன்று வரையில் உனக்குக் கொடுத்தருளினோம்; எம்மிடத்து அன்பு வைத்த வரகுண பாண்டியன் இதனை அறிந்தால் சந்தேகங்கொண்டு வேறுநினைத்துவிடுவான்;'வேறுஆடவரிடம் ஆசையின்றிக் கற்பினைக் காக்கும் மகளிர்க்கு நாணம் முதலியன அகத்தே நீங்காது நின்று காத்தல் போலவும், துறவறத்தைக் காக்க முயல்வார்க்குப் புறத்திலுள்ள ஐம்பொறி விடயங்கள் புகுதாது தடுத்து நிற்றல் போலவும் அகக்காவலும், முரசொலியுடன் காக்கும் புறக்காவலும், கயற்குறியும் இருக்கப் பொருளைக் கவர்ந்தது அற்புதம்! இவ்வாறு கவர்ந்த கள்வன் உயிர்கள்தோறும் ஒளித்துநின்ற ஒருவனாயிருப் பானோ! அறியேனே!' என்பான்; களவுபோனதை அறிவானேல் பொன்னறைக் காவலர்களுக்கு மிக்க தண்டனையும் கிடைக்கும். ஆதலால் உன்னைப் போலவே நம்மிடம் அன்புகொண்டுள்ள சேரமானுக்கு இப்பொழுது நாம் ஒரு ஓலை எழுதித் தருவோம்; நீ அங்குப் போகக் கடவை" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

**இறைவன் பாணபத்திரனுக்குத் திருமுகம் கொடுத்தருளல்**

உடனே சோமசுந்தரக் கடவுள் வேதத்துக்குப் பொருளருளிச் செய்த திருவாக்கினால்,

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பால்நிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் **ஆல வாயில்**
**மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்**
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
உரிமையின் உரிமையின் உதவி ஒளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் **சேரலன் காண்க!**

பண்பால் யாழ்பயி பாண பத்திரன்
தன்போல் என்ப அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

என்னும் சொற்பொருட் சிறப்புடைய [1] **திருமுகப் பாசுரம்** ஒன்றினை எழுதிக்கொடுத்து [2] மறைந்தருளினர். அப்போது பாணபத்திரன் துயில் நீங்கி எழுந்து, ஆடிப்பாடி உவகைக் கடலிலே மூழ்கினன்.

**பாணபத்திரன் மலைநாடு அடைதல்**

பாணபத்திரன், தான் பெற்ற திருமுகத்தைப் பட்டாடையில் வைத்துச் சுற்றி இறைவன் திருவடியை வணங்கி அங்கு நின்றும் நீங்கித் திருக்கோயிலை அடைந்து வலஞ்செய்து கொண்டு விரைந்து மேற்றிசையை நோக்கி மலை நாட்டிற்குப் புறப்பட்டான்; வழியில் முல்லை நிலத்தையும், குறிஞ்சி நிலத்தையும், வெய்ய பருக்கைக் கற்கள் நிறைந்த வழியினையுடைய பாலை நிலத்தையும் கடந்து பலாக்கனிகள் கால்களில் இடற மெல்ல மெல்ல நல் வளம் மிகுந்த மலை நாட்டினை அடைந்தான்.

**திருவஞ்சைக்களம்**

அலை கடலினை ஆடையாகக் கொண்ட மலை நாடென்னும் பெண்ணுக்கு வானளாவி நிற்கும் மலைகள் கொங்கைகள்போல விளங்கின; **திருவஞ்சைக் களம்** என்னும் பதி அப்பெண்ணின் முகத்தில் தீட்டப்பெற்ற திலகமே போன்று விளங்கியது. அப்பதி அறமகள் ஆக்கத்திற்கும், திருமகள் ஆக்கத்திற்கும், கொற்றவை (வீர மகள்) ஆக்கத்திற்கும், வடமொழி தென் மொழி என்னும் கலைமகள் ஆக்கத்திற்கும் சிறந்த உறைவிட

---

1. இது 11-ஆம் திருமுறையின் முதற் பாடல் ஆகும்.

2. இங்கே, "பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்" (திருஞானசம்பந்தர் தேவாரம்-கோளிலி) எனவும், "குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென, மதிமலி புரிசைத் திருமுகங் கூறி, அன்புருத் தரித்த இன்பிசைப் பாணன், பெறநிதி கொடுக்கென உறவிடுத் தருளிய, மாதவர் வழுத்துங் கூடற்(கு) இறைவன்" (கல்லாடம்) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

மாகத் திகழ்வது. இத்தகைய புகழ் வாய்ந்த திருவஞ்சைக் களத்து நகரின் வீதியின்கண் உள்ள ஒரு தண்ணீர்ப் பந்தலில் பாணபத்திரன் தங்கினன்.

**சேரமான்பெருமாள் நாயனாரின் கனவு**

பிறகு சோமசுந்தரக் கடவுள் அன்று இரவில் சேரமான் பெருமாள் நாயனாரின் கனவில் தோன்றி, "மன்னவ! நின்னிடத்து வந்துள்ள யாம் பாண்டியனது மதுரையிலே இருக்கும் சித்தராவேம்; நம் அடியவன் பாணபத்திரன்; அவன் உன்னைக் கண்டு நல்ல பொருள் பெறும் பொருட்டு நம்முடைய திருமுகம் பெற்றுக்கொண்டு இங்கே வந்திருக்கின்றான். அவனுக்கு அரிய பொருளைக் கொடுத்து விரைந்து அனுப்புக" என்று கூறி மறைந்தருளினார். உடனே சேரமான் பெருமாணயனார் விழித்தெழுந்து தாம் கண்ட கனவை அமைச்சரோடு கூறி, 'அங்கயற் கண்ணிபங்கரது திருமுகத்தைக் கொண்டு வந்த பாணபத்திரனைத் தேடிக் கண்டு வருக' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட்டார். சேரமானின் ஏவலாளர்கள் மாட வீதிகளிலும், திண்ணைகளிலும், கடைவீதிகளிலும், மன்றங்களிலும் சென்று சென்று தேடினார்கள்; இறுதியிலே பாணபத்திரன் தண்ணீர்ப் பந்தலில் தங்கி இருக்கக் கண்டு அச் செய்தியை விரைந்து சென்று அரசனுக்குத் தெரிவித்தனர்.

**சேரமான் பாணபத்திரனை எதிர்கொண்டழைத்தல்**

உடனே சேரமான் பெருமாளும் தம் நால்வகைச்சேனையோடும் எழுந்து சென்று பாணபத்திரனைக் கண்டு அன்பின் பெருக்கால் சிரசின்மீது கைகூப்பிப் பாடினார்; ஆனந்தக்கூத்தாடினார்; தண்டுபோல் கீழே வீழ்ந்து வணங்கினார்; குளிர்ந்த தேனைக் கண்டு வண்டு மகிழ்வதுபோல மகிழ்ந்தார்; திருமுகத்தை வாங்கிக் கண்களில் ஒற்றித் தலையின்மேல் மாலைபோல் தாங்கினார்; மகிழ்ச்சி மிக்குக் கண்ணீர் பொழிந்தார்; உடம்பு பூரிக்க, உரோமஞ் சிலிர்க்க, அத் திருமுகத்தை எடுத்து, "ஒளி விளங்கும் பொன்னாலாகிய மாடங்கள் நிறைந்த மதுரைப் பதியில் எழுந்தருளிய சிவனாகிய யாம் எழுதி அனுப்புஞ் செய்தி, நல்ல மேகத்தினைப் போலப் புலவர்

களுக்கு வரையாது அளிக்கும் சேரமான் காண்க; இத் திருமுகங் கொண்டுவரும் பாணபத்திரன் நின்னைப்போல் எம்மிடத்து அன்புடையான்; அவன் நின்னிடத்து வருகின்றான்; அவனுக்குப் பெருநிதி கொடுத்து அனுப்புவது'' என்று சோம சுந்தரக் கடவுள் வரைந்தருளிய செய்தியை நோக்கி எல்லை யற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்தார்; அத் திருமுகத்தைப் பொற் பீடத்தின்மேல் வைத்து, யானையின் மேலேற்றிப் பாணபத் திரனை முன்னிருத்தித் தாம் பின்னிருந்து இரட்டைக் கவரி வீசிக்கொண்டு பலவகை வாத்தியங்கள் முழங்க நகர் வலஞ் செய்வித்து, மகளிர் அட்ட மங்கலங்களை ஏந்திக்கொண்டு எதிரே வரச் சென்று தமது அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு போயினர்.

**சேரமான் பாணபத்திரனுக்கு விருந்தளித்தல்**

பிறகு சேரமான் பெருமாள் பாணபத்திரனை நன்னீரால் ஸ்நானம் செய்வித்து, மணிமண்டபத்தில் இடப்பெற்ற பொன்னாசனத்தின்மேல் எழுந்தருளச் செய்து அருச்சித்து அறுசுவை அமைந்த இனிய அமுதினை உண்பித்து நறுமணங் கமழும் கலவைச் சந்தனமும், மலர் முதலிய முகவாசமும், பொற்றட்டில் வெற்றிலையும் இனிய பாக்கும் பிறவும் முறைப் படி அளித்து உபசரித்தார்.

**பாணபத்திரன் சேரமானிடம் பொருள்பெற்றுப் புறப்படல்**

சோமசுந்தரக் கடவுள் அருளிய திருமுகத்தின்கண் "வரவிடுப்பது" என்ற கட்டளை இருத்தலால் அங்ஙனமே அனுப்பிவைக்கச் சேரர்பெருமான் கருதித் தம் கருவூலத்தைத் திறந்து பாணபத்திரனை அழைத்துக் காட்டி, "எம்பெரு மானுடைய திருத்தொண்டரே! இத் திரவியமெல்லாவற்றை யும் நீரே கைக்கொண்டு போம்" என்று கூற, பாணபத்திரன் சேரமானை எதிர் வணங்கி, "சிவபெருமான் திருவருளுக் குரியீராகிய நீர் தருவது தமியேனுக்குப் போதும்" என்றான். சேரமான் பெருமாள், 'எல்லாப் பொருளும் அவருடையன' என்று தாம் எண்ணிய வண்ணம் வாரி வாரி வழங்கவும், பாண பத்திரன் அவற்றை மறுத்து மறுத்துத் தனக்கு வேண்டிய

அளவு பொன்னுபரணம், திரவியம், பொன்னுடை, பொற் சிவிகை, யானை, குதிரை முதலிய பலவற்றையும் பெற்றுக் கொண்டு புறப்பட்டான். பிறகு சேரர் பெருமான் பாண பத்திரன் பின்னே ஏழு அடி தூரம்[1] தொடர்ந்து சென்று திரும்பாது, நெடுந்தூரம் பாணபத்திரனோடு சென்று வழி யனுப்பிவைத்து மீண்டார்.

**பாணபத்திரன் மதுரையை அடைந்து வாழ்தல்**

பாணபத்திரன் சேரர் பெருமானிடம் விடைபெற்றுக் கொண்டு குபேரனைப்போல் மதுரை மாநகரை அடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கினான்; பிறகு தான் கொணர்ந்த பொருள்கள் அனைத்தையும் மதுரைத் திருநகரில் உள்ளவர் யாவரும் அறிய அந்தணர், புலவர்கள், இரவலர் முதலிய யாவர்க்கும் வேண்டுவன வழங்கி, மகிழ்ச்சியோடு வாழ்ந்து வந்தனன்.

செய்யுள்—30

ஆகச் செய்யுள்—2130

---

1. வேறு சில நூல்கள், பெரியோர்கள் தம் இல்லத்திற்கு எழுந்தருளிப் போம்பொழுது பின்னே பதினான்கு அடி தூரம் தொடர்ந்து சென்று வழிவிட வேண்டும் என்றும் கூறுகின்றன இதனை, "போம்பொழுது பின்னே பதினான்(கு) அடி போக; நாம்பெற்றோம் என்றெண்ணி நன்று" என வரும் சைவ சமயநெறித் திருக்குறளாலும் அறியலாம்.

## 43. பலகை யிட்ட படலம்

**பாணபத்திரனின் இசைத் தொண்டு**

முன்னே முப்பொழுதும் போய்ச் சோமசுந்தரக் கடவுளை வணங்கி இசை பாடி வந்த பாணபத்திரன், சேரமானிடம் பொருள் பெற்ற பின்பு, அன்பு மிகுந்து அர்த்த யாமத்திலும் சென்று வணங்கி, இடபதேவருக்குப் பின்புறத்தில் நின்று கொண்டு ஏழிசை பாடி வரும் நியமம் பூண்டான். ஒரு நாள் இரவிலே, வெள்ளியம்பலத்தில்ஆடியருளும் ஒப்பற்றபெருமான் முத்துச் சிவிகையின்மேல் திருப்பள்ளியறைக்கு எழுந்தருளும் போது, பாணபத்திரன் எவ்வகை இடையூறு அடுத்தாலும் தன் நியம நெறியினின்றும் தவருன் என்பதை உலகினர் அனைவரும் அறியும் பொருட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாட்டினுல் எட்டுத் திக்குகளிலும் கரிய முகில்கள் பேரொலி கொண்டு ஆரவாரித்து எழுந்தன.

அப்போது பாம்புகள் துடிதுடித்துச் சோர்ந்து சுருண்டு புற்றில் நுழைந்து பதுங்கின. அணியணியாக மின்னல் எழுந்து வீசின; திசை மயங்கும்படி விண்மீன்கள் மறைய இருள் கவிந்தது; வருணன் முன்னெரு நாளில் மதுரையை அழித்தற் பொருட்டு ஏவியஏழுமுகில்களும் வந்துவளைந்தாற்போலமேகங்கள் வந்து வளைந்து, செறிந்த இருளினுல் இருப்புக் கோல்களை நிரைபட நட்டுவைத்தாற்போல நிறம் கருகித் தோன்ற, அவற்றைக் கடல்நீர் முழுதையும் வானம் எடுத்துக் கவிழ்ப்பது போலப் பெருமழை வெள்ளிய தாரைகளாகப் பொழிந்தது.

[1] **ஆன்மாவாகிய தம்மையும் தலைவனுகிய சிவத்தையும் அறிந்து கொள்ளாதவர் மனம்போல** உள்ளென்றும் வெளியென்றும் பக்கமென்றும் கீழென்றும் மேலென்றும் அறியலாகாது மயங்கிய இருளின்கண்ணே பெய்யும் அப்பெருமழையில் நனைந்து வருவானுகிய பாணபத்திரன், அந்த மழையினை மலர் மழையாகக் கருதித் திருக்கோயிலை அடைந்தான்; சோமசுந்தரக்

---

1. "தன்னை அறியார் தலைவனையும் அறியார்" என்பது ஆன்ருேர் வாக்கு.

கடவுளை வணங்கி அவருடைய திருவருட்கருணையாகிய மழையில் நனைந்து, தேன் மழை பொழிவதுபோல யாழினை வாசிக்க இடப தேவரின் பின்னே நின்று, யாழினை இடத்தோளில் அணைத்து, நரம்பை அமுக்கித் தெறித்துப் பார்த்தான்; பிறகு தன் மிடற்றொலியை எழுப்பித் தமிழினால் தொடுக்கப்பட்ட இசைப் பாட்டாகிய அமிழ்தம் மடைதிறந்து கொன்றை மாலையை அணிந்த சோமசுந்தரக் கடவுளின் திருச்செவியாகிய கால் வழியாகச் சென்று பாய்ந்து திருவருளாகிய பசிய பயிர் ஓங்கும்படி யாழின் நரம்பு நனைந்து இசை மழுங்கவும், உடம்பு நனைந்து நடுங்கவும், குரல் முதலிய இசையின் எல்லை கடவாது போக்குவரவு செய்யும் விரல்கள் விறைத்து வலிக்கவும், மயிர் குளிரால் சிலிர்க்கவும், கால்கள் சேற்றில் புதைந்து சிறிதும் பெயராது நின்றுகொண்டு அன்பே இசை மயமாய் அரும்புதல் போல எலும்பினை உருக்கும் அமுத இசையினைப் பொழிந்தான்;

மாதர் நகையாய்! மதுரேசர்
உண்பலிக்(கு)எம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென்
சிந்தை கவர்ந்தார் போலும்;
காதன் முகத்தரும்பக் கையறவு
தீரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித்(து)
ஆவி பிழைத்தேன் போலும்,

ஒண்ணுதலாய்! வெண்டலைகொண்(டு) உண்பலிக்கு
நம்மனையி னூடே கூடற்
கண்ணுதலார் உள்ளாளக் கானமிசைத்(து)
என்னுள்ளங் கவர்ந்தார் போலும்;
கண்ணுதலார் பாடும் [1] அவிநயங்கண்(டு)
ஆகங் கலப்பேன் பாதி
பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கிவிழித்(து)
ஆவி பெற்றேன் போலும்.

---

1. அவிநயம் — இங்குக் காம அவிநயம்.

ஐயரியுண் கண்ணாய்! திருவால
வாயுடையார் ஐயங் கொள்வான்
மையனகை செய்தென் வனமுலையின்
மேற்செங்கை வைத்தார் போலும்;
மையனகை செய்தென் வனமுலைமேற்
கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
தையலிடங் கண்டு நடுநடுங்கி
விழித்(து)ஆவி தரித்தேன் போலும்.

**இறைவன் பாணபத்திரனுக்குப் பொற்பலகை இடுதல்**

இசை பாடும் **ஆகா, ஊகூ** என்னும் இருவர்க்கு அந்நாளில் பரிசிலாகச் சங்கக்குழையினை அணிந்த திருச்செவிகளை இடமாக அளித்த கூடற் பெருமான் பாணபத்திரனுடைய இசைத் தொண்டினைக் கண்டருளி, "பாணபத்திரா! இந்தப் பலகை உனக்கே உரியது; நீ இதன்மேல் நின்று பாடுக" என்று வானிலே அசரீரியாகக் கூறியருளி, நவமணி இழைத்த பொற் பலகை ஒன்று இட்டருளினார். அப்போது பாணபத்திரன் இறைவன் அருளிய ஆணையை மறுத்தற்கு அஞ்சி அப்பொற் பலகையின் மேல் ஏறி நின்று தேனினும் இனிய இசையினைப் பொழிந்தான்.

**பாணபத்திரன் தன் வீடு அடைதல்**

பிறகு நான்மறைகளும் முடியிற் சூடும் வீரக் கழலணிந்த திருவடியினை உள்ளத்திற்கொண்டு, பலகையினைக் கையில் ஏந்தித் தன் வீட்டிற்குச் சென்றான். செல்லுங்கால் மழை நின்றுவிட்டது. அப்போது வானத்திலுள்ள முகிற் கூட்டங்கள் விலகின. அகத்தியமுனிவரால் பருகப்பெற்ற கடல் நீர் வற்றிப் பொன்னும் மணியும் முத்தும் புலப்படக் கிடந்தாற் போல் விண்மீன்கள் விளங்கின. பாணபத்திரன் மனையிற் படுத்து உறங்கினான்.

**வரகுண பாண்டியன் பாணபத்திரனை உபசரித்தல்**

பின்பு கதிரவன் கண் விழித்து இருட் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு தனது கிரணமாகிய ஆயிரங் கரங்களையும்

விரித்துக் கீழைக் கடலை நீந்தும்பொழுது வரகுண பாண்டியன் இராப்போதில் சோமசுந்தரக் கடவுள் பாணபத்திரன் பாடலுக்கு அளித்தருளிய அருட்கொடையைக் கேட்டறிந்து பாணபத்திரனை அழைத்து இறைவன் இட்டருளிய அப் பலகையின்மீது இருக்கச் செய்து, "**இவனே எங்கள் மதுரை நாயகன்**"[1] என எண்ணி மணிக்கலன்களையும் விளை நிலங்களையும் பெரு நிதிகளையும் மிகுதியாகக் கொடுத்து முறையாகப் பல நாளும் நடத்தி வந்தான். வரகுண பாண்டியன் அருளிய பரிசைப் பெற்ற பாணபத்திரனும் ஆலயத்திற்கு நாடோறும் நான்கு காலமும் சென்று சோமசுந்தரக் கடவுளை வழிபட்டுக் கொண்டு வந்தான். வரகுண பாண்டியன் கூடற் பெருமானின் திருவடிகளைத் திருக்கோயிலின்கண் வந்து வணங்கித் துதித்துச் சில நாள் கழிந்தபின் சிவ சாரூப்பியம் பெற்றுச் சிவபுரம் அடைந்தான்.

செய்யுள்—18

ஆகச் செய்யுள்—2148

———

1. சிவனடியாரைச் சிவனெனவே கருதவேண்டுமென்பது உண்மை நூற்றுணிபு; ஆதலின், இங்கு இவ்வாறு கூறப்பெற்றது. இதனை, "தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையும், ஈசனென வேயுளத்துள் எண்" என வரும் சைவசமய நெறி திருக்குறளாலும் அறியலாம்.

# 44. இசைவாது வென்ற படலம்

**பாடினியிடம் பாண்டியனின் காமக்கிழத்தி பகைகொள்ளல்**

வரகுண பாண்டியன் சிவகதி அடைந்த பின் அவனு டைய மகனாகிய **இராசராச பாண்டியன்** முடி சூட்டிக்கொண்டு பாண்டி நாட்டை நல்ல முறையில் அரசுபுரிந்து வந்தான். அவனுக்குத் தனது மரபில் வந்தவராகிய மனைவியர்கள் பலரும், கணிகையருள்ளே காமக்கிழத்தியர்கள் பலரும் இருந்தனர். அந்தக் காமக்கிழத்தியருள் ஒருத்தி அவ்வரசனுக்கு உயிர் போன்றவளாய் விளங்கினாள். அவள் இசை பாடும் கல்வித் துறையில் வல்லவள். அவளுக்கும், கூடற்பெருமான் திருமுன் இசைபாடும் பாணபத்திரருடைய மனைவிக்கும் இசைத் துறை யிலே பகை மூண்டது. பாண்டியனின் காமக்கிழத்தி அது பொருது பாணபத்திரனின் மனைவிக்கு எதிராக ஒரு பாண் மகளைப் பாடவிட்டு இவள் கொண்ட செருக்கினை அடக்கல் வேண்டும் என்று கருதி அதனைப் பாண்டியனுக்குத் தெரி வித்தாள்.

**பாண்டியன் ஈழ நாட்டுப் பாடினியை அழைத்தல்**

அக் காமக்கிழத்தி கூறும் வண்ணம் நடக்கும் இராசராச பாண்டியன், பாணபத்திரன் மனைவியை இசையில் வெல்லும் தகுதிவாய்ந்த ஒரு பாடினியை ஈழ நாட்டினின்றும் வரவழைத் தான். அவள் யாழை முதுகிலே தொங்கவிட்டுப் பாடும் மாணவியர் பலர் சூழ வந்து பாண்டியனை வணங்கி ஒரு [1]கின்னரமங்கைபோல ஏழிசைகளையும் இசைத்துப் பாடி நின்றனள். காமக்கிழத்தியால் மேல் வரும் கொடிய பழியினை நோக்காத பாண்டியன் ஈழத்துப் பாடினியை நோக்கி, "விறலியே! நீ நாளைக்குப் பாணபத்திரன் மனைவியை எம்முன் பாடுவதற்கு அழைப்பாயாக; அதற்கு அவள் உன்னோடு பாட ஆற்றாது மறுப்பினும், யாம் அவள் சார்பில் நின்று உன்னைத் தடுத்தாலும் நீ அவளை விடாது தொடர்ந்து அவள் மனம் நாணமுற வஞ்சினமிட்டுப் 'போகாதே! நில்' என்று தடுத்

1. கின்னர மங்கை - இசை பாடும் ஒரு தேவ சாதியார்.

துக் கொள்'' என்று கூறி, வேண்டியன நல்கி, "இருப்பிடஞ் சென்று நாளை வரக்கடவாய்'' என்று அனுப்பினுன்.

**பாண்டியன் பாணபத்திரன் மனைவியை அழைத்தல்**

பின்பு பாண்டியன் பாணபத்திரனுடைய மனைக் கிழத்தியாகிய பாடினியைத் தம்முன் அழைப்பித்து உள்ளொன்றும் புறமொன்றுமாக எண்ணிக்கொண்டு, "பாடினியே! இசைவல்லாள் ஒருத்தி தன்னை நன்கு மதித்துக்கொண்டு 'இங்கு என்னேடு இசைபாட வல்லவர் எவரேனும் உண்டோ' என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கின்றனள்; நீ அவளுடன் ஒப்பாக நின்று பாடவல்லையோ? கூறுவாயாக'' என்று வினவினுன். அதற்கு அவள், "அரசே! அடியேனுக்குச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளும் கற்பும் இருத்தலினுலே அவளோடு பாடி வெல்வேன்; ஒருபோதும் தோல்வியினுல் வருந்தி வாட்டமுறேன்'' என்றுள். பாண்டியன் அவளையும், "நாளை வா; போ'' என்று அனுப்பிவிட்டான்.

**ஈழப் பாடினிக்கும் பத்திரன்பாடினிக்கும் வாக்கு வாதம்**

மறு நாள் இராசராச பாண்டியன் அவ்விருவரையும் தன் அவையின்கண் அழைப்பித்து, ஒருவருக்கொருவர் நேரில் இருக்குமாறு செய்து அவர்கள் கற்ற ஏழிசைகளையும் பாடுமாறு ஏவிக் கேட்பதற்கு முன்னரே, மரக்கலத்தினின்றும் வந்த ஈழ நாட்டுப் பாடினி பாணபத்திரன் மனைவியாகிய பாடினியை இகழ்ந்து பேசி, "இசைப் பாடலிலே உள்ள குற்றங்கள் எத்தனை? குணங்கள் எத்தனை? யாழுக்குத் தெய்வம் யாது? உயிரெழுத்துக்கு மாத்திரை எத்தனை? மெய்யெழுத்துக்கு மாத்திரை எத்தனை? உயிர்மெய்யெழுத்துக்கு மாத்திரை எத்தனை? இக் கேள்விகளுக்கு முதலில் விடை கூறிவிட்டுப் பின்பு நீ என்னேடு பாடுவாயாக; இல்லையேல் உனக்கு வசை'' என்றுள்.

கற்பிற் சிறந்த பாணபத்திரனின் மனைவி, "பூங்குழலாய்! கடல் கடந்து வந்துள்ள நின் கல்விப் பெருமையினையும், வாதத்தின்மேற் சென்ற ஊக்கத்தின் பெருமையினையும். பலரும் விரும்புகின்ற பெண்ணலத்தின் செருக்கினையும்,

பாண்டியனது அவையினுள்ளார் அறிந்துகொள்ளுமாறு உன் வாயினைத் திறந்து காட்ட வேண்டாவோ? நான் உன்னோடு இசைவாது செய்யும் சண்டைக்கு எதிரன்றிக் கொடிய வாயினைத் திறந்து இகழும் சண்டைக்கு எதிரல்லேன்; உன்னைப்போல மானத்தை விற்றுப் பிழைக்கும் பெண்களே அதற்கு எதிராவர்'' என்று கூறினள். அப்போது பாண்டியன் அவர்கள் இருவரையும் விலக்குகின்றவனைப்போல் நடித்து எதிர்நின்று தடுத்து, ''பெண்களே! நீவிர் வீண் பேச்சை ஒழித்துப் பாடுவீர்களாக; தோற்றவர் வென்றவருக்கு அடிமையாய் விடுவதே சபதம்'' என்று கூறி இருவருக்கும் மானம் உண்டாக்கினன்.

**முதனாள் பாண்டியன் முன் இசைப் போட்டி**

முன்பு ஈழ நாட்டு விறலி யாழினை இடத்தோளில் தழுவிக் குரல் என்னும் நரம்பின் வழியே முகிழ்த்த விரல் சென்று தாக்கப் பெருமிதப் புன்னகை உள்ளேகிடந்து சிறிது தோன்ற ஏழிசையினைப் பாண்டி மன்னது செவிகளில் அவன் காமக் கிழத்தியின் மழலை மொழியாகிய இனிய அமுதம்போல வார்த்தாள். பாணபத்திரன் மனைவியாகிய பாடினியும் யாழினை எடுத்து, மாடகத்தை முறுக்கிக் கட்டமைந்த நரம்பினைத் தாக்கி இசையில் சிறந்த கந்தருவர்களும் இரு செவிகளிலும் கேட்டு நாணுறும்படி மெல்லிய விரல் தடவும் ஓசையின் வழியே நாவால் விளக்கும் இசையமுதத்தைப் பலர் செவிகளிலும் நிரப்பினள். அரசனது மனக் கருத்தை அறியாத அவையினர் அனைவரும் பாணபத்திரன் மனைவியின் பாடலை மெச்சிக் கொண்டாடினர்கள். ஆனால், பாண்டியனோ ஈழ நாட்டுப் பாடினியின் பாடலைப் பாராட்டினன். உடனே மன்னனின் உள்ளத்தை அறிந்த அவையினரும் பாண்டியன் புகழ்ந்த வண்ணமே அவ்வீழப் பாடினியின் பாடலையே புகழ்ந்தனர். இறைவனது திருவருளைப் பெற்று மண், பெண், பொன் என்னும் மூவகை[1] ஆசைகளையும் **துறந்தவர்களாயினும் மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறு அல்லவா?**

---

1. இங்கு, காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றையேனும், மனம் வாக்குக் காயம் என்ற மூன்றால் வரும் பாவங்களையேனும் கொள்ளலாம்.

முன்னவன் அருளைப் பெற்று மும்மையும் துறந்தா ரேனும்
மன்னவன் சொன்ன வாறே சொல்வது வழக்கா(று) அன்றே!

காமக்கிழத்தியின் மையலாகிய புதிய மதுவினைப் பருகித் தீது நன்று அறியாத பாண்டியன், அவையிலுள்ளாரை நோக்கி, "இவ்விசை வாதின் முடிவு இன்று ஒரேநாளில் தேர்ந்து அறியத் தக்கதோ?" என்று கூறி விறலியர் இருவரையும், "இருக்கைக்குப் போவீராக" என்று விடுத்தான்.

**பாணபத்திரன் மனைவியின் வருத்தம்**

ஈழத்துப் பாடினி தன்னைச் சூழ்ந்த மகளிர் கூட்டம் புகழத் தன் இருப்பிடத்தை வந்து அடைந்தாள்; இராசராச பாண்டியன் தன் பாட்டினை வியந்ததனையே ஒரு புகழ்ச்சியாகக் கருதி இறுமாப்புக்கொண்டு பெருங்களிப்படைந்து மலர்ப் படுக்கையின்மேல் கவலையின்றி இனிது இருந்தாள். பாணபத்திரன் மனைவியோ மனக்கலக்கம் மிகுந்தவளாய்ச் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை அடைந்து வணங்கி வாட்டமுற்றுக் கண்ணீர் சொரிய ஒதுங்கி நின்று, "சுந்தர பாண்டியனுகி நிலவுலகைச்செங்கோலோச்சி ஆட்சிபுரிந்தருளிய அரசே! இராசராச பாண்டியன் ஒர வழக்குப் பேசுவானுயினன்; அவன் கருத்துக்கிசைய அவையினர் அனைவரும் அத்தன்மையராயினர்; ஐயனே! இனி நடுநிலைமை தூக்கிப் பேசுவார் யாவர்? தேவரீர் திருவருள் சுரந்து தமியேனுடைய துன்பத்தினைப் போக்கியருள வேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்தாள். அப்பொழுது ஆகாயத்தினின்றும், "பெண்ணே! நாளைக்கு நீயே வெல்லும்படி அருள் செய்வோம்; நீ அஞ்சற்க" என்று ஓரசரீரி வாக்குத் தோன்றிற்று. அதனைக் கேட்டுப் பாணபத்திரன் மனைவி தன் இல்லிற்சென்று மகிழ்வுடன் இருந்தாள்.

**இரண்டாம் நாள் பாண்டியன் முன் இசைப் போட்டி**

பாண்டியன் அன்று போலவே மற்றைய நாளும் அவ்விரு விறலிகளையும் அழைப்பித்து அவர்கள் பாடலைக்கேட்டு முதனுட் சொல்லியபடியே சொல்ல அவையினரும் அப்படியே கூறினுர்கள். அதனைக் கேட்டு மனம் புழுங்கி நின்ற பாண

பத்திரன் மனைவி பாண்டியனை நோக்கி, "பாண்டியருள் ஆண் சிங்கம் போன்றவனே! உலகில் மனுநூலின் வழியே செங்கோலோச்சும் மன்னவர் ஏறே! நீர் வார வழக்குப் பேசியதனாலே அவையிலுள்ளாரும் அப்படியே சொல்லத் துணிந்தனர். ஆதலின், தராசின் நாப்போலும் நடுநிலைமை யுள்ள சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று பாடுகிறோம். அங்கே எங்கள் இருவரின் பாடலையும் கேட்டு யாரேனும் ஒருவர் மனந் துணிந்து '**இவள் வென்றாள்**' என்றால் போதும்" என்று கூறினாள். பாண்டியன் "அங்ஙனமே நீங்கள் செய்யுங்கள்; செய்யுங்கள்" என்றான். அவை கலைந்தது. விறலியர் இருவரும் தத்தம் இல்லங்களுக்குச் சென்று தங்கினர்.

**கூடற்பெருமான் திருமுன் விறலியர் இருவரும் பாடுதல்**

மறுநாள் பாண்டியன் அமைச்சர்களும், இசையின் குற்றங்களையும் குணங்களையும் பகுத்து உணர்ந்த கீத ஞானம், இலக்கிய ஞானம், சுருதி ஞானம், தாள ஞானம் என்னும் நால்வகை ஞானம் நிறைந்த இசைநூற் புலவர்களும் சூழச் சோமசுந்தரக் கடவுள் சந்நிதியிலே போய் இருந்துகொண்டு விறலியர் இருவரையும் அழைத்து வரும்படி ஏவலர்களை விடுத்தான். ஏவலர்கள் விரைந்தோடி மன்னன் கட்டளையைக் கூறிப் பாடினிகளை அழைத்தனர். ஈழ நாட்டுப் பாடினி, "இன்று பாணபத்திரன் மனைவி வந்து எனக்கு அடிமையாய் விடுவாள்; இதற்கு ஒரு சந்தேகமும் இல்லை" என்று கருதிக் கொடுஞ் செருக்கோடும் விரைவாக வந்தனள். கற்பும், கல்வி நிறையும், இறைவன் திருவடியிடத்து வைத்த அன்பும் சிறந்து விளங்கப் பாணபத்திரன் மனைவி மெல்ல வந்தனள். சோமசுந்தரக் கடவுளும் இசை நூலில் உணர்வுமிக்க புலவர்போல, முத்து மாலையோடு தோளணி முதலிய பல அணிகளைத் தரித்துப் புலவர் குழுவின் நடுவில் வந்து எழுந்தருளியிருந்தார்.

அப்போது அச் சபையிலே ஈழ நாட்டுப் பாடினி முதலில் வந்து [1] **ஏத்திசை** பாடினாள். சபையினில் வீற்றிருந்த முதியோர்கள் மனம் விரும்பி ஒன்றும் கூறாதிருந்தனர். பின்பு பாண

1. இதனை 'வேத்திசை' என்றுங் கூறுவர்.

பத்திரன் மனைவி வீணையை இடத்தோளில் ஏந்திய வண்ணம் கலைமகள் இருந்து பாடும் பதுமாசனத்திலே தானும் இருந்து யாழ் நரம்பினை விரலினால் தாக்கித் தடவி, இனிய இசையினை ஆராய்ந்து எழுப்பிப் பாடுவாளாயினள்.

குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்(கு) இமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய்; மதுரைப் பரமேட்டி!
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலை கொண்(டு)
இடங்கள் தோறும் இரப்பாயென்(று) ஏசு வார்க்கென் பேசுவனே.

தேனார் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே; மதுரை நம்பரனே!
நானு வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனாய் என்று பிறர்பழித்தால் அடியேன் விடை ஏ(து) அறைவேனே.

வரத னாகி எவ்வுயிர்க்கும் மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய்; மதுரைத் தனிமுதலே!
சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தாய் என்பார்க்(கு) என்நான் விளம்புவனே.

இங்ஙனம் பாணபத்திரன் மனைவி மதுரைப் பிரானாகிய சோமசுந்தரக் கடவுளைக் [1] கருதிய இசைப் பாட்டினால் மனங் கனிந்து பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு என்னும் முதற்றொழில் எட்டும், வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை என்னும் இசைக் கரணம் எட்டும் பொருந்திய யாழிசையோடு நாவிசை அமுதத்தைத் மண்ணுலுகத்தவர் செவிக்கேயன்றி வானவர் செவிக்கும் வார்த்தாள். இடைகலை, பிங்கலைகளின் இயக்கத்தைத் தடுத்து, மூலாதாரத்தினின்றுங் காற்றினை எழுப்பிச் சுழுமுனை யின் தொழிலால் பிரமரந்திரம் வரை நடைபெற இசைக்கும் [2] **உள்ளாள கீதத்தினைக்** கழுத்து வீங்காமலும், கண் இமையாமலும், பல் வெளிப்படாமலும், புருவம் நிமிராமலும்,

1. கருதிய இசைப் பாட்டு - இது 'பெருந்தேவபாணி' ஆகும்.
2. இந்த உள்ளாள கீதம் மேற்கூறிய இலக்கணத்தோடு கந்தருவரால் பாடப்படுவது.

கபோலந் துடியாமலும் பாடினாள். அவ்விசையினைக் கேட்டு அனைவரும் பெருமகிழ்ச்சியடைந்தனர்.

**பாணபத்திரன் மனைவி வெற்றி பெறுதல்**

கன்னித் தமிழ் நாடனாகிய பாண்டியன் கைதவன் என்னும் தனது பெயரின் காரணத்தை எல்லோருக்கும் அறிவிப்பவனைப்போலத் தான் இசை நூல் வல்லனாயிருந்தும் முன் போலவே முடிவு சொல்லுவதற்கு மனந் துணிகின்றவன் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் மனக்கோட்டம் நீங்கி விட, நடுநிலைமை வகித்து, இருவர் இசையினையும் சீர்தூக்கிப் பார்த்து, "**பாணபத்திரன் மனைவியே வென்றனள்**" என்றான். அப்படியே சபையாரெல்லோரும் கூறினர். பின்பு பாண்டியன், "வஞ்சனை மிகுந்த ஈழ நாட்டுப் பாடினியின் கழுத்தில் பாணபத்திரன் மனைவியை இருத்துக" என்று ஏவ, ஏவல் மகளிர் அங்ஙனமே இருத்துவித்தனர். அப்போது உமாதேவியாரின் இடப் பாகத்தை மறைத்து மானிட வடிவம் தாங்கிப் புலவராய் வந்து எழுந்தருளியிருந்த சோம சுந்தரக்கடவுள், "**இஃது அற்புதம்! இஃது அற்புதம்!**" என்று சொல்லிக்கொண்டு அவையிலுள்ளோர் அனைவருங் காண மின்னலைப்போல மறைந்தருளினார். அதுகண்ட யாவரும் வியப் புற்று நின்றனர். பாண்டியன் பயந்து நடுங்கினான்.

**பாண்டியன் பாடினிகளுக்குப் பரிசு வழங்கல்**

"இது சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்" என்று தெளிந்த யாவரும் சிவபெருமானின் திருவருள் திறத்தையும், அடியாரின் அன்பையும் சீர்தூக்கிப் புகழ்ந்து தங்கள் கண்களினின்றும் ஆனந்த வருவி பெருக்கெடுக்கப் பேரின்பக் கடலுள் அமிழ்ந்தனர். பாண்டியன் ஈழப் பாடினியின் தோளின் மேல் ஏறியிருந்த பாணபத்திரன் மனைவியை இறக்குவித்து முற்பட அவளுக்கு முத்து மாலைகளையும், மணிக் கலன்களையும், ஆடைகளையும், வரிசையாகக் கொடுத்தான். பின்பு [1]ஈழப் பாடினிக்கும் அவள் மனம் மகிழும் வண்ணம் சில வரிசைகளை அளித்தான்.

---

1. இவள் தன்னால் வருவிக்கப்பட்டவள் ஆதலால், தோல்வியுற்ற அவட்கும் வரிசை அளித்தனன் என்க.

**பாண்டியன் சோமசுந்தரக் கடவுளை வழிபடல்**

அதன்பின்பு, இராசராச பாண்டியன் சபையில் வந்து அனைவரோடும் ஒருங்கு எழுந்தருளியிருந்து விண்ணிழி விமானத்தின்கண் புகுந்திருந்த பெரும் புலவராகிய சோம சுந்தரக் கடவுளுக்கும் அரிய அணிகலன் முதலியவற்றை அளித்து வழிபட்டு, "**அரசர்களுடைய வலிகளெல்லாம் தெய்வங் களின் வலிக்கு முன் நில்லா: அத் தெய்வங்களின் வலிகளெல்லாம் சிவபெருமானின் வலிக்கு முன் நில்லா**" என்று ஆன்றோர் பலரும் கூறுவதெல்லாம் இப் பாணபத்திரன் மனைவி வாயிலாகக் காணப்பட்டது என்று ஆச்சரியமடைந்து,

மன்னவர் வலிகள் எல்லாம் தெய்வத்தின் வலிமுன் நில்லா ;
அன்னமா தெய்வஞ் செய்யும்வலியெலாம் அரண்மூன்(று) அட்ட
முன்னவன் வலிமுன் நில்லா எனப்பலர் மொழிவ தெல்லாம்
இன்னபாண் மகளிற் காணப் பட்டதென்(று) இறும்பூ(து) எய்தா.

சோமசுந்தரக் கடவுளை வலஞ் செய்து வணங்கி விடை பெற்றுக்கொண்டு தன் மாளிகை அடைந்தான்.

பின்னர் இராசராச பாண்டியன் சேமநிதி பெற்றவனைப் போலச் [1]**சுகுண பாண்டியன்** என்னும் மைந்தனைப் பெற்று மகிழ்ந்து வாழ்ந்திருந்தான்.

செய்யுள்—**44**

ஆகச் செய்யுள்—2192

---

1. சுகுணன் - நற்குணமுடையவன்,

## 45. பன்றிக்குட்டிக்கு முலை கொடுத்த படலம்

### குருவிருந்த துறையின் சிறப்பு

சொக்கலிங்கப் பெருமான் எழுந்தருளிய மதுரை மாநகர்க்குத் திறையாக முத்துக்களை வீசும் வையையாற்றின் தெற்கிலே [1] **குருவிருந்த துறை** என்னும் பெயர்கொண்ட ஒரு பெரிய ஊர் உள்ளது. அவ்வூரிலே தேவ குருவாகிய **பிரகஸ்பதி** இருந்து சிவபெருமானை நோக்கித் தவம் புரிந்தார். சிவபெருமான் அவருக்குப் பல வரங்களைக் கொடுத்துக் '**குருநாதர்**' என்னும் பெயருடன் அங்கே திருமாலும், நான்முகனும் போற்ற எழுந்தருளியிருக்கின்றார்.

### சுகலன் புதல்வர்கள் இழிநிலை அடைதல்

அவ்வூரிலே **சுகலன்** என்னும் பெயருடைய ஒரு வேளாளன் வாழ்ந்து வந்தான். அவன் மனைவி **சுகலை** என்று சொல்லப்படுவாள். அவள் பன்னிரண்டு புதல்வர்களைப் பெற்றாள். அப் புதல்வர்களைப் [2] பெற்றோர்கள் செல்வச் செருக்கினாலே குற்றங் கண்டபோது நல்வழிப் படுத்தாது மிக்க அன்போடு வளர்த்து வந்தனர். இவ்வாறு வளர்ந்து வரும் நாளில் தாயும் தந்தையும் இறந்துவிட, அப் புதல்வர்கள் வேடர்களோடு கூடிக் கொடிய காட்டில் வந்து வேட்டையாடும் தொழிலை மேற்கொண்டார்கள்.

### சுகலன் புதல்வர்கள் தேவகுருவால் சாபம் பெறுதல்

ஒருநாள் சுகலன் புதல்வர்கள் அக் காட்டிலே வெய்யில் புகாத புதலின் கீழ்ச்சென்று ஐம்புலங்களையும் அடக்கித் தவஞ் செய்துகொண்டிருந்த வியாழபகவானைக் கண்டு கைகொட்டிச் சிரித்துக் கல்லையும் பரலையும் வாரி அவர் மேல்

---

1. குருவிருந்த துறை - இவ்வூர் தற்போது மதுரைக்கு மேற்கே சுமார் 15 கல் தூரத்தில் உளது என்பர். இக் காலத்து இவ்வூர் 'குருவித் துறை' என வழங்குகிறது.

2. இவர்கள் பாண்டி நாட்டிற்கு அருகிலுள்ள காட்டு நாட்டு வன்னிய வமிசத்தினர் என்றும், வேளாண்மைத் தொழிலையுடையவர் என்றும் நம்பி திருவிளையாடல் கூறுகிறது. [காட்டு நாடு - இது கள வேள்வி நாடு எனவும் பெயர் பெறும். வன்னியர்-ஒரு வகைச் சாதியார்.]

எறிந்தார்கள். வினையை வெல்லும் உத்தமராகிய பிரகஸ்பதி, "இவர் நமது தவத்திற்கு இடையூறு செய்தனரே" என்று நினைந்து மனம் நொந்து வெகுண்டு நோக்கி, "பெரியோர்களைக் கண்டு வணங்குங் கடப்பாட்டினை மறந்து வேடத் தொழிலை மேற்கொண்டீர்கள்! நீங்கள் நிலத்தினை உழுந் தொழிலை யுடையீர்களாதலால் பன்றிக் குட்டிகளாய்ப் பிறந்து, தாய் தந்தையர்களை இழந்து, வருந்தக் கடவீராக" என்று கடுஞ் சாபமிட்டார்.

உடனே, பாவமே வடிவான அப்பிள்ளைகள் பன்னிருவரும் பயந்து சாபத்தினை ஏற்று, "இந்தச் சாபம் எப்பொழுது நீங்கும்" என்று குறையிரந்து வேண்டினர். தேவகுரு, கோபந் தணிந்து உயிர்களுக்கு நேர்ந்த இடையூற்றினை நீக்கும் சிவபெருமானுடைய திருவடிகளை மனத்தில் சிந்தித்து, "என்னை ஆளாகவுடைய கூடலம்பதியில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளே உங்களுக்குத் தாயாய்வந்து முலைகொடுத்து உங்களைக் காத்துப் பாண்டியனுக்கு மந்திரிகளாகச் செய்தருளி, அதன் பின் முத்தியைத் தந்தருளுவார்" என்றார்.

**சுகலன் புதல்வர்கள் பன்றிக்குட்டிகளாகப் பிறத்தல்**

சுகலன் பிள்ளைகள் பன்னிருவரும், குருவிருந்த துறையின் புறத்திலுள்ள காடுகளில் சஞ்சரிக்கும் பன்றிகளெல்லாவற்றிற்கும் அரசாகிய பன்றியின் பெட்டை வயிற்றிற் போய்க் குட்டிகளாய்ப் பிறந்து இருந்தார்கள்.

**இராசராச பாண்டியன் வேட்டைமேற் செல்லுதல்**

சுகலன் பிள்ளைகள் பன்றிக் குட்டிகளாக இருக்கும் நாளிலே, ஒருநாள் இராசராச பாண்டியன் வேட்டையாடுதற் பொருட்டுச் சேனைகள் சூழ யானைமேற் கொண்டு மதுரையினின்று நீங்கி மேற்றிசைக் காட்டிலே சென்றான். விலங்குகள் பயிலும் இடங்களை அறியும் ஒற்றர்கள் விலங்குகளின் அடிச் சுவட்டினைப் பின்பற்றிச் சென்று புலால் நாறும் வாயினையும், தீப்போன்ற கண்களையுமுடைய புலிகள், பன்றிகள், திருகிய கொம்புகளைக் கொண்ட கலை மான்கள், மானினங்கள் முதலியன வாழும் இடங்களை அறிந்து மிக விரைந்து வந்து

அரசன் எதிரே நின்று புகன்றனர். வேட்டையாடுதலில் வல்லார் முன்னே விரைந்து சென்று, காடுகளை வெட்டிச் சரித்துப் புறம்பே வலைகளைக் கட்டி நாய்களைப் புறத்தே காவலாக வைத்துப் படைகளை ஏந்திய வீரர்களைப் பக்கங்களில் நிறுத்தி வைத்தனர். பாண்டியனும் யானையின்மேல் ஏறி ஒரு பால் நின்றனன். அப்போது சில்லரி (ஒரு வகைப் பறை), உடுக்கை, கொம்பு முதலியவற்றை எவ்விடத்தும் செவிடுபடுமாறு ஒலித்தனர். ஆங்காங்கே பல்வகையான [1]பார்வை விலங்கு களை நிறுத்தி, அவ்விலங்குகளின் ஒலிகளைப்போல் ஒலித்து நின்றனர். புலிகளும், மான்களும், யானைகளும் வெருண்டு ஓடுமாறு பாண்டியனும், படைவீரர்களும், கொடிய கணை களைப் பொழிந்தனர். மான்களில் சில கால் முறிந்து வீழ்ந்தன; சில தலை சிதைந்து சாய்ந்தன; குருதி ஆறாகப் பெருகி ஓடியது.

யானைகள் வெண்ணிணம் வெளிப்படத் துதிக்கைகள் முறிந்து கீழே வீழ்ந்து மடிந்தன. கரடிகளும் புலிகளும் வாய்களைப் பிளந்த வண்ணம் வீழ்ந்து மாண்டன. தோண்டிய புல்லின் மணமும் கிழங்கின் மணமும் வீச விரைந்து ஓடிவந்த சில பன்றிகள் வலைகளிலே வீழ்ந்தன. பதுமையாகச் செய்து வைத்த பார்வை விலங்குகளைக் கண்டு நெருங்கி வந்த சில பன்றிகள் வலைகளிலே அகப்பட்டன. கட்டி வைத்த வலை களினின்றும் தப்பியோடிய விலங்குகளை வேட்டை நாய்கள் கௌவி நிறுத்தின. அளவிறந்த விலங்குகள் வீரர்களின் வேற் படையால் மாய்ந்தன. வேல்களுக்கு இலக்காகாது பிழைத்து நின்ற கொடிய மிருகங்கள் வளைந்து சூழ்ந்த வலையினின்றும் தாவி வேட்டுவ மாக்கள் மீது பாய்ந்து மீள்வன, மதிலை முற்றுகையிட்டுப் போரிட வந்த வீரர்களைத் தாக்கும் பொறி களாகிய விலங்குக் கூட்டங்களை ஒத்தன. வீரர்கள் விட்ட கணைகள் முனிவர் இடுஞ் சாப மொழியினும் விரைந்து சென்று, புலிகளையும், கரடிகளையும், மான்களையும், யானைகளையும் துளைத்துச் சென்றன. இவ்வாறு துண்டித்த விலங்குகள் அளவிறந்தன. பாய்ந்த கணைகளினின்றும் தப்பி, வலையைக்

1. பார்வை விலங்குகள் - மிருகங்களைப் பிடிப்பதற்கு வளர்க்கப் பட்ட இனமாகிய மிருகங்கள்.

கிழித்துக்கொண்டு அப்புறம் ஓடிய மான்களைக் கௌவி வருத்தி நின்றனவாகிய நாய்கள், முன்னுளிலே சூழ்ந்த பாசமாகிய வலையினின்றும் தப்பிப் பிழைத்துச் செல்லும் பெரியோரை விரைந்து தடுத்து ஆசையை விளைத்துநின்ற பெண்களை ஒத்தன[1]. சந்திரனை இரு கூறுகப் பிளந்து கௌவினுற்போன்ற வெள்ளிய கொம்புகளை உடைய யானையின்மேல் விடம் பூசிய வேற்படை ஊடுருவிய தாலாகிய செம்புண்ணின் தொளையினின்று பெருக்கெடுக்கும் குருதி நீர், காடுகள் அடர்ந்த மலையின்மீது சூழ்ந்த நெருப்பினை ஒத்தது. வீரர்களின் ஆர்ப்பொலியும், உடுக்கையின் ஒலியும், ஊது கொம்பின் ஒலியும், அம்புகளால் தாக்கப்பட்டு வீழ்கின்ற விலங்குகளின் ஒலியும், வலையினின்றும் தப்பியோடும் மான் களின்மேல் பாய்கின்ற நாய்கள் குரைக்கின்ற ஒலியும் ஒன்று சேர்ந்து இடியின் ஓசையை ஒத்திருந்தன.

**அரசப் பன்றி போருக்குப் புறப்படல்**

இவ்வாறு பல்வேறு வகையான விலங்குகளையெல்லாம் வேட்டையாடிய வண்ணம் இராசராச பாண்டியன் மேற்றிசை நோக்கிச் செல்லும்போது ஒரு பன்றி, பன்றியரசன் இருக்கும் காட்டின்கண் முன்னர் ஓடிவந்து நின்று. "எங்கள் அரசே! இங்குள்ள விலங்குகள் அனைத்தையும் பாண்டியன் கொன்று வருகின்ருன்" என்று சொல்லிற்று. அரசப்பன்றி அது கேட்டுப் பெருங் களிப்படைந்து போர்புரிய எண்ணி எழுந்து செல்லும்போது தன் உயிர்போன்ற பெண்பன்றியை நோக்கி, "நான் இன்று பாண்டியனை எதிர்த்துப் போர்புரிந்து வென்று வெற்றி மாலையுடன் வருவேனே, அல்லது இறந்து படுவேனே, அறியேன்; நீ உன் புதல்வர்களை நன்கு பாது காத்துக்கொண்டு இங்கே இருப்பாயாக" என்று கூறியது. அதற்குப் பெண் பன்றி, "என் பிராண நாயகனே! உயிர் அங்குச் செல்ல. இந்த உடல் இங்குத் தனித்திருப்பது வழக்

2. இங்கே, "பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா, உலமொடுபடர் வனதகையுற வுறுசினமொடு கவர்நாய், நிலவியஇரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர், புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினள வுளவே" என வரும் (பெரிய புராணம்-கண்ணப்ப நாயனுர் புராணம்) செய்யுள் ஒப்பு நோக்கற்பாலது.

காமோ? முன்னுளில் இக் குட்டிகளை வகுத்த தெய்வம் இப் பாவியோ? அது வேறு; ஆதலின் யானும் வந்து, நீ பெருஞ் சமர் புரிந்துவெற்றிபெற்றுவருவாயேல் உடன்மீளுவேன்; அல்லாமல் நீ இறந்து படுவாயேல் அங்கேயே யானும் இறந்தொழிவேன்; உடம்பின் நிழலுக்கு அவ் வுடம்பைத் தொடர்ந்து செல்வதன்றி வேறு செயலும் உளதோ? ஆகலின், செல்வோம் எழுக'' என்று கூறி விரைந்து எழுந்தது; பிறகு பெண் பன்றி தனது மருங்கில் தழுவி வாராநின்ற குட்டிகளைத் தள்ளிவிட்டு நிழல் போல் தன் கணவனைப் பின்பற்றி அணைந்து செல்ல அரசப் பன்றி காற்றெனக் கடிது சென்றது. பல்வகைச் சாதியான பன்றிக் கூட்டங்கள் எல்லாம் படை வீரராய் முன்னே செல்ல, அரசப் பன்றி இடிபோல ஒலித்துக் கண்களினின்றுஞ் சினத்தீ சிந்த மானம் என்கின்ற குதிரைமேலேறிப் போருக்கு எழுந்தது.

**பன்றி வீரர்களின் பெரும் போர்**

முன்னணியாக நடக்கின்ற பன்றியாகிய வலி மிக்க படை எதிரே வருகின்ற பாண்டியனுடைய வீரர்கள்மீது சீறிச் செல்ல அவ் வீரர்கள் பின்னே ஒதுங்கி நின்று கணைகளை மழைபோல் சொரிந்தனர். இரத்தம் வெள்ளமாகப் பெருகிற்று; பன்றிகளின் உடல்கள் கீழே வீழ்ந்தன; குடர்கள் சரிந்தன; எலும்புகள் முறிந்தன; மூளைகள் சிதறின. பருந்துகளும் காகங்களும் பறந்தன. பன்றிகள் இங்ஙனம் உயிர் வேறு உடல் வேருகப் பிரிந்தன.

பன்றி வீரர்கள் உடல் பதைத்து, அனல்போல் சினந்து, பாண்டியன் படைவீரர்மேல் பாய்ந்து சிலரை அழித்தனர்; சிலரைக் கீழே தள்ளி வாயினின்றும் இரத்தம் பெருக உதைத்தனர்; சிலரை வீழ்த்தி அவர் மார்புகளில் தம் கொம் பினை அழுத்திக் கொன்றனர்; சிலர் உடலைக் கிழித்தனர்; பாண்டி மன்னனின் படைவீரர்களில் சிலர் கால் முறிந்தனர்; சிலர் தலையுடைந்தனர்: சிலர் தோள் சிதைந்தனர்; சிலர் தொடை நொறுங்கினர்; சிலர் வாட் படை அற்றனர்; சிலர் விதித்த வாழ்நாளைப் போக்கினர். இந்நிலையினைக் கண்ட பாண்டியனுடைய மந்திரிகள் கோபங்கொண்டு கூற்றுவனைப்

போல இருப்புலக்கைகளையும் சக்கரங்களையும் வீசி ஆரவாரித்தனர்; அதனால் பன்றி வீரர்கள் பலர் உயிர் இழந்தனர்.

**பன்றியரசு தன் பெட்டையிடம் வீரமொழி பேசல்**

அப்பொழுது பன்றியரசை அதன் பக்கத்து நின்ற பெண் பன்றி பார்த்து, "நாம் ஏவிய சேனைகளெல்லாம் இறந்தன. இனி நாம் செய்யக் கடவது என்னை? நாமும் இங்கே வீணாக உயிர்விடவேண்டுவதில்லை; உயிர் தப்பிப் போவதே நமக்குரிய செயலாகும்" என்று கூறியது. அதற்குப் பன்றி வேந்தன், **"நுண்ணறி வுடையராகி நூலொடு பழகினாலும், பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத்தே"** ஆதலால் உன்னறிவுக்கேற்ற காரியஞ் சொன்னாய்; இஃது அறிவுடையோருக்கெல்லாம் இழுக்குடையதன்றோ! இரண்டு சிங்கங்கள் நிற்கின்ற நீர்த்துறையிலே ஒரு பன்றி வந்து அஞ்சாமல் தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பிச் செல்லும்; ஆனால் ஒரு பன்றி நிற்கிற நீர்த்துறையில் இரண்டு சிங்கங்கள் வந்து தண்ணீர் குடித்தற்கு அஞ்சும், நான் அத்தகைய வீரம் வாய்ந்த குடியில் மேலைத் தவத்தால் வந்து பிறந்துள்ளேன்; ஆதலால் பாண்டியனுடைய வீரத்தைக் கொள்ளைகொண்டு என் புகழை எட்டுத் திசைகளிலும், விண்ணுலகத்திலும் நாட்டுவேன்; அல்லது புறங்காட்டி ஓடாது போர்க்களத்தில் இறப்பேன்; **இப்பூத வுடம்பு அழிவதே அன்றிப் புகழுடம்பு அழிவதில்லை**; ஆகவே, அஞ்சுகின்ற நீ இங்கே நிற்பாயாக" என்று கூறித் தன் பெட்டையை நிறுத்திவிட்டுத் தான் மட்டும் தனித்துச் சென்றது; அப்போது, "பாண்டியனே! என் காட்டில் வாழ்ந்த பன்றிக் கூட்டங்கள் முழுதையும் கொன்றுவிட்டோம் என்று மகிழ்ந்து இனி ஓடாதே; நில்" என்று ஆரவாரித்து வெகுண்டு நிலத்தைக் கீறிப் பாதலத்தைக் காட்டித் துகள் விண்ணினை மறைக்க எழுப்பி நிமிர்ந்து சென்றது.

**பன்றியரசன் போர் புரிந்து வீர சுவர்க்கம் அடைதல்**

பன்றியரசனின் வருகையைப் பாண்டியன் கண்டு அதன் வீரத்தைப் புகழ்ந்து பாராட்டி, வில்லை வளைத்துக் கணைகளைச் சொரிந்தான். பன்றியரசு பாண்டியன் விட்ட கணைகளில்

சிலவற்றைப் பிடுங்கிப் பசிய புல்லைப்போல வாயாலே கடித்தது; சிலவற்றைக் கால்களால் தேய்த்துத்தேய்த்து முறித்தது; சிலவற்றைக் வாலினால் முறித்தது. அதனைக் கண்ட இராசராச பாண்டியன் மானம் பொறுது, தன் யானையின் கையில் ஓரிருப் புலக்கையைக் கொடுத்து ஏறிச் செலுத்தினான். அப்போது பன்றியரசு பொறுக்கலாற்றாது இடிபோல ஆரவாரித்து எழுந்து, "இவ்வியானையைக் கொல்லுவேன்" என்று சினந்து பாய்ந்து துதிக்கையினைத் துணித்துத் தன் வளைந்த கொம்பால் உடலைச் சிதைத்துக் கொன்றது. உடனே பாண்டியன் தேர்மீது பாய்ந்து சக்கரத்தைச் சுழற்றி விட்டான். பன்றி அரசு அதனைத் தடுத்துக் கடிய காற்றைப்போல் விரைந்து பாய்ந்து அத் தேர் சிதையும்படி உடைத்தது. உடனே பாண்டியன், குதிரைமேல் பாய்ந்து விஷம் பூசிய வேற்படையை வலமாகச் சுழற்றினான். அவன் அதை விடுக்கு முன் அஞ்சாமல் நின்ற அப் பன்றி அக் குதிரையின் பின் சென்று தாக்கிக் குடரும் குருதியும் சோரக் கொம்பினால் குத்தி அதனைக் கொன்றது. பாண்டியன் கோபம் மிகுந்து நிலத்தின்மீது குதித்து இருப்புத் தண்டத்தால் பன்றியரசனின் தலையிலே அடித்தான். உடனே பன்றியரசு இரத்த வெள்ளம் பெருக உயிரை விடுத்து விமான மீது ஏறி விண்ணுலகடைந்தது. அப்போது அது மன்மதனைப் போன்று விளங்கித் தேவர்கள் வியந்து பொழிந்த பூமழை யாகிய மழையில் நனைந்து, தேவ இசையாகிய அமுதினை இரு செவிகளாலும் பருகி மகிழ்ந்து வீரசுவர்க்கத்துள்ள தேவ அமுதினை உண்டு அர மகளிரைத் தழுவியது.

**பெட்டைப் பன்றி உயிர் விடுதல்**

பின்பு துணையாக நின்ற பெண் பன்றி, "என் துணைவன் இறப்ப நான் உயிருடன் வாழ்வது கற்பு நெறியாமோ? நான் போர் செய்யின் வெல்லேனாயினும் என் துணைவனோடு விண்ணுலகை அடைவேன்" என்று நினைந்து பாண்டியனை எதிர்த்தது. "பெட்டையை எதிர்த்துப் போரிட்டுக் கொல்வது அரசருக்கு அறம் அன்று" என்று கருதிய பாண்டியனுடைய வேட வீரர்களுக்குத் தலைவனாகிய **சுருச்சரன்** என்பவன் அப் பெண் பன்றியை எதிர்த்து நெடுநேரம் போர்புரிந்தான். நஞ்சினும்

முதிர்ந்த கோபங் கொண்ட அப் பெண்பன்றி அச் சருச் சரனைத் தரையில் வீழ்த்த, அவன் வலிமை குறைந்து செய லழிந்து மெல்ல எழுந்து ஒரு இருப்புத் தண்டத்தை எடுத்து, விரைந்து ஓங்கிப் பெண் பன்றியின் தலையில் அடித்துவிட்டு விழுந்திறந்து வீர சுவர்க்கம் அடைந்தான். பெண் பன்றியும் இறந்து வீரசுவர்க்கம் அடைந்தது. இராசராச பாண்டி யனும் மதுரையை அடைந்தான்.

**பன்றி மலை**

பின்னர், பன்றிகள் வீழ்ந்து இறந்த இடம் மலையாகியது. அன்று முதல் இன்றுவரை அம்மலை **பன்றி மலை** என வழங்கு கின்றது. அப் பன்றி மலையில் அரிய தவம் புரியும் முனிவர், விஞ்சையர், சித்தர், யோகிகள் முதலியோர் முத்தி பெறற் பொருட்டுத் தவம் புரிந்துவருகின்றனர்.

**பன்றி அரசனின் முற்பிறப்பு**

இவ்வாறு கூறியருளிய அகத்திய முனிவரைப் பிற முனிவர் கள்நோக்கி, "அறிவில்லாத பன்றியின் வடிவமாகிய மலையின்மீது முனிவர், விஞ்சையர் முதலியோர் தவம் புரியக் காரணம் யாது?" என்று வினவினர். அதற்கு அகத்திய முனிவர், "மன்மதனைப்போலப் பேரழகு கொண்டு விளங்கிய ரங்க வித்தியாதரன் என்னும் ஒரு இயக்கன், புலத்திய முனிவரின் தவத்திற்கு இடையூறு உண்டாகும்படி இசைப் பாட்டினைப் பாடினன். அப்போது புலத்தியர் சினந்து அவனைப் பன்றியாம் வண்ணம் சபித்தனர். அங்ஙனம் பன்றி வடிவாகும் வித்தி யாதரன், 'அடியேனுக்கு இச் சாபம் நீங்குவது எப்போது?' என்று வேண்டினன். புலத்திய முனிவர், 'இராசராச பாண்டியன் ஒரு காலத்தில் நின் காட்டில் வந்து பலவகை விலங்குகளையெல்லாம் மாய்த்து உன்னையும் கொல்லுவான்; பின்பு நீ உன் பழைய வடிவத்தைப் பெறுவாய்' என்று அருளிச் செய்தார். அவ்வாறே வித்தியாதரன் பன்றியாக வந்து இறந்து பின் பழைய வடிவத்தைப் பெற்றனன். இவ்வாறு புண்ணிய உருவத்தையுடைய இயக்கனின் உடலாகக் கிடந்த தூய தன்மை பொருந்திய அம்மலை பெருமை மிகுந்ததாகும். அதனால் அம் மலையின்மேல் சிறந்த முனிவர் முதலியோர்

தங்கித் தவம் புரிந்தனர். சோமசுந்தரக் கடவுளும் அங்கே எழுந்தருளியிருப்பர்'' என்று விடை கூறியருளினர்.

**கூடற்பெருமான் பன்றியாக வடிவுகொண்டு வருதல்**

பன்றியரசும், பெட்டையும் பசிய காட்டின்கண் விட்டுப் போய் இறந்த பின்னர், பன்றிக்குட்டிகள் பன்னிரண்டும் திகைத்துத் தாய்தந்தையைத் தேடி ஓடின; காணுமையால் சுழன்றன; நிழலைத் தேடி அலைந்தன; தாயின் முலைப் பாலை விரும்பி வாடின; தாகமும் பசியும் வருத்தச் சோர்ந்தன; வெய்யிலின் கொடுமை தாங்காது வெதும்பி வருந்தின. இவ்வாறு பன்றிக் குட்டிகள் வருந்தும்பொழுது சோமசுந்தரக் கடவுள் மீனுட்சியம்மையோடு விமானத்தின்மேற்கொண்டு அக் காட்டின்கண் தமதிச்சையினுல் திருவிளையாடல் கொண்டிருந்தார். அந்நிலையிலே அவர் பன்றிக்குட்டிகளின் துன்ப நோய்க்கு இரங்கி விருப்பத்துடன் துயரகற்ற அவற்றின் தாய்ப் பன்றியின் வடிவங்கொண்டு காட்டின்கண் பசியால் வருந்தி நின்ற குட்டிகளின் முன் சென்றருளினுர்.

**இறைவன் பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்தல்**

அங்ஙனம் நெருங்கி வருகின்ற தங்கள் தாயின் எதிரிலே பன்றிக்குட்டிகளும் விரைந்து ஓடிவந்து முட்டின; மோந்து பார்த்தன; முதுகிலே தாவி எட்டின; காலை விசைத்துப் பின் எறிந்து நிலத்தை வலிந்து வெட்டின; குதித்தன; விரைந்து ஓடின; மீண்டன. திருமாலாகிய பன்றியால் இன்னமும் காண்டற்கு அரிதாகிய பன்றி, மெய் சிலிர்க்கக் குட்டிகளைத் தழுவி மோந்தது. கருணைப் பெருக்கால் சுரந்த முலைப்பாலினை ஊட்டியது[1]; மிக்க வலியும் சிறந்த வெற்றியும் ஞானமும் பெருந்தகைமையும் பிற நற்குணங்களும் உண்டாகும் வண்ணம் அருள்புரிந்தது; பின்னர் அக் குட்டிகளுக்கு

---

1 சோமசுந்தரக்கடவுள் பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகிப் பாலளித்தத்திருவுருவம் மதுரைப் புதுமண்டபத்திலும், திருப்பரங்குன்றத்துத் துசஸ்தம்ப மண்டபத்திலும் அமைக்கப்பெற்றுள்ளது.

முகம் ஒன்றை மட்டும் பன்றி முகமாகவைத்து மற்றைய உறுப்புக்களனைத்தையும் மக்கள் உடலிலுள்ள உறுப்புக்களாக நல்கியது. இவ்வாறு செய்தருளிய சோமசுந்தரக் கடவுள் தாமெடுத்த பன்றி உருவத்தை விடுத்து மறைந்தருளினர்.

**இறைவனின் அருட்பெருமை**

[1] இவ்வுலகில் இறைவர் தாய்ப் பன்றியாகவந்து முலை கொடுத்து அறிவில்லாத பன்றிக் குட்டிகளை அறிவுடைய மக்களாகச் செய்து மேல் வரும் பிறவியையும் தூய்மை யாக்கினர். [2] எவ்வுலகத்திலும் எவ்வுயிர்க்கும் தாயும் தந்தையுமாகி நின்று காப்பவர் இறைவரே அல்லாமல் வேறு யாவர்? ஒருவரும் இல்லை.

இம்மை இப்பவத்(து) அன்னையாய் இனிவரு பவமுஞ்
செம்மை செய்(து)அசே தனத்தையுஞ் சேதனஞ் செய்தார்;
எம்மை யெப்பவத் தாயினும் எணைப்பல உயிர்க்கும்
அம்மை யப்பராய்க் காப்பவர் அவரலால் எவரே?

செய்யுள்—63
ஆகச் செய்யுள்—2255

---

1. இங்கே, "ஏனக் குருளைக்கு அருளினை போற்றி" (திருவாசகம் போற்றியகவல்) எனவும், "ஏவுண்ட பன்றிக் கிரங்கி ஈசன் எந்தை பெருந்துறை யாதி யன்று, கேவலங் கேழலாய்ப் பால் கொடுத்த கிடப்பறி வாரெம் பிரானு வாரே" (திருவாசகம் திருவார்த்தை) எனவும், "தாயாய் முலையைத் தருவானே" (திருவாசகம் ஆனந்த மாலை) எனவும் வரும் அடிகள் உன்னற்பாலன.

2. இங்கே, "எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க் கிங்கேஎன் றருள்புரியும் எம்பெருமான்" என வரும் திருஞான சம்பந்தர் தேவார அடிகள் கருதற்பாலன.

## 46. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

***அங்கயற்கண் அம்மையாரின் வினா***

முழுமுதற் கடவுளாகிய இறைவர் மறைந்தருளிய பின் பன்றிமுகக் குமாரர்கள் பன்னிருவரும் உதய சூரியர்கள் பன்னிருவர்கள் போல் விளங்கிப் பல கலைகளிலும் வல்லவர் களாய் ஒருசேரப் **பன்றி மலையில்** இருந்தார்கள். அங்ஙனம் அவர்கள் இருக்கும் நாளிலே, சோமசுந்தரக் கடவுளின் திரு வருளின் வகைகள் எல்லா உயிர்கட்கும் பொதுவாய் நின்று இன்பம் தருவன என்று ஞான நூல்கள் கூறும் உண்மையை உலகத்தார் அனைவரும் தெளிந்துய்ய அங்கயற்கண் அம்மை யார் இறைவனை நோக்கி, "எம்பெருமானே! கொடிய விலங்குகளெல்லாவற்றினும் மிகக் கொடியதாய் அறிவில்லா தனவாய் உள்ள பன்றிக் குட்டிகளுக்கு இரங்கி நீர் தாய்ப் பன்றியாகி முலை கொடுத்து முன்னை விலங்கின் அறிவைப் போக்கியருளியது என்னை!" என்று வினவினர்.

***இறைவர் அம்மையார்க்கு விடையருளல்***

அப்போது சோமசுந்தரக் கடவுள் அம்மையாரை நோக்கி, "சகல வேதங்களும் ஆகமங்களும் நம்மைச் [1] **சகல சீவதயாபரன்** என்று சொல்லுந் தகுதியால், சேதனப் பொருள் (அறிவுப் பொருள்) அசேதனப் பொருள் (அறிவில்லாத பொருள்) என்னும் இரண்டும் எமக்கு வேறல்ல; ஒருதன்மையனவே. அக் காரணத்தாலே தாயை இழந்து கொடிய பசியினால் கானிடைக் கிடந்து பற்றுக்கோடின்றி வருத்தமடைந்த பன்றிக் குட்டி களுக்கு இரங்கித் தாயாகி முலைகொடுத்து அவற்றைக் காத்தரு ளினோம். அதனால் அப்பன்றிக் குட்டிகள் அளவில்லாத வலிமை யையும் வெற்றியையும் கல்வியின் முதிர்வையும், ஞானத்தையும் பெற்றுக்கொண்டன. இனிமேல் அப் பன்றிமுகக் குமாரர்கள் இராசராச பாண்டியனுக்கு மந்திரிகளாக இருந்து பலவகை வளங்களையும் பெருக்கிப் பாசங்களை ஒழித்து நம்முடைய

---

1. சகல சீவதயாபரன் - எல்லா உயிர்களிடத்தும் ஒரே தன்மையான அருளையுடைய இறைவன் என்னும் பொருளுடையது.

பெருங்கணத்தவர்கள் ஆவார்கள்'' என்று விடைகொடுத் தருளினர்.

**பாண்டியன் பன்றிமுகக் குமாரர்களை மந்திரியாக்குதல்**

பின்பு சோமசுந்தரக் கடவுள் அன்றிரவு இராசராச பாண்டியனின் கனவில் தோன்றி, "அரசனே! பன்றி மலையிலே பன்றி முகமுடைய பன்னிரண்டு குமாரர்கள் இருக் கின்றனர்; அவர்கள் மிகுந்த அறிவினையுடையவர்கள். அவர்களை உனது அவையினுக்கு மந்திரிமார்களாகக் கொள்ளக் கடவை'' என்று திருவாய் மலர்ந்து மறைந்தருளினர்.[1] உடனே பாண்டியன் மகிழ்ச்சியுடையவனாய் விழித்தெழுந்து விடியற் காலையிலே மந்திரிகளை அழைத்து அக் கனவினை அறிவித்துப் பன்றி மலையின்மேல் வசிக்கும் பன்றிமுகவீரர்களை அழைத்து வருமாறு கட்டளையிட்டான். அமைச்சர்கள் பன்றிமலையினை அடைந்து அவர்களைக் கண்டு பாண்டியன் விருப்பத்தைக் கூறி வருமாறு வேண்ட, அப்பன்றிமுக வீரர்களும் பாண்டியன் திருமுன் வந்து வணங்கினர். பாண்டியன் எதிர்கண்டு அள வில்லாத மகிழ்ச்சியுற்று அவர்களுக்கு அமைச்சியல் உரி மையை அளித்துப் பல்வேறு வரிசைகளையும் தக்கவாறு கொடுத்துப் பழைய அமைச்சர்களின் பெண்களை அவர்களுக்கு மறைநூல் விதிப்படி திருமணமும் செய்வித்தான்.

**பன்றிமுக வீரர்களின் தன்மை**

பன்றிமுக வீரர்கள் பன்னிருவரும் பாண்டியனுக்குக் கவச மும் கண்ணும்போல ஒழுகினர்கள்; பன்னிரண்டு உடம்புக்கும் உயிர் ஒன்றே என்று அனைவரும் சொல்லும் வண்ணம் ஒற்றுமையுடையவர்களாய் வாழ்ந்து வந்தனர். ஐந்து வாய் களையுடைய பாம்பானது விழுங்கும் இறைபோன்று திடங் கொண்ட உள்ளத்தோடு கருமத்தை ஏற்று நடாத்துவர்;

---

1. இங்கே, "கருமுகிற்(கு) அணிநிறத் தழற்கட் பிறையெயிற்(று), அரிதரு குட்டி யாயபன் னிரண்டினைச், செங்கோல் முளையிட்(டு) அருள் நீர் தேக்கிக், கொலைகள(வு) என்னும் படர்களை கட்டுத், திக்குப் படரா ணைவேலி கோலித், தருமப் பெரும்பயிர் உலகுபெற விளக்கும், நாற்படை வன்னிய ராக்கிய பெருமான்'' என வரும் கல்லாட அடிகள் உன்னற் பாலன,

பாண்டியனது கல்விப் பொருளும் செல்வப் பொருளும் அவனுக்குப் பயன் அளித்தல் போலப் பயன் நல்கி மகிழ்ச்சி யொடு தொழில் புரிவர்; நல்ல பசுவின் பாலில் நறுந் தேன் கலந்தாற்போலக் கல்வியறிவோடு நுண்ணறிவும் பெற்று இருந்தனர்; சோர்வில்லாத மொழிகளாலே பகை வர்களின் மனமும் களிப்படையுமாறு பேசிவந்தனர்; பிற ருடைய சொற்களிலுள்ள குற்றத்தை விடுத்து அவற்றின் பயனைமட்டும் ஆராய்ந்துகொள்ளும் வல்லமையுடையவராயிருந் தனர்; "நாம் பழமையுடையோம்; அரசனால் மதிக்கப்பட் டோம்" என்று களிப்படையாமல், அருகில் நின்று ஏவியவற் றைச்செய்யும் சிறுவர்களைப்போல ஒருசிறை ஒதுங்கிநடந்தனர்; அரசனால் விரும்பப்பட்ட பொருள் எதுவோ அதனைச் சிறிதும் தாம் விரும்பாது விடம்போல வெறுக்கும் இயல்பினர்; அரசனை அனல்போலக் கருதி அணுகாமலும் நீங்காமலும், தீக்காய்வார்போல நடந்துவந்தனர்.

நல்லாவின் பாலின் நறுந்தேன்கலந் தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லால் அடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனாய்ந்து கவர வல்லார்.

பழையேம் இறையுட் கொளப்பட்டமென் றேமாப்(பு) எய்தார்
உழையேவல் செய்யுஞ் சிறார்போல ஒதுங்கி வேந்தன்
விழைவே(து) அதனை விடம்போல வெறுத்து வெஃகார்
அழல்போல் அணுகார் அகலார்நிழல் அன்ன நீரார்.

**பன்றிமுக வீரர்களின் ஆட்சித் திறமை**

அரசனது உடல் நிழல்போன்று விடாது நிற்கும் அமைச்ச ராகிய பன்றிமுக வீரர்கள் தங்கள் ஆட்சியில், குடி மக்கள் தாம் [1] மறுக்கப்பட்ட செயல்களை விலக்கி நல்வழியில் நடத்தலால் அவர்களைத் தண்டித்து வாங்கும் பொருளும், பகைவர்கள் தாம் ஏவிய ஏவலைக்கேட்டு ஒழுகியதால் அவர்களை

---

1. மறுக்கப்பட்ட செயல்கள் – அவை தீக்கொளுத்தல், நஞ்சிடுதல் கருவியால் கொல்லுதல், திருடுதல், வழிப்பறித்தல், சூறையாடுதல், பிறர் மனைவியை விரும்புதல் முதலியனவாம்.

வென்று பெறும் பொருளும் இல்லையாயிற்று. குடிமக்கள் விளை பொருளில் ஆறிலொரு கடமை இறுக்கும் இறைப் பொருள் ஒன்றே அவர்கள் பாண்டியனுக்கு ஈட்டும் செல்வ மாகும்.[1] பாண்டியன் மனத்தில் கொண்ட கொள்கைகள் தங்கள் நெஞ்சினுள்ளே கண்ணுடியின் நிழல்போல் விளங்க, அவற்றை நன்ருக ஆய்ந்து அறநெறியிற்பட்டனவாயின் செய்வர்; அற நெறியிற் படாதனவாயின் தங்கள் செல்வத்திற்கும் உயிருக்கும் இறுதிவரினும் அவற்றைச் செய்ய மனத்திலும் கருதார்.

**பன்றி வீரர்கள் சிவபதம் அடைதல்**

இவ்வாறு பன்னிருவரும் ஈகையும், அறமும், புகழும் பாண்டியனுக்கு நாடோறும் பெருகுமாறு எட்டுத் திசைகளி லும் வெற்றி உண்டாகச்செய்து வாழ்ந்திருந்தனர். சிலகாலஞ் சென்றபின் சிவலோகத்தை அடைந்து சிவகணத் தலைவர்க ளாயினர்கள். இராசராச பாண்டியனும் இந்திர பதவியை அடைந்து வீற்றிருந்தான்.

செய்யுள்—18

ஆகச் செய்யுள்—2273

---

1. இன்னும் உடையாரின்மையின் தானே வந்துற்ற பொருளும், சுங்கப் பொருளும், திறைப் பொருளும் அரசர்க்குரிய பொருள்களாம். இதனை, "உறுபொருளும் உல்கு பொருளுந்தன் னென்னர்த், தெறு பொருளும் வேந்தன் பொருள்" எனவரும் திருக்குறளால் அறியலாம்.

## 47. கரிக்குருவிக்கு உபதேசஞ்செய்த படலம்

**கரிக்குருவியின் துன்பம்**

இராசராச பாண்டியன் இந்திர பதவியைப் பெற்றபின் அவன் குமாரனுகிய **சுகுண பாண்டியன்** என்பான் வன்மை மிகுந்த ஆண் சிங்கத்தைப்போல் விளங்கி, உயிர்களின் துன்பத்தைப் போக்கிச் செங்கோல் செலுத்திவரும் நாளிலே, வலிமை மிக்க ஒருவன் முற்பிறவியில் எத்துறையிலும் நல்லறமே புரிந்து, சிறிது பாவமும் செய்தமையால் இப்பிறவியில் **கரிக்குருவியாய்** வந்து பிறந்தான். அக்கரிக்குருவியினுக்குக் காகம் முதலான பறவைகள் கூற்றுவனைப்போல் இடையூற்றினை விளைத்து வந்தன. அதனுல் அது குருதி வடிகின்ற தலையினையுடைய தாகிப் பறவைகளனைத்திற்கும் எளிய பறவையாய், அவ்விடை யூற்றினுக்கு அஞ்சி நகரத்துள் இருந்து, பின் அங்கிருத்தற்கும் பயந்து பெரிய காட்டினுட்சென்று, வழி அருகின் ஒரு புறத்தில் நிற்கும் பூத்துத் தழைத்த ஒரு மரத்தின் மேல் மிகுந்த நாணத்தோடு சோர்ந்து பெருமூச்செறிந்துகொண்டு அமர்ந்திருந்தது.

**கரிக்குருவி நல்லுரைகேட்டு மதுரையடைதல்**

அப்பொழுது திருநீறும் உருத்திராக்க மாலையும் அணிந்த வரும், உள்ளும் புறமும் தூய்மையுடையவரும், கையிலே குடை பிடித்தவரும், தீர்த்த யாத்திரை செய்துவருபவருமாகிய ஒரு **சிவபத்தர்** அம்மரத்தின் நிழலில் வந்திருந்துகொண்டு, அங்குள்ள சிலரை நோக்கி, "யாவர்க்கும் நற்பயனை நல்கும் **தலம் மதுரை ; தீர்த்தம் பொற்றமரை ; மூர்த்தி சோமசுந்தரக் கடவுள்**" என்று பெரியோர்கள் கூறுவர். இங்ஙனம் ஒரேயிடத்தில் மூவகைச் சிறப்பும் நிறைந்த இடம் இந்நில வுலகில் எங்கும் இல்லை. இம் மூன்றில் ஒன்றே மற்றைப் பகுதிகளில் எஞ்ஞான்றும் சிறந்து விளங்கும். மதுரையிலோ இம்மூன்றும் சிறப்புற்று விளங்கும். அதனுல், மதுரைக்கு இணையான தலம் வேறில்லை. சோம சுந்தரக் கடவுள் தன்னை வழிபடும் அடியார்களுக்கு எளிய வராகி, அவர்கள் விரும்பிய வரங்களனைத்தையும் இப்பிறவியி லேயே தந்தருளுவர். மற்றைத் தலத்திலுள்ள மூர்த்திகளோ

மறு பிறப்பிலன்றி இப்பிறப்பில் நல்கார். ஆதலால் விசேட மூர்த்தி சோமசுந்தரக் கடவுளே ஆவர்'' என்று போதித்தார். அம்மரக்கொம்பில் சாம்பியிருந்த கரிக்குருவி அதைக் கேட்ட வுடனே ஞானம் பெற்றது; அதனால் தான் பறவையாய்ப் பிறந்த காரணமும், பிறவும் தெளிந்தது; "நான் இப்பிறவியை ஒழிப்பதற்கு இச் சிவபத்தர் இங்குச் சொல்லியதே உறுதி'' என்று கருதித் துணிந்து அக் காட்டினின்றும் நீங்கி மதுரைப் பதியை அடைந்தது.

**கரிக்குருவி சோமசுந்தரக் கடவுளை வழிபடுதல்**

பின்பு, கரிக்குருவி பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் சோமசுந்தரக் கடவுளை வலஞ்செய்து அன்புடனே மனத் தினாலே பூசித்து வணங்கியது. இவ்வாறு மூன்று நாட்கள் கழிந்தபின் மீனாட்சியம்மையார் சோமசுந்தரக் கடவுளை நோக்கி, "ஐயனே! இக் கரிக்குருவி செய்யும் வழிபாடு எதன்பொருட்டு? இதன் வரவு யாது?'' என்று வினவினார். அண்ணலாரும் அக் கரிக்குருவியின் வரலாறு அனைத்தையும் முறைப்படி அம்மையாருக்கு அருளிச்செய்தார்; பிறகு கரிக் குருவியின்மேல் திருவருணோக்கம் வைத்து, முன்னாளிலே மார்க்கண்டேய முனிவருக்கு அழிவற்ற தன்மையைக் கொடுத்துக் கூற்றுவனை மாய்த்த உண்மை ஞானமாகிய **மிருத்திஞ்சய** மந்திரத்தை உபதேசித்தருளினார்.

**கரிக்குருவி இறைவனை வேண்டி வரம் பெறல்**

சோமசுந்தரக் கடவுள் உபதேசித்தருளிய மிருத்திஞ்சய மந்திரத்தைச் செவியிலேற்றவுடன் பிறவித் துன்பமொழிந்து கரிக்குருவி சிற்றறிவு நீங்கிப் பேரறிவு பெற்றுச் சிவபெரு மானின் திருவடிகளை மனத்திற் கொண்டு,

எண்ணி லாவுயிர்க்(கு) இறைவ போற்றி! வான்
தண்ணி லாமதிச் சடில போற்றி! என்
புண்ணி யப்பயன் போற்றி! அங்கயற்
கண்ணி நாத! நின் கருணை போற்றியால்!

என்று துதித்துக்கொண்டு, "எம் பெருமானே! அறிவின்றிச் செய்த தீவினையினாலே நின் கருணைத் திறத்தை அறியாது

அழியா நிற்கும் அடியேனையும் ஆளல் வேண்டுமோ? எளியவர் எங்குள்ளார் என்று தேடித் தேடி அலைந்து, அவர்மீது அருள்புரிதலே உமது திருவருளின் தன்மையாகும்; அடியேன் முற்பிறப்பிலே செய்த நல்ல அறத்தினையுடைமையால் இப்பிறப்பிலே இம் மந்திரத்தை அடியேனுக்கு உபதேசித்தருளினீர்; இது மறுமையில் சிவகதி அடைவதற்குக் காரணமாயிற்று. ஆதலால், அடியேன் மும்மையினும் நற்பேறு அடைந்தேனாயினேன்.[1] ஆயினும் ஐயனே! அடியேனுக்கு ஒரு குறை உளது. கொடிய பறவைகளெல்லாம் அடியேனைத் துன்புறுத்திவருத்துகின்றன. கண்டவரெல்லாம் நகைக்கும்படி எளியனாயினேன்'' என்று விண்ணப்பஞ் செய்தது. அப்போது சோமசுந்தரக் கடவுள், ''அப் பறவைகளுக்கெல்லாம் நீ வலியை (**வலியான்**) ஆகக் கடவாய்'' என்று திருவாய்மலர்ந்தருளினார். பின்னும், அக் கரிக்குருவி எம்பிரானை வணங்கி, ''அடியேனுக்கு இன்னும் ஒரு வரந்தரல் வேண்டும்; தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய **வலியான்** என்பது அடியேன் மரபிலுள்ள பறவைகளுக்கெல்லாம் விளங்க வேண்டும்; எஞ்ஞான்றும் அப் பறவைகள் தேவரீர் உபதேசித்த மந்திரத்தை ஓதியோதி உய்தல் வேண்டும்; அருள் செய்வீராக'' என்று இரந்து வேண்டியது. சோமசுந்தரக் கடவுள், ''அங்ஙனமே ஆகக் கடவது'' என்று கூறியருளி, [2]மூன்றெழுத்தினால் முடிந்த அம்மந்திரத்தைத்தெய்வம், இருடி, சந்தம் என்பவற்றுடன் எடுத்தல், படுத்தல், நலிதல் என்ற மூவகையோசையோடும் தெளிவித்தார்[3]. கரிக்குருவி குரு

1. இங்கே, ''சென்ற காலத்தின் பழுதிலாத் திறனும் இனியெதிர் காலத்தின் சிறப்பும், இன்றெழுந் தருளப்பெற்ற பேறிதனால் என்றைக்குந் திருவரு ளுடையோம்'' என வரும் பெரிய புராணச்செய்யுட் கருத்து ஒற்றுமையுறுதல் காண்க.

2. மூன்றெழுத்தினால் முடிந்த மந்திரம் - இது திரியம்பகம் என்னும் வேத மந்திரம் ஆகும்.

8. இங்கே, ''கருங்குரு விக்கன் றருளினை போற்றி'' (திருவாசகம் - போற்றித்திருவகவல்) எனவும், ''இவ் வுலகுயிர் அளித்த, பஞ்சின் மெல்லடிப் பாவைகூ றுகிக், கருங்குரு விக்குக் கண்ணருள் கொடுத்த. வெண்டிரு நீற்றுச் செக்கர் மேனியன்'' (கல்லாடம்) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

மொழியை இடைவிடாது பயின்றது[4]. தன் சாதிப்பறவைகளும் தன்னைப்போலவே சிவபெருமான் அருளிய வலியால் பறவைகளுக்கெல்லாம் வலியனவாகி **வலியான்** என்னும் காரணப் பெயரைப் பெற்று உலகிலே சிறப்புற்றிருந்தன. கரிக்குருவி, சிவபெருமானுடைய திருவடியை அடைந்தது.

**இறைவனிடத்து அன்புடையார் தன்மை**

இக் கரிக்குருவி தான் வருந்தித் தவஞ் செய்து பெற்ற வரத்தினைத் தன்னைப்போல் தன் சுற்றமும் எளிதாக அடையும்படி வேண்டிப் பெற்றது. அதனால், "**உலகத்திலே தக்கான் ஒருவன் வாழத் தன் கிளை வாழும்**" என்னும் பழமொழி விளங்கிற்று.

இறைவனின் திருவடியிடத்து அன்பு கொள்ளாதவர்களைப்போன்ற கொடியவர்கள் இல்லை; இறைவன் திருவடியிடத்து அன்பு கொண்டவர்களைப்போன்ற வலிமை பெற்றவர்களும் இல்லை. இறைவன் திருவடியிடத்து அன்பின்மையால் எளிய பறவையாய்த் திரிந்த கரிக்குருவி, பின் இறைவன் திருவடியிடத்து அன்பு கொண்டதால் எல்லாப் பறவைகளுக்கும் வலிய பறவையாய் விளங்கலாயிற்று.

ஈசனடிக்கன் பில்லார்போல் எளியார் இல்லை யாவர்க்கும்
ஈசனடிக்கன் புடையார்போல் வலியார் இல்லை யாவர்க்கும்
ஈசனடிக்கன் பின்மையினல் எளிதாய்த் திரிந்த இக்கயவாய்
ஈசனடிக்கன் புடைமையினல் வலிதாயிற்றே யெவ்வுயிர்க்கும்.

செய்யுள்—23

ஆகச் செய்யுள்—2296

---

4. இங்கே, "ஆற்றல்வேண் டுநர்எலாம் அரனை அன்பினால், போற்றி இம்மனுப் புகல்கென்னல் போன்றமுன், சாற்றிய மந்திரந் தன்னைக் கார்க்குரீஇ, வீற்றுவீற் றுவிருந்(து) உரைத்தல் மேயின" என வரும் காஞ்சிப் புராணம் பன்னிருநாமப் படலச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

## 48. நாரைக்கு முத்தி கொடுத்த படலம்

### நாரையின் வாழ்க்கை

வையை நதி சூழ்ந்த பாண்டி நாட்டிலே ஒரு சார் தென் திசையில் மாடங்கள் நிறைந்த பதி ஒன்று உள்ளது. அங்கு, யாழிசை போல இசை பாடும் வண்டுகளுக்குத் தேனினை அளிக்கின்ற தாமரைமலர்கள் நிறைந்த தடாகம் ஒன்று உள்ளது. அத் தடாகத்தில் வாழும் மீன்கள் அனைத்தையும் உண்டு அத்துறையின்கண் சிவந்த கால்களைக் கொண்ட ஒரு நாரை தங்கி வாழ்ந்து வந்தது.

### அச்சோ தீர்த்தம்

சிலகாலம் மழையின்மையால் அத் தாமரைத் தடாகம், அதன் கரையின்கண் தங்கிய நாரையின் இருவினைக் கடலும் வறக்குமாறுபோல நீர் வற்றிப்போயிற்று. வெள்ளிய சிறைகளையுடைய அந் நாரையும் இரையை விரும்பி அங்குநின்றும் நீங்கி விரைந்து சென்று குற்றமற்ற முனிவர்கள் வாழும் ஒரு காட்டிலே சோர்ந்து விழுந்தது. அக் காட்டினிலே சீவன் முத்தர்களான முனிவர்கள் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் கூட்டத்திலே சிவானந்தக் கடலில் மூழ்கிச் சிவமாந் தன்மை பெற்ற **சத்தியன்** என்னும் பெயருடைய தவமுனிவர் ஒருவர் தங்கியிருந்தார். அங்கு ஒரு கூப்பிடு தூரம் எல்லை அளவு கொண்ட சதுரமாய்க் கட்டப்பட்டுச் சுற்றிலும் படித்துறையமையப் பெற்றுக் கரையிலே **சந்தியாமடம்** உடைய ஒரு தடாகம் இருந்தது; அதனைச் சூழ்ந்து புறத்தே மணம் வீசும் சண்பகமும், பாதிரியும், வேங்கையும், வஞ்சியும், குராவும், மராவும், முருக்கும், மருதும், பிறவும் நிறைந்திருந்தன. அத் தடாகத்தினை **'அச்சோ தீர்த்தம்'**[1] என அழைப்பர். அத் தடாகத்தின் கரையில் முன்னே இரை விரும்பி வந்த நாரை வந்து தங்கியது.

### நாரை கைக்கொண்ட விரதம்

உண்மைப் பொருளை ஆராய்ந்துணர்ந்த முனிவர்கள் அத் தடாகத்திலே மூழ்கி மூழ்கி மேலே எழுந்தோறும்

1. இஃது, 'அதோ தீர்த்தம்' எனவும் பெயர் பெறும்.

அவர்களின் தோட்புறத்திலே சாய்ந்து கிடக்கும் சடைக் கற்றையில் மீன்கள் பாய்ந்து பாய்ந்து புரளுதலை நாரை பார்த்துக்கொண்டிருந்தது. "இங்கு இம் முனிவர்களின் திருமேனியைத் தீண்டுவதற்கு இம்மீன்கள் எத்துணைத் தவம் செய்தனவோ! இம் மீன்களை நாம் இரையாகக் கொள்ள லாகாது" என்று கருதி இரையை வெறுத்து அங்கு இருந்தது.

**நாரை மதுரை நகரை அடைந்து வழிபடல்**

ஒப்பற்ற தவம் புரியும் முனிவர்களனைவரும், அத் தடாகத்தில் நீராடிக் கரையேறி நித்திய கருமம் முடித்துச் சந்தியா மடத்தில் அமர்ந்து, சோமசுந்தரக் கடவுளின் மதுரைப் புராண நூலினை ஓதி வருவாராயினர். அப் புராணத்திலே சொக்கலிங்க மூர்த்தியின் சிறப்பினையும், மதுரைத் தலத்தின் சிறப்பினையும், பொற்றாமரைத் தீர்த் தத்தின் சிறப்பினையும், சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களையும், அம் மூர்த்தி தலம் தீர்த்தங்களை அடைந்தவர்களுக்கு அவர் எளிதில் வந்து அருள் புரிவார் என்னும் தன்மையையும் எடுத்துச் சொல்ல அங்கே தங்கி யிருக்கும் நாரை அவற்றைக் கேட்டது. உடனே அந் நாரை அறியாமை நீங்கப் பெற்று வினைத் தொடர்பை அறுத்து, மெய்யுணர்வு பெற்றுச் சிவ பரஞ் சுடரின் திருவடிக்கண் அன்பு "வா வா" என்று இழுக்கப் புறப்பட்டு மதுரைத் திருநகரை அடைந்தது; பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடி, எட்டு யானைகளால் சுமக்கப்பட்ட விண்ணிழி விமா னத்தின்கண் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை வணங்கி வலம்வர அவ்விறைவன் அருள்பொழியும் திருக்கண்ணால் நோக்க,[1] அவரது அருளுருவைத் தரிசித்து, அவர் திருமுன் இருந்துகொண்டு அவருடைய திருமேனியை மனத்தினுள்ளே தியானஞ் செய்தது.

---

1. இறைவன் அருட் கண்ணால் நோக்க அதனால் தரிசித்தலை, "கண்ணு தலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி, எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி" (திருவாசகம் - சிவபுராணம்)' என வரும் அடி களால் அறியலாம்.

### இறைவன் நாரைக்கு அருள்புரிதல்

இவ்வாறு நாரைக்குப் பதினைந்து நாட்கள்வரை நியமமாக வழிபாடு நடைபெற்றது. பதினாறும் நாள் வழக்கம்போல் நாரை பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடப் புகுந்தபோது பசியினாலே மிக வருந்தி அங்குள்ள ஒளிவிடும் வேலினைப் போலத் துள்ளுகின்ற மீன்களைப் பிடித்து உண்ணும் பொருட்டுச் சிறிது நினைந்தது. பின்பு சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் அறிவு வரப்பெற்று, "ஐயையோ! இப் புண்ணிய தீர்த்தத்தில் வாழும் மீன்களைப் புசித்தற்கு எனக்கு இப்போது ஆசை உண்டாயிற்றே! இங்ஙனம் ஆனால் இப் பிறவித் துன்பம் எப்பொழுது ஒழியுமோ?" என்று எண்ணிப் பெருந்துயரில் ஆழ்ந்தது; மீண்டும் சோமசுந்தரக் கடவுளின் திருவடியின்மீது கொண்ட அன்பினைத் துணையாகக் கொண்டு, மீன்களை உண்ணாது அங்கே தங்கியிருந்தது. அப்போது தேவர்களும் வேதங்களும் செய்யும் வழிபாட்டிற்கும் எட்டாதவராகிய சோமசுந்தரக் கடவுள், அந் நாரை தன் மனத்தில் நினைத்த வடிவமாகத் தோன்றி, "எமக்கு இனியாய்! உனக்கு வேண்டும் வரம் யாது? சொல்" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

### நாரை வரம் பெறுதல்

சிவந்த கால்களையுடைய நாரை இறைவன் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கி, "ஐயனே! இப் பிறவியைப் போக்கி அடியேனை நின் மெய்யன்பர் வாழும் சிவலோகத்திலே சேர்த்துக்கொள்ளவேண்டும். மற்றொன்றும் வேண்டும்; கருணை வள்ளலே! அடியேன் மரபில் உள்ளனவும் மற்றையவுமான பறவைகள் புனிதம் நிறைந்த இத் தீர்த்தத்தில் உள்ள மீன்களைப் புசிக்கின் எக்காலமும் நீங்காத பாவம் வந்து அவற்றைச் சாரும். ஆதலினால், இத் தீர்த்தத்தில் மீன்கள் எக்காலத்தும் இல்லாமொழிதற் பொருட்டும் ஒரு வரம் அருள வேண்டும்" என்று வேண்டி நின்றது. அப்போது வெள்ளி மன்றினுள் ஆடியருளும் பெருமானும் அப்படியே வரங் கொடுத்து மறைந்தருளினார்.

### நாரை முத்தியடைதல்

நாரையானது நான்கு புயங்களும், மூன்று கண்களும் பொருந்திய சிவ வடிவம் பெற்று வானுலகத்தோர் பெய்த மலர் மாரியில் மூழ்கிய வண்ணம், விமானத்தில் ஏறி, தேவ துந்துபிகள் முழங்கச் சிவலோகத்தை அடைந்து, நந்தி கணங்களுள் ஒன்ருய்த் தங்கியது.

அன்று முதல் இன்று வரையில் பொற்ருமரைத் தீர்த்தத்தில் ஓடித் துள்ளி விளையாடும் மீன்களேயன்றி நீர்வாழ் பிற உயிர்களும் சிறிதுமின்றி ஒழிந்தன.

### இறைவன் அன்பர்க்கு எளியன்

தன் மரபினைச் சேர்ந்த பறவைகளேயன்றிப் பிற பறவைகளும் தன்னைப்போல் நற்கதி அடையும்படி இறைவனிடத்து வரம் வேண்டியது இந்த நாரை! இதன் அன்பினில் வியப்புளதோ? அன்றி அதற்கு எளிவந்த இறைவன் அருளின்கண் வியப்புளதோ? எது வியக்கற்பாலது! அன்பர்களுக்கு இன்ப வடிவாய் விளங்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவருள் அன்பர்களின் அன்புக்கு மிக எளிதே ஆகும்.

### சுகுண பாண்டியன் சுவர்க்கம் அடைதல்

சுகுண பாண்டியன் தன்னுட்டில் பாவமாகிய களையைக் களைந்து, தருமமாகிய பயிரை வளர்த்து, அதன் பயனை நுகரும் பொருட்டுச் சுவர்க்கலோகத்தை அடைந்திருந்தான்.

செய்யுள்—25

ஆகச் செய்யுள்—2321

**கூடற் காண்டம் முற்றிற்று**

———

உ

செந்திலாண்டவன் துணை

திருச்சிற்றம்பலம்

# மூன்றாவது

# திருவாலவாய்க் காண்டம்



## 49. திருவாலவாயான படலம்

### சோமசுந்தரக் கடவுள் துதி

பாயுடையார் விடுத்தபழி அழல்வழுதி
உடல்குளிப்பப் பதிகம் ஓதும்
சேயுடைஆ ரணந்திளைக்குஞ் செவியுடையார்
அளவிறந்த திசைகள் எட்டும்
தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார்
விடவரவஞ் சுற்றும் ஆல
வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல்
வேண்டுவ(து)இம் மனித யாக்கை.

### அங்கயற்கண் அம்மையார் துதி

வேதனெடு மாலாதி விண்ணுடர்
மண்ணுடர் விரத யோகர்
மாதவர்யா வருங்காண மணிமுறுவல்
சிறி(து)அரும்பி மாடக் கூடல்
நாதனிரு திருக்கரந்தொட்(டு) அம்மியின்மேல்
வைத்தகயல் நாட்டச் செல்வி
பாதமலர் எழுபிறவிக் கடல்நீந்தும்
புணையென்பர் பற்றி லாதோர்.

**ஊழியின் முடிவு**

மேருமலையினை வென்ற திரண்ட தோள்களையுடைய சுகுண பாண்டியனுக்குப்பின் சித்திரவிரதன், சித்திரபூடணன்,

சிந்திரத்துவசன், சித்திரவருமன், சித்திரசேனன். சித்திர விக்கிரமன், இராசமார்த்தாண்டன், இராச சூடாமணி, இராச சார்த்தூலன், துவிசராச குலோத்தமன், ஆயோதனப் பிரவீணன், இராச குஞ்சரன், பரவிராச பயங்கரன், [1] உக்கிர சேனன், சத்துருஞ்சயன், வீமரதன், வீம பராக்கிரமன். பிரதாப மார்த்தாண்டன், விக்கிரம கஞ்சுகன், சமரகோலா கலன், அதுல விக்கிரமன், அதுல கீர்த்தி என்னும் இருபத் திரண்டு மைந்தர்கள் வழிவழியாகத் தோன்றி இந் நிலவுலகை அரசாண்டார்கள். **அதுல கீர்த்தி** என்னும் பாண்டியனுக்குப் பின் அவன் குமாரனாகிய **கீர்த்திபூடண பாண்டியன்** அரசுபுரியும் நாளிலே ஊழிக்காலம் (பிரளய காலம்) வந்தது. அப்பொழுது கருங்கடல் ஏழும் கரைகடந்து ஆர்த்துப் பொங்கி ஒருங் கெழுந்து வானமும், எட்டு யானைகளும், எட்டு மலைகளும், சக்கரவாளகிரியும் நிலைகுலையும்படி உலகத்தை அழித்தன.

**ஊழியிலும் அழியாதவை**

அப் பெரிய கடல் வெள்ளத்திலே மூழ்கி அழிவில்லாத எப் பெரிய வுலகமும் அழிந்தது. ஏழு தீவுகளும் அழிந்தன. அவற்றிலே தங்கிய அசையும்பொருள்களும் அசையாப்பொருள் களும் அழிந்தன. நீண்ட கொடுமுடியினையுடைய மலைகளும் அழிந்தொழிந்தன. ஆனால் **அங்கயற்கண் அம்மையின் திருக் கோயிலும், விண்ணிழி விமானமும், பொற்றாமரைத் தீர்த்தமும், இடப மலையும், யானை மலையும். நாக மலையும், பசுமலையும், பன்றி மலையும்** அழியாதிருந்தன.

**உலகத் தோற்றம்**

பிரளய நீர் வற்றியது. சிவபெருமான் முன் போலவே உலகத்தைப் படைத்துத் தேவர்களையும் மக்களையும் பறவை களையும் விலங்குகளையும் படைத்துச் **சந்திரன் சூரியன் அக்கினி** என்னும் மூவருடைய குலத்தினின்றும் முன் போலவே தமிழ் வேந்தர் (சேர சோழ பாண்டியர்) மூவரையும் படைத் தருளினார்.

---

1. இந்த உக்கிர சேனனுக்குப் பின் மகாசேனன் என்ற ஒருவனைக் கூட்டி இருபத்துமூன்று பாண்டியர் பரம்பரை என்று ஆலாசிய மான்மியம் கூறுகின்றது.

**வங்கியசேகர பாண்டியனின் ஆட்சிமுறை**

பின்னர் சந்திரன் மரபாகிய பாற்கடலுள் அறுபத்து நான்கு கலைகளோடும் விளங்கித் தோன்றும் முழுமதிபோல **வங்கிய சேகர பாண்டியன்** என்னும் அரசன் தோன்றினன். அவன் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலைச் சூழ அழகிய சிறுநகரம் ஒன்றை அமைத்து, அதில் இருந்துகொண்டு அரசு நடாத்தி வந்தான். அவன் மனு வழியே செங்கோல் செலுத்தினமையால் கலி என்னும் பகைவன் புறங்காட்டி ஓடத் தன்னாடு எங்கும் பல வளங்களைச் சுரக்க, மக்கள் நாடோறும் பெருகினர்கள். அங்ஙனம் பெருகிய மக்களெல்லாம் வசித்தற்கு இடம் போதாமையினாலே வங்கிய சேகர பாண்டியன் திருக்கோயிலை யடைந்து சோமசுந்தரக் கடவுளை வணங்கி நின்று, "எம்பெருமானே! நின் அருள் வலியினாலே இந்நிலப் பொறையைச் சுமக்கின்றேன்; இப்போது அடியேனுக்கு நேர்ந்திட்ட ஒரு குறையைப் போக்குதல் வேண்டும்; இவ்வளவு குடி மக்களும் இருக்கத்தக்கதாக ஒரு நகரினை அமைக்கவேண்டும். இந் நகரத்துக்கு ஆதியிலே வரையறுக்கப்பட்ட எல்லையைக் காண்கிலேன். ஆதலால் இன்றைக்கு அதனை யான் அறியுமாறு காட்டியருள்க" என்று இரந்து வேண்டினன்.

இத்தனை மாக்களும் இருக்கத் தக்கதாப்
பத்தனம் காணஇப் பதிக்கண் ஆதியே
வைத்தறை செய்திடும் வரம்பு காண்கிலேன்;
அத்த!மற்(று) அதனையின்(று) அறியக்காட் டென்றான்.

**இறைவன் தம் திருக்கரத்துப் பாம்புக்குக் கட்டளையிடல்**

அப்பொழுது நுண்ணிய பொருளினும் நுண்ணியவரான சோமசுந்தரக் கடவுள் விண்ணிழி விமானத்தினின்றும் எழுந்து, பாண்டியனது அன்பிற்கு எளிய சித்த மூர்த்தியாகி - அறமும் அருளுமாய கடலாகி வருவாராயினர். அச் சித்த மூர்த்திகள் பாம்பினாலே அரைஞாண், கோவணம், பூணூல், சன்னவீரம் (வெற்றி மாலை), குழை, குண்டலம், பாதகிங்கிணி, கங்கணம் என்பவற்றைத் தாங்கி மகாமண்டபத்தின் பக்கத்

திலே வந்து நின்று, தமது திருக்கரத்திலே கங்கணமாகக் கட்டிய பாம்பைப் பார்த்து, "நீ இப் பாண்டியனுக்கு இந் நகரத்தின் எல்லையை அளந்து காட்டுக" என்று பணித் தருளினர். பாம்பு அவரை அடிவணங்கி, "எம்பெருமானே! இந் நகரம் அடியேன் பெயரினுல் விளங்கும்படி அருள்புரி வாயாக" என்று பிரார்த்தித்தது. கருணைக் கடலாகிய சிவபெருமான் "அங்ஙனமே ஆகுக" என்று அருளினர்.

**பாம்பு மதுரை மாநகர எல்லையைக் காட்டுதல்**

உடனே பாம்பு விரைந்து கிழக்குத் திக்கிலே சென்று வாலை நீட்டி, நகருக்கு வலமாக நிலத்திற் படிந்து உடலை வளைத்து வாலைத் தனது வாயில் வைத்துப் பாண்டியனுக்கு எல்லையைக் காட்டிவிட்டுத் திரும்பிப் போய்ச் சித்தமூர்த்தி களின் திருக்கரத்தின்கண் கங்கணமாயிற்று, சித்தமூர்த்தி களும் தமது திருக்கோயிலின்கண் எழுந்தருளினர்.[1]

கீட்டி சைத்தலைச் சென்றுதன் கேழ்கிளர் வாலை
நீட்டி மாநகர் வலம்பட நிலம்படிந்(து) உடலைக்
கோட்டி வாலைவாய் வைத்துவேற் கொற்றவற்(கு) எல்லை
காட்டி மீண்(டு)அரன் கங்கண மானது கரத்தில்.

**பாண்டியன் மதுரை மாநகர்க்கு எல்லை கட்டுதல்**

பின்பு வங்கிய சேகர பாண்டியன், பாம்பு வளைந்து எல்லை கோலியபடியே சுவர் எடுத்துச் சக்கரவாளகிரி என மதில் கட்டுவித்துத் தெற்கு வாயிலுக்குத் திருப்பரங்குன்றமும், வடக்கு வாயிலுக்கு இடப மலையும், மேற்கு வாயிலுக்குத் திருவேடகமும், கிழக்கு வாயிலுக்குத் திருப்பூவணமும் எஞ் ஞான்றும் எல்லையாக அமைத்தான்.

தென்றிசைப்பரங் குன்றமும் வடதிசை இடபக்
குன்ற முங்குடக்(கு) ஏடக நகரமுங் குணபால்
பொன்ற லங்கிழித் தெழுபொழில் பூவண நகரும்
என்று நாற்பெரு வாயில்கட்(கு) எல்லையா வகுத்தான்.

---

1. இங்கே, "குரவரும்(பு) உடுத்த வாலெயிற்(று) அழல்விழிப் பகுவாய்ப் பாம்பு முடங்க லாக, ஆலவாய் பொதிந்த மதிமுடித் தனிமுதல்" என வரும் கல்லாட அடிகள் கருதற்பாலன.

அப் பெருமதிலை **ஆலவாய் மதில்** என்று கூறுவர்; அந்த நகரமும் எஞ்ஞான்றும் **ஆலவாய்** என்னும் பெயரைப் பெறுவதாயிற்று.

**பாண்டியன் நகரை அமைத்தல்**

பாண்டியன் அந்நகரை முன்போல ஒழுங்கு செய்தான். கொடிகளையுடைய நீண்ட திருமதிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும். திருவீதியும், பூம்பொழில்களும், இவை போன்ற பிறவும் புதியனவாக அமைத்தான்; சோமசுந்தரக் கடவுளுக்குப் புதிய இரத்தின கவசமும், இரத்தின கிரீடமும், வெவ்வேறான இரத்தினாபரணங்களுஞ் செய்து சாத்துவித்தான்.

**பாண்டியனின் ஆட்சிச் சிறப்பு**

அத்திருவாலவாய் நகரத்திலே பலவகைப்பட்ட குடிகளின் பரப்பு அனைத்தையும் குடியேற்றி அளகாபுரியினும் சுவர்க்கத்தினும் சிறக்க வளங்களைப் பெருக்கி, முன்னர்ப் புகழ்பெற்று விளங்கிய [1] **குலசேகர பாண்டியனைப்போல** வந்த வங்கிய சேகர பாண்டியன் அரசு செய்துகொண்டிருந்தான்.

பல்வ கைப்பெருங் குடிகளின் பரப்பெலாம் நிரப்பிச்
செல்வ வானவன் புரந்தரன் புரத்தினுஞ் சிறப்ப
மல்லன் மாநகர் பெருவளந் துளும்பிட வளர்த்தான்
தொல்லை நாட்குல சேகரன் போல்வரு தோன்றல்.

செய்யுள்—28

ஆகச் செய்யுள்—2349

---

1. இவன் பண்டு மதுரை மாநகரம் கண்டவன் ஆவன்.

# 50. [1]சுந்தரப் பேரம்பெய்த படலம்

**விக்கிரம சோழன் பாண்டியன்மீது படையெடுத்து வரல்**

அழகிய கயல் எழுதிய கொடியை உயர்த்திய வங்கிய சேகர பாண்டியன் வெண்கொற்றக் குடையின் நிழலிலே நிலமகளும் திருமகளும் கலைமகளும் நீங்காமல் மங்கல வாழ்வு பெற்றுத் திகழ்ந்தனர். அந் நாளிலே தன் யானைப்படையினைக் கொண்டு எதிர்த்த பகைவர் தன் அடியில் வீழ்ந்து வணங்க வாகைமாலை சூடிய **விக்கிரம சோழன்**, வங்கிய சேகர பாண்டியனோடு போர்புரிய எண்ணிக் கடல்போன்ற பெரும் படையுடன் எழுந்தான். அப்போது அவனுக்குக் கயபதி, துரகபதி, நரபதிகளுடன் வடதிசை மன்னர் பலர் துணையாயினர். விக்கிரம சோழன், பல்லியங்கள் இடியேறுபோல முழங்கக் காவிரியாற்றின் அருகேயுள்ள தான் உறையும் பதியினின்றும் புறப்பட்டுப் பாண்டிநாடு வந்தடைந்தான்.

**சோழனின் படைவீரர் பாண்டி நாட்டைப் பாழ்படுத்தல்**

விக்கிரம சோழனுடைய படைவீரர் சினந்து பாண்டி நாட்டுப் பசுநிரைகளைக் கவர்ந்து தீமை புரிந்தும், மலர் நிறைந்த தடாகங்களையும் ஏரிகளையும் உடைத்தும், நகருக்குள் வருகின்ற பல பொருள்களையும் வழிப்பறித்துக் கொள்ளையிட்டும் போர் புரிதற்கு அடிகோலினர். பாண்டியன் அதனை அறிந்து, "இனி யான் யாது செய்வேன்? சோழனின் படையோ அளவற்றது! ஆதலால், அதனை எதிர்த்துப் போர் புரிதல் எனக்கு அரிது; இக் குறைபாட்டைச் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கிக் கூறிக் குறையிரந்து வரம் பெறுவேன்" என்று கருதித் திருக்கோயிலை அடைந்தான்.

**பாண்டியன் இறைவனிடம் முறையிடுதல்**

வங்கிய சேகர பாண்டியன் திருக்கோயிலுட் சென்று சோமசுந்தரக் கடவுளை வணங்கி, "அடியார் வேண்டியவற்றை அருளும் பெருமானே! விக்கிரம சோழன் அடியேனோடு எதிர்த்துப் போர்புரிய வேற்று நில மன்னரின் தொகுதியோடும்

---

1. இது சுந்தரப் பெயரம்பெய்த படலம் என்ற பாடம் உள்ளது.

எண்ணில்லாத சேனைகளோடும் வந்து பாசறையில் தங்கியுள்ளான்; அவனோடு பொருதற்கு ஒத்த சேனை அடியேனிடத்தில் இல்லையே! படைமிகைத்து எழுந்தபோது நின்னையன்றி எனக்கு வேறு அரண் உண்டோ? இனி என்னால் செய்யக் கடவது யாதுளது?'' என்று விண்ணப்பஞ் செய்தான். அப்பொழுது, சிவபெருமான் ஆகாயத்தில் அசரீரியாய் நின்று, "பாண்டியனே! நீ முதற்கண் அவனோடு எதிர்த்துப் போர் செய்க; பின்னர் நாமும் அங்குவந்து நினக்குத் துணையாய்நின்று வெற்றி உனக்குக் கிடைக்கும்படி போர்புரிவோம்; இனி நீ அஞ்சேல்!'' என்று அருளிச்செய்தார். பாண்டியன் அம்மொழியினைக் கேட்டலும் மனமகிழ்ந்து கண்களிலே ஆனந்த நீர் பொழிய இரு கரங்களையும் சிரமேற் கூப்பிச் சிவபெருமான் திருவடிகளை வணங்கிக்கொண்டு திருக்கோயிலை விட்டு வெளிவந்தான். அப்பொழுது ஒற்றனொருவன் ஓடிவந்து, "விக்கிரம சோழனுடைய சேனை இடப மலைக்கு அருகில் வந்துவிட்டது!'' என்று கூறினான்.

**பாண்டியன் படையும் சோழன் படையும் போர்புரிதல்**

பாண்டியன், தேர்மேற்கொண்டு பல வாத்தியங்கள் ஒலிக்கவும், வலம்புரிச் சங்கம் முழங்கவும், நால் வகைப் படைகளும் சூழப் போர் புரியச் சென்றான்; திருவாலவாயின் மதிற்புறத்திலே கடல்போல வளைந்து நிற்கும் சோழனது பெரியபடைக்கு எதிரே, வஞ்சிமாலை சூடிஎழுந்த பாண்டியனின் படைகள் ஆரவாரித்து நெருங்கின. இருதிறத்துப் படைவீரர்களும் வஞ்சினங் கூறி அணி வகுத்துப் போர்புரிவாராயினர்.

தேர் வீரருடன் தேர் வீரரும், யானை வீரருடன் யானை வீரரும், குதிரை வீரருடன் குதிரை வீரரும், வில் வீரருடன் வில் வீரரும், வேல் வீரருடன் வேல் வீரரும், வாள் வீரருடன் வாள் வீரரும் சிங்கத்துடன் சிங்கம் போர் புரிவதுபோலப் போர்புரிந்தனர். இந்நிலையிலே பாண்டியன் தேரில் ஏறிச் சோழ மன்னன் எதிர் சென்று போர் முரசு ஒலிக்கப் போர் புரிதல் சூரியனோடு சந்திரன் சென்று போர் புரிதலை ஒக்கும். தாவிச் செல்லும் குதிரைகளின் கனைப் பொலியும், மத நீரை ஆறுபோலப் பெருக்கும் யானைகளின் பிளிறொலியும், தேர்

களின் ஒலியும், படைகளோடு படை தாக்கும் பேரொலியும், வீரர்கள் ஆரவாரித்து ஒருவரை ஒருவர் இகழ்ந்து கூறும் பேரொலியும், வீரர்கள் அணிந்த வீரக் கழல்கள் ஒலிக்கும் பேரொலியும், போர் முரசங்களின் பேரொலியும், தம்முள் வேறுபாடு இன்றிக் கலந்து எங்கும் பேரொலியாயிற்று.

துடிக்கும் கொடிய பாம்புபோல வீசுந் துதிக்கையுடனும். முகிலொடு முகில் தாக்குவதுபோல மாறுபட்டு மாறுபட்டு இடியேறுபோலப் பிளிறும் வாயுடனும், இருப்புலக்கையை எடுத்து வீசி அடித்தலால் வரும் குருதியுடனும் உயிருஞ் சோர யானைகள் விழுந்தன.

பகைவர் எய்த அம்பினை விலக்குவாராகிய வீரர், மீண்டும் அவர் எய்த வேறு கணை தம் மார்பினைத் துளைத்தபோது அவரது ஆண்மையினைக் கண்டு மகிழ்வதோடு வெற்றியையும் வியந்து பாராட்டுவர்; தம்மீது வேற்படையினைப் பகைவர் வீச அதனை வீர வாள்கொண்டு வீசித் துண்டித்து வீழ்த்துவர்.

**வழுதிப்படை சிதைந்தோடச் சோழன் வெற்றிச்சங்கு ஊதல்**

இவ்வாறு சிறிது நேரம் இருதிறத்துச் சேனைகளும் பின்னிடாமல் போர் புரிந்தன. அப்போது சோழன், தனக்கு உதவியாகிய வடநாட்டு வேந்தர் படையோடும் நெருங்கி ஊழித் தீப்போல வெகுண்டு எதிர்த்தான். அவ்வளவிலே பாண்டிய னுடைய சேனை சிதைந்து ஓடியது. அவ்வமயம் பாண்டியனின் படைவீரர்கள் வாட்படையோடு வில்லையும் இழந்தனர். பாகர்கள் தேரோடு யானைகளையும் குதிரைகளையும் இழந்தனர். அதுகண்ட விக்கிரம சோழன், பாண்டியன் வலி இழந்து தோற்ருன் என்றும், அதனுல் வெற்றியும் தன்னுடையதே என்றும், முடிவு செய்து செருக்கினை மேற்கொண்டு வெற்றிச் சங்கை எடுத்து ஊதினுன்.

**இறைவன் பாண்டியன் சேனைக்குத் தலைவனுக வருதல்**

அப்பொழுது முன்னரும் தமது அருள்போலக் குளிர்ந்த தண்ணீர்ப் பந்தர் வைத்தும், சோழனை மடுவில் வீட்டியும் பகைவர் புறங்கொடுக்குமாறு வந்த சோமசுந்தரக் கடவுள்

அங்ஙனமே வேட மன்னராய் வடிவு கொண்டு வந்து, ஆற்ற விழந்து துன்பக் கடலுள் மூழ்கிய பாண்டியனது சேனைக்குத் தலைவர் ஆயினர். மேரு மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமானாகிய வேடர்பெருமான் தம் வில்லை வளைத்துச் **சுந்தரேசன்** என்ற தம் திருநாமம் எழுதப் பெற்ற கூரிய கணைகளை, "வெற்றி கொண்டோம்" என்று கருதி வெற்றிமாலை சூடி வெண்சங்கினை முழக்கி நின்ற சோழனுடைய சேனையின்மீது செலுத்தி நின்றார். அக் கணை ஒவ்வொன்றும் பதினாயிரம் வீரர்களைக் கொன்று உயிரைப் பருகிற்று. சோழன் அதுகண்டு, "இக் கணை ஒன்றுக்கு இவ்வளவு வலி ஏது" என்று வியந்து ஐயுறவுற்று, அக் கணையொன்றைக் கொணர்வித்துப் பார்த்தான்; அதில், 'சுந்தரேசன்' என்று வரைந்திருத்தலை நோக்கினான்; "இது, பாண்டியனுக்கு ஆலவாய் அண்ணல் துணைபுரிந்த செயல்" என்று கருதிப் பயந்து படைகளுடன் மீண்டு போவானாயினான்.

**பின்னிட்டோடும் சோழனை வடவர் அழைத்துவந்துபோரிடல்**

அங்ஙனம் திரும்பிப் போகும் சோழனை அவனுக்குப் போர்த்துணையாகி வந்த வடநாட்டிலுள்ளாராகிய துருக்கரும் ஒட்டியரும் பிறருமாகிய அனைவரும் கூடி, "நில் நில்" என்று அவனைத் தடுத்து நிறுத்திச் சினந்து வைது, "நீ போருக்குத் தோற்றோடுகின்றனையே! இது நின் செயலானால் வீரம் யாரிடத்தது? உன் பெருமை என்னாகும்? ஆதலால், நீ போகாதே; வா" என்று கூறி அழைத்துக்கொண்டு, சினந்து இடிபோல ஆரவாரித்துப் பாண்டியன் சேனைமேற் சென்று வில்லை வளைத்துத் தனித்தனி ஒவ்வோரிடத்தில் நின்று முனிவர் சாப மொழியினும் விரைந்து செல்லும் அம்புகளைத் தொடுத்து விடுத்துத் தூர்த்தனர். அதனை வேட வடிவங் கொண்டு வந்த சோமசுந்தரக் கடவுள் கண்டு, பெரிய வில்லை வளைத்து ஒரு அம்பினைத் தொடுத்து விடுத்து அவர்கள் விடுத்த கணைகளையெல்லாம் அழித்துவிட்டுப் பின்னும் பத்துப் பத்துக் கணைகளை விடுத்து ஆயிரம் தேரையும், ஆயிரம் யானைகளையும், ஆயிரம் குதிரைகளையும் ஆயிரம் வீரர்களையும் கொன்றார்; அதன் பின்னும் நூறு நூறு கணைகளை விடுத்துப் பதினாயிரம்

தேர்களையும், பதினாயிரம் யானைகளையும், பதினாயிரம் குதிரைகளையும், பதினாயிரம் வீரர்களையும் அழித்தார்; அதன் பின்னும் ஆயிரம் ஆயிரம் கணைகளை விடுத்து இலட்சம் தேர்களையும், இலட்சம் யானைகளையும், இலட்சம் குதிரைகளையும், இலட்சம் வீரர்களையும் தொலைத்தார்.

**போர்க்களக் காட்சி**

அப்போது வேட வடிவங் கொண்டு வந்த அண்ணலின் கணைகளால் வீரர்களின் தோள்களும் கால்களும் தலைகளும் அறுபட்டன; இறந்தவர்களின் உடல்கள் மண்ணிற் கிடந்தன; தும்பை மாலைகள் அறுந்தன; யானைகளும் குதிரைகளும் இறந்தன; தேர்கள் நொறுங்கின! இறவாது எஞ்சிய சேனைகள் ஓடி மறைந்தன.

பல தலைகள், உடலிலிருந்து உயிர் முன்னே செல்லத் தாமும் சூரிய மண்டலத்தின் வழியாக வீர சுவர்க்கம் செல்லுதற்குத் தாவுதல்போலத் துள்ளி ஆடும். அம்பும் வாளும் பட்டுக் கூவிக்கொண்டு கீழே வீழ்கின்ற கவந்தங்கள் (தலையற்ற உடல்கள்) ஆடக் குற்றுயிரோடு கூடிய உடல்கள் நின்று தாளம் போடுதல்போலக் கைகளைக் கொட்டுவன. தன் தலை தரையிலே வீழ வெட்டி வீழ்த்தியவனை விழாது நின்ற கவந்தம், கையிலிருக்கும் வேலால் குத்தித் தள்ளியது. அறுபட்ட தலைகள் குரவைப் பாட்டுப் பாடி, வாயினை மென்று பற்களைக் கடித்து வீழ்ந்து கறுவின. குறையுடல்கள் மார்பைத் தட்டி நிற்கும். ஓரிடத்தில் அறுபட்டு வீழ்கின்ற இருதலைகள் ஒன்றற்கொன்று நோக்கிச் சிரித்து, "பிரிவின்றி நீயும் வந்துவிட்டாயே" என்று நட்புமுறையிலே எதிரெதிரே பேசி அன்புமிக வேறு செய்திகளையும் கூறி ஒன்றையொன்று மோந்து பாடிநின்று ஆடின.

வானின் வழியே உலாவும் பருந்து, காகம், கழுகு முதலானவை போர்க்களத்தின்கண் இறந்து வீழ்ந்தவர்களின் உடல்களின்மேல் சிறகுகளை அடித்துக்கொண்டு அசைதல், வெப்பத்தைப் போக்கப் பக்கத்திலே நின்று விசிறியை அசைத்தலை ஒக்கும். பெரிய இரத்த வெள்ளத்தில் மிதந்து செல்லும்

தேர்களைக் கொடிய பேயின் பிள்ளைகள் அவ்விரத்த வெள்ளத்தினுள் மூழ்கிக் கீழ்வழியே சென்று அத்தேர்களைக் கவிழ்த்தல், கடலின்மேல் ஓடும் மரக்கலங்களை வீழ்த்தும் சுறு மீன்களை ஒத்தன. மனத்தைத் தத்தம் வழிஇழுக்கும் ஐம்பொறிகள்போல இறந்தவர் உடல்களைக் காகங்கள் கத்தி நின்று ஒரு பக்கம் இழுக்கும் ; பருந்துகள் கொத்தி நின்று ஒரு பக்கம் இழுக்கும் ; பூதக் கூட்டங்கள் வரிசையாக நின்று ஒரு பக்கம் இழுக்கும் ; பேய்கள் மொய்த்து நின்று ஒரு பக்கம் இழுக்கும்.

வால் துடுப்பாகவும், இருசெவிகள் முறமாகவும், தந்தங்களிலிருந்து சிந்திய முத்துக்கள் அரிசியாகவும், கால்கள் உரலாகவும், தந்தங்கள் உலக்கையாகவும், கதுப்பு சமைக்கும் கலமாகவும், குருதி நெருப்பாகவும், மத்தகம் அடுப்பாகவும் திகழ, யானைகள் மடிந்த போர்க்களம் கொற்றவை சமைக்கும் மடைப்பள்ளியை ஒக்கும். ஒரு பூதம், வையை நீரை இரு கைகளாலும் தடுத்துக் குடித்த குண்டோதரன் என்னும் பூதம் போல், பிணங்களை அணையாக் கோலி இரத்த வெள்ளத்தைப் பெருக்கிக் குடிக்கும் பேய்க் கூட்டத்தை உதைத்துத் தள்ளி அவ்வணையை உடைத்துப் பெருகிவரும் இரத்த வெள்ளத்தை இரு கைகளாலும் தடுத்துப் பருகியது.

**சோழனின் துணை மன்னர்களும் மடிதல்**

**நச்சு மரத்தினை அழித்தற்பொருட்டு மூட்டும் எரியால் அதனைச் சார்ந்த சந்தன மரமும் அழிதல் போலச்** சோழனைச் சார்ந்து துணையாக வந்த அயற்புல மன்னர் அனைவரும் சுந்தரப்பேர் அம்பினால் இறந்துபட்டனர்.[1] அப்போது பேய்கள் இறந்தவர்களை மலரில் மொய்க்கும் வண்டுகள் போலச் சூழ்ந்து மொய்த்தன. பருந்துகளும் காகங்களும் கழுகுகளும் பிணங்களைப் பிடித்து இழுத்து ஒன்றோடொன்று போர்புரியத் தொடங்கின.

---

1. இங்கே, "மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த, இனத்கால் இகழப் படுப ;- புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்" என வரும் நாலடிச் செய்யுள் ஒப்பு நோக்கற்பாலது.

**சோழன் தோற்று ஓடுதல்**

வேட வடிவங்கொண்டு வந்த இறைவன் விடுத்த சுந்தரப் பேர் அம்பினாலே, வஞ்சினங் கூறிப் போருக்கு வந்துற்ற தனது சேனை அழிந்தமைகண்டு மயங்கி, எஞ்சிய சிறு சேனையும், பகைவர் இகழ்ச்சியும், வீரமின்மையும் தன்னைச் சூழச் சோழனும் தோற்று ஓடினான்.

**வேட வடிவங்கொண்டு வந்த சிவபெருமான் மறைதல்**

**இந்திர வில்லும் கரிய மேகமும் போலப்** போர்க் களத்திலே வில்லேந்திக் கரிய உடலுடன் தோன்றிப் போர் புரிந்த சிவ பெருமானாகிய வேடவீரர் பாண்டியனுடைய மலர்ந்த முகத்தை நோக்கி **இருளோடு கூடிவந்த சந்திரன் போல** அருள் நகை சிறிது புரிந்து மறைந்தருளினார்.

**பாண்டியன் அரண்மனை அடைதல்**

பின்பு வங்கிய சேகர பாண்டியன் வெற்றிச் சங்கைத் தன் வாயிலேவைத்து முழக்கி, யானை மேலேறி, மகளிர் [1] அட்டமங் கலங்களையும் ஏந்தத் தன் திருநகரின்கட் சென்றான்; தன் படைக்குச் சார்பாக - வில் வீரராக வந்து வெற்றித்திருவை அளித்த சோமசுந்தரக் கடவுளுக்கு நிலையாகப் பூசனைப் பொருள்களை அளித்து, இரத்தினாபரணங்களும் ஒளி வீசும் மாணிக்கத்தால் இழைக்கப்பெற்ற **வில்லும் சுந்தரப்பேர் எழுதிய அம்பும்** செய்து சாத்தினான்; நீதி வழுவாமல் அறம் தழைத் தோங்க அரசுபுரிந்துகொண்டிருந்தான்.

செய்யுள்—44

ஆகச் செய்யுள்—2393

———

1. அட்டமங்கலம் - சாமரம், நிறைகுடம், கண்ணாடி, தோட்டி, முரசு, தீபம், கொடி, இணைக்கயல் என்னும் எட்டுச் சுபப் பொருள்கள்.

# 51. சங்கப்பலகை தந்த படலம்

## கலைமகள் சாபம் அடைதல்

வங்கியசேகர பாண்டியனின் செங்கோல் நன்கு நடைபெறும் காலத்திலே, காசிப்பதியின்கண் **பிரமதேவன்** [1] பத்து அசுவமேதயாகத்தினைத் தேவர்கள் மகிழ வேதவிதிப்படி செய்து முடித்தான்; பின்னர் மறுநாள் நீராடும்பொருட்டுச் **சரசுவதி, சாவித்திரி, காயத்திரி** என்னும் மனைவியர் மூவரோடும் கங்கா நதியை நோக்கிச் செல்வானாயினன். அங்ஙனம் செல்லும் பொழுது சரசுவதி, வானின் வழியே செல்லும் ஒரு விஞ்சை மாது பாடுகின்ற இசை நெறியில் மனத்தைச் செலுத்தி நின்றாள். பிரமதேவன் கங்காநதிக் கரையை அடைந்து, சரசுவதியின் வரவு தாழ்த்தலினால் மற்றைய மனைவியர்கள் இருவரோடும் நீராடிக் கரையேறினான். அப்போது சரசுவதி வந்து, "என்னையன்றி நீங்கள் மட்டும் நீராடியது என்னை" என்று கோபித்தாள். அதற்கு நான்முகன், "குற்றம் உன் மேலதாக, நீ நம்மைக் கோபிப்பது என்னை? இத் தீங்கை எண்ணில்லாத மனிதப் பிறப்பெடுத்து ஒழிப்பாய்" என்று சபித்தான். அச் சாபத்தை ஏற்ற கலைமகள் பயந்து நடுங்கிப் புலம்பி, "மனிதப் பிறப்பின் துன்பத்தை அறியாத உமக்கு உயிர்த் துணை ஆகும் யான் இம் மனிதப் பிறப்படைந்து மயங்குவேனோ!" என்றாள்.

அப்போது நான்முகன் கலைமகளின் துன்பம் நீங்கச் சிந்தித்து நோக்கி, "மாதே! நினது வடிவமாகிய முதலெழுத்து ஐம்பத்தொன்றினுள்ளே விளங்கும் ஆகார முதல் ஹாகாரம் இறுதியாகிய [2] நாற்பத்தெட்டு எழுத்துக்களும் நாற்பத்தெட்டுப் புலவர்களாகி நிலவுலகில் பலவேறு வகை வருணத்திலே அவதரிக்கக் கடவனவாக. அவ்வெழுத்துக்கள்

---

1. இந்தப் பத்து அசுவமேத யாகம் செய்த இடம் காசியில் கங்கைக் கரையிலுள்ள 'தசாசுவமேத கட்டம்' ஆகும். இக்கட்டம் அறுபத்து நான்கு தீர்த்தக் கட்டங்களில் ஒன்றாகும்.

2. நாற்பத்தெட்டெழுத்து - வடமொழி உயிரெழுத்தில் ஆகாரம் முதலிய பதினைந்தும் ககரம் முதலிய முப்பத்து மூன்றும் ஆம்.

அனைத்திலும் ஏறி நின்று, அவ்வவ் வெழுத்துக்களின் மெய்யான தன்மையை அடைந்து வெவ்வேருக இயக்குகின்ற அகரத்திற்குத் தலைமையாகிய கடவுள் திருவாலவாயின்கண் அமர்ந்தருளிய சோமசுந்தரக் கடவுளே[1]; ஆதலால் அவர், தாமும் ஒரு புலவராகத் திருமேனி தாங்கிச் சங்கப் பலகையின் மேல் ஒருசேர வீற்றிருந்து நாற்பத்தொன்பதாம் புலவராகி அப்புலவர்களுடைய உள்ளத்திலே நின்று அவரவர்க்கு அறிவைத் தோற்றுவித்து அரணுகப் புலமையைக் காத் தருளுவர்" என்று கூறினுன்.

**நாற்பத்தெட்டுப் புலவர்கள் தோற்றமும் தன்மையும்**

பிரமதேவன் கட்டளைப்படியே ஆகார முதலிய நாற்பத் தெட்டு எழுத்துக்களும் வெவ்வேறு மக்களாய்ப் பிறக்க, அவர்கள் பல கலைகளின் வகைகளைத் தெளிந்து சமஸ்கிருத மொழியையும், மற்றைய பதினெட்டு மொழிகளையும் ஆராய்ந் தறிந்து தமிழிலே தலைமைப் புலமையை அடைந்தார்கள்.[2] அவர்கள் பொன்னும் மணியும் கலந்த ஆபரணங்களே அன்றி உருத்திராட்ச மாலையும் பூண்டனர்; நிலா வொளிபோலும் திருவெண்ணீறு அணிந்தனர்; பாமாலையால் அன்றிப் பூமாலை யினுலும் சிவபூசை செய்யும் தன்மையராயினர். இத்தகைய புகழ்பெற்ற இப் புலவர்கள் நாடுகள்தோறும் சென்று புலமை யால் அங்குள்ளவர்களை வென்றுவென்று பொருநை (தாமிர பர்ணிநதி) வளங்கொழிக்கும் பாண்டி நாட்டின்கண் வந்து பாண்டியனின் நகரமாகிய மதுரையை நோக்கி வருவா ராயினர்.

**இறைவன் புலவர்வடிவமாகச்சென்றுஅவர்களை அழைத்தல்**

அப்போது பற்பல கலைப் பனுவலின் பயனுய் நின்ற ஞான மூர்த்தியும் ஆலவாய் அண்ணலுமாகிய சோமசுந்தரக் கடவுள்

---

1. இங்கே, "அகர வுயிர்போல் அறிவாகி யெங்கும், நிகரிலிறை நிற்கும் நிறைந்து" என வரும் திருவருட்பயன் முதற் செய்யுள் சிந்திக் கற்பாலது.

2. இப்புலவர்களைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் திருத்தொண்டத் தொகையில், "பொய்யடிமை யில்லாத புலவர்க்கும் அடியேன்" என்று கூறுகின்ருர்.

கல்வியும் கேள்வியும் நிறைந்த ஒரு புலவராகி அப் புலவர்களின் எதிரே சென்று, "நீங்கள் யாவர்? எங்கு நின்றும் வருகின் றீர்கள்?" என்று வினவியருளினர். அவர்கள், "நாங்கள் புலவர்கள்; அடைந்தாரது பாவத்தைப் போக்கும் பொருநை சூழ்ந்த பாண்டி நாட்டினின்றும் வருகின்றேம்" என்றார்கள். தனியே வந்த புலவராகிய ஞானமூர்த்தி, "நீங்கள் இனிய தமிழ் வளரும் ஆலவாயிலே எழுந்தருளிய எமது கருணை மூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடியினை வணங்கல் வேண்டும்; ஆதலால் இப்பொழுதே வரக் கடவீர்" என்று கூறியருள, அப் புலவர்கள், "எங்களுக்கு அளவில்லாத வினைகளைத் தீர்த்தருளும் சோமசுந்தரக் கடவுள் தாங்களே" என்றனர். பிறகு சோமசுந்தரக் கடவுள் அப் புலவர்களை அழைத்துக்கொண்டு மதுரையை அடைந்து ஆலவாய் அண்ணலை வணங்குவித்து மறைந்தருளினர்.

புலவர்கள், ஆச்சரியமடைந்து, "இது பிறை முடியை மறைத்து வந்த பெருமானின் அருட்செயல்" எனத் தெளிந்து சோமசுந்தரக் கடவுளை வெவ்வேறு செய்யுட்களினலே துதித்துப் புகழ்ந்து வணங்கிக் கொண்டு வங்கியசேகர பாண்டியனைப் போய்க் கண்டனர்.

**பாண்டியன் நாற்பத்தெட்டுப் புலவர்களை ஆதரித்தல்**

வங்கியசேகர பாண்டியன், தன்னிடம் வந்த புலவர்களின் அறம் நிறைந்த கல்வியொழுக்கங்களையும் தகுதிகளையும் கண்டு, "இவர்கள் சிறந்த சான்றோர்கள்" என்று கருதி மனமகிழ்ந்து அவர்களுக்குப் பற்பல வரிசைகளைக் கொடுத்துச் **சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலுக்கு வடமேற்றிசையிலே ஒரு சங்க மண்டபம்** அமைத்து அதில் அவர்களை இருத்தினன்.

அதுகண்ட முன்னைப் புலவர்கள் மனம் புழுங்கி அச் சங்கப் புலவர்களோடு வந்து வாது செய்து, தங்கள் ஆற்றல் குன்ற முன்னுள்ள புலமையும் மதிப்பும் இழந்து வருந்திச் சென்றனர். இவர்களைப் போலவே அயல் நாட்டுப் புலவர்களும் செருக் குடன் பலமுறை வந்து வந்து வினவி வாதிக்க அவர்களின் மனத் திட்பமுங் கெடும்படி சங்கப் புலவர்கள் வென்று விளங்கினர்.

### சங்கப் புலவர்கள் இறைவனிடம் சங்கப் பலகை பெறுதல்

ஒரு நாள் சங்கப் புலவர்கள் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று முறைப்படி வணங்கி, "எம்பெருமானே! எம்மோடு தொடர்ச்சியாக வந்து வந்து எவரும் வாதம் செய்கின்றனர்; ஆதலால், புலமையை உள்ளபடி சீர்தூக்கி அளக்குங்கருவியாக ஒரு சங்கப் பலகை அடியேங்களுக்குத் தந் தருளுவாயாக" என்று விண்ணப்பஞ் செய்தார்கள். அன்று தம்மைப்பாடிய பாணபத்திரனுக்குத் தாமாகவே வலிந்து பலகை அருளிய சோமசுந்தரக் கடவுள், இப் புலவர்கள் தாமே ஒரு பலகையை வேண்டினுல் அதனைத் தாராதிருப்பரோ? இரார். ஆதலால், இறைவர் ஒரு புலவர் வடிவங்கொண்டு ஒரு பலகையுடன் எழுந்தருளிவந்து, "புலவர்காள்! ஒரு முழச் சதுர அளவுள்ள இப்பலகை சந்திரனிலும் வெள்ளியது; அல்லது அறிவினும் தூயது; மந்திர வலியையுடையது; அறிவால் முதிய நும்போன்ருர்க்கெல்லாம் ஒவ்வொரு முழ மாக வளர்ந்து இருக்கை அளிக்கவல்லது. இஃது உங்களுக்கு அளவுகோலாய் இருக்கும்" என்று கூறி, நாமகள் உருவாய் வந்த அந் நாவலர்களுக்கு வெண்டாமரையாகிய தவிசினை ஒரு பலகையாகச் செய்து தருவதுபோல அப் பலகையினைக் கொடுத்தருளினுர்.

### சங்கப் பலகைக்கு வழிபாடு செய்து அதில் ஏறுதல்

சங்கப் புலவர்கள் அப் பலகையை வாங்கிக்கொண்டு திருக்கோயிலை வலம் வந்து தங்கள் சங்க மண்டபத்திற் புகுந்து அப் பலகைக்கு மணமிக்க பூமாலைகளைத் தொங்கவிட்டுப் பனி நீர் தோய்ந்த சந்தனக் குழம்பும், வெண்மலரும், வெள்ளா டையும் புனைந்து, நறும் புகையும், தீபமுங்காட்டிப் பூசை புரிந்து வணங்கினர். பிறகு, சங்கப் பலகையில் நக்கீரன் முன்னர் ஏறினுன்; அதன் பின் கபிலனும், அதன் பின் பரணனும் ஏறினர்; மற்றைப் புலவர்கள் அனைவரும் இங்ஙனமே ஏறி ஏறி ஒருசேர வீற்றிருந்தனர். **தன் உரை காண்பார் அனைவருக்கும் எழுத்தால் சுருங்கி நின்று பொருள் விரிவு காட்டித் தோன்றும் நூலைப்போல** இறைவன் தந்தருளிய சிறிய

பலகை ஒன்றே ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு முழமாக வளர்ந்து இடங்கொடுத்தது.

தெய்வப் பலகை பெற்ற அச் சங்கப் புலவர்கள் நூல்களில் அமைந்த பொருள் விளங்கத் தம்மில் ஏதுவும், உதாரணமும், எழுவகை மதமும் கூறும்போது அவற்றைக் கேட்டுத் தெளிந்த கிளியும், நாகணவாய்ப் பறவையுமே வெளியே வந்து, வாதஞ் செய்வார்கள் வந்தால் அவர்கள் கொள்கையை மறுத்துத் தங்கள் கொள்கையை நிலைநாட்டும்[1] எனில் அப் புலவர்களின் பெருமை அளத்தற் கரியதாம்,

**இறைவன் புலவர்களின் மயக்கந் தீர்த்துத் தலைமை தாங்கல்**

அந் நாற்பத்தெட்டுச் சங்கப் புலவர்களும் தங்கள் தங்கள் புலமையினாலே எண்ணில்லாத தூய பாடல்களைச் செய்து கொண்டு தத்தம் இச்சை வழியே இருந்தனர். அவர்கள் செய்த பாட்டுக்கள் அனைத்தும் உரை காணபோர் அறிவிற் கேற்றவாறு விரியும் பொருள்வளமும், சொல்வளமும், குறிப்பில் தோன்றும் பொருள்வளமும் ஒற்றுமையுடையனவாய் வேறுபாடு அறிய முடியாது தலைமயங்கிக் கிடந்தன. அதனால், அவர்கள் ஒவ்வொருவரும் வேறுபாடறியாது தம்முள் வியப்புற்று "இஃது என்னுடைய பாடல்; அஃது உம்முடைய பாடல்" என்று நேரே மாறுபாடு கொண்டனர்.

அப்பொழுது. சோமசுந்தரக் கடவுள் அப் புலவர்கள் முன் அருளுகின்ற ஒரு புலவராய் வந்து தோன்றினார். அங்ஙனம் வந்த புலவராகிய இறைவர், தம்மை வணங்கி வரவேற்கும் புலவர்களை நோக்கி, "புலவர்காள்! உங்கட்கு மயக்கத்தைத் தரும் செய்யுட்களைக் கொண்டுவாருங்கள்" என்று அருளிச்செய்ய, அவர்கள், "எந்தையே! இங்குள்ள இவையே ஆம்" என அவற்றைக் கொண்டுவந்து திருமுன் வைத்தனர். தூய சொல்லும் தொடர்ந்த பொருளுமாகிய

---

1. இங்கு, "பாரிசையும் பண்டிதர்கள் பன்னாளும் பயின்றோதும் ஓசை கேட்டு, வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட் சொல்லும் மிழலை யாமே" (திருஞான சம்பந்தர் தேவாரம்) என வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

அந் நாலவர் பெருமான் அவற்றை ஆராய்ந்து அவ்வப் புலவர்களின் பாடல்களை அவ்வவர் கையில் மனம் மகிழுமாறு எடுத்துக் கொடுத்தருளினர். அவற்றை வாங்கிய சங்கப் புலவர்கள் மனமகிழ்ந்து, "நீர் எங்களோடும் ஒரு புலவராய் இங்கு எழுந்தருள்க!" என்று வேண்டிக்கொண்டு அவரைத் தங்களைத் தாங்கும் சங்கப் பலகையில் இருத்தினர்கள். பொற் பலகை என்னும் பொன்னுரத்தில் நாற்பத்தெட்டுப் புலவர்களும் சுற்றிலும் பதித்த மணிகளாக இருந்தனர். இறைவராகிய புலவர் நடுநாயகமணி என்னும்படி வீற்றிருந்தார்.[1]

பொன்னின் பீடிகை என்னும்பொன் னுரமேல்
துன்னு நாவலர் சூழ்மணி யாகவே
மன்னி னூர்நடு நாயக மாமணி
என்ன வீற்றிருந் தார்மது ரேசரே.

**வங்கிய சேகர பாண்டியன் சிவபதம் அடைதல்**

இறைவரோடும் நாற்பத் தொன்பதின்மர் என்று கூறப்படும் புலவர்கள் அனைவரும் பின்னும் பற்பல தமிழ் நூல்களைச் செய்துகொண்டு அங்கு வாழும் நாளிலே, வங்கியசேகர பாண்டியன் **வங்கிய சூடாமணிக்கு** முடிசூட்டிப் புவியாட்சியை அளித்து இம்மையில் அமைந்த [2] வினைப்பாசம் என்னும் பகைமை கெட இருந்து, சிவபெருமான் திருவடியிற் கலத்தலாகிய வீடுபேற்றை அடைந்தனன்.

செய்யுள்—39
ஆகச் செய்யுள்—2432

---

1. இறைவர் சங்கப் புலவருள் ஒருவராய் எழுந்தருளியதை, "சென்றணைந்து மதுரையினில்: திருந்தியநூற் சங்கத்துள் அன்றிருந்து தமிழாராய்ந்தருளியவங் கணர்" என வரும் திருத்தொண்டர் புராணம் - திருநாவுக்கரசர் புராணம் (403) அடிகளால் அறியலாம்.

2. வினைப்பாசம் - வினைக்கயிறு; "பாசமாம் வினைப் பற்றறுப்பான்" என்பது பெரிய புராணம்.

# 52. தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்

**பாண்டியன் நந்தவனம் வைத்தல்**

அரசர்க்கரசனுகிய வங்கிய சூடாமணி பாண்டியன் சோம சுந்தரக் கடவுளின் திருமுடிக்குச் சூட்டப் பலவகை மலர்களைத் தரும் **திருநந்தவனம்** வைத்தலாகிய திருப்பணியை மேற் கொண்டான். குருக்கத்தி, பாதிரி, ஆத்தி, வில்வம், மந்தாரம், மல்லிகை, முல்லை, மகிழ், கோங்கு, கொன்றை, கரந்தை, அலரி, நந்தியாவட்டம், செருந்தி, குருந்தம், புன்னுகம், தாமரை, நீலம் முதலான பல மலர்கள் காலை, நண்பகல், மாலை என்னும் மூன்று காலத்தும் எட்டுத் திக்குகளிலும் மணங்கமழ, வண்டுகள் தேனுண்டு இசைபாடத் திருநந்தவனத்தினை உண்டாக்கினன். மேலும் **சண்பக நந்தவனம்** ஒன்றையும் தனியே வைத்தான்.

**சண்பகசுந்தரர்—சண்பகமாறன்**

வங்கிய சூடாமணி பாண்டியன், தான் வைத்த சண்பக நந்தவனம், நுண்ணிய இடையினையுடைய மங்கல மகளிர் பொன்னணி பூண்டதைப்போல அழகுபெற்று, மொய்த்து விளங்கும் சண்பக அரும்புகள் உடைந்து, பிற நந்தவனத்தின் மணத்தையெல்லாம் தன்னுட்படுத்தி நறுமணத்துடன் பசந்து மலர்ந்தனவற்றைக் கண்டு மகிழ்ந்தான்; வண்டுகள் மோவாத சண்பக மலர்களை [1]க் கொய்து நல்ல மலர்களாகத் தேர்ந் தெடுத்துக் காம்பு முதலியன ஆய்ந்து [2] **இண்டை, தொடை, தொங்கல், தாமம், கண்ணி** ஆகிய பலவித மாலைகளைத் தொடுத்துச் சோமசுந்தரக் கடவுளின் திருமேனியில் அணிவித்து அழகு செய்தான்; பொன்போல விளங்கும் சண்பக மாலையணிந்த சோமசுந்தரக் கடவுளின் புதிய திருக்கோலத்தைத் தரிசித்து

---

1. சண்பக மலரில் வண்டுகள் மோவாததனுல், அது "வண்டுணு மலர்" எனப் பெயர் பெறும்.

2. இண்டை - தண்ட வடிவமாகத் தொடுத்த மாலை. தொடை - சதுரமாகத் தொடுத்த மாலை. தொங்கல் - சரமாகத் தொடுத்த மாலை. தாமம் - கோத்த மாலை. கண்ணி - வட்டவடிவமாகத் தொடுத்த மாலை; இது முடி மாலை ஆகும்.

வியந்து, "**இவர் சண்பக சுந்தரர்**" என்று கூறித் திருமுன் வணங்கினுன். அன்று முதல் ஆலவாய்ச் சுந்தரருக்குச் '**சண்பக சுந்தரர்**' என்ற திருநாமம் வழங்குகின்றது. சண்பக மாலைகளை இறைவர் திருமுடிக்குச் சாற்றுவித்த காரணத் திஞலே வங்கிய சூடாமணி என்னும் பாண்டியனும் **சண்பக பாண்டியன்** எனப் பெயர்பெற்று விளங்கினன்.

**இளவேனிற் காலம் வருதல்**

சண்பக பாண்டியன் சண்பக சுந்தரரிடத்து அன்பு நீங்கா மல் நல்ல திருப்பணி செய்துவரும் நல்ல நாளிலே, இளவேனிற் காலம் வந்தது. அவ் விளவேனிற் காலம் மக்களின் வெப்பத் தைப் போக்கும் இளந்தென்றலும், தன் வெப்பந் தீர்க்க வேறு இளந் தென்றலை விரும்பியது. சோலையும் வேறு சோலையை விரும்பியது; தூய நீர்த் தடாகமும் வேறு நீரோடையை விரும்பியது; சந்திரனும் வேறு சந்திரனை விரும்பியது. என்னென்பது அவ் வேனிற்கால வெப்பத்தை!

**வேனிற் கால வருணனை**

அப்போது மாமரங்களெல்லாம் வானின்கண் உள்ள கற்பகத்தருக்களின்மேல் சீறிச் சிவந்து எழுந்தாற்போலச் செந்தளிர்களைப் பரப்பி வானுலகை அளாவ நின்றன. நீல மணிகளை இடையிடையே பதித்துச் செய்த காதணியை அணிந்த மகளிர்போலச் செருந்திகளனைத்தும் வண்டுகள் இடையிடையே தங்கப் பூத்து மலர்ந்தன. முள் முருக்கு மலர்கள் சூரியனைப்போலச் செந்நிறமாகவும், காஞ்சி மரங் களெல்லாம் இந்திரனைப் போலக் கருநிறமாகவும், வெண் கடம்பு மரங்களெல்லாம் சந்திரனைப்போல வெண்ணிறமாகவும், காயாஞ் செடிகளெல்லாம் திருமாலைப்போல நீலநிறமாகவும், மலர்ந்தன. வையையாற்றின் கரையாகியபெண் மணல் மேடாகிய இடையில் மேகலையை அணிந்தாற்போலக் குங்கும மரங்கள் மலர்ந்து மகரந்தத்தைச் சிந்தின. இளம் புன்னை மரங்களெல்லாம் மரகதம் போலப் இலைகள் தழைத்து முத்துக் கள் போல முகைகள் அரும்பி, பொன்போலப் பூக்கள் மலர்ந்து கடலிலுள்ள பவளக்காடு போல மகரந்தத்தைச் சிந்தின.

மரங்களெல்லாம் ஊடிய மகளிர்போல வெம்பி இலைகளை உதிர்த்துக் காதலரைக் கூடிய மகளிர்போல எங்கும் தழைகள் தோன்றத் தழைத்துத் தலைவரைப் பிரிந்து வாடுகின்ற மகளிர் போலக் கண்ணீர் (கள் + நீர்) ஒழுக உடல் பசந்து, காம மயக்கம் மிக்க மகளிரின் பழிச்சொல்போலப் பூக்கள் பூத்துச் செறிந்தன. [1] தம்மால் விரும்பப்பெற்ற காதலர் மெலியத் தாமும் மெலிந்து அவர் உள்ளங் களிகூரத் தாமும் களி கூர்ந்து நிற்கும் கற்புடை மகளிர்போலக் கோடை வெப்பத்தால் மரங்கள் வாடும்போது அவற்றைச் சுற்றி நிற்கும் பசிய கொடிகளும் வாடி, மரங்கள் தழைக்கும்போது அக் கொடிகளும் தழைத்து நின்றன.

நெடிய தென்றிசையினின்று வரும் தென்றற்காற்றுத் தள்ளுதலால் தேன் துளிக்க, வண்டுகள் இசைபாடச் சாய்ந்து ஆடும் பூங்கொம்புகள், நாட்டியப் புலவன் ஆட்டுவிக்க நகை முகத்திலே வியர்வை சிந்தப் பாட்டிசைத்து ஆடா நின்ற நாடக மகளிரை ஒத்தன.

செவ்வந்தி மலரும், மகிழம் பூவும் நிலத்திலே உதிர்ந்து வாடி உலர்ந்தும் வண்டுகள் மொய்த்துத் தேன் உண்ணக் கிடப்பனவாகிய காட்சி, உயர்குடிப் பிறந்த நல்லோர்கள் தம் செல்வம் சுருங்கிய விடத்தும், தம்மிடத்து வந்து இல்லை என்று கூறி வருந்தியவர்க்குத் தம்முயிரை மாறியாகிலும் கொடுப்பர் என்பதை நினைவூட்டும்.

மலர்ந்தசெவ் வந்திப் போதும் வகுளமும் உதிர்ந்து வாடி
உலர்ந்துமொய்த்(து) அளிதேன் நக்கக் கிடப்பன உள்ளமிக்க
**குலந்தரு நல்லோர் செல்வங் குன்றினுந் தம்பால் இல்லென்(று)**
**அலந்தவர்க்(கு) உயிரை மாறி யாயினுங் கொடுப்பர் அன்றே.**

---

1. கற்புடை மகளிரும் காதலரும் ஈருடற்கோருயிர்போல அன்பால் இயைந்து நிற்பர்: அதனால் அவருள் ஒருவர் எய்தும் இன்ப துன்பங்கள் மற்றவர்க்கும் எய்தும். இங்கே, 'காகத் திருகண்ணிற் கொன்றே மணி கலந் தாங்கிருவர், ஆகத் துளோருயிர் கண்டனம் யாமின்றி யாவையுமாம், ஏகத் தொருவன் இரும்பொழில் அம்பல வன்மலையில், தோகைக்குந் தோன்றற்கும் ஒன்றாய் வருமின்பத் துன்பங்களே" என வரும் திருக் கோவையார் பாடல் சிந்திக்கற்பாலது.

மெல்லிய ஆண் குயில்களெல்லாம் அழகிய தேமாவின் தளிர்களைக் கோதிக் காமம் அரும்பிய தம் பெட்டைகளைக் கூவி உருக்குவன, செங்கோலையுடைய பெருவேந்தன் தோன்ற நாடு காவல் மாறிய குறுநில மன்னனைப்போல மயில்களெல்லாம் ஒடுங்கின.

**தென்றல் வருகை**

தென்றற்காற்று, பலவிடங்களிலுஞ் சென்று நூல்களை ஆராய்ந்து அறியும் அறிவுடைய மாணவன் போலப் பூஞ்சோலையில் நுழைந்து பொய்கையிலே தாவித் தாமரை மலரைத் துழாவி, நறுமண முள்ள இருவாட்சி, முல்லை, மல்லிகைப் பந்தரிலே படிந்து மலர்களின் மணங்களைக் கவர்ந்து குளிர்ந்து மெதுவாய் வந்து உலாவும்.

பொங்கரின் நுழைந்து வாவி புகுந்துபங் கயந்து ழாவிப்
பைங்கடி மயிலை முல்லை மல்லிகைப் பந்தர் தாவிக்
கொங்கலர் மணங்கூட் டுண்டு குளிர்ந்துமெல்லென்று தென்றல்
அங்கங்கே கலைகள் தேரும் அறிவன்போல் இயங்கும் அன்றே.

**வேனிலாகிய அரசன் அரசு வீற்றிருத்தல்**

தாமரை காளாஞ்சி (தாம்பூலமெடுக்குங் கலம்) ஏந்தவும், குயில் முழவம் ஒலிக்கவும், மருத மரத்தில் அமர்ந்த கிளிகள் மங்கல வாழ்த்துக் கூறவும், வண்டுகள் இசைப் பாட்டுப் பாடவும், தாழைகள் வாள் ஏந்தவும் வேனிலாகிய அரசன் முடி சூடி அரசு வீற்றிருக்கப்பெறுவது அக் குளிர்ந்த பூஞ்சோலை ஆகும்.

**ஆடவர் வேனில் வெம்மையை ஆற்றும் இடம்**

ஆடவர்கள் சந்திரகாந்தக் கல்லாகிய மண்டபத்திலும், செய்குன்றிலும், சித்திர மண்டபத்திலும், சோலையினிடத்தும், தாமரைத் தடாகத்தினிடத்தும் அன்றி வேனில் வெம்மையைப் போக்கும் இடம் வேறு காணாராயினர். நான்மாடக்கூடலி லுள்ள காளையர்கள் தத்தம் அழகிய மாதர்களுடன் கற்பகச் சோலை போன்ற தோற்றமுடைய பூஞ்சோலையில் இன்பந் துய்க்கப் போவாராயினர்.

**ஆடவரும் மகளிரும் பூம்பொழிலை அடைதல்**

ஆடவர்களிற் சிலர் யானையின் மீது சிங்கத்தைப் போலச் சென்றனர். சிலர் குதிரையின் மேல் யானையைப் போலச் சென்றனர். சிலர் தேர் மீது அமர்ந்து சூரியனைப் போலச் சென்றனர். சிலர் மலை போல நடந்து சென்றனர். மடந்தையரிற் சிலர் நீலப் பிடியின் மேல் பிடிபோலச் சென்றனர். சிலர் முத்துச் சிவிகையின்மேல் கலைமகள் போலச் சென்றனர். சிலர் குதிரையின்மேல் இரதி தேவியைப் போலச் சென்றனர். சிலர் தங்கள் காதலர்களின் கையைப் பிடித்துக்கொண்டு சென்றனர். இவ்விருதிறத்தாரும் விருப்பத்தோடு வையை நதி முத்துக்களை வெள்ளிய மலைபோலக் குவிக்கின்ற மணற் குன்றுகளின் புறஞ் சூழ்ந்த சோலைகளை அடைந்தனர்.

பெண் யானைகளிலும் குதிரைகளிலும் ஏறிச் சென்ற மகளிர், தத்தம் கணவர்கள் பெரிய தோள்களை ஏந்த விசய இலக்குமிபோலத் தழுவி இறங்கினர்; சோலையினிடத்துப் பூங்கொடிகள், மகரந்தப்பொடிகளைச் சிந்துதல்போலத் தங்கள் உடலில் அணிந்த கலவைச் சந்தனம் உலர்ந்து சிந்த வன மங்கையர்போலச் சென்றனர். அம் மகளிர், நடக்கும் பதுமை போலப் பூக்கள் நிறைந்த மாதவி (குருக் கத்தி)ப் பந்தர் நிழலிலும், புன்னைமர நிழலிலும், தேமாவின் நிழலிலும், செருந்தியின் நிழலிலும், தாழையின் நிழலிலும் போய்ச் சேர்ந்தனர்.

மகளிரது கூந்தலைக் கருமுகில் என்று கருதி ஆடுகின்ற மயில்கள், அவர் கண்களைக் கண்டு அம்பு என்று பயந்து ஓடும். அம் மகளிரின் உருவத்தை மாந்தளிர் என்று எண்ணிக் கோதி உண்ணச் செல்லும் குயில்கள், அவர் பாடும் பண்ணொலியினைக் கேட்டு ஒதுங்கி நாணும்.

நீரோடைகளே அல்லாமல் குவளை, ஆம்பல், தாமரைகளைப் பூங்கொம்புகளும் பூத்தனபோலக் கொடிபோன்ற இடையினையுடைய மகளிரின் கண், வாய், முகங்களின் தொகுதியால் சோலைகள் விளங்கின.

ஆடவர்கள் தத்தம் மகளிருடன் சென்று இல்லம்போன்று கொடிகள் மிடைந்த இடத்தின்கண் இயக்கர்கள் போலச் சார்ந்து அங்குப் பனி நீரைத் தெளித்து வெம்மையை ஆற்றிக் கொண்டனர். பின்னர் எல்லோரும் நடந்துவந்த தளர்ச்சி யினைப் போக்கிக்கொண்டு மலர் கொய்யப் புகுந்தனர்.

**மலர் கொய்து விளையாடல்**

மைதீட்டிய பெரிய கண்களையுடைய மகளிர் கொம்புகளை வளைத்து அவற்றின் மலர்களைக் கொய்து மூக்கில் மோந்து பார்த்துக் குழைகளிலும் காதுகளிலும் கூந்தலிலும் அணிந்து தம் தம் கணவர்களுக்கு மகிழ்ச்சியினை விளைவிப்பர். பின்பு காமன் கணைபோல அவற்றை எடுத்துக் கணவர் மார்பில் எறிவர். மகளிர் பூங்கொம்புகளை வளைத்தபோது அரும்புகள் நெகிழ்ந்து மலர்ந்த அப்பூங் கொம்புகளிலுள்ள ஆண் வண்டு களும் பெண் வண்டுகளும் ஒலித்துக்கொண்டு அவர்கள் கூந்தலில் புகுந்து இசை பாடித் தேனைப் பருகுதல், விறலி யோடு சேர்ந்து ஏழிசை பாடிக் கள்ளினை அருந்தும் பாணர் போன்றிருந்தது.

'இவ்வுலகிலே வீடுபேறு அளிக்கும் தெய்வம், மகளிரே' என்று உரைப்பார்[1] மொழி பொய்யன்று; மெய்யே ஆகும். அம் மகளிர் வளைக்க வளைந்து நடுங்கி அவரடிகளில் மலர்களைச் சிந்தி மலர் முகத்தினின்றும் கண்ணீர் (கள் + நீர்) ஒழுகக் கொம்புகளும் வழிபட்டனவெனில் உலகின் தன்மையை என்னென்று கூறுவது?

ஒரு பெண் உயர்ந்த கொம்பொன்றை எட்டி வளைக்கும் தோறும் கைக்கு எட்டாமையால் வாடி மலர்க்கொடிபோலச் சோர்ந்து நின்றாள்; அதனை மன்மதன் போன்ற ஒருவன் கண்டு எதிர்சென்று, "ஏன் வாடுகின்றாய்? எனது தோளின் மீது ஏறி மலர்களைக் கொய்வாயாக" என்று அவளைத் தாங்கி நின்றான். மற்றொரு பெண் அவ்வாறே எட்டா மலர்க்கொம்பை வளைக்க வருந்திநின்றபோது அதனை அவள் உயிர்க் காதலன் கண்டு விரைந்து வந்து, "இதுவும் ஊடிய மகளிரோ? கொய்து

1. இங்ஙனம் உரைப்பவர் உலகாயதர் ஆவர்; "இம்மையின் முத் திக் கதியருள் கிற்பது காமரு லோகாயதம்" என்பதாம்.

கொள்" என்று அக்கொம்பை வளைத்து நின்றான். அப் பெண் (ஊடிய மகளிர் எனப் பன்மையாற் கூறியதனாலே) கண்களிலிருந்து முத்துப்போலக் கண்ணீர் துளிக்க நின்றாள்.

ஒருவன் தான் பறித்த செருந்தி மலரைத் தன் காதலியின் காதிலுள்ள குழையில் செருகி அதனை நோக்கி, "இக் குழை அழகாயுள்ளது" என்றான். அவளோ "இதனை என் தங் கைக்கு இடுவாய் இடுவாய்" என்று வெகுண்டு கூறி அக்குழை யோடு மலரையும் வீசி எறிந்து அந்த அன்பனுக்குத் துன்பம் விளைவித்தாள்.[1]

ஒரு பெண், மாமரத்திலுள்ள தனது கூட்டின்கட் செல் லும் இளம் பெண் குயில் தன் உயிர்போன்ற ஆண் குயிலைக் கூவி அழைத்தலைக்கண்டு தன் காதலனைக் கண்ணால் நோக்கி இள மரக்காவின் மருங்குள்ள ஒரு குருக்கத்திப் பந்தரை அடைந்தனள்.

ஒருவன், தன் காதலிக்குப் புதிய மலரைக் கொய்து கொடுத்தான். அப்போது அவன் உடலில் மலரின் மகரந்தப் பொடிகள் சந்தனத்தோடு கலந்த கத்தூரி போலச் சிந்திக் கிடந்தன. அதனைக் கண்ட காதலி, "இஃது எந்த மாதரைக் கூடினமையால் அமைந்த சாந்து" என்று வினவினாள். அவன், "என்னுள்ளத்திலே உன்னையும் தாங்கிக் கொய்த சண்பக மலரின் மகரந்தம்" என்றான். அவளோ ('உன்னையும்' என்றதனால் மற்றொருத்தியையுந் தாங்கியதாகக் கருதி) நெய் சொரிந்த நெருப்பைப்போலச் சினந்து நின்றாள்.

ஒருவன் தன் காதலியின் ஊடலைத் தணிக்க அவள் காலில் வந்து வீழ்ந்து வணங்கினான். அப்போது அவன் முடிமணி யிலே தன் நிழலைக்கண்ட அவள், "நீர் சிவபெருமானைப் போல முடியிலே ஒருத்தியை ஒளித்து வைத்துக்கொண்டு என்னைப் பணிவது ஏன்?" என்று கூறிச் சிரித்துக் காதல னுக்குத் துன்பத்தின் மேல் துன்பம் விளைத்தனள்.

---

1. இங்கு, "கோட்டுப்பூச் சூடினுங் காயும் ஒருத்தியைக், காட்டிய சூடினீர் என்று" என வரும் திருக்குறள் நோக்கற்பாலது.

ஆடவர் பொருள்களை விலை மாதர் கவர்ந்தது போல, மலர்களையெல்லாம் மகளிர் கொய்ததனுல் புதிய மலர்கள் ஒழிந்த சோலையின் காட்சி, கைப்பொருள் அற்ற வறியவன் போலத் தோன்றிற்று.

**பொய்கையில் நீராடல்**

மகளிர் தம் காதலருடன் பூக் கொய்யும் இன்பத்தைத் துய்த்துக் கண்களையும் உடலையும் கொழுநர் வேறுபடுத்துவது போல வேறுபடுத்தும் பொய்கையின்கண் நீராடச் சென்றனர்.

அன்னம்போன்ற மகளிர் நீராடும் பொய்கையானது நீலோற்பலமும், அல்லியும், தாமரையுமே அன்றி அழகிய முல்லையையும், சண்பகத்தையும், கோங்கினையும் பூத்திருத்தலை ஒத்தது. மகளிர் நீரில் மூழ்குந்தோறும் அலைகள் வரிசை வரிசையாக மோதுதல், கண்களும் நீலோற்பல மலர்களும், முகங்களும் தாமரைமலர்களும், வாய்களும் ஆம்பல் மலர்களும் தம்மில் போர் புரிதலை ஒத்தன; **பகைவர் மேலெழுந்து போருக்கு வருவரேல் வலியற்றவர் எதிர்த்து நிற்காதவாறுபோல,** மகளிர் நீராடப் பொய்கையை அடையுமுன்னே அங்குள்ள கயல்மீனும், வரால்மீனும், பாம்பும், ஆமையும், நண்டும், அன்னமும் அஞ்சி ஓடின.

தூய நீரிலே மூழ்கிக் கரையேறும் தன் காதலியைக்கண்ட ஒரு காதலன், அவள் வாயும் கண்களும் முறையே விளர்த்தும் சிவந்தும் இருக்கும் தன்மையைக் கண்டு அடையாளம் தெரியாமல், "என் இனிய உயிரனையாள் எங்கே உள்ளாள்" என்று வினவினன். அதனைக்கேட்ட அவள், சிவந்த கண்ணுடன் கண்ணீர் விட்டு நின்ருள்.

ஒரு பெண் நீராடும் பொருட்டுத் தன் கணவன் கையைப் பிடித்துக்கொண்டு செல்கின்றவள், அங்கு நீராடிக் கரையேறும் ஒரு பெண்ணை அவன் நோக்கியதும், "சீச்சீ என் தங்கையின் எச்சிலாகிய நீரில் யான் ஆடேன்" என்று கூறிக் கரையிலே நின்றனள்.

தன் கணவனுடன் ஊடிக் காதல் நோய் கொண்ட ஒரு பெண், அக் காதலன் காண ஆழமாகிய நீரின்கண் அழுந்துவாள்

போலப் பாவனை காட்டிச் சோர்ந்து அருகிலே தாமரை மலரில் தங்கிய அன்னத்தை நோக்கி, "கைகொடு" எனக் குறையிரந்தாள்.

ஆடவரும் மகளிரும் நறுமணங்கமழுஞ் சுண்ணப் பொடியையும் கலவையையும் கத்தூரியையும் எடுத்துத் தம்முள் மாறி மாறி வீசி விளையாடினர்; அதுபோது இடைவெளியுள் நின்று அந்நறுமணப் பொருள்களை வண்டுகள் பாய்ந்துண்ணுதல், பொருளை இடைவழியிலே பறித்துக்கொள்ளும் ஆறலைப் பாரைப் போன்றது. கொய்த நீல மலரையும், தாமரை மலரையும் எடுத்து மன்மதன் எய்யும் மலர்க்கணைபோல ஒருவர் மேல் ஒருவர் வீசி எறிவர்; அங்ஙனம் வீசிய மலரைக் கையினால் அவர்கள் தேக்கி அதனை எறிந்தவர் முகத்தில் படுமாறு செய்து நகைத்து மகிழ்வர். பெண் யானையும் ஆண் யானையும் நீரை வீசி விளையாடுதல்போலப் பனி நீருடன் சுண்ணப் பொடியையும் அள்ளி மகளிரும் ஆடவரும் வீசி விளையாடுவர். பிறகு கைகளாலே முன் வீசிய சாந்து அழிந்திடத் தூய நீரை அள்ளி வீசுவர்.

பொய்கையில் குடைந்து நீராடும் மகளிர் கூட்டத்துள் ஒரு மாது ஒரு ஆடவன் முகத்தில் தன் வாயிலுள்ள தூய நீரைக் கொப்பளித்து உமிழ்ந்தாள்; அவன் அந்நீரை, 'ஆம்பல் மலரிலுள்ள தேன்' என்று கருதிக் குடித்தான். ஒரு ஆடவன் நீராடும் தன் காதலியை நோக்கி, "அங்கே ஆழம் செல்லாதே; நில்" என்று தடுப்பவன் போலச் சென்று தன் கைகளால் வாரித் தூக்கி மார்பின்கண் அணைத்து இரதியின் தோளைத் தழுவிய மன்மதனைப்போலச் சென்றான்.

**மகளிர் நீராடிக் கரையேறித் தங்களை அலங்கரித்தல்**

இவ்வாறு தாங்கள் உடலில் பூசிய கத்தூரியையும், சந்தனத்தையும், தரித்த பூமாலைகளையும், முத்து மாலைகளையும் பொய்கைக்குக் கொடுத்துத் தங்கள் மேனியில் தாமரை மலரின் மணம் கமழ, இளம் பெண்டிர் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அன்புள்ள ஆடவருடன் கரையேறினர்.

சில மகளிர் நனைந்த மெல்லிய ஆடையுள்ளே உடல் உறுப்புக்கள் யாவும் தோன்றலால் கரை ஏற வெட்கித் தங்கள் தங்கள் காதலரைக் கூவி, "ஐயனே! பொன்னுடையினை அளிப்பாய்" என்று கேட்பது, **அவர்கள் கண்ணனைத் துகில் அளிக்குமாறு கேட்கும் இடைச் சிறுமியரை ஒத்தனர்.**

பொய்கைகள், செம்பஞ்சுக் குழம்போடு குங்குமமும் கலந்து சிவந்த நீரினையுடையனவாய், நீராடிக் கரை ஏறியவர்க்கு அமைத்த நீராஞ்சனம் (ஆலத்தி) எடுக்கும் வட்டக் கலத்தினை ஒத்தன. பொய்கையினைச் சுற்றியுள்ள சோலைகள் அவற்றைச் சுற்றி நிற்கும் மகளிரை ஒத்தன.

பட்டாடை, பலநிறப் பருத்திநூலாடை, இரத்தினாபரணம், சந்தனம், கத்தூரி, குங்குமக் குழம்பு, பூமாலை இவை தங்கள் கட்டழகு முழுதையும் கவர்ந்து கொள்ள, மகளிர் தங்களை அலங்கரித்து ஆடவர்களின் உள்ளமனைத்தையும் கவர்ந்தனர்.

**புதுத் தேன் நுகர்தல்**

தோழிகள், பொன்னாலும் வெள்ளியாலும் பளிங்கினாலும் செய்யப்பட்ட கிண்ணங்களிலே புதுத் தேனைக் கூரிய வாளை நட்டாற்போல வார்த்துக் கொடுக்க, நங்கையர்கள் வாங்கித் தம் விரலாலே தேனை ஒரு துளியெடுத்துத் தெளித்து வண்டுகளை ஓட்டிவிட்டுக் கோவைக் கனி போன்ற வாயில் வைத்து அருந்தினர்.

கள்ளினை நுகர்ந்து மதி மயங்கிய ஒரு பெண், இன்னும் கள்ளினைப் பருகுதற் பொருட்டு ஒரு பொற்கிண்ணத்தில் வார்க்கின்ற கள்ளின் தாரையை 'வாட்படை' என்று கருதி, "அறிவில்லாதவளே! வாட்படையினால் கிண்ணத்தைச் சிதைக்கின்றாயோ" என்று தோழியைப் பார்த்துக் கூறிச் சிரித்தாள்.

யாம் வறியம் என்று பலரிடத்தும் பலகாலும் இரந்திரந்து வறுமை நீங்காமல் மனஞ்சுழன்று அலையும் வறுமையுடையோர் ஒரு புதையலைக் கண்டால் யாவர் அகற்றினும் அதனை விட்டு அகல்வரோ? அகலார்; அதுபோலப் பூக்கள் தோறும் சென்று

சிறு சிறு துளியாகத் தேனை நக்கித் திரிகின்ற வண்டுகள், மது உண்ணும் மகளிர் தம் கையால் ஓட்டவும் ஓடாமல் பெரிய மதுச் சாடியைத் தழுவி மொய்ப்பனவாயின.

மதுவைப் பருகி மயங்கிய ஒரு பெண் தன் கைக்கிண்ணத்திலுள்ள மதுவில் தோன்றும் தன் முகத்தையும் கண்களையும் கண்டு, "தாமரை மதுக் கடலிலே முளைத்தது; அதிலுள்ள தேனை நிறையச் சுற்றி உண்ணுத பேதை வண்டுகள், அத் தேனின் சிறு துளியைச் சூழ்கின்றதே" என்று குலுங்கச் சிரித்தாள். வேருெரு பெண், தான் உண்டு மிகுந்த கள்ளினுள் பிரதிபலிக்கும் சந்திரனை நோக்கி, 'என் தலைவனைப் பிரிந்திருந்த காலத்து என்னை நெருப்பாக நின்று சுட்டனை; இன்று இங்கே வந்து அகப்பட்டுக்கொண்டாய்; இனி உன்னை விடுவேனே? இங்கேயே கிடத்தி" என்று கூறி அக் கள்ளைப் பருகாது அங்கு மற்ருெரு கிண்ணத்திஞல் மூடி வைத்தனள்.

கள்ளுண்ட மற்ருெரு பெண், கையில் பற்றிய கண்ணுடியில் தன் கரிய கண்களின் சிவப்பையும் கொவ்வைக் கனி போன்ற வாயின் வெளுப்பையும் கண்டு, "என் இன்ப நலத்தைக் கொள்ளை கொண்டு செல்லும் வஞ்சகன் யாவன்?" என்று கூறி அயலவர் நகைக்கச் சோர்ந்து வீழ்ந்தாள்.

மதுவையுண்டு மயங்கிய வேருெரு பெண், தன் வடிவத்தின் வேறுபாட்டினைக் கண்ணுடியுட் கண்டு, "இங்கிருப்பது நான் தானே? அல்லது வேறு மகளோ? பிறர் என்னைக் கைப்பற்றி ஓடினரோ? என் உயிர்க் காதலன் இங்கு வந்து என்னைத் தேடிஞல் யான் என்செய்வேன்; தோழியே! என்னைத் தேடிக் கண்டுபிடித்துத் தருவாயாக" என்று வேண்டிஞள்.

கள்ளுண்டு களித்த மற்ருெரு பெண், தான் நின்று பார்த்த நிலைக்கண்ணுடியுள் தன் பின்னே மறைந்து நின்ற கணவன் உருவமும் தன்னுருவமும் தோன்றுவதை உருத்து நோக்கி, "அயலாள் தோளைத் தழுவி இன்பக் கடலுள் மூழ்கி இருக்கின்றனையோ?" என்று கண்ணீர் வாரச் சினந்து கண்ணுடியை உதைத்தாள்.

ஆடவரும் மகளிரும் இளம் புளிப்பினையுடைய தயிர் கலந்த இனிய சுவை மிக்க சோற்றை விருந்தினரோடும் உண்பார்கள்; வசந்த காலத்திற்குரிய பண்ணுடன் தன் குரலும் பொருந்த யாழை வாசித்துக் காம வேட்கையை எழுப்புவதால் வெண்ணெயால் செய்த பதுமைபோல் உருகித் தளர்வார்கள்.

**சண்பகமாறன் தன் தேவியோடு சண்பக வனத்தில் இருத்தல்**

இத்தகைய இளவேனிற் காலத்திலே, ஒருநாள் சந்திர காந்தக் கல்லாலாகிய செய்குன்றின்கண் கோடை வெப்பத்தைப் போக்கும் பொருட்டுச் **சண்பக பாண்டியன்**, தன் தேவியோடும் சென்று தங்கியிருந்தான். மாந்தளிர் ஈன்று, கோங்கும் முல்லையும் அரும்பி, காந்தளும் செங்கமலமும் ஆம்பலும் குவளையும் சண்பகமும் மலர்ந்து ஒசிந்த மெல்லிய கொடி போன்ற தன் தேவியும் தானுமாகத் தனியிடத்தில் இருக்கும் போது, அவனுக்கு நேரே புதியதொரு நறுமணந் தோன்றும்படி தென்றல் மெல்லென வீசிற்று; சண்பகமாறன் அம் மணத்தை மோந்து, "இஃது ஒரு திவ்விய வாசம்; தென்றல், சோலையில் கவர்ந்த மணம் அன்று; காற்றுக்கும் இயல்பாக மணமில்லை; இம் மணம் எதன்கட் பொருந்திய மணமோ!" என்று நினைந்து, தன்னுடைய தேவியைத் திரும்பிப் பார்த்தான். அவளுடைய [1] ஐம்பாலுக்குகந்த கூந்தலின் மணமாயிருத்தலைக் கண்டு, "இம் மணம் வண்டுக்கும் தெரியாது" என்று எண்ணி வியப்புற்று, "இம் மணம் கூந்தலுக்கு இயற்கையோ அன்றிச் செயற்கையோ" என்று ஐயமுற்றான்.

**மாறன் பொற்கிழியினைச் சங்க மண்டபத்தின் முன் கட்டுதல்**

பிறகு பாண்டியன் அரண்மனை வந்தடைந்து, "நான் ஐயுற்ற கருத்தினை யாவராயினும் அறிந்து பாடல் செய்வாராயின், அவருக்கே இந்த **ஆயிரம் செம்பொன்** அடங்கிய முடிப்பு உரியது" என்று சொல்லி ஒரு பொற்கிழியை ஏவலாளர் கைக் கொடுத்தான். அவர்கள் அதனைப் பெற்றுச்

---

1. ஐம்பால் - முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்னும் ஐந்து வகையாக முடிக்கப்படும் கூந்தல்.

சென்று சங்க மண்டபத்தின் முன்னே கட்டித் தொங்கவிட்டனர். சங்கப் புலவர்களெல்லாம் **மரக்கலத்தில் நிறைந்த பொருளின் வகைபோல** வேறு வேறு வகையாக அமைந்த பொருளால் தம்முள் ஒன்றுபட்டு ஆராய்ந்தும், ஒவ்வொருவரும் தனித் தனியே பன்முறை ஆராய்ந்தும் பாண்டியன் உள்ளத்திலே கருதிய பொருளைத் துழாவித் துழாவி அறிய முடியாமல் இளைத்து மனம் வருந்தினர்.

**தருமி இறைவனிடம் முறையிடுதல்**

அப்பொழுது ஆதிசைவ மரபில் வந்த மாணவ நிலையினனும், தந்தைதாய் இல்லாதவனும், பிரமசாரி நிலையுடையவனும், விவாகத்தில் விருப்புடையவனுமாகிய [1] **தருமி** என்பவன், பிரம விட்டுணுக்களால் நாடரிய தேவனும், [2] உருவம் அருவம் அருவுருவம் என்னும் இவற்றைக் கடந்தவனுமாகிய சோம சுந்தரக் கடவுள் திருமுன் சென்று வீழ்ந்து வணங்கி, "எம் பெருமானே! அடியேன் தந்தை தாய் அற்றவன்; ஒரு பற்றுக் கோடும் இல்லாத சிறியேன்; விவாகத்தில் விருப்புடையேன்; அது முடித்தற்குப் பொருள் சிறிதுமில்லை. அடியேன் வேத சிவாகமங்களை யெல்லாம் ஓதினவனுயினும் இல்வாழ்க்கை யின்றி நின் திருவடியை அருச்சிப்பதற்கு உரியவன் ஆவேனே! ஆகேன்; ஆதலால், ஐயனே! நீர் யாவற்றையும் அறிவீர்! பாண்டியனுடைய மனக்கருத்தை அறிந்து, எளியேன் உய்தி பெற ஒரு செய்யுள் செய்து தந்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்தான்,

**இறைவன் 'கொங்குதேர்வாழ்க்கை' என்றபாடலை அளித்தல்**

உடனே, ஆலவாய்ப் பெருமானுகிய சோமசுந்தரக் கடவுள்,

"கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்

1 இத் தருமியின் தந்தை பெயர் 'சிவமுனி' என நம்பி திருவிளையாடல் கூறுகின்றது.

2. உருவம் - பிரமன், திருமால், உருத்திரன், மகேசன் என்னும் நான்கு உருவம். அருவம் - விந்து, நாதம், சத்தி, சிவம் என்னும் நான்கு அருவம். அருவுருவம் - சதாசிவம் என்னும் அருவுருவம் ஒன்று.

செறியெ யிற்(று) அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே[1]

என்னும் தமிழ்ச் செய்யுள் ஒன்றைச் சொல்லழகு நிரம்பப் பாடித் தருமி கையில் தந்தருளினார். அவன் அதனை வணங்கி வைப்பு நிதியைப் பெற்றவன் போல வாங்கி மகிழ்ந்து கற்று வல்ல புலவர் இருக்கும் சங்கமண்டபத்தை அடைந்து,அங்குள்ள புலவர்கள் கையிலே அப் பாடலைக் கொடுத்தான்.

**பாண்டியன் அனுமதிப்படி தருமி பொற்கிழி பெறச்செல்லல்**

சங்கப் புலவர்கள் அனைவரும் தருமி கொடுத்த செய்யுளை விரைந்து வாங்கிப் படித்துச் சொல் வளத்தையும் பொருள் வளத்தையும் சீர்தூக்கி, "நன்று! நன்று!!" என்று மகிழ்ச்சி யடைந்து, பாண்டியன் முன் சென்று அப்பாடலைக் கூறிப் பொருள் விளக்கினார்கள். பாண்டியன் தன் உள்ளக் கருத்து டன் அது முற்றும் ஒத்திருத்தலால், முடியசைத்து மன மகிழ்ந்து, "இப்பொழுதே இச் செய்யுள் கொண்டுவந்த அந் தணன் இப்புலவர்களோடு சென்று ஆயிரம் பொன்னையும் கைக்கொள்ளக்கடவன்" என்றான்.

பாண்டியன் ஏவலினாலே தருமி புலவர்களோடும் திரும்பிச் சென்று சங்க மண்டபத்தின் முன்னே தொங்கிய பொற்கிழியை அறுக்கும்போது, **நக்கீரன்** அவனை விரைந்து அணுகி, "அறுக் காதே; நில்" என்று தடுத்து, "இச் செய்யுளிலே குற்றம் இருக்கிறது" என்றான்.

**தருமி மனங்கலங்கி இறைவனிடம் சென்று முறையிடல்**

உடனே தமிழ்ப் புலமையில்லாதவனாகிய தருமி, நீண்ட பசி யுற்ற ஒருவன் உண் கலத்தில் உணவு பெற்று உண்ணும்போது உண்ணாதே என்று ஒருவன் தடுத்ததுபோல வாடி ஏங்கினான்; மெல்லச் சென்று அச் செய்யுளைச் சோமசுந்தரக் கடவுள் திரு முன் வைத்து, "கறைமிடற் றண்ணலே! நீர் பிழைபட்ட இப்பாடலைத் தந்தது என்னே? வறுமைப் பிணியினால் வருந்திப் பலநாள் நின்னை வழிபாடு செய்துவரும் அடியேன் இப்

---

1 இச் செய்யுள் குறுந்தொகையில் சேர்க்கப்பெற்றுள்ளது; நலம் புனைந்துரைத்தல் என்னும் துறை அமைந்தது.

பொழுது நின்னிடத்துப் பெறுகின்ற பொருளை இழந்தேன் என்று கூறிற்றிலேன்; எவர்க்கும் மேலாகிய இறைவனே! நீர் பாடியருளிய செய்யுளுக்குச் சில வாழ்நாட் சிற்றறிவினை யுடைய புலவர் குற்றம் கூறினால் நின்னை மதிக்க வல்லவர் யாவர்? எந்தையே! இவ்விகழ்ச்சி நின்னைச் சார்ந்ததல்லது எனக்கு யாதுளது?'' என்று கூறி மனக்கவலையால் வருந்தி நின்று இரங்கினான்.

### இறைவன் புலவர் வடிவுகொண்டு சங்க மண்டபம் அடைதல்

அப்பொழுது யாவர்க்கும் பந்தமும் வீடும் வேதமும் அதன் பயனுமான சோமசுந்தரக் கடவுள் ஒரு புலவர் வடிவங் கொண்டு வெளியே வந்தார். அவர் மகரகண்டிகை, பதக்கம், குண்டலம், மோதிரம் முதலான அணிகளை அணிந்து, விபூதியை நெற்றியிலே திரிபுண்டரமாக முத்தமிழில் வல்லவன் தான் என்பதைக் காட்டும்படி தரித்துத் திருவடியிலே பாதுகை மாட்டிக்கொண்டு, முத்துக் குடை நிழற்ற, வெண்சாமரம் வீச, சட்டையிட்ட இளைஞர்கள் அடப்பை, காளாஞ்சி, பூந்தட்டு முதலியன தாங்கிக் கற்றுச்சொல்லிகள் பின்னேவரச் சங்க மண்டபம் அடைந்தார்.

### இறைவனாகிய புலவர்க்கும் நக்கீரனுக்கும் வாக்குவாதம்

பிறகு, சோமசுந்தரக் கடவுளாகிய புலவர், புலவர் அவையினைச் சார்ந்து அங்கிருந்த புலவர்களை நோக்கி, ''எமது கவிக்குக் குற்றம் கூறினவர் யாவர்?'' என்றார். உடனே நக்கீரன் சிறிதும் அஞ்சாது, ''நானே குற்றங் கூறினேன்'' என்றான். அதனைக் கேட்ட புலவர், ''யாது குற்றம்'' என, நக்கீரன். ''சொற்குற்றமில்லை; வேறு பொருட்குற்றம்'' என்றான். புலவர், ''பொருட்குற்றம் என்னை?'' என்று வினவத் தனக்குக் குற்றம் வருவதை அறியாத நக்கீரன், ''புனைந்த மலர்களின் சார்பினால் அல்லாமல் கூந்தலுக்கு இயற்கையாக மணம் இல்லை'' என்று கூறினான். புலவர், ''[1] பதுமினியுடைய கூந்தலோ?'' என, நக்கீரன் ''அதுவும் அத்தன்மையதே!'' என்றான்.

---

1. பதுமினி - பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி என்ற நால்வகைப் பெண்களில் ஒருத்தி; உத்தம சாதிப் பெண்.

புலவர், "தேவ மகளிரின் கூந்தலோ?" என, நக்கீரன், "அதுவும் மந்தார நறுமலர் அணிந்து மணங்கமழும் தன்மையினால் செயற்கை மணமுடையதே!" என்றான். புலவர், "நீ துதித்து வழிபட்டு வணங்கும் காளத்தியப்பருடைய சத்தியாகிய ஞானப் பூங்கோதையம்மையாருடைய கூந்தலும் அத்தன்மையதோ?" என, நக்கீரன், "அதுவும் அத்தன்மையை உடையதே" என்று முற்றச் [1] சலஞ்சாதித்தான். உடனே புலவர் நெற்றிக் கண்ணைச் சிறிது காட்ட, நக்கீரன் அதற்கும் அஞ்சாது "இந்திரன் போல உடம்பு முழுதும் நீர் கண்களை உடையீராயினும் கூறிய உமது பாடல் குற்றம் குற்றமே!" என்றான்.

### சிவபெருமானாகிய புலவர் மறைந்தருளல்

அப்போது நக்கீரன் சிவபெருமானது நெற்றிக் கண்ணின் செந்தழல் பற்றிய வெப்பத்தினால் பொறுக்கலாற்றாது பொற்றாமரைப் பொய்கையிலே சென்று விழுந்து அழுந்தினன். புலவர் வடிவங்கொண்டு வந்தருளிய சோமசுந்தரக் கடவுள் திடீரெனத் திருவுருக் கரந்தருளினார்.

செய்யுள்—107

ஆகச் செய்யுள்—2539

---

1. சலம் - பொய், வஞ்சனை. சலஞ்சாதித்தல் - வைரஞ்சாதித்தல்.

## 53. கீரனைக் கரையேற்றிய படலம்

**சங்கப் புலவர்களின் மனக்கலக்கம்**

சோமசுந்தரக் கடவுளின் நெற்றிக் கண்ணின் அக்கினியினலே தாக்கப்பெற்ற நக்கீரன் பொற்றுமரைப் பொய்கையுள் வீழ்ந்து துன்பக் கடலுள் மூழ்கி வருந்தக் கபில பரணர் முதலாய மற்றைய புலவர்களெல்லாம் அதனைக் கண்டு பொருது நடுங்கினர்கள். "நக்கீரன் இல்லாது பிற புலவர் கூடிய இச் சங்கம், அரசன் இல்லாத குடியும், நடுநாயகமணி இல்லாத கண்டிகையும், மெய்யுணர்வு (ஞானம்) இல்லாதவர் கல்வியும் போன்றது; ஐயையோ! திருவாலவாயின்கண் வீற்றிருக்கும் சொற்பொருள் வடிவாயுள்ள சோமசுந்தரக் கடவுளுடன் வாதுசெய்த இப்பிழையோ மிகப் பெரியது; ஆதலின், இது தீர்வது எப்படி? இனி உய்வது அரிதரிது" என்று யாவரும் சிந்தித்து மனம் கலங்கினர்.

**புலவர்கள் சிவபெருமானையடைந்து துதித்துவேண்டுதல்**

பிறகு புலவர்கள், "சிவபெருமான், தமது திருக்கயிலாச மலையைப் பெயர்த்த இராவணனும் தன் கையிலே வீணை கொண்டு இனிய இசைபாடத் திருவுளங் கனிந்து அவன் செய்த பிழையைப் பொறுத்தருளியதுமன்றி அவனுக்குத் திண்ணிய தேரும் வலிய வாளும் கொடுத்தருளினரன்றே! இப் பெரும் பிழையை யாவரானும் நீக்குதல் அரிது. யாவருக்கும் தேவராகிய அச் சிவபெருமானே திருவுளம் திரும்பினல் இப் பிழை நீங்குவது உறுதியே" என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொண்டுபோய்ச் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி,

திருத்த னே!சர ணஞ்சர ணம்;மறைச் சென்னிமேல்
நிருத்த னே!சர ணஞ்சர ணம்;நிறை வேதநூல்
அருத்த னே!சர ணஞ்சர ணம்;திரு வாலவாய்
ஒருத்த னே!சர ணஞ்சர ணங்கள் உனக்குநாம்

என்று துதித்து, "திருமாலாகிய இடபத்தின்மேல் எழுந்தருளி அடியார்க்கு அருள விரைந்து வருபவனே! எவ்வுயிர்க்

கும் அன்னையும் அத்தனுமான நினது தண்ணிய அருளே, தாமரை மலருக்குச் சூரியன் மலர்தலையும் வாடுதலையும் செய்தல் போல, நன்மைகளையும், தீமைகளையும் செய்தார்க்கு இன்பத்தையும் துன்பத்தையும் கொடுப்பதாகும்.[1] ஆகையால், அத்தனே! நக்கீரன் கல்விச் செருக்கினால் அறிவழிந்து உமது பாடலைப் பிழை என்ற [2] விதண்டையினாலே நீர் நெற்றிக் கண்ணைத் திறந்து அதன் வெம்மையால் அவன் பொற்றாமரை வாவியில் வீழுமாறு செய்தீர்; இனிப்பெருங் கருணைகூர்ந்து இப்பிழையைப் பொறுத்தருளும்" என்று குறையிரந்து வேண்டினர்.

**இறைவன் நக்கீரன் கையைப் பிடித்துக் கரையேற்றல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் மீனாட்சியம்மையாரோடு எழுந்தருளிவந்து, நக்கீரன் அழுந்திக் கிடந்த பொற்றாமரைப் பொய்கைக் கரையின் அருகு அடைந்து புலவர் கூட்டத்துள்ளே நின்றுகொண்டு, முன்னர் அழற்கண்ணால் நோக்கியவர் அருட் கண்ணினாலே நோக்கியருளினார். உடனே நீரினுள் மூழ்கிக் கிடந்த நக்கீரன், தன்னுடைய பொறி புலன் கரணமெல்லாம் சிவபெருமானுடையனவேயாக, அவரது பெரிய கருணைக் கடலில் ஆழ்ந்து அழிதலில்லாத அன்பு வடிவமானான்; "உலக மாதாவாகிய ஞானப் பூங்கோதையம்மையாரின் கூந்தலுக்குப் பழுது சொல்லிய கொடிய நாவின் குற்றத்தை அவ் விறைவர் பொறுப்பரே அன்றி வேறு யாவர் பொறுப்பர்!" என்று கருதித் திருக்காளத்தியப்பர் மீது நேரிசை வெண்பாவினால் '**கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி**' [3] என்னும் பாமாலையைத் தொடுத்துச் சாத்தினான். அடியார்

---

1. இங்கே, "தந்தை தாய்பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொல் ஆற்றின், வந்திடா விடினு றுக்கி வளாரினால் அடித்துத் தீய, பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடின் பரிவே ஆகும். இந்த நீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவும் என்றும்" என வரும் சிவஞான சித்தியார் பாடல் சிந்திக்கற் பாலது.

2. விதண்டை - வாதத்தில் வெல்லும் வேட்கையுடையார் தமது பக்கத்தைத் தாபித்தலின்றிப் பிறர் பக்கத்தை இகழ்தல் மாத்திரமான கதை.

3. கைலைபாதி காளத்திபாதி யந்தாதி - இஃது ஒரு பாட்டில் கயிலைமலையின் சிறப்பும் அடுத்த பாட்டில் காளத்தி மலையின் சிறப்பும் மாறி மாறி அமையப் பாடிய பிரபந்தம்; நூறு வெண்பாக்களைக் கொண்டது.

கட்குத் திருவடியாகிய புணையை அருளி எழுவகைப் பிறவி யாகிய கொடிய கடலினின்றும் வீடு என்னும் கரையில் ஏற்றவல்ல அவ்விறைவன், அந்த அந்தாதியைத் திருச்செவி மடுத்து நேர்வந்து அணுகி அந் நக்கீரனுடைய கையைப் பிடித் துக் கரையின்கண் ஏற்றியருளினர்.

**நக்கீரன் இறைவன்மீது பிரபந்தம் பாடி வணங்குதல்**

நக்கீரன், கைதந்து கரையேற்றிய கருணைக் கடலாகிய சோமசுந்தரக் கடவுளையும், மீனுட்சியம்மையாரையும் வணங் கித் தீமை செய்தோர்க்குக் கோபமும், நன்மை செய்தோர்க்கு அருளும் செய்தமையைப் [1]பொருளாகச் செய்யுளில் அமைத் துப் பாடுவானுயினன் :

[2]அறனிலான் இழைத்த வேள்வி அழித்தபே ராண்மைபோற்றி!
மறனிலாச் சண்டிக்(கு) ஈந்த மாண்பெருங் கருணை போற்றி!
கறுவிவீழ் கூற்றைக் காய்ந்த கனைகழற் கமலம் போற்றி !
சிறுவனுக்(கு) அழியா வாழ்நாள் அளித்தருள் செய்தி போற்றி!

[3]சலந்தரன் உடலங் கீண்ட சக்கரப் படையாய் போற்றி !
வலந்தரும் அதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய்போற்றி!

---

1. இங்கே, "சிறியோன் சொன்ன அறிவில் வாசகம், வறிதெனக் கொள்ளா யாகல் வேண்டும், வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில(வு) அணிந்து, கீதம் பாடிய அண்ணல், பாதஞ் சென்னியுட் பரவுவன் பணிந்தே" (11-ஆம் திருமுறை நக்கீரர் - திருவெழுகூற்றிருக்கை எனவும், "பணிந்தேன்நின் பாதம் பரமேட்டி! பால்நீ(று) அணிந்(து) ஆல வாயில் அமர்ந்தாய்! - தணிந்தென்மேல், மெய்யெரிவு தீரப் பணித் தருளும் வேதியனே!, ஐயுறவொன்(று) இன்றி அமர்ந்து" (11-ஆம் திருமுறை நக்கீரர் - திருவெழுகூற்றிருக்கை இறுதி வெண்பா) எனவும், 'விரைந்தேன்மற்(று) எம்பெருமான்! வேண்டியது வேண்டா(து), இகழ்ந்தேன் பிழைத்தேன் அடியேன் - விரைந்தென்மேற், சீற்றத்தைத் தீர்த்தருளும் தேவாதி தேவனே!, ஆற்றவும்நீ செய்யும் அருள்" (11-ஆம் திருமுறை நக்கீரர் - பெருந்தேவபாணி - இறுதி வெண்பா) எனவும் வருபவை சிந்திக்கற்பாலன.

2. அறனிலான் - தக்கன். சண்டி - சண்டேசுர நாயனுர். கறுவி - கோபித்து. சிறுவன் - மார்க்கண்டேயன்.

3. சலந்தரன் - ஒரு அசுரன். கமலப்புத்தேள் - பிரமதேவன். நடுச் சிரம் - (ஐந்து சிரங்களில்) நடு நிற்கும் தலை. சிலந்தியை - சிலந்திக்கு : இங்குக் கோச்செங்கட் சோழனுக்கு.

அலர்ந்தசெங் கமலப்புத்தேள் நடுச்சிரம் அரிந்தாய்போற்றி!
சிலந்தியை மகுடஞ் சூட்டி அரசருள் செல்வம் போற்றி!

[1] திரிபுரம் எரிய நக்க சேவகம் போற்றி! மூவர்க்(கு)
அருளிய தலைமை போற்றி! அனங்கனை ஆகந் தீய
எரியிடு நயனம் போற்றி! இரதிவந்(து) இரப்ப மீளக்
கரியவன் மகனுக்(கு) ஆவி உதவிய கருணை போற்றி!

[2] நகைத்(து)அட வந்த அந்த நகுசிரந் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த திண்டிறல் போற்றி! கோயில்
அகத்(து)அவி சுடரைத் தூண்டும் எலிக்கர(சு) ஆள மூன்று
சகத்தையும் அளித்த தேவர் தம்பிரான் சரணம் போற்றி!

[3] பொருப்பகழ்ந்(து)எடுத்தோன் சென்னி புயமிற மிதித்தாய் போற்றி
இருக்கிசைத்(து) அவனேபாட இரங்கிவாள் கொடுத்தாய்போற்றி!
தருக்கொடும் இருவர் தேடத் தழற்பிழம் பானாய் போற்றி!
செருக்குவிட்டு அவரே பூசை செய்யநேர் நின்றாய் போற்றி!

[4] பருங்கைமால் யானை ஏனம் பாய்புலி அரிமான் மீனம்
இருங்குறள் யாமை கொண்ட இகல்வலி கடந்தாய் போற்றி!
குரங்குபாம்(பு) எறும்பு நாரை கோழிஆண் அலவன் தேரை
கருங்குரீஇ கழுகின் அன்புக்(கு) இரங்கிய கருணைபோற்றி!

---

1. நக்க - சிரித்த. சேவகம் - வீரம். மூவர் - தாரகாட்சன், கமலாட்சன், வித்துன்மாலி என்னும் மூன்று அசுரர். அனங்கன் - மன்மதன், கரியவன் - திருமால். கரியவன் மகன் - மன்மதன்.

2. அட - கொல்லுதற்கு. நகுசிரம் - வெண்டலை, கோயில் - இங்குத் திருமறைக்காடு என்னும் தலம். எலிக்கு - எலியினுக்கு; இங்கு மாவலிச் சக்கரவர்த்திக்கு.

3. பொருப்பு அகழ்ந்து எடுத்தோன் - இராவணன். அவனே - அவ்விராவணனே. இருவர் - பிரம விஷ்ணுக்கள். அவரே - அப்பிரம விஷ்ணுக்களே. நேர் நின்றாய் - நேரில் நின்றருளியவனே.

4. ஏனம் - பன்றி. ஏனம் அரிமான் மீன் குறள் ஆமை - இவை திருமால் கொண்ட வராகாவதாரம், நரசிம்மாவதாரம், மச்சாவதாரம், வாமனாவதாரம், கூர்மாவதாரங்களைக் குறிக்கும்; இவை இவ்வவதாரங்கள் எடுத்து இறைவனைப் பூசித்தன. அலவன் - நண்டு. தேரை - தவளை. கழுகின் - கழுகுமாகிய இவற்றின்.

[1] சாலநான் இழைத்த தீங்குக்(கு) என்னையும் தண்டஞ் செய்த
கோலமே! போற்றி! பொல்லாக் கொடியனேன் தொடுத்த **புன்சொல்**
**மாலை**கேட்(டு) என்னை ஆண்ட மலைமகள் மணாள! போற்றி!
ஆலவாய் அடிகள் போற்றி! அம்மைநின் அடிகள் போற்றி!

ஐயோ! வருந்தினேன்; அடியேனுக்கு அருள்புரிக! அருள்புரிக!'' என்று வேண்டி, இறைவனுடைய **கோபமும் பிரசாதமும்** (அருளும்) குறித்துக் [2] '**கோபப் பிரசாதம்**' என்னும் பாமாலையால் சோமசுந்தரக் கடவுளையும் மீனாட்சியம்மை யாரையும் முறையாகப் போற்றி என்று துதித்தான். பின்பு சிவபெருமானைப் [3] **பெருந்தேவபாணி**, [4] **திருவெழு கூற்றிருக்கை** என்னும் பாமாலைகளால் போற்றிப் பன்முறை வீழ்ந்து வணங்கி எழுந்தான். ஏனைய புலவர்களும் தனித்தனியே துதித்து வணங்கினர்.

**தருமி பொற்கிழி பெறுதலும் புலவர்கள் வாழ்தலும்**

சோமசுந்தரக் கடவுள், தம்மைத் துதித்த நக்கீரனுக்குத் திருவருள் சுரந்து, "நீ முன்போலவே நின்னை நன்கு மதித்த புலவர் கூட்டத்தில் இருக்கக் கடவாய்" என்று அருளி மீனாட்சி யம்மையோடும் மறைந்து திருக்கோயிலினுள் வீற்றிருந்தார்.

---

1. சால - மிகவும். புன்சொல் மாலை - இங்குக் கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி என்னும் பாமாலை.

2. கோபப்பிரசாதம் - இது, "தவறு பெரிதுடைத்தே! தவறு பெரிதுடைத்தே!" என்று தொடங்கும் ஒரு பிரபந்தம்; இணைக்குறளாசிரியப் பாவால் அமைந்தது.

3. தேவபாணி - தெய்வத்தைப் பாடும் பாட்டு. இது முழுமுதற் கடவுளைப் பற்றியது ஆதலின், பெருந்தேவபாணி எனப்பட்டது; இது, "சூல பாணியை" என்று தொடங்கும் இணைக்குறளாசிரியப்பாவால் அமைந்தது.

4. திருவெழு கூற்றிருக்கை - இஃது ஒன்று முதல் ஏழுவரையுள்ள எண்களை அமைத்துப்பாடும் ஒரு வகைச் சித்திரப் பாட்டு; இணைக்குற ளாசிரியப்பாவால் அமைந்துளது.

நக்கீரர் பாடிய கைலை பாதி காளத்தி பாதி யந்தாதி, கோபப் பிரசாதம், பெருந்தேவபாணி, திருவெழு கூற்றிருக்கை என்னும் நான்கு பிரபந்தங்களும் பதினோராம் திருமுறையில் அடங்கியவை; பிறவும் உள; ஆண்டுக் காண்க.

நக்கீரனும் மற்றைப் புலவர்களும் சங்க மண்டபத்தின் முன் தூக்கிய [1] **பொற்கிழியை அறுத்துத் தருமி என்னும் ஆதிசைவ அந்தணனுக்குக்** கொடுத்தனர்; மற்றும் பாண்டியனைக் கொண்டும் சில வரிசைகள் கொடுப்பித்துக் கல்விச் செல்வர்களாய் வாழ்ந்து வந்தனர்.

**சண்பக பாண்டியன் பல திருப்பணிகள் செய்தல்**

சண்பக பாண்டியன் நாடோறும் திருவாலவாயினில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண் அம்மையையும் சென்று தரிசித்து வணங்கிச் **சிவமே பொருள்** எனத் துணிந்த உள்ளன்பினோடு பல திருப்பணிகளை நடாத்திக் கொண்டு இனிது வாழ்ந்து வந்தான்.

செய்யுள்—*27*

ஆகச் செய்யுள்—*2566*

---

*1.* இங்குத் தருமி பொற்கிழி பெற்றதை, "நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி நற்கனகக் கிழி தருமிக் கருளினோன் காண்" (திருநாவுக்கரசர் தேவாரம் - திருப்பத்தூர்) எனவும், "பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக், கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப், பொற்குவை தருமிக்(கு) அற்புடன் உதவி, என்னுளங் குடிகொண்(டு) இரும் பயன் அளிக்கும், கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான்" (கல்லாடம்) எனவும் வருவனவற்றால் அறியலாம். ஆவணித் திருவிழாவில் நாலாம் திருநாளில் இக் கிழியறுத்தல் ஐதீகம் நடைபெறுகிறது.

## 54. கீரனுக்கு இலக்கண முபதேசித்த படலம்

### நக்கீரன் சிவ வழிபாடு புரிதல்

நான்மாடக் கூடலின்கண் எழுந்தருளிய முழுமுதற் கடவுளாகிய சோமசுந்தரக் கடவுளின் ஆஞ்ஞையினாலே சங்கப் புலவர் கூட்டத்தை அடைந்து அங்கு உறையும் நக்கீரன், அழுக்காறு நீங்கி, ஆலவாய் அண்ணல் திருவடிகளிலே அன்புகொண்ட மனத்தினனாய், "சிவபெருமானது நெற்றிக் கண்ணினால் எரிந்த மன்மதன், பிரமனாலும் திருமாலினாலும் காக்கப்பட்டவனல்லன்; அவ்வக்கினிக் கண்ணில் உண்டாகிய அனல் நம்மைச் சுட்டபோது அவ்வெப்பத்தைத் தீர்த்து, இப்பொற்றாமரைப் பொய்கையே காத்தது. ஆதலால், இதுவே எம்மை எப்பிறப்பிலும் காப்பதாகும்" என்று சிந்தித்து, நாடோறும் ஒன்றுபட்ட மனத்துடன் முக்காலத்தினும் அதில் நீராடிச் சோமசுந்தரக் கடவுளை வழிபடு நியமம் பூண்டு வந்தான்.

### இறைவன் நக்கீரனுக்கு அருள்புரியச் சிந்தித்தல்

மதுரைநாயகனாகிய சோமசுந்தரக் கடவுள் தம்மை நக்கீரன் வந்து வழிபடும் நியமத்தை நோக்கித் திருவுள மகிழ்ந்து, "இலக்கணம் இவனுக்கு இன்னும் விளங்கவில்லை. அதனாலே இவன், இது வழாநிலைச் சொல், இது வழூஉச் சொல் என்பதை அறிந்திலன். இவனுக்கு இலக்கணம் குற்றமற்ற நூற் கேள்வியின் புலமை பொருந்திய யாவரைக்கொண்டு போதிப்பிக்கலாம்" என்று சிந்திக்கலானார்.

### உமாதேவி இறைவனிடம் அகத்தியரைப்பற்றி அறிவித்தல்

அப்பொழுது உமாதேவியார் இறைவனைச் செங்கைகூப்பி வணங்கிநின்று, "எம்பெருமானே! உள்ளங்கை நெல்லிக்கனி போல யாவற்றையும் உணர்ந்த புங்கவனே! தங்கள் நினைவுக்குத் தக்கவிடை கூற வல்லவர் யாவர் உளர்? எனினும், அடியாள் உள்ளத்தில் தோன்றியதொன்றைக் கூறுகின்றேன்; ஐயனே! முன்னொரு நாள் கயிலாய மலையிலே தங்கள் திருமுன் திருமால் பிரமன் இந்திரன் முதலான தேவர்களும், சனகன்

முதலான முனிவர்களும், பிறரும் கூடியிருந்தனர். அதனாலே இப்பூமி பொறுக்கலாற்றாது வடகிழக்கெல்லை தாழ்ந்தது; தென்மேற்கெல்லை உயர்ந்தது; அதனைக் கண்டு தேவர்கள் தேவரீரைச் சூழ்ந்து வணங்கி நின்று, "எம் ஐயனே! தங்களைப்போன்ற ஒருவரை அத் தென்மேற்கெல்லையில் இருக்க விடுத்தால், இப் பூமி சமமாய் நிற்கும்" என்று வேண்டினர். உடனே தாங்கள் "நம்மையொப்பவன் கடலைக் குடித்த **அகத்திய முனிவனே**; நமது பார்வதியை யொப்பவள், அம் முனிவனின் இல்வாழ்க்கைக்கு உரியவளாகிய **உலோபா முத்திரையே**" என்று திருவாய்மலர்ந்து, அத் திருமுனியை அங்குப் போகுமாறு பணித்தருளினீர். அம் முனிவன் விடை பெற்றுப் போகும் பொழுது தங்களை நோக்கி, "அடியேன் செல்லும் நாடு தமிழ் நாடு என்பர்; அந் நாட்டு மக்களெல்லாம் இனிய தமிழை ஆராய்ந்து நூற் கேள்வியில் வல்லவர் என்பர்; அங்கே தமிழ் நூலில் வினாவினார்க்குத் தக்க விடையளித்தல் வேண்டும்; ஆதலால், இறைவனே! அடியேனுக்குச் செந்தமிழ் இலக்கண நூலை அருளிச் செய்வாயாக" என்று வேண்டினன். அவ்வாறே தாங்கள் அம் முனிவன் தெளியுமாறு முதனூலை அருளிச் செய்தீர்! அவன் அம் முதல் நூலைத் தெளிந்த பின்னும், "நித்தனே அடியேன் நினது திருவடியை எப்போது தரிசிப்பேன்" என்றான். தாங்கள், "கடம்ப வனத்திலே நம்மைத் தரிசித்து வணங்கி, நின் மனம் விரும்பியவற்றையெல்லாம் பெற்றுக்கொண்டு பொதிய மலையிலே சென்று இருக்கக் கடவை" என்று விடுத்தருளினீர். அவனும் அப்படியே அங்குப் போய், உலோபா முத்திரையோடும் இருக்கின்றான். இது தங்கள் திருவுளத்துக்குப் பொருந்துவதாயின் அவ்வகத்தியனைக்கொண்டு இந் நக்கீரனுக்குத் தமிழ் இலக்கணத்தை உணர்த்துவித்தருளும்" என்று விண்ணப்பஞ் செய்தார்.

சிவபெருமான் அதனைக் கேட்டு மகிழ்ந்து, "பெண்ணே! நீ இத்துணைநாட் செய்திகள் அனைத்தையும் மறந்திடாது இன்று கூறினை; அதனையே செய்வேம்" என்று அகத்திய முனிவனை நினைந்தருளினர்.

**அகத்திய முனிவர் சோமசுந்தரக் கடவுளை வந்து தரிசித்தல்**

எல்லாம் வல்ல இறைவனின் திருவுள்ளக் குறிப்பினை உணர்ந்த அகத்திய முனிவர், தம் முடிமீது அஞ்சலியாகக் கைகளைக் குவித்து அரிய தவமாகிய விமானத்தில் உலோபா முத்திரையோடும் ஏறிப் புறப்பட்டு வான வழியே வந்து மதுரையை அடைந்தார். பின்பு பெரிய தவமாகிய தேரினின்றும் மனைவியோடும் அவர் இறங்கித் திருக்கோயிலுட் புகுந்து செம்பவள மலைபோன்ற சோமசுந்தரக் கடவுளையும், இந்திர நீல மலை போன்ற மீனாட்சியம்மையாரையும் வணங்கிச் சுரந்து பெருகும் அன்பு உள்ளம் நிறைந்து ததும்ப, சிவானந்தம் பெருக அருகிலே இருந்தார்.

**இறைவன் அகத்தியரிடம் கீரனுக்குப் போதிக்கக் கூறல்**

அப்பொழுது நக்கீரன் வழக்கம்போலப் பொற்றாமரைப் பொய்கையில் நீராடி, இறைவனைத் தரிசிக்கும் பொருட்டு அங்கு விரைந்து வந்து சேர்ந்தனன். அந்நிலையிலே ஆலவாய் அண்ணல் அகத்திய முனிவனைத் தம் திருமுன் வருமாறு கடைக்கண் சாத்தி, "அருந்தவச் செல்வ! இந் நக்கீரனுக்குத் **தமிழ் இலக்கணம்** நிரம்பிற்றிலது; நீ நம்மிடத்தில் கேட்டுத் தெரிந்தவாறே அவ்விலக்கணத்தைக் குற்றமற இவனுக்குக் கற்பிக்கக் கடவாய்" என்று பணித்தருளினர்.

**அகத்தியமுனிவர் நக்கீரனுக்கு இலக்கணம் போதித்தல்**

பிணியும் மருந்துமாகிய சோமசுந்தரக் கடவுளின் ஆணையைச் சிரத்தினும் மனத்தினும் தாங்கிய அகத்திய முனிவர், தம்மை வணங்கி நின்ற நக்கீரனுக்கு மன மயக்கம் நீங்க இலக்கணத்தை அறிவுறுத்தினர்.

பொதுப்பாயிரம் சிறப்புப்பாயிரங்களையும், உடன்படல் முதலிய எழுவகை மதங்களையும், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பயன்களையும், குன்றக் கூறல் முதலிய பத்துக் குற்றங்களையும், சுருங்கச் சொல்லல் முதலிய பத்து அழகுகளையும், நுதலிப் புகுதல் முதலிய முப்பத்திரண்டு உத்திகளையும், முதனூலினைத் தொகை வகை விரி என்னும் முறையினால் காண்டிகையுரை விருத்தியுரைகளையும் ஐயந் திரிபறப் போதித்தார்.

**இறைவன் அகத்தியரைத் தழுவி வரமளித்து அனுப்புதல்**

அப் போதனை சக்தியைக் கண்டு அந் நூலின் பொருளே திருவுருவமாகிய முதற் குரவனும் சோமசுந்தரக் கடவுள், களிப்பும் இன்பமும் அருளும் பெருக அவ் வகத்திய முனிவனை அவன் மகிழ்ச்சிக் கடலுள் திளைக்க தமது திருக்கரங்களால் தடவி, வேண்டிய வரங்களெல்லாம் நிரம்பக் கொடுத்தருளி, இருக்கைக்குச் செல்ல விடுத்தருளினர்.

**இறைவன் உமாதேவியாரின் ஐயப்பாட்டை விளக்குதல்**

உலோபா முத்திரையோடும் அகத்திய முனிவர் விடை பெற்றுப்போனபின், உமாதேவியார் சோமசுந்தரக் கடவுளை நோக்கி, "இந் நக்கீரனுக்குத் தாங்கள் இலக்கணம் கற்பித்தருளாது இவ்வகத்திய முனிவனைக்கொண்டு கற்பித்தருளிய காரணம் என்னை?" என்று வினவ, மதுரை நாயகனும், "தம்மை நாடோறும் வழிபடுவோரும், தமக்கு நிறையப் பொருள் கொடுப்போரும், தம்மிடத்தே பொறாமையில்லாத மனத்தூய்மையுடையோரும், தமது சொல்லைக் கடவாதவருமாகிய குற்றமற்ற உள்ளத்தினர்க்கே நூல் கற்பித்தல் தருமம்" என்று அறிவுடையோர் கூறுவர்.

தன்னை நித்தலும் வழிபடுந் தகுதியோர் சாலப்
பொன்ன ளிப்பவர் தொடுத்தமற் சரமிலாப் புனிதர்
சொன்ன சொற்கட வாதவர் துகடவிர் நெஞ்சத்(து)
இன்ன வர்க்குநூல் கொளுத்துவ(து) அறன்என இசைப்ப.

நக்கீரன் நம்பிடத்தே பொறாமை கொண்டதனல் நாம் அறிவுறுத்தாமல் அவ்வகத்தியனைக்கொண்டு அறிவித்தோம்" என்று கூறியருளினர். அதனைக் கேட்டு அம்மையார் ஐயமொழிந்து மனமகிழ்ச்சி கொண்டு இருந்தார்.

**நக்கீரன் வருத்தமும் மகிழ்ச்சியும் கொள்ளுதல்**

அகத்திய முனிவரிடத்தே இலக்கணம் கற்ற நக்கீரன், பின்னர்த் தான் முன்னே செய்த செய்யுட்கள் அனைத்தையும் ஆராய்ந்து வழூஉச் சொல்லும் வழாநிலை முடிபும் உற்று நோக்கி, "நான் அறியாமையினலே, முற்றும் ஒருங்கு உணர்ந்த இறைவன் கூறியருளிய பாடலிலே பொருட் குற்றஞ் சொன்

னேனே! மறைமுடியும் தீண்டுதற்கரிய திருவடிகளை நிலமகள் தீண்டும் வண்ணம் எழுந்தருளி வந்த பரஞ்சோதியாகிய கூத்தப்பிரானுக்குப் பிழை செய்தேனே! **'அற்ப வித்தை யுடையோர் மிகவும் இறுமாப்புடையோர்'** என்னும் பழமொழி என் அளவினதாயிற்றே. [1]அட்ட மூர்த்தியாகிய இறைவன் திருவடிகட்கு அடியேன் செய்ய நேர்ந்த தீங்கினால் அடியேனை அவ்விறைவனது நெற்றிக் கண்ணில் உண்டாகிய அக்கினி சுட்டதன்றி அடியேனுடைய நெஞ்சமும் சுடுகின்றதே!"[2] என்று நினைந்து நினைந்து உள்ளே நிரம்பித் ததும்பும் துன்ப நோய் என்னும் கடலுள் ஆழ்ந்தான். **"குழந்தையைப் பெற்ற தாய் கசக்கும் மருந்தினை அதன் வாயிலே ஊட்டித் தீய பிணியை நீக்கும் தன்மை போல** அடியேனைத் தண்டித்து அறிவுறுத்திய அப் பெருங் கருணைப் பெருமானுக்கு ஏழையேன் செய்யத் தகுவது யாது?"[3] என்று எல்லையில்லாத மகிழ்ச்சிக்கடலுள் ஆழ்ந் தான்.

**நக்கீரன் மற்றைய புலவர்களுக்குப் போதித்து வாழ்தல்**

பின்பு நக்கீரன், தனக்கு அகத்திய முனிவர் இறைவன் அருளால் போதித்தருளிய இலக்கண நூலை மற்றைப் புலவர் களுக்கும் அன்பு மிகப் போதித்துச் சோமசுந்தரக் கடவுளின் திருவடித் தாமரைகளிலே பதிந்த பத்தியோடு இருந்தனன்.

செய்யுள்—30

ஆகச் செய்யுள்—2596

---

1. அட்டமூர்த்தி - நிலம், நீர், தீ, வளி, வான், ஞாயிறு, சந்திரன், உயிர் என்னும் எட்டு வடிவாகிய இறைவன். இதனை "இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான னாயெறியுங் காற்று மாகி, அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாய மாயட்ட மூர்த்தி யாகி" என வரும் அப்பர் திருத் தாண்டக அடிகளால் அறியலாம்.

2. இங்கே, "தன்னெஞ்(சு) அறிவது பொய்யற்க: பொய்த்தபின், தன்னெஞ்சே தன்னைச் சுடும்" என வரும் திருக்குறள் சிந்திக்கற்பாலது.

3. இங்கே, "கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே உண்டாமோ, கைம்மா றுரை" (திருவாசகம் - பண்டாய நான்மறை) என வரும் அடி கள் உன்னற்பாலன.

## 55. சங்கத்தார் கலகந் தீர்த்த படலம்

### சங்கப்புலவர்கள் இறைவரிடம் தம் ஐயம் தீர்க்க வேண்டுதல்

அளவிறந்த புலமை படைத்த கடைச்சங்கப் புலவர் நாற்பத்தெண்மரும் வெவ்வேறு [1] **செந்தமிழ்ப் பாக்கள்** செய்து, தம்மில் செருக்குற்றுத் தங்களைத் தாங்களே நன்கு மதித்துத் தங்களுக்குள்ளே ஒருவர்க்கொருவர் மாறுபட்டனர்; பின்பு தத்தம் பெருமை சிறுமைகளை அளக்கவல்ல முதனூலாசிரியராகிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் அடைந்து வணங்கி, "எம் பெருமானே! அடியேங்கள் தொடுத்த இப்பாடல்களுள்ளே நன்றும் தீதும் சீர்தூக்கி அவற்றின் பெருமை சிறுமைகளை எடுத்துக் காட்டி எம்முள் எழுந்த இறுமாப்பினைப் போக்கி எமது ஐயங்களைத் தீர்த்தருள்க" என்று விண்ணப்பித்தனர்.

### இறைவன் புலவராகி வந்து புலவர்களுக்கு அருளல்

மறை முதல்வனாகிய முக்கட்பெருமான் அதனைக் கேட்டருளி, அரியும் அயனும் தேட நீண்டு வளர்ந்த தீப்பிழம்பினின்றும் தோன்றியருளிய திருவுருவம்போலச் சச்சிதானந்த வடிவாய், உலகுக்கெல்லாம் ஆதரவாய் முளைத்த மூலலிங்கத்துள் நின்றும் ஒரு புலவராய்த் தோன்றி வந்து, "புலவீர்காள்! இப்பெரு நகரிலே **தனபதி**[2] என்னும் ஒருவணிகன் இருக்கின்றான். அவன் மனைவி **குணசாலினி** என்னும் பெயரினள். அவர்கள் செய்த பெருந் தவத்தினாலே வெள்ளையறிவினரைத் தழுவிய அறியாமையாகிய இருளை அகற்றும் ஞாயிறு போல ஒரு புதல்வன்[3] தோன்றியுள்ளான்; அவன் முருகக் கடவுளின் திருவவதாரம்; அழகில் மன்மதனை ஒத்தவன்; ஆனால் ஊமையன். அவனிடத்துச் சென்று நீங்கள் பாடிய கவிகள் அனைத்தையும் கூறுங்கள். அவன் புத்திக்கிசைந்த பாடல் எதுவோ,

---

1. இங்கு, 'இறையனார் அகப் பொருள் உரை' என்று இறையனார் அகப்பொருள் முதற் சூத்திர உரை கூறுகிறது.

2. இவனை, 'உப்பூரி குடிகிழார்' என இறையனார் அகப் பொருள் உரை கூறும்.

3. இவன் பெயர், 'உருத்திர சருமன்' என இறையனார் அகப் பொருள் உரை கூறுகிறது.

அதுவே யாவராலும் நன்கு மதிக்கப்படும் பாடல்'' என்று கூறியருளினார்.

அப்போது புலவர்கள், "எம்பெருமானே! அவன் ஊமையானால் அடியேங்களுடைய பாடலை விரும்பிக்கேட்டு நல்லன என்பதும் தீயன என்பதும் பகுத்தறிந்து அதன் தன்மை குன்றாமல் எவ்வாறு உரைப்பான்?'' என்றார்கள். அதற்குச் சிவபெருமான், "அவ்வணிக மைந்தனாகிய ஊமைப்பிள்ளை தனக்கிசையச் சொல்லாழத்தையும் பொருளாழத்தையும் காணின் முடியசைத்து, மலைபோன்ற தோள் புளகித்து மன மிக மகிழ்வன்; உங்களுள் நேர்ந்த கலகமெல்லாம் நீங்கி விடும்'' என்று அருளிச் செய்துவிட்டுத் திருக்கோயிலினுட் சென்றருளினார்.

**வணிக மைந்தன் மூவர் பாடலுக்குமட்டும் முடி துளக்கல்**

பின்பு சங்கப் புலவர்கள் அனைவரும் சென்று வணிகர் குலமணியை (உருத்திரசருமனை) அன்போடு அழைத்துவந்து தங்கள் கழகத்தின்கண் இருத்தி வெண்மலராலும் வெண்சாந்தினாலும் பூசித்து வணங்கி அவன் திருமுன்னே கீழிருந்து தங்கள் தங்கள் பாடல்களை மொழிந்தனர். அவன் அவற்றைக் கேட்டுச் சிலருடைய சொல்லமைதியை மகிழ்ந்தான்; சிலருடைய பொருளமைதியை மகிழ்ந்தான்; சிலருடைய சொல்லமைதியை இகழ்ந்தான்; சிலருடைய பொருளமைதியை இகழ்ந்தான்; சிலருடைய சொல்லின்பத்தையும் பொருளின்பத்தையும் ஒரு சேரப் புகழ்ந்தான்; சிலருடைய சொல்வலியையும் பொருள் வலியையும் ஆராய்ந்தறிந்து மகிழ்வுடன் இருந்தான். சங்கப் புலவர்கள் கவிகள் அனைத்தையும் உள்ளத்திற்கொண்டு அவற்றின் இயல்புகளை மெய்ப்பாட்டினாலே மகிழ்ந்தும் இகழ்ந்தும் புகழ்ந்தும் புலப்படுத்திய வணிகச்சிறுவன், **நக்கீரன், கபிலன். பரணன்** என்னும் மூவருடைய பாடல்களைக்கேட்டு உளங்கொண்டு உணரும்போது நுண்ணிய சொல்தோறும் பொருள் தோறும் நுழைந்து அவற்றின் இனிய சுவையினை அருந்தி உடல் பூரித்தான்; ஐம்புலவுணர்வுமின்றிச் சுவை வடிவாய் மெய்ம்மயிர் சிலிர்த்தான்; கண்ணீர் பொழிந்தான்; சிரமசைத்துப் பெரு மகிழ்ச்சியுற்றான்.

**சங்கப் புலவர்கள் யாவரும் நண்பராக விளங்கல்**

பல மணிகளையும் பவளங்களையும் முத்துக்களையும் நிறுத்து அளப்பவன் போலவே வணிகச் சிறுவன் [1] சொல்லாழத்தையும் [2] பொருளாழத்தையும் நாவினையே தராசாகக்கொண்டு நிறுத்துக் காட்ட நன்னெறியினை யறிந்த புலவர்கள் யாவரும் தமக்குள் உண்டான கலகத்தை விடுத்து நட்புப் பூண்டனர்.

பல்காசொடு கடலிற்படு பவளஞ்சுடர் தரளம்
எல்லாநிறுத்(து) அளப்பானென இயல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமும் துலைநாவெனத் தூக்க
நல்லாறறி புலவோர்களும் நட்டார்இகல் விட்டார்.

நக்கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய பாடல்கள் உலகிலே பரவிப் பாடல் திலகமாய்ச் சிறந்தோங்கின. பின்னர்த் தெய்வப் புலவர்கள் குற்றமற்ற நூல்களை ஆராய்ச்சி செய்து சிறப்புடன் விளங்கினர்.

செய்யுள்—14

ஆகச் செய்யுள்—2610

---

1. சொல்லாழம் - சொற் சுவை ; குணம், அலங்காரம் என்பன.
2. பொருளாழம்-பொருட் சுவை ; நகை அழுகை முதலிய சுவைகள்.

## 56. இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம்

**குலேச பாண்டியன் தன்மை**

இந்திரன் பழியை நீக்கி அவனுக்கு அரசுரிமையையும் நற்பேற்றையும் அளித்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகட்கு அன்பு கூர்ந்து சண்பக மாலை தொடுத்துச் சாத்தி வழிபாடு செய்த சண்பக மாறன் சிவபதம் அடைந்த பின்பு, பிரதாப சூரியன், வங்கிசத் துவசனன், இரிபு மருத்தனன், சோழ வங்கிசாந்தகன், சேரவங்கி சாந்தகன், பாண்டி வங்கி சேசன், வங்கிச சிரோன்மணி, பாண்டீச்சுரன், குலத் துவசன், வங்கிச பூடணன், சோம சூடாமணி, குல சூடாமணி, இராச சூடாமணி, பூப சூடாமணி, குலேசன் என்னும் பதினைந்து பாண்டியர்கள் வழிவழி வந்து பிறந்து பாண்டி நாட்டை அரசு செய்தனர். இவர்களுள்ளே குலேச பாண்டியன் அரசரில் சிறந்தவன்; இலக்கண இலக்கியங்களின் வரம்பு கண்டவன்; எத்தகைய பெருநூலையும் இனிது அறிந்தவன். அதனால் முத்தமிழ்ப் புலவர் இருக்கும் சங்கப் பலகை அவனுக்கு ஏற இடங்கொடுத்தது.

**குலேசன் கல்விச் செருக்கால் இடைக்காடனை அவமதித்தல்**

குலேச பாண்டியன், கல்வியில் மிகச் சிறந்தவன் எனக் கேள்வியுற்றுக் கலைகள் முற்றுமுணர்ந்த கபிலனிடத்துப் பேரன்புமிக்க நண்பனாகிய [1] **இடைக்காட்டுப் புலவன்,** "ஒரு தமிழ்ப் பிரபந்தம் பாடிச்சென்று அரசனைக் காண்போம்" என்று கருதி, இயற்றிய நூலுடன் சென்று அப் பாண்டியனைக் கண்டு, தான் இயற்றிய உரையமைந்த பனுவலை வாசித்தான். அப்பொழுது சொற் சுவையும் பொருட் சுவையும் பாகுபடுத்தி நுகரவல்ல குலேச பாண்டியன் மனத்தின்கண் உள்ள பொறாமையினாலே முடியை அசைக்காமலும் அகமகிழ்ச்சியை முகத்தின்கண் சிறிதும் மலர்ந்து காட்டாமலும் யாதொன்றும் உரையாமலும் வாளாவிருந்தான். கற்றோரால் விரும்பப்

---

1. இப் புலவன் ஊர் மதுரைக்குக் கிழக்கேயுள்ளதாகிய 'இடைக் காட்டூர்' என்று கூறுகின்றனர்.

பெற்ற நட்பினையுடைய இடைக்காடன், தன்னை மானமானது வெளியே தள்ளச் சென்று திருக்கோயிலை அடைந்தான்.

**இடைக்காடன் இறைவனிடம் முறையிடல்**

இடைக்காடன் சோமசுந்தரக் கடவுள் திருமுன் வீழ்ந்து வணங்கி எழுந்து, " திருவாலவாயுடைய நாயகனே! தமிழறியும் பெருமானே! அடைந்தோர்க்கு நல்ல நிதியே! பாண்டியன் செல்வப் பொருள்போல அளவிறந்த கல்விப் பொருளும் மிக்குடையவன் என்று கேள்வியுற்றுச் சொற்சுவை நிறைந்த கவி பாடிக்கொண்டு அவனிடம் சென்றேன்; சிறிதும் தலை அசைக்காமல் அவமதித்தான்; எந்தையே! இனிய கவி தொடுத்து வருணித்த புலவர்களுக்கு மனமகிழ்ந்து ஒரு பயனும் கொடாத பெரிய கடலும், உப்பங்கழியும், விலங்கும், பறவையும், மரமும், மலையும், கொடிய பாலைநிலமுமாகிய அஃறிணைப் பொருள்களுள் ஒன்றைப் போல இருந்தான். அவன் அடியேனையோ இகழ்ந்தான்; இல்லை. சொல்லின் வடிவமாகிய உமாதேவியாரையும் அச்சொல்லின் பொருளான உம்மையுமே இகழ்ந்தனன்; அதனால் எனக்கு வந்த குறை யாது?"

என்னையிகழ்ந் தனனோ?சொல் வடிவாய்நின்
னிடம்பிரியா இமையப் பாவை
தன்னையுஞ்சொற் பொருளான உன்னையுமே
இகழ்ந்தனன்;என் தனக்கியாது?(என்ன)...

என்று திருமுன்நின்று விண்ணப்பஞ் செய்துவிட்டுத் தணியாத கோபம் இழுப்ப வடதிசை நோக்கிச் சென்றான்.

**சிவபெருமான் இடைக்காடன் பின் போதல்**

இடைக்காடன் கூறிய அச் சொற்கள் திருச்செவியில் வேற்படை போலச் சென்று தைக்கக் கருணை வடிவினனாகிய சோமசுந்தரக் கடவுள், வெளியேறிய இடைக்காடனுக்கும் அவன் உயிர் நண்பனாகிய கபிலனுக்கும் மனமகிழ்ச்சி உண்டாகும் பொருட்டு ஞானமயமாகிய தம்முடைய இலிங்க வடிவத்தை மறைத்து உமாதேவியாரோடும் எழுந்து புறம்போந்து தமது திருக்கோயிலுக்கு நேர் வடக்கே வையையாற்றின்

தென் பக்கத்தே ஒரு [1]திருக் கோயிலை ஆக்கி அதன்கண் இனிதாக அமர்ந்தருளினர். சங்கப் புலவர்களும் ஒருசேர எழுந்து சிவபெருமான் போனவழியே போய் அங்குத் தங்கினர்.

### அடியார்கள் பாண்டியனிடம் நகர் பொலிவிழந்ததைக் கூறல்

அந்நாளின் பின்னுள் இராப்பொழுது புலர வரும் வைகறையிலே, திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலே இறைவனைச்சேவிக்க வந்த சிவனடியார்கள் திருக்கோயிலிலே சிவலிங்கத் திருவுருவத்தைக்காணாது, "இஃது என்ன அதிசயமோ?" என்று ஐயுற்று வருந்தி, "இதனை விரைந்து சென்று அரசனுக்கு அறிவித்தல் வேண்டும்" என்று புறப்பட்டுவரும்பொழுது, **உயிர்க் காதலரைப் பிரிந்து வாழும் பெண்கள்போலவும் இலக்குமியை நீத்த தாமரை மலர் போலவும்** பொலிவழிந்து நிற்கும் மதுரை மாநகரத்தினைக் கண்டனர்; உடனே பாண்டியனிடத்துச் சென்று மன நடுநடுங்கி நாவுலர்ந்து, "அரசே! நாங்கள் ஒரு செய்தியை இங்குச் சொல்ல அஞ்சுகின்றோம்; தங்கள் தலைவராகிய சோமசுந்தரக் கடவுளைத் திருப்பள்ளியெழுச்சியிலே தரிசிக்கச் சென்றோம்; இன்று அவ்விடத்தில் சிவலிங்கத் திருமேனியைக் காணோம்; மதுரை மாநகரமும் பொலிவழிந்தது" என்றார்கள்.

### குலேச பாண்டியன் புலம்பி வருந்துதல்

அம்மொழி அக்கினியிற் காய்ச்சிய வேல்போலப் பாண்டியனுடைய செவியிற் புகுதலும், உடனே அவன் வேரற்று வீழ்ந்த ஆலமரம்போல் சிங்காதனத்தினின்றும் மண்மேல் உடலின்கண் வடுப்பட வீழ்ந்து, உயிரொடுங்க, அறிவு ஒடுங்கிப் பாவை கிடந்தாற்போலச் சிறிது பொழுது கிடந்து, அறிவு சிறிது வர எழுந்து, அஞ்சலியாக இருகைகளையுஞ் சிரமீது கூப்பி அழுது கண்ணீர் வெள்ளத்து மூழ்கி, "எம்பெருமானே! எம் பெருமானே! அடியேன் என்ன தவறு செய்தேன்; திரிபுரம் பொடியாகுமாறு வளைத்த மேருவாகிய வில்லை உடையோய்! நீ பழைய சிவலோகத்தின்கண் உள்ளா

---

1, இத் திருக்கோயில் 'வட திருவாலவாய்' எனப் பெயர் பெறும்; இக் கோயில் தற்போது பழைய சொக்கநாதர் கோயில் என வழங்குகின்றது.

யோ? திருக்கயிலாசமலையின்கண் உள்ளாயோ? மெய்யடியாரது மனத்தின்கண் உள்ளாயோ? மறை முடியின்கண் உள்ளாயோ? இவற்றுள் எங்குச் சென்றாய்? எங்குச் சென்றாய்?" என்று சொல்லித் தளர்தலுற்றான்.

**வழுதி வையைத் தென் கரையில் இறைவனைத் தரிசித்தல்**

அப்பொழுது சிலர் பாண்டியனிடம் ஓடிவந்து, "அரசே! நாங்கள் ஒரு அதிசயங் கண்டோம்; வையையாற்றின் தென் கரையிலே – நான்முகன் இவ்வுலகைப் படைத்த நாள் முதல் ஒரு காலத்திலேனும் காணாத காட்சி! – சங்கப் புலவர்களோடும் மீனாட்சியம்மையாரோடும் சோமசுந்தரக் கடவுள் வந்து எழுந்தருளியிருக்கின்றார்" என்று கூறினர். அச்சொல் தன் செவியிலே நுழைந்து புகுந்து இழுக்கப் பாண்டியன் எழுந்து அச்சத்தோடு விரைந்து நடந்து சென்று, வையை தன் திரைக் கையாலே நறுமலரைத்தூவி வணங்க அதன் தென் கரையிலே மீனாட்சியம்மையாரோடும் வந்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்டான்; விரைந்து திருமுன் சென்று வணங்கிக் கண்ணீர் சொரிந்து பேரானந்தக் கடலுள் அழுந்திக் கிடந்து பின் எழுந்து நாக்குழறித் தடுமாறி நின்று, "ஐயனே! ஐயனே! வேதங்களும் தொடர்ந்து அறியாத திருவடிகள் சிவக்க, நகரம் பொலிவழிய உலக மாதாவோடும் இங்கு வந்து எழுந்தருளியிருக்குங் காரணம் யாது? அடியேனால் ஏதேனும் தவறு ஏற்பட்டதோ! அடியேனுடைய பரிசனங்களாலாயினும், பகைவராலாயினும், கள்வராலாயினும், விலங்கு முதலியவற்றாலாயினும்இத்தமிழ்நாட்டின்கண் இடையூறுநேர்ந்ததோ! வேதியர்கள் தம் ஒழுக்கங் குன்றினார்களோ! தவமும் தருமமும் குறைந்தனவோ! இல்லறமும் துறவறமும் தத்தம் நெறியினின்றும் தவறினவோ! எந்தாய்! அடியேன் நிகழ்ந்தது யாதென அறியேன்" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டு,

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே!
போற்றி! பெருங்கருணை! போற்றி!
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே!
போற்றி! அருள்விகிர்தா! போற்றி!

புள்ளேறு கொடியுயர்த்த புனிதன்அயன்
தேருத புனிதா! போற்றி!
வள்ளேறு சிறுகுழவி மதிநுதல்அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

பாதமலர் இணைபோற்றி! பன்னிரண்டு
கையானைப் பயந்தாய்! போற்றி!
வேதமுடி கடந்தபர ஞானத்தில்
ஆனந்த விளைவே! போற்றி!
போதவடி வாய்நால்வர்க்(கு) அசைவிறந்து
நிறைந்தபரம் பொருளே! போற்றி!
மாதவள நீறணிந்த மன்னு!அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

பொக்கமுடை யார்செய்யும் பூசைதவங்
கண்டுநகும் புராண! போற்றி!
தக்கன்மகம் பொடியாகத் திருப்புருவம்
நெறித்தகொடுந் தழலே! போற்றி!
செக்கமலக் கண்ணிடந்த கண்ணனுக்குத்
திகிரியருள் செல்வா! போற்றி!
மைக்குவளை அனையமணி கண்டா!அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

எனத் துதித்து வணங்கினுன்.

**இறைவன் பாண்டியனுக்கு அசரீரியாக மொழிதல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் "வையை நாடனே! உனது [1]**சோத்தம்** நாம் கேட்டு மகிழ்ந்தோம்; அஃது எமக்கு இனிமையுடையதாயிற்று; இன்னும் உனக்குக் கூறவேண்டியது ஒன்று உண்டு; அதனைக் கேட்பாயாக: தலங்கள் பலவற்றுள்ளும் திருவாலவாயே உயர்ந்தது; இங்கே அளவிறந்த சுயம்புலிங்கங்கள் உள்ளன; அசுரர்களும், இயக்கர்களும், சித்தர்களும், இராக்கதர்களும், தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும், தாபித்து வழிபட்ட இலிங்கங்களும் பல

1. சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ்சலி; இங்குத் துதியை உணர்த்திற்று.

உள்ளன; அவ்விலிங்கங்களுள்ளே அறுபத்து நான்கு உயர்ந்தன; அவற்றுள்ளும் எட்டு உயர்ந்தன; அவ் வெட்டும் இந்திரன் முதலிய அட்டதிக்குப் பாலகர்களாலே பூசிக்கப்பட்டவை; இவ்வெட்டினுள் நாம் வந்து எழுந்தருளியிருக்கும் இலிங்கம், [1] நமது தோழனாகிய குபேரன் பூசித்த இலிங்கம் ஆகும்; மேற்கூறிய இலிங்கங்கள் உள்ள இடம் அனைத்தும் ஒருழிக் காலத்தில் மறைந்தன; இது நம் தோழன் கண்டு வழிபட்ட இலிங்கமாதலால் நாம் இங்கே வந்து உறைந்தருளினோம்; ஆகையால், இத் தெய்வத்தானம் இன்று முதல் '**வட திருவாலவாய்**' எனச் சிறப்புறும்; நாம் கடம்ப வனத்தைவிட்டு ஒரு பொழுதாயினும் நீங்கியிருப்போமல்லோம்; நீயும் வேறு தீங்குடையை அல்லை; இடைக்காடன் செய்த செய்யுளை இகழ்ந்தாய்; அப்பொழுதே நாம் அவனிடத்து வைத்த அருளினால் இங்கு வந்தோம்" என்று ஆகாயத்தில் அசரீரி வாக்கினால் அருளிச்செய்தார்.

பாண்டியன் அது கேட்டு, "தேவர்களின் புண்ணியனே! சிறியோர் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுவது பெரியோர்க்குப் பெருமையன்றோ?" [2] என்றுசொல்லி வணங்கினான். அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் குலேச பாண்டியனுக்கு அருள் சுரந்து அரண்மனைக்கு ஏகவிடுத்துத் தாம் மீனாட்சியம்மையாரோடும் உடன் உறைந்த சங்கப் புலவர்களோடும் தம் திருக்கோயிலுட் புகுந்தருளினார்.

**பாண்டியன் இடைக்காடன் பாடலுக்குச் சிறப்பளித்தல்**

சோமசுந்தரக் கடவுளின் பின் திருக்கோயிலுக்கு நடந்து சென்று விடைகொண்டு திரும்பிய பாண்டியன் இடைக்காடனைச் சங்கப் புலவர்களோடும் அழைத்துக்கொண்டு போய்த் தனது செல்வ மாளிகையினுள்ளே புகுந்தனன்.

---

1. இங்கு, "தனதனற்றோழா! சங்கரா! சூலபாணியே" என வரும் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா அடி கருதற்பாலது.

2. இங்கே, "வெறுப்பனவே செய்யுமென் சிறுமையை நின் பெருமையினாற் பொறுப்பவனே" (அடைக்கலப்பத்து) எனவும், "பொறுப்பரன்றே பெரியோர் சிறு நாய் கடம் பொய்யினையே" எனவும் வரும் திருவாசக அடிகள் சிந்திக்கற்பாலன.

உடனே விதிப்படி வாழை கமுகுகளை நிறுத்தி, வெள்ளிய மேல் விதானம், மாலை, சாமரை, தீபம், பூரணகும்பம் கொடி முதலிய வற்ருல் அலங்கரிக்கப்பட்ட மாளிகையின்கண் இடைக்காடனை அலங்காரஞ்செய்து புலவர்கள் சூழப் பொன்னுசனத்தின் மீது இருத்தித் தானும் சிங்காதனத்தின்மேல் இருந்து, வெண்பூ மாலையும், வெண்பட்டும், முத்து மாலையும் அணிந்துகொண்டு மங்கல வாத்தியங்கள் ஒலிக்கவும், அந்தணர் ஆசி கூறவும், பெண்கள் பல்லாண்டு சொல்லவும் இடைக்காடன் இயற்றிய செய்யுளைக் கேட்டான்; இடைக்காடனுக்கும் சங்கப்புலவர்களுக்கும் முத்தாரங்களையும், பட்டாடைகளையும், ஏவல் மகளிரையும், யானைகளையும், குதிரைகளையும், விளை நிலங்களையும் நிரம்பக் கொடுத்து, அவர்கள் பின், காலினுல் ஏழடி நடந்து போய், "புண்ணியப் புலவீர்காள்! அடியேன் இப்பொழுது இடைக்காடனுக்குச் செய்த குற்றமெல்லாம் பொறுத்தருளக் கடவீர்கள்" என்று பிரார்த்தித்து வணங்கினுன். அதற்குப் புலவர்கள், "அரசே! நீ சொல்லிய சொல்லாகிய அமிழ்தத்தினுலே எங்கள் கோபத் தீ தணிந்தது; சோமசுந்தரக் கடவுளது திருவருளினுலே இன்னமும் உனக்கு அளவில்லாத புகழும் பெருஞ்செல்வமும் உண்டாகக் கடவன" என்று ஆக்கமொழி கூறிக்கொண்டு போயினுர்கள்.

**குலேசன் அரிமர்த்தனனுக்கு முடிசூட்டிச் சிவனடி சேர்தல்**

குலேச பாண்டியன் செய்த தவமானது உருமாறி வந்தாற் போலச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் சிங்கக்குட்டி போன்ற **அரிமர்த்தனன் என்னும் பாண்டியன்** மகனுக வந்து தோன்றினுன். பின்பு குலேச பாண்டியன் பல காலம் கழித்துச் சிவபெருமான் திருமுடியில் வில்லால் அடித்த அருச்சுனன்போல வரம்பெறும் தன் புதல்வனுகிய அரிமர்த்தன பாண்டியனிடத்தில் நிலவுலக ஆட்சியை அளித்துவிட்டு இறைவன் திருவடி நிழலை அடைந்தான்.

செய்யுள்—38

ஆகச் செய்யுள்--2648

---

# 57. வலை வீசின படலம்

***மீனாட்சியம்மையார் சாபம் பெறுதல்***

எல்லையில்லாத பேரழகனும், கூடல் என்னும் திருவாலவாயில் எழுந்தருளிய நீலகண்டனுமாகிய சோமசுந்தரக் கடவுள், உலகையீன்ற கன்னியாகிய மீனாட்சியம்மையாருக்குத் தனியிடத்தில் இருந்துகொண்டு அதி ரகசியமாகிய வேதத்தின் உட்பொருளை உபதேசித்தருள்வாராயினர். இறைவன் இனிய திருவருளுடன் கூறும் நால்வேதப் பொருள்களையெல்லாம் எம்பெருமாட்டியார் யாது காரணத்தாலோ அச்சமடைந்தவர்போலக் கவலையும் சிறிது தோன்ற விருப்பமின்றிக் கேட்டார்.[1] சோமசுந்தரக் கடவுள் அதனை அறிந்து பிராட்டியை நோக்கி, "பெண்ணே! இருள்போன்ற உள்ளத்தினையுடைய ஏனை மகளிர் போன்று நீ நம்மிடத்தே பராமுகமுடையையாகி வேதப் பொருளை விருப்பமின்றிக் கேட்டாய்! இக் குற்றத்தினாலே நோன்பும் அறனும் இல்லாமல் மீன் பிடித்து வாழும் இழிஞராகிய பரதவர் (வலைஞர்) குலத்து மகளாகக் கடவை" என்று பணித்தருளினர். உடனே தேவியார் அஞ்சி, "வள்ளலே! யான் தங்களைப் பிரிந்து வாழ வல்லனோ?" என்று கூறி வணங்கினர்.

சிவபெருமான் உமையின் துன்பத்தைக் கண்டு திருவுளம் இரங்கி, "கடற்கரைச் சோலையில் வாழும் பரதவ மன்னனுக்கு மகளாய் அங்கே நீ வளர்கின்ற நாளிலே நாம் வந்து உன்னைத் திருமணஞ் செய்து கொள்வோம்" என்று திருவாய் மலர்ந்து அம்மையைச் செலவிடுத்து இருந்தருளினர்.

***சிவகுமாரர் இருவர் கோபத்தின் விளைவு***

பின்பு, விநாயகக் கடவுள் அதனையறிந்து தம் தந்தையாராகிய இறைவன் திருமுன் வந்து, "இந் நிகழ்ச்சி அனைத்தும் இதனால் அன்றோ விளைந்தது?" என்று அங்கிருந்த புத்தகச்

---

1. இறைவன் பரதவர் தலைவனுக்கு அருள்புரியுங் குறிப்பினன் என்பதை உணர்ந்து இறைவி அதற்கேற்ப இங்ஙனம் அசட்டையாகக் கேட்டார் எனக் கொள்ளுதல்வேண்டும்.

சுவடிகளையெல்லாம் தம் துதிக்கையினாலே கவளத்தை அள்ளு தல்போல அள்ளிக் கடலின்கண் எறிந்தார். முருகக் கடவுளும் தந்தையார் திருக்கரத்தில் இருந்த **சிவஞானபோத** நூலை விரைந்து பிடுங்கிக் கடலிலே எறிந்தார்,

**இறைவனின் சீற்றம்**

அப்போது நான்மாடக் கூடலின் இறைவர் திருநந்தி தேவரை வெகுண்டு நோக்கி, "நாம் இருக்கும் சமயம் அறியாது இவர்களை உள்ளே விடுத்து நீ வாளா இருந்தனை; அதனால் தீங்கு விளைந்தது; உனக்கும் நேர்ந்த இத்தீங்கு ஒழிய இப் பொழுதே நீ சுறுமீன் வடிவுகொண்டு கடலிற் புகுந்து உழலக் கடவாய்" எனச் சபித்தருளினார்; விநாயகக் கடவுளுக்கு விதிக் கும் சாபம் தம்மையே சாரும் ஆதலால், அவருக்குச் சாபம் விதித்திலர்; முருகக் கடவுளை நோக்கி, "நீ வணிகர் குலத்தில் [1] ஊமைப் பிள்ளையாகக் கடவாய்" என்று பணித்தருளினார்.

**நிகழ்ச்சித் தொகுப்பு**

இவ்வாறு இறைவன் ஆணையினாலே இறைவி வலைஞ மாது ஆனதும், திருநந்திதேவர் சுறு மீனாகிக் கடலிற் புக் கதும், அருள் வள்ளலாராகிய இறைவன் அம் மீனைப் பிடித்து அம்மாதினை மணந்து சென்றதும், அம்மையார்க்குத் திரு வுத்தரகோசமங்கையில் உபதேசஞ் செய்தருளியதுமாகிய இவற்றை முறையாகக் கூறுவோம்:

**வலைஞர் சேரியின் வருணனை**

வையையாற்றின் அழகிய துறைகள் பொருந்திய பாண்டி நாட்டிலே கீழைக் கடலின் ஓரத்திலே [2] பாக்கம் என்னும் ஊர் (நெய்தனிலத்தூர்) ஒன்று உள்ளது. அஃது ஆழ முடைய உப்பங்கழியாகிய அகழியினாலும், மிக உயர்ந்து வளர்ந்த தாழையாகிய பெரிய மதிலாலும் சூழப்பெற்றது.

---

1. இந்த ஊமைப்பிள்ளை மதுரையில் (மதுரையை அடுத்த உப்பூர் என்னும் ஊரில்) உப்பூரி குடிகிழார் (தனபதி) மகன் உருத்திர சருமனாகத் தோன்றியதை இறையனார் அகப்பொருள் முதற் சூத்திர உரை கூறும்.

2. இப் பாக்கம் 'உப்பூர்' எனப் பெயர் பெறும். இஃது உருத்திர சருமனுடைய ஊர். இவ்வூர் பரமக்குடிக்கு வடகிழக்கில் உள்ளது.

இதன் அழகை என்னென்று கூறுவது? வளைந்த முட்களை யுடைய இலைகளால் மறைபட்டுத் தம்முன் எதிரெதிரே நெருங்கிக் காற்றுத் தள்ளுவதால் மலரோடு நின்று அசையும் தாழைகள், வளைந்த உடலுடன் கையிலுள்ள கேடகமாகிய வட்டத்துள் மறைந்துநின்று வாளை விதிர்த்துப் போர்புரியும் வீரர்களை ஒத்தன. புலால் கமழும் மீன்களை உலர்த்தும் ஒலியும், அவற்றை உண்ண வரும் பறவைகளை ஓட்டும் ஒலியும், அவற்றை விலை கூறும் ஒலியும், மீன்களை வாங்குவோர் ஒலியும், பரதவர் வலை வீசும் ஒலியும், அவ்வலையை இழுக்கும் ஒலியும் ஒன்று சேர்ந்து கடலின் ஒலியை அடக்கி எழும். நுளைச் சிறுமியர்கள் வைத்து விளையாடும் பாவைக்கு மலர்ந்த தாழை கள் அருகிருந்து மகரந்தமாகிய சோற்றை ஊட்டும்; கடலின் அலைகள், முத்து மாலைகளைப் பூட்டும்; புலிநகக் கொன்றை மரங்கள் மணமிக்க தம் மலர்களைச் சூட்டும்.

மேலும் நீர் நிறைந்த கடலின்கண் நீராடி நெடுந்தூரம் வழிச் செல்லும் யாத்திரைக்காரர்களுக்குத் தாழைகள் அறநூல் உணர்ந்தனபோலப் பொதிந்த சோற்றினை (மூடிய மகரந்தத்தை) அளிக்கும். மலர்ந்த புன்னை மரங்கள் முத்தை யும் (அரும்பையும்), பொன்னையும் (மலரையும்), பவளத்தை யும் (பழத்தையும்) திரட்டி அயலோர் அறியுமாறு கொடுக்கும்.

மீன்களை விற்கும் வலைஞர்களின் சிறு குடில்கள்தோறும் கடலில் உண்டாகிய பவளக் கொடிகள் போய்த் தாவி மேலே படர்ந்து நிற்கும்; வலைச்சியர் தம் முன்றிலில் உலர்த்தும் மீன்களைக் கடலின் அலைகளால் வீசப்படும் பெருமுத்துக்கள் சிந்தத்துத் தள்ளும். நுளைப் பெண்கள் ஆம்பல் மலர் போன்ற வாயினைத் திறந்து கூவி விற்கும் கயல் மீன்களுக்குப் போட்டியாக அவர்களுடைய இரு கண்கள் அக்கயல் மீன் களின் தோற்றத்தை அளிக்கும்; அவர்களின் கூந்தலிலுள்ள தாழை மலர், மீன்களின் நாற்றத்தைப் போக்கும். உப்பங் கழிகளிலே மலர்ந்த ஆம்பல் மலரிலே அல்லாமல் கள்ளுண்ட நுளைச்சியரின் வாயாகிய ஆம்பல் மலரிலும் வண்டுகள் மொய்க்கும்.

**பரதவ அரசனின் தன்மை**

இத்தகைய நுளைச் சேரியிலே [1] ஒருவன், முற்பிறப்பிற் செய்த பெருந் தவத்தினால் தேவர்களினும் தூய்மையுடையவனாய் இருந்தும், சிறிது தீவினையைச் செய்ததனால் பரதவர் குலத்தில் வந்து பிறந்தான். அவன், பரதவர்கள் அனைவர்க்கும் அரசன்; கரிய நிறத்தினரான வலைஞர்கள் படகுகளைச் செலுத்திக் கடலில் பிடிக்கும் மீன்களைத் திறையாகக்கொண்டு நிறைக்கப்படும் வாயிலையுடையவன்; சிவபெருமான் திருவடியிலே பதிந்த பேரன்புடையவன்.

**உமாதேவியார் வலைஞர் மகவாகத் தோன்றுதல்**

அப் பரதவ மன்னன் பன்னாட்கள் வரை மகப்பேறின்றி இம்மைக்கும் மறுமைக்கும் ஒரு பற்றுக்கோடில்லாதவன் போல மிக்க வருத்தங்கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் தன் கிளைஞருடன் கடல் மீனைப் பிடிக்கும் பொருட்டுக் கடலுக்குச் செல்லும்பொழுது அக் கடற் கரையின் ஒரு பக்கத்திலே ஒரு புன்னைமர நிழலிலே, இமய மலையரசன் செய்த தவத்தினால் பதுமை என்னும் மலரோடையிலும். பாண்டியன் செய்த தவத்தினால் வேள்வியிலும் மகவாக வந்து வெளிப்பட்ட அம்மையார், இறைவன் ஆணையினால் பரதவராசன் முற்பிறப்பிற் செய்த தவப்பயன் செலுத்த, தமது இச்சையின் வழியே ஒரு குழந்தையாகி, அப்பரதவ மன்னன் அன்பினுக்குத் திருவுள்ளம் இரங்குவார் போலச் சிவந்த திருவாயினைத் திறந்து அழுதுகொண்டு கிடந்தார். வலைஞர் கோன் குழந்தையைக் கண்டான். அப்போது மகிழ்ச்சி மிக, "கரிய கடலின்கண் தோன்றிய திருமகளோ? நீரிலே மறைந்துறையும் நீரர மகளோ? கானகத்தில் உறையும் கானர மகளோ? இவர்களுள் யாரோ ஒரு பெண், குழந்தையாகிக் கண்கள் இமைக்க இங்கு இருந்தனள்; மகப்பேறில்லாத எளியேனுக்குச் சோமசுந்தரக் கடவுள் அருள் சுரந்து தந்தருளிய குழந்தை இது" என்று கருதி, வலத்தோள் துடிக்க அன்பு கூர்ந்து எடுத்துத் தழுவிக் கற்பினிற் சிறந்த தன் மனையாள்

1. இவன் பெயர் 'அதியரையன்' என நம்பி திருவிளையாடல் கூறுகிறது. அதி - வலைச்சாதி. அதிபத்தர் என்பது போல;

கையிற் கொடுத்தான். அவள், பிறவிக் குருடன் பொருளை அறியுமாறு கண் பெற்ருற்போலவும், மிக்க வறியவன் பெருநிதி பெற்ருற் போலவும் அம் மகவை வாங்கினுள். வலைஞர்கள் கடலைப்போல ஆரவாரித்தனர்; வலைச்சியர் கை கொட்டிக் குரவைப் பாடல் பாடினர்.

வலையர் கோமானின் மனைவியும் தான் வருந்திப் பெருது பெற்றெடுத்த அக் குழந்தையைத் தழுவி முத்தமிட்டு உச்சி மோந்து பேரானந்தத்தோடு, "இக் குழந்தை அழகாகிய ஒரு மாணிக்க விளக்கு ஆகும்" என்று கருதிப் போற்றி வளர்ப்பா ளாயினள்; மீன் விற்றுச் சேர்த்த பசிய பொன்னுற் செய்த பல அணிகளையும், காசுடன் முத்துக்களும் பாசி மணிகளும் இடையிட்டுக் கோத்த மாலைகளையும், சங்குமணி மாலைகளையும் தங் குலத்துக்கிசைய குழந்தைக்கு அணிந்து, அளவற்ற பேரழகிற்கு ஓர் அழகு செய்வதைப்போல அழகு செய்து பார்த்து மகிழ்ச்சி கொண்டாள்.

**அம்மையார் சிறுமியர்களுடன் விளையாடுதல்**

அம்மையார், பரதவச் சிறுமியர் கூட்டத்தோடும் கடற் கரைக்குச் சென்று மணலால் சிற்றில் கோலி விளையாடியும், முத்துக்களைச் சிறு முறத்தால் கொழித்தும், தாழைகளும் புலி நகக் கொன்றைகளும் சூழ்ந்த சோலையில் அழகிய மலர்களைக் கொய்தும், முகில் போன்ற கூந்தல் பின்னே தாழக் கடலில் நீராடியும் மகிழ்ந்தாள்.

பசிய கொடிபோன்ற இடையும், தன் உயிர்த் துணைவ ராகிய அண்ணலார் குறிப்பிட்ட நாளும் சிறிது சிறிதாகக் குறையவும், அவ்விறைவனிடத்தில்வைத்த அன்பு மேன்மேலும் பெருகவும், நாடோறும் உயிர்களனைத்தையும் வளர்க்கும் அம்மையார் உடல் வளர்ச்சி செவ்வனே பெற்று வந்தாள்.

**நந்தி தேவராகிய சுரு மீன்**

திருவாலவாயுடைய இறைவன் பணித்தருளியபடியே இளம் பிறையணிந்த சடைமுடியும் நான்கு திருக்கரங்களும் பொருந்திய திருநந்தி தேவரும் சுருமீன் வடிவங்கொண்டு அலைகளையுடைய கடலிலே சேர்ந்து மூழ்கி இனிதாக இருந்தார்.

அப்போது நந்தி தேவராகிய அச் சுறாமீன், விநாயகக் கடவுளும் முருகக் கடவுளும் முன்னர்க் கடலின்கண் எறிந்த நூல்களனைத்தையும் தன் சிரசின்மீதும், சிவபெருமானுடைய திருவடியைத் தன் மனத்தினுள்ளும் அடக்கிக்கொண்டு பாற்கடலைக் கலக்கிய மந்திர மலையாகிய மத்தைப் போலக் கடலைக் கலக்கும்; தோணியையும், படகினையும், சோங்கினையும் (ஒரு வகை மரக்கலத்தினையும்) கிட்டி அவை பிளவு படுமாறு விரைந்துசென்று தட்டும்; சோங்குகள் சரக்கோடு கவிழும்படி அவற்றின் கீழ்சென்று முட்டும். தன் மேலே சீறிவரும் சுறாமீன்கள் அனைத்தையும் கொம்பில் கோத்துப் புறத்தில் வீசும்.

நந்தியாகிய அச் சுறாமீன் கடல் நீரைக் கலக்குதலாலும், நூல்களைச் சிரத்தில் தாங்கி மனம் வருந்தும் புலவர்க்கு (வானவர்க்கு) அமுது அளித்தலாலும் மந்தர மலையை நிகர்த்தது. அது, மோதும் அலைகள் வழியே சென்று நுளைச் சேரியிலுள்ள குடிசைகளைத் தள்ளும்படி துள்ளும்; மேகங்களின் கருச் சிதையும்படி பாயும்; கடலிலே மரக் கலங்கள் போகா வண்ணம் அங்குமிங்கும் அலைந்து உலவும்.

**பரதவர் சுறாமீனைப் பிடிக்க முயலுதல்**

நெய்தனிலத் தலைவன் அச்சுறாமீன் புரியும் இடையூற்றினைக் கண்டு, "இஃது எத்தன்மைத்து; நாம் அதனை எவ்வாற்றால் பிடிப்பது" என்று கருதித் தம் வலைஞர்களுடன் பெருவலை யேந்திப் படகினைச் செலுத்திச் சென்று, அதன்மேல் பெரிய வலைக்கயிற்றைப் பிடித்து வலை வீசினன். அம்மீன் அப்படகினைச் சுற்றிப் பாய்ந்து தன் வாயிற் கொம்பினால் கிழித்தது. உடனே பரதவன் வேறொரு படகின்மேற் பாய்ந்து வலைவீச, அம்மீன் அப்படகினையும் உடைக்க, மற்றொரு சோங்கின்கண் ஏறி, நீண்ட வலையை வீசினான். பரதவ மன்னன் வெவ்வேறு கலங்களில் புகுந்து வலைவீசிஉழலுதல், ஓருயிர் வினைவயத்தால் வெவ்வேறு உடலின்கட் புகுந்து உழலுதலை ஒக்கும்.

வலைஞர்கோமான் முன்னே வலையை வீசினால் பின்னே எழுந்தும், பின்னே வீசினால் முன்னே எழுந்தும், வலப்பக்கத்தில்

வீசினுல் இடப்பக்கத்தில் எழுந்தும், இடப்பக்கத்தில் வீசினுல் வலப்பக்கத்தில் எழுந்தும் அம்மீன் திரியும். அஃது ஒரு தரம் வலையிலே அகப்படும்; 'அகப்பட்டது' என்று மனமகிழ்ந்து வலையை இழுப்பவனுடைய உள்ளங் கலங்க அவ்வலையினின்றும் வழுவிப் பொருளாசை பிடித்த விலைமகளிர் போலவும், ஆன்ம போதத்தால் அறிபவர்க்கு அறிதற்கரிய சிவபரம் பொருள்[1] போலவும் ஓடிவிடும்.

எறிவ லைப்படும் அகமலர்ந்(து) ஈர்ப்பவன் உள்ளம்
மறுத லைப்பட வலையினும் வழீஇப்பொருள் ஆசை
நெறிம லர்க்குழல் நல்லவர் நினைவென நினைவுற்(று)
அறிப வர்க்கரி தாம்பரம் பொருளென அகலும்.

**பரதவர் கோமான் சுரு பிடிபடாததைக் கண்டு வருந்துதல்**

பரதவராசன் தன் ஏவலாளருடன் அம்மீனைப் பிடித்தற்கு வேண்டும் தொழில்களெல்லாம் செய்யவும், அஃது அகப்படாமையால், "இனி யாவரே இதனைப் பிடிக்க வல்லவர்" என்று கருதி மிக வருந்தினுன். ஏவலாளரும் பெருங்கவலை கொண்டனர். பிறகு பரதவர் தலைவன், "இக் கடலின்கண் மந்தர மலைபோலக் கிடந்து கலக்கும் சுறுமீனை இங்கு வந்து பிடிப்பவன் எவனே அவனே என்னுடைய மகளுக்கு மணமகனுதற்கு உரியவன்" என்று உறுதிகொண்டிருந்தான்.

**அம்மையாரை மணக்க ஐயன் வருதல்**

சோமசுந்தரக் கடவுள், "பரதவர்குலத்தில் தோன்றி வாழும் அம்மையாரைப் பிறர் வந்து மணம் முடிக்கும் பொருட்டுக் கேட்டு, அவர் வெறுத்து இல்லை என்று போதற்கு முன்னரே அவருக்கு மீன்பிடிக்கும் வலைஞன் உருவினை நாம் எடுத்துப்போவோம்" என்று திருவுளங்கொண்டு மிகக் கரிய இருளை முகந்தாற்போன்ற வடிவுடன் கச்சினை இறுக்கி, உடைவாளை அணிந்து, தோளின்கண் மேலாடை தாங்கித் தேன் கொப்பளிக்கும் நெய்தல் மலர்மாலையைத் தலையிற் சூடிய ஒரு

1. இங்கு, "தன்னறி வதனுல் காணும் தன்மையன் அல்லன் ஈசன்" என வரும் சிவஞான சித்தியார் அடி கருதற்பாலது.

வலைமகன் திருக்கோலம் தாங்கியருளினர். உலக முழுதையும் ஈன்றருளிய அங்கயற்கண் அம்மையை அருளில்லாதவர் போல, வலைஞர் குலக் கன்னி ஆகுமாறு சபித்த காரணம் யாதோ? ஆதலால், சாபத்தால் பற்றப்படாத சோமசுந்தரக் கடவுளும் வலைஞர் திருவுருவம் தாங்கி வரவேண்டியதாயிற்று. ஆலவாய் அண்ணலின் செய்கை நன்று! நன்று! இஃது அழகாயிருந்தது! சிவகணத் தலைவருள் ஒருவன் வலைஞர் வேடம் எடுத்து, வீசும் வலையைத் தோளின்கண் இட்டு, முதுகின்புறத்தில் மீன் இடும் கூட்டினைத் தொடுத்துத் தாங்கித் தம்பின்னே நடந்துவர, நெய்தனிலத்தூரை அடைந்து, உப்பங் கழியிலுள்ள முள்ளிக்காட்டினையும், தாழைக்காட்டினையும், நெய்தல் மலரைச் சுழித்து அலைக்கும் கிடங்குகளையும் கடந்து, அழகிய சோலைகள் சூழ்ந்த வலைச்சேரியை ஆலவாய் அண்ணல் அடைந்தனர்.

**இறைவனும் பரதவர் தலைவனும்**

அப்போது அவ்வூரிலுள்ள வலைஞர் கோமான் உள்ளத்தில் ஒரு வியப்புத் தோன்றுமாறு எழுந்தருளிவரும் காளைப் பருவ முடைய வலைமகனரது வருகையைக் கண்டு, "அழகினையுடைய நம்பி! நீ யார்? செப்புக" என்று வினவினன். நான்மறை களாலும் அறியவொண்ணாத இறைவராகிய வலைஞர், "நான் மதுரையில் வலைஞர்களுக்கெல்லாம் தந்தைபோன்று விளங்கும் அரசனாய் உள்ளவனுடைய மைந்தன்; படைத்துக் காத்து அழிக்கவும் வல்லனாவேன்; அன்றியும் **பெரிய மீன்களனைத்தும் அகப் படுமாறு** வலைகொண்டு எறிவதிலும் வல்லவனாவேன்" என்றார். அதுகேட்ட வலைஞர்கோமான், "இவன் உண்மை வலைஞன் அன்றி வலைஞர்கோலம் பூண்டு நடிக்கும் மகனோ? இவன் முன் கூறிய சொல் ஒன்று; இப்பொழுது சொன்ன சொல் ஒன்று; இவ்விரண்டையும் சோதித்துக் காண்போம்" என்று கருதி, "ஐயனே! இந்தத் துறையிலே ஒரு வலிய சுறாமீன் மிக்க சீற்றங்கொண்டு திரிகின்றது; அதனை நீ குறிவைத்துப் பிடித்தா யாயின் எனது மகளை உனக்குத் திருமணம் செய்து தருவேன்" என்று கூறினன்.

**இறைவராகிய வலைஞர் படகில்சென்று மீனைப்பிடித்தல்**

ஆண் சிங்கத்தை ஒத்த வலைஞனாகிய பெருமான், தம்முடன் வலைஞன்கோலத்தில் வந்த சிவகணநாதனின் தோள்மீதிருந்து மாலைபோல் அசையும் விளிம்புகளில் கோத்த ஈயமணிகள் பொருந்திய வலையை வாங்கிக்கொண்டு, கடலைக் கிழித்துச் செல்லும் ஒரு படகின்மீது பாய்ந்து சென்று, நன்றாகக் குறி பார்த்துத் தம் உடலினைத் திருக நின்று, விளிம்பிற் பொருந்திய மணிகள் ஒளிவீச, வீசும் வேகத்தில் எங்கும் ஒலிபரவ வீசினார். பாம்பின் வாயில் அகப்பட்ட மீனைப்போல் இறைவன் வீசிய வலையின்கண் சுறாமீன் சிக்கிக்கொண்டது. குற்றமற்ற அடியார் களின் அன்பாகிய வலையின்கண் அகப்படும் பெருமான்[1] தாவி வீசிய வலையினில் சிக்கிய சுறாமீனை இழுத்துக் கடற்கரையின் மேல் போட்டார்[2]. அப்போது வலைஞர்கள், மதுவினில் மொய்க்கும் வண்டுகளைப்போல் நெருங்கிவந்து கூடி ஆரவா ரித்து, "வலைஞர்கோனும் அவன் கிளைஞரும் கூடிப் பலநாள் வரையில் முயன்று வலைவீசியும் அகப்படாதமீனினை இந்த இளைஞன் ஒருவனே ஒருமுறை வலையினை வீசிச்சுருக்கி இழுத்துக் கரையிலிட்டான்! ஆதலால் இவனே நம் குலத்திற்குரிய ஒரு தெய்வ மகன் ஆவான்" என்று கூறினர்.

**பரதவர் தலைவன் தன் மகளை வலைஞனுக்கு மணம்புரிதல்**

தாழைகள் நிறைந்த கடற்கரைத் தலைவன், மனமிக மகிழ்ந்து, நெய்தனிலப் பறை ஒலிக்க, வலைச்சியர் குரவையாட, வலைஞராய் வந்த பெருமானுக்குத் தம் மகளைத் திருமணம் செய்துகொடுத்தான்.

---

1. இங்கு, "பத்தி வலையிற் படுவோன் காண்க" (திருவாசகம் - திருவண்டப் பகுதி) என வரும் அடி சிந்திக்கற்பாலது.

2. இங்கே, "அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி" (திருவா சகம் - போற்றித் திருவகவல்) எனவும், "ஆரா வமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும் பேராசை வாரியனை" (திருவாசகம் - திருவம்மானை) எனவும், "மணிவலை கொண்டுவான் மீன்விசிறும் வகையறி வாரெம் பிரானாவாரே", "ஏதில் பெரும்புகழ் எங்களீசன் இருங்கடல் வாணற் குத் தீயிற்றோன்றும், ஒவிய மங்கையர் தோள்புணரும் உருவறி வாரெம் பிரானாவாரே" (திருவாசகம் - திருவார்த்தை) எனவும், "மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே" (திருவாசகம் - திருப் படையாட்சி) எனவும் வரும் அடிகள் கருதற்பாலன.

**சிவபெருமான் உமாதேவியாரோடு காட்சியளித்தல்**

— அப்போது திருமணக் கோலம் பூண்ட வலைஞராகிய சிவபெருமானும், வலைஞர்கோன் மகளாகிய உமாதேவியாரும் விண்ணில் இடபாரூடராய் எழுந்தருளித் தமக்குரிய சகளத் திருமேனியுடன் தோன்ற, கடற்கரையில்கிடந்த வரால்மீனாகிய திருநந்தி தேவரும் பழைய வடிவத்தைப் பெற்றுத் திருமுன் வந்து தோன்றினர். பரதவர் தலைவன், வெள்ளிய இடப வூர்தியில் காட்சியளித்த சிவபெருமான்[1] உமாதேவியார் என்னும் இருவருடைய கிருபாநோக்கம் பெற்றமையால், முன்வினைச் சார்பினால் பந்தித்த இப்பிறவியின் சிற்றறிவு ஒழிந்து நல்லறிவு தோன்றச் சிவபெருமானுடைய திருவடிக்கீழ் வீழ்ந்து வணங்கி, "உயிர்களிடத்தில் இரக்கமில்லாத இழிந்த பிறவியை எடுத்துழலும் அறிவிலியாகிய என்னை இன்று காத்தற்பொருட்டு, என்னைப்போலவே வடிவந்தாங்கி வந்த அருளுருவே! போற்றி! பவளம் போன்ற சிவந்த வாயினை யுடைய அம்மையைத் திருமணம் புரிந்து, என் பாசம் ஒழியுமாறு வெள்ளிய விடையின்மேல் நின்று காட்சிதந்தருளிய கருணையே! போற்றி!"

இரக்கமில் இழிந்த யாக்கை எடுத்துழல் ஏழை யேனைப்
புரக்கஇன்(று) என்போல் வந்த புண்ணிய வடிவம் போற்றி!
அரக்கெறி பவளச் செவ்வாய் அணங்கினை மணந்(து)என் பாசங்
கரக்கவெள் விடைமேல் நின்ற கருணையே போற்றி! (என்றான்)

என்று கூறித் துதித்தனன்.

**சிவன் பரதவ ராசனுக் கருளி உத்தரகோசமங்கையடைதல்**

சோமசுந்தரக் கடவுள், தம்மைத் துதித்து நின்ற பரதவ ராசனை நோக்கி, "அன்பனே! நீ பல நாட்கள் வரை மகப்பேறின்றி வருந்தினது கண்டிரங்கி நாம் உமாதேவியாரை நினக்கு மகளாக அளித்துப் பின், முறைப்படி வந்து மணந்து

---

1. இறைவரின் கருணை நாட்டத்தால் பிறவிச் சார்பு நீங்குதலை, "அங்கணர் கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம் எய்தித், தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட்டகல" எனவரும் பெரிய புராண அடிகளாலும் அறியலாம்.

கொண்டோம்; இனி, நீ இந்நிலவுலகினில் குபேரனைப்போல் பல போகங்களை அனுபவித்து வாழ்ந்து பின் நமது சிவ லோகத்தை வந்து அடைவாயாக[1]" என்று திருவருள் புரிந்து திருநந்திதேவரோடும் அடியார் கூட்டத்தோடும் [2] **உத்தரகோச மங்கை** என்னும் தலத்தை அடைந்தருளினர்.

**இறைவன் உமாதேவியாருக்கு வேதங்களை உபதேசித்தல்**

சிவபெருமான் உத்தரகோசமங்கையில் எழுந்தருளி யிருந்து உமாதேவியார் வணங்கிக் கேட்ப, வேதத்தின் இரகசியப் பொருளையெல்லாம் ஒருசேரத் திரட்டித் திருப்பாற் கடலில் தோன்றிய அமுதத்தினைப்போல் அம்மையாருக்கு உபதேசித்தருளினர். அப்போது தம்மிடம் அன்புகொண்ட **அறுபதினாயிரம் சிவனடியார்களுக்கும் சிவயோகிகளுக்கும்** வேதப் பொருளை உபதேசித்தருளி அவர்களுடைய பற்றினை ஒழித்து, வீடு பேற்றை அருளினர்; பிறகு அங்கயற்கண் அம்மை யாரொடும் மதுரையினை அடைந்தருளினர்.

செய்யுள்—64

ஆகச் செய்யுள்—2712

---

1. இங்கு முதனூலில் இறைவன் பரதவ ராசனுக்கு அப்பொழுதே சாரூபங் கொடுத்து விமானத்திலேற்றிக் கயிலாய மலைக்கு அனுப்பினர் எனக் கூறப்பட்டுள்ளது.

2. உத்தரகோசமங்கை - இஃது இராமநாதபுரம் இரயில்வே நிலயத்திலிருந்து தெற்கே சுமார் ஏழு மைலில் உள்ளது.

# 58. வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

## திருவாதவூரின் சிறப்பு

ஒருவனைப் பற்றிய வறுமையினையும் அவனால் பிறர்க்கு ஆகும் பயனையும் ஆராய்ந்து வழங்குபவர்போல, வயல் குளம் ஏரி முதலிய நீர் நிலைகளை நிரம்பச் செய்து, அதனால் அறத்தினைப் பெருக்கி, "உலகினைச் சூழ்ந்துள்ள பெருங் கடல் ஒருவருக்கேனும் பயன்படாத உவர் நீரையுடையது" எனக் கருதி அதில் பாய்ந்தறியாத நீரினையுடைய **வையை யாற்றின்** கரையினில் **திருவாதவூர்**[1] என்னும் ஒரு திருப்பதி உள்ளது. உடலினின்றும் நீங்காத உயிர்போல அந்நகர் முழுதும் திரு விழாக்கள் நீங்கா; வீடுகள் அனைத்தினும் விருந்துகள் நீங்கா; அங்கு மகிழ்ச்சியை ஊட்டும் பிள்ளைகள் நீங்கா; பாடசாலை கள் எங்கும் வேதங்களின் ஒலிகள் ஒழியா; நாடக சாலைகள் எங்கும் மத்தள ஒலிகள் ஓயா; சோலைகள் அனைத்தினும் மேகங்கள் நீங்கா; வயல்கள் எல்லாவற்றிலும் உழவுத் தொழில்கள் ஓயா.

## திருவாதவூரர் தன்மை

இவ்வாறு வளம் நிறைந்த திருவாதவூரிலே [2] **அமாத்தியர்** மரபினில் அரிய வேத நெறியும் சிவாகமத் துறையும் விளங்கவும், திருமால் வஞ்சனையினால் இட்ட புத்த மத இருள் சிதறி ஓடவும், சிவபெருமான் திருவருளால் இள ஞாயிற்றினை ஒத்த **ஒருவர்** வந்தவதரித்தார்.[3] அவருக்குத் **திருவாதவூரர்** என்ற

---

1. இத் திருவாதவூர் மதுரைக்கு வடகிழக்கே சுமார் பன்னிரண்டு மைலில் உள்ளது. 2. அமாத்தியர் - இவர் மறையோரில் அமைச்சுத் தொழில் பூண்டு வரும் ஒரு குடியினர். அமாத்தியம் - நேபாளத்து அருகிலுள்ள ஒரு தேசம் என்பர்.

3. இவர் சுந்தர நாதர் என்ற ஆதி சைவருக்குப் புதல்வராக அவதரித்தவர் என முதனூல் கூறும்; வாதவூரரைத் திருநந்தி தேவர் அவதாரம் எனக் கைலாச மான்மியம் கூறுகிறது; "குடமுழ நந்தீசனை வாசகனாகக் கொண்டார்" என்ற அப்பர் தேவாரம் அதனை வலியுறுத்து கின்றது. பிற புராணங்கள் வாதவூரரைக் 'கணநாதர்' எனவும், உத்தர கோசமங்கைப் புராணம் ஆயிரம் முனிவருள் ஒருவர் எனவும் கூறுகின்றன. திருவாதவூரரின் தந்தை 'சம்புபாதாசிருதர்' எனவும், தாயார் 'சிவஞானவதியார்' எனவும் திருப்பெருந்துறை புராணம் கூறும்.

பிள்ளைத் திருநாமம் இட்டனர். அவர் வேத முறைப்படி கர்ணவேதன முதலிய மற்றைச் சடங்குகளெல்லாம் நிறையப் பெற்று இளம்பிறை வளர்வதுபோல வளர்ச்சியடைந்தார். வேத முதலான அறுபத்து நான்கு கலைகளையும் பதினாறு வயதளவில் கற்றுணர்ந்தார். இத் திருவாதவூரருடைய கல்வித் திறமை முதலியவற்றை அறிந்தவர் போய்ச் சொல்ல **அரிமர்த்தன பாண்டியன்** அதனைக் கேட்டு அவரைத் தன்பால் வரவழைத்து, அவர் உள்ளம் மகிழுமாறு பல வரிசைகள் அளித்துச் [1]சிறப்புச் செய்து, அமைச்சர் பதவியினையும் அளித்தான். திருவாதவூரர் படைக்கலப் பயிற்சி முதலியன உணர்த்தும் நூல்களையும், மனு சாத்திர முதலிய நீதிகளையும் ஐயந் திரிபு நீங்க முற்றக் கற்றுணர்ந்தார்; அதனால் மற்றைய மந்திரிமார் எல்லாரினுஞ் சிறந்து முதன் மந்திரியானார். ஒருவரும் செல்லுதற்கரிய பல்வேறு தீவுகளில் செங்கோல் செலுத்தும் மன்னரும் தங்கள் தங்கள் நாட்டிலுள்ள அரிய பொருள்களை அனுப்பிப் பாண்டியனுடன் நட்புப் பூண்டு வாழுமாறு வாதவூர் அமைச்சர் செய்து, அரிமர்த்தன பாண்டியனுக்குக்[2] கண்களாகவும் கவசமாகவும் விளங்கி, உலக முழுதையும் தன் கிளையினைப்போலக் கருதி வெண்கொற்றக் குடை நீழலில் உலகத்தைக் காத்து முறை செய்திருந்தார்,

**வாதவூரர் பரகதியினை விரும்புதல்**

இங்ஙனம் வாதவூரர் அரசியல் நடாத்தி வாழும் நாளிலே, "இஃது உண்மைப் பொருள்; இது பொய்மைப் பொருள்" என்று உள்ளபடி பகுத்தறியும் உணர்ச்சி அவர் உள்ளத்திலே தோன்றியது; இம்மை மறுமை இன்பங்களில் வெறுப்புக் கொண்டு மனத்தூய்மையுடையராய் வீடடையும் நெறியினையே ஆராய்வாராயினர்:

---

1. இங்குத் 'தென்னவன் பிரமராயன் என்ற பட்டம் அளித்த சிறப்பாகும்.

2. அமைச்சர், அரசனிடத்துத் தீய வொழுக்கங் காணில் இடித்துரைத்து நன்னெறியில் செலுத்துதலால் கண்ணும், தெய்வத்தால் வரும் இடையூறுகளைச் சாந்தியாலும், மக்களால் வரும் இடையூறுகளைச் சாமம் முதலிய உபாயங்களாலும் போக்குதலால் கவசமும் போல்வர்.

"பௌத்தம் முதலாகிய புறச் சமய நெறிகளும் வேதங்களைத் தழுவிய அகச் சமய நெறிகளும் மனத்தின் மாசினைப் போக்கி இறைவன் திருவருளைத் தெளிவுறுத்த மாட்டா: அதனால், சடமாகிய ஆணவப் பிணிப்பு நீங்காது; ஆகவே, வீடுபேறு அடைதல் இல்லையாம். அன்பு செய்து இறைவன் திருவருளைப் பெற்ற அடியார்களுக்கன்றி ஏனையோர்க்கு வீடுபேறு கிட்டுவது அரிது என்று மறைகள் கூறும். அவ்வேதத்தின் உண்மைப் பொருளின் தெளிவை யெல்லாம் [1] சத்திநிபாதம் அடைந்த பரிபக்குவர்க்குச் சிவாகமங்கள் உய்த்துணர்த்தும் என்று மெய்யுணர்ந்தோர் கூறுவர். வேத முடிவினும், ஆகமத்தின் முடிவினும் எய்தும் பொருள்கட்குத் தம்முள் வேற்றுமை இல்லை [2]; அவற்றை வேற்றுமையுள்ளன வாய்க் காட்டுகின்ற மாறுபாட்டினை ஒழித்து, ஆணவமலக் கட்டினைப் போக்கி உடையானாகிய தன்னையும் உடைமைப் பொருளாகிய என்னையும் அறிவிக்கின்ற ஞான வடிவினனாகிய **குருநாதன்** வருவது எப்பொழுது? குற்றமற்ற பேரன்பிற்கு எளிதே வந்தருளும் கருணையினையுடைய ஞானாசிரியனின் அருளால் அன்றி, இக்கொடிய பாசமாகிய கடலை நூற்கேள்வி யால் கடக்க எண்ணுதல், கடலினை மரக்கலத்தினாலன்றிக் கையினால் நீந்திக் கடக்கக் கருதுதலை ஒக்கும்" என்று இவ்வாறு எண்ணினார்.

கரவி லாதபே ரன்பினுக்(கு) எளிவருங் கருணைக்
குரவ னார்அருள் அன்றிஇக் கொடியவெம் பாசம்
புரையில் கேள்வியால் கடப்பது புணையினால் அன்றி
உரவு நீர்க்கடல் கரங்கொடு நீந்துவ(து) ஒக்கும்.

**இறைவனிடம் பேரன்பு கொள்ளுதல்**

பிறகு திருவாதவூரர் வீடுபேற்றினை அடையவேண்டும் என்னும் பேராசையினால் கட்டுண்டு வேதாகமாதி சாத்திரங்

---

1. சத்திநிபாதம் - (சத்தி - சிவசத்தி; அருள். நிபாதம் - பதிதல்.) திருவருட் சத்தி பதிதல். இது மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்ற நான்கு வகைப் பக்குவங்களாம். 2 இங்கே, "வேதமோடாகமம் மெய்யாம் இறைவனூல் ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன, நாதன் உரையவை நாடில் இரண்டந்தம், பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே" எனவரும் திருமந்திரச் செய்யுள் கருதற்பாலது.

களில் வல்ல பெரியோர்கள் தம்மிடத்து வருந்தோறும், தாம் அவற்றை உணர்ந்தாரிடம் சென்று அவர்களோடு கலந்து அளவளாவி மெய்ப்பொருளை ஆராய்ந்தார். இப்படி அளவிறந்த அறிஞரிடத்து ஆராய்ந்தறிந்த பொருள்களெல்லாம் **நீர் வேட்கையைத் தணிப்பதற்குக் கடல் நீரைப் பருகியவரின் வேட்கை தணியாதவாறுபோல**[1] மனத்தின்கண் அமைவுறாமல், **கள்ளக் காதலனிடத்து அன்புவைத்தொழுகும் ஒரு பெண்ணைப்போலச்** சிவபெருமானிடத்துக் கொண்ட பேரன்பு உள்ளே பதிந்துகொள்ள, அரசனுக்கு உயிரும் கண்ணுமாக இருந்து அமைச்சுரிமையையும் கைவிடாது அரசியல் நடாத்திவந்தார்.

**பாண்டியன் வாதவூரரைக் குதிரை வாங்கிவர அனுப்புதல்**

இவ்வாறு ஒழுகும் திருவாதவூரர் ஒருநாள், அரிமர்த்தன பாண்டியனின் சபையிலே போய் நிற்கும்போது, குதிரைப் பந்தியினைக் காக்கும் காவலர்கள் அரசன்முன் வந்து வணங்கி ஒருபுறத்தில் ஒதுங்கிநின்று, "வெற்றிவேல் ஏந்திய அரசே! நமது குதிரை வெள்ளத்திலே இறந்தனபோக ஒழிந்த குதிரைகள் அனைத்தும் நோயுடையனவும் மூப்புடையனவுமாயின; நல்ல குதிரை ஒன்றேனும் இல்லை" என்று கூறினர். அதனைக் கேட்ட பாண்டியன் வாதவூர் வள்ளலை நோக்கி, "நீர் இன்று நமது கருவூலத்தைத் திறந்து பெரும் பொருளை எடுத்துக்கொண்டுபோய்க் கடற்றுறையில் வந்து இறங்கும் குதிரைகளில் சிறந்தனவற்றைத் தெரிந்து விலைக்கு வாங்கிக் கொண்டு வருக" என்று கூறி அனுப்பினான். மனம்வேறுபட்டு அமைச்சுத்தொழில் பூண்டொழுகும் திருவாதவூரர், கருவூலத்தினைத் திறந்து, குதிரை வாங்குவதற்கு வேண்டிய பொருளை எடுத்துக்கொண்டு தாழிட்டிறுக்கி வெளியே வந்து அரசனிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

**வாதவூரர் ஆலவாய் அம்மையப்பரைச் சென்று தரிசித்தல்**

அப்போது திருவாதவூரர் குதிரை வாங்குவதற்காகக் கருவூலத்தினின்றும் எடுத்த பொற்சுமைகளை ஒட்டகங்களின்

---

1. இங்கே, "சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் தன்வசன, மாத்திரத்தே வாய்க்குநலம் வந்துறுமே - ஆர்த்தகடல், தண்ணீர் குடித்தவர்க்குத் தாகந் தணிந்திடுமோ, தெண்ணீர்மை யாய்இதனைச் செப்பு" என வரும் திருக்களிற்றுப்படியார் வெண்பா கருதற்பாலது.

மேல் ஏற்றுவித்து, அவை முன்னே செல்லும்படி அனுப்பிவிட்டுச் சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலுட் சென்று, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, அதன் கரையிலுள்ள **சித்தி விநாயகரைப்** பணிந்தார்; பின்பு அங்கயற்கண் அம்மையாருடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு, சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, "வெள்ளிமன்றினுள் ஆடியருளிய வள்ளலே! அடியேனுக்கு ஒரு வரம் அருளல்வேண்டும்; அதாவது செல்லும் இப்பொருளனைத்தையும் தேவரீருக்கும் ஐம்பொறிகளையும் அடக்கித் தேவரீரையே விரும்பும் அடியார்கட்கும் பயன்படவேண்டும்" என்று வேண்டிநின்று துதித்தார். அப்போது சோமசுந்தரக் கடவுள் திருவருள்போல அர்ச்சகராகிய **ஆதி சைவர் ஒருவர்** எதிரேவந்து திருநீறு அளித்தார். அதனைத் திருவாதவூரர், "நமக்கு இதுபோல் நன்னிமித்தம் வேறு இல்லை; இது நாம் அடையக்கருதும் நன்னெறிக்கு ஓர் ஏதுவாம்" என்று கருதி இருகரங்களினாலும் வாங்கி நெற்றியில் தரித்துச் சோமசுந்தரக் கடவுளிடத்து விடைபெற்றுக் கொண்டு மீண்டார்.

**வாதவூரர் குதிரைவாங்கப் புறப்பட்டுச் செல்லுதல்**

அப்பொழுது இன்னிசைக் கருவிகள் முழங்கின; கொடிகள் மேலே எழுந்தன; இரட்டைச் சாமரங்கள் இருபுறமும் துள்ளின; பவளக் காலையுடைய சந்திரவட்டக் குடைகள் நிழல் செய்தன; வாதவூரர் பொற்சிவிகையின்மேல் ஏறிக்கொண்டு சென்றார். இவ்வாறு திருவாதவூரர் வழிக்கொண்டு செல்லும் முன்னரே சோமசுந்தரக் கடவுள் இவருடைய [1] இருவினையொப்பையும் [2] மலபரிபாகத்தையும் நோக்கிக் குரவனாகிச் சென்று வலிய ஆட்கொண்டு தமது திருப்பணியின்கண் நிறுத்தியருளத் திருவுளங்கொண்டார்; உடனே தமது பெருங்

---

1. இருவினையொப்பு - நல்வினை தீவினைகளிலும் அவற்றின் வினையாகிய புண்ணிய பாவங்களிலும், இவற்றின் பயனாகிய இன்ப துன்பங்களிலும் ஒன்றில் விருப்பும் ஒன்றில் வெறுப்பும் இன்றி ஆன்ம அறிவின்கண் ஒப்ப வெறுப்பு நிகழ்தல்.

2. மலபரிபாகம் - மலபக்குவம்: ஆணவமலம் தனது சத்தி தேய்தற்குரிய துணைக் காரணங்கள் எல்லாவற்றோடும் கூடுதல்.

கருணையால் ஒரு அந்தணர் குலத்துக் குரவராகத்[1] திருமேனி கொண்டு திருவடியினை விட்டுப்[2] பிரியாத பல மாணவர்களோடும்[3] **திருப்பெருந்துறையின்கண்** வந்து ஒரு குருந்த மரத்தின் அடியில் எழுந்தருளியிருந்தார்.

**திருவாதவூரர் திருப்பெருந்துறையினை அடைதல்**

கடல்போன்ற சேனைகளோடு பிறவிக்கடலைக் கடந்தவராகிய திருவாதவூரர் முல்லை நிலத்தினை அடுத்த பெரிய காடுகள் அளவிறந்தவற்றைக் கடந்து சென்று பெருங் கருணைக் கடலாகிய ஞானாசிரியர் வீற்றிருக்கும் **திருப்பெருந்துறையினை** நெருங்கினார்; அதன் எல்லையை அணுக அணுக மனத்தின்கண் மகிழ்ச்சிப்பெருக்கு நிறையவும், கூப்பிய கைம்மலர்கள் தலைமேல் ஏறவும், கண்களில் ஆனந்தக்கண்ணீர் துளிக்கவும், இறைவன் திருத்தொண்டுக்கே தம்மைச் செலுத்தும் மனத்தின்கண் திருவருள் விளையவும் நடந்துசென்றார். இவ்வாறு செல்லும் வாதவூரர், தம்மைக் கண்டோர், "இவர் பித்தர்" என்று நகைக்கும்படி அதிதீவிரபக்குவம் எனப்படும் நாலாம் **சத்திநி பாதம்** (தீவிரதரம்) உண்டாகத் தமது உண்மை அறிவினை மறைத்த மலத்தினும் மிகவும் அஞ்சி, முன் பெரும் பாரந் தாங்கினோனையும், பின்கட்டு நீங்கியவனையும் போன்று,

---

1. இங்கு, "அந்தணனாகிய யாண்டுகொண்டருளி, இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்" (திருவாசகம் - கீர்த்தித்திருவகவல்) எனவும், "மெய்தரு வேதிய னாகி வினைகெடக், கைதரவல்ல கடவுள் போற்றி" (திருவாசகம் - போற்றித் திருவகவல்) எனவும் வரும் அடிகள் கருதற்பாலன.

2. பல மாணவர்கள் - இங்குத் தொளாயிரத்துத் தொண்ணூற்றொன்பது மாணவர்களாம். "ஆதி நாயகன் ஒன்றொழிந்(து) ஆயிரம் போத மேவும் புதல்வர்கள் தம்மொடும்" என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்.

3. திருப்பெருந்துறை - இத் தலத்தினை வடநூலார் 'மகாதீர்த்தம்' எனவும், 'பிருகத் தீர்த்தம்' எனவும் பெயர் பெறும் என்பர். சுவாமி திருநாமம் 'ஆளுடைய நாயகர்' என்பது. இப் பெயர் வாதவூரரை ஆட்கொண்டருளினமை பற்றி வந்ததாகும். இது பற்றியே திருப்பெருந்துறை, 'ஆளுடையார் கோவில்' என்பதாம். இது தற்போது ஆவுடையார் கோவில் என வழங்குகிறது. இத் தலம் அறந்தாங்கிக்குத் தென் கிழக்கில் சுமார் ஏழு மைலில் உள்ளது.

"அனலிடைப்பட்ட வெண்ணெய்போல நெஞ்சம் உருகுமாறு அடியேனை உருக்குகின்ற இவ்வேதுவினால் என் அறிவினை மறைத்த ஆணவ மலத்தின் வலியினைக் கெடுத்து அடியேனை ஆட்கொள்ளும் கருணையங்கடல் வீற்றிருக்கும் இடம் இதுவே போலும்" என்று கருதியவராய்த் திருப்பெருந்துறையினுட் புகுந்தார். முன்னர், வாதவூரர் திருக்கோயிலைச் சார்ந்து அங்குள்ள [1]சிவதீர்த்தத்தில் நீராடித் திருவாயிலை அடைந்து இறைவனைத் தரிசித்து வணங்கித் தோத்திரஞ் செய்து திருக் கோயிலை வலம் வந்தார். அப்போது, பண்டொருகாலத்தில் மறையினை ஓதியும் அறியமுடியாத உண்மைப் பொருளைச் சனகாதி முனிவர்கள் தெளியுமாறு மௌன நெறியினால் தெளி வித்த தட்சணாமூர்த்தியின் திருக்கோலம் எழுந்தருளப்பெற்ற தாகிய ஒரு குருந்தமரத்தினை எதிரே கண்டார்.

**இறைவன் குருமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் காட்சி**

வேதங்கள் ஒருபாலும், சிவாகமங்கள் ஒருபாலும், புராணத்துடன் கிடந்த இசைநூல் ஒருபுறமும், பல சமய சாத்திரங்கள் ஒருபுறமும் வாய்விட்டு ஒலித்துக்கொண்டிருந் தன. வேதங்கள் கூறிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும், வீடுபேற்றிற்குக் கருவி என்று ஆகமங்கள் கூறும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் சிக்கறுத்து உணர்ந்த பெரிய மாணவர்கூட்டங்களும் வினாவும் விடையுமாக ஒருபுறம் உரையாடிக்கொண்டிருந்தன.

சரியையில் வல்ல உண்மைத் தாதமார்க்கத்தினரும், கிரியை யினைச் செய்யும் நல்ல புத்திர மார்க்கத்தினரும், சிவயோகத் தினைச் சாதனையுடன் உணர்ந்த சகமார்க்கத்தினரும், ஞானா சாரியத் தன்மையைப் பெற்ற சன்மார்க்கத்தினரும் ஒருபால் விளங்கினர். விதி விலக்குகளைக் கடந்த தவத்தினையுடையராய், ஆடலும் பாடலும் உடையராய், உலகினர் பழிக்கும் வண்ணம்

1. இச் சிவ தீர்த்தம், "மொய்யார் பொய்கை" என்பதாம். "மொய்யார் தடம் பொய்கை புக்கு முகேரென்ன" என்பது திருவாசகம் திருவெம்பாவை அடி.

செய்கையினை உடையவராய், அழுகையை உடையராய், நகையினை உடையராய்ப் பாசம்நீங்கிய ஞானக்கண்ணினால் இறைவன் திருவுருவை இடையறாது தரிசித்துக்கொண்டு ஊனக்கண் குருடராய்த் திரிகின்ற **ஞான வீரர்கள்** ஒருபால் விளங்கினர்.

உள்ளமாகிய ஆகாயத்தில் விளங்கும் சிவசூரியனுக்குத் தோற்றமும் மறைவும் இல்லை; ஆதலால் பகலும் இரவும் தோன்றக் காணாதவராய் நித்திய கடன்கள் முதலாய தவங்களை நெகிழ்ந்தொழியப்பெற்றுத் [1] திகழ்கின்ற ஞானிகள் ஒருபால் விளங்கினர். அவர்களுக்கு ஆடை கோவணமே; உண்டி கைப் பிச்சையே; உறவினர் சிவனடியார்களே; அணிகலன் உருத்திராக்கமாலையே; துயிலுமிடம் வெறுந்தரையே; ஆனாலும், அவர்கள் தூங்குவது பகலும் இரவும் முதலும் நடுவும் முடிவும் இல்லாத இடத்தின்கண்; இஃதே அவர்கள் வாழ்க்கை ஆகும்.

**வாதவூரர் திருவருளாகிய வலையில் அகப்படுதல்**

இத்தகைய சிறப்பினையுடைய பல தொண்டர்கூட்டத்தின் நடுவிலே கல்லாலமரம்போன்ற பசிய குருந்தமரத்தின்கீழ் யோகாசனத்தில், [2] **சிவஞானபோதம்** எழுதிய சுவடியினைத் திருக்கரத்தின்கண் தாங்கியிருக்கும் ஒரு அருள்வடிவத்தை வாதவூரர் கண்டார்; "பொன்னம்பலத்திலே ஆனந்த தாண்டவம் செய்யும் திருவுருவமும், கல்லாலமரத்தின் கீழிருந்து சனகாதி முனிவர் நால்வருக்கும் மன அசைவு நீங்குமாறு உணர்த்தியருளிய திருவுருவமும் இப்பொழுது நாயினேனுக்கு எளிதில் வந்த திருக்கோலமே" என்று சிவபெருமானுடைய திருக்குறிப்பு உணர்த்தியருள, உணர்ந்து திருமுன் வணங்கிக் கைகளைச் சிரமேற் குவித்து என்பு நெக்குருக உள்ளம் உருகி இனியராகி எளிவந்து அன்பாகிய வலையிற்பட்ட சிவபெருமானுடைய திருவருளாகிய வலையின்கண் அகப்பட்டுக்கொண்டார்.

---

1. இஃது, உறங்கினவன் கையிலுள்ள பாக்குத் தானே நழுவுதல் போல ஞான நிட்டை மேலீட்டால் நித்திய கடன்கள் முதலாய தவங்கள் தாமே விலகப் பெறுதலாம்.

2. இந்நூல் இரௌரவாகமத்தில் பாச விமோசன படலத்தில் உள்ள பன்னிரண்டு சூத்திரங்களால் ஆயது.

**வாதவூரர் உபதேசம் பெறுதல்**

தீட்சாகாலம், கனுத்தோற்றம், நன்னிமித்தம் முதலான இவற்றை யறிந்து செய்தற்குரிய பக்குவத்தினைக் கடந்த ஞான வொழுக்கத்தினையுடைய மாணவரது பக்குவத்தை நன்கு அறியவல்ல **ஞானசிரியன் சிவபெருமானே** ஆவர். பார்வை மிருகம்போல வந்தருளிய அவர், செங்கழுநீர் மாலையையும் சந்தனத்தையும் அணிந்து, திருவடியில் வீரக்கழலைக்கட்டி, வாதவூரடிகளின் ஞான ஒழுக்கத்தினையும் அன்பினையும் கண்டு [1] உடல் பொருள் ஆவி மூன்றையும் தான நீருடன் அவர் தத்தம் செய்ய ஏற்று, ஞானக்கண்ணினால் மும்மலங்களையும் போக்கித் திருவடித்தாமரையைச் சூட்டித் [2] தம் அழகிய திருக்கரத்தினைச் சிரசின்மேல் வைத்துச் [3] **சூக்கும பஞ்சாட்சரத்தை** உபதேசித்து அவரது பாசக்கட்டினைப் போக்கிப் பேரின்பம் விளையும் நிலத்தில் செலுத்திப் போக்கும் வரவும் உள்ளும் புறமும் இல்லாத சிவவடிவமாகச் செய்தார்.

**உபதேசம் பெற்ற ஆனந்த நிலை**

திருவாதவூரர், அருட்டிரு நோக்கத்தினாலே பழுக்கக் காய்ச்சிய இரும்பு நீரினைப் பருகினாற்போல், தம் அருள் நோக்கினால் மலத்தைக் கெடுத்துத் தன்மயமாக்கிக்கொண்ட பரமாசாரியரையும், அவர் உபதேசமொழி அருளியதையும், தம்மை மறைத்த பாசத்தையும், தம்மையும் மறந்துவிட்டு, மெய்ஞ்ஞான வடிவினராய் ஒன்றனையும் அறியாதவராயினார். தேனும், பாலும், கரும்பும் அமுதமுமாகத் தித்தித்து, ஊனையும் உள்ளத்

1. இங்கே, "அன்றே யென்றன் ஆவியும் உடலும் உடைமை யெல்லாமுங், குன்றே யனையாய்! என்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ" (திருவாசகம் - குழைத்தபத்து) என வரும் அடிகள் உன்னற்பாலன.

2. இங்கு, "என்னையும் ஒருவ னாக்கி இருங்கழல் சென்னியில் வைத்த சேவக! போற்றி" (திருவாசகம் - போற்றித் திருவகவல்) எனவும், "பெருந்துறையான் சீரார் திருவடி என்றலைமேல் வைத்த பிரான்" (திருவாசகம் - திருப்பூவல்லி) எனவும் வரும் அடிகள் உன்னற்பாலன.

3. இங்கே, "நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்" (திருவாசகம் - திருவேசறவு) என வரும் அடி கருதற்பாலது.

தையும் உருக்க, அகத்தில் தோன்றிய அருள் ஒளியை உள்ளே உணர்ந்து இன்ப வெள்ளம் தேக்கப்பட்டுப் புறத்தே கசிந்து ஒழுகுவதைப்போல அவருடைய நாவில் ஞானக்கலைமகள் தானே வந்து நிலைபெற்றுத் தங்கினாள். அப்பொழுது அவர் கூப்பிய கையினராய், அசையும் முடியினராய், நீர்ததும்ப அழுத கண்ணினராய், புளகாங்கிதம் அடைந்த உடலையுடைய வராய், நாத் தழுதழுத்த அன்பு மொழியினராய்ச் சீவபோதத்தை இழந்து செந்தழலிற்பட்ட மெய்போன்ற உடலையுடைய ராய்ப் **பரமகுருவைப்** பணிந்து துதிக்கலாயினார்.

**வாதவூரர் மாணிக்கவாசகன் என்ற பெயர் பெறுதல்**

பழுதிலாச் சொற்களாகிய மாணிக்கங்களை வரிசைப் படுத்தி அன்பாகிய வடத்தினால் முறையாகக் கோத்த பாமாலையை அழுது சாத்துகின்ற மெய்யன்பராகிய திருவாத வூரருக்கு ஞானாசாரியராகிய சிவபெருமான் மனமகிழ்ந்து, '**மாணிக்கவாசகன்**' என்னும் திருநாமத்தைக் கொடுத்தருளினார்.

பழுதி லாதசொல் மணியினைப் பத்திசெய்(து) அன்பு
முழுது மாகிய வடத்தினால் முறைதொடுத் தலங்கல்
அழுது சாத்துமெய் யன்பருக்(கு) அகமகிழ்ந்(து) ஐயர்
வழுவி லாதபேர் **மாணிக்க வாசகன்** என்றார்.

**ஞான பூசை புரிதல்**

திருவாதவூரர் பாட்டிற்கு மகிழும் பரம குருவின் திருவடிகளை ஆனந்தக் கண்ணீரால் திருமஞ்சனமாட்டிச் சொல்லாகிய் மலரைச் சூட்டிச் சீவ போதமாகிய இனிய அமுதினை நிவேதித்துச் சிவஞானமாகிய ஓமாக்கினியை மூட்டி ஞான பூசையைப் புரியலானார். மாணிக்கவாசகப் பெருமானார் ஆசையினால் வரும் கொடிய பிறவிவாசனை கழிந்து, ஞானாசிரியரது மாணாக்கர்கள் அவ்விடத்தே ஓதுகின்ற ஆகமப் பொருளும் உபநிடதப் பொருளுமாகிய அனைத்தையும் கேட்டு அதில் பெருவிருப்புடையராயிருந்தார்.

**ஞானாசிரியர் வாதவூரருக்குச் சில பணிகளை இட்டு மறைதல்**

அதனைச் சிவபெருமான் கண்டு இனிக்கின்ற மாணிக்கம் போலும் வாசகமாகிய அமிழ்தினை இன்னும் சில நாட்கள்

வரையிலும் தமது திருச்செவியினுல் கேட்டு இன்புறவும், கையிலுள்ள செம்பொன் அனைத்தையும் பத்தி என்னும் தலையன்பினைத் தந்து, கொள்ளை கொண்டு, தாம் விரும்பும் பணியை ஏற்றுக்கொண்டு, அரிமர்த்தன பாண்டியனுக்கு இவருடைய பண்பினை அறிவித்து முத்தியினை அடையச் செய்யவும், புத்தர்களை வாதின்கண் வென்று அழிக்கவும் திருவுளங்கொண்டு மாணிக்கவாசகரை எத்தி, "இங்கே நீ செய்யவேண்டிய காரியம் சிறிது உண்டு; ஆதலால் சில காலம் இங்கிருப்பாயாக" என்று கூறி அடியவர்களோடு மறைந் தருளினுர்.

தித்திக்கு மணிவார்த்தை இன்னஞ் சின்னுள்
திருச்செவியில் அருந்தவும்கைச் செம்பொன் எல்லாம்
பத்திப்பேர் அன்பளித்துக் கவர்ந்து வேண்டும்
பணிகொடுபாண் டியனேயிவர் பண்பு தேற்றி
முத்திக்கே விடுத்திடவும் புத்தை வாது
முடித்திடவுந் திருவுள்ள முன்னம் எய்தி
எத்தித்தொண் டரைக்கருமஞ் சிறிதுண்(டு) இங்கே
இருத்திஎன உருக்கரந்தான் அடிய ரோடும்.

**மாணிக்கவாசகர் இறைவனைப் பிரிந்து வருந்துதல்**

அருள் வடிவினராகிய சிவபெருமான் கனுத் தோற்றம் போலத் தம் திருவுருவத்தைக் காட்டி மறைந்தருளுதலும் மாணிக்கவாசகர் துன்பக் கடலுள் அழுந்தி, "நாய்க்குத் தவிசிட்டதுபோல நாயினேனுக்கு இன்று நினைத்தற்கும் அரிய தமது திருமேனியைக் காட்டி என்னை அடிமை கொண்டு எம்பெருமான் மறைந்தருளியது நனவோ அல்லது கனவோ" என்று ஐயுற்றுர். பின் நனவே என ஒருவாறு மனம் தெளிந்து, "எந்தையே! உம்முடைய அடியாரோடு கூட்டாது அடியேனையும் அடியேனுடைய வினையையும் இங்கு இருத்தி மறைந்தீரோ! இருவினைக் கொள்கலமாகிய இவ்வுடலைத் தீயின்கண் வீழ்த்திலேன்; மலையினின்று உருண்டு மாய்கின் றிலேன்; வாளினுல் குறைக்கின்றிலேன்; நாதனே! அந்த உடலும் உனது உடைமை எனக் கருதி, அவ்வாறு செய்ய

இயலாது அஞ்சினேன், இவ் வுயிர் தானேயாயினும் உடலை விட்டுப்பிரிந்திலது. ஐயனே! தேவரீரைப்பிரிந்தும் பொறுக்க கில்லேன்! என் செய்வேன்! எந்தாயோ! எந்தாயோ!'' என்று இரங்கினர்; நிலமேல் வீழ்ந்து புரண்டு அழுதார்;

**வாதவூரர் புலம்பல்**

"தேவர்கள் அனைவர்க்கும் அறிதற்கு அரியவனே! பிறவிக் குருடனாகிய ஒரு வறிஞன் கையில் தானே வந்து கிடைத்த பெரு விலையினையுடைய மணியைப்போலவும், மழலைச் சொல் தெளியாத ஒரு மதலை தனது கையிற்கொண்ட மணிகள் பதித்த பொற்கிண்ணத்தைப் போலவும், சிறியேனாகிய என்னை எளிவந்து ஆட்கொண்டு அருளிய அருமையை யான் அறியேன்; ஆதலால், யான் துன்பக் கடலில் அழுந்தப் பிரிவினை அறியாத அடியார்களோடும் மறைந்தருளினீர்! அதற்குக் காரணம், கல்லாத பேதையேன்து குறைபாடேயன்றி எம்பிரானுல் யாது குறையுளது? மண் முதலிய முப்பத்தாறு தத்துவங் களையும் மனத்தால் ஆராய்ந்து என்னைக் காண வியலாது கலங்கி வருந்திச் சுழலுகின்ற சிறியேனை ஞான அருள் நோக்கினுல் அத் தத்துவங்கள் முழுதும் கரையும்படி நோக்கி யருளி, யான் யான் என்று கருதாத என்னைக் காட்டியருளினீர்! எந்தையே! நீர் எங்குச் சென்றீரோ? வானம் முதலாகிய பூதங்கள் ஐந்தும், அவை தோன்றுவதற்குக் காரணமாக வகுக்கப்பட்ட ஓசை முதலாகிய தன் மாத்திரைகள் ஐந்தும், நீங்காது அலையும் மனம் முதலிய அந்தக் கரணங்கள் நான்கு மாகிய இவற்றின் வழியடைப்பத் தேன் முதலிய அறுவகைச் சுவைப் பொருள்களினும் அவை மிக ஊறும் சிவானந்த அமிழ்தினை யான் உண்ணுமாறு நல்கியருளினீர். எந்தையே! நீர் எங்குச் சென்று மறைந்தீரோ? மாசு பொருந்திய ஆணவ வலிமையினின்றும் வேறுபடாத என்னையும் ஒரு பொருளாகக் கருதிப் பேசுதற்கரிய பேரின்ப வடிவினையுடைய நின்னேடு என்னைப் பின்னே வைத்தருளிய ஈசனே! எந்தையே! அடியேனை இங்கு வைத்து எங்குச் சென்றருளினீரோ!'' என்று வாய்திறந்து அரற்றிக் கதறி அழுதார்.

**வாதவூரர் பரிசனங்களைப் போகும்படி அனுப்புதல்**

பின்பு மாணிக்கவாசகர் இளங் கன்றை நீங்கிய தாய்ப் பசுவைப்போல மனம் கரைந்தார்; கோபுர வாயிலின் வெளியே சென்று, அங்கே தம்மை எதிர்பார்த்து நின்ற அரசன் பரிசனங்களை எதிர் நோக்கி, "குதிரைக் கூட்டங்களெல்லாம் ஆடிமாதத்தில் கடற்றுறையின்கண் வந்திறங்கும் என்று நீங்கள் முன்னே சென்று பாண்டியர் பெருமானுக்குக் கூறுங்கள்; போமின்" என்று கூறி அனுப்பினர். சேனைவீரர்கள் அரிமர்த்தன பாண்டியன் முன்சென்று வணங்கி, நிகழ்ந்த செய்தியைக் கூறினர். அதனைக் கேட்டுப் பாண்டியன் ஒன்றும் கூறாமல் குதிரைகளின் வரவினை எதிர்பார்த்திருந்தான்.

**வாதவூரர் பரிக்கு எனக் கொண்டுவந்த பொருளைச் செலவிடல்**

வாதவூரர், பாண்டியன் குதிரை வாங்கும்பொருட்டு அளித்த பொருள்களை எல்லாம் குருந்தமரத்தடியில் வந்து ஆண்டருளிய ஞானசாரியனாகிய சிவபெருமானுக்கு உள்ளன்பு பெருக முன் வேண்டிக்கொண்டதுபோலவே பூசனைக்கும், திருவிழாக்களுக்கும், திருக்கோயில் திருப்பணி வகைக்கும் நிரம்பக் கொடுத்து அடியார்களுக்கும் செலவிட்டு அத்திருப் பெருந்துறையிலே இருந்து அவா என்பது இன்றி இவ்வாறு செல்லும் நாட்களைக் கழிப்பாராயினர்.

**வாதவூரர் அரசன் ஓலையைக் கண்டு இறைவனைத் துதித்தல்**

எல்லைகூறிய ஆடிமாதம் வந்தது; பாண்டியன், "இன்னும் குதிரைகள் வந்தில; இஃது என்ன?" என்று ஓலை வரைந்து வாதவூரராகிய அமைச்சரின் திருமுன்னர்ச் செல்ல விடுத்தான். பாண்டியனுடைய திருமுகத்தைக் கண்டு, வாதவூர் அண்ணல் முறைப்படி வாங்கி வாசித்து, "இனிச் செய்யும் வழி வேறு என்னை?" என்று கருதிநின்று சிறிதே வருந்தினர்; பிறகு [1] உள்ளமாகிய விளை நிலத்துள் அன்பாகிய

---

1. இங்கே, "மெய்ம்மையாம் உழவைச்செய்து விருப்பெனும்வித்தை வித்திப், பொய்ம்மையாங் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித், தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச், செம்மையுள் நிற்ப ராகில் சிவகதி விளையு மன்றே" என வரும் திருநாவுக்கரசர் தேவாரம் சிந்திக்கற்பாலது.

முளை வளரப் பாசமாகிய களையினை வேரறக் களைந்து, திரு அருளாகிய நீரினைப் பாய்ச்சித் தோற்றமும் இறுதியும் இல்லாத சிவானந்தமாகிய விளைவினைப் புசிக்குமாறு தந்தருளிய குரவனாகிய உழவனது திருக்கோயிலை அடைந்தார்.

சிந்தை யாகிய செறுவினுட் சிவமுதல் ஓங்கப்
பந்த பாசம்வே ரறக்களைந்(து) அருட்புனல் பாய்ச்சி
அந்தம் ஆதியின் றாகிய ஆனந்த போகம்
தந்த தேசிக வுழவன்றன் கோயிலைச் சார்ந்தார்.

இறைவன் திருமுன் வணங்கி நின்று, "எனது தலைவனே! தேவர்கள் சிங்கவேறே! இடபத்தைக் கொடியின்கண் உயர்த்தருளிய அரசே! சுந்தர பாண்டியனே! திருப்பெருந் துறையில் எழுந்தருளிய என் அருமை மணியே! பாண்டியன் தந்த பொருளை எல்லாம் நின் திருக்கோயிலின் திருப்பணியிலும் நின் அடியார் திறத்திலும் செலவிடும் நெறியினைத் தந்தருளினீர்! இனி, அடியேன் பாண்டியனுக்கு எதனைக் கொண்டு குதிரை வாங்கிக் கொடுப்பது?" என்று குறையிரந்து துதித்து வேண்டினார்.

### திருப்பெருந்துறையில் இறைவரின் வானொலி

திருப்பெருந்துறையில் எழுந்தருளிய சிவபெருமான் அசரீரி வாக்கால், "பாண்டியனுக்குக் குதிரைகளெல்லாம் வரும் என்று எழுதி ஓலை அனுப்புதி" என்று அருளிச்செய்தார். மாணிக்க வாசகர் அதனைக் கேட்டு மிக மகிழ்ந்து அவ்வண்ணமே அரசனுக்குத் திருமுகம் எழுதிஅனுப்பினார். அத்திருமுகத்து எழுதிய வாசகத்தைப் பாண்டியன் வாசிக்கக்கேட்டு அடங்கா மகிழ்ச்சியுடையவனாய்க் குதிரையின் வரவினை எதிர்நோக்கி இருந்தான்.

கதிரவன் மறைந்தனன். கதிரவனால் வெப்பமடைந்த நிலவுலகத்தினைத் தன் வெண்கதிரால் ஆற்றுபவனைப்போலச் சந்திரன் கீழ்த்திசையில் வந்து தோன்றினான். அன்று இரவு துயில்கின்ற மாணிக்கவாசகரின் கனவில் சோமசுந்தரக் கடவுள் குருந்தமரத்தடியின்கீழ் ஆட்கொண்ட ஆசிரியக் கோலங் காட்டி எழுந்தருளி, "வேந்தனின் மனத்தைக்

கவரத்தக்க வெற்றியைத் தரத்தக்க குதிரைகளை வாங்கிக் கொண்டு வருவேம்; இன்று நீ முன்னே செல்லுதி[1]" என்று அருளிச்செய்தார். உடனே மாணிக்கவாசகர் நித்திரை விட்டெழுந்து, "தேவர்களுக்குக் கனவிலும் காண்டற்கரிய எம்பெருமானுடைய அருளுருவம் நமக்குக் கனவிலும் நனவிலும் எளிதாயிற்றே!" என்று நினைத்துக்கொண்டிருந்தார். வாதவூரடிகளது உள்ளத்தின்கண் செறிந்த ஆணவமலமாகிய இருளை இறைவன் என்னும் ஞானசூரியன் தின்று எழுந்தாற் போல இருள் நீங்கச் சூரியன் தோன்றினன்.

**வாதவூரர் பாண்டியன் அவையினை அடைதல்**

அப்போது இனிப் பிறவிக் கடலில் அழுந்தாதவராகிய மாணிக்க வாசகர் எழுந்து தம்மை ஆட்கொண்டருளிய திருப் பெருந்துறையில் வீற்றிருக்கும் சிவபெருமானுடைய திருவடிகளை வணங்கிக்கொண்டு அவ்விடத்தினின்றும் நீங்கி அனேக காத வழிகளைக் கடந்து மதுரையைச் சார்ந்து, பாண்டியனுடைய அரண்மனையை அடைந்தார்; அரசனைக் கண்டு முறைப்படி வழிபாடு செய்து அவன் முன்னே நின்றார். அரசன், "எவ்வளவு செம்பொன் கொண்டுபோய் எவ்வளவு குதிரைகள் வாங்கினீர்!" என்று வினவினன். அதனைக் கேட்ட மாணிக்க வாசகர், "அரசே! எடுத்துச் சென்ற பொன்னும் அளவில்லை; வாங்கின குதிரைகளும் அளவில்லை; அக் குதிரைகள் பின்னே வந்துகொண்டிருக்கின்றன; கண்டருள்வாய்; இதனாலே தாங்கள், '**துரங்கபதி**' என்னும் பெயரைப் பெற்று விளங்குவீர்" என்றார். பாண்டியன் வளமிக்க பல வரிசைகள் நல்கி வாதவூரரை மாளிகைக்கு அனுப்பினன்.

**சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து வேண்டுதல்**

மாணிக்கவாசகர் பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிச் சித்தி விநாயகரின் திருவடிகளை வணங்கித் தானே முளைத்த சிவக்கொழுந்தை - அங்கயற்கண் அம்மை என்னும் கொடியின்

---

1. இங்கு, 'இன்னும் இறைவர் அரசனுக்குக் கையுறையாக ஒரு மாணிக்கத்தையும் அளித்துச்செல்ல விடை தந்தார்' என்று வாதவூரடிகள் புராணம் கூறுகிறது.

மருங்கில் விளைந்த தேனைப் பருகி, மனம், மெய், மொழி என்னும் மூன்று கரணங்களும் அன்பு வடிவாய்த் தோன்றி நின்று, "தலைவரே! அடியேனை ஆட்கொண்டருளிய மாணிக்கமே! வெள்ளிமன்றினுள் ஆடும் அன்னையே! அடியேன் வேண்டிக்கொண்ட வண்ணமே முன்னே பாண்டியன் அளித்த பொருள் முழுதையும் முதலில்ஏற்றுக்கொண்டு, பின் அடியேன் பணியையும் கொண்டருளினீர்; பாண்டியன் சினங்கொள்ளாது மிக மகிழ்ச்சி அடையும்படி குதிரைகள் வருதல் எங்ஙனம்?" என்று வேண்டி நின்றார். அப்போது இறைவன், "மெய்யன்புடையாய்! அஞ்சேல்! நீ விரும்பியபடி சூரியனுடைய தேரை இழுத்துச் செல்லும் குதிரைகள் போலும் குதிரைகளைக் கொண்டு வருகின்றோம்" என்று வானின்கண் அசரீரியாக மொழிந்தருளினார். அதனைக் கேட்டு மகிழ்ந்த வாதவூரர் இறைவன் திருவருளைத் துதித்துத் தமது மாளிகைக்குச் சென்றார்.

**உறவினர் முதலியோர் இடித்துக் கூறுதல்**

திருவாதவூரர், தமது மாளிகையை அடைந்தபொழுது அவருடைய [1]சுற்றத்தார்களும், நட்பினரும், அன்பு மிகுந்த பணியாளரும், அயலாரும், பிறரும் வந்து நெருங்கி இடிக்கும் மேகம் வாய் திறந்தாற்போல, "ஐயனே! அமைச்சுத் தொழில் பூண்டு அரசரது பணிபுரிதல் அந்தணருக்குரிய தருமமன்று; அரசருக்குரிய மந்திரியாக இருந்தால் ஏற்ற காரியங்களையே செய்ய வேண்டும் என்று மனுநூல் வல்லோர் கூறுவர். அரசியலையும் அமைச்சர் நீதியையும் ஆய்ந்தறிந்த உங்களுக்கு நாங்கள் சொல்லக் கிடப்பது யாது? நீர் செய்யும் காரியம் ஒன்றும் நன்றாயிருக்கவில்லை. இன்றைக்குக் குதிரைகள் வரும் என்று வரையறுத்துச் சொன்னீர். ஐயனே! குதிரைவராவிடில் அரசனுக்கு நாளை என்ன சொல்லவல்லீரோ? நீர் அரசரிடத்தில் நடந்துகொள்ளும் விதத்தினாலே உம்மைத் தழுவிய கிளைஞர், நட்பினர், சான்றோர் முதலாகிய கூட்டத்

1. இச் சுற்றத்தார் மானமங்கலத்தார் ஆவர். மானமங்கலம் என்பது ஒரு ஊர். இவ்வூர் 'மானபுரம்' என வழங்குகிறது.

தைக் காக்கவேண்டும் என்னும் குறிப்பு உமக்கில்லைபோலும்!" என்று கழறியுரைத்தார்கள்.

**வாதவூரரின் மனத் தெளிவு**

திருவாதவூரர் அவற்றைக் கேட்டு, "சிவபெருமான் தம் அருட்கோலத்தைக் காட்டி நம்மை ஆட்கொண்ட அன்றைக்கே சுற்றத்தையும், அது பற்றிவரும் தொடர்புகளையும் துறந்தேம்; துன்பமும் இன்பமும் அற்றேம்; இவ் வுடலின் பற்றினையும் நீங்கினேம்; செல்வத்தை வெறுத்தேம்; கோபத்தையும் செறுக்கையும் கெடுத்தேம்; நல்வினை தீவினை என்னும் இரண்டினின்றும் நீங்கினேம்; எமக்குத் தந்தையும், தாயும், குருவும், ஆசானும் சிவபெருமானே; பெண்டிர் நிராசையே: மக்கள் பல உயிர்களே; சுற்றம் சிவனடியார்களே; பகை எழு பிறவியே; ஊரிலுள்ளவர் சமைக்கும் சோறெல்லாம் நம்முடையதே; நில வுலகு முற்றும் நமக்குப் படுக்கையே; தைத்த கோவணம் நாம் தரிக்கும் ஆடையே; நமக்குச் சந்தனம் திருநீறே; அணிகலன் உருத்திராக்கமே; நாம் இன்றைக்கே இறந்தாலும் இறக்கக் கடவேம்; என்றும் அழியாமல் இருந்தாலும் இருக்கக் கடவேம்; மன்னவன் தண்டித்தாலும் தண்டிக்கக் கடவன்; அவன் உடனே நமக்கு மகிழ்ச்சியை ஊட்டினும் ஊட்டக் கடவன்; நாம் சுவர்க்கத்திற் சென்று சிறப்படையினும் அடையக் கடவேம்; கொடிய நரகம் கிட்டினும் கிட்டக்கடவம். **நாம் சிவனை மறவோம்:** பண்டைப் பழவினைப்பயன் அனுபவிக்கவேண்டி வந்தால் அதனைத் தவிர்க்க வல்லவர் யாவர்!" என்று சுற்றத்தார் முதலாயினோர் சொல்லை மறுத்துக் கூறி மாளிகையில் இருந்தார்.

செய்யுள்—86

ஆகச் செய்யுள்—2789

---

## 59. நரி பரியாக்கிய படலம்

### பாண்டியன் வாதவூரரைக் குதிரைவரும் நாளை வினவல்

சுற்றமாகிய பாசத்தினின்றும் நீங்கி ஆணவ மலத்தை அறுத்துச் சிவயோகத்தில் நின்ற வாதவூரடிகளை அரிமர்த்தன பாண்டியன் மற்றைநாள் தன்னிடம் அழைத்து, "இன்னும் குதிரைகள் வந்தில போலும்" என வினவினன். அதற்கு மாணிக்கவாசகர், "இன்று முதல் மூன்று நாளைக்குள் குதிரைகள் வந்துவிடும்; அக் குதிரைகள் நிற்றற்கு வேறு அகன்ற பந்திகளை (லாயத்தை) அமைப்பிக்க; அக் குதிரைகளுக்குத் தண்ணீர் ஊட்டுதற் பொருட்டுத் தடாகங்களைத் தோண்டுவிக்க; நகரெங்கும் அலங்கரிப்பிக்க" என்று வேண்டிக் கொண்டார். பாண்டியனின் ஆணைப்படி அவன் ஏவலாளர் குதிரைப் பந்திகளை அமைத்தனர்; பல வாவிகளையும், குளங்களையும் தோண்டினர்; நகரை அழகுபெற அலங்கரித்தனர்.

### பாண்டியன் வாதவூரரைத் துன்புறுத்தச் செய்தல்

இவ்வாறு இருக்கும்போது வாதவூரடிகள் குதிரை வரும் என்று வரையறுத்துக் கூறிய மூன்று நாளும் கழிந்தன. பாண்டியன் மற்றைநாள், "இன்னும் குதிரைகள் வரக் கண்டிலம்" என்று கருதி, மாணிக்க வாசகர் என்னும் அமைச்சரை அழைப்பித்துத் தண்டிப்பவன் போன்று சினந்து, "இவன் குதிரைகள் வாங்கியவாறு என்னே! அவை வருதல் எப்பொழுதோ?" என்று கூறித் தன்னெதிர் நின்ற தறுகண்மையையுடைய தண்டலாளர் சிலரை நோக்கி, "இக் கள்வனைக் கொண்டு சென்று தண்டித்து நமது பொன் முழுதையும் அறுதியாக வாங்குங்கள்; விரைந்து செல்லுங்கள்" என்று கட்டளையிட்டான்.

### வாதவூரரைத் தண்டலாளர் துன்புறுத்தல்

பாண்டியனுடைய கோபத்தைக் கண்ட தண்டலாளர்கள் பயந்து அவனெதிர் நில்லாமல் உடனே வாதவூரடிகளைச் சுற்றிய பாசம் போலத் தொடர்ந்து பற்றிக்கொண்டு சென்று, "இனிப் பொன் கொடுப்பதற்கு வகை யாது? கூறும்"

என்று எதிர்த்துச் சீறி அவர்மேல் பாரஞ் செறிந்த கல்லை ஏற்றினார்கள். அப்போது முப்புரங்களையும் நீறுக்கிய வீரராகிய சிவபெருமானின் திருவடியை வாதவூரடிகள் மனத்தின்கண் நினைக்க அப் பெரிய சுமை அனைத்தையும் இறைவர் தாங்கச் சிறிதும் துன்பமின்றி நின்றார். கல்லின் பாரந் தெரியாது சிவபெருமான் திருவடி நீழலில் நின்ற வாதவூரடிகளின் நிலைமையைத் தண்டலாளர்கள் நோக்கி, "இஃது ஒரு மாய வழி போலும்" என்று கருதி மிகுந்த கோபங்கொண்டு அவருடைய கைகளிலும் கால்களிலும் கிட்டியை மாட்டி நெறித்தார்கள். வாதவூரர் இக் கொடுந் தொழிலுக்கும் அஞ்சாமல் இறைவன் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு துன்பமின்றி இருந்தார்.

**மாலைக்காலம் முதலிய வருணனை**

அப்பொழுது, "இக் கொடிய தண்டலாளர் இனி மிகவும் தண்டிப்பர்" என்று கருதி அதனைப் பார்ப்பதற்கு மனம் வருந்திய **சூரியன் மேற்குக் கடலில்** சென்று மறைந்தான். சோமசுந்தரக் கடவுள் தம் அடியார் துயரை அகற்றுதற்கு நேரே வந்து எழுந்த தோற்றம்போலச் **செவ்வானம்** தோன்றியது; அப் பெருமான் திருமார்பில் கிடந்து அசையும் பன்றிக் கொம்பினைப் போல **வெண்மதி** விளங்கியது; அவர் திருமார்பில் அணிந்த பிரமனது சிரமாலை போல **நட்சத்திரங்களனைத்தும்** திகழ்ந்தன.

சுந்தர [1]விடங்கர் அன்பர் சூழ்துயர் அகற்ற நேரே
வந்தெழு காட்சி போல வந்தது செக்கர் வானம்;
இந்தவர் மார்பந் தூங்கும் ஏனவெண் கோடு போன்ற(து)
அந்தர வுடுக்க ளெல்லாம் அயன்றலை மாலை ஒத்த.

சுழித்து வரும் பிறவித் துன்பமாகிய கடலிலே அழுந்தி வீணே கழிகின்ற தன்னைக் காத்தல் பொருட்டுக் கண்ணுதற் கடவுளின் திருவடியை வழிபடும் அடியவர் என அறியாதவனைய் அருஞ்சிறைப்படுத்திய பாண்டியனது பழிபட்ட புகழ் பரவியதுபோல, நிறைந்த **இருள் எங்கும்** பரவியது.

1. விடங்கர் - அழகர்; உளியினல் செதுக்கப்படாதவர்.

**வாதவூரரைச் சிறையிடல்**

அன்றிரவு, இருண்ட சிறைக்கூடத்திலே தள்ளித் தவத்தினை விலங்கு பூட்டிச் சிறைப்படுத்தினற்போலச் சினமிக்க தண்டலாளர் வாதவூரடிகளைச் சிறைப்படுத்தி விலங்கிட்டுத் துன்பஞ் செய்தனர். கொடிய சிறையாகிய கடலில் அழுந்திக் கிடந்த வாதவூரடிகள், பரமசிவனுடைய திருவடிப் புணையைத் துணையாகக்கொண்டு துன்பமாகிய கடலைக் கடந்தார்; இராக்காலம் கழிந்தது. பின்பு, வைகறையிலே மெய்யடியார்கள் சோமசுந்தரக் கடவுளையும் மீனட்சியம்மையாரையும் திருப்பள்ளியெழுச்சி செய்து வழிபடும் ஆர்ப்பையும், சங்குகளின் ஒலியையும், வேத வொலியையும் தம் செவிகள் நிறையுமாறு வாதவூரர் கேட்டிருந்தார்.

**சூரியன் தோன்றுதல்**

சிவபெருமான், உண்மைத் தொண்டராகிய மாணிக்கவாசகர் பொருட்டு, நாத தத்துவமாகிய முரசு ஒலிக்கவும், நரியாகிய குதிரையின் வீரர் சூழவும், வேதமாகிய குதிரையின் மேல் ஏறியருளி மதுரைத் திருவீதியின்கண் வருதலைக் காணும் விருப்புடையவன்போலச் **சூரியன்** கீழ்த்திசையில் உதயமானன்.

போதவா னந்தச் சோதி புனிதமெய்த் தொண்டர்க் காக
நாதமா முரசம் ஆர்ப்ப நரிப்பரி வயவர் சூழ
வேதவாம் பரிமேற் கொண்டு வீதியில் வரவு காணும்
காதலான் போலத் தேர்மேற் **கதிரவன்** உதயஞ் செய்தான்.

**வாதவூரர் சோமசுந்தரக் கடவுளைத் தோத்திரஞ் செய்தல்**

மிக்க மணம் பொருந்திய மலர்ப்பள்ளியினின்றும் மீனட்சியம்மையோடுங் துயிலுணர்ந்திருந்த சோமசுந்தரக் கடவுளாகிய அருள்வெள்ளம் எழுந்தருளிய விண்ணிழி விமானத்தை நோக்கிக் கைகளைச் சிரசின்மேற் குவித்து ஆனந்த வருவி ஒழுக வாதவூரர் இறைவனைத் தோத்திரஞ் செய்வாராயினர்:

*எந்தாய்! அனைத்துலகும் ஈன்றாய்! எத் தேவர்க்குந்*
*தந்தாய்! செழுங்குவளைத் தாராய்! பெருந்துறையில்*
*வந்தாய்! மதுரைத் திருவால வாயுறையுஞ்*
*சிந்தா மணியே! சிறியேற்(கு) இரங்காயோ?*

மூவா முதலாய் முதுமறையாய் அம்மறையுந்
தாவாத சோதித் தனிஞான பூரணமாய்த்
தேவாதி தேவாய்த் திருவால வாயுறையும்
ஆவார் கொடியாய்! அடியேற்(கு) இரங்காயோ?

முன்னும் முதுபொருட்கும் முன்னும் முதுபொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னுகும் பேரொளியாய்த்
தென்னு! மதுரைத் திருவால வாயுறையும்
என்னு யகனே! எளியேற்(கு) இரங்காயோ?

மண்ணாய்ப் புனலாய்க் கனலாய் வளியாகி
விண்ணாய் இருசுடராய் இத்தனையும் வேருகிப்
பண்ணாய் இசையாய்ப் பனுவலாய் எங்கண்ணுங்
கண்ணுனாய்! என்உறுகண் காணுவா(று) என்கொலோ?

பொங்குஞ் சினமடங்கல் போன்றுருத்து வெங்கூற்றம்
அங்கும் புரியா அருந்துன்பத்(து) ஆழ்ந்துநான்
மங்கும் படியறிந்தும் வந்(து)அஞ்சல்! என்கிலையால்;
எங்குஞ் செவியுடையாய்! கேளாயோ? என்னுரையே.

பூட்டியருட் பாசமிரு பாதம் பொறித்துடலிற்
கூட்டி அடியாருள் அகப்படுத்தாட் கொண்டருமை
காட்டியவோ! இன்றென்னைக் கைவிட்டாய்; வெய்யர்எனை
ஆட்டி ஒறுக்குமிடத்(து) ஆர்ஏன்று கொள்வாரே?

ஊரார் உனைச்சிரிப்ப(து) ஓராய்என் றுன்னடிமைக்(கு)
ஆராய் அடியேன் அயர்வேன்; அஃதறிந்தும்
வாராய்; அரசன் தமர்இழைக்கும் வன்கண்ணேய்
பாராய்;உன் தன்மை இதுவோ? பரமேட்டி.

**இறைவன் கணநாதர்களை நரிகளைப் பரிகளாக்க ஏவுதல்**

இவ்வாறு வருந்தும் வாதவூரடிகளின் முறையீட்டொலி குழந்தைகளுடைய அழுகையொலி தாயார் செவியிற் புகுந்தது போலத் தமது திருச்செவியில் நுழைதலும் சிவபெருமான் வாதவூரைச் சிறையினின்று நீக்கத் திருவுளங்கொண்டு நந்தி தேவர் முதலிய கணநாதர்களை அழைத்தருளினர்; அவரனை வரும் வந்து வணங்கி நின்றனர்; "**ஆவணி மாதத்து மூலநாள்**

[1] முற்பட்டே வந்துவிட்டது; இன்றைக்கு நாம் முற்பட்டுப் பாண்டியன் சினங்கொள்ளா முன்னே குதிரைகளையெல்லாம் கொண்டுபோய்க் கொடுத்தல்வேண்டும்; நீவிர் அனைவரும் காட்டில் உலவும் நரிகளனைத்தையும் கொண்டு வந்து தாவிச் செல்லும் குதிரைகளாக்கி நீங்கள் யாவரும் குதிரைச் சேவகர்களாய் அவற்றின்மீது ஏறிக்கொண்டு முன்னே செல்லுங்கள். நாமும் நோக்குவோர்க்குக் குதிரைச் சேவகர் என்னும் கருத்து உண்டாக அவ்வாறேவருகின்றோம்'' என்று அருளிச்செய்தார். அவ்வாணையை மேற்கொண்டு சிவகண நாதர்கள் நரிகளையெல்லாம் [2] ஓரிடஞ் சேர்த்துக் குதிரைகளாகச் [3] செய்து தாம் அக் குதிரைகளை நடாத்துகின்ற சேவகராயினர்.

**கண நாதராகிய குதிரை வீரர்கள்**

அக் குதிரைச் சேவகர்களெல்லாம் செம்பட்டாடையைத் தூக்கிக் கட்டினர்; உடை வாளினை இடையில் அணிந்தனர்; காலில் செருப்பினையும் உடலில் கவசத்தினையும் தரித்தனர்; திருநீற்றினை முப்பட்டையாக நெற்றியில் அணிந்தனர்; கண்டோர் அஞ்சுமாறு கண்களையும், இடிபோலும் தாக்கி ஒலி எழும் நகையினையும், மிக்க கோபத்தினையும் கொண்டவராய் விளங்கினர். அவர்களுட் சிலர் வட்டமாகிய கேடகத்தையும், கூரிய வாட்படையினையும் ஏந்தி நின்றனர். சிலர் நீண்ட தண்டத்தைச் சுழற்றிய வண்ணம் நின்றனர். சிலர் அம்புக் கூட்டினையும் வில்லினையும் தாங்கி நின்றனர்.

சிவந்த ஆடையாற் செய்த போர்வையினையுடையவர் சிலர்; பசிய ஆடையால் தோளில் இறுக்கிக் கட்டிய கவச

---

1. ஆவணி மூல நாள் ஆடி மாதத்தின் இறுதியில் வந்தமையால், 'முற்பட்டே வந்துவிட்டது' என்றார்.

2. இந்த இடம் தற்போது 'நரிக்குடி' என வழங்குகிறது. இது மதுரைக்கு மேற்கே உள்ளது என்பர்.

3. இங்கு, ''நரியைக் குதிரை செய்வானும்'' (திருநாவுக்கரசர் - தேவாரம்) எனவும், ''அரியொடு பிரமற் களவறி யொண்ணான், நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்'' (திருவாசகம் - கீர்த்தித் திருவகவல்) எனவும், ''நரியைக் குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லா நிகழ்வித்து'' (திருவாசகம் - ஆனந்தமாலை) எனவும் வரும் அடிகள் கருதற்பாலன.

முடையவர் சிலர்; கரிய மேகம் போல நீல ஆடையால் செய்த கவசத்தைத் தோளில் அணிந்தவர் சிலர். பொன்னிறமான ஆடையாற் செய்த சட்டையுடையவர் சிலர். பீலிக் குஞ்சங் கட்டிய குடையினர் பலர்; கவரிமாவின் வால் கொண்டு தைத்த தண்ணிய குடையினர் பலர்; சுற்றிலும் சல்லி தொங்கும் குடையினர் பலர்; முத்துக்கள் நிறைந்த வெண்குடையினர் பலர்.

**இறைவன் மறைப்பரி வீரராக எழுந்தருளல்**

தொண்டர்களின் பாசமாகிய கட்டினை அவிழ்க்க எழுந்தருளும் பரஞ்சோதியாகிய சோமசுந்தரக் கடவுள், அமைச்சராகிய வாதவூரடிகளின் பொருட்டல்லாமல் அரிமருத்தன பாண்டியன் பிறப்பினை அறுக்கும் பொருட்டும், திருவடியில் வீரக் கழலை அணிந்து, திருக்கரத்தில் அகவிருளையும் புறவிருளையும் போக்கி ஒளி வீசும் ஞான வாளை ஏந்தி, ஒரு புறஞ் சாய்ந்த கொண்டையும், திருமுடிப்பாகையும், வைரம் பதித்த கண்டிகைகளும், வீரவளைகளும், குண்டலங்களும், விபூதியைத் திரிபுண்டரமாக அணிந்த நெற்றியும், வெள்ளிய ஆடையும், கவசமும் ஆகிய இவை மெய்ப்பொருளை ஆராய்ந்தறிந்த அடியார்களின் மனத்தினின்றும் நீங்காமல் அழகு வீச, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு கால்களையும், ஞான காண்டம் கருமகாண்டம் என்கின்ற செவிகளையும், பரஞானம் அபர ஞானமாகிய இரண்டு கண்களையும், அரிய விதியாகிய முகத்தினையும், விலக்காகிய வாலையும், ஆகமங்களாகிய புறவணிகளையும். ஆகம மந்திரங்களாகிய சதங்கை மாலை, கிண்கிணி மாலை சிலம்பு முதலியவற்றையும், இரு மருங்கு சூரிய சந்திரர்களாகிய அங்க வடிகளையும், பிரணவமாகிய கடிவாளத்தையும், உபநிடதமாகிய கல்லணையையும், புறச் சமயங்களாகிய சேனைகள் சிதறி ஓடும் வண்ணம் கோபங்கொண்டு போர் செய்யும் வல்லமையையும், நான்முகனின் முகங்களாகிய இலாயத்தையும் கொண்ட வேதமாகிய குதிரையின்மேல் எழுந்தருளினர்[1].

---

1. இங்கு, "மதுரைப் பெருநன் மாநகர் இருந்து, குதிரைச் சேவகனாகிய கொள்கையும்" (திருவாசகம் - கீர்த்தித்திருவகவல்) எனவும், "பாரின்ப வெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்"

'அப்போது பிறப்பில் விருப்புடையவர்களெல்லாம் மறந்தும் இப்பக்கம் வராதீர்கள்; பிறப்பினைப் போக்கும் விருப்புடையவர்களெல்லாம் விரைந்து ஓடி வாருங்கள்[1]; மாணிக்கவாசகருக்குப் பாண்டியன் செய்யும் துன்பத்தினைப் போக்கும் பொருட்டு வருதல்போல இறைவன் உங்கள் பிறவியினை ஒழிக்க வந்தனன்' என்று கூறுதல்போலக் குதிரையின் காற்சிலம்புகள் ஒலித்தன. காவிரி, துங்கபத்திரை முதலாகிய நதிகள், "கங்கையைச் சடையில் மறைத்துவைத்தருளினை; அவளை ஒளித்தது போல எங்களையும் ஒளித்தருளுவாயாக" என்று குறையிரந்து சூழ்ந்து பொங்கி வீழ்வனபோல, மேலாடையும் சாமரையும் புரண்டன. கலைமகள், சோமசுந்தரக் கடவுள் நான்குவேதங்களையும் குதிரையாகக்கொண்டு வந்தனர் என்று கருதித் தான் ஒரு வெள்ளிய குடையாகிக் கவிந்தாற்போல, வெண்கவிகை திருமுடியின்மேல் பால் போன்ற நிலவினை வீசியது. பதினெண் புராணங்கள், "இவன் தான் நாங்கள் கூறும் இறைவன்; படைத்துக் காத்து அழிப்பவனும் இவனேதான்; வேதங்களெல்லாம் முறையிடும் பரம்பொருளும் இவனேதான்" என்று வாய்விட்டுக் கூறுவன போலப் பதினெட்டு வகை வாத்தியங்கள் முழங்கின.

**மாயக்குதிரைகள் திரண்டுவரும் தோற்றம்**

இந்த மாயமாகிய குதிரைக் கூட்டங்கள் மேற்றிசையினை நோக்கி நடந்தன. இறைவர் ஏறிய வேதமாகிய குதிரை இவற்றின் நடுவே சென்றது. குதிரைகளின் செலவால் மேலெழுந்த [2]புழுதிகள் எல்லாத் திக்குகளிலும் சென்று பரவின; அதனால்

---

(திருவாசகம் - திருப்பாண்டிப் பதிகம்) எனவும், "தேவருங் காணச் சிவபெருமான் - மாவேறி, வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க" (திருவாசகம் - திருவெண்பா) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

1. இங்கே, "செறியும் பிறவிக்கு நல்லவர் செல்லன்மின் தென்னனன்னாட்(டு), இறைவன் கிளர்கின்ற காலமிக் காலம்எக் காலத்துள்ளும், அறிவொண் கதிர்வாள் உறைகழித் தானந்த மாக்கடவி, எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இருநிலத்தே" (திருவாசகம் - திருப்பாண்டிப் பதிகம்) எனவரும் பாடல் சிந்திக்கற்பாலது.

2. குதிரைகளின் புழுதி மண்டிய இடம் 'மண்டியூர்' என வழங்குகிறது.

சூரியன் தான் செல்லும் வழியை அறியாது மயக்கமுற்றான்; அக்குதிரைகள் தம் நடையினாலே மேட்டினைப் பள்ளமாக்கின; பள்ளத்தை மேடாக்கின; தம் வாயிலிருந்து கொப்பளித்துச் சிந்தும் நுரை பூமி முழுதும் வெள்ளம்போல் நின்றது; குளம்பி லிருந்து எழும் புழுதி அவ் வெள்ளத்தை வற்றச்செய்து நிலமாக் கியது; செம்புழுதி எங்கும் பரவியபோது, ஆகாய கங்கை வையையாற்றினை ஒத்தது; சூரியனின் பச்சைக் குதிரைகள் ஏழும் சிவந்த குதிரைகளை ஒத்தன; திக்கு யானைகள் தம் முகங்களில் சிந்தூரம் அப்பியதுபோலத் திகழ்ந்தன. நடுப் பகல் மாலைப்பொழுதை ஒத்தது. நிலவுலகு, திசைகள், வானுலகு இவற்றை மூடிய புழுதியுள் மறைந்து வருகின்ற குதிரைகள் வழியிலே வருதலை, அவற்றின் சதங்கைமாலை, கிண்கிணிமாலைகளின் ஒலியாலும் கனைப்பொலியாலுமே மக்கள் அறிந்தனர்; கண்களால் காணாதவராயினர்.

**ஆடவர் குதிரைகளைக் கண்டு கூறும் கூற்று**

"இவை வாய் நுரைகள் அல்ல, கடல் அலைகள் வீசும் முத்துக்கள்" என்றும், "இவை குதிரைகளின் கனைப்பொலி அல்ல, கடல் அலைகள் ஒலிக்கும் ஒலியாம்" என்றும், "இங்கு வருபவை குதிரைகள் அல்ல, இப்பொழுதும் இந்திரன் மதுரையை அழிக்க வரவிடுத்த கடலாம்" என்றும் கண்டோர் கூறுவர்.

"இக்குதிரைகள் முன் இந்நிலவுலகில் உள்ளன அல்ல; இந்திரனின் குதிரையோ எனின், அஃது ஒன்றே ஆதலின் அதுவல்ல; சூரியனின் குதிரைகளோ எனின், அவை ஏழு; அவ் வேழும் பச்சைக் குதிரைகள் ஆதலின் அவையுமல்ல; ஆதலால், இக்குதிரைகள் யாவை?" என ஒருவரை ஒருவர்வினவுவர்.

"பரிநூலின் இலக்கணங்கள் நிரம்பப்பெற்ற இக்குதிரை கள் நிலமகள் முதுகு கிழியும்படி வெகுண்டு எழுந்து வருதல், பாதலத்தில் வசிக்கும் அனந்தன் முதலிய பாம்புகளைப் பொருது அழித்தற்கோ? அல்லது வானுலகைப் பொருது அழித்தற்கோ அறியோம்" என்றும், "சோழன் உள்ளத்தையும், சேரன் உள் ளத்தையும், வாதவூரடிகளை வருத்தும் பாண்டியன் உள்ளத்

தையுஞ்சுடுதற்கோ அறியோம்'' என்றும், ''முன்னொருகாலத்தில் சுந்தரசாமந்தன் என்னும் ஒரு சேனைத்தலைவன் பொருட்டுப் பாண்டியன் முன்னே அளவிறந்த சேனைகளோடு குதிரைமீது இறைவன் வந்ததுபோல, இக்குதிரையில் வரும் வீரர், இன்று இம் மந்திரியாரின் துன்பத்தைப் போக்கும்பொருட்டு வந்தனரோ'' என்றும் பலர் பலவாறு கூறுவர்.

**பெண்கள் கூறும் கூற்று**

பெண்கள், வேதமாகிய குதிரைமீது வரும் வீரனாகிய பேரழகனைக் கண்டு, ''இவன் மன்மதனோ? அன்றி முருகனோ? மாயனோ? இந்திரனோ?'' என ஐயுற்றனர்! அவருள் சிலர் அப்பேரழகனை அடுத்து நின்று அவன் அழகு அனைத்தையும் கண்ணாகிய வாயினால் பருகுவர்; கைவளைகளை மாலைக்கு விலையெனக் கொடுப்பர்; 'மாலை கொடாயேல் அவற்றின் விலையாகக் கொடுத்த எங்கள் வளைகளை எடுத்து எங்கள் கையில் இடுவாயாக' என்பர். வேறு சிலர் பேரழகன் திருமுடி மாலையினின்றும் சிந்திய மலர்களை எடுத்துத் தங்கள் கூந்தலிற் சூடி மதவேளை வென்று வெற்றிமாலை கொள்வர். மற்றுஞ் சிலர் பேரழகன் மார்பினின்றும் சிந்திய சாந்தினைத் தங்கள் மார்பில் பூசி அவனைக்கூடி மகிழ்ந்தவரை ஒத்தார். ஒருசிலர் ''இப்பேரழகன் மார்பில் அணிந்த போர்வை நமது உயிரை அம்மார்பு கவராது தடுத்ததனால் அதற்குக் '**கவசம்**' என்னும் பெயர் இட்டது மெய்யே'' என்பர். வேறு சிலர், ''இப்பேரழகனின் சிரமாலை நமது உயிரை அகப்படுத்தினமையால் அது '**கண்ணி**' என்று சொல்லப்பட்டது உண்மையே'' என்பர்.

தமது இச்சையளவானே திருவுருவம் எடுக்கும் இறைவன், இந்திரசால வித்தை காட்டுவானைப்போல இங்ஙனம் குதிரை வீரனாகத் தன்னைக் காட்டி ஆடவரையும் மகளிரையும் மயக்கி நடந்தருளினார்.

தாவிவரும் குதிரைகள் ஐம்பொறிகளை ஒத்தன; அவற்றை நடத்திச் செல்லும் வீரர்களாகிய சிவகணத்தவர் மனங்களை ஒத்தனர்; அம்மனங்கள்தோறும் பொருந்தி நின்று இடையறாமல் இயக்கும் உயிர், நடுவே வரும் வேதமாகிய குதிரையினை நடத்தும் இறைவனை ஒத்தது.

இயங்களின் பேரொலியும், குதிரைகளின் கனைப்பொலியும், வீரர்களின் ஆரவாரமும் ஒன்றுகூடித் திசைகளைச் செவிடாக்க, வேதமாகிய குதிரையின் பாகனாகிய சிவபெருமான் மதுரை மாநகர்க்கு அரைக்காத தூரத்தில் வந்தருளினார்.

**குதிரைகள் வருதலை அறிந்தோர் அமைச்சர்க்குக் கூறல்**

அப்பொழுது குதிரைகளின் வரவைக் கண்டவர்கள் முகமலர்ந்து விரைந்து ஓடி நகரினை அடைந்து முகில்கள் தவழும் மணிமாடத்துச் சிறையிலிருக்கின்ற திருவாதவூரர் திருமுன் சென்று, "பாண்டியனது அரசியல் நெறியினின்றும் வழுவாத அமைச்சருள் தலைவரே! பலநிறமுள்ள ஏழு கடல்களும் வருவனபோலக் குதிரைகளெல்லாம் வருகின்றன. இப்பொழுது மதில்வாயிலிலே நுழைந்திருக்கும்; அதனை விரைந்து அரசனுக்கு விளம்புவீராக" என்றார்கள்.

**வாதவூரடிகள் அரசரிடம் குதிரைகளின் வரவை அறிவித்தல்**

உடனே இறைவன் திருவருளைப் பெற்ற வேதியர் பெருமானாகிய திருவாதவூரர், முகிலைத்தளையிட்ட பாண்டியர்பெருமானை அடைந்து, "அரசே! குதிரைகள் வருகின்றன" என்றார். அதைக்கேட்ட அரிமருத்தன பாண்டியன், உடம்பு பூரிக்க மகிழ்ச்சிமிக, மிகுந்த விலைபெற்ற முத்தாரங்களையும் பட்டாடைகளையும் கொடுத்துத் திருவாதவூரடிகளை மகிழ்வித்து, அரியணையினின்றிழிந்து அமைச்சர் முதலாயினோர் சூழத் தலைவாயிலில் வந்து, அதன் அருகில் உள்ள ஒரு மாடத்தில் புகுந்து பெண்கள் இருமருங்கிலும் நின்று கவரிகள் வீசவும், அமைச்சர் முதலியோர் புறத்தில் சூழவும் குதிரைகளை எதிர்கொள்வானாய் அரியணையில் வீற்றிருப்பானாயினன்.

**குதிரைகள் வரவு தாழ்க்க அரசன் மந்திரியைத் தண்டித்தல்**

சோமசுந்தரக் கடவுள் தமது திருவிளையாடலைக் காட்டும் பொருட்டுத் திருவுளங்கொண்டு குதிரைகளின் வரவைச் சிறிது போது தாழ்த்தார். பாண்டியன் குதிரைகளைக் காணாமையால் மனம் வெள்கி, "இது பொய்" என்று கருதிக் கோபங் கொண்டு, "திருவாதவூரரைத் தண்டியுங்கள்" என்ற குறிப்போடு தண்டலாளரை நோக்கினான். அவர்கள் பாண்டியன்

கருத்தின்படியே அமைச்சர் பெருமானைக் கொண்டுபோய்ப் பழிபாவங்களுக்கு அஞ்சாமல் கண்டோர் நினைவிற்கு எட்டாத வகையிலே ஒறுத்தார்கள்.

**வாதவூரடிகளின் முறையீடு**

சிவஞானச் செம்மலாகிய திருவாதவூரர் சோமசுந்தரக் கடவுளை நினைந்து அவர் திருவடிகளைத் துதிப்பாராயினர்.

பூவார் முளரிப் புத்தேள் அறியா நெறிதந்தாய்!
பாவார் தென்சொற் பனுவல் மாலைப் பணிகொண்டாய்!
தேவா! தேவர்க் கரசே! சிறியேன் உறுதுன்பம்
ஆவா என்னாய்! அஞ்சேல் என்னாய்! அறனேயோ?

நெஞ்சே உரையே செயலே எல்லாம் நினஎன்றாய்!
வஞ்சே போலும்; அஃதேல் இன்று வாராயோ?
பஞ்சே ரடியாள் பாகா! கூடற் பரமேட்டீ!
அஞ்சேல் என்னாய்! இதுவோ? அருளுக்(கு) அழகையா!

காவி நேருங் கண்டா! [1] நாயிற் கடையான
பாவி யேனைப் பொருளாக் கொண்டென் பணிகொண்டாய்!
ஆவி யோ(டு)இவ் வுட்லும் நினதே அன்றோ? இன்(று)
ஓவி வாளா திருந்தால் யார்?என் உடையானே!

**குதிரைகளின் சதங்கையொலியும் குதிரைகளின் வரவும்**

இவ்வாறு குறையிரந்து வருந்தும் வாதவூரடிகள், தம் இரு செவிகளுள்ளும், தாயைப்பிரிந்து வருந்தும் இளங்கன்றின் காதில் தாய்ப்பசுவின் கனை குரல் ஒலி சென்றடைதல் போலச் சின்னமும் காளமும் காகளமும் எழுப்பும் ஒலி சென்று விழுந்தது; குதிரைகளின் காலடிச் செந்தூள் திசைகளெல்லாம் விழுங்கவும் கண்டார். பாண்டியனும் குதிரைகளின் வரவை அறிந்து வாதவூரடிகளை அழைப்பித்து அளவிலா அன்பு காட்டி, "எமது குற்றமற்ற அரசியல் வினைகளை நும்மைப் போல் ஏற்றுச்செய்து முடிப்பவர் யார்?" என்று கூறி, அடங்காத மகிழ்ச்சியுடன் அவரோடு அளவளாவி இருந்தான்.

1. இங்கே, "நாயிற் கடையாம் நாயேனை நயந்து நீயே யாட்கொண்டாய்" என வரும் திருவாசகம் குழைத்த பத்தின் அடி கருதற்பாலது.

அப்போது குதிரைகளெல்லாம், பரவிய இருட்கூட்டத்தைக் கிழித்துப் பல கிரணங்களைப் பரப்பித்தோன்றும் இளஞ் சூரியர்களைப் போன்ற சிறந்த தோற்றத்தையுடைய பாகர்களோடு வந்தன.

**பாண்டியனின் பெரு மகிழ்ச்சி**

பாண்டியன் தன் மரபிற் போந்த முன்னோர்களும் கண்டறியாத தோற்றத்தையும் விரைந்த நடையினையுமுடைய குதிரைகளைப் பார்த்து, "நாமும் இந்திரனைப்போல ஆயிரம் விழிகளைப் பெற்றாலும் அவற்றால் இவற்றின் பொலிவுகளைப் பார்க்க முடியாது" என்ற மனக்குறிப்போடு மகிழ்ச்சியினால் விழுங்கப்பட்டு, அழகிய குதிரையின்மேல் ஏறிவந்த வீரரை நோக்கி வியப்புற்றுத் திருவாதவூரரை நோக்கி, "இவருள் தலைவர் யாவர்" என்று வினவினான். அனைத்தையும் அறிய வல்ல அமைச்சர், "ஐயனே! யான் அதனை அறியேன்" என்றார்.

**இறைவராகிய வீரர் குதிரையினை நடத்திக் காட்டல்**

அப்பொழுது அண்டங்களனைத்தையும் ஆதாரமாக நின்று தாங்கியருளும் இன்பப் பேரொளியார், தமக்கு வேதப் புரவியை ஆதரவாகக்கொண்டு எக்காலத்தும் அசையாத தாமரைச் சீறடி அசைய, உயிர்களின் பாசத்தைப்போக்கும் திருக்கையினாலே குதிரைக் கடிவாளக் கயிற்றைப் பற்றிக் கொண்டு அரசனுக்கு எதிரே போய், "அரசே! எங்கள் குதிரை ஏற்றத்தினைச் சிறிது காண்பாயாக" என்று கூறி, அரசனும், அவையினருமே அல்லாமல் திசைக்காவலரும், தேவர்களும் கண்டு மருளுமாறு குதிரையினை **மல்ல கதி, மயூர கதி, வானர கதி, வல்லிய கதி, சர கதி** (அல்லது இடப கதி) என்னும் ஐந்து கதிகளும், பதினெண் வகை விசித்திர சாரி (நடை) விகற்பங்களும் தோன்றச் செலுத்திக் காட்டியருளினார். எவ்வுலகத்தையும் அசைக்கவல்ல சிவபரம்பொருள் நடத்திக் காட்டினமைபோலச் சூழ்ந்து நின்ற சிவகணத்தவராகிய குதிரை வீரர்களும் தாம்தாம் ஏறிவந்த குதிரைகளை நடத்திக் காட்டினார்கள். பாண்டியன் அதனைக்கண்டு அவர்களை நோக்கி, "உங்களுக்குள்ளே தலைமையானவர் யாவர்?"

என்றான். குதிரை வீரர், சோமசுந்தரக் கடவுளாகிய குதிரை வீரரைச் சுட்டி 'இவர்' என்று காட்டினர்.

சுட்டிக் காட்டுதற்கு அரிய பரஞ்சோதியாகிய இறைவன் வேதமாகிய குதிரையை நடத்திக்கொண்டு பாண்டியன் முன் வந்தார்; அவருடைய அருணோக்கத்திற்கு இலக்காகிய பாண்டியன் மனமயங்கித் தன் நிலையை மறந்து இருக்கைவிட்டெழுந்து கைகளைச் சிரசின்மேற் குவித்துக்கொண்டு நின்றான். பின்பு சிவபெருமானுடைய ஆணையினாலே மறைப்புண்ட அறிவு தன் உள்ளத்திலே தோன்ற, "இப்பொழுது நாம் ஒரு குதிரை வீரனைக் கண்டு எழுந்து கைகுவித்து வணங்கி நின்ற நிலை என்னே" என்று கருதித் தன் இருக்கையில் திரும்ப அமருவதற்கு வெள்கி நின்றான்.

**குதிரைவீரர் அரசனுக்கு வாணிப முறையைக் கூறுதல்**

அங்ஙனம் நிற்கும் பாண்டியனுடைய முகத்தைக் குதிரை வீரராகிய சோமசுந்தரக் கடவுள் பார்த்து, "பொன்மலை போலும் தோளையுடைய அரசனே! உன் பொருளையெல்லாம் கொண்டு வந்து உனது சொல்லைக் கடவாத அமைச்சராகிய வாதவூரர், தாமாகவே எமக்கும் எம்மை விட்டு நீங்காத பரிசனங்கட்கும் நிறைய வழங்கினார். ஆதலால் வானவர்க்கே அல்லாமல் மனிதர்களுக்குக் கிடைத்தற்கு அரியனவும், விலை மதித்தற்கு அரியனவும், பரிநூல் இலக்கணக் குறைபாடு சிறிதும் இல்லாதனவும் ஆகிய நல்ல குதிரைகள் உனக்கு வந்தன. இக்குதிரைகளை இன்றைக்கு நீ என்னிடத்திலிருந்து கயிறுமாறி நின்னுடையனவாக ஏற்றுக்கொள்ளும் முறையினால் இக்குதிரைகள் நின்னுடையனவேயாம். ஆதலால், அவை நாளைக்கு என்ன தன்மையை அடைந்தனவேனும் எனக்கும் உனக்கும் அதைக்குறித்து யாதொரு வழக்குமில்லை; இது (குதிரை வாணிகத்தின் வழக்கம்" என்றார். அப்பொழுது பாண்டிய மன்னனும் மனமகிழ்ந்து அதற்கு உடன்பட்டு, "எமது முதல் அமைச்சராகிய திருவாதவூரர் ஒப்பற்ற திறமுடையராய் உம்மிடத்திற்கொண்ட நட்பினாலே மிகுந்த தூய்மையுடையவரானார்" என்று மிகப் பாராட்டிக் கூறினான்.

குதிரைவீரராய் வந்த கடவுள், குதிரைகளைப் பாண்டிய னுக்குக் கயிறுமாறிக் கொடுத்தற்கு முன்னே பொதுவாகிய குதிரையின் இலக்கணங்களைக் கூறலானார் :

**இறைவன் குதிரையின் இலக்கணங் கூறல்**

" அரசே ! **ஓரிக் கடும்பரி** (ஓரி-நரி, நரியாகிய வேகமுள்ள குதிரைகள் ; இந்த ஒப்பற்ற வேகமுடைய குதிரைகள்) போர் புரிதற்குரிய சமயம் நேரின், மதிலுறுப்பையும் தாவிச் செல் லும் ; பலகணிவாயிலும் நுழைந்து செல்லும் ; வெளியிடங்கள் அனைத்தையும் வழியாகக்கொண்டு செல்லும் ; கொடிய பசி வந்துற்றால் தின்னப்படாத வைக்கோல் முதலியவற்றையும் தின்னும்.

காயும்வேல் மன்ன ! **ஓரிக் கடும்பரி** அமையம் வந்தால்
ஞாயிலுந் தாண்டிச் செல்லும் ; நாட்டமும் நுழையாச் சால
வாயிலும் நுழையும் ; கண்ட வெளியெலாம் வழியாச் செல்லும் ;
தீயவெம் பசிவந் துற்றால் தின்னாத எனினுந் தின்னும்.

சிறந்த இலக்கணம் நிறைந்த குதிரையொன்று ஒருவ னிடம் வந்து தங்கியிருந்தால், அவனிடம் விரைந்து திருமகள் வந்து பொருந்துவாள் ; வளமிக்க செல்வம் பெருகும் ; புகழ் மிக்கு ஓங்கும்.

குதிரைகள் [1] **பாடலம், கோடகம், இவுளி, வன்னி, குதிரை, பரி, கந்துகம்** எனப் பலவகை உள.

**பாடலம்** என்பது மாந்தளிர்போன்ற நிறமுடைய நாவினை யும், உயர்ந்த குளம்புகளையும், தம்முள் ஒத்த நீண்ட பற்களை யும், பாம்பின் படம்போன்ற மார்பினையும் கழுத்தினையும் கொண்டதாகும்.

**கோடகம்** என்பது அகன்ற நெற்றியினையும், குடுமிபோல் ஒரே நிறமுடைய பிடரிமயிரினையும், முக்கோணமான அழகிய முகத்தினையும் பெற்றதாகும்.

**இவுளி** என்பது போரின்கண் தன் முகத்தில் வாளினால் வெட்டினும் எதிர்த்துப் போர்புரியும் வல்லமையினையும்,

1. இப்பெயர்கள் குதிரைக்குரிய பல பெயர்களும் ஆகும்.

குரங்கு, புலி, யானை, நரி, சிங்கம், சரபம், முயல், முகில் என்ற இவற்றுள் ஒன்றன் நடையினையும் கொண்டதாகும்.

**வன்னி** என்பது பொருந்திய உயர நீளங்களையும், சங்கும் வெள்ளைச் சருக்கரையும் போன்ற வெள்ளிய வாய் நுரையினையும், பிங்கல நிறம் (பொன்மைகலந்த செந்நிறம்), கருநிறம் ஆகிய இவற்றுள் ஒன்றன் நிறத்தினையும் கொண்டதாகும்.

**குதிரை** என்பது கழுத்தில் வலமாகச் சுழிந்திருக்கும் சுழியாகிய **தெய்வமணி**யினையும், முகம், மார்பு, உச்சி, வால், நான்கு கால்கள் என்னும் இவ்வெட்டுறுப்புக்களில் வெண்மை கலந்துள்ள **அட்ட மங்கலம்**, முகம், நான்கு கால்கள் இவ்வைந்து உறுப்புக்களில் வெண்மை கலந்துள்ள **பஞ்ச கல்யாணி** ஆகிய இவற்றுள் ஒன்றனையும் பெற்றதாகும்.

**பரி** என்பது குங்குமப்பூ, கருப்பூரம், அகிற்குழம்பு, கத்தூரி ஆகிய இவற்றுள் ஒன்றன் மணத்தினையும், சங்கு, மேகம், சரபம், சிங்கம் ஆகிய இவற்றுள் ஒன்றன் ஒலிபோன்ற கனைப்பினையும் கொண்டதாகும்.

**கந்துகம்** என்பது கடைந்து எடுத்தாற்போன்ற நான்கு கால்களையும், சுழலும்போது கொள்ளிவட்டம்போல் திகழும் இயல்பினையும், ஏறிய வீரனுடைய காலினுள் அடங்கும் தன்மையினையும் கொண்டதாகும்.

"முழு இலக்கணமும் ஒளியும் நிறைந்தவையும், மதிலையும், மலைமேற் கோட்டையையும், நதியினையும் தாண்டிடும் வலிமை பெற்றவையுமே இங்கு வந்துள்ளன. இவற்றின் வயது எட்டு ஆகும். அரசே! இக்குதிரைகள் தங்களால் ஏறிச் செலுத்தத் தக்கவை" என்று சொல்லி மறை முடிவாகிய உபநிடதத்தின் உட்பொருளான இறைவர் தம் கணங்களின் முகத்தைத் திரும்பி நோக்கினர்.

**கணநாதராகிய வீரர்கள் குதிரைகளை நடத்திக்காட்டல்**

உடனே குதிரை வீரர்கள் குதிரைகளின் இலக்கணங்களைக் கூறும் நூல்கள் அனைத்திற்கும் எல்லை காட்டுவதுபோலக் கண்டவர் மனமும் பிற்படக் குதிரைகள் அனைத்தையும்

விரைந்து ஓடும்படி[1] செலுத்தினர்கள். பாண்டியன் அதுகண்டு வியப்படைந்தான்; தன் அருகு சூழ்ந்த மந்திரி முதலாயினோரை நோக்கி முடியினை அசைத்துப் புன்னகையுடன் பெருமகிழ்ச்சி கொண்டான்[2].

**சிவபெருமானாகிய வீரர் தம் குதிரையினை நடத்திக்காட்டல்**

சிவபெருமானாகிய வீரரும் வேதப்புரவியை, இடசாரியும் வலசாரியுமாகக் கொண்டு கொள்ளிவட்டம்போல் வட்டமாக வருமிடத்து வீதியனைத்தும் ஒரு குதிரையே நிலைத்துநின்ற தோற்றம்போன்று ஒரு கணப்பொழுதில் நடத்திக்காட்டினர். இவ்வாறு சுற்றிவரும் புரவி முன்னாளிலே வங்கியசேகர பாண்டியன் வேண்ட இறைவன் தமது திருக்கரத்திலே நிலைபெற்றிருந்த கங்கணமாகிய பாம்பினை விடுத்து மதுரை மாநகரின் பழைய எல்லையைக் காட்டியதுபோன்றிருந்தது. மற்றும் பல நிறமுடைய குதிரைகள் வீதியுள் பின்னிய பாம்புபோல வட்டமாய்ப் பின்னிச் செல்லும் காட்சி, மதுரையாகிய மங்கையின் கையில் அணிந்த பலநிற மணிகள் பதித்த வளையல்கள் போன்றன. பெண்கள் இடித்த பொற்சுண்ணஞ் சிந்திய வீதியின்கண் தாவிச் செல்லும் குதிரைகளின் வரிசைகளினின்று எழுந்த புழுதி, பொன்னுலகத்திலே குதிரைகள் உந்திச்செல்லும்போது மேலெழுந்த பொற்புழுதியை ஒத்தது.

இவ்வாறு தேவர்களும் பிறநகரிலுள்ள மக்களும் மதுரை நகர மக்களும் மகிழும்படி இறைவர் குதிரையைச் செலுத்திப் பாண்டியனின் முன் தம் வீரருடன் வந்து நின்றார்.

**வேதப்பரிவீரர் வழுதிக்குக் குதிரைகளின் நாடுகளைக் கூறல்**

சோமசுந்தரக் கடவுளாகிய வீரர் பாண்டியனை நோக்கி, "அரசே! இக்குதிரைகள் **காம்போச** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **மந்தரமலையி**லுள்ளவை; இக்குதிரைகள் **காந்தார**

1. குதிரை ஓடும்படி செய்து காட்டிய இடம் 'மா நகரி' என்பர்; இது மதுரைக்கு வடகிழக்கில் உள்ளது.

2. பாண்டியன் மகிழ்ந்து குதிரைகளை நன்கு மனத்திலே விலை மதித்த இவ்விடம் 'மதிச்சயம்' எனப் பெயர் பெறும். மதிச்சயம் - இஃது ஓர் ஊர்.

நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **வான்மீக** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **சிந்து** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **பாஞ்சால** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **துளுவ** நாட்டில் உள்ளவை; இக்குதிரைகள் **இமயத்தி**லுள்ளவை; இக்குதிரைகள் **ஸ்ரீசைலத்தி**லுள்ளவை; இக்குதிரைகள் **கலிங்க** நாட்டில் உள்ளவை; இக்குதிரைகள் **ஆரிய** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **கூர்ச்சர** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **கேகய** நாட்டிலுள்ளலை; இக்குதிரைகள் **யவன** நாட்டிலுன்ளவை; இக்குதிரைகள் **மக்க** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **வனயுச** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **பல்லவ** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **சவ்வீர** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **மகாராஷ்டிர** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **வாசந்திக** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **காஸ்மீர** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **மாளவ** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **காந்தார** நாட்டிலுள்ளவை: இக்குதிரைகள் **சௌராஷ்டிர** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **சாலி** நாட்டிலுள்ளவை; இக்குதிரைகள் **தீவாந்தரங்களி**லுள்ளவை; இக்குதிரைகள் **குரு** நாட்டிலுள்ளவை. இவ்வாறு பல்வேறு நாடுகளிலுள்ள குதிரைகளையெல்லாம் இவ்வாதவூரர் கொடுத்த பொருளின் விருப்பத்தாலே இவர்களெல்லோரும் கொண்டுவந்தனர்" என்று ஒவ்வொன்றையும் சுட்டிக் காட்டியருளினர்.

**இறைவன் குதிரைகளின் நிறங்களை எடுத்துக்கூறல்**

அருமறைப் பரிமேலழகராய் வந்த பரமனார், மீண்டும் பாண்டியனை நோக்கி, "அரசே! இக்குதிரைகளிலே வெள்ளி, முத்து, பால், சந்திரன், சங்கு, வெண்பனி ஆகிய இவற்றில் ஒன்றைப் போன்றது **வெள்ளைக் குதிரை**யாம். மாதுள மலர், செம்பஞ்சுக் குழம்பு ஆகிய இவற்றில் ஒன்றைப்போன்றது **சிவப்புக் குதிரை**யாம். கரிய மை, குயில், கருவண்டு, கருமுகில் ஆகிய இவற்றில் ஒன்றைப் போன்றது **கருங் குதிரை**யாம். எரிகின்ற நெருப்பு, கோரோசனை ஆகிய இவற்றில் ஒன்றைப் போன்றது **பொன்மைக் குதிரை**யாம். வெண்மை, செம்மை, கருமை, பொன்மை என்ற நான்கு நிறங்களும் கலந்த குதிரை **மிச்சிரம்** எனப் பெயர் பெறும். முகம், மார்பு, உச்சி, வால்,

நான்கு கால்கள் என்னும் எட்டு உறுப்புகளிலும் வெண்மை கலந்த குதிரை '**அட்டமங்கலம்**' எனப்பெயர் பெறும். முகத்திலும் நான்கு கால்களிலும் வெள்ளை நிறமுள்ள குதிரை '**பஞ்சகல்யாணி**' எனப் பெயர் பெறும்.

**குதிரைகளின் சுழிகளையும் பயனையும் எடுத்துக் கூறல்**

குதிரையின் கழுத்தில் வலஞ்சுழி இருந்தால் அதனைத் '**தெய்வ மணி**' என்று கூறுவர். முகம், தலை, மூக்கு, மார்பு ஆகிய இந்நான்கினும் இரண்டிரண்டு சுழிகளும், நெற்றி நடுவிலும் பின்பக்கத்திலும் ஒவ்வொரு சுழியும் இருப்பது நல்லிலக்கணம் வாய்ந்த குதிரையாகும். இச்சுழிகளில்லாத குதிரை இலக்கணக் குற்றமுடையதாம். ஒன்றோடொன்று நெருங்காமல் பிரிந்து மார்பின்கண் ஐந்து சுழியுள்ள குதிரை **சிரீவற்சம்** என்ற பெயரினைப் பெறும். நெற்றியிலே இருசுழிகளேனும் முச்சுழிகளேனும் இருத்தல் நல்லது; ஒன்றோடொன்று தொடர்ந்து நான்கு சுழி வலம்புரியாக இருப்பதும் நல்லதாம்; முன்கால்களின் அடியில் இருசுழிகளிருப்பினும் நன்றாம்.

கழுத்து நடுவில் இரட்டைச் சுழியினையுடைய குதிரை தன் தலைவனுக்கு வறுமையினையும், துன்பத்தினையும், மரணத்தினையும் உண்டாக்கும். கணைக்கால்களில் இரட்டைச் சுழி இருந்தால் அச்சத்தையும், துன்பத்தையும், விலங்கு பூணுதலையும் உண்டாக்கும். மேலுதடு, முன் காலடி, கபோலம், முழந்தாள் இந்நான்கிலும் சுழிகள் இருந்தால் தலைவனைக்கொல்லும். இத்தகைய குற்றமுள்ள சுழிக்குதிரைகள் பந்தியில் (லாயத்தில்) வந்து இருக்கினும் தீங்கு விளையும்.

குதிரைகளுக்கு வயது முப்பத்திரண்டாம்; பருவம் பத்தாம்; ஒவ்வொரு பருவத்திற்கும் மூன்றாண்டும் இரண்டு மாதமும் பன்னிரண்டு நாளும் ஆகும்.

**பிற பரிநூலார் கூறும் இலக்கணம்**

எந்த நிறத்தின் வகை மிகுந்திருந்தாலும் வெள்ளை நிறம் கலந்திருந்தால் அக்குதிரை நல்லது. கரிய குதிரைக்கு வயிற்றிலேனும் மார்பிலேனும் செந்நிறமிருந்தால் அக்குதிரை

வெற்றியையுடையது. அவ்விடங்களில் வெண்மையிருந்தால் அக்கரிய குதிரை **வாருணம்** எனப் பெயர்பெறும். அதுவும் தலைவனுக்கு வெற்றியினை அளிக்கும். பிடரி வெளுப்புள்ள குதிரை மகப்பேற்றினை அளிக்கும். மார்பில் வெண்மையுள்ள குதிரை மகிழ்ச்சியைத் தரும். கழுத்தில் வெண்மையுள்ள குதிரை மிக்க செல்வத்தைக் கொடுக்கும். முகத்தில் வெண்மை நிறமுள்ள குதிரை நல்ல வெற்றியை அளிக்கும். முகத்தின் பின் பக்கம் வெண்மையமைந்த குதிரை இன்பத்தைக் கொடுக்கும். இடப் பக்கம் வெண்மையுள்ள குதிரை மகப்பேற்றை மிகுதியாகக் கொடுக்கும். வலப்பக்கம் வெண்மையுள்ள குதிரை செல்வத்தையும் பல விளைபொருள்களையும் நல்கும். முதுகு, வால், முகம் இம்மூன்றிலும் வெண்ணிறமுள்ள குதிரை வெற்றியைத்தரும். நாபியிலிருந்து முன்புறமெல்லாம் சூரியனைப்போல் செந்நிறமும் பின்புற முழுதும் சந்திரனைப்போல் வெண்ணிறமும் பெற்ற குதிரை பகற்போரிலே வெற்றியைத்தரும். முன்புறம் வெளுத்துப் பின்புறம் சிவந்த குதிரை இராப்போரிலே வெற்றியைத்தரும். இவ்விருவகைக் குதிரைகளும் இங்கு வந்துள்ளன.

**உத்தமக் குதிரையின் இலக்கணம்**

அடிவைத்தால் ஒத்த பந்துபோலவும், நின்றால் மலைபோலவும், கனைத்தால் சிங்கத்தைப்போலவும், வேகத்தால் காற்றைப் போலவும், மிதித்து நடிக்கும் கூத்தினால் கூத்தாடுவானைப்போலவும், நடையில் சிங்கத்தையும் யானையையும் போலவும், தன்மை பெற்றதும், கற்புடைப் பெண்டிர்போலக் கவிழ்ந்த முகத்தையும் கருங்குவளை மலர்போன்ற கண்களையும் கொண்டதும், கருமுகில் போன்ற நிறமும் கருநெய்தல் மலர் போன்ற மணமும் நிறைந்ததும், மலர், அகில், சந்தனம், மணிப்பூண் இவற்றால் அழகு செய்யின் மகிழ்வுடன் திகழ்வதுமாக இருப்பது **உத்தமக் குதிரை** எனப் பெரியோர் கூறுவர்.

'இவ்வுத்தமக் குதிரைக்கு உயரம் நூறுவிரலளவாம்; மத்திமக் குதிரைக்கு உயரம் எண்பத்து நான்கு விரலளவாம்; அதமக் குதிரைக்கு உயரம் அறுபத்தொன்று விரலளவாம்' என்று பெரியோர் கூறுவர். அழிவில்லாத புகழையுடைய

மன்னரே! அரசர்கள் இக்குதிரைகளைப் பூசித்து வணங்கிக் கயிறுமாறுவர்" என்று கூறியருளினர்.

**கயிறுமாறுதல்**

அதுகேட்ட பாண்டியன் அக்குதிரைகளுக்கு அழகிய கிண்கிணி மாலையும், சதங்கை மாலையும், சிலம்பையும் அணிவித்து, மலர் மாலையும் சந்தனமும் இட்டுத் தூபமும் தீபமுங் கொடுத்து வழிபட்டு வணங்கி எதிரே நிற்கக் குதிரை வீரராகிய கடவுள், திருவாலவாயில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை நோக்கிக் கைகளைச் சிரமேற் குவித்து, "மன்னன் வாழ்க" என வாழ்த்தித் தாம் ஏறிவந்த வேதமாகிய குதிரையைத் தவிர மற்றைய மாயக்குதிரைகள் எல்லாவற்றையும் கயிறுமாறி அவன் கையிற் கொடுத்தருளினர். உடனே பாண்டியன் பாகர்கள் கையிற்கொடுக்க, அவர்கள் அக்குதிரைகளைக் [1]காற்றையும் கடலையும் கொண்டுபோவதுபோலக் கொண்டுபோய் அரண்மனையிலே உள்ள பந்தியிலே சேர்த்தார்கள்.

**பாண்டியன் சன்மானத்தைக் குதிரை வீரர் ஏற்றல்**

குதிரை வணிகராகிய இறைவருக்குப் பாண்டியன் வெண்பட்டாடை ஒன்றினைப் பரிசிலாகக் கொடுத்தனன். பாணபத்திரனுக்கு அடிமை என்று கூறி அவன் பணியைச் செய்தவர் இப்பட்டாடையை வாங்குதற்கு நாணுவாரோ? சிறிதும் நாணமில்லாமல் வாதவூரரைக் காத்தற்பொருட்டுக் குதிரையினின்றும் இறங்கி அதனை ஏற்றுத் திருமுடியிலே இரண்டாவது கங்கை ஒன்றினைச் சூடியது போலச் சூடி நின்றார்.

அதுகண்ட குதிரைவீரர்களாகிய கணநாதர்கள் அனைவரும், "இந்த ஆடையை நமது இறைவர் குதிரையினின்றும் இறங்கி எளியன்போல் நின்றேற்றுத் திருமுடிமேல் அணிவதேன்? அங்ஙனம் செய்யாதொழியில் இவர் திருக்கரத்திலேந்திய ஓட்டையும், திக்காடையையும், பாம்பணிகளையும் பாண்டியன் கவர்ந்துகொள்வானோ?" என்று ஒருவரோடு ஒருவர் தம்முள் வினவி வெகுண்டு பேசினர்கள்.

---

1. இங்கே, வேகத்தால் காற்றையும், பரப்பு, தோற்றம், ஒலி முதலியவற்றால் கடலையும் உவமையாகக் கொண்டுள்ளன.

பாண்டியன் மற்றைய குதிரைவீரர்கட்கும் வெவ்வேறு நிறமுடைய பட்டாடைகளைக் கொடுத்தான். அவற்றையெல் லாம் அவர்கள் பெற்றுக்கொண்டபின்னர், அன்பிற் சிறந்து அருள்வடிவாய் வந்த சோமசுந்தரக் கடவுள் வேதமாகிய குதிரையோடு மறைந்தருளினார். நரிகளாகிய குதிரைகளில் வந்த கணநாதர்களாகிய குதிரைவீரர்களும் அவரோடு உடன் மறைந்தார்கள்.

**பாண்டியன் முதலியோர் அவரவரிடம் செல்லல்**

பாண்டியன் தனக்கு இருமைக்குத் துணையாகிய திருவாத வூரடிகளுக்கு அருமையாகிய வரிசைகளைச் செய்து அவரை அவரிடத்திற்குச்செல்ல விடையளித்து உச்சிப்பொழுதில் அங்கு நின்றும் புறப்பட்டுத் தன் அரண்மனையை அடைந்தான். மற்றைய அமைச்சர்களும், குதிரையைக்காண வந்த நகர மக்களும் தத்தம் மனை புகுந்தனர்.

குதிரைவீரராகிய [1] சோமசுந்தரக் கடவுள் திருக்கோயிலை அடைந்து தமது திருவிளையாடல் அனைத்தையும் மீனாட்சி யம்மையாருக்குக் கூறி வீற்றிருந்தருளினார்.

செய்யுள்—127

ஆகச் செய்யுள்—2925

---

1. சோமசுந்தரக் கடவுள் குதிரை வீரராக எழுந்தருளிய இடம் 'பரிவீரமங்கலம்' என்பர். இது ஆளுடையார் கோயிலுக்குத் தெற்கே சுமார் ஐந்து மைலில் உள்ளது. இப் பரிவீரமங்கலத்திற்கு அருகே உள்ள "எழுநூற்றுமங்கலம்" என்னும் ஊரில்தான் எழுநூறு நரிகளைக் குதிரை களாகச் செய்த இடம் என்பர்.

## 60. பரி நரியாக்கி வையை யழைத்த படலம்[1]

### வாதவூரர் தம்மை அடைந்தார்க்கு முகமன்கூறி விடுத்தல்

பல மங்கல இயங்களின் பேரொலியும் சேனைகளின் ஆரவாரமும் ஓங்க, மகளிர் எதிர்கொண்டு அட்டமங்கலப் பொருளை ஏந்தப் பாண்டியன் நல்கிய வரிசையுடன் திருவாதவூரர் தம் திருமாளிகையிற் புகுந்தார். அப்போது சுற்றத்தாரும் அவையினரும் நண்பரும் வந்து உரிமையாலே வினவியதற்கெல்லாம் வாதவூரடிகள் அவரவர்க்கு இசைய இன்சொற்களால் முகமனையும் மகிழ்வையும் அளித்து அவரவர் இருக்கைக்குச் செல்ல விடுத்தார்.

### வாதவூரடிகளின் மன விருப்பம்

பிறகு வாதவூரடிகள் ஒரு தனியிடத்திலே அமர்ந்து, "திருவாலவாயில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள் நாம் அன்று குறையிரந்து வேண்டிக்கொண்டவாறே குதிரை வாங்கும்படி நாம் கொண்டுசென்ற பொருளையெல்லாம் தம்முடைய அடியார்களும் தாமுங் கைக்கொண்டு எம்மையும் பணிகொண்டு பிறவித் துன்பத்தைப் போக்கியருளினர்; அன்றியும் பாண்டியனுடைய மனத்திற்கு இசைய நல்ல குதிரைகளைச் செலுத்தி, நமக்கு இனிக் கவலை இல்லையாம்படி செய்தருளினர்; இனி உலகினை வெல்லும் வண்ணம் தம்முடைய சிவானந்த அனுபவத்தில் இடைவிடாதிருக்கும்படி நம்மைத் தவநெறியிற் செலுத்துதல் வேண்டும்" என்ற பெருவிருப்பம் தலைக்கொள்ள, இம்மை மறுமை இன்பங்களில் ஆசை சிறிதும் இன்றிச் சோமசுந்தரக் கடவுளின் திருவடியைத் தமது மனத்திலே கொண்டிருந்தார்.

### சூரியன் மறைவும் சந்திரன் தோற்றமும்

அப்போது, "நாளைக்கு ஆலவாய் அண்ணல் வாதவூரடிகளை ஆண்டருளும்பொருட்டு மண்சுமந்தருளுவதைக் காண வேண்டும்" என்ற ஆவலுடன் நரிகளாகிய குதிரைகளால் மேலெழுந்த புழுதியால் போர்க்கப்பட்ட உடலைக் கழுவிக்

1. பா-ம்: பரி நரியாக்கிய படலம்.

கொண்டு திரும்பி வருதற்கு எண்ணியவனைப்போலச் சூரியன் மேலைக் கடலில் மூழ்கினான்.

இறைவன் திருவிளையாடலால் போந்த குதிரைக் கூட்டத்தினால் எழுந்த செம்புழுதிகளாலே மாசுபடிந்த அண்டத்தினைத் தனது வெள்ளிய நிலவாகிய ஆடையினால் முற்றும் துடைக்கத் தோன்றியவனைப்போலச் **சந்திரன்** வந்து தோன்றினான். மேலும் விண்மீன்களையே எழுத்தாக எழுதிய வானமாகிய ஏட்டினை இருளாகிய மையினைத் தடவித் தூய வெள்ளிய நிலவாகிய வெள்ளாடையினால் துடைப்பதற்குச் சந்திரன் வந்து தோன்றியதுபோலவும் இருந்தது.

**குதிரைகள் நரிகளாக மாறுதல்**

பாண்டியன் அரண்மனையின்கண் புகுந்த குதிரைகள் அன்று நடு இரவு வந்ததும் சிவபெருமான் திருவிளையாடலினால் தமது உண்மை வடிவத்தை - நரி வடிவத்தை எடுத்துக் கொண்டன.

**நரிகள் ஒன்றோடொன்று பேசிக்கொள்ளல்**

அப்போது நரிகள் ஒன்றோடொன்று நோக்கி, "சங்கொலியையும், பிணப்பறையொலியையும், மகளிர் அழுகுரல் ஒலியையும், அவர்கள் மார்பில் கையினால் அடித்துக்கொள்ளும் ஒலியையும் இனிய அமுதினைப் பருகுவதுபோல நாம் எவ்விடத்தும் செவிகள் குளிரப் பருகுவோம்! நாம் இன்று பகல் முழுதும் குதிரைகளாய், மக்களைச் சுமந்து கயிற்றாலும் சங்கிலியாலும் கட்டுப்பட்டுக் குதிரைச் சவுக்கடியும் பட்டு வருந்தினோம்! இப்பொழுது நம்முடைய நல்வினையின் வலிமையாலே நமது பழைய வடிவினைப் பெற்றுக்கொண்டோம்! நாம் காட்டின்கண் சஞ்சரிக்கத் தொடங்கிய நாள்முதல் நேற்று வரையும் இந்தக் கடுந் துன்பத்தை ஒருகாலத்தும் அறிந்திலோம்! கட்டிய சங்கிலித் தழும்பும் சவுக்கடித்தழும்பும் நம் உடலைவிட்டு இன்னும் நீங்கவில்லை! இன்றிரவு விடியுமுன் நாம் இவ்விடத்தினின்றும் ஓடிவிடுவதே செய்யத்தக்க காரியம்! வயிறு நிறைய நாம் தின்பதற்கு நத்தை சங்கு நண்டு முதலிய ஊன்கள் இங்கில்லை. இனிப் புதிதாகக் கடலை, கொள்ளு, பயறு,

புல்லு முதலிய உணவு தின்னுதல் நமக்கு அடாது! அரசன் காவலாளரும் நகரிலுள்ளவர்களும் நம்மைக் காணின் அடித்துக் கொல்லுவர்! ஆதலால், இன்றிரவு விடியுமுன் சங்கிலிக் கட்டினை அறுத்துக்கொண்டு ஓடிப்போவதே தக்க உபாயம்'' என்று ஒருசேரப் பேசி முடிவு செய்துகொண்டன.

**நரிகள் படுத்திய பாடு**

நரிக்கூட்டங்கள், கொள்ளையும், கடலையையும் வெறுத்து நத்தை நண்டு முதலிய கொழுவிய ஊன்களை விரும்பிச் சங்கிலித் தொடக்கை முறித்துக் காலிற் கட்டிய கயிற்றுடன் முளையையும் பிடுங்கி ஊளையிட்டுக்கொண்டு தப்பியோடும் வழியைப் பார்த்தன! சில, தாம் நின்ற குதிரைப்பந்தியிலே தம்முடன் பிணிக்கப்பட்டிருந்த குதிரைக் கூட்டங்களைத் தம் பற்களாலே தாவிக் கடித்து மென்று குருதியைக் குடித்தன! சில, கட்டிய முளையோடு பிடுங்கிக்கொண்டு ஓடுதலால் அவற்றின் அண்டங்களில் முளைகள் பட்டு ஊறுசெய்தன!

குதிரைப்பந்தி காக்கும் வீரர்கள் நரிகளின் ஊளையொலியைக் கேட்டு உறக்கம் நீங்கி விரைந்து எழுந்து, நேற்றுச் சிங்கம்போல் வந்த குதிரைகளெல்லாம் நரிகளாகி ஏனைய குதிரைக்கூட்டங்களின் குடர்களைப்பறித்து உண்ணுதலைக் கண்டனர். அங்ஙனம் கண்டவளவிலே சில வலியுள்ள நரிகள், கூரிய இருப்பு முட்களைத் தலையிற் கொண்ட மதில்களைத் தாண்டியோடின! சில நரிகள், சாளரவழியே பாய்ந்தோடின! சில நரிகள், நுழைவாயில் வழியாகக் கூடியோடின! சில நரிகள், கரந்துறை வழியால் புகுந்தோடின! முடமான நரிகளும் கிழ நரிகளும், குருட்டு நரிகளும், நோயுற்ற நரிகளும் ஓடும் வழிகளைக் காணுமையால் பந்தியிலேயே மனம் ஏங்கிக் கிடந்தன. வேறு சில நரிகள், தங்களை நெருங்கிவந்து வெருட்டுவோரைக் கீழே விழும்படி கடித்துவிட்டு அவர் கையில் அகப்படாமல் ஓடின! மற்றும் சில நரிகள், எதிரே வந்து தடுப்பவரின் கால்களின் கீழே நுழைந்தோடின! சில நரிகள், செயலின்றிக் கிடந்து ஊளையிட்டுக்கொண்டு வருந்தும் தங்கள் குட்டிகளை அணைத்தவாறு மதிலைத் தாவிக் குதித்தோடின!

இவ்வாறு பாண்டியனது மாளிகையைக் கடந்து வெளியேறிய நரிகளெல்லாம் பொய்கைகள், பூந்தோட்டங்கள், அறச்சாலைகள், வீதிகள், திருக்கோயில்கள், சந்தி வகைகள் முதலான பல இடங்களிலும் சென்றனவாய் நகரெங்கும் நிறைந்தன; மன்றங்கள், ஓவியக் கூடங்கள், செய்குன்றுகள், அம்பலங்கள், முன்றில்கள், சோலைகள் முதலிய இடங்களிலும் பரவி ஊளையிட்டுத் திரிந்தன.

யானைகளின் பிளிறொலியும், பல்வகை வாத்தியங்களின் ஒலியும், குதிரைகளின் கனைப்பொலியும், இனிய தமிழொலியும், பாணர்களின் இசைப் பாட்டொலியும் நிறைந்த அழகிய மதுரை மாநகர் முழுதும் நரிகளின் ஊளையொலி மிகுந்தெழுந்ததாலே நகரிலுள்ளோர் அனைவரும் விழித்துக்கொண்டனர், நாய்கள் விழித்தன; மயில்கள் விழித்தன; கோழிகள் விழித்தன; வண்டுகள் விழித்தன; அன்னப் பறவைகள் விழித்தன; நாரைக்கூட்டங்கள் விழித்தன; யானைகள் விழித்தன; காக்கைகள் விழித்தன. இவ்வாறு இருதிணை உயிர்களும் விழித்துக்கொண்டு நடுங்கிக் கிடந்தன!

சில நரிகள், பசிமிகுதியால் சமையல் அறையிற் புகுந்து அடுக்கிய மட்கலங்களை உருட்டிப் பலவகை உணவுகளையும் சோற்றையும் தின்று குட்டிகளுக்கும் கொடுத்து ஊளையிட்டன. சில நரிகள், புறு, நாகணவாய்ப் பறவை, கிளி, சேவல் முதலியவற்றைக் கவர்ந்து தின்றன. சில நரிகள், வீட்டில் தூங்கிய பிள்ளைகளைக் கொண்டுபோய் குமுதவாயில் புன்னகை தோன்ற நக்கி உறவுபோற் கருதி விளையாடின. ஆனால் ஊறு ஒன்றும் செய்யவில்லை. சிற்சில நரிகள், முன்றிலில் படர்ந்த பசுங்கொடிகளை வேரோடு பிடுங்கின; பலவகை இளங்காய்களைக் கடித்தன; கரும்புகளை முறித்து வாயிற்போட்டுக் குதட்டி ஊளையிட்டுக்கொண்டு விளையாடித் திரிந்தன; ஆயிரக்கணக்கான ஆட்டுக்கிடாய்களையும், பன்றிகளையும், கோழிகளையும் கோழிக்குஞ்சுகளையும் கொன்று திரிந்தன; நாய்கள் பின் தொடர்ந்து துரத்திக் குரைத்தால் அவற்றைச் திரும்பிச் சென்று துரத்திக் கடித்துக் கொன்றன; பெருந்தோள் வீரர்கள் சென்று

துன்புறுத்தினுல் பொறுக்காது சினந்து மேல் வீழ்ந்து இரத்தம் வடிய அவர்களைக் கடிப்பன.

பன்றிகள் வாய்விட்டுக் கதறும் ஒலியும், சேவல்கள் கூவும் ஒலியும், ஆடுகளின் ஒலியும், நாய்களின் குரைப்பொலியும், வீரர்களின் ஆரவார வொலியும் ஒன்றுபட்டு நரிகளின் ஊளை யொலிபோற் கேட்டன.

இரவின் எல்லையைக் காணுதற்கு நகரம் கண் விழித்தாற் போல, முகில் தவழும் பெரிய வாயில்கள் திறந்த வளவில் எங்கும் போக இடமின்றி அடைப்பட்ட நரிகள் அனைத்தும் விரைந்து, மிகக் கரிய இருளின் துண்டங்கள் காட்டின்கண் ஓடினுற்போலக் காட்டிற்குள் ஓடி மறைந்தன[1].

**சூரியன் தோற்றம்**

கேட்டல், சிந்தித்தல், நிட்டைகூடல் முதலியவற்ருல் மெய் யுணர்வு பெருதவ ரிடத்துச் சிவ பரஞ் சோதியாகிய சூரியன் தோன்றி அருட்கிரணத்தை வீசியபோது அங்குத் தோன்றிய சிறுதெய்வங்கள் வலியிழந்து ஒளிமழுங்குதல் போலச்[2] சூரியனின் செவ்விய கிரணங்கள் பரந்து ஒளிவீச விண்மீன்களின் கூட்டமெல்லாம் வலி குன்றி ஒளி மங்கின.

ஈறி லாச்சிவ பரஞ்சுடர் இரவிவந்(து) எறிப்பத்
தேறு வாரிடைத் தோன்றிய சிறுதெய்வம் போல
மாறில் ஆதபன் செங்கதிர் மலர்ந்துவாள் எறிப்ப
வீறு போயொளி மழுங்கின மீன்கண மெல்லாம்.

தேவர்கட்கு அரியவராகிய இறைவர், தம்மை நோக்கி வருந்தும் உண்மைத் தொண்டராகிய வாதவூரடிகளுக்கு எளி

1. குதிரை வடிவம் நீங்கிய நரிகள் நகரை விட்டு வெளியேறித் தத்திச் சென்ற இடம் 'தத்தனேரி' என்னும் ஊராம். தத்து நரி என்பது தத்தனேரி ஆயிற்று என்பர். இது செல்லூருக்கு மேற்கே உள்ளது. நரிகள் தொடர்ந்து சென்ற இடம் 'தொடர் நரி' என்பதாம். இவ்வூர் தத்தனேரிக்கு மேற்கே உள்ளது. நரிகள் சென்று அடைந்த இடம் 'செல்லூர்' என்பதாம். இது மதிச்சயம் என்னும் ஊருக்கு மேற்கும் மதுரைக்கு வடக்கும் உள்ளது.

2. இங்கே, "சென்று நாம் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோம் சிவபெருமான் திருவடியே சேரப்பெற்ருேம்" எனவரும் திருநாவுக்கரசர் மறுமாற்றத் திருத்தாண்டக அடி சிந்திக்கற்பாலது.

தாகி மண் சுமந்தருளும் வருத்தத்தை நோக்கித் திருவரு ளாகிய திருவடிகளை வருடும் பொருட்டு ஆயிரங்கரங்களையுங் கொண்டு சூரியதேவன் கீழைக்கடலிலே வந்து தோன்றினன். அப்போது குதிரைகளைப் பாண்டியனுக்குச் செலுத்தியதாலே கவலை தீர்ந்தது அகத்தின்கண் மெய்யுணர்ச்சியால் சிவத்தை உணர்ந்த மாணிக்கவாசகனர் இருதயம்போலச் செந்தாமரை கள் மலர்ந்தன. ஒப்பற்ற பரம்பொருளை உணர்ந்து, சொல் லிறந்து இருந்த அம் மாணிக்கவாசகரின் மௌனம் பொருந்திய வாய்போல் இரவில் மலர்ந்திருந்த குமுத மலர்கள் கூம்பின.

**பாண்டியனின் மனக் கொதிப்பு**

விடியற்காலத்திலே, குதிரைப்பந்திக் காவலாளர்கள், "இதனை என்னவென்று நம் அரசனுக்குக் கூறுவேம்" என்று அச்சங்கொண்டு விரைந்து எழுந்துபோய்ப் பாண்டியன் அரசியல் மண்டபத்தை அடைந்து, அரசனை வணங்கி, உடல் நடுங்க ஒதுங்கிநின்று, "அரசே! காற்றினும் விரைந்துசெல்லும் வேகமும் கண்களுக்கு இனிய அழகுமுடையனவாய் நேற்று வந்த குதிரைகளெல்லாம் பந்தியில் நின்ற பழைய குதிரை களுக்கு கூற்றுவன் என்று சொல்லுமாறு நரிகளாகி, நகர முழுதும் நிறைந்து பல துன்பங்கள் செய்துவிட்டுக் காட்டின் கண்ணே ஓடிப்போயின" என்ருர்கள். நினைத்தற்கும் எட்டாத இச்சொல்லாகிய கொடிய காற்று, செவியாகிய துருத்தி வழியே சென்று, சினமாகிய கொடிய நெருப்பினை மூட்டி எரித்த தீப்பொறி சிதறிட அரசன் கண்கள் சிவந்து, சீறிக் கோபித்ததைக் கண்டு அமைச்சர்களும் பயந்து ஒதுங்கினர்.

முதனட் குதிரைகளைக் கண்டு பெருமகிழ்வடைந்த அரி மருத்தன பாண்டியன், அக்குதிரைகளே மீள நரிகளாய் ஓடிப் போயின என்பதைக்கேட்டு, அமுதுண்டவன் மீள நஞ்சுண் டாற்போலத் துயர்க்கடலுள் அழுந்தித் தன்னருகிலிருக்கும் பழைய மந்திரிமார்களை நோக்கி, "மதிநூல் வல்லீர்காள்! வாதவூரன் என்னும் கரிய இருட்டுள்ளம் படைத்த கள்வன் நம்முடைய பொருள்முழுதும் கவர்ந்து கொண்டு, இடுகாட் டிலே இரத்தமும் குடரும் நிணமும் தின்று திரிகின்ற நரிகளை

யெல்லாம் குதிரைகளாக்கி நமக்கு வரவிடுத்தான்; இவன் செய்த மாயத்தைக் கண்டீர்களா! இம் மாயஞ் செய்த வாத வூரனை நாம் என் செய்வது?'' என்று வினவினன். அதற்கு அவர்கள், ''இவ் வுலகத்திலே நம்போன்றவர்க்கெல்லாம் கொடிய பழி பாவம் உண்டாகக் குற்றஞ் செய்து, செய்ந்நன்றி மறந்த தீயோனாகிய வாதவூரன் பொருட்டு இனி யாம் ஏது சொல்லக்கடவேம்'' என்று தலை கவிழ்ந்து பதில் ஒன்றும் சொல்லாமல் சும்மா இருந்தார்கள்.

**வாதவூரடிகளும் பாண்டியனும்**

அப்பொழுது ஞானமயமாகிய பேரின்பக்கடலுள் மூழ்கிய வாதவூரடிகள், ''அரசனுக்கு அவன் மனத்திற்கு இனிய குதிரைகளைக் கொடுத்து அவன்கருமத்தை நன்றாக முடித்து மனக்கவலையை விடுத்தேம்'' என்று கருதி மனக்களிப்பு மிக அங்கு நிகழ்ந்த செயல் ஒன்றையும் அறியாமல் அரச னிடத்தே வந்தார். அரசன், வந்த வாதவூரடிகளை வெகுண்டு நோக்கி, ''அளவிறந்த பொருளைக் கொண்டு போய் நல்ல குதிரைகளைக் கொண்டு வந்து அழகாகக் கொடுத் தாயல்லவா? அதனால் அரசகருமம் முடித்துப் புகழை நிலை நிறுத்தவல்ல தக்கோர் உன்னைப்போல் எவ்வுலகத்தில் உள்ளா ரோ?'' என்றான். அதனைக்கேட்ட மாணிக்கவாசகர் திடுக்கிட்டு, ''அக்குதிரைகளுக்கு என்ன குற்றம்'' என்று வினவினர். பாண்டி யன், ''குற்றமொன்றுமில்லை; நள்ளிருளிலே நரிகளாய்ப் பக்கத்தில் நின்ற குதிரைகளையெல்லாம் கொன்று இரத்த மொழுக ஊன் சிதற அவற்றின் குடர்களைப் பிடுங்கித்தின்று விட்டு எதிரில் வந்த மக்களுக்கும் இடர்விளைத்து நகரைக் கலக்கிக் காட்டுக்கோடின! இவ்வளவு காலமும் நீ எனக்குக் கண்ணும் கவசமும்போல ஒழுகியது சமயம்பார்த்து நம் முடைய பொருளைக் கவருதற்கோ! உனது அமைச்சியல் நன்று நன்று! புண்ணிய மறையோர் மரபில் தோன்றினே மென்று ஒரு பெருமை கொண்டனையே! நீ செய்த காரியங் களைப் பிறர் செய்வராயின் உடனே தண்டிக்கப்படுவர்'' என்று கூறித் தண்டற்காரர்களை நோக்கி, ''தண்டலாளர்களே! இவனைக்கொண்டுபோய் எங்குஞ் செல்லவொட்டாமல் தடுத்

தும், இழுத்தும் நமது பொருள் முழுதையும் வாங்குமின்! உங்கள் ஆணையைக் கடந்தால் வலிசெய்தும் வாங்குமின்!'' என்று சினந்து சொல்லியனுப்பினன்.

**தண்டலாளர்கள் வாதவூரரை வருத்துதல்**

உடனே காலனையும் எதிர்க்கும் மிக்க வலிமையுடைய தண்டலாளர்கள், சூரியனை இருள் நெருங்கிப் பிடித்துக் கொண்டு வந்தாற்போல அறவடிவாகிய வாதவூரடிகளைப் பற்றிக் கொண்டு வெளியே வந்தனர்; கடிய உச்சிப்பொழுதிலே சூரியனைப் பார்க்கும்படி அசையாமல் நிற்கச் செய்து இரண்டு கைகளிலும் நெற்றியிலும் கல்லேற்றித் துன்புறுத்தினர்.

**வாதவூரடிகள் இறைவனை நினைந்து அழுதல்**

அப்போது வாதவூரர் அதனைப் பொறுக்கலாற்றாது கீழே வீழ்ந்து சூரியன் சந்திரன் அக்கினி என்னும் முச்சுடராகிய கண்களையுடைய சோமசுந்தரக் கடவுளை அழைத்து அழுது துதிப்பாராயினர் :

நாதவோ! நாத முடி(வு) இறந்த நாடகஞ்செய்
பாதவோ! பாதகனு மென்னைப் பணிகொண்ட
வேதவோ! வேத முடிவின் விளைந்ததனிப்
போதவோ! போத நெறிகடந்த பூரணவோ!

ஐயவோ! என்னுடைய அன்பவோ! அன்பர்க்கு
மெய்யவோ! மெய்யில் வினையேன் தலைவைத்த
கையவோ! செய்யகழற் காலவோ! காலனைக்காய்
செய்யவோ! வேதப் பரியேறுஞ் சேவகவோ!

அத்தவோ! கல்லாக் கடையேனை ஆட்கொண்ட
பித்தவோ! பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ! சித்தந் தெளிவித்(து) எனைத்தந்த
முத்தவோ! மோன மயமான மூர்த்தியவோ!

என்று முறையிடுந்துதி சோமசுந்தரக் கடவுளின் திருச்செவியிலே சென்று புகுந்தது. உடனே விடையேறும் வித்தகராகிய கடம்பவன சுந்தரர், வாதவூரடிகளின் செய்கைகளை

யெல்லாம் அரிமருத்தன பாண்டியன் தெளியவும், தமது திரு முடியிலே வையையாற்றின் மண் ஏறவும், வந்தி என்கிற முதியாள் தான் ஏறிய விமானத்துடன் சிவபுரத்தை அடையவும் திருவுளங் கொண்டருளினர்.

**வையையாற்றின் பெருக்கு**

பின்பு பேரருள் குன்றாத சிவபெருமான், வையை நதியினை நோக்கி, "நீ ஊழிக்காலத்தில் பெருகா நின்ற கடல்போல, இவ்வுலக மக்கள் அனைவரும் வியப்பினை அடையுமாறு பெருகி வரக் கடவாய்" என்று அருளிச் செய்தார். இறைவனின் திருவாய்மொழியினைக் கேட்டவுடனே வையைநதி முன்னாளிலே காஞ்சியில் காமாட்சியம்மையாரின் தவத்தைக் குலைக்கும்பொருட்டு வந்த பெரிய கம்பை நதிபோலக் கடும் பெருக்கெடுத்து விரைவுடன் வாரா நின்றது.

அப்போது வையைநதி, வரிசை வரிசையாகக் குளிர்ந்த பாக்கு மரத்தின் பழக்குலைகள் விழக் கரைகளை உடைத்துக் குத்திக்கொண்டு ஓடிப் பழங்கள் சிதறுமாறு மரக்கிளைகளைக் கீழே வீழ்த்திக் கரும்புகளையும், வாழைமரங்களையும், விளைந்த நெற்கதிர்களையும் அரித்துத் தாண்டிக்கொண்டு பல மரங்களை வேருடன் பெயர்த்து விரைந்து சென்றது.

வையை நதி, பல்லாயிரக் கணக்கான செந்தாமரை மலர்களைப் பரப்பிக்கொண்டு வருதலால், ஆயிரங் கண்களையுடைய **இந்திரனை** ஒத்தது; தாமரை மலரையும் குவளை மலரையும் முல்லை மலரையும் கரும்பினையும் கொண்டு வருதலால், அளவிறந்த விற்களைக்கொண்டு போர்புரியும் வீரனாகிய **மன்மதனைப்** போன்றது; மற்றும் மணிகளின் வரிசை (மாலை) யையும் மலர்களின் வரிசை (மாலை) யையும் உடைந்த கரையிலே (ஒடியும் இடையிலே) சிதறிக் காஞ்சி மரங்களையும் (காஞ்சி என்னும் அணியையும்) சங்குகளையும் (வளையல்களையும்) ஒலிக்கும்படி பக்கங்களில் வீசி, அளவிடமுடியாத அழகைத் தன்னிடத்தே கொண்ட முகமாகிய தாமரை மலர்களைக் கள்ளாகிய நீருடன் (கண்ணீருடன்) கவிழ்த்து வருதலினால் ஆறாத சினத்துடன் **ஊடிவரும் மகளிரை** ஒத்தது.

மணிமாலையும் மலர்மாலையும் சிதருஇறு மருங்கே
அணிகாஞ்சியும் ஒளிர்சங்கமும் அலறப்புடை எறியாக்
கணியாவெழில் முகதாமரை கண்ணீரொடுங் கவிழாத்
தணியாமுனி வுடன்**ஊடிய தடங்கண்ணியர்** போலும்.

குறிஞ்சி நிலத்திலுள்ள தேனையும், முல்லை நிலத்திலுள்ள நெய் பால் தயிர்களையும், மருத நிலத்திலுள்ள கருப்பஞ் சாற்றையும், (நெய்தனிலத்து) உவர் நீரையும் கொண்டு பேரொலி செய்து கொண்டு வரும் தூய நீரினையுடைய **வையை நதி**, சோமசுந்தரக் கடவுளால் அழைக்கப்பட்டு இந்த நல்ல நகரில் உள்ள எழு கடல்களும் தத்தமக்கு உரிய இடங் களுக்கு எழுந்து செல்வதை ஒத்தது.

கல்லென்று ஒலிக்கும் ஒலியுடன் வரும் வையை நதியின் வெள்ளம், மதுராபுரியின் பெரிய மதிற்புறத்தே சென்று பல வீடுகளையும், சிறுகுடில்களையும் கீழ்மேலாகத் தள்ளி அவற்றைக் கடலின்கண் ஓடும் மரக்கலங்களையும், படகுகளையும் போலச் சுமந்து சென்று மதிலையும் தள்ளி உள்ளே புகுந்து, கடைவீதி களையும், பிற தெருக்களையும், மன்றுகளையும், யானைக் கூட் டங்கள் இருக்கும் தெருக்களையும் சூழ்ந்துகொண்டது.

**நகர மக்களின் கலக்கமும் பல பேச்சும்**

அதனைக் கண்ட நகரமக்கள் அனைவரும் நடுநடுங்கினர்; சிலர் குழந்தைகளை எடுத்தனர்; சிலர், குழந்தைகளைக் காணு மல் அலமந்து அழுதனர்; சிலர், தம் மனைக்கிழத்தியரைக் கைப் பற்றிக் கொண்டு உயிர் தப்பிச் சென்றனர்; சிலர், "எங்கே போவோம்" என்று கருதித் திகைத்தனர்; சிலர், ஒன்றும் தோன்றுமல் தடுமாறினர்; சிலர், தமக்குரிய பொன்னையும், பொருளையும், அணிகளையும் எடுத்துக்காப்பாற்றினர்; சிலர், பொருள்களைக் கைப்பற்றுதற்கு மறந்தனர்; சிலர், உயர்ந்த மாளிகைகளில் ஏறினர்; சிலர், "இந்நகர் துன்பக்கடலுள் மூழ்குதற்குக் காரணம் என்ன" என்று வினவினர்; சிலர், நேற் றுக் குதிரைகளெல்லாம் நரிகளாகி நகரமெங்கும் ஊறு செய் தன" என்றனர்; சிலர், ஒரு காலத்திலும் இந்த ஆறு இவ்வாறு பெருகியதில்லை" என்றனர்; சிலர், "கடலரசன் முன்போலச்

சீறி வரும் செயலோ'' என்று ஐயுற்றனர்; சிலர், நம் மன்னன் நீதி முறை தவறினனோ'' என்று கூறினர்; சிலர், ''இது சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலோ'' என்றனர்; சிலர், ''இவ் வெள்ளத்தை வற்றச் செய்பவர் இவ்வுலகத்தில் யாவருளர்'' என்றனர்; அது கேட்ட சிலர், ''ஆலமுண் டருளிய சோமசுந்தரக் கடவுள் அல்லாது வேறியாவர் இதனை வற்றச் செய்ய வல்லவர்'' என்று பதிலளித்தனர்; சிலர், ''ஆயிரங்குண்டோதரர்வந்து இந்நீரை வாய்மடுத்தாலும் இஃது அடங்காது'' என்று கருதினர்; சிலர், ''சிவபெருமான் கங்கையை எடுத்துத் தமது சடையில் வைத்ததுபோல இதனையும் சடையில் வைத்தால் அல்லாமல் இவ்வெள்ளம் அடங்காது'' என்று கூறினர்.

**வாதவூரர் திருக்கோயிலை அடைந்து இறைவனைத் தரிசித்தல்**

இவ்வாறு நகர மக்களெல்லாரும் வருந்தும்போது, ஆகாய கங்கை ஆயிரமுகத்தால் வருவதுபோல இடையறாது பெருகும் வெள்ளம் குறையாத தன்மையை, அன்பே தானாகிநின்ற வாத ஊரடிகளைத் துன்புறுத்தும் தண்டலாளர்களும் கண்டு தம் வீட்டின்கண் உள்ள பொருளை வெள்ளத்தினின்றும் பாது காக்கக் கருதிச் சென்றனர். தண்டலாளர்கள் விட்டுச் சென்ற வுடன் வாதவூரடிகள் ஆலயத்துட் சென்று மதுரை நாயக நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்து அன்பால் அழுது இசைத்தமிழால் திருவடியைத் துதித்து வணங்கிக் கொண்டு ஐம்புல வுணர்ச்சியில் ஊற்றெடுக்கும் இன்பக் கடலுள் மூழ்கிச் சித்திரம்போல அசைவற்று இருந்தார்.

செய்யுள்—66

ஆகச் செய்யுள்—2991

---

# 61. மண் சுமந்த படலம்

**குடிகளுக்கு வையைக் கரையினை அடைக்கப் பறைஅறைதல்**

கரிய கடலின் அலைகளிடையே கிடந்து சுழலும் மரக்கலம் போல வையை நதியின் பெருவெள்ளப் பரப்பினுள் மதுரை மாநகரம் அகப்பட்டு வருந்துதலை அரிமருத்தன பாண்டியன் அறிந்து, தன் அமைச்சர்களை அழைத்து, "நீங்கள் வையை நதிக்கரையினைக் கட்டிப் பெருகிவரும் வெள்ளத்தின் வேகத்தைத் தணித்து வாருங்கள்" என்று பணித்தான். உடனே மந்திரிமார்கள், 'நன்று' எனத் தொழுது சென்று, வெவ்வேறு வகைப்பட்ட பல குடிகளையும் குறிப்பிட்டுப் பெயர்களை எழுதி எல்லையிட்டு அளந்து கோடுகிழித்துவிட்டு நகர் முழுதும், "அவரவர் பங்கை அடைமின்" என்று பறையறைவித்து அழைத்தனர்; அப்போது அவ்வக் குடிகள் விட்ட கூலியாட்களையெல்லாம் ஓரிடத்தில் கூடும்படி செய்து, "அவரவர்க்கு அளந்து எல்லை குறிப்பிட்டபடி கரை அடைக்கும் வேலையைச் செய்யுங்கள்" என்று கூறி, அவ்வவ்விடத்திற்கு அவரவரைச் செல்ல விடுத்தனர்.

அப்பொழுது மண் வெட்டுங் கருவியாளர்களும், கூடைக்காரர்களும், மரங்களைச் சுமந்து வருகின்றவர்களும், பசுந் தழைகளையும் வைக்கோல்களையும் எடுத்து வருகின்றவர்களும், நீரினை மொண்டு பருகுதற்கு வரும் மேகக் கூட்டம்போல வையையாற்றின் கரையிலே வந்து மொய்த்தார்கள்.

**கூலியாட்கள் வையைக் கரையினை அடைத்தல்**

சிலர், கரை உடைந்த இடங்களில் சென்று குதிரைப் பாய்ச்சலாக மரங்களை நிறுத்துவார்கள்; சிலர், வைக்கோல் முதலியவற்றைப் பாம்புபோல உருட்டி அக் குதிரை மரத்தின் அடியிற் கிடத்துவார்கள்; சிலர், அங்குத் தழைகளையிட்டு நிரப்புவார்கள்; சிலர், மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரஞ் செய்து பறையடிப்பார்கள்; சிலர், மண்ணை வெட்டியெடுத்துச் செல்பவரை விரைந்து செல்ல அதட்டுவார்கள்; சிலர், விரைந்து துடுமென்றுமண்ணைக் கொட்டிக் கரையின்கண்

பரப்புவார்கள்; சிலர், மகிழ்ச்சி மிக்குக் குரவைப் பாடலைப் பாடுவார்கள்; சிலர், தாம் கட்டிய அணையை உடைப்பதற்கு நீர் வருதலைக் கண்டு மனங்கலங்கி, வையை நதியை நோக்கி, "அன்னையே! எங்கள்மேல் அளவற்ற சீற்றம் ஏன்? இனி, ஆறக்கடவை" என்று வேண்டி எதிர்வணங்கி மண்ணைக் கொட்டுவார்கள்; பிறகு உடைப்பு அடங்க அதனைக் கண்டு மகிழ்ந்து குரவைக் கூத்து ஆடுவார்கள்; எட்டுத் திக்கு களுக்கும் எட்டுமாறு வாயினால் ஒலிசெய்து பறையடிப்பார்கள். இவ்வாறு நகரிலுள்ள அனைவருக்கும் கூலியாட்கள் வந்து சேர்ந்து அவரவர்க்கு அளந்துவிட்ட முறைப்படி தொழிலை மேற்கொண்டு செய்வாராயினர்.

**வந்தி என்பவளின் தன்மை**

அப்போது இம்மதுரை மாநகரின் தென்கீழ்த் திசையில் [1] ஆயிரம் பிறை கண்டு தொழுதவளும், கூனிய உடலையுடைய வளும், வயதுசென்ற நரை மூதாட்டியுமாகிய [2] **வந்தி** என்னும் பெயருடைய ஒருத்தி இருந்தாள். அவள், செவியுணவாகிய மறைப்பொருளினை உணர்ந்து செந்தீயிலே அவியுணவையூட்டும் சிவனடியார்களினும் தவத்தால் நிறைந்த பயனை நுகருபவள்; தாயிலார்க்கு அன்னைபோன்றவள்; சுவைதரும் பிட்டு விற்று உண்ணும் தொழிலினள்: யாருமற்ற தனியள்; நாடோறும் தான் அவித்த பிட்டினைத் திருவாலவாயில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை அகத்தால் நோக்கி அன்பினால் முதலில் ஊட்டிப் பின்பு விற்பவள்.

**வந்தி தன் கரை அடைக்கும் ஆள் இன்றி வருந்தல்**

இத்தகைய வந்தி என்பவள் தனக்கு அளந்துவிடப்பட்ட பங்கினை அடைப்பதற்குக் கூலியாள் கிடைக்காமல் மிகவும் வருந்தி, "இனி என்னே! அரசன் தண்டித்தானாயின் யான் யாது செய்வேன்?" என்று மனந்தடுமாறி மதுரை நாயகனை

1. ஆயிரம் பிறை கண்டு தொழுதவள் என்பது வந்தியின் வயதான நிலையைக் குறிப்பது; இவள் நூறு வயது உடையவள் என்பர். பத்து மாதம் ஓராயுளாகக் கொள்ளுதலும் உண்டு என்பர்.

2. இந்த வந்தி என்னும் மூதாட்டியார் 'பிட்டு வாணிச்சி' எனவும் பெயர் பெறுவர்.

நினைந்து, "ஐயனே! பிட்டு விற்றுண்டு வாழ்கின்ற பேதையே னாகிய யான் இதுவரையும் நின் திருவருளால் துன்பம் என்பது எள்ளளவேனும் இன்றிச் [1] சூரியன் எங்கேனும் எழக்கடவன் என்று கருதி இருந்தேன்; இன்று பாண்டியன் ஆணையாலே இடையூறு ஒன்று வந்துவிட்டது; எந்தையே! எனக்கோ நாயகனுமில்லை; மக்களுமில்லை; சுற்றமுமில்லை; துணையாவார் ஒருவருமில்லை; ஆதலால் பற்றுக்கோடின்றித் துன்பக் கடலுள் ஆழ்ந்து வாடும் பாவியாகியஎனக்கு இன்று இணையற்ற இந்தத் துன்பம் வருதல் அறமோ? தேவர்கட்கும் அரிய தேவனே! அன்பர்க்கு எளிய அண்ணலே! அரசன் ஆணைப் படி அமைச்சர்களின் சினம் என்பால் விரைந்து வருமுன் கூலி யாளாக வந்து எனது ஏவலைச் செய்பவரைக் கண்டிலேன்; ஏழையேன் இனி என் செய்வேன்! கூலியாள் வருவதுண் டோ?" என்று மழைபோலக் கண்ணீர்சொரிய அழுது நின்றாள்.

**இறைவன் கூலியாளாக வருதல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள், வந்தியென்பாள் முன்பு மனத்தால் நினைத்து யாவரும் அறியாமல் உண்பிக்கும் பிட்டினை உலகிலுள்ளவர் காண உண்டு அவள் துன்பத்தை நீக்கவேண்டி மீனாட்சியம்மையாரின் பாகத்தை மறைத்து அருள்வடிவங் கொள்ளலானார். பின்பு, குண்டோதரனுக்கு நீரினை ஊட்டி வையை நதியாகச் செல்லும் கங்கையின் பிரிவைப் பொறுதவராய் அவளை அன்புடன் காணுதற்கு அங்கயற்கண் அம்மையாரை வஞ்சித்துத் திருவுருவத்தை மாற்றிப் புறப்படுவாரைப்போல ஞான மூர்த்தியாகிய சோம சுந்தரக் கடவுள் வெளியே வந்தார்.

அவர், அழுக்கேறிய பழைய துணியொன்றை இடையிற் கட்டி, மெய்த்தொண்டர் கட்டிச் சாத்திய இண்டை மாலை யைப்போன்ற சும்மாட்டின்மேல் கூடையினைக் கவிழ்த்து,

---

1. இஃது ஏனை உயிர்ச் சார்பும் பொருள் சார்பும் இன்மையால் கவலையற்றவள் என்பதைக் காட்டும். இங்கே, "எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய்" எனவரும்; திருவாசகம் - திருவெம் பாவை அடி கருதற்பாலது.

அழகிய திருத்தோளின்மேல் திண்ணிய மண்வெட்டியை வைத்துக்கொண்டு, முனிவர்கள் அன்புடன் வேள்வியின்கண் அளிக்கின்ற அவியையும், இடப்பாகத்தின்கண் உறையும் உமா தேவியார் ஊட்டும் அமுதையும் இனிது உண்டும் அடங்காத பசியினையுடையார்போலவும், தாயின் முலைப்பாலைப் பருகுதற் குப் பேரவாவுடன் வரும் மகவுபோலவும், வேதமுடியின் மேலுள்ள திருவடி நிலந்தோயுமாறு, "**கூலிகொடுத்து என் வேலை கொள்வார் உண்டோ?**" என, வேதமொழிபோலக் கூறிக் கொண்டே கண்ணீர் வடித்துத் துன்புறும் வந்தியினது வீதியிலே வந்தருளினர்.

**வந்தி இறைவனாகிய கூலியாளைக் கண்டு மகிழ்ந்து பேசுதல்**

தந்தை தாயும் பிறரும் இன்றி வருகின்ற தனிக்கூலி மைந்தர் கூறும் குரலைக்கேட்டு, வந்தியானவள் தனது மனக் கவலையை யொழிந்து, மக்கட்பேறு இன்மை என்னும் வறுமை யாளர் மக்கட்பேறாகிய செல்வத்தைப் பெற்றகாலத்து அவர்க்கு உண்டாகும் மகிழ்ச்சிபோல் மகிழ்வுற்று வெளியே வந்தாள்; அப்போது, தாய்போலத் தன்பால் அருள் சுரந்து வரும் அக்கூலியாளரை அழைத்து, "எனக்கு அளந்துவிடப் பட்ட கரையை அடைத்துத் தருவாயோ? என்று வினவினள். அதற்குக் கூலியாளராகிய இறைவர், "தாயே! அடைத்துத் தருகின்றேன்: பின்பு எனக்குக் கொடுக்கும் கூலி யாது?" என்றார். பெருமுதியவளாகிய வந்தி, "நான் விற்கும் பிட்டையே உனக்குக் கூலியாகத் தருவேன்" என்றாள். சோமசுந்தரக் கடவுளாகிய கூலியாளர் அதற்கு உடன்பட்டு, முதியாளை நோக்கி, "அன்னையே! பெரும்பசியால் இப்போது நான் வருந்துகின்றேன்; முன்னர் உதிர்ந்த பிட்டையெல்லாம் தருவாயாக; அதனைத் தின்று நான் சிறிது இளைப்பாறிக் கொண்டு நினது பங்குக் கரையைக் கட்டுவேன்" என்று கூறினர்.

**இறைவன் வந்தியளித்த உதிர்ந்த பிட்டினை உண்டல்**

வந்தியார், தெள்ளிய மாவினால் அவித்த பிட்டினை அழுக் கடைந்த -மூடிய ஆடையை நீக்கி அள்ளியெடுத்து, "அப்பா!

இதனை உண்பாயாக" என்று கூறி அளித்தனள். இடையில் கட்டிய புலித்தோலாடையை நீக்கிவந்தவர், தம் முன்றானையை விரித்து அதனை ஏந்தி, "இது மிக நன்றாயிருக்கிறது" என்று அவள் அன்பையும் உடன்கூட்டி அருந்தினார்; "தாயினுடைய முலைப்பாலினும் இப் பிட்டு மிக்க சுவையுடைத்து; இது சுந்தர பாண்டியனாய் இருந்து இவ்வுலகை ஆண்டருளிய சோமசுந்தரக் கடவுளுக்கே உரியதாகும்" என்று சொல்லிச் சொல்லி வாயிற் போட்டுத் தலையை அசைத்து உண்டார்; [1]"தந்தை தாயில்லாமல் தனித்த கூலியாளாக வந்த எனக்கு ஒப்பற்ற அன்னையாக அருள் சுரந்து நீங்காத இளைப்பை நீக்கினையே! ஆதலால் இனி வேலைத் தலத்திலே சென்று உன் மன மகிழும்படி வேலை செய்வேன்!" என்று சொல்லிக் கொண்டு போனார்.

**இறைவன் வந்தியின் கூலியாளராய் மண் சுமத்தல்**

சோமசுந்தரக் கடவுளாகிய கூலியாளர் [2]வையை யாற்றங் கரையினை அடைந்து, [3]"யான் வந்தியின் கூலியாள்" என்று தம்மைக் கணக்கில் எழுதுவித்துக்கொண்டு கரையினை அடைக்கத் தொடங்கினார்; மண்ணினை வெட்டுவார்; அதனைத் தூக்கி முடிமேல் வைப்பார்[4]; அதிகப் பாரம் என்று கீழே கொட்டுவார்; அதனைக் குறைத்து எடுத்துக்கொண்டு

---

1 இங்கே, "தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடி" என்னும் திருவாசகம் திருச்சாழல் அடி கருதற்பாலது.

2. இந்த இடத்துக்குத் தற்போது 'பிட்டுத்தோப்பு' எனப் பெயர் வழங்குகிறது. இது மதுரைக்கு வடமேற்கில் வையையின் தென் கரையில் உள்ளதாகும். இதுதான் சோமசுந்தரக் கடவுள் பிட்டுக்கு மண் சுமந்த இடம் என்பர்.

3. இங்கே, "மணியார் வையைத் திருக்கோட்டில் நின்றதோர் திறமுந் தோன்றும்" என வரும் திருநாவுக்கரசர் தேவார அடி சிந்திக்கற்பாலது.

4. இங்கே, "ஆங்கது தன்னில் அடியவட் காகப், பாங்காய் மண் சுமந் தருளிய பரிசும்" (திருவாசகம் - கீர்த்தித் திருவகவல்) எனவும், "பிட்டு நேர்பட மண்சுமந்த பெருந்துறைப் பெரும் பித்தனே" (திருவாசகம் - திருக்கழுக்குன்றப் பதிகம்) எனவும் வரும் அடிகள் உன்னற்பாலன.

போவார்; சும்மாடு விழுமாறு தட்டுவார்; சுமையைக் கீழே இறக்கி வைத்து அச் சும்மாட்டினை எடுத்துத் தலையில் படியுமாறு கட்டுவார்; பிறகு விரைந்து சுமந்து கொண்டு போய்க் கரையிற் கொட்டுவார்; இவ்வாறு ஒரு முறை இரு முறை மண்ணைச் சுமந்து களைத்தார்; கைம்மலர் கன்றவும், ஒளி பொருந்திய முடிமேல் வடு அழுந்தவும், மலரடிகள் குருதிசுரந்து செந்நிறங் காட்டவும் ஒரு செழித்த மர நிழலை அடைந்தார்.

**கூலியாளராகிய இறைவன் திருவிளையாட்டு**

மலைமகளும் சல மகளும் அறியாமல் தம் திருமேனி முழுதும் நிலமகள் தீண்டித் திளைக்கப் பிறை முடியைக் கூடையாகிய அணையின்மேல் வைத்து மேருமலை அனைய இறைவர் தம் வடிவினை உணர்ந்து துயில் கொண்டார்; அந்த மரமே வடவாலமரமாகவும் நீர்ப்பெருக்கை அடைப்பவர்களே சனகாதி முனிவர்களாகிக் கண்களிகூரவும், மெய்யுணர்வால் பெறப்படும் மோனமயமாகிய தம் தூய அருளுருவினைத் தெளி விப்பாரைப்போலத் தூங்கும் தூக்கத்தினின்றும் விழித்தார்; எழுந்து கூத்தாடினார்; சாம வேதம் போல இனிய இசையினைப் பாடினார்; சிரித்தார்; தொழில் புரிவோர் பராக்குப் பார்க்கக் கரையின்கண் மணலைக் குவித்துத் தாண்டினார்; காலிலுள்ள துகள் மேலே எழுமாறு பாய்ந்து ஓடினார்; உடனே திரும்பினார்; உன்மத்தரைப்போலப் பேசாமல் இருந்தார்; பிறகு, வேலையினாலே மிகவும் வருந்திக் களைத்தவர்போல உடலிலே வேர்வை வடியப் பெருமூச்சு விட்டார், வாயூதிக் காற்றினை அழைத்து மிகப் பசித்தவர் போலத் தளர்வுற்றுத் தம் அடியாளாகிய வந்தி இடும் பிட்டின்மேல் விருப்புடைய வராய் மீளவும் அவளிடஞ் சென்றார்; துன்ப வெள்ளத்தினை நீந்திக் கடந்து இன்ப வெள்ளத்தில் அழுந்திய வந்தியின் முன் சென்று, "அன்னையே! அளந்துவிட்ட கோலுக்கு ஏற்கக் கரைகளெல்லாம் அடைபடுகின்றன; யான் இன்னும் மிக்க பசியுடையேன்; ஆதலின், விரைவில் பிட்டு இடுவாயாக" என்றார்.

அப்போது வந்தியார் வெந்த பிட்டினை அளித்தாள். இறைவர் அதனை வாங்கிக் கையும் நாவும் சுடச் சுட வாயிலிட்டு

இருபக்கங்களிலுமுள்ள கவுளினைக் கையால் ஒற்றிப் பதம் பொருந்த அதனை அருந்திக்கொண்டே அவ்விடத்தினின்றும் நீங்கிச்சென்று முன்போலக் கரையினை அடைக்க முனைந்தார்.

பிட்டினை வாய்நிறையப் போட்டுத் தின்பார்; மிக வலிமை யுடையார்போல மண் வெட்டுவார்; வெட்டியெடுத்த மண் ணைத் தூக்கிக்கொண்டுபோய் வேறு பங்கில் கொட்டுவார்; உடைப்பு அடைபடுவதைக் கண்டு தோளினைத் தட்டுவார்; களிப்புடன் அருகில் நின்றவரைக் கட்டித் தழுவுவார்; எடுத்த மண்ணுடனும் கூடையுடனும் இடறி விழுபவர்போல ஆற் றிலே வீழ்வார்; விரைந்து நீந்திச்சென்று கூடையைத் தள்ளி வந்து எடுத்துக் கரையேறுவார்; அக்கூடையைப் பலமுறை தட்டித்தட்டி ஈரத்தைப் போக்கிச் சும்மாட்டின் கட்டினை அவிழ்த்துத் திரும்பவுங் கட்டுவார்; மண்ணைத் தோண்டுவார்; ஒரு கொட்டுமண்ணைச் சுமந்துகொண்டு போவார்; கூடையை உடைப்பில் வீழுமாறு தட்டுவார்; அதனை எடுப்பவர்போலத் தாவி நீரிலே வீழ்ந்து அது வெள்ளத்தில் ஓடுமாறு விட்டு ஒரு மரத்தினைப் பிடித்து மிதப்பார்; கரையிலேறப் பல பக்கங்களி னுஞ் சென்று தவிப்பார்; நீர்ச்சுழியுள் அழுந்துவார்; நெடுந் தூரம் சென்று மேலே எழுந்து தோன்றுவார்; திரும்புவார்; மண்வெட்டி கழலும்படி செய்வார்; காம்பில் ஆப்பினைச் செரு கிக் கோத்துத் தட்டுவார்; பெருமூச்சுவிட்டுத் தள்ளாடி நின்று வருந்துவார்; முடிச்சிலுள்ள பிட்டினை அள்ளி அருந்து வார்; வேலை கெடும்படி பிறர்க்கும் அள்ளிக் கொடுப்பார்; வேலை வாங்குவோர் பிரம்பினை ஓங்க, அதனைக் கண்டு கைதட் டிச் சிரிப்பார்.

இவ்வாறு, எல்லாத் தொடர்பையும் விட்டுத் தற்போத மின்றி உண்மைநிலையினை உணர்ந்த யோகிகள் ஞானக்கண்ணால் அன்றி அறியமுடியாத பரஞ்சுடராகிய சோமசுந்தரக் கடவுள் புவியிலுள்ளார் ஊனக்கண்ணாலும் கண்டுகளிக்க அவர்களுடன் தாமும் ஒருவராய் விளையாடினார். உலகமனைத்தையும் பேரரு ளினாலே படைத்தும் காத்தும் அழித்தும் பெருவிளையாடல் புரியும் பிறைமுடிப் பெருமானார் இங்கே இவ்வண்ணம்

விளையாடிக்கொண்டிருக்கப் பிரம்பேந்திய கையுடன் அருகு நின்று வேலை வாங்குவோர் அடைபட்ட கரைகளைப் பார்க்கச் சென்றனர்.

**கோலாளர் வந்தியின் கூலியாளைக் கண்டு மயங்கிக் கூறல்**

அப்பொழுது அடைபட்ட கரைகளையெல்லாம் கணக்குப் படி சரிபார்த்துக்கொண்டு குறுக்கே வந்த ஏவலாளர்கள், வந்தியாருக்கு அளந்துவிட்ட பங்கு மாத்திரம் அடைபடா திருத்தலைக் கண்டு வெகுண்டு, "வந்திக்குக் கூலியாளாய் வந்தவன் யார்?" என்று வினவி ஓடி, மன்மதனைப்போல் எதிரில் நின்ற இறைவனாகிய கூலியாளரைக் கண்டு, "ஏடா! தம்பீ! மற்றைப் பங்குகளெல்லாம் அடைபட்டன; நீ இன்ன மும் இந்தப் பங்கினைமட்டும் அடைக்காமல் சும்மா இருக்கின் றனையே! அதற்கு யாது காரணம்?" என்று வினவினர். அதற்கு அண்ணலார் வேறொன்றும் பேசாமல் தம்மையறிந்த வர்போலச் சிறப்புடன் இறுமாப்புத் தோன்ற இருந்தார்.

மேலும் ஆற்றுவெள்ளம் மேலிட்டு வந்து அடுத்த பங்கில் அடைபட்டிருக்கும் கரையை இடித்துச் சென்றது. அப்போது கோலாளர்கள் வந்தியினுடைய கூலியாளரின் கட்டழகைக் கண்டு கோலினால் அடிக்க[1] அஞ்சி மயங்கி நின்றனர்; "இவன் என்ன பித்துடையவனோ? பேய்கோட்பட்டவனோ? வந்தியை வருத்துதற்கு வந்த எத்தனோ? இந்திரசாலம் வல்ல சித்தனோ? இசைப்பாடலில் வல்ல கந்தருவனோ? பண்ணொடு தாளத்திற்கு ஏற்ப ஆடும் பரத நூற்புலவனோ? பெறலருஞ் செல்வத்தி லிருந்து பின் செல்வங் குன்றி வருந்திய மகனோ? புகழ்பெற வாழ்ந்து கெட்டவருள் இவன் யார் மகனோ? காமனும் விரும்பும் கட்டழகுடைய இவன் கூலியின் பொருட்டு ஆளாக வந்து வேலை செய்தது யாது காரணமோ? தாயும் தந்தையும் அற்ற தனியனோ? இவன் இதற்கு முன் வேலை செய்தவன் அல்லன்; அதனை இவன் திருமேனியே சொல்லுகின்றது. வேலை தொடங்குதற்கு முன்னரே கூலியும் வாங்கிக்கொண்

1. இங்கே, "பாண்டியனுடைய மாறு கோலாளர் இறைவனாகிய கூலியாளை அடித்தனர்" என்று நம்பி திருவிளையாடல் கூறுகிறது.

டான்; தானே இங்கு வந்து, "யான் வந்தியின் ஆள்" என்று கணக்கிலும் பதிவு செய்யுமாறு கூறினன்; வேலையும் செய்யாமலிருக்கிறன்; இன்சொல் கூறினும் கேளான்; கல்லில் அடித்த முளையே போலச் சிறிதும் அசையாது நம்மையும் ஒரு பொருட் படுத்தாமல் நிற்கிறன். இச்செய்தியைநாம் அரசனுக்கு விண்ணப்பஞ் செய்வோம்" என்று கருதிச் சென்றனர்.

**கோலாளர் பாண்டியனிடம் வந்தியின் ஆளைப்பற்றிக் கூறல்**

கோலாளர் பாண்டியன் திருமுன்னே சென்று வணங்கி நின்று, "அரசே! நகர மக்கள் தங்களுக்கு அளந்துவிடப்பட்ட பங்குகளையெல்லாம் ஒழுங்காகக் கரை போட்டு மலையைக் காட்டினும் உறுதியாகக் கட்டி விட்டனர். ஆனால், பிட்டு விற்கும் வந்தி என்கின்ற முதியவள் மட்டும் தன் பங்கினை இன்னமும் அடைத்தாளில்லை. மன்மதனிலும் மிக்க கட்டழகுடைய ஒருவன் "வந்தியின் ஆள்" என்று அங்கே வந்து கணக்கில் பதிவு செய்துகொண்டு அரசிளங் குமரனைப்போலக் களித்தும் ஆடியும் பாடியும் வேலை செய்யாமல் காலத்தை வீணே போக்குகின்றன்; வேலையைப் பற்றி மனத்தில் சிறிதும் கருதினனில்லை. அவனுடைய பேரழகினைக்கண்டு அஞ்சி அடிக்கவும் மனங்கொள்ளாமல் இங்கு வந்தோம்" என்று கூறினர்.

**பாண்டியன் சென்று கரைகளைப் பார்வையிடல்**

உடனே பாண்டியன் விரைந்து அமைச்சர்களுடன் எழுந்து, "நாம் சென்று அடைக்கப்பட்ட கரைகளையெல்லாம் பார்ப்போம்" என்று கூறி வையையின் கரையினை அடைந்து, உயர்த்தி அடைக்கப்பட்ட கரைகளனைத்தையும் கண்டு மகிழ்ந்தான்; பின்பு வந்தியின் பங்கு அடைப்பவரின்றி அடுத்த வலிமையுள்ள கரையையும் இடித்து வெள்ளம் பெருகிச் செல்வதைக் கண்டு கோபித்து, "இக் கரையினை அடைப்பவன் எங்குற்றன்?" என்று வினவினன். அரசனுடைய கோபத்தைக் கண்ட மாறுகோலாளர் பயந்து சினங்கொண்டவர்களாகி, ஓடி உள்ளும் புறமும் மேலும் கீழும் உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வராகிய (பரம்பொருளாகிய) கூலி

யாளரின் கையைத் தொட்டுப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து, "இவன்தான் வந்தியின் ஆள்" என்று காட்டி நின்றனர்.

**வழுதி இறைவனுகிய கூலியாளரைப் பிரம்பால் அடித்தல்**

அரிமருத்தன பாண்டியன் அவரைக் கண்டு சினந்து பொற்பிரம்பைக் கையிலே வாங்கி அண்டங்களையும் அளவிறந்த உயிர்களையும் தனது திருமேனியாகக் கொண்ட இறைவனது முதுகிலே வீசி அடித்தான்[1]. எங்கும் நிறைந்த பேரொளியாகிய சோமசுந்தரக் கடவுள் கூடையோடு மண்ணை உடைப்பிலே கொட்டிவிட்டு உடனே மறைந்தருளினர்,

எவ்வுயிர்கட்கும் அறிவுக்கு அறிவாயுள்ள சிவபெருமான் மேற்பட்ட அவ்வடித்தழும்பு அரிமருத்தன பாண்டியன் முதுகிலும், அவனுடைய மனைவியர்களின் முதுகிலும், அமைச்சர் முதுகிலும், அரசிளங் குமரர் முதுகிலும், சேனவீரர் முதுகிலும், குதிரைகளின்மேலும், யானைகளின்மேலும் பட்டது; சூரியன் முதலான ஒன்பது கோள்கள்மேலும், நட்சத்திரங்கள் மேலும், நிலம், நீர், தீ, காற்று, வான் என்னும் ஐம்பூதங்கள் மேலும், மேகங்கள்மேலும், வேதங்கள்மேலும், அறுவகைச் சமயங்கட்கும் முத்தித்தானமாயுள்ள கடவுளர்மேலும், தேவர்கள்மேலும், முனிவர்கள்மேலும் பட்டது; மனிதர், நரகர், பறவை, விலங்கு, பாம்பு, கறையான், எறும்பு முதலாகிய இயங்கியற் பொருள்மேலும், மலை, மரம், செடி, புல் முதலாய

1. இங்கே, "கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை. மண் சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு, புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண்" (திருவாசகம் - திருவம்மானை) எனவும், "மண்பான் மதுரையிற் பிட்டமுது செய்தருளித் தண்டாலே பாண்டியன் தன்னைப் பணிகொண்ட, புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ" (திருவாசகம் - திருப்பூவல்லி) எனவும், "மண்ணகழ்ந்(து) எடுத்து வருபுனல் வையைக், கூலஞ் சுமக்கக் கொற்றுளாகி, நரைத்தலைமுதியோள் இடித்தடு கூலிகொண்(டு), அடைப்பது போல உடைப்பது நோக்கிக், கோமகன் அடிக்க அவனடி வாங்கி, எவ்வுயிர் எவ்வுல(கு) எத்துறைக் கெல்லாம். அவ்வடி கொடுத்த அருள்நிறை நாயகன்" (கல்லாடம்) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

நிலையியற் பொருள்மேலும், ஊனிற் பொருந்திய கருவின் மேலும், உயிரில்லாத சித்திரங்கள்மேலும் பட்டது.

திருமால் திடுக்கிட்டுத் தம் அரிய துயிலைவிட்டெழுந்தான்; பிரமதேவன் படைப்பினைவிடுத்து, "இஃது என்னை" என்று வியந்தான்; தேவேந்திரன் அஞ்சினன்; தேவரும் பிறரும் உடல் நடுங்கினர்; இயக்கர், சித்தர், சாரணர் முதலானோர் தம் முதுகிற்பட்ட புண்ணினை "இது யாது?" என்று ஒருவர்க்கொருவர் காட்டி அறியாதவர்களாய் மயங்கினர்கள்.

**ஏவலாளர் வந்தியிடம் சென்று அரசனிடம் வர அழைத்தல்**

சோமசுந்தரக் கடவுள், எல்லாவுயிர்களும் தாமே என்பதையும், அன்பிற்கு எளியர் என்பதையும், அனைவருக்குங் காட்டும்பொருட்டுத் திருமேனியில் பிரம்படிபட்டும், ஒருகூடை மண்ணைக்கொட்டி நீரின் வேகம் குறையக் கரையை உயர்த்தி, வேலையை முடித்தும் மறைந்தருளியதைக்கண்டு, அரசனுடைய கோலாளர் நரைமூதாட்டியாகிய வந்தியார் இடத்திற்கு ஓடினர்; அவளைக்கண்டு துன்புறுத்தி, 'அரசனிடம் வருக' என்று கூறினர். வந்தியார், "இன்னமும் பாண்டியனால் துன்பமுண்டோ? முன்பு எனக்காக வேலை செய்யச்சென்ற ஆள் என்ன செய்தானோ? இனி எப்படி முடியுமோ" என்று கருதிச் சோமசுந்தரக் கடவுளை நோக்கி நின்று வருந்தினள்.

**வந்தியார் தேவ விமானத்தில் சிவலோகம் செல்லல்**

அப்போது அன்பையே தேனாகக் கலந்து ஊட்டிய பிட்டினைத் திருவமுது செய்தருளிய சோமசுந்தரக்கடவுள் திருவருளினாலே சிவகணத்தவர் வானிலிருந்து ஒளிவீசும் தேவ விமானத்துடன் புவிமிசை இறங்கிவந்து, "அன்னையே! வருக" என்று விரைவில் அதில் ஏற்றிக்கொண்டு தேவர்களின் பூமழையும், பண்ணிறைந்த இசையின் ஒலியும், வேதமந்திரங்களின் ஒலியும், தேவதுந்துபிகளின் முழக்கமும் வானின்கண் ஓங்கச் சிவலோகத்திற்கு அழைத்துச் சென்றார்கள்.

**பாண்டியன் ஐயங்கொண்டு நிற்றல்**

அரிமருத்தன பாண்டியன், சோமசுந்தரக்கடவுள் ஒரு கூடை மண்ணைக்கொட்டி மறைந்தருளியதையும், அடைக்க

லுற்ற கரை நீண்ட மலைபோல உயர்ந்ததையும், தன்னுடைய உடம்பிலே பிரம்படிபட்டதையும், "என்மேல் அடிபட்டது! என்மேல் அடிபட்டது!" என்று அமைச்சர் முதலானோர் ஒருவர்க்கொருவர் சுட்டிக்காட்டிப் பேசுவதையும், பிறர்பால் நிகழும் நிகழ்ச்சியையும் கண்டு மனத்திலே ஐயங்கொண்டு நின்றான்.

**இறைவன் அசரீரியாகப் பாண்டியனுக்குக் கூறல்**

அப்பொழுது மண்ணை உடைப்பினில் கொட்டி மறைந்து சென்றருளிய சோமசுந்தரக் கடவுள் ஆகாயத்திலே நின்று படைவீரரும் பிறரும் கேட்குமாறு பாண்டியனுக்கு மகிழ்ச்சிப் பெருக்கு உண்டாக அவனை நோக்கி, அசரீரி மொழியாக, 'செங்கோல் வழுவாத பாண்டியனே! உன்னுடைய பொருள் களெல்லாம் தரும வழியிலே தேடப்பட்டன; அவை தூய தன்மையுடையன; ஆகையாலே அப்பொருள்கள் நமக்கும் நம்மையடைந்த அடியார்கட்கும் வாதவூரன் அன்புடன் வழங் கினன். அதனையுணராது நீ அவனைத் துன்புறுத்தினை; அது கண்டு நாம் காட்டிலுள்ள புலவுநாறும் வாயினையுடைய நரிகளை யெல்லாம் குதிரைகளாக்கித் தந்தோம்! அவை யாவும் அன்றிரவில் நரிகளாய் மாறி ஓடின. மற்றைநாளும் அவனை நீ தண்டலாளரிடம் விடுத்துத் துன்பம் விளைவித்தனை; அதனைப் பொறாமல் நாம் வையையாற்றில் வெள்ளம் பெருகுமாறு செய்தோம்! வந்தியின் கூலி ஆளாய் வந்து அவள் கையிற் பிட்டினை வாங்கியுண்டு பிரம்படியும் பட்டோம்! ஒரு கூடை மண்ணைக்கொட்டிக் கரையை உயரச்செய்தோம்! அந்த அன்னையின் துன்பத்தினை நீக்கி, அவளை எம்முலகை அடையுமாறு செய்தோம்! இவ்வளவும் நாம் செய்தது இவ்வாதவூரன் பொருட்டேயாம். இந்த மறையவன் தன்மை யைச் சிறிதும் நீ அறிந்திலை. இவன் எம்மிடம் விருப்பம் வைத்ததால் உனக்கு இம்மையின்பத்தையும் மறுமை யின்பத் தையும் தேடித்தந்த உத்தமன்; மாலை, சந்தனம் முதலாகிய புறப்பற்றினையும் அகப்பற்றினையும் விடுத்தவன். அவனை அவன் விருப்பத்தின்படியே நடக்க விடுத்து, நீ மறைநூல் வழியே நின்று, நீதி மன்னவர்க்கு வரையறுத்த ஆயுள்

நாள் குறைவுபடாமல் நிறைந்த செல்வத்திலே திளைத்து வாழ் வாயாக'' என்று கூறியருளினர்.

**பாண்டியன் வாதவூரரைத் தேடியடைந்து வேண்டுதல்**

இவ் வான்மொழிகள் பாண்டியனின் இரு செவிகளிலும் நிரம்ப, அவன் அச்சமும் அதிசயமும் ஆனந்தமும் அடைந்து, "மெய்யன்பினையுடைய வாதவூரர் எங்குச் சென்றார்'' என்று பல விடங்களிலும் தானே தேடிச்சென்று கூடல் நாயகனின் திருக்கோயிலை அடைந்து, தம்விருப்பின்படியே சிவயோகத்தில் இருக்கும் வாதவூரடிகளைக் கண்டு வீழ்ந்து வணங்கி, "ஐயனே! இந்நிலவுலகத்தினை ஆண்டு நரகத்தின்கண் அழுந்துதற்கு வல்ல என் புல்லறிவுக்கு ஏற்றவண்ணமே உமக்குத் தீங்கு செய் தேன்; நீவிர் அடியேனது தவப்பயனாய் - அமைச்சராய் வந்து இம்மை மறுமைப் பயனுக்கும் காரணமாய்க் கொடிய பிறவிப் பிணிக்கும் அரிய மருந்தாயினீர். அடியேன் தேவரீரின் உயர் வினைச் சிறிதும் அறியாமல் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்து முன் போலவே புவி அனைத்தையும் ஆளக் கடவீராக'' என்று இரந்து வேண்டினான்.

**திருவாதவூரர் பாண்டியனிடம் விடை பெற்றுச் செல்லல்**

மண்ணுலகத்திலுள்ள பற்றினை நீக்கிய வாதவூரடிகள் புன்னகை தோன்றப் பாண்டியனை நோக்கி, "அரசே! கடல் சூழ்ந்த உலகமனைத்திற்கும் ஆயிரங்கண்களையுடைய இந்தி ரனைப்போல் தனியரசு புரிவீராக! உங்கள் இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள் அருளிச்செய்த வண்ணமே விருப்ப முடன் செய்வீராக! தங்களைச் சார்ந்து வாழ்வோர் தூய்மை யுடையவரே. நான் தங்களை அடைந்த தன்மையினாலே உலகியல், வேத நெறி என்னும் இரண்டையும் நன்கு தெளியப் பெற்றேன். அதனாலே எனக்கு மனத்தூய்மை உண்டாகிப் பொய்த்தேவர்களை விடுத்து சிவனிடத்திலே அன்பு விளைந் தது; அவ்வன்பினாலே மாயையின் விருத்தியாகிய உலக வாழ்க் கையின் நிகழ்ச்சியில் உண்டாகிய துன்பம் வெந்து நீறாகியது; சச்சிதானந்தப் பரம்பொருள் அருள்வடிவாகி வந்து தம்மை எனக்குக் கொடுத்துத் தம் திருவடியை எனது முடியிற் சூட்டித் தம்முருவமாக்கியது.

சச்சிதானந்தமாகிய அப்பரமசிவமே தமது இச்சையி ஞலே உலகமனைத்தையும் படைத்துக் காத்து அழிக்கும் தொழிலையுடைய பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மும் மூர்த்திகளை உண்டாக்கிய மேன்மையுடையவர்; பிறவித்துன் பத்திற்கு அஞ்சி வந்தவர்களுக்கு அழியாத இன்பத்தை யுடைய வீடு பெற்றினைக் கொடுத்தருளுபவர்; உயர்வு ஒப்பில் லாத இத்திருவாலவாயுடையாரே, **மந்தரமலை, கயிலைமலை, மேரு மலை. ஸ்ரீபருப்பதம்** (ஸ்ரீ சைலம்), **காசி** முதலாகிய இத்தலங்கள் தோறும் ஞானவடிவாகி அனைவர்க்கும் இம்மை மறுமை இன்பங்களைக் கொடுத்துக்கொண்டும் எம்மனோர் மனம் புறத்தே செல்லாமல் உள்ளத்தைத் திருத்திக்கொண்டும் வீற்றிருப்பவர். அவரே, முன்னொருகாலத்தில் கண்ணுவர் முதலான முனிவர்களுக்கு, வேதத்தின் உண்மைப் பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்க அருளிச்செய்தார். அவரே தமது ஞானகாசமாகிய பொன்னம்பலம் என்னும் தில்லைப்பதியின்கண் வரும்படி[1] அடியேனுக்குக் கட்டளையிட் டருளினர். ஆதலால், அங்கே அடியவன் போக உடன் படுவீராக" என்று கூறிச் சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்து விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

**பாண்டியன் வாதவூரரிடம் விடைபெற்றுத் திரும்புதல்**

தம் பற்றினை அறுத்த பரமனர் திருவடியிலே பற்றுக் கொண்டு செல்லும் வாதவூரடிகளைப் பின்தொடர்ந்து பாண்டி யன் சென்றான்; அப்போது வாதவூரடிகள் அரசனை, "நில்லும்; நில்லும்" என்று கூறியும் பாண்டியன் கூப்பிடு தூரம் வரையில் நெருங்கிச்சென்று அடிபணிந்து விடைபெற் றுக்கொண்டு மீண்டனன்.

பின்னர், பாண்டியன் நகரினை அடைந்து திருக்கோயிலுட் புகுந்து, "சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்துத் தான் அடிக்

1. இங்கே, "நாயினேனை நலமலி தில்லையுட், கோலமார்தரு பொது வினில் வருகென" (திருவாசகம் - கீர்த்தித் திருவகவல்) எனவும், "வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச், சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ" (திருவாசகம்-திருக்கோத்தும்பி) எனவும் வரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

கும்படி பிரம்பை நீட்ட முதுகு தந்தருளிய அருள் வெள்ளமாகிய இறைவன் மகிழுமாறு வீழ்ந்து வணங்கி, எழுந்து திருமுன் நின்று,

1 அடையாளம் படவொருவன் அடித்தகொடுஞ் சிலைத்தழும்பும்
தொடையாக ஒருதொண்டன் தொடுத்தெறிந்த கல்லும்போல்
கடையானேன் வெகுண்டடித்த கைப்பிரம்பும் உலகமெலாம்
உடையானே! பொறுத்ததோ? உன்னருமைத் திருமேனி.

2 கடியேறு மலர்மகன்மால் முதலாய கடவுளரும்
படியேழும் அளவிறந்த பல்லுயிரும் நீயேயோ?
முடியேற மண்சுமந்தாய்! முதுகிலடி வடுப்பட்ட(து)
அடியேனும் பட்டேன்நின் திருமேனி ஆனேனே.

3 கைக்குமருந் தின்சுவைபின் காட்டுமா றெனவினைக்கும்
பொய்க்குமருங் கலஞகி மண்ணுண்டு புலைநகரம்
துய்க்குமருந் துயர்களைவான் மாறாய்நின் துணையடிக்கே
உய்க்குமருந் தவர்இவரென்(று) அறியாமை ஒறுத்தேனே.

4 பாதியுமை உருவான பரமேட்டி! எனக்(கு)இம்மை
ஊதியமும் பரகதியும் உறுதிபெற விளைவிக்கும்
நீதியினல் மந்திரியாய் நின்னருளே அவதரித்த
வேதியரை அறியாதே வெறுத்துநான் ஒறுத்தேனே.

5 மாயா விருத்தியினல் மாழாந்து மாதவரை
ஆயா(து) ஒறுத்தேன்; அருநரகத் தாழ்ந்துநான்
வீயாமல் இன்றனையார் மெய்ம்மையெலாம் தேற்றியஎன்
தாயானுய் தண்ணளிக்(கு) என்? தமியேன்செய் கைம்மாறே.

---

1. ஒருவன் - அருச்சுனன். ஒரு தொண்டன் - சாக்கியநாயனர்.

2. கடி - வாசனை. மலர்மகன் - பிரமன். படி - உலகம். வடு - தழும்பு.

3. கைக்கும் - கசக்கும். வினை - தீவினை, கலம் மரக்கலம். புலை - புன்மை, அருந்தவர் - அரியதவமுடையவர். இவர் - வாதவூரர்,

4. பரமேட்டி - இறைவனே, ஊதியம் - பேறு. வேதியர் - வாதவூரர்,

5. மாயா - மாயை, விருத்தி - செய்கை, மாழாந்து - மயங்கி. வீயாமல் - வீழாமல். தேற்றிய - தெளிவித்த.

[1] நின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டும்
இன்னமுதிற் கழிசுவைத்தோ இவளிடும்பிட்(டு)?எவ்வுயிர்க்கும்
மன்னவனே! செந்துவர்வாய் மலர்ந்தமுது செய்தனையால்;
அன்னையிலா உனக்கிவள்ஓர் அன்னையாய் வந்தாளோ?

[2] அன்றுசிறுத் தொண்டரிடும் பிள்ளைக் கறியமுதும்
மென்று சுவைதெரிந்த வேடன்இட்ட ஊனும்போல்
நன்றுநரை யாட்டியிடு பிட்டு நயந்தருந்தி
என்றும் அடியார்க்(கு) எளிவந்தாய்; எந்தாயே!

[3] நரியாவும் பரியாக்கி நடத்தியும்அம் பரமன்றித்
தரியாயான் தருதுகிலைத் திருமுடிமேல் தரித்துமறைக்(கு)
அரியாய்நீ என்பாசம் அறுக்கவருந் திருமேனி
தெரியாதே பரிஆசை தினைத்திறுமாந்(து) இருந்தேனே.

[4] விண்சுமக்கும் புள்ளாய் விலங்காய்ச் சுழன்றுமனம்
புண்சுமக்கும் சூழ்ச்சி வலியுடைய புத்தேளிர்
மண்சுமக்கும் மள்ளராய் வந்திலரே வந்தக்கால்
பண்சுமக்கும் சொல்லிபங்கன் பாதமுடி காண்பாரே.

என்று பலவாறு துதித்துத் தம்மை அடைந்த அடியவர்க்கு இவர் அன்பராம் என்றும், இவரைப் பெற்றால் இம்மை மறுமை இன்பங்களையும் முத்தி இன்பத்தையும் பெறுதல் எளிதாம் என்றும் கருதி, அன்று முதல் பல திருப்பணிகளையும் பூசை, திருவிழா முதலானவற்றையும் சிறப்புடன் செய்வித்து, வெள்ளியம்பலத்தில் மாறியாடிய திருவடிகளிலே பதிந்த அன்பும், உயிர்களிடத்து அன்பும் பெருக ஆட்சி செய்து கொண்டு வாழ்ந்து வந்தான்.

---

1. ஊட்டும் - உண்பிக்கும், கழிசுவை - மிக்க சுவை, மன்னவனே - இறைவனே, அன்னை - தாய்,

2. வேடன் - கண்ணப்ப நாயனார். ஊன் - மாமிசம். நரையாட்டி - வந்தியார்,

3. அம்பரம் - திசைவெளி, தரியாய் - உடுக்காத நீ. யான் - இங்குப் பாண்டியன், மறைக்கு - வேதத்திற்கு.

4. புள் - அன்னம், விலங்கு - பன்றி. புத்தேளிர் - பிரமன் திருமால், மள்ளர் - ஏவளாளர். பண் சுமக்கும் சொல்லி - உமாதேவி.

**பாண்டியன் மகப்பேறும் சிவப்பேறும் பெறுதல்**

இவ்வாறு அரிமருத்தன பாண்டியன் வாழுங் காலத்திலே அறநெறியால் ஈட்டிய தனது பொருள் முன்பு திருப்பெருந் துறைப் பெருமானிடத்தும், அவரடியாரிடத்தும் வாதவூரடிகளால் சென்று உடனே பல வகையாய்த் தழைத்து வரும் பயனேபோலவும் பூரணச் சந்திரனைக் கண்ட கடல் பொங்குதல் போலவும் பலவகைப்பட்ட செல்வம் நாடோறும் மிக்கோங்க **சகநாதன்** என்னும் புதல்வனைப் பெற்றுச் சிறந்த மகிழ்ச்சிக் கடலுள்அழுந்தினுன்; பிறகுஅம்மகனுக்கு முடிதரித்து அரசனுக்கினுன்; வாதவூரடிகளாகிய அமைச்சரின் சார்பினுலே உண்மை நெறி விளங்கி, இருவினையொப்புப்பெற்று இறைவன் திருவருளால் ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களின் தொடர்ச்சி நீங்கிச் சிவானந்தக் கடலிலே மூழ்கிச் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழலை அடைந்தான்.

**வாதவூரர் தில்லையை அடைந்து தரிசித்தல்**

பாண்டிய நாட்டினின்றும் புறப்பட்டுச் சென்ற வாதவூரடிகள், தம் பழுதற்ற பாடல்களை ஏற்றுக்கொள்ளும் இறைவன் எழுந்தருளிய பதிகள் பலவற்றையும் வணங்கிக்கொண்டு அந்தணர் மூவாயிரவரின் வேள்விப்புகை ஓங்கிநின்ற தில்லை என்னும் பழம்பதியினை அடைந்தார்; வீதிகள் தோறும் வீழ்ந்து வணங்கித் திருக்கோயிலிலே புகுந்து உண்மையான ஒளியும் அறிவும் இன்பமுமுடைய இறைவரின் திருவடிவமாக விளங்கும் சிவகங்கையில் நீராடினுர்; திருமேனியில் ஒரு பாதியைப் பங்கிட்டுக்கொண்ட சிவகாமி அம்மையார் காண ஆனந்த தாண்டவம் செய்தருளும் இறைவனின் திருவருளாகிய கனக சபையைக் கண்டு காந்தத்தால் இழுக்கப்பெற்ற இரும்பைப் போல் இழுப்புண்டு சென்றுர். அன்று திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியிலே தம்மை ஆட்கொண்டருளிய குருவடிவாகிய திருக்கோலமே அம்பலத்தின்கண் எதிரே தோன்றி '**வருக**' என்று அழைப்பார்போல அழகிய திருவாயின்கண் புன்னகை காட்டி நின்றருளிய நடராசப் பெருமானின் திருக்கோலத்தினைக் கண்டு அஞ்சலி செய்தார்; நிலத்தில் வீழ்ந்து ஐம்புலன்களையும், அந்தக் கரணங்களையும் கடந்து உண்மை அன்பின்

வடிவமாயினர்; தில்லைவனமாகிய தாமரை மலரில் விளையும் சிவானந்தமாகிய தேனை வண்டுபோல வாரியுண்டார்; **திருவாசகம்** பாடி இன்பக் கூத்தாடினர்; அழலிற்பட்ட வெண்ணெய் போல உள்ளம் உருகினர்; பொன் மன்றினுள் ஆடும் இறைவனது திருவாக்கின்படி அன்புடன் சென்று கீழ்த்திசையிலுள்ள அரிய தவத்தினர் வாழும் தவவனத்தை அடைந்தார்; அங்கே, குறியையும் குணத்தையும் கடந்த ஒப்பற்ற ஆனந்தக் கூத்தரின் திருவுருவமாக விளங்கும் திருவைந்தெழுத்து[1] என்னும் வாளை[2] வீசி, ஐம்பொறிகள் அந்தக் கரணங்கள் என்னும் காட்டினை முற்றும் வெட்டி, மனமாகிய நிலத்தினைத் திருத்தித் தூய்மை செய்து, அதனில் சிவமாகிய வித்தினை விதைத்து, ஆன்ம அறிவாகிய களையினைக் களைந்து, அருளாகிய நீரைப் பாய்ச்சி, அறிவே வடிவாய் விளைந்த சிவபோகமாகிய அமுதினை இடையறாமல் அருந்தி நின்றார்.

குறிகுணங்கள் கடந்ததனிக் கூத்தன்உரு
வெழுத்(து)ஐந்தின் கொடுவாள் ஓச்சிப்
பொறிகரணக் காடெறிந்து வீசிமனப்
புலந்திருத்திப் புனிதஞ் செய்து
நிறைசிவமாம் விதைவிதைத்துப் பசுபோதங்
களைந்(து)அருள்நன் னீர்கால் பாய
அறிவுருவாய் விளைந்ததனிப் பரானந்த
அமு(து)அருந்தா(து) அருந்தி நின்றார்.

அப்போது அத் தபோவனத்தின்கண் வாதவூரடிகள் அருட்கடல் இருந்த தோற்றம்போல வெண்ணீறணிந்து ஓவியம்போல அசைவின்றிச் சிவயோகம் செய்தருளுங் காலத்தில், மான்களின் கூட்டமும், புலிகளின் கூட்டமும் வந்து ஒருசேர நின்று ஒரு துறையில் நீர் அருந்தும்; பசுக்கள் கன்றெனநினைந்து அவரை

---

1. இங்கே, "ஆடும் படிகேணல் லம்பலத்தான் ஐயனே, நாடுந் திருவடியி லேநகரம் - கூடும், மகரம் உதரம் வளர்தோள் சிகரம், பகருமுகம் வாமுடியப் பார்" எனவரும் உண்மை விளக்கவெண்பா கருதற்பாலது.

2. இங்கே, "படைக்கல மாகவுன் னாமத் தெழுத்தஞ்சென் னாவிற் கொண்டேன்" என வரும் அப்பர்தேவார அடி சிந்திக்கற்பாலது.

நக்கும்; அவர் கண்களினின்று வழியும் ஆனந்தக் கண்ணீரை அங்குள்ள பறவைக் கூட்டங்கள் வந்து பருகும்.

**மூவாயிரவர் வாதவூரரைப் புத்தரோடு வாதிட அழைத்தல்**

அக்காலத்திலே சில புத்தர்கள் இலங்கையினின்றும் சிதம்பரத்தை அடைந்து தில்லை மூவாயிரவருடன் ஏழுநாள் வரையறுத்துச் சபதங்கூறி வாது செய்வாராயினர். இந்த ஏழு நாட்களுக்குள் இப்புத்தர்களை வெல்லவேண்டுமென்று கருதிய தில்லை மூவாயிரவரது கனவில் கூத்தப்பெருமான் எழுந்தருளி, "நமது திருவாதவூரனைக் கொண்டு வாதஞ் செய்வீராக" என்று கூறியருளி மறைந்தார். மறையவர்கள் விழித்து அந்த ஞான மறையோரான வாதவூரர் இருக்கும் காட்டினை அடைந்து வாதுபுரிய வருமாறு அழைத்தனர். அப்பொழுது பொன்னம்பலத்தில் நடனமாடும் பெருமானின் அருள்வழிநிற்கும் வாதவூரர் அவ்வாறு செய்ய மறுத்தார். அம்மூவாயிரவரும் திரும்பி வந்து மனம் வருந்தித் துன்பக்கடலுள் மூழ்கியிருந்தனர். மீண்டும் பொன்னம்பலத்தில் நடனமாடும் பெருமான் மறையவர்கள் கனவில் தோன்றி, "அவனை முன்னே திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியிலே ஆட்கொண்டருளிய முறையாலும், அவன் இனிய இசையுடன் அமைந்த தமிழ்ப் பாட்டுக்களை மணி போல் பாடும் காரணத்தாலும் யாம் அன்றிட்ட பெயர் **மாணிக்க வாசகன்** ஆகும்; அப் பெயர் கூறி அவனை அழையுங்கள்; அவன் வருவான்" என்று அருளிச்செய்தார்.

**வாதவூரர் புத்தர்களின் வாத சபையை அடைதல்**

தில்லைவாழந்தணர்கள் உறக்கம் நீங்கி எழுந்து சென்று வாதவூரடிகளை அடைந்து, "மாணிக்கவாசக! வருக!" என்று அழைத்தனர். பற்றறத் துறந்த வாதவூரடிகள் அதனையறிந்து, "இறைவனின் அறக்கருணை இதுவோ?" என்று கருதி, அம் மூவாயிரவரோடும் புறப்பட்டுத் தில்லை நகரை அடைந்து பொன்னம்பலத்தில் ஆடியருளும் நடராசப் பெருமானின் திருவடிகளை வணங்கிக்கொண்டு திரும்பிப் பொன் மண்டபத்திலே புகுந்து அறிஞர் கூட்டம் நெருங்கிச் சூழ்ந்திருந்த சபை நடுவிலே இருந்தருளினர்.

**வாதவூரர் புத்தர்களோடு வாதிடல்**

முன்னர் வாதவூரர், [1] சீவரப் போர்வையினையுடைய புத்தர்களை [2] வேறாக இருத்தி, "உங்கள் கடவுளையும், நூலையும், அந் நூல் வழியில் நின்றவர் எய்தும் கதியையும் கூறுங்கள்" என்றார். கனவிலும் திருநீற்றைக் காணாத புத்தர்கள், அம் மூன்று வினாக்களுக்கும் [3] **உத்தேசம், இலக்கணம், சோதனை** என்னும் மூவகையாலும் விரித்து விடை கூறினர். வாதவூரடிகள் அவர்கள் கூறியதைக் கேட்டு, "காட்சியளவை ஒன்றினால் அவர்களே உடன்படுமாறு மறுத்துக் காட்சியளவை இன்றி ஏதுக்கள் இல்லை; ஆதலின், நீர் நிலைநிறுத்திய கடவுள் முதலிய மூன்று பொருள்களும் அனுமான அளவையாலும் நிலை பெறுவன அல்ல" என்று கூறியருளினார்.

உருவம், வேதனை, குறிப்பு, பாவனை, அறிவு என்னும் பஞ்ச கந்தங் கெடுதலே வீடுபேறு என்னும் அப் புத்தர்கள் மணிவாசகரை நோக்கி, "இன்று எங்களைக் காட்சியளவை ஒன்றினாலே வென்றோம் என்று கூறினீராயின் நன்று; உமது கடவுளைக் காட்சி அளவையினால் நிலை நிறுத்தி எங்களை வெல்லும்" என்று கூறினர். ஐம்புலன்களை வென்ற மாணிக்கவாசகர் நகைத்து, "பிறவிக் குருடர்க்குச் சூரியனுடைய ஒளியினைக் காட்டல் இயலுமோ? மறைகளாலும், அளவைகளாலும், தேவர்களாலும், மனத்தாலும், வாக்காலும் அறிதற்கு அரிய பேரொளி வடிவினன் எமது இறைவன்; அவன், திருநீற்றுத் தொண்டாகிய குறி வழியே நிற்பார்க்கு அல்லாமல் ஏனையோரால் காணும் தன்மையையுடையவன் அல்லன்" என்றார்.

---

1. சீவரப் போர்வை - மருதந்தளிர் ஊறிய துவர் நீரில் தோய்த்த போர்வை; கடுக்காய் நீரிலே தோய்த்த போர்வை எனினுமாம்.

2. இங்கு, வேறாகஇருத்தி என்றதைத் திருவாதவூரடிகள் புராணம், திருவெண்ணீறு இல்லாத புத்தர் முகத்தை வாதவூரர் பார்க்கலாகாது என இடையில் திரையிட்டதாகக் கூறுகின்றது.

3. உத்தேசம் - கூறும் பொருளைப் பெயர் அளவால் எடுத்தோதல்; இலக்கியம். இலக்கணம் - சிறப்பியல்பு: அஃது அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவம் என்னும் முக் குற்றங்களும் இல்லாத தன்மை, சோதனை - இலக்கியத்தில் இலக்கணம் உளவாதலை ஆராய்தல்,

புத்தர்கள், "உங்கள் சிவபெருமானுக்கும், திருநீற்றுக்கும் உள்ள இயைபுக்குக் காட்சியளவை யாது? உதாரணத்துடன் கூறுமின்" என்றனர். அதற்கு வாதவூரர், "நாம் இப்பொழுதே அதனை வேற்றுமை நீங்க விளக்கிக் காட்டுவோம்; நீங்கள் தோற்றபின் உங்களுக்குத் தண்டனை யாது? சொல்மின்" என்றார். புத்தர்கள், "எங்களைச் செக்கில் இட்டு ஆட்டுவதே தண்டனை" என்று தாமே கூறினர். வாதவூரடிகள், உலர்ந்த கோமயத்தை (பசுவின் சாணத்தை) எரியும் நெருப்பிலிட்டு அது சிவக்குமாறு எரித்து அதனை எடுத்து, "எங்கள் இறைவனின் ஒளி வடிவமும், அவ்வொளி வடிவாகிய திருமேனியில் பூத்த திருவெண்ணீறும் இவ்வாறுதான் இருக்கும்" என்று அவையோர் முன் காண்பிக்க, உய்யும் வழியினை அறியாத புத்தர்கள் மன வூக்கத்தையும் உயிரையும் ஒருங்கே தோற்றனர். வாதவூரர் வென்றார்.

**ஊமைப் பெண்ணைப் பேசவைத்தல்**

இங்குப் புத்தர்கள் தோல்வியுற்ற செய்தியைக் கேட்டுப் பௌத்த சமயத்தில் அழுந்தியவனும், ஆத்தி மலர் மாலையைத் தரித்தவனுமாகிய **சோழன்**, கூவாத பெண் குயில்போலத் தான் பெற்ற ஊமைப் புதல்வியை உடன் அழைத்துக்கொண்டு தில்லை நகரின்கண் வந்தனன். அவன், "இதுவரையில் வென்றவர் தோற்றவர் யாவராயினும் ஆகுக; இன்று இவ்விடத்தில் என் மகளுடைய ஊமைத் தன்மையைத் தீர்த்தவரே வெற்றிபெற்றவர் ஆவர்" என்று தெரிவித்தான். புத்தர்கள் மானத்தை மேற்கொண்டு மணி, மந்திரம், மருந்து ஆகிய இம் மூன்றுமே தங்கள் புத்தர்பெருமான் என்று பன் முறையுங் கருதி, ஊமையைப் போக்க முயன்றனர். ஆனால் ஊமைத் தன்மை நீங்கவில்லை.

சோழவரசன் தன் ஊமைப் புதல்வியை வாதவூரடிகளின் முன் அழைத்துச் சென்று இருத்தி, "அடிகளே! இவள் ஊமைத் தன்மையைப் போக்கியருள வேண்டும்" என்று வேண்டினான். வாதவூரடிகள் பொன்னம்பலத்தில் நடித்தருளும் இறைவன் திருவடிகளை மனத்தில் சிந்தித்து அருட்பார்வையினால் அப்பெண்ணினை நோக்கி, இறைவனது வெவ்வேறாக

உள்ள புகழ்களை [1]வினுமொழியாகப் பாடிக் கேட்க, மன்னனின் மகள் அவற்றுக்கு **மறுமொழி** கொடுத்து வாய்திறந்து பேசி ஊமைத்தன்மை நீங்கினாள்[2]. அதனைக்கண்ட சோழ மன்னன், "சிவபெருமானே எல்லாத் தேவர்களுக்கும் தேவனுவான்" என்று தெளிந்தான்; பின்னர், சிவபெருமானின் திருவருளைப் புகழ்ந்து பாடியருளும் வாதவூரடிகளையும், தில்லை வாழந்தணர் மூவாயிரவவரையும் வீழ்ந்து வணங்கிப் புத்தர்களை, அவர்கள் முன்னர்க் கூறியவண்ணமே தண்டித்தான்; பொன்னம்பலத்தில் நடனம் செய்தருளும் கூத்தப்பெருமானைத் தரிசித்துத் துதித்து வணங்கிச் சைவனாயினன்.

**வாதவூரர் சோதியிற் கலத்தல்**

சிவபெருமான் திருவருளை விளக்கிக்காட்ட வந்த வாதவூரடிகள் பலநாள்வரை நடராசப்பெருமானின் திருவடிகளுக்குக் குற்றமற்ற மாணிக்கமாலைபோல் விளங்கும் **திருவாசகமாலையைச்** சாத்திப் பன்னாட்கள் வழிபட்டு,[3] அம்பலவாணனின் திருவடி நிழலை அடைந்து சிவானந்த ஒளியுடன் கலந்து நின்றருளினார்.

செய்யுள்—114

ஆகச் செய்யுள்—3105

---

1. திருவாதவூரர், தாம் வினவியவற்றையும், ஊமைப் பெண்ணின் விடைகளையும் "திருச்சாழல்" என்னும் திருப்பதிகமாகப் பாடியருளினார்; அது, முன்னிரண்டடி வினவாகவும் பின்னிரண்டடி விடையாகவும் இருக்கும்.

2. சோழ மன்னன் மகள் வாதவூரடிகளால் ஊமைத் தன்மை நீங்கப் பெற்றாள் என்பதைக் கேள்விப்பட்ட ஈழத்து அரசனும் தனது ஊமைப் பெண்ணை அழைத்து வந்து, வாதவூரடிகளை வணங்கித் தன் மகளின் ஊமைத்தன்மையைத் தீர்க்குமாறு வேண்ட, அவர் முன்போலவே அப் பெண்ணையும் பேச வைத்தார். பின்பு ஈழத்து அரசனும் அவனைச் சார்ந்த புத்தர்களும் சிவ வேடம் பூண்டு சைவராயினர் என்று திருவாதவூரடிகள் புராணம் கூறும்.

3. பின்னர், சீகாழி, திருவாரூர், திருவண்ணமலை, திருக்கழுக்குன்றம் முதலாய சிவத்தலங்களைத் தரிசித்துக்கொண்டு மீண்டும் தில்லையை யடைந்து, திருக்கோவையார் பாடி முடித்தார் என்பதையும் இங்கே கொள்க.

## 62. பாண்டியன் சுரந்தீர்த்த படலம்

**பாண்டிய மரபினர் ஆட்சி**

சகநாத பாண்டியனுக்குப் பிறகு வீரவாகு, விக்கிரம வாகு, பராக்கிரம வாகு, சுரபிமாறன், குங்கும வழுதி, கருப்பூர பாண்டியன், காருணிய வழுதி, புருடோத்தம பாண்டியன், சத்துரு சாதன பாண்டியன், கூன் பாண்டியன் என்பவர்கள் முறையே பாண்டி நாட்டை ஆண்டுவந்தனர்.

**கூன் பாண்டியனின் சிறப்பு**

இவர்களுள் [1] **கூன்பாண்டியன்** தனது புயவலிமையால் புகழ் மிகுந்து விளங்கினன். அவன், மேற்றிசை நாட்டினுக்கு அரசனுகிய சேரனையும், சூரியகுலத் தோன்றலாகிய சோழனை யும் எதிர்த்துப் போரிட்டுப் புறங்கண்டு சேர, சோழ, பாண்டி நாடு என்னும் மூன்றையும் ஒரு குடைக்கீழ் அரசுபுரிந்து வந்தான். அப்போது சேரன் பாண்டியனை நேரில் கண்டு யானை களையும், பொற்குவியல்களையும், மணிக்குவியல்களையும், பெண்கள் குழாத்தையும் கொடுத்து வணங்கித் தன் மலைநாட்டினைப் பெற்றுக்கொண்டு சென்றுன். [2] சோழமன்னனும் தான் பெற்றெடுத்த புதல்வியாகிய பிடியினை ஒத்த - உலகமெங்கும் ஒளி வீசும் சைவமாணிக்க விளக்கினை ஒத்த [3] **மங்கையர்க்கரசியாரைப்**

---

1. இக் கூன் பாண்டியனுக்கு "நெடுமாறன்" என்பது ஒரு பெயர் என்பதும். இவன் நெல்வேலிப் போரில் வெற்றி பெற்றவன் என்பதும், "நிறைக்கொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்" எனவரும் திருத்தொண்டத் தொகை அடியாலும் அறியலாம். (நெல்வேலி - புதுக்கோட்டையை அடுத்துள்ள இடம்) இப் பாண்டியன், 'மாறவர்மன் அரிகேசரி' என்ற பெயரும் உடையவன் ; இவன் கி. பி. 640 - 670 வரை ஆட்சிபுரிந்தவன்.

2. இச் சோழன் மணி முடிச் சோழன் என்னும் பெயர் உடையவன் ஆவன். இதனை, "மண்ணெலாம் நிகழ மன்னனுய் மன்னும் மணிமுடிச் சோழன்றன் மகளாம், பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி" என வரும் சம்பந்தர் தேவார அடிகளாலும் அறியலாம்.

3. மங்கையர்க்கரசியார்க்கு 'மானி' என்ற ஒரு பெயரும் உண்டு. "மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி" என்பது சம்பந்தர் தேவார அடி.

பாண்டியனுக்குத் தீக்கடவுள் முன்னே மணம்புரிந்து கொடுத்துத் தன் வளநாட்டைப் பெற்றுக்கொண்டு, மங்கையர்க்கரசியாருக்கு அளவற்ற செல்வங்களையும், பொன்னுடைகளையும், அணிகலங்களையும், விளை நிலங்களையும், பாங்கிமார்களையும், பிறவற்றையும் பாண்டியன் மனம் மகிழும் வண்ணம் முறைப்படி வரிசை அளித்தான்; பின்பு சிறந்த குணமுடையவரும், நூற் கேள்விகளில் வல்லவரும் ஆகிய [1] **குலச்சிறையார்** என்பவரையும் உடன் அனுப்பிவைத்தான்.

**பாண்டியன் குலச்சிறையாரோடு ஆட்சி புரிதல்**

திருமகளை மணந்துசெல்லும் திருமாலைப்போலக் கூன் பாண்டியன் மங்கையர்க்கரசியுடன் மதுரை நகரை வந்தடைந்தான். குலச்சிறையாரின் நற்குணங்களையும், நூற்கேள்வியின் சிறப்பினையும், நுண்ணறிவினையும், நல்லொழுக்கத்தையும் சீர்தூக்கிப் பார்த்து அவரைத் தன் முதல் அமைச்சராக ஆக்கிப் புவியினைப் பாதுகாத்துவந்தான்.

**சமணநெறியில் பாண்டி நாடு உழலுதல்**

முன்னர்ச் செய்த தீவினையின் பயனாகப் பாண்டியன் வலிய உடலில் கூனை அடைந்தான்போல் சமணர்களின் சொல் வலையிற் சிக்கிச் சமணனாகி நான்மறைச் சைவ ஒழுக்கத்தைக் கைவிட்டான் பாண்டியன் ஆருகத மதமாகிய சமண சமயத்தைச் சார்ந்ததால் பாண்டி நாடு முழுதும் சமணமாகிய இருளில் அழுந்தப் பெற்றுத் திருநீற்றுச் சாதன நெறியாகிய சைவசமயமும், வீடு பேற்றினை அடைவிக்கும் தவவொழுக்கமும் குன்றி வேதநெறி மறைந்தது. நாடு முழுதும் மயிர் பறிக்கப்பட்ட தலையும், பாயாகிய உடையும், பாசி படர்ந்த பல்லும், உறியிற் பொதிந்த கமண்டலமும், மயிற் பீலியும், [2] '**அத்தி நாத்தி**' என்று உரைக்கும் நாவும், அறிவினை

---

1. குலச்சிறையார் - இவர் ஊர் ஆளுடையார் கோவிலை அடுத்துள்ள மணமேற்குடி ஆகும். (குலச்சிறையார் - குலங்காப்பவர்.) இவர் சுந்தரரால் 'பெருநம்பி' எனப் பாராட்டிப் புகழப் பெற்றவர்.

2. அத்தி நாத்தி - இது சமணர்களின் மூல மந்திரம். அத்தி - உள்ளது: உண்டு. நாத்தி - இல்லாதது: இல்லை. எனவே உள்ளதை உடன் மறுத்து இல்லதென்று கூறுவதாம்.

இழந்த உள்ளம்போல ஆடையில்லாத அரையும் உடையதாய்ப் பொலிவிழந்த தவ்வை (மூதேவி) சூழ்ந்து தங்கினாற்போலச் சமண் எங்கும் சூழ்ந்து தங்கியது. அருந்தமிழ் வேந்தனாகிய பாண்டியனுக்குப் பற்றுக்கோடாக நின்று வீடுபேறாகிய செல்வத்தை அளிக்கவல்ல கற்பிற் சிறந்த மங்கையர்க்கரசியாரும், பெருந்தகை அமைச்சர் குலச்சிறையாரும் ஆகிய இருவர் மட்டும் எல்லாப் பேற்றினையும் அளிக்கும் திருநீற்றினை நீரிற் குழைத்து வெளியே தோன்றா வண்ணம் அணிந்து, சிவபெருமான் திருவடியில் சிந்தை செலுத்தி நின்றனர்.

**சைவம் தழைக்க இறைவனை வேண்டுதல்**

ஒருநாள் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் 'பாண்டி நாட்டினின்றும் புல்லிய சமணாகிய களையினைப் பிடுங்கி உண்மையை உரைக்கும் வேதநெறி என்னும் பயிர் தலையெடுத்து ஓங்கும் வண்ணம் செய்ய வல்லுநர் எவரோ?' என்று மனத்தில் பெருங் கவலை பூண்டு உள்ளம் நைந்து, கூடல் நாதனாகிய சோமசுந்தரக் கடவுளை அடைந்து வணங்கி நின்று, "கண்ணுவர் முதலிய முனிவர்களுக்கு அந்நாளில் வேதத்தின் பொருளை விளக்கமாக அருளிச்செய்த கடவுளே! கொடிய சமணாகிய வலையில் அகப்பட்டு அறிவினை இழந்த மன்னனின் மதியினை நல்வழியில் திருப்பி இப்போது உமது திருவடிக்கு அடிமை கொண்டு அருளுக" என்று குறையிரந்தனர்.

**அந்தணன் ஒருவனால் காழிப்பிள்ளையாரைப்பற்றி அறிதல்**

அப்போது விபூதி உருத்திராட்சங்களை அணிந்த திருவேடமுடைய **அந்தணன் ஒருவன்** சிதம்பரத்தினின்றும் சோமசுந்தரக் கடவுளை வணங்கும்பொருட்டு அங்கே வந்தனன். பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியாரும், மாண்புறு அமைச்சராகிய குலச்சிறையாரும் அவனைக் கண்டு, "அந்தணரே! எங்கிருந்து வந்தீர்?" என்றனர். அந்தணர், "சோழ மன்னன் அரசு புரியும் காவிரிநாட்டினின்றும் வந்தேன்" என்றான். அவர்கள், "அங்கு ஏதேனும் புதுமை உண்டோ? இருக்கின் அதனைக் கூறும்" என்று வினவினர். சிவபெருமானிடம் அன்பு பூண்ட அம் மறையவன், "புதுமை உண்டு! உண்டு! சோழநாட்டுச் சீகாழிப் பதியிலே வேத நூல்களில்

வல்ல அந்தணர் குலத்திலே தோன்றிய **சிவபாத விருதயர்** என்னும் பெயருடைய ஒருவர் உள்ளார். அவர் சமணமாகிய இருளினை ஓட்ட இளஞ் சூரியனைப்போல ஒரு புதல்வனைத் தந்தருளுமாறு பலநாள் தோணியப்பரின் திருவடியை நினைந்து தன் மனைவியாராகிய **பகவதி**யோடு தவஞ்செய்து வந்தார். அவருக்கு இறைவன் திருவருளால் உலகம் உய்ய இளங் கதிரவனைப்போல ஒரு புதல்வர் அவதரித்தார். அப் புதல்வருக்கு மூன்றும் வயதில், தோணிபுரத்து இறைவன் உமாதேவியாரோடு இடப வாகனத்தின்மீது எழுந்தருளி வந்து உமாதேவியாரின் திருமுலைப்பாலுடன் சிவஞானத்தையும் கலந்து குழைத்துப் பொற்கிண்ணத்தில் ஏந்திக் கொடுத்தருளினர். பிள்ளையார் அதனை வாங்கி அருந்தி அதனால் எண்ணிறந்த வேதங்களையும் சிவாகமங்களையும் அவற்றின் சார்பு நூலாகிய பிறகலைகளையும் ஓதாது உணர்ந்து, **சிவஞானம்** பெற்றார்;[1] நமது பற்றினை அறுத்தருளும் இறைவனது சிவஞானத்துடன் சம்பந்தம் செய்தலால் **திருஞானசம்பந்தர்** என்னும் திருப்பெயர் கொண்டு விளங்குகிறார். உண்மை வடிவாகிய ஞான வாணி அவருடைய நாவினை உறைவிடமாகக் கொண்டு விளங்க, அவர் மறைகளை எல்லாம் அரிய தமிழ்ப் பாடல்களாகக் கூறியருளுகின்றார். கோது நீக்கிய கருப்பஞ் சாற்றினைக் காய்ச்சிச் செய்த சருக்கரைக் கட்டியேபோல, எல்லையில்லாத மறைகளின் சிறந்த பொருள்களனைத்தையும் மாட்சிமைப்படத் தெள்ளத் தெளிந்தெடுத்துச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள் தோறும் சென்று சிவமணம் கமழச் செந்தமிழ்ப் பதிக மாலையை இறைவனுக்குச் சூட்டி வருகின்றார்.

"அவர், உமையொரு பங்கன் திருவருளினால் **பொற்றாளம், முத்துச்சிவிகை, திருச்சின்னம், முத்துப் பந்தர்** முதலான பிறவும் பெற்றுள்ளார்; மேலும் அவர் பாலையை நெய்தல் நிலமாக்கினார்; திருவீழிமிழலையில் **படிக்காசு** பெற்றார்; திருமறைக்காட்டில்

1. இங்கே, "சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம், உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம் தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்" எனவரும் பெரிய புராணச் செய்யுள் கருதற்பாலது.

வேதங்கள் வழிபட்ட திருக்கோயிலின் **கதவினை அடைக்குமாறு** பாடியருளினர். இவ்வாறு சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகள்தோறும் சென்று வணங்கித் திருப்பதிகங்கள் பாடி வருகின்ற ஆளுடைய பிள்ளையார் உங்கள் பாண்டி நாட்டிற்கும் சோமசுந்தரக் கடவுளைத் தரிசிக்க வருவார்" என்று கூறினன்.

### திருஞான சம்பந்தருக்கு ஓலை அனுப்புதல்

அந்தணன் கூறியவற்றைக் கேட்ட மங்கையர்க்கரசியாரும் பாண்டியனின் கண்போன்ற குலச்சிறையாரும் அப்பொழுதே சமணப் பேயினைத் துரத்தித் தமது தலைவன் (பாண்டியன்) உடலில் திருநீற்றினைக் கண்டு பூதி சாதனத்தால் அடையும் ஞானமயமாகிய வீட்டினைக் காணுதலில் விளையும் சிவானந்தத்தில் மூழ்கியவர் ஆயினர்; உடனே காழி நாட்டுத் திருஞான சம்பந்தருக்குத் தெரிவிக்க விண்ணப்ப ஓலை ஒன்று தங்கள் பெயரால் எழுதி அம் மறையவன் கையிற் கொடுத்து அவனை அனுப்பினர். பிறகு, அரசியாரும் அமைச்சரும் சோமசுந்தரக் கடவுளை வணங்கிக்கொண்டு அரண்மனையை அடைந்தனர்.

### பிள்ளையார் குலச்சிறையார் அனுப்பிய ஓலையைக் காணல்

மறைச் செல்வனாகிய அந்த அந்தணன் விரைந்து சென்று திருஞானசம்பந்தரைத் திருமறைக் காட்டில் கண்டு வணங்கிச் சமணர்களின் பொய்ந் நெறியாகிய இருளினைக் கடந்த பாண்டி மாதேவியாரும் குலச்சிறையாரும் அளித்த ஓலையினைக் காட்டி, அவ்வோலையில்; "சீகாழிப் பிள்ளையாரின் திருவடிகளை வணங்கி, அடியேன் குலச்சிறை கூறும் விண்ணப்பம்: தேவரீர், இவ்விடம் எழுந்தருளி வந்து சமணாகிய இருளினைப் போக்கி எமது மன்னனுக்குத் திருநீறு அளித்துத் தென் தமிழ் நாடாகிய பாண்டி நாட்டைத் திருநீற்று ஒளியில் விளங்க நிறுத்தி அடியேங்களைக் காத்தருளக் கடவீர்" என்று எழுதியிருந்த பாசுரத்தை எடுத்துக் கூறினன்.[1]

---

1. இங்கே, 'அரசியாரும் அமைச்சரும் ஞானசம்பந்தர் திருமறைக் காட்டில் எழுந்தருளியிருத்தலைக் கேள்வியுற்றுப் பரிசனங்களை விடுக்க, அவர்கள் சென்று வணங்கி விண்ணப்பத்தைத் தெரிவித்தனர்' என்று பெரிய புராணம் கூறுகிறது.

**ஞானசம்பந்தர் பாண்டிய நாட்டுக்கு எழுந்தருளல்**

கவுணியர் தலைவராகிய திருஞானசம்பந்தர் பாண்டி நாட்டிற்குப் புறப்பட எழுந்தருளினர். அப்போது அவருடன் அருகிலிருந்த திருநாவுக்கரசர் அதனை அறிந்து, ஞானசம் பந்தரை நோக்கி, "ஆ! இது தகாது; நீரோ சிறு குழந்தை; சமணரோ பாதகத்துக்கு அஞ்சாதவர்கள். தம்மோடும் பன்னாட் பழகிய எனக்கு அவர்கள் செய்த தீமை இவ்வள வென்று வரையறுத்துக் கூற இயலாது; ஆதலின், அங்கே போதல் கூடாது; உமக்கு இப்போது [1]நாள்களும் கோள் களும் வலியுடையனவாகவும் இல்லை" என்று சொல்லித் தடுத்தார். திருஞானசம்பந்தர் அது கேட்டு, "சமணர் செய்த கொடிய துன்பத்தினின்றும் இறைவன் அருளால் தப்பிய அப் பரே! எமது பெருமானின் திருவருளைப் பெருதவர் கூறுவது போல நீர் இவ்வாறு கூறுவது என்னே? நட்சத்திரங்கள், கிர கங்கள், விலங்குகள், பறவைகள், அசுரர்கள், பேய்கள், பூதங் கள் முதலியவெல்லாம் அம்மையப்பரின் ஆணை வழியிலே நடப் பனவாம். எம்பெருமான் நமது மனத்தையே கோயிலாகக் கொண்டு வீற்றிருத்தலால் அவை எவ்விதத் தீங்கும் புரியா" என்று கூறிக் [2]**கோளறு பதிகத்தை** ஓதி அவரை ஒருப்படுத்திக் கொண்டு புறப்பட்டார்.

**திருஞானசம்பந்தர் கூடற்பதியை நெருங்கல்**

முரசங்கள் முழங்கவும், சங்கும் திருச்சின்னமும் வாய்விட்டு ஒலிக்கவும், இருபுறங்களில் வெண்சாமரங்கள் அசையவும், முத்துப் பந்தலின்கீழ் முத்துச்சிவிகையின்மேலேறி அமர்ந்தருளிய இருளைப் போக்கும் இளஞ் சூரியன் என்று கண்டோர் சொல்லு மாறு சென்று, வழியிலுள்ள சிவத் தலங்களை வணங்கித் தேவாரத் திருப்பதிகம் பாடிக்கொண்டு, சோழ நாட்டினைக் கடந்து பாண்டி நாட்டினை அடைந்து வெம்மை நிறைந்த பாலை நிலத்தையும், முல்லை நிலத்தையும், குறிஞ்சி நிலத்தையும்

1. நாள் - நட்சத்திரம்: இங்குப் பரணி, கார்த்திகை, திருவாதிரை, ஆயிலியம், மகம், பூரம், சித்திரை, சுவாதி, விசாகம், கேட்டை, பூராடம், பூரட்டாதி என்ற நட்சத்திரங்கள் வழி நடைக்கு ஆகாவாம்.

2. இது "வேயுறு தோளிபங்கன்" என்று தொடங்கும் பதிகம்ஆகும்.

கடந்து மீனாட்சியம்மையை ஒரு பாதியில் உடைய சோமசுந்தரக் கடவுள் எழுந்தருளியிருக்கும் கூடலம்பதியினை நெருங்கிச் செல்வாராயினர்.

**ஞானசம்பந்தர் செல்லும் காட்சி**

புண்ணியத் திருவெண்ணீற்றினை அணிந்த தொண்டர் குழுவின் நடுவே புகலி வேந்தர் முத்துப் பந்தலின் கீழ் முத்துச் சிவிகையில் எழுந்தருளிச் செல்லும் காட்சி, திருப்பாற் கடலின் நடுவில் தோன்றி வானில் உலாவும் முழு வெண்மதியைப்போல் விளங்கியது.

**சிவனடியார்களின் கூட்டம் ஆரவாரத்துடன் செல்லல்**

சீகாழிப் பிள்ளையாரின் முன்னே செல்லும் பரிசனங்களுள் திருச்சின்னம் ஊதுவோர், "**எங்கள் பரசமய கோளரி வந்தான்; சமணாகிய இருள் கெட உதித்த ஞான சூரியன் வந்தான்**" என்று பல முறை கூறிச் செல்லும் ஆரவாரத்தைக் கேட்ட சமணர்கள் நேரில் வந்து, "நீங்கள் உங்களுடைய கடவுளைக் கும்பிட வந்தால் இந்த வெற்றிச் சின்னம் எதற்கு? இறுமாப்பு எதற்கு? நீவிர் எச்சமயத்தினரை வென்றீர்?" என்று கூறிச் சிவனடியார்களைத் தடுத்தனர்.[1]

**'வாதிட்டு வெல்ல அருள் புரிக' எனப் பிள்ளையார் வேண்டல்**

மதம் பிடித்த யானையைத் தாமரை நூலாலோ கட்டித் தடைப்படுத்த முடியும்? முடியாது! சீகாழிப் பிள்ளையார் அக் கீழ் மக்களின் தடையை நீக்கி, மதுரைத் திருநகரை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலினுட் புகுந்தார். சிவஞானத்தைத் திருமுலைப்பாலினோடும் குழைத்துப் பொற் கிண்ணத்திலே கொடுத்தருளிய அம்மையோடும், வெள்ளை யானையின் சாபத்தைத் தீர்த்தருளிய அருட் கடலாகிய அப்பனை ஞானசம்பந்தர் மும்முறை வலம் வந்து வீழ்ந்து வணங்கிச் சிவானந்தப் பெருக்கில் அழுந்தி நின்று, "கூற்று வனை உதைத்த கோவே! அடியேன் சமணர்களோடு வாது செய்யும் வன்மை பெறத் திருவுளம் செய்தி" என்று அதனைக்

1. இங்கே ஞானசம்பந்தர் சிறிதுபோது தங்கிப் புறப்பட்டதால் இவ்விடம் 'பிள்ளையார் பாளையம்' எனப் பெயர் பெறும். இது மதுரைக்குத் தெற்கே உள்ளது.

குறித்துக் கூறும் [1] திருப்பதிகம் பாடி, வேண்டிக்கொண்டு திருவருளைப் பெற்று வெளியே வந்தார்.

**ஞானசம்பந்தர் வாகீசர் திருமடத்தில் எழுந்தருளல்**

அப்போது காழிப் பிள்ளையாரை ஐம்பொறிகளையும் வென்ற [2] **வாகீச முனிவர்** என்னும் தவ முனிவர் ஒருவர் வந்து கண்டு தமது திருமடத்தில் எழுந்தருளுமாறு வேண்டி அழைத்தார். ஞானசம்பந்தரும் அதற்கு உடன்பட்டுச் சென்று அம் மடத்தில் தங்கிப் பகற் பொழுதில் திருவமுது செய்திருந்தார். அன்றைய இரவில் அமணர்கள் செய்யப் போகும் தீய செயலையும், தன் மரபில் தோன்றிய மங்கையர்க்கரசியின் வருத்தத்தையும் காணச் சகியாதவன்போலச் **சூரியன்** மேற்குக் கடலில் அழுந்தினன். சைவத்தினிடம் பகைமை கொண்ட சமணர்கள் புரியும் வஞ்ச வினைக்கு இடமாகி ஒன்றுபட்டு நட்புச் செய்ய வந்தாற்போல இருள் வந்து பரவியது. அவ்விரவின்கண் அளவில்லாமல் முளைத்த விண்மீன்களின் கூட்டங்கள் சமணர்களின் மயிர் பறிக்கப்பட்ட தலைகளில் புண்பட்டு எழுந்த கொப்புளங்களைப்போல் தோற்றம் அளித்தன.

**சமணர்கள் சம்பந்தர் தங்கிய திருமடத்தில் தீயிடல்**

வேதநெறியில் செல்லும் சைவ இளஞ் சிங்கமாகிய திருஞானசம்பந்தர் வரவையறிந்த எண்ணுயிரஞ் சமணரும் ஒருங்கு திரண்டு மதுரைக்கு வந்து, அபிசாரவேள்வி இயற்றித் தீக்கடவுளை அழைத்து, "எமது பகைவரின் இருப்பிடத்தை அழுது செய்து வருவாயாக" என்று பணித்தனர். தக்கன் வேள்வியில் கையறுபட்ட தீக்கடவுள் அவர்கள் விருப்பத்திற்கு இணங்காமல் அஞ்சிநின்றனன். ஆகவே சமணர் தாமே தீயினைக் கையில் எடுத்துச்சென்று திருஞானசம்பந்தர் எழுந்தருளியிருக்கும் திருமடத்தில் இட்டார்கள். அக்கினி புகைந்து எழுவதைக் கண்டு அடியார்கள் காழிப்பிள்ளையாரிடம் விரைந்துசென்று அறிவித்தனர். ஆளுடைய பிள்ளையார் அத்தீயினை நோக்கி,

---

1. இப்பதிகம், "காட்டு மாவதுரித்து" என்று தொடங்குவதாகும்.

2. இவர் ஒரு சிவயோகியார்; திரிகாலங்களிலும் மீனாட்சி சுந்தரேசுவரரைத் தரிசிக்கும் அன்பர். இவரை, "ஞானமிர்தம்" என்னும் சைவ சித்தாந்த நூல் செய்த பெரியார் என்றும் கூறுவர்.

"சமணர்களுடைய பொய்மொழியைக் கைக்கொண்டு பழைய முறைகளைக் கைவிட்ட பாண்டியனைப் பையச் சென்று பற்றுக" என்று கூறிச் சோமசுந்தரக்கடவுள்மேல் தமிழ் மறைப் பதிகம்[1] பாடி விடுத்தார்.

**பாண்டியனை வெப்புநோய் பற்றுதல்**

உடனே அத்தீயானது பாண்டியனை அடைந்து வெப்பு நோயாகி (சுரநோயாகி)ப் பற்றியது. அதனால், அவன் அணிந்த பல அணிகலன்களும் பொரிந்து தூளாயின; சந்தனமும், கூட்டு வர்க்கமும், மாலையும் கருகித் தீய்ந்தன; படுத்திருக்கும் படுக்கையும் சருகாகியது. அப்பாண்டியன் பதைத்தனன். பாண்டியனின் நிலைமையைக் கண்ட மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மனத்தளர்ச்சியுற்று, நல்ல மருத்துவ நூல் வல்லாரை அழைத்துப் பலவித மருந்துகளைக் கொடுத்தனர்; அம்மருந்துகளாலும், மந்திரித்தலினாலும் வெப்பம் மேலும் மேலும் முதிர்வதே அல்லாமல் அவ்வெப்புநோய் தணிவதைக் கண்டிலர்; பின்னர்ச் சமணர்களை அழைத்துவந்து விடுத்தனர்; அவர்களனைவரும் தமது தவவன்மையினாலும் மருந்தினாலும் பார்த்தும் அந்நோய் தணியாதாக மிக்க கவலையுற்று இருந்தனர். இரவும் கழிந்தது. சூரியன், தன் குலத்தைச் சேர்ந்த சோழனுடைய மருமகனாகிய பாண்டியனை விடாது பற்றிய வெப்புநோயைக் கேள்வியுற்றுக் கரிய இருட் போர்வையைத் தன் கைகளால் எடுத்துவிட்டு அகங்கையால் தொட்டுப் பார்ப்பதற்கு வந்தாற் போலக் கீழைக் கடலின்கண் வந்து தோன்றினான்.

**தேவியாரும் அமைச்சரும் அரசனிடங் கூறல்**

அப்போது சைவமாகிய பயிரினை வளர்த்தற்கு வேலியாய் விளங்கிய சைவ மணிகளாகிய மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் வேந்தனை நோக்கி, "காலனுடைய பாசத்தையுஞ் சுடும் இக் கொடிய சுரநோய், சீகாழிப் பிள்ளையாரால் தீர்க்கப்படுமே அல்லாமல் வேறு ஒருவராலும் தீராது" என்றனர். அதற்குச் சமணர்களின் சார்பினை விட்டு நீங்காத பாண்

1. இப்பதிகம், "செய்யனே திரு வாலவாய் .... அமணர்க்கொளுவுஞ்சுடர் பையவே சென்று பாண்டியற் காகவே" என்று தொடங்கும் திருப்பாட்டை முதலாக உடைய திருப்பதிகம் ஆகும்.

டியன், "இப்பொழுது நீங்கள் சொல்லும் சைவர்[1] திருநீறிட்டு என்னைப் பார்ப்பது தகுமோ?" என்றான். அவர்கள் பாண்டியனை வணங்கி, "ஐயனே! எத்திறத்தினாலாவது தாங்கள் நோய்தீர்ந்து உய்யவேண்டும் அல்லவா? இதனைக்காட்டிலும் உறுதி பயப்பது யாது உளது?" என்றனர். பாண்டியன், "அவரை இங்கே அழையுங்கள்" என்று உடன்பட்டான்.

**நகரை அலங்கரித்துப் பிள்ளையாரை அழைத்துவருதல்**

மன்னவனின் இசைவினைக் கேட்டு மட்டற்ற மகிழ்ச்சி கொண்ட குலச்சிறையார், மதுரைத் திருநகரைத் திருவிழாப் பொலிவுற மங்கலச் செயல்களால் எங்கும் அழகுபெற அலங்கரித்துக் காழிப்பிள்ளையார் எழுந்தருளியிருக்கும் திருமடத்தை விரைந்து அடைந்தார்; அந்தணனால் கூறப்பட்ட அன்று செவியினால் பருகிய நிறைந்த [2]**ஞான அமிழ்தினை** இன்று கண்களால் பருகிக் கண்பெற்ற பயனை அடைந்து, மகிழ்ந்து அருகிற் சென்று வீழ்ந்து வணங்கினார். அப்போது சீகாழிப் பிள்ளையார் அமைச்சரை நோக்கி, "தீய அமணர்களின் சூழ்ச்சியை வென்ற சிந்தையையுடையீர்! எழுந்திருப்பீராக" என்று கூறியருளினார். உடனே குலச்சிறையார் எழுந்து கைகுவித்து நின்றார். பாண்டிமாதேவியாரும் வந்து வணங்கி ஒருபுறம் நின்றார். ஞானவமுதுண்ட பிள்ளையார் இருவரையும் நோக்கி, "நலமுற இருக்கின்றீரோ?" என்று வினவினார். அதற்கு அவர்கள் "நுமது அருளைப் பெற்றவர்களுக்கு முக்காலத்திலும் தீங்கு ஏது?"[3] என்று கூறிப் பின்னர், "இன்று உங்கள் திருவருளினால் சமணர்கள் அழியவும், பாண்டிநாடு திருநீற்றினால் உய்திபெறவும் ஏதுவாய்ப் பாண்டியன் உடலில்

---

1. சமண சமயத்தவர் சிவ வேடத்தாரைக் காண நேர்ந்தால், 'கண்டு முட்டு' என்பர், சைவம் பற்றிப் பேசும் வார்த்தைகளைக் காதில் கேட்க நேர்ந்தால், 'கேட்டு முட்டு' என்பர்.

2. இங்கே, "ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை, வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத், தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும், கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்" எனவரும் பெரிய புராணச் செய்யுள் நோக்கற்பாலது.

3. இங்கே, "சென்றகா லத்தின் பழுதிலாத் திறமும் இனியெதிர் காலத்தின் சிறப்பும், இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனால் எற்றைக்

வெப்புநோய் வந்தடைந்தது; அதனைத் தீர்த்தருள வேண்டும்'' என்று கூறி, மீண்டும் திருவடிகளில் வீழ்ந்து குறையிரந்தனர். '' அங்ஙனமே ஆகுக'' என்று காழிப்பிள்ளையார் கூறியருளினார்.

தன் மருமானின் நோயைத் தணிக்கக் கருதிச்செல்லும் திங்களைப்போல ஞானசம்பந்தப் பிள்ளையார் முத்துச் சிவிகையில் ஏறியருளிப் பாண்டியனின் அரண்மனைக்குச் செல்வாராயினார். வாயில்கள்தோறும் தூபம், மங்கல விளக்கு, பூரண கும்பம், கொடிகள், சுண்ணப்பொடிகள் முதலியன நிறையவும், திருச்சின்னங்களின் ஒலியாகிய அமுதினைப் பாண்டியன் கேட்டுச் சுவைக்கவும், சமணர்களாகிய யானைகட்குச் சிங்கம் போன்ற காழிப்பிள்ளையார் பாண்டியனின் மாளிகையை அடைந்தார்; அங்கே அரசன் பக்கத்தில் இடப்பட்டிருந்த ஒரு கதிர்மணித் தவிசின்கண் எழுந் தருளினார். அப்போது கூன் பாண்டியன் அவரை நோக்கினான். அவருடைய திருவருட் பார்வையினால் பாண்டியன்சிறிது தெளிவு அடைந்து, தடாகத்திலே இருக்கும் செந்தாமரைமலர்போல முக மலர்ச்சி பெற்று, காழிப் பிள்ளையை நோக்கி, '' பாவியேனுடைய பிணியைத் தீர்த்து அடியேனை அடிமைகொண்டருள்க'' என்று வேண்டினான்.

**சமணர்கள் அரசனை வேண்டுதல்**

சமணர்கள் அம்மொழியினைக் கேட்டு உள்ளம் புழுங்கி, '' கலைகளில் வல்ல பாண்டியனே! உம்முடைய வலப்புறத்து நோயை இவரும், இடப்புறத்து நோயை நாங்களும் தீர்க்கும் படி கட்டளையிடுவாயாக'' என்றனர். அரசன், அவ்வண்ணமே செய்யுங்கள்'' என்று உடன்படுமுன்னரே, '' சமணர்கள் அருகதேவனை நினைந்து கையிலுள்ள மயிற்பீலியினால் தடவினர்; கமண்டலத்து நீரை எடுத்துத் தெளித்தனர்; அவற்றால் அந்நோய், நெய்சொரிந்த நெருப்புப்போல் முன்னிலும் மிகுந்து எழுந்தது. சமணர்கள் மானமிக்குடையவராய் இறுமாப்பு அழிந்து வாளா இருந்தனர்.

---

குந் திருவரு ளுடையேம், நன்றியில் நெறியில் அழுந்திய நாடும் நற்றமிழ் வேந்தனும் உய்ந்து, வென்றிகொள் திருநீற் றொளியினில் விளங்கும் மேன்மையும் படைத்தனம் என்பார்'' என வரும் பெரிய புராணச் செய்யுள் சிந்திக்கற்பாலது.

**ஞானசம்பந்தர் பாண்டியனின் நோயைத் தணித்தல்**

அப்போது காழிப்பிள்ளையார் பாண்டியனின் நோயினைத் தணிக்கும்பொருட்டுத் திருநீற்றுப் பையிலுள்ள விபூதியினைக் கையில் எடுத்தார். அதுகண்டு சமணர்கள் "இது மாய நீறு" என்று கூறித் தடுத்தனர். பிள்ளையார் அதனை விடுத்து, "கூடற்பெருமானின் திருமடைப்பள்ளியிலுள்ள சாம்பலை அள்ளிக்கொண்டு வாருங்கள்" என்று கூறினர். பாண்டியனின் பணியாளர் அதனைக்கேட்டு உடனே சென்று கையில் அள்ளிக்கொண்டு வந்தனர். கவுணியர்பெருமான் அதனைத் தன் கையில் வாங்கி, "மருந்தும், மந்திரம் முதலிய அனைத்தும் வேதத்திலுல் உரைக்கப்படுவதும், பேரின்பத்தையுடைய வீடுபேற்றினை அளிப்பதும், போகமாயுள்ளதும், பொருளாயுள்ளதும் திருவாலவாயான் திருநீறே" என்று சிறப்பித்துத் [1] **திருநீற்றுத் திருப்பதிகம்** ஓதி, பாண்டியனின் உடம்பின் வலப் புறத்தில் இட்டுத் தடவினுர். உடனே கொடிய வெப்புநோய் முற்றத்துறந்த சிந்தையோரின் சினம்போல் விரைந்து தணிந்தது. அதனுல், அரசனது வலப்பாகம் பனிநீர் கலந்த சந்தனத்தைக் குழைத்துப் பூசினுற்போலக் குளிர்ச்சி அடைந்தது.

**கூன்பாண்டியன் சவுந்தரிய பாண்டியனுகிச் சைவனுதல்**

பாண்டியனுக்குச் சமணர்களின் கைபட்டவுடன் வெப்பு நோயால் துன்பம் மேலிட்டதும், கவுணியர் பெருமான் திருக்கரம் பட்டவுடன் வெப்புநோய் நீங்கி இன்பம் மேலிட்டதும் இருவினைகளும் தம்முள் ஒத்தனபோல் விளங்கின. [2]

பொழிந்த தண்மதுத் தார்புனை பூழியர் கோனுக்(கு)
இழிந்த செய்கையர் கைதொட எரியிடு சுரத்தால்
கழிந்த துன்பமுங் கவுணியர் கைதொடச் சுரந்தீர்ந்(து)
ஒழிந்த இன்பமும் **இருவினை யொத்தபோல்** ஒத்த.

---

1. இது, 'மந்திரமாவது நீறு' என்று தொடங்கும் பதிகம்.

2. இங்கே, "மன்னவன் மொழிவான் என்னே! மதித்தஇக் காலமொன்றில், வெந்நரகொருபா லாகும்; வீட்டின்பம் ஒருபா லாகும்; துன்றுநஞ்(சு) ஒருபா லாகும்; சுவையமு(து) ஒருபா லாகும்; என்வடிவொன்றில் உற்றேன் இருதிறத்தியல்பும் என்பான்" எனவரும் பெரிய புராணச் செய்யுள் உன்னற்பாலது.

பாண்டியன் காழியர் பெருமானைப் பார்த்து, "ஐயனே! இவ் வெப்புநோய் பொறுத்தற்கரியது! பொறுத்தற்கரியது! சமணர்களின் சார்பாயுள்ள குற்றத்தினின்று நீங்கி அடியேன் உய்யவேண்டுமானால், இடப்புறத்து நோயையும் அடிகளேநீக்கி யருளவேண்டும்" என்று குறையிரந்து வேண்டினான். ஆளுடைய பிள்ளையார் இடப்பாகத்திலும் முன்போலவே இறைவன் வெண்ணீற்றினைத் தொட்டு அங்கையால் தடவியவுடனே முன்னரே இருந்த **உடற்கூனுடன் வெப்புநோயும்** நீங்கி மீனக்கொடியோன் குற்றமற்ற சூரியனைப்போல விளங்கினான். பாண்டியர் பெருமான், கூன் நீங்கப்பெற்ற ஒரு காரணத்தால் [1]'**சவுந்தரிய பாண்டியன்**' என்னும் பெயரைப் பெற்றான்; கவுணியர் கோன் [2] திருநோக்காலும், பரிசத்தாலும், திருவார்த்தையாலும், அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் திருவைந்தெழுத்தையும் உபதேசிக்கப்பெறுதலை அடைந்த விளக்கத்தாலும் சமணர்களின் நெறியினை விடுத்துப் பழையவேத நெறியினைக் கைக்கொண்டு புனிதனானான்.

அன்னதொரு காரணத்தால் **சவுந்தரிய**
**பாண்டியன்**என் றாகி அன்ன
தென்னவர்கோன் கவுணியர்கோன் திருநோக்கால்
பரிசத்தால் தெருட்டும் வாக்கால்
பொன்னடிதாழ்ந்(து) ஐந்தெழுத்தும் உபதேசப்
பேறடைந்த பொலிவால் வஞ்சம்
துன்னமணர் நெறியிகழ்ந்து தொல்வேத
நெறியடைந்து தூயன் ஆனான்.

செய்யுள்—68
ஆகச் செய்யுள்—3173

---

1. இச் சவுந்தரிய பாண்டியனுக்குச் 'சுந்தர மாறன்" எனவும் ஒரு பெயர் உண்டு.

2. இங்குத் திருநோக்கு நயன தீட்சையாகவும், பரிசம் பரிச தீட்சையாகவும், திருவார்த்தை வாசக தீட்சையாகவும் கொள்ளலுமாம்.

## 63. சமணரைக் கழுவேற்றிய படலம்

### சைவமணிகள் சமண் இருள்போக்க வேண்டுதல்

சவுந்தரிய பாண்டியனின் தேவியாராகிய மங்கையர்க்கரசி யாரும், மந்திரியாகிய குலச்சிறையாரும் சீகாழிப்பிள்ளையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "எங்கள் மன்னவனுடைய வெப்புநோயையும், உடல்வளைவையும், பாசத்தினையும் போக்கி யருளினீர்! இன்னும் அடியேங்கள் விரும்பும் குறையினை முடித்தருள வேண்டும்; இப்பாண்டிநாடெங்கும் சமண் காடு மூடிச் செறிந்துள்ளது; அதனை இப்பொழுதே வெட்டியழித் தருள வேண்டும்" என்று இரந்து வேண்டினர்.

### வாதுசெய்ய இறைவன் திருவுளத்தை அறிதல்

அப்போது திருஞானசம்பந்தர், "திருவாலவாயுடையார் திருவுள்ளக்கிடையை அறிவேம்" என்று கூறிப் பாண்டிமா தேவியாரோடும் குலச்சிறையாரோடும் புறப்பட்டுத் திருக் கோயிலை அடைந்து, பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, அங்கயற்கண்ணியாரை இடப்பாகங்கொண்ட சோமசுந்தரக் கடவுளைத் தாழ்ந்து வணங்கி, "உடலினை வருத்தி, எப்பொழு தும் வஞ்சகமே பெருகத் தவம்புரியும்பேய்க்குணமுடையவரும், இம்மை மறுமைப் பயன்களை இகழ்ந்தவரும், வேதங்களையும், அதன்கட் கூறப்படும் வேள்விகளையும், நிந்தனைபுரியும் தீயவரு மாகிய சமணர்களைத் தண்டிக்கத் திருவுளம்புரிய வேண்டும்" என்று வேண்டினர்.

காயமே ஒறுத்து நாளுங் கைதவம் பெருக நோற்கும்
பேயரை இம்மை யோடு மறுமையும் பே(று)அற் றாரை
நீயுரை செய்த வேத வேள்வியை நிந்தை செய்யும்
தீயரை ஒறுத்தல் செய்யத் திருவுளஞ் செய்தி என்றார்.

அப்போது சோமசுந்தரக் கடவுள் வானின்கண் அசரீரி யாய்த் தோன்றி, "அன்பர்களே! உங்கள் கருத்திற்கு இசைந் ததே எமக்கும் வேண்டிய உடன்பாடு; அதனால் நீங்களே வெல்லத் தக்கவர்; சமணர் தோல்விபெறத் தக்கவர்; ஆதலால், நீங்கள் பாண்டியன் அவையினை அடைந்து சமணர்களுடன்

வாதம் புரிமின்; அவர்கள் தோல்வியுற்றுக் கழுவில் ஏறி இறந்துபடுவர்'' என்று கூறியருளினர். அதனைக் கேட்டுப் பிள்ளையார் சோமசுந்தரக் கடவுளை வணங்கிக்கொண்டு தம் திருமடத்திற்குச் சென்றருளினர். பின்பு, பாண்டிமாதேவியாரும் அமைச்சரும் தத்தம் மாளிகைக்குச் சென்றார்கள்.

**சமணக் காட்டினை அழிக்கப் பாண்டியனின் உடன்பாடு**

மறுநாள் காலையில் பாண்டிமாதேவியாரும், குலச்சிறையாரும் ஆளுடைபிள்ளையார் திருமடத்திற்குச் சென்று, ''சமணர்களை வெல்லுதற்குரிய வழி யாது?'' என்று ஆராய்ந்து தெளிவாராயினர்; பிறகு காழிப் பெருந்தகையாரை வணங்கி, பாண்டியன் அவைக்கு அவரை அழைத்துச்சென்று, ''செங்கோலையுடைய அரசே! நமது நாடு முழுதும் சமணக்காடுகளே நிறைந்துள்ளன; அவற்றை வேருடன் அகழ்ந்து எறிந்தால் தான் சைவப்பயிர் ஓங்கி வளரும்'' என்று கூறினர். அரசனும் அதுகேட்டு, ''அப்படியே செய்க'' என்று அனுமதித்தான். ஞானசம்பந்தர் சோமசுந்தரக் கடவுளின் உடன்பாட்டையும் நினைந்து, ''பாண்டிநாடு உய்திபெறுதற்குரிய காலம் இதுவே'' என்று மனமகிழ்ந்து அங்கு இருந்தருளினர்.

**சமணர்களை அவர்களின் மனைவிமக்கள் இகழ்ந்து கூறுதல்**

அப்பொழுது சமணர்களை அவர்களுடைய மனைவி மக்கள், சூழ்ந்து கண்களில் நெருப்புப்பொறி சிதற நோக்கி, ''பாண்டியனின் வெப்புநோயைத் தீர்க்கும் வலி இன்றி மழலைச் சொல்லையுடைய ஒரு பிள்ளைக்குத் தோல்வியடைந்தீர்கள்! அதன்மூலம் அருகக் கடவுளின் அடியார் யாவருக்கும் கொடிய பழியினை விளைத்தீர்கள்! பாண்டியன் சாம்பலைப் பூசும் சமயத்தில் புகுந்து பாம்பினை அணிந்த சிவனே கடவுள் என்று கொண்டு உங்கள் சமயத்தை இகழ்ந்து கைவிட்டான்! இனி உங்களுக்குப் பற்றுக்கோடு ஏது?'' என்று இடித்துக் கூறினர். அம்மொழியினைக் கேட்டபின்னரும் சமணர்கள் ஆளுடைய பிள்ளையாருடன் வாதுபுரிய எழுந்தனர்.

**மனைவியர் தாம் கண்ட தீய கனவைக் கூறித் தடுத்தல்**

அதுகண்ட அவர்களின் மனைவிமார்கள், ''நீங்கள் பெற்ற வெற்றி போதும்; செல்லவேண்டாம்'' என்று தடுத்து நிறுத்

தினர். "இஃது உங்களுக்கு வெற்றிதரும் காலம் அன்று; நேற்று இரவு நாங்கள் துன்பக்கடலில் மூழ்கக் கொடிய கனவு கண்டோம்; அதனைக் கேளுங்கள்: நம்முடைய [1]பாழிகளிலும், பள்ளிகளிலும் ஓயாமல் எங்கு நோக்கினும் சடையும், இடையில் முஞ்சிப்புல்லும், சாம்பல் பூசிய மேனியும், சூலப்படையும், புலித்தோல் ஆடையுங்கொண்ட சிலர்[2] வந்து வந்து உலாவுதலைக் கண்டோம்; கன்னிப்பருவத்தில் துறவுபூண்ட **அன்னங்களும்**, மணமானபின் நாயகன் இருக்கும்பொழுதே துறவு பூண்ட **ஆரியாங்கனைகளும்**, கைம்பெண்ணாகியபின் துறவுபூண்ட **அக்குரைகளும்** வாழும் தவப்பள்ளிகளனைத்தையும் யானை ஒன்று வந்து அழிக்கக் கண்டோம்; முண்டிதஞ்செய்த தலையராய் முறுக்கிய உறியில் குண்டிகையை ஏந்திய கையராய்க் கோவணங் கட்டிய கோலினைத் தாங்கிய பிடரியராய்ச் சிவன் பெயரைக் கூறும் நாவினராய் உள்ள பலர் எங்கும் உலாவுதலைக் கண்டோம்; கடுங்கோபங்கொண்ட ஒரு யானைக்கன்று வந்து நமது அடிகள்மார் கூட்டங்களை எல்லாம் வளைத்துக்கொண்டு துரத்தி, மலர்ந்த பூங்கொத்துக்கள் அலையவும், வண்டுகள் ஒலித்து நீங்கவும் பாய்ந்து அசோகமரத்தினை வேரோடும் பறித்தலையும் கண்டோம்; நீங்கள் யாவரும் மூவிலைச்சூலத்திலும், கழுமுனையிலும் ஏற, அதனைக்கண்டு நாங்கள் மார்பில் அடித்துக்கொண்டு கூந்தல் சரியவும் அழுது புலம்பவும் கனவு கண்டோம்; அருந்திறல் வாய்ந்த இந்திரசாலமும், மோகனம், ஆகருடணம், வசியம், அதிரிச்சியம், அஞ்சனம், தம்பனம், வாதம் முதலாய கலைகளும் இதுபோது வந்து ஒன்றும் உங்களுக்குத் துணைபுரியவில்லையே! அவை கள்வரால் கொள்ளைகொள்ளப் பட்டனவோ? நெருப்பிலே வீழ்ந்து வெந்துபட்டனவோ? வெள்ளத்தால் கொண்டு போகப்பட்டனவோ? காவலில் வைக்கப்பட்டுக் கிடக்கின்றனவோ? கூறுமின்.

"முன்னர் ஒரு வேள்வியினை நம்முடைய அடிகள்மார் வளர்த்து அதனின்றும் யானையையும், பாம்பையும், பசுவை

---

1. பாழி - சமண முனிவர் இருப்பிடம். பள்ளி - அருகன் கோயில்; தவச் சாலையுமாம்.

2. இவர்கள் பாசுபத சைவ வேடம் பூண்ட தவசிகள் ஆவர்.

யும் விடுத்துப் பட்டபாட்டையும் அறிவீர்கள்! நீங்கள் பாண்டியனுடைய வெப்பு நோயையும் தணித்தீரில்லை; இனி நீங்கள் செய்யப் போகும் காரியம் யாதாய் முடியுமோ? அதனையும் சிறிது எண்ணிப் பாருங்கள்; இன்றைக்கு வாதஞ் செய்யச் செல்லாதீர்கள்'' என்று கூறித் தடுத்தார்கள்.

### சமணர்கள் தம் மனைவியரின் சொல்லைத் தட்டிப் புறப்படல்

அச் சமணர்கள் தங்கள் மனைவியர்களின் சொல்லைக் கேளாது புறப்பட, உடனே அம்மகளிர் அவர்களின் கையைப் பிடித்திழுத்துத்தடைசெய்து நிறுத்தவும் அவர்கள், ''**பெண்டிர் சொல்லைக் கேட்பது பழுதாகும்**'' என்று கருதித் தங்கள் மனைவியர்கள் அறியாதவாறு தீவினையின்வழியே மறைந்து சென்றனர். மீண்டும் மனைவிமார்கள் தங்கள் கணவர்களைப் பார்த்து, ''எங்கள் சொல்லைக் கேளாது செல்கின்றீர்! உங்களுக்குத் துன்பம் வரக் கடவது'' என்று சபித்தனர். அழியும் காலத்தை நெருங்கிய அச் சமணர்கள் அதற்கும் அஞ்சாமல் புறப்பட்டுச் சென்றனர்.

### சமணர்கள் அரச சபையினை அடைதல்

அப்போது, 'பறவைகளும், பல தீச் சகுனங்களும் போகன்மின்' என்று தடுக்கவும், அவற்றையும் பொருட் படுத்தாமல் சமணர்கள் யாவரும் நகர்ப்புறத்தே சென்று ஓர் இடத்தில் கூடி, ''வெல்லும் சூழ்ச்சி யாது?'' என்று சிந்தித்தவராகி, ''நாம் அரசனைக் கண்டு இதனைக் கூறி அவன் ஆணைபெற்றுப் பகைவனை வாதினுல் வெல்லுவோம்'' என்று தம்முள் முடிவு செய்து அரசன் சபைக்குச் செல்லலாயினர். அப்போது ஆளுடைய பிள்ளையார், ஆலவாய்ப் பெருமானை வணங்கிக்கொண்டு தம் திருமடத்திற்கு வந்துகொண்டிருந்தார். கதிரவனை இருள் சூழ்ந்தாற்போலப் பிள்ளையாரை அச் சமணர் கள் வந்து வழி நடுவில் மறித்தனர். தம்மை மறித்த சமணர்கள் பின்னேவரக் காழிப் பிள்ளையார் முன்னே பாண்டியன் அவை யினை அடைந்து அரசனுல் காட்டப்பட்ட சிங்காதனத்தின்மேல் ஒளி வீசும் சிவந்த இளங் கதிரவனைப்போல் ஏறி வீற்றிருந் தருளினர்.

**சமணர்கள் பிள்ளையாரைப் பல பேசி வாதுக்கு அழைத்தல்**

சமணர்கள் மனம் பொருதவர்களாய்ப் பிள்ளையாரை நோக்கி, "இன்னும் மழலை மொழி மாருத சிறுவனே! 'காக்கை ஏறப் பனம்பழம் விழுந்தாற்போல உன்னுடைய மந்திர வித்தையின் நன்மையினாலே அரசனைப் பற்றிய வெப்பு நோயை 'நீக்கினேம்' என்று கருதி நீ செருக்கினை யடையத் தகுமோ? நத்தையும், சங்கும், நீர் வண்டும் ஊர்ந்து செல்லுகின்ற கீறு எழுத்தாக வந்து அமைந்தாலும் அமையும். அது போல நின் கையினின்று சிந்திய சாம்பலும், சிறு சொல்லும் முறையே மருந்துபோலவும் மந்திரம் போலவும் பாண்டியனின் வெப்பு நோயை ஒழித்தன. ஆதலின், உங்கள் மந்திரத்தை ஒரு பனையேட்டில் எழுதக் கடவீர்! வேறொரு பனையேட்டில் எங்கள் மந்திரத்தையும் எழுதுவோம்; இவ்விரண்டு ஏடுகளையும் தீயிலிடுவோம்; வெந்த ஏடு தோல்வியடைந்தது என்றும், வேகாத ஏடு வெற்றி பெற்றது என்றும் கொள்வோம்; இவ் வாதம் சிவன் உறையும் பதிகளில் செய்யத் தக்கது அன்று; அச் சிவன் நடுநிலைமை தவறி நுமது சார்பில் நின்று எங்களுக்குக் கெடுதி செய்வான்; ஆதலின், நாம் நகரினின்று வெளியே சென்று வாது புரிவோம்" என்று கூறி வாது புரிய அழைத்தனர். காழிப் பிள்ளையாரும் அரசனும் அதற்கு இணங்கினர்.

**அனல் வாதம் புரிதல்**

சமணர்கள் முன்னர் எழுந்து, மதுரைத் திருநகருக்கு வெளியே சென்று கீழ்த் திசையில் ஒரு தீக்குழி தோண்டி மரங்களை வெட்டி நிறையப் போட்டு அதில் நெருப்பை மூட்டினர்; அந் நெருப்பைத் தமது மனைவியர்கள் வயிற்றிலும் இட்டு மூட்டினர்.

சமணர்கள் சிவஞானமுண்ட ஆளுடைய பிள்ளையாரை இகழ்ந்திகழ்ந்து தமது மந்திரத்தால் நெருப்பை மூட்டிக்கொண்டிருக்கும்போது, பதினாருயிரம் சிவத் தொண்டர்கள் சூழ்ந்து வரக் காழிப் பிள்ளையாரும் அவ்விடத்திற்கு எழுந்தருளினார். அப்போது பாண்டியனும், பாண்டிமாதேவியாரும், குலச்சிறை

யாரும் பின்னே சென்றார்கள். சுரந்து ஒழுகும் பாலைப் பருகித் துள்ளியோடும் கன்றினைத் தொடர்ந்து செல்லும் பசுவினைப் போல மதுரை நாயகர் தமது பிராட்டியோடும் தம் புதல்வரின் செய்கையைப் பார்க்க அவ்விடத்திற்குச் சென்றருளினார்.

எண்ணாயிரம் சமணரும் தாம் தாம் முயன்று கற்ற வெவ்வேறு மந்திரங்களைப் பச்சை ஓலைகளில் எழுதி ஒருங்கே சென்று, ஓங்கி எழுந்த தீயில் அவற்றை இட்டார்கள். அவ் வேடுகள் யாவும் நெருப்பில் பட்டதும் கரும்பின் உலர்ந்த தோட்டைப்போலக் கரிந்து சாம்பராகி அழிந்தன. அதனைக் கண்டு சமணர்கள் மனம் புழுங்கினர். அந் நிகழ்ச்சியினைக் கண்டவர்கள் அனைவரும் சிரிக்கலாயினர்.

**பிள்ளையார் அனலில் பாசுரம் எழுதிய ஏட்டினை இடுதல்**

சீகாழிப் பிள்ளையார் தாம் பாடியருளிய தமிழ் மறையாகிய திருமுறையை எடுத்துத் திருக்கயிறு சாத்திப் பார்த்தார்; தாம் அருந்த சிவஞான அமுதளித்த அம்மையாரின் திருப்பெயரினைக் கொண்ட, "**போகமார்த்த பூண்முலையாள்**" என்னும் திருப்பதிகமுள்ள ஏடு அகப்பட்டது; அந்த ஏட்டினை எடுத்து அடுத்துள்ள தீயினில் இட்டார். அவர் இட்ட திருமுறை ஏடு நீரின்கண் கிடந்ததுபோலப் **பசுமை**யாகவே இருந்தது. பாண்டியனும், குலச்சிறையாரும், பாண்டிமாதேவியாரும், அங்கு நின்ற மற்றவர்களும் அதனைக் கண்டு காழிப்பிள்ளையாரைப் புகழ்ந்து அளவில்லாத இன்பப் பெருக்கில் மூழ்கினார்கள். ஞானசம்பந்தர் வாதத்தில் வென்ற அந்த இடம் அன்று முதல் ஞானசம்பந்தரின் பெயரினை ஏற்றுச் [1] **சம்பந்த நத்தம்** என்னும் பெயர் பூண்டு விளங்குகின்றது. திருஞானசம்பந்தர் தாம் தீயிலிட்ட ஏட்டைத் திரும்ப எடுத்துத் திருமுறையில் சேர்த்துக் கட்டிப் பாண்டியனை நோக்கினார்.

**புனல் வாதம் புரிதல்**

அப்போது சமணர்கள் தங்கள் வஞ்சினத்தை அறிந்து வைத்தும் வாய்மையையும் வெட்கத்தையும் விட்டு நிற்கச் சபையிலுள்ளார் சிரிக்க அதனைக்கண்டு சகியாது, பெருங்கூச்சலிட்டு

---

1. இப் பெயர் தற்போது 'சாம்பநத்தம்' என வழங்குகின்றது.

மீண்டும் பிள்ளையாரை நோக்கி, "நாங்கள் எழுதி இட்ட எண்ணு யிரம் பச்சை ஏடுகளும் வெந்து சாம்பராயின. நீர் எழுதி இட்ட ஓலைமட்டும் சிறிதும் வாடாமல் பசுமை நிறத்துடன் விளங்கியது. இது நீர் கற்ற அக்கினிக் கட்டு விஞ்சையினால் இவ்வாறு ஆகும்பொருட்டுச் செய்துவிட்டாய். ஆதலால், உமது ஏட்டையும் எங்கள் ஏட்டையும் வையையாற்றின் நீர்ப் பெருக்கில் இடுவோம்; இட்டபோது நீரினை எதிர்த்துச் செல்லும் ஓலை வெற்றிபெற்றதாகக் கொள்வோம்; கடலில் செல்லும் ஓலை தோல்வியுற்ற ஓலையாகும். வெற்றியடைந்தவருக்குத் தோல்வியுற்றவர் எப்பொழுதும் குற்றேவல் புரியவேண்டும்" என்றார்கள். திருஞான சம்பந்தர் அது கேட்டு, "நமக்குக் குற்றேவல் புரியும் அடியார்கள் பதினாறுயிரவர் உள்ளார்கள், அவர்களே போதும்; நீங்கள் சிவனை இகழ்ந்த கொடியவர்கள்; ஆதலின், உங்களுக்கு ஏற்ற தண்டனை இதுவன்று: சிவபெருமான் திருவருளால் யாம் வென்றேமானால் உங்களைக் கழுமுனையில் இடுவேம்;[1] அதுவே முறையாகும்" என்றார். ஊழ்வலியின் காரணமாகச் சமணர்கள் அதற்கு உடன்பட்டார்கள்.

குலச்சிறையார் அதனை அறிந்து பல தச்சர்களை வரவழைத்து, நீண்ட மரங்களில் சூல வடிவமாகக் கழுக்களைச் செய்து அவற்றை அரசன்முன் கொண்டு வந்து பரப்பினர். காழி வள்ளல் சமணர்களைப் பார்த்து, "இனியேனும் நீங்கள் வாது செய்வதை விடுத்து விபூதி உருத்திராட்சம் தரித்துத் திருவைந்தெழுத்தை ஓதிப் பாசத்தை ஒழித்து உய்யுங்கள்" என்று அறநெறியினை நோக்கிக் கூறியருளினர்.

**சமணர்கள் காழிப் பிள்ளையாரை வாதுக்கு அழைத்தல்**

அதனைக் கேட்டு அச் சமணர்கள், எரியும் நெருப்பைப் போலச் சினந்துரைத்து, "முன்பு அனல் வாதத்தில் வென்றுவிட்டோம்; இனி நீர் வாதத்தில் யாதாக முடியுமோ? என்று கருதி எம்மிடம் அன்பு கொண்டவரைப் போலப் பேசி, இணக்கம் கொண்டு இவ் வாதத்தினின்றும் தப்பிப் போக

1. இங்கு, "சமணர்கள் தாமே 'வாதிலழிந்தோமாகில் இவ்வரசன் கழுவேற்றுவானாக' என்றனர்" எனப் பெரிய புராணங் கூறும்.

எண்ணுகின்றீர்போலும்! நீர் எம்முடன் வாது புரிவதற்கு மனந்துணியுந் தன்மையைக் கூறினீரில்லை; வாதஞ் செய்ய வரக் கடவாய்'' என்று மறுத்து உரைத்தனர்.

**சமணர்களும் பிள்ளையாரும் வையையில் ஏட்டை விடுதல்**

சமணர்கள், விரைந்து செல்லும் வையையாற்று நீரினை மந்திர வலியினால் அதன் வேகத்தைத் தணித்து முன்போலவே ஏடுகளை எழுதி விடுத்தார்கள். சீகாழிப் பிள்ளையார், "வேதங்களே உண்மையுரையானால், வேதங்கள் அனைத்தும் துணிந்து கூறும் மெய்ப்பொருள் சிவபெருமானே என்பது உண்மையானால், இவ்வேடு வெள்ளத்தினை எதிர்த்துச் செல்க'' என்று சொல்லி, "**வாழ்க அந்தணர்**'' என்னும் திருப்பதிகத்தை ஏட்டிலே எழுதி நீரில் விடுத்தார். ஆளுடைய பிள்ளையார் விடுத்த ஏடு சோமசுந்தரக் கடவுளின் திருவருளாகிய கயிற்றினால் இழுக்கப்பட்டு, ஆற்றில் எதிரேறிச் சென்றது. சமணர்கள் விடுத்த எண்ணாயிரம் ஏடுகளும் ஐம்புலன்களின் வழியே நடக்கும் உள்ளம் போல வெள்ளம் செல்லும் வழியே சென்றன. பரசமய கோளரியாகிய ஞானசம்பந்தர் விட்ட ஏடு ஆற்றில் எதிரேறத் தேவர்கள் பூமழை பொழிந்தனர்; அறவோர் ஆடைகளை விண்ணில் எறிந்து ஆரவாரித்தனர்; அடியார்கள் ஆனந்தக் கடலில் அழுந்தினார்கள்; அமணர்கள் உடல் நடுங்கி வெயர்வைக் கடலில் மூழ்கி நாணி நின்றார்கள்.

**காழிப் பிள்ளையாரை அரசன் முதலியோர் வணங்கல்**

'சிவபெருமானே எல்லாத் தேவர்களுக்கும் இன்பத்தையும் வீடு பேற்றையும் அளித்தருளும் முதற் கடவுள்' என்பதைப் பாண்டியன் அனல் வாதத்தின் மூலமாகவும், நீர் வாதத்தின் மூலமாகவும் குருவின் உபதேச மொழி போலத் தெள்ளத் தெளிய உணர்ந்தான்; சமணர் புத்தர்களுக்கே அல்லாமல், பல வேத நூல்களை ஓதியும் சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று உணராமல் கையிலுள்ள விளக்கோடும் குழியில் வீழ்பவரைப்போல அறிவுகலங்கி ஐயுற்ற மூடர்களுக்கும் நெருப்பும் நீரும் அறிவித்தன. பாண்டியனும் பாண்டிமாதேவியாரும் குலச்சிறையாரும் அடியார்களும் இந்நிகழ்ச்சியினைக் கண்டு காழிப் பிள்ளையாரை வணங்கித் துதித்து நின்றனர்.

**சிற்சில அமணர் நீறு அணிதலும் மானத்தால் கழுவேறுதலும்**

சில சமணர்கள் மானத்தையும் நாணத்தையும் இழந்து, தோணிபுரத்தோன்றலாகிய பிள்ளையார் திருமுன் வந்து நின்று, "இன்று யாங்கள் உமக்குத் தோற்றோம்; இவ்விடத்தில் எம்மை நீரே வென்றீர்" என்று உடன்பட்டுக் கூறினர். அச்சமணர்கள் உய்திபெறும் வழியைக் கருதிக் காழிப் பிள்ளையார், அவர்களை நோக்கி, "எம்முடைய சிவபெருமான் உயிர்களுக்கெல்லாம் தாய் போன்றவன்; அவனுக்கு அடிமைப்பட்டு உய்யுங்கள்! ஏன் வீணாக இறக்கின்றீர்கள்!" என்று கூறியருளினார். மானமுடைய சில சமணர்கள், "ஏ சிறுவனே! எங்கட்கு அடாத வார்த்தையினைச் சொன்னது எவ்வாறு?" என்று கூறித் **தாமே கழுவில் ஏறத்** தொடங்கினார்கள். தங்கள் சமயத்தில் பற்றுடைய சமணர் சிலர் தாங்களாகவே கழுவில் வலிய ஏறி உயிர் பதைக்க இறந்தனர். ஏறாத ஏனைச் சமணர்களைச் சைவ வேடம் பூண்டு நிற்பவர்கள் பிடித்துப்பிடித்துத் துன்புறுத்திக் கழுமரத்தில் ஏற்றினார்கள். சமண சமயத்தில் வழி வழி வந்த மாணாக்கர்களுள் இறப்பதற்கு அஞ்சியவர் திருநீற்றினைத் தரித்தனர். திருநீறு கிடைக்கப்பெறாது வருந்துபவர் பசுவின் சாணத்தை வாரிப் பூசிக்கொண்டனர். அதுவும் கிடைக்கப் பெறாதவர் பசுவின் கன்றைத் தோளின்மேல் போட்டு உயிர் பிழைத்தனர். திருநீறு கிடைக்கப் பெறாத வேறு சிலர் திருநீறு பூசியவர்களின் நெற்றியோடும், பசுவின் சாணம் இட்டவர்களின் நெற்றியோடும் தமது நெற்றியைப் பொருந்த வைத்துத் தம்மோடு மாறுபட்ட பாசத்தளையைப் போக்கும் பிறப்பினை ஒழித்தார்கள். இவர்களைச் சிவவேடத்தார் ஊறுசெய்யாது விட்டனர். [1] கழுவேறி உயிரிழந்தவர் அனைவரும் பருந்துகளும், காக்கைகளும், நாய்களும், நரிகளும் சூழ்ந்து பற்றி ஈர்த்துத் தின்னக் கிடந்தனர்.

**வையையாற்றினை எதிர்த்துச்சென்ற ஏடு மறைதல்**

பாண்டியன் காழிவள்ளலை வணங்கி நோக்கி நின்று, "இப்பொழுது தேவரீர் ஆற்றில் இட்ட ஏடு யாவரும் காண நீரோட்

1. கழுவேறிய இடம், கழுவேறுமடை எனவும், கழுவேறுகடை எனவும் தற்போது வழங்குகிறது. இது திருப்பூவணத்திற்கு அருகில் உள்ளது.

டத்தை எதிர்த்து நேரே சென்றதே, அஃது எங்கே போயிற்று?'' என்று வினவினன். பிள்ளையார், ''கூடல்நாயகன் திருவருளால் அதனை இப்பொழுதே வருவிப்போம்'' என்று கூறியருளி, நதிக்கரைவழியே மேற்கு நோக்கிச் சென்றார். அவரைப் பின்தொடர்ந்து மற்றவர்களும் சென்றனர். ஆற்றினை எதிர்த்துச்சென்ற ஏடு ஒருகாத தூரம் சென்றது; பிறகு அது திடீரென்று மறைந்தது.

**நீரில் மறைந்த ஏட்டைத் தேடிச் செல்லல்**

ஏடு மறைந்ததைக் கண்ட யாவரும் வியப்புற்று அங்கு ஒருங்கு திரண்டு, பசுக்களை மேய்த்துக்கொண்டு நிற்கும் சிலரை நோக்கி, ''இவ்விடத்தில் ஏதேனும் விசேடங் கண்டீர்களோ?'' என்று வினவினர். அந்த இடைச்சிறுவர்கள், ''நாங்கள் ஒன்றையும் அறியோம்'' என்றனர். இவ்விடத்தில் எப்படியாயினும் ஒரு விசேடங் காணவேண்டுமென்று கருதிய காழியர் பெருமான், சமணர்களோடு செய்த வாதத்தில் வெற்றி தந்தருளிய சிவபெருமானை நோக்கி, ''**வன்னியும் மத்தமும்**'' என்று தொடங்கும் திருப்பதிகத்தைப் பாடியருளினார். அப்பொழுது திருப்பதிகத்தின்மேல் அருள் வைத்த பரமனார் அங்கொரு பெரிய வில்வ மரத்தடியிலே சுயம்பு இலிங்கமூர்த்தியாய் எழுந்தருளிக் காட்சி அளித்தார். பிள்ளையார் அந்த இலிங்க மூர்த்தியைத் தரிசித்து வணங்கி, வலம் வந்து நின்றார். பாண்டியனும் அதனை அறிந்து தன் சேனையோடும் அங்கு வந்தனன். அந்த இலிங்க வடிவத்திலிருந்து சிவபெருமான் ஆயிரம் பிறைகண்ட முதிய அந்தணராய்த் தோன்றிப் பிள்ளையாரைப் பார்த்து, ''நீ என் இளைய மைந்தனைப் போன்றிருக்கின்றாய்! வருக'' என்று திருநீறு சாத்தி மகிழ்ந்து திருவருள் பாலித்து நின்றருளினார். முருகக் கடவுளைப் போல்வாராகிய பிள்ளையார் தம் எதிரே நின்ற முதிய அந்தணரை, 'முன் சிவஞானத்தைத் தமக்குத்தந்தருளியஇறைவர்' என்று உணர்ந்து வணங்கி, ''ஐயனே! அடியேன் இவ்வையை நதியில் இட்ட ஏடு இங்கு வந்தது; அதனைத் தேவரீரே எடுத்தருளினீர்; அஃது உமது புதல்வர் விளையாடுவதற்கு ஏற்றதன்று; ஆதலின் அதனைத் தந்தருள்க'' என்று வேண்டினார்.

**ஏடு பெறுதல்**

முதியவராய் வந்த பெருமான், "மைந்தனே! இன்னும் பல நாள் வரை எம்மைத் தலங்கள் தோறும் சென்று பாடிப் புல்லிய நெறியில் ஒழுகுவாரையும் வெற்றிகொண்டு, பின்னர் நமது தூய்மை பொருந்திய வீடு பேற்றினை அடைவாயாக" என்று ஆக்கமொழிகூறி, ஏட்டினைக் கொடுத்து மின்போல மறைந்தருளினர்[1]. தந்தையாராகிய இறைவர் கைப்பற்றிமீட்டும் தந்தருளிய அவ்வேட்டினை ஞானவமுதினையுண்ட பிள்ளையார் வாங்கி, "இவ்வேட்டினை எம்பெருமான் கவர்ந்து பின் யாம் குறையிரந்து வேண்டக் கொடுத்தருளினர்" என்று பாண்டியனுக்குக் காண்பிக்க, அவன் அவரை வணங்கி, "சிவ ஞானத்தை உண்டருளிய பெருமானே! சிற்றறிவினை உடைய அடியேன் உம்முடைய பேராற்றலை அறியாது அதனை அளந்து பார்த்தேன்; அடியேன் செய்த இப் பிழையைத் தீர்த்து ஆண்டருளக் கடவீர்!" என்று வேண்டினன்.

**திருவேடகம்**

பிறகு பாண்டியன் அங்குஎழுந்தருளிய சிவபெருமானுக்குப் பொற்கோயிலும், திருமண்டபமும், திருக்கோபுரமும், திருமதிலும், திருவீதியும், கண்டோர் கண்களிக்க அமைத்தான். அன்று முதல் அப்பதி, [2]**திருவேடகம்** என்னும் திருப்பெயருடன் விளங்குகிறது. பாண்டியன், சமணரோடும் கூடியதனல் ஏற்பட்ட பாவமெல்லாம் நீங்கும் வண்ணம், திருவேடகத்தில் எழுந்தருளிய பெருமானைப் பூசித்து, மும்மலமாகிய பாசமும் நீங்கப்

---

1. இங்கு, "ஆளுடைய பிள்ளையார் திருப்பாசுரம் எழுதி இட்ட ஏடு வையையாற்று நீரிலே எதிர்ந்து செல்லும்போது குலச்சிறையார் குதிரை மீது ஏறிச்சென்று திருவேடகத்தில் நின்ற ஏட்டினை எடுத்துக் கொண்டுவந்து பிள்ளையாரை வணங்கி அதனை அனைவர்க்கும் காட்டினர்" என்று பெரிய புராணம் கூறும்.

2. திருவேடகம் - இது சோழவந்தானுக்குத் தென்மேற்கே சுமார் இரண்டு மைலில் வையையாற்றின் தென்கரையில் உள்ள சிவத்தலம். இங்குத் திருஞான சம்பந்தர் சமணர்களோடு பேசிய தோஷம் நீங்கும் பொருட்டுச் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்து பூசித்தார். அச்சிவலிங்கப்பெருமான் 'சிறுமையில் தெள்ளியார்' என்ற திருநாமத்துடன் விளங்குகின்றுர்.

பெற்றான். இத் திருவேடகப்பெருமானை முதல் மூன்று யுகங்களில் முறையே திருமாலும், கருடனும், ஆதிசேடனும் வழிபாடு செய்து அவர் திருவருளைப் பெற்றனர்; கலியுகத்தில் பாண்டியன் வழிபாடாற்றிப் பேறு பெற்றான்.

இங்குச் சவுந்தரிய பாண்டியன் ஒரு நகரம் அமைத்துக் காழிப்பிள்ளையாருடன் ஓராண்டளவும் தங்கியிருந்தான்.

**திருஞானசம்பந்தர் சோழ நாட்டுக்குத் திரும்புதல்**

பிறகு, பாண்டியன், காழிப்பிள்ளையாரோடு திருவேடகத்திலிருந்து புறப்பட்டு மதுரையை அடைந்தான். சிவஞானப் பிள்ளையார் பாண்டி நாடெங்கும் திருநீற்றுச் செல்வம் விளங்கச் செய்தார்; சில நாள் அங்கிருந்த பின்பு வடநாட்டிலுள்ள திருப்பதிகளையும் வணங்கித் துதிக்க விரும்பிக் கூடற்பெருமானையும் அங்கயற்கண் அம்மையாரையும் வணங்கிப் பல வரங்களைப் பெற்றுக்கொண்டு புறப்பட்டுப் பாண்டி நாட்டிலுள்ள தலங்களை வணங்கிச் சென்றார். அப்போது பாண்டியனும் பாண்டிமா தேவியாரும் குலச்சிறையாரும் முன்னே செல்லும் காழிப்பிள்ளையாரின் பிரிவை ஆற்றாதவராகி, அவரிடம் நட்புக் கொண்ட அன்று முதல் நீங்காத இன்பமெல்லாம் துன்பமாக மாறி, முன்னே பிடித்து இழுப்பதைப்போல் பிள்ளையாரை முன்னும் பின்னுமாகத் தொடர்ந்து சென்றனர். சீகாழிப்பிள்ளையாரும் அவர்களைப் பிரிவதற்கு ஆற்றாதவராகி அவர்களைப் பார்த்து, "நீங்கள் நம்மிடம் கொண்ட அன்பு குறையாது, திருநீற்றுப் பெருமையைப் பாதுகாத்து இறைவனின் புகழ் நிலவுலகில் வளர்ந்து பரவுமாறு செய்து வாழுங்கள்! இதனை மறுக்காமல் நில்லுங்கள்" என்று கூறியருளினார். புகலிவேந்தரின் அருள் மொழியை மறுக்க அஞ்சிப் பாண்டி வேந்தன் அவர் திருவடிகளைப் பணிந்து வணங்கி மற்றைய இருவருடன் மதுரைப் பதியை அடைந்தான். ஆளுடையபிள்ளையார் சோழ நாட்டினுட் புகுந்தருளினார்.

**கடம்ப வனத்தில் காழிப்பிள்ளையாகிய யானையின் செயல்**

சிவஞானமாகிய மதநீர் ஒழுகத் திருஞான சம்பந்தராகிய பெருமை மிகுந்த யானை வந்து கடம்ப வனத்தில் முளைத்

திருந்த சமணராகிய மரங்களையெல்லாம் ஒடித்தெறிந்து, திருவெண்ணீருகிய புழுதியை வாரி, உலகம் முழுதும் பரவுமாறு தூற்றியது.

ஞானமாம் மதநீர் சோர ஞானசம் பந்த ரென்னும்
மானமா யானை வந்து கடம்பமா வனத்தில் துன்னும்
ஊனமாஞ் சமணர் என்னும் தருக்களை ஒடித்து வெண்ணீ(று)
ஆனமாப் பூழி அள்ளித் தூற்றிய(து) அவனி யெங்கும்.

**மடைப்பள்ளி விபூதியின் பெருமை**

சீகாழிப்பிள்ளையார், ஆலவாய்ப் பெருமானின் மடைப்பள்ளிச் சாம்பலைக் கொண்டு பாண்டியனுடைய வெப்பு நோயையும், கூனையும் நீக்கியருளியதால், [1] **மடைப்பள்ளி சாம்பலே** கற்பம், அநுகற்பம், உபகற்பம், அகற்பம் என்னும் [2] நால்வகைத் திருநீறுகளிலும் மிகச் சிறந்து விளங்கியது.

செய்யுள்—82

ஆகச் செய்யுள்--3255

---

1. இம்மடைப்பள்ளிச் சாம்பலே, இன்னும் இம்மதுரைத்தலத்தில் அன்பர்களுக்கு விபூதிப் பிரசாதமாக வழங்கப்படுகிறது.

2. இந் நால்வகைத் திருநீறுகளின் இயல்பைச் சைவசமயநெறி என்னும் நூலில் பொதுவிலக்கணப் பகுதியில் விரிவாய்க் காண்க.

# 64. வன்னியுங் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம்

## கடற்கரைப் பட்டினத்து வணிகன் வாழ்க்கை

பொன்போன்ற மலர்களைக்கொண்ட தாழைகள் நிறைந்த கடற்கரைப் புறத்திலுள்ள [1] பட்டினம் ஒன்றில் வணிகர் குலத்தைச் சேர்ந்த ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் பலவகைப் பட்ட செல்வங்களில் சிறந்தவன்; பலநாள் மகப்பேறின்றி வாழ்ந்து வந்தவன். பின்பு அவ்வணிகன் தன் மனைவியுடன் பலவகை அறங்களைச் செய்து ஒரு பெண்மகவைப் பெற்றெடுத்தான். அந்தத் தன வணிகனுக்கு முத்தமிழ் வழங்கும் மதுரைப் பதியில் ஒரு [2] மருகன் இருந்தான். அவன் முன்பே திருமணம் புரிந்துகொண்டவன்; ஆயினும், "அவனுக்கே யான் தவம் செய்து பெற்ற மயில்போன்ற புதல்வியை முறைப்படி திருமணஞ் செய்துகொடுப்பேன்" என்று தன் கிளைஞர் யாவரும் அறியச் சொல்லிக்கொண்டிருந்தான்.

## மாமனும் மாமியும் உயிர் நீத்தலறிந்து மருமகன் வருந்துதல்

சின்னாட்கள் கழிந்தன; பின்பு ஊழ்வினையின் காரணமாக அவ்வணிகன் உயிர்நீத்தான். அவன் உயிருக்கு உடல்போல் விளங்கிய கற்பிற்குரிய மனைவியும் கூட இறந்துவிட்டனள். சுற்றத்தார் அவ்விருவருக்கும் செய்யவேண்டிய கடன்களைச் செய்துமுடித்தனர்; பின்னர், அச்செய்தியை மதுரையில் வாழும் அவன் மருகனுக்கு அறிவிக்கும்பொருட்டு ஓலை எழுதி விடுத்தனர். மருமகன் அந்த ஓலையை வாங்கி, "உனது மாமன் இறந்தனன்; அவனுடன் அவன் மனைவியும் இறந்தனள்; அவனுக்கு அளவற்ற திரவியம் உண்டு; அவன் ஒரு பெண் மகவினைப் பெற்றெடுத்தான்; அவளை உனக்கு மணஞ் செய்துகொடுப்பதாகச் சொன்னான்; ஆதலால் அப்பெண்ணை மணஞ்செய்துகொண்டு செல்லக்கடவாய்" என்ற வாசகத்தைப் படித்தறிந்து துயரம் தாங்காது தரையில் வீழ்ந்து புரண்டு அழுதான்; பெருமூச்சு விட்டான்; கண்ணீர்விட்டு

---

1. பட்டினம் - இது காவிரிப்பூம் பட்டினம் என்பர். "முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்" என்பது பட்டினப்பாலை அடி.

2. இவன், தன வணிகனின் தங்கை மகன் ஆவன்.

அரற்றினன்; கிளைஞர்களையும் நட்பினர்களையும் தழுவித் தழுவி அழுதான். பிறகு ஒருவாறு தேறி மருகன், தன் உறவினர் சிலருடன் சேர்ந்து மதுரையை விட்டுச்சென்று மாமனுடைய பட்டினத்தை அடையும்போது அங்கே கேள்விப்பட்டு எதிர் வந்த சுற்றத்தாரையெல்லாம் தழுவித்தழுவிச் செல்லவிடுத்துப் போய், மாமன் வீட்டிற் புகுந்து இருந்தான்.

**வணிகன் மாமன் மகளை அழைத்துக்கொண்டு புறப்படல்**

சிலநாட்கள் கழிந்தபின் அவன், தன் மாமன் மகளை மதுரை நகரத்திற்கு அழைத்துக்கொண்டு போய், "அங்கு எனது சுற்றத்தார் முன்னிலையில் மணஞ் செய்துகொள்வேன்" என்று கூறித் தன் மாமன் தேடிய பொருள்களையும் பிறவற்றையும் கைப்பற்றிக்கொண்டு புறப்பட்டான்; அப்போது வழிவிட வந்தவர்களை நிறுத்திவிட்டுப் பின் மதுரைக்குப் புறப்படும் தன்னுடன் வந்த உறவினர்களை "முன்னே செல்லுங்கள்" என்று அனுப்பிவைத்துத் தன்னை வணங்கும் ஏவலாளர்களோடு மாமன் மகளை அழைத்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு ஒன்றரைக் காததூரமாக நடந்து செல்லலாயினன்.

**மதுரை வணிகன் திருப்புறம்பயத்தில் பாம்புதீண்டி இறத்தல்**

கதிரவன் மேலைக்கடலில் செல்லும் முன்னரே [1]**திருப்புறம்பயம்** என்னும் தலத்தை வணிகனின் மருகன் அடைந்தான்; அன்றிரவு அந்நகரிலே தங்கிப்போக எண்ணினன்; அத்தலத்தின் கோயிலுக்கு அருகுள்ள ஒரு கிணற்றில் நீராடி, வன்னி மரத்தடியில் உணவு சமைத்து உண்டான்; திருக்கோயிலின் அருகே ஒரு படியின்மேல் தலைவைத்து உறங்கினன். அப்போது ஊழ்வினையின் வழியே கொடியவிஷத்தினையுடைய ஒரு பாம்பு வந்து சினந்து அவனைத் தீண்டியது. அவ்வணிகன் விடம் தலைக்கேறிஇறந்தான். அதுகண்டு ஏவலாளர்கள் கதறிஅழத்தோழிப் பெண்கள் மார்பில் அடித்துப் புலம்பினர். அவனுடன் வந்த மாமன் மகள் செய்வதறியாது திகைத்தாள்; மணமாகாத

1. திருப்புறம்பயம்: இது கும்பகோணத்திற்கு வடமேற்கே காவிரி வடகரையில் உள்ள சிவத்தலம்; இத்தலம் பிரளயகாலத்தில் ஊழிவெள்ளம் சிவனது ஆணையால் இதன்புறத்தே சூழ்ந்திருந்ததுபற்றி இப்பெயர் பெற்றது என்பர். இறைவன் பெயர் 'சாட்சி நாதர்'

கன்னிப் பூங்கொடியாதலால் அவ்வணிகன் உடலைத் தீண்டாது ஒருபுறமாக ஒதுங்கிப் பாவைபோல் சோகமே வடிவமாகிக் கலங்கி நின்றாள்.

**வணிக மங்கை துக்க மேலிட்டு மயங்கி வீழ்தல்**

வணிகன் பாம்பு தீண்டி இறந்ததையும், மகளிர் கைநெரித்து அழுவதையும் விழுவதையும், சுற்றத்தார் சூழ்ந்து அயர்வதையும் சோர்வதையும் இளங்கிளிபோன்ற வணிகமகள் நோக்கி, அம்பினால் அடிபட்ட ஒரு மயிலைப்போல் கீழே வீழ்ந்து சோர்ந்து மயங்கினாள். அவளுக்கு மாவடுப்போன்ற கண்கள் உள்ளே செருகின; உயிர்ப்புக் குறைந்தது; நெருப்பில் பட்ட பூமாலைபோல், உடல் வாடியது; கைகளும் கால்களும் சோர்ந்து கிடந்தன; அவள் இடிக்கு எதிர்ப்பட்டு வீழ்ந்தவளைப்போல வீழ்ந்து கிடந்தாள்; வேறு என்செய்வாள்? வணிகனைச் சூழ்ந்து அழுதவண்ணம் நின்ற சேடியர்கள் கீழே வீழ்ந்த அணங்கினை ஓடிவந்து கண்டு அன்புடன், "எமது தங்கையின் உயிரும் நீங்கிற்றோ?" என்று கருதிக் கையால் அவளுடலைத் தழுவி எடுத்து மடிமேல் கிடத்தி, ஆடைகொண்டு வீசி இளைப்பாற்றினர். அதனால் சிறிது உயிர்ப்பு வெளிப்பட, இரண்டு கால்களும் மெல்ல அசைந்தன; குவளை மலர்போன்ற கண்கள் சிறிது திறந்தன; அச்சம், நாணம், மடம், பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் நான்கு வேலிகளாக அவளை வந்து வளைந்தன. வணிக மங்கை நிலத்தில் கையினை மோதுவாள்; திரண்ட கூந்தல் கீழே விழச் சோர்வாள்; திரி சிந்தும் நெய்த் துளிபோல் கண்ணீர் சிந்துவாள்; உள்ளம் உருகுவாள்; மெல்ல வாய்திறந்து புலம்பக் கருதுவாள்; புறத்தே திரும்பிப் பார்ப்பாள்; உடனே நாணம் மிகுந்தவளாய்ச் சிறு தெய்வத்தால் பற்றப்பட்டவளைப்போல் தேம்பி விம்மி அழுவாள்; குறையாத செல்வத்திலே பிறந்தநாள்தொட்டு ஒருநாளேனும் துன்பம் என்பதையே கனவிலும் கண்டறியாத அம்மங்கை, "தன் அன்பன்மேல் கொண்ட அன்பின் உருவமாக அமைந்தாளோ" என்று காண்போர் கூறும்வண்ணம் ஒரு பெண்தெய்வம் இருந்து வாய்விட்டு அழுதாற்போல அழத்தொடங்கினாள்.

**வணிக மங்கையின் புலம்பல்**

"என் நாயகனே! என் இரு கண்மணியே! என் தந்தையின் உயிர்போன்ற மருகனே! முருகனை ஒத்தவனே! முல்லை மாலை அணிந்த மன்னனே! வணிகர்குல மணியே! பாம்பின் வாய்ப்பட்டனையோ? உனது உடலின் நிழல்போன்ற என்னைத் தனியேவிட்டு நீ மறைவது எங்ஙனம்? பொன்னாட்டிலுள்ள மகளிரைக் கூடுதற்கு எண்ணியோ? அன்றி அளகாபுரியிலுள்ள இயக்கமாதரை மணப்பதற்கோ? உன்னைக் கடித்த அரவரசன் நாட்டிலுள்ள பெண்களைத் தழுவுவதற்கோ? என்னுயிர் போன்ற தலைவனே! என்னை இவ்வுலகில் விடுத்து வஞ்சித்துச் சென்ற காரணம் என்னே! என்னே! தென்னுலகில் புகுந்தனையோ? உன் மாமனையும் மாமியையும் வணங்கினையோ? உன் மாமன் தன் இரு தோள்களாலும் நின்னை நன்கு தழுவினனோ? யானும் உடன் வந்திருப்பேனாயின் என் தாய் தந்தையர்களைக் காணேனோ? என்னை இங்கே தனியே விடுத்தாய்! உன் பணியாளரையும் கைவிட்டனை! ஐயனே! நீ தன்னந்தனியே சென்று என்ன பயனைப் பெற்றாய்?

என்னா யகனேயோ! என்னிருகண்
மணியேயோ! என்னை ஈன்றான்
தன்னாவி அன்னதனி மருகாவோ!
முருகாவோ! தாரார் முல்லை
மன்னாவோ! வணிகர்குல மணியேயோ!
விடவரவின் வாய்ப்பட் டாயோ!
உன்னாக நிழலான என்னைவிடுத்(து)
எவ்வண்ணம் ஒளிப்ப தேயோ!

பொன்னாட்டின் மடவாரைப் புணர்வதற்கோ!
நம்மளகா புரத்து வேந்தன்
நன்னாட்டின் மடவாரை மணப்பதற்கோ!
உனைக்கடித்த நாகர் வேந்தன்
தன்னாட்டின் மடவாரைத் தழுவுதற்கோ!
என்னாவித் தலைவா! என்னை
இந்நாட்டில் இருத்தியென வஞ்சித்துப்
போயினவா(று) என்னே! என்னே!

தென்னுலகிற் புகுந்தனையோ! பணிந்தனையோ!
மாதுலனைத் தேவி யோடும்
தன்னிருதோள் உறவாரத் தழுவினனோ!
நானுமுடன் சார்ந்தே னாகில்
என்னுரிய குரவரையும் கண்ணாரக்
காணேனோ! எனையீங் கிட்டாய்!
பின்னுரிய பரிசனமும் கைவிட்டாய்!
தனிப்போயென் பெற்றாய்? ஐயா!

அன்பிற்குரிய மருகன் பாம்பால் இறந்ததையும், உள்ளீடற்ற உள்ளத்துடன் இங்கிருந்து துன்புறுவதையும் நோக்கின் என்னைப் பெற்றவர் தவஞ்செய்த பயன் நன்றாகப் பலித்தது! அத் தாய்தந்தையர் இந்தக் கண்கலக்கத்தைக் காணுதற்கு முன்னரேயே இறந்தன்றோ தப்பினர்! அந்தோ! இஃது அல்லவா அரிதினும் அரிதான பயன்! அவர்கள் பெற்றதுபோல் வேறு யார் பெற்றனர்? அன்பரே! உனது அன்புள்ள மாமன் என்னைப் பெற்ற அன்றே உற்றார் அறிய, உனக்கே மணஞ் செய்து கொடுப்பதாகப் பேசி, பிறகு தன் மனைவியோடும் உயிர்நீத்தனன்! யானும் அவ்வண்ணமே நின்னுடன் இறக்காது வாழ்வேனோ? உயிராகிய நீ சென்றுவிட உயிரற்ற உடம்பாகிய யானோ இங்கிருப்பேன்!'' என்று கூறிக் காதல் துணையாகிய ஆண் அன்றிலை இழந்த அன்றிற்பேடுபோல் வணிக மங்கை தன்னந்தனியளாய் இருந்து கதறி அழுதனள்.

**காழிவள்ளலாகிய ஞானசம்பந்தர் வணிகனை எழுப்புதல்**

அவ்வணிகப்பெண்ணின் அழுகை ஒலியைக் கேட்ட அந்நகரத்துள்ளவர்கள் துயில் நீங்கி எழுந்தனர்; அவள் துன்பத்தினைக் கண்டு உள்ளம் நடுங்கினர்; மனம் வருந்தினர்; அப்போது சிவபெருமான் எழுந்தருளிய திருப்பதிகள்தோறும் சென்று வணங்கிக்கொண்டு, அந்நகரிலுள்ள அழகிய ஒரு திருமடத்தில் எழுந்தருளியிருந்த **திருஞானசம்பந்தர்** அவ்வழுகையொலியைக் கேட்டு, "இவ்விரவுநேரத்தில் எழும் அழுகுரலுக்குக் காரணம் யாது?'' என்று ஆள்விட்டு ஆராய்ந்து அறிந்தார்; உடனே திருக்கோயிலின் பக்கம் விரைந்து வந்தடைந்து, "கன்னியே நீ யார்? உனக்கு என்ன நேர்ந்தது?'' என்று

வினவியருளினர். அப்பெண் அவரை வணங்கித் தனது மரபினையும், தாய்தந்தையரையும், அவர் தன்னை இவனுக்கென்று மணம்பேசி இறந்தொழிந்ததையும், இவனோடு தான் வந்ததையும், இங்கு நேர்ந்த நிகழ்ச்சியையும் எடுத்துக் கூறினள். காழிப்பிள்ளையார் தன்னந்தனியளாய் வருந்தும் அப்பெண்ணின் உயிரைக் காக்கும்பொருட்டு உயிர்நீத்த வணிகன் அருகே வந்து அவன் உடல் அமிர்தமாகும்படி திருவுளங்கொண்டு [1] **அருள் நோக்கம்** வைத்தருளினர். உடனே கொடிய நஞ்சு தான் ஏறிய இடத்தினின்றும் குதித்தோடியது. இறந்த வணிகன் உறங்கியவன் எழுந்தாற்போல் எழுந்தான். அதனை யாவரும் கண்டு திருஞானசம்பந்தரைத் தொழுது துதித்து மகிழ்ந்தார்கள். அன்னத்தை ஒத்த அக்கன்னி, இன்பத் தேனைச் சொரிந்து தாமரை மலரப்பெற்ற ஒரு கொம்புபோல ஒருபுறமாக ஒதுங்கி நின்றனள்.

**மங்கையை மணந்துசெல்க என வணிகனிடம் கூறல்**

அவ்வணிகமாது தான் மாமன் மகளாக இருந்தும் தன் தலைவன் இறந்தபோதும், உயிர்பெற்று எழுந்தபோதும், அவனைத்தீண்டாதிருந்த தன்மையையும், அவளதுஅன்பினையும், கற்பின் தன்மையையும் ஆளுடையபிள்ளையார் கண்டு வியந்து வணிகனைப் பார்த்து, "வணிகமணியே! வருக! உன் மாமன் மகளாகிய இக்கன்னி திருமகளை ஒத்தவள். இன்பமுறும் காலத்திலும் துன்பமுறும் காலத்திலும் மட்டுமின்றி வேறு எந்நாட்களிலும் உன் உடலினைத் தொட இவள் தகுதிவாய்ந்தவள். ஆதலால், இவ்விடத்தே இவளைத்திருமணம் முடித்துக்கொண்டு செல்க" என்றார். வணிகன் காழிப்பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளியதைத் தலைமேற்கொண்டு, "நான்கு வருணத்தையும் பாதுகாப்பவரே! எம் குலத்தைச் சார்ந்த வணிகர்களும் பிற சான்றுகளும் இல்லாமல் நான் எவ்வாறு திருமணம் முடிப்பேன்" என்று வணங்கிக் கூறினன்.

---

1. இங்குத் திருஞானசம்பந்தர் வணிகனுக்குத் திருவருள்நோக்கத்தால் விடநோயைத் தீர்த்தருளினர்; "திருமருகலில் 'சடையாய் எனுமால்' என்னும் பதிகம் பாடி ஒரு வணிகனுக்கு விட நோயைப் போக்கியருளினர்" எனப் பெரியபுராணங் கூறும்.

**வன்னியுங் கிணறும் இலிங்கமும் காண மணம் புரிதல்**

அப்போது காழிப்பிள்ளையார், "மைந்தனே! இப் பெண்ணைப் பெற்றபொழுதே, இவள் உனக்கே உரியவள் என்று உன் மாமன் பேசியதை உறவினர் பலர் அறிவாரே. உனக்கு இதுவே அல்லாமல் இந்த **வன்னியும், கிணறும், சிவலிங் கமும்** சாட்சிகளாகும். எமது சொல்லைத் தட்டாது இங்கே தானே திருமணம் முடித்துக்கொள்ளக் கடவாய்" என்று அருளினர். குற்றமற்ற மனத்தினையுடைய அவ்வணிகன் சீகாழி வள்ளலாகிய பிள்ளையாரை வணங்கி, "தேவரீரே அடியே னுக்கு ஆசிரியரும், நண்பரும், தெய்வமும், சுற்றமும் ஆவீர்" என்று கூறி அங்ஙனமே, திருமணத்தை முறைப்படி செய்து முடித்து மீட்டும் மனைவியுடன் சென்று, பிள்ளையாரை வணங் கித் துதித்து விடைபெற்றுக்கொண்டான்.[1] பிறகு வணிகர் தலைவன் பணியாளரும் மகளிர் கூட்டமும் சூழப் புறப்பட்டு மதுரை மாநகரை அடைந்தான்; மாமன் மகளை மணந்த தன்மையினைச் சுற்றத்தினர் யாவரும் கேட்டு மகிழுமாறு இன் புற்று இருந்தனன். பின்பு வணிகன் தனது பெரும் பொருளை யும் மாமன் தேடிவைத்த பொருளையும் ஓரிடத்தில் தொகுத்துக் குபேரனைப்போல் வாணிகத்தால் பொருள் பெருக்கித் தன் காதலுக்குரிய இருமனைவியர் பெற்ற புதல்வர்கள் மகிழ்ச் சியை விளைவிக்க நலமுற வாழ்ந்து வந்தான்.

**மூத்தாளும் இளையாளும் சண்டையிடுதல்**

வணிகனுடைய மூத்தாளின் புதல்வர்கள் மிகவும் கொடிய வர்கள்; இளையவளுக்கு நல்ல ஒரு புதல்வன் இருந்தான்; மூத்தாள் பிள்ளைகளும் இளையாள் பிள்ளையும் செல்வங்கொழிக் கும் வீதியில் சென்று விளையாடுவாராயினர். ஒருநாள் மூத் தாளின் புதல்வர்கள் இளையவளின் புதல்வனைக் கோபித்து

---

1. கடைச்சங்க காலத்ததாகிய சிலப்பதிகாரத்து வஞ்சின மாலையில் கண்ணகி, காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த கற்புடை மகளிரை எடுத்துக் கூறும்போது, "வன்னி மரமும் மடைப்பளியுஞ் சான்றாக, முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்" என்று கூறியிருத்தல், இப் படலத்தின் நிகழ்ச்சியைப் போலவே உள்ளது.

அடித்தனர். தன் பிள்ளையை அடித்த சிறுவர்களை இளையவள் வைதனள். அதனையறிந்த மூத்தாள் தானும் சினந்து இளையவளை இகழ்ந்து வைவாளாயினள்; "நீ எந்த ஊரினள்? எந்த மரபினள்? யார் மகள்? யாவர் காண அக்கினி சான்றாக என்னுடைய நாயகனைத் திருமணஞ் செய்து கொண்டுவந்த பெண் நீ? என் கொழுநனுக்கு ஆசைப்பட்டு வந்தவளான காமக்கிழத்தியாகிய உனக்கு இந்தப் பேச்சும் இறுமாப்பும் ஏன்? நீ என் கணவனைத் தீ முன் திருமணம் முடித்ததற்குச் சாட்சி உளதாகில் காட்டுக" என்றாள்.

கற்பினால் ஒப்பற்ற இளையவள் அதுகேட்டுத் தீயின் வாய்ப்பட்ட பூங்கொம்பினைப்போல் வாடி நாணம் மிகுந்தவளாகி, "என்கொழுநன் பாம்பால் தீண்டப்பட்டு இறந்தபோது அரிய உயிரினை அளித்த காழிவேந்தரின் ஆணையால், என் கணவன் திருப்புறம்பயத்தில் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கப்பெருமானும், வன்னி மரமும், கிணறும் காணத் திருமணம் புரிந்தான்; அம் மூன்று சான்றுகளும் உள்ளன" என்று கூறினாள்.

அதனைக்கேட்டு மாற்றாள் கைகொட்டி நகைத்து, "நன்று! நன்று! உன் திருமணத்திற்கு ஏற்ற சான்றுகளையே கூறினை; அச்சான்றுகள் மூன்றும் இங்கும் வருமாயின் அஃது உண்மையே ஆகும்" என்றாள்.

**வன்னிமரம் கிணறு சிவலிங்கமாகிய இவற்றை அழைத்தல்**

சிறியாள் துன்பத்தில் ஆழ்ந்து பெருமூச்சுவிட்டு வீட்டினுட் சென்று மெல்லிய விரல்களை நெரிப்பாள்; கையினால் வயிற்றினைப் பிசைவாள்; நிலத்தின்மீது வீழ்வாள்; கண்ணீர்ப் பெருக்கில் அழுந்துவாள்; கொவ்வைக் கனி போன்ற உதடு துடிக்க நிற்பாள்; வெட்கந்தலைக்கொள்ளுவாள்; கூசுவாள்; 'ஐயோ தெய்வமே' என்பாள்; சிறியேன் 'என்ன செய்வேன்' என்பாள்; "ஐயனே! தாயும் தந்தையும் இழந்து தனியளாய் இங்கு வந்த பேதையான எனக்கு உம்மையன்றி வேறு துணை யார் உளர்? ஆதரவிழந்த வணிகச் சிறுவனுக்கு அன்று மாமனாகி வந்து வழக்கினை ஒழித்து உரிமையை வாங்கியளித்த

தலைவரே! மாற்றாள் வாயிலிருந்து வரும் பழிமொழியினின்றும் நீக்கிக் காத்தருள்க" என்று வேண்டிக்கொண்டு அன்றிரவு முழுதும் உணவும் உறக்கமும் இன்றி வருந்தினாள். மறுநாட் காலையில் புண்ணிய வடிவமாகிய பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடி, விண்ணிழி விமானத்தில் எழுந்தருளி யிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று அவருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, "அன்று என்னை என் கணவன் மணம் முடித்த இடத்திலே அதற்குச் சான்றாக நின்ற வன்னி மரமும், கிணறும், சிவலிங்கமாகிய தேவரீரும், இன்று இங்கும் வந்து மாற்றாளின் இகழ்மொழியைப் போக்கி அடியேனைப் பாதுகாக்காவிடில் இறந்து படுவேன்" என்று முறையிட்டாள்.

அப்பொழுதே அவளுடைய வருத்தத்தைக் கண்ட நான்மாடக்கூடலில் எழுந்தருளியிருக்கும் கருணாமூர்த்தியாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளினால், யாவரும் கண்டு அதிசயிக்கும் வண்ணம் மணம் முடித்த காலத்தில் திருப்புறம் பயத்தில் இருந்தபடியே சான்றுகள் மூன்றும் திருக்கோயிலின் வட கிழக்குத் திசையில் விரைய வந்து தோன்றின. உடனே இளையவள் மூத்தவளை அழைத்துச் சென்று, ஆலவாய் அண்ணலின் திருமுன் வீழ்ந்து வணங்கி, "வன்னி மரம் இது! கிணறு இது! சிவலிங்கம் இது! இம்மூன்றுமே என் திரு மணத்திற்குச் சான்றாக நின்றன" என்று கூறினாள்.

**கற்பின் பெருமை**

வன்னி மரமும் கிணறும் மணம் முடித்த காலத்தில் இருந்தன போலவே இன்றும் இங்குச் சான்றாக வந்து தோன்றின. இஃது என்னே அதிசயம்! எவராலும் அறிவதற் கரிய இறைவனும் எளிதாக வந்து உள்ளங்கை நெல்லிக்கனி போல் திருமகளை ஒத்த இவ் வணிக மகளின் கைவசப்பட்டார் என்றால் கற்பினால் அடையமுடியாத அரிய பொருள் யாது உளது? ஒன்றுமில்லை.

இளையாளாகிய வணிக மாதின் கற்பின் பெருமையினையும், ஈசனிடத்து அவள் வைத்துள்ள பேரன்பினையும், சோம

சுந்தரக் கடவுள் அவளுக்குச் செய்த திருவருளையும், மதுரை மாநகரத்திலுள்ளவர் அனைவரும் அறிந்து பேரதிசயம்கொண்டு பெருமகிழ்ச்சியில் ஆழ்ந்தனர். மூத்தாள் மட்டும் துன்பக் கடலில் அழுந்தினாள்.

### மூத்தாளை யாவரும் அருவறுத்தல்

அங்குள்ள சிறந்த வணிகர்கள் மூத்தாளாகிய கொடியவளை "இவள் பொல்லாத பாவியாவாள்" என்று இழித்துப் பேசினார்கள். அவள் கணவனும், "குற்றமற்ற குணத்தினையுடைய இளையாளைப் பொய் பேசிக் குடிப்பழி உரைத்த பாவி ஆதலால், நீ என் காதலி ஆகாய்" என்று மூத்தாளை அருவறுத்துத் தள்ளிவிட்டான். அப்பொழுது இளையவள் கணவன் திருவடியில் வீழ்ந்து, "ஐயனே! என்னுடைய கற்பின் நிலைமையினை இப்பொழுது நிலைநிறுத்திக் காட்டியவள் இவளே. இவள் மாற்றாள் அன்று; தாய் இல்லாத எனக்கு இவளே தாய்; இனி இவளும் யானும் இனிய உயிரும் உடலும் போலப் பிரிவின்றி வாழ்வோம்" என்று மூத்தாளைத் தழுவிக் கொண்டாள்; இருவரும் நட்புப்பூண்டனர்.

### வணிக மாதர்களின் இல்லற வாழ்வு

ஈருடலும் ஒருயிரும்போலாகி உள்ளத்தில் அறியாமையால் உண்டாகும் அழுக்காறின்றி மனைவியர் இருவரும் வாழ்ந்தனர். புதல்வர்களும் அவ்வண்ணமே மாறினர். ஐந்தலைப் பாம்பு விழுங்கும் இரையைப்போன்று தங்களுள் மிக்க அன்பினைப் பெற்று இன்பம் எய்தி வாழ்ந்திருந்தனர். வணிகன் அருந்ததியை ஒத்த கற்புடைய இளைய மனைவியின் பெருமையினால் வாழ்நாளும், பெருஞ்செல்வமும், சிறப்பும், ஒழுக்கமும், பெருமையும், தவவொழுக்கமும், குன்றாது அறமும் புகழும் மென்மேல் ஓங்க விளங்கினான். இளையாளும் திருமகளைப் போல் வாழ்ந்திருந்தனள்.

### அகத்திய முனிவர் மதுரை நாயகனைத் தியானித்தல்

இங்ஙனம் அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் கூறியருளிய **அகத்தியர்**, முனிவர்களை நோக்கி, "பொன்போல விளங்கும் தாமரைகள் மலர்ந்த பொய்கைகள் சூழ்ந்த திருவால

வாயில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்களை அளந்து கூறவல்லவர் யார்? அவருடைய திருவிளையாடற் பெருமைகளுக்கு அளவே இல்லை. எமது குருநாதனாகிய முருகப்பெருமான் அருளிச்செய்தவாறே **அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும்** உங்களுக்குச் சொன்னோம்" என்று கூறினார். பிறகு, அகத்திய முனிவர் குருபரனாகிய முருகக்கடவுளையும் அவர் திருவாய் மலர்ந்தருளிய உபதேச மொழியையும் மனத்திற்கொண்டு [1] துவாதசாந்தத்திலே திருவாலவாயினை அமைத்து, அங்கயற்கண் அம்மையாரையும் சோமசுந்தரக் கடவுளையும் மனத்திலே வழிபட்டுப் பசுகரணங் கெட்டுச் சிவகரணமுற்று ஐம்புலவேடர்கள் போய் மறையக் கேவல சகல அவத்தைகளைக் கடந்து திருவருளின் வழியே சென்று சராசரமனைத்திலும் நிறைந்து காண்பானும், காட்சியும், காட்சிப்பொருளும் மறையப் பூரணவடிவாய், மாற்றமும் மனமுங் கழியநின்ற சச்சிதானந்த வடிவினை இடையறாது தியானம்பண்ணினார்.

பரவசம் அடைந்து வழிகவர்ந் துண்ணும்
    பழிப்புல வேடர்போய் ஒளிப்ப
இருள்வெளி கடந்து திருவருள் வழிச்சென்
    றெண்ணிலாச் சராசரம் அனைத்தும்
புரையற நிறைந்து காட்சிகண் காண்பான்
    புதைபடத் தனித்தபூ ரணமாய்
உரையுணர் விறந்த உண்மையா னந்த
    உணர்வினை உணர்வற உணர்ந்தான்.

செய்யுள்—55

ஆகச் செய்யுள்—3310

---



1. துவாதசாந்தம் — இது பிரமரந்திரத்திற்கு மேல் பன்னிரண்டங்குலத்திற்கு அப்பால் உள்ள நிலை.

## அருச்சனைச் சிறப்பு

### முனிவர்களின் வேட்கை

ஞானமாகிய இன்பக் கடலைப் பருகும் முகில் போன்ற **அகத்திய முனிவரையும்** அவருடைய மனைவி **உலோபா முத்திரை**யையும் அழைத்து ஆதனத்து இருத்தி வசிட்டர் முதலிய முனிவர் அனைவரும் மலர், சந்தனம், கத்தூரி, தீபம், தூபம் முதலிய உபகரணங்களைக்கொண்டு அருச்சனை புரிந்து வணங்கி, "தவமுனியே! நாங்கள் நான்மாடக்கூடலில் எழுந் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல்களைக் கேட்டதன் மூலம் காதுகளைப் பெற்ற பயனை அடைந்தோம்; கேட்ட வண்ணமே கண்கள் களிகூர, நாங்கள் நறுமலர் தூவி வணங்க வேட்கை மிகுந்துள்ளோம்" என்று கூறினர்கள்.

### அகத்திய முனிவர் யாவரையும் மதுரைக்கு அழைத்தல்

அப்போது அகத்திய முனிவர் முகமலர்ந்து, "பெருந் தவத்தினையுடைய முனிவர்களே! யான் எனது மனத்தில் எண்ணிய வண்ணமே நீங்களும் உரைத்தீர்கள்; மறைகளாலும் அறிய முடியாத சிவபெருமானை, அளவிறந்த கலைகளின் உணர்வினால் கண்டாலும், அகக்கண்ணினால் கண்டு களிக்காதவர் வீடுபேற்றை அடையமுடியாது. நீங்கள் கேட்டுணர்ந்த வண்ணமே திருவாலவாயிலில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை நாம் அங்குச் சென்று அருச்சனை புரிந்து, உள்ளம் நெக்குருகத் தரிசித்து வணங்கி, "முன்னொரு காலத்தும் நினையாத திருவருள் வழியே நினைந்து பிறவியிற் செலுத்தும் வினைகளுக்கு மூலமான ஆணவத்தைப் போக்குவோம்! வாருங்கள்!" என்றார்.

### அகத்தியர் முதலியோர் மதுரையைத் தரிசிக்கப் புறப்படல்

ஒரு நன்னாளிலே வசிட்டர் முதலிய முனிவர்களனைவரும் கங்கையை அடைந்து நீராடி, **காசிப்பதியில்** எழுந்தருளியிருக்கும் **அகிலநாதன்** திருமுன் சென்று வணங்கித் துதித்தனர்; பின்னர் முனிவர்கள் அகத்தியர்முன் சங்கற்பம் செய்து, அவர் ஆசி பெற்றுச் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை

எண்ணியவர்களாய்த் திருவைந்தெழுத்தை உச்சரித்துக் கைகளைச் சிரமேற்கூப்பி வணங்கிய வண்ணம் தமது தூய சைவ நெறியில் தவருத தவமாகிய தெய்வத் தன்மை பொருந்திய தேர் மேலேறி விண்வழியே செல்லத் தொடங்கினர். தவம் புரிந்து இளைத்த மேனியை உடையவர்களும், உள்ளும் புறமும் தூய்மை உடையவர்களும், சிவந்த சடையினை உடையவர்களும், திருநீறு பூசிய உடலினை உடையவர்களும், உருத்திராட்ச மாலை அணிந்தவர்களும், புலித்தோலை அணிந்தவர்களுமாகிய முனிவர்களெல்லோரும் போவாராயினர்.

**முனிவர்கள் விண்வழியே செல்கையில் கண்ட தலங்கள்**

விண்வழியே செல்லும்போது வழியிலுள்ள புண்ணியத்தைப் பெருக்கும் தெய்வத் திருப்பதிகளையும், தவ வனங்களையும், தீர்த்தங்களாகிய நதிகளையும், அகத்தியர் விளக்கிக் காட்டிய வண்ணம் செல்ல, முனிவர்கள் அனைவரும் கண்டு கைகூப்பி இறைஞ்சிய வண்ணம் செல்வாராயினர்.

"இலங்கை மன்னனுகிய இராவணனை வெற்றிகொள்வதற்காக இராமன் பூசித்து, அருள்பெற்ற **விருபாக்கம்** அல்லது **ஏமகூடம்** இது; உச்சியில் ஏறிக் கீழே வீழ்ந்து இறப்பவர்கள் எண்ணியவற்றை எண்ணியவாறே அடைய, மறுபிறப்பில் அவர்கட்கு அளிக்கும் **திருப்பருப்பதம்** (ஸ்ரீ சைலம்) இது; பசுவினது நீண்ட காதுபோல் இலிங்க வடிவமாகிய பெருமானுக்குச் சிவராத்திரியிலே திருத்தேர் விழா நடக்கும் **திருக்கோகரணம்** இது; கார்த்திகைத் திங்களில் வரும் கார்த்திகை நாளில் மேலைக் கடற்கரையில் சிவபெருமானுக்குத் திருவிழா நடக்கும் **திருவஞ்சைக்களம்** இது; வேடர் குலத்தினராகிய கண்ணப்பர் மென்று அளித்த ஊனினைச் சுவை பார்த்த பரம்பொருள் எழுந்தருளிய **திருக்காளத்தி மலை** இது; இடது காலினை விண்ணினை நோக்கி நீட்டிக் காளி தோற்க ஆடிய பெருமான் எழுந்தருளியிருக்கும் **திருவாலங்காடு** இது; ஒற்றை மாமரத்தின் நிழலில் இருந்து காமாட்சியம்மையார் தவம் செய்யும் **காஞ்சிபுரம்** இது. திருமால் தான் காக்கும் தொழிலைப் பெறுதற்குச் சிவபெருமானை வழிபட்ட **திருமாற்பேறு** இது; இருவர் கழுகின் உருவங்

கொண்டு தவஞ் செய்யும் **திருக்கழுக்குன்றம்** இது; முக்கட் பெருமான் முனிவர்க்கு வேதத்தை ஓதுவித்த **திருவோத்தூர்** இது; அடியையும் முடியையும் திருமாலும் நான்முகனும் பன்றியும் அன்னமுமாக வடிவு கொண்டு தேட, இறைவர் அனல் வடிவாய் நின்ற **திருவண்ணமலை** இது; அந்தகாசுரனைக் கொன்று மூன்றுலகத்தவரின் துன்பங்களை நீக்கியருளிய சிவபெருமான் எழுந்தருளிய **திருக்கோவலூர் வீரட்டம்** இது; ஊழிக் காலத்திற்கு முன்னும் பின்னும் அழியாது இருக்கும் **பழமலை** (விருத்தகிரி, விருத்தாசலம்) இது; திரிபுரத்தை எரித்து மூன்று அசுரர்களையும் ஆட்கொண்ட **திருவதிகை வீரட்டம்** இது; சச்சிதானந்த மெய்ப் பொருளாகிய கூத்தப் பெருமான் ஆனந்த தாண்டவம் புரிந்தருளும் **சிதம்பரம்** இது; நான்முகன் திருமால் முதலிய தேவர்கள் ஊழி வெள்ளத்தில் அழியா வண்ணம் அவர்களை இறைவர் தோணியில் ஏற்றி அருளிய **திருத்தோணிபுரம்** (சீகாழி) இது; சடாயு, சம்பாதி என்னும் கழுகுகள் வழிபாடு செய்ய அவர்களுடைய ஆணவ மலத்தைப் போக்கிப் பிறவி நோயைத் தீர்க்கும் மருந்து உறையும் **புள்ளிருக்கு வேளூர்** (வைத்தீசுவரன் கோவில்) இது; காமனைக் காய்ந்து நீறுக்கிய இறைவர் எழுந்தருளிய **திருக்குறுக்கை வீரட்டம்** இது; வெள்ளையானை தான் இழந்த கொம்புகளை மீண்டும் பெற்ற **திருவெண்காடு** இது; உமையம்மையார் மயிலுருவங்கொண்டு இறைவனை வழிபட்டுத் துதித்ததும், துலா மாதத்தில் காவிரியில் நீராடுபவர்களுக்கு வீடுபேற்றை அளிப்பதுமாகிய **திருமயிலாடு துறை** (மாயூரம்) இது; தக்கனுக்கு ஆட்டுத் தலையை அளித்தருளிய சிவபெருமான் வீற்றிருக்கும் **திருப்பறியலூர் வீரட்டம்** (பறசலூர்) இது; மார்க்கண்டேய முனிவருக்காகக் காலனைக் காலால் உதைத்தருளிய கண்ணுதல் வாழும் **திருக்கடவூர் வீரட்டம்** இது; சக்கரத்தால் சலந்தராசுரனைப் பிளந்தருளிய சிவபெருமான் வீற்றிருக்கும் **திருவிற்குடி வீரட்டம்** இது; தாரகாசுரனை விநாயகக் கடவுள் கொன்று இறைவனைப் பூசித்தருளிய **திருச்செங்காட்டங்குடி** இது; மூன்று கோடி முனிவர்கள் வழிபட்டுப் பேறு பெற்ற **திருக்கோடிகா** இது; தன்னிடம் பிறந்தவர்க்கு வீடு பேற்றை அளிக்கும்

**திருவாரூர்** இது; நான்கு வேதங்களும் பூசித்து வழிபட்ட **திருமறைக்காடு** (வேதாரணியம்) இது; வரகுண பாண்டியனைப் பிடித்த பிரமகத்தியை ஒழித்தருளிய மகாலிங்க மூர்த்தி எழுந் தருளியிருக்கும் **திருவிடைமருதூர்** இது; தாடகை என்னும் பெண் மலர்மாலை சாத்தத் தலை சாய்ந்து நின்று பின்பு, குங்கிலியக் கலயரின் அன்புக்குத் தலைநிமிர்ந்தருளிய இறைவர் வீற்றிருக்கும் **திருப்பனந்தாள்** இது; முருகக் கடவுள் சிவபெருமானை வழிபட் டதும் ஆத்தி மரத்தின் கீழ் மணலால் சிவலிங்கம் அமைத்து ஆவின்பால் ஆட்டி வழிபாடு செய்த சண்டீசர் திருவவதாரஞ் செய்ததுமாகிய **திருச்சேய்ஞலூர்** இது; மாமகத்தில் வந்து நீராடு பவர்களின் பாவங்களைப் போக்கும் புனித தீர்த்தத்தைக் கொண்ட **திருக்குடந்தை** (கும்பகோணம்) இது; சிவபெருமா னுக்கு உபதேசித்தருளிய முருகக்கடவுள் எழுந்தருளிய **சுவாமிமலை** இது; வணிகப்பெண்ணின் திருமணத்திற்கு வன்னி யுங் கிணறும் சிவலிங்கமும் சாட்சிகளாக நின்ற **திருப்புறம்பயம்** இது; திருநந்திதேவர் சிவபெருமான் திருவுருவத்தைப் பெறு தற்குத் தவம்செய்த **திருவையாறு** இது; நான்முகனுடைய தலை யைக் கிள்ளிக் கைக் கபாலமாகக் கொண்ட இறைவர் எழுந்தரு ளிய **திருக்கண்டியூர் வீரட்டம்** இது; சிலந்தியும், யானையும், உமா தேவியாரும், திருமாலும் வழிபாடு செய்த **திருவானைக்கா** இது; திரிசிரன் என்னும் அரக்கன் பெயரினைக் கொண்ட **திரிசிராமலை** இது; தன்பால் நீராடுபவர்களின் பாவத்தினைப் போக்கும் **காவிரியாறு** இது; இவ்வாற்றால் வளம்பெற்று விளங்கும் **சோழ மன்னனின் நாடு** இது; தமிழ்மறையின் சுவையறிந்த **வையை என்னும் நதி** இது. பொன்னுலகம் மண்ணுலகில் வழுக்கி வீழ்ந்ததுபோல் விளங்கித் தூரத்தே காணப்படும் **பாண்டி நாடு** அதுதான்".

விண்வழியே சென்ற முனிவர்கள் கண்களுக்கு மரம் செறிந்த காடுகள் சிறு செடிகளைப்போலவும், நதி சிறிய கால்வாயினைப்போலவும், பெருந்தடாகங்கள் சிறிய ஊற்றுக் குழிகளைப்போலவும், வயல்கள் சிறு பாத்திகளைப்போலவும், தென்னைகள் சிறு புற்களைப்போலவும், வாழைத் தோட்டங்கள் மஞ்சட் கொல்லைகளைப்போலவும் காட்சி அளித்தன. அன்னங்

கள், நாரைகள், செம்போத்துகள், கிளிகள், மயில்கள் இவை போன்ற பிறபறவைகள் தனித்தனியே ஒழுங்குபெற நின்று காட்சியளிப்பனபோல், பலநிறங்கள் வாய்ந்த மாடமாளிகைகளும், உப்பரிகைகளும் செய்குன்றங்களும் தோன்றின. மாடங்களில் கட்டிய கொடிகள் அப்பறவைகள் சிறகுகளை அசைத்தலைப்போலக் காட்சியளித்தன.

இவ்வாறு நாடுகளையும் நகரங்களையும் நோக்கி நோக்கி மகிழ்ந்தவண்ணம் சென்ற முனிவர்கள் **திருக்கொடுங்குன்றம், திருத்தளிப்புத்தூர்** (திருப்புத்தூர்). **திருவாடானை, திருப்புனவாயில், திருப்பூவணம், திருக்கானப்பேர், திருச்சுழியல், திருவிராமேச்சுரம், திருநெல்வேலி, திருக்குற்றாலம், திருப்பரங்குன்றம், திருவேடகம், திருஆப்பனூர்** என்னும் திருப்பதிகளைத் தரிசித்து இன்புற்றனர்.

**முனிவர்கள் சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்தல்**

குளிர்ந்த அலைகளாகிய கைகளையும் தாமரையாகிய முகத்தையுங்கொண்ட வையையாகிய பெருமாட்டியை முனிவர்கள் எதிர்கண்டு பணிந்து வணங்கினர்; அண்டத்தைக் கடந்து திருமாலைப்போல் உயர்ந்து நிற்கும் திருக்கோபுரத்தை முன் வணங்கி, வீதிகள்தோறும் வீழ்ந்து பணிந்து பலமுறை வலம் வந்து திருக்கோயிலை அடைந்தனர்; பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடித் திருவைந்தெழுத்தைச் செபித்துச் சித்தி விநாயகக் கடவுளின் திருவடிகளை வணங்கினர்; மூவுலகங்களையும் நான்கு மறைகளையும் பெற்றருளிய அங்கயற்கண் அம்மையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் திருவருளைப் பெற்றனர்; பின்பு ஒளியினை வீசும் மணிகள் பதித்த விண்ணிழி விமானத்தில் எழுந்தருளியிருக்கும் ஒப்பற்ற ஒளிவடிவினனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடித்தாமரைகள் தம் முடியின்மேல் மலர வணங்கித் துதித்தனர்.

**முனிவர்கள் ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்தல்**

முனிவர்கள் யாவரும் அன்று இரண்டு வேளை உணவின்றி இருந்து மறுநாட் காலையில் சூரியன் எழுமுன் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடினர்; ஐம்புலன்களையும் வென்ற அவர்களுடைய உள்ளமாகிய வயலில் அன்பாகிய நீர் பெருகிப்

பாய்தலால் இனிய அருள் விளையாநின்ற முழுமுதலை நிலவுலகில் திரண்டெழுந்த மின்திரளைப்போல் காட்சியளிக்கும் விமானத்தின்மீது இருக்கக்கண்டனர்; வணங்கிக் களிகூர்ந்தனர். நறுமணம் நிறைந்த திருமஞ்சனம், தேன், கருப்பஞ்சாறு, பஞ்சகௌவியம், பஞ்சாமிர்தம், சந்தனம். பன்னீர், கத்தூரி, மலர், ஆடை, அணிகலன், திருவமுது முதலானவற்றைக் கைக்கொண்டு சத உருத்திர மந்திரங்கூறி அபிடேகஞ்செய்து கத்தூரி பூசிச் சந்தனக்குழம்பு, மலர்கள், ஆடைகள் அணிகலன்கள் சாத்திப் பாலன்னம் நிவேதித்து, முகவாசமும் தாம்பூலமும் கொடுத்துத் தூப தீபங்காட்டி, அக்கினி காரியஞ் செய்து, ஆயிரந் திருநாமங்களால் வில்வம் முதலியவற்றால் அருச்சனை புரிந்து, சிவபூசா பலனை அர்க்கிய சலத்தோடு பூவைக் கையில் ஏந்திச் சிவபெருமானின் வலது திருக்கரத்தில் கொடுத்து வணங்கிக் கண்களில் ஆனந்தக்கண்ணீர் பெருகப் பேரன்புடன் சோமசுந்தரக் கடவுளை, அஞ்சலித்துத் துதிப்பாராயினர்:

பழியொடு பாச மாறு கெடவாச
வன்செய் பணிகொண்ட அண்ட! சரணம்!
வழிபடு தொண்டர் கொண்ட நிலைகண்டு
வெள்ளி மணிமன்று ளாடி! சரணம்!
செழியன்வி ளிந்தி டாத படிமாறி
ஆடல் தெளிவித்த சோதி! சரணம்!
ஏழுகடல் கூவி மாமி யுடன்மாமன்
ஆட இசைவித்த ஆதி! சரணம்!

வெங்கரி ஆவி சோர நரசிங்க
வாளி விடுவேடர் ஏறு! சரணம்!
புங்கவர் தேற ஆதி மறையுட்
கிடந்த பொருள்ஓது போத! சரணம்!
வங்கம தேறி வேலை மகரம்
பிடித்த வலையாள் மணாள! சரணம்!
கங்கண நாகம் வீசி நகரெல்லை
கண்ட கறைகொண்ட கண்ட! சரணம்!

மைந்தனில் ஆழி மேரு மகவான்
அகந்தை மடிவித்த நித்த! சரணம்!
சுந்தர நாம வாளி பணிகொண்டு
கிள்ளி தொகைவென்ற வீர! சரணம்!
வெந்திறன் மாறன் முன்கல் உருஆனை
கன்னல் மிசைவித்த சித்த! சரணம்!
முந்திய கல்லின் மாதர் பெறஅட்ட
சித்தி முயல்வித்த யோகி! சரணம்!

திருமணி மைந்தன் மைந்தன் முடிசூட
விற்ற திருமல்கு செல்வ! சரணம்!
மருமகன் என்று மாமன் உருவாய்
வழக்கு வலிபேசு மைந்த! சரணம்!
குருமொழி தந்து நாரை குருவிக்கு
வீடு குடிதந்த எந்தை! சரணம்!
வருபழி அஞ்சி வேட மகனுக்(கு)
இரங்கு மதுரா புரேச! சரணம்!

விருத்தகு மார பால அருண்மேனி
கொண்டு விளையாடும் அண்ணல்! சரணம்!
குரத்தியை நச்சு பாவி உயிருண்டு
சோரி குடைவாகை வேல! சரணம்!
கருத்திசை பாணன் ஆளின் இசைபாடி
மாறு களைவேத கீத! சரணம்!
நரித்திரள் மாவை மீள நகரங்
கலங்க நரிசெய்த நம்ப! சரணம்!

முற்பகல் ஆறி ரண்டு சிறுபன்றி
உண்ண முலைதந்த அன்னை! சரணம்!
பொற்புறு மாய ஆவை அடலேறு
கொண்டு பொருதட்ட சிட்ட! சரணம்!
பற்பல ஞாலம் எங்கும் அடையப்
பிரம்பு படும்அட்ட மூர்த்தி! சரணம்!
கற்பினொ ருத்தி மன்றல் அறிவிக்க
மூன்று கரிதந்த வள்ளல்! சரணம்!

**ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் முனிவர்களுக்கு அருளல்**

இவ்வாறு பலபட வாழ்த்தி வழிபட்ட வசிட்டர் முதலிய முனிவர்களையும், அகத்திய முனிவனையும் தேன் பிலிற்றும் கடம்ப வனத்தில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுள் சிவலிங்கத்தினின்றும் வெளிப்பட்டு வந்து நோக்கி, "சினத்தினை வென்று சிந்தை தெளிந்த முனிவர்களே! நீங்கள் இங்கு எனக்குச் செய்த வழிபாடும், துதிமொழியும் எல்லாத் திருத்தலங்கள் அனைத்திற்கும், உயிர்கள் அனைத்திற்கும் நிறைந்து நமக்குப் பெரு மகிழ்ச்சியை அளித்தன" என்று திருவாய் மலர்ந்து திருவருள் செய்து, அகத்திய முனிவரை அருகே அழைத்து அவருடைய சிரசின்மேல் தமது திருக்கரத்தினை வைத்து, முதுகினைத் தடவி, "நீ எம்மை ஒப்பாய்; உனது கற்புடைய மனைவியாகிய உலோபாமுத்திரை உமாதேவியாரை ஒப்பாள். ஆதலின் உன்னை ஒப்பவர் இந்த உலகத்தில் ஒருவரும் இல்லை! நிறைந்த தவம் புரிந்தோனும், தவத்தின் பயனைப் பெற்றோனுமாகிய உனக்கு யாம் அளிக்கத்தக்க வரம் என்ன இருக்கிறது?" என்று கூறி, அருள் பாலித்து இலிங்கத்திலேயே மறைந்தருளினர்.

**முனிவர்கள் சிவ வழிபாட்டுடன் மதுரையில் வசித்தல்**

அகத்தியர் வசிட்டர் முதலாகிய முனிவர்கள் தத்தம் பெயரால் ஒவ்வொரு சிவலிங்கம் அங்கு அமைத்து வழிபட்டு, அருகில் ஒரு தபோவனஞ் செய்து அதிலிருந்துகொண்டு தினந்தோறும் திரிகாலங்களிலும் சென்று அங்கயற்கண் அம்மையாரையும் சோமசுந்தரக் கடவுளையும் தரிசித்து வணங்கிக்கொண்டிருந்தார்கள்.

செய்யுள்—53
ஆகச் செய்யுள்—3363

**திருவாலவாய்க் காண்டம் முற்றிற்று**

---

**திருவிளையாடற் புராண வசனம்**
**முற்றுப் பெற்றது.**

ஸ்ரீ சொக்கலிங்கப் பெருமான் திருவடி வாழ்க!

---

## மதுரையில்
## திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி ரூ. 7,000

திருமறைக் காட்டில் (வேதாரண்யம்) சைவவேளாண் மரபில் தோன்றியவரும், வடமொழியிலும் தென்மொழியிலும் புலமை நிரம்பியவரும், சோதிடம், பரதநாட்டியம், இரத்தினப் பரீட்சை, அசுவப் பரீட்சை முதலிய பல கலைகளையும் ஆராய்ந் தறிந்தவரும், மீனாட்சியம்மையார் கனவிற் பணித்தமையான் **'சத்தியாய்'** என்ற மங்கல மொழியில் தொடங்குவதும்—தெய்வமணங் கமழ்வதும்—3363 பாடல்களைக் கொண்டதும்—மதுரைச் சொக்கநாதருடைய 64 திருவிளையாடல்களைக் கூறுவதும்—சைவப் பெருமக்களால் புத்தி சித்தி முத்திகளின் பொருட்டு நாடோறும் பூசிக்கப்பெற்றும், முறையாகப் பாராயணம் செய்யப்பெற்றும், மிகப் பாராட்டிப் படித்துப் பொருள் சொல்லப் பெற்றுவருவதும்—பெரிய புராணத்தைப் போன்று கயிறு சாத்தி உண்மை காணும் பெருவழக்கினைக் கொண்டுள்ளதும் ஆகிய திருவிளையாடற் புராணத்தைப் பாடியவரும், அதனைச் சொக்கேசர் சந்நிதியில் அறுகாற்பீடத்திருந்து அரங்கேற்றியவரும், மதுரை அறுபத்து நான்கு திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி, வேதாரண்ய புராணம் முதலிய நூல்களை இயற்றியவரும், 16–17ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்தவரும் ஆகிய பரஞ்சோதி முனிவர் அருளிய திருவிளையாடற் புராணத்தை மதுரையில் ஆண்டுதோறும் சித்திரை மாசத்தில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்தும் கேட்பித்தும் மக்களைச் சிவானந்தப் பெருவாழ்வு பெறுவித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் **ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால்** இந்நிதி நிறுவப்பெற்றது. இது **'மதுரையில் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி'** எனப் பெறும்.

2. இதற்குரிய மூல பண்டாரம் ரூ. 7,000 (ரூபாய் ஏழாயிரம்) ஆண்டொன்றுக்கு ரூ. 100-க்கு ரூபாய் 3 வீதம் வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் பத்திரங்களாக உள்ளது. (3% கன்

வர்ஷன் லோன் ஆப் 1946 – சர்க்கார் கடன் பத்திரம் நெ. சிஏ. 136969 ரூ. 5.000; சிஏ. 135549 ரூ. 1 000; 135550 ரூ. 1,000 ஆக ரூ. 7,000. இந்நிதி நம்பேரிலும் நமக்குப் பின் உரிமை யுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும்.

3. இம்மூல நிதியினின்று கிடைக்கும் வட்டித் தொகையி னின்று ஆண்டுதோறும் மதுரையில் சித்திரை மாசத்தில் பரஞ் சோதி முனிவர் திருவிளையாடற் புராணச் சொற்பொழிவுகளை நிகழ்த்துவிக்க ரூ. 192 செலவு செய்யப்பெறும். எஞ்சிய தொகை தபாற் செலவு முதலிய சில்லரைச் செலவுகட்குப் பயன்படுத்தப் பெறும்.

4. திருவிளையாடற் புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த் தக் கட்டுப்பாடுகளாவன;—

அ. ஆண்டுதோறும் மதுரையில் சித்திரை மாசத்தில் 24 நாட்கள் தொடர்ந்து திருவிளையாடற் புராணச் சொற் பொழிவுகள் சைவ சீலமுள்ள பழுத்த தமிழ்ப்புலவர் ஒருவரால் நிகழ்த்தப் பெறும்.

ஆ. ஷை புலவர் பல்கலைக் கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்வில் வெற்றி பெற்றவராகவும், சொல் வன்மையுடையவராகவும், திருமுறை பயின்று சித்தாந்த சாத்திரப் பயிற்சி பெற்றுச் சைவ நல்லொழுக்கம் உடையவ ராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடைய ஒருவர் ஆண்டுதோறும் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ள வர்களாலும் திருவிளையாடற் புராணப் பிரசங்கம் செய்ய நியமிக்கப்பெறுவர்.

இ. ஷை புலவர் மதுரையில் சித்திரை மாசத்தில் 24 நாட்கள் நாடோறும் மாலையில் தெளிவாகக் கேட்போர் மனங்கொள்ளுமாறு பக்திப் பெருக்குடன் சொற்பெருக்காற்ற வேண்டும்.

ஈ. சொற்பெருக்குத் திட்டம் இதன் சேர்க்கையிற் குறிக்கப்பெற்றுள்ளது.

உ. இதன் சேர்க்கையில் குறிக்கப்பெற்றுள்ளவாறு 24 சொற்பொழிவுகளும் நிகழ்த்துபவருக்கு மொத்தமாக

ரூ. 192 (ரூபாய் நூற்றுத் தொண்ணூற்றிரண்டு) சன்மான மாக அளிக்கப்பெறும். வட்டி வருமானத்திற்கு ஏற்ப இத்தொகை கூட்டவும் குறைக்கவும் பெறும். இச்சன்மானத் தொகை பிரசங்க சன்மானம், பிரயாணச் செலவு, நித்தியப் படிச் செலவு முதலிய எல்லாச் செலவினங்களையும் உட் கொண்டதாகும்.

ஊ. நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர் களாலும் நியமிக்கப்பெற்று அனுப்பப்பெறும் சொற்பொழி வாளர் தவிர்க்க முடியாத காரணங்களால் சொற்பொழிவாற்ற மதுரைக்குச் செல்லத் தவறின் நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப்பெறும் பிறர் ஒருவர் ஷி கட்டுப்பாடுகளுக்கு ஏற்பச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி அதற்குரிய சன்மானம் பெறக்கடவர்.

எ. மேற்படி சொற்பொழிவாளர் சில நாட்கள் சொற்பெருக்காற்றித் தவிர்க்க முடியாத காரணங்களால் எஞ்சிய நாட்களில் சொற்பொழிவாற்ற முடியாது போயின், நம்மாலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப் பெறும் பிறர் ஒருவர் எஞ்சியுள்ள நாட்களில் சொற்பொழிவு களை நிகழ்த்தக் கடவர். இருவரும் தாம் தாம் நிகழ்த்திய சொற்பொழிவுகளுக்குச் சொற்பொழிவு ஒன்றுக்கு ரூ. 8 (ரூபா எட்டு) வீதம் சன்மானம் பெறக்கடவர்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப் பெறமாட்டாது. நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர் களாலும் இத்திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி பரிபால னஞ் செய்யப்பெற்று வரும்.

## செக்கர் வார்சடைச் சொக்க நாயகன் திருவருள் போற்றி!

### சேர்க்கை (ஷெடியூல்)

### சொற்பெருக்குத் திட்டம்: 24 சொற்பொழிவுகள்

1. காப்பு, வாழ்த்து, நூற்பயன், கடவுள் வாழ்த்து, பாயிரம், அவையடக்கம், 31 செய்யுட்கள், திருநாட்டுச் சிறப்பு 60 செ. திருநகரச் சிறப்பு 109 செ. திருக்கயிலாயச் சிறப்பு

7 செ. புராண வரலாறு 25 செ. தல விசேடம் 23 செ. தீர்த்த விசேடம் 36 செ. மூர்த்தி விசேடம் 37 செ. பதிகம் 15 செ. ஆகச் செய்யுட்கள் 343.

2. இந்திரன் பழிதீர்த்த படலம் 97 செ. வெள்ளையானை சாபந்தீர்த்த படலம் 31 செ. ஆகச் செய்யுட்கள் 128.

3. திருநகரங்கண்ட படலம் 47 செ. தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம் 81 செ. ஆகச் செய்யுட்கள் 128.

4. திருமணப் படலம் செய்யுட்கள் 199.

5. வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம் 28 செ. குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம் 22 செ. அன்னக் குழியும் வைகையுமழைத்த படலம் 27 செ. எழுகடலழைத்த படலம் 15 செ. மலையத்துவசனையழைத்த படலம் 31 செ. ஆகச் செய்யுட்கள் 123.

6. உக்கிரபாண்டியன் திருவவதாரப் படலம் 45 செ. உக்கிரபாண்டியனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம் 66 செ. ஆகச் செய்யுட்கள் 111.

7. கடல்சுவற வேல்விட்ட படலம் 20 செ. இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம் 59 செ. மேருவைச் செண்டாலடித்த படலம் 41 செ. ஆகச் செய்யுட்கள் 120.

8. வேதத்துக்குப் பொருள் அருளிச் செய்த படலம் 42 செ. மாணிக்கம் விற்ற படலம் 93 செ. ஆகச் செய்யுட்கள் 135.

9. வருணன்விட்ட கடலை வற்றச் செய்த படலம் 19 செ நான்மாடக் கூடலான படலம் 26 செ. எல்லாம் வல்ல சித்தரான படலம் 24 செ. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம் 29 செ. யானை எய்த படலம் 42 செ. ஆகச் செய்யுட்கள் 140.

10. விருத்த குமார பாலரான படலம் 33 செ. கான்மாறியாடின படலம் 29 செ. பழியஞ்சின படலம் 44 செ. ஆகச் செய்யுட்கள் 106.

11. மாபாதகந் தீர்த்த படலம் 41 செ. அங்கம் வெட்டின படலம் 28 செ. நாகமெய்த படலம் 23 செ. மாயப்பசுவை வதைத்த படலம் 38 செ. ஆகச் செய்யுட்கள் 130.

12. மெய்க்காட்டிட்ட படலம் 41 செ. உலவாக்கிழி யருளிய படலம் 19 செ. வளையல் விற்ற படலம் 36 செ. அட்டமாசித்தி யுபதேசித்த படலம் 29 செ. ஆகச் செய்யுட்கள் 125.

13. விடையிலச்சினையிட்ட படலம் 30 செ. தண்ணீர்ப் பந்தல் வைத்த படலம் 37 செ. இரசவாதஞ் செய்த படலம் 30 செ, சோழனை மடுவில் வீட்டிய படலம் 22 செ. ஆகச் செய்யுட்கள் 119.

14. உலவாக்கோட்டையருளிய படலம் 18 செ. மாமனாக வந்து வழக்குரைத்த படலம் 37 செ. வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய படலம் 68 செ. ஆகச் செய்யுட்கள் 123

15. விறகுவிற்ற படலம் 70 செ. திருமுகங் கொடுத்த படலம் 30 செ. பலகையிட்ட படலம் 18 செ. ஆகச் செய்யுட்கள் 118.

16. இசைவாது வென்ற படலம் 44 செ. பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்த படலம் 63 செ. பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம் 18 செ. ஆகச் செய்யுட்கள் 125

17. கரிக்குருவிக்குபதேசம் செய்த படலம் 23 செ. நாரைக்கு முத்தி கொடுத்த படலம் 25 செ. திருவாலவாயான படலம் 28 செ. சுந்தரப்பேரம்பு எய்த படலம் 44 செ. ஆகச் செய்யுட்கள் 120

18. சங்கப் பலகை கொடுத்த படலம் 39 செ, தருமிக்குப் பொற்கிழியளித்த படலம் 107 செ. ஆகச் செய்யுட்கள் 146

19. கீரனைக் கரையேற்றிய படலம் 27 செ. கீரனுக்கு இலக்கணமுபதேசித்த படலம் 30 செ. சங்கத்தார் கலகம் தீர்த்த படலம் 14 செ. இடைக்காடன் பிணக்கு தீர்த்த படலம் 38 செ. ஆகச் செய்யுட்கள் 109

20. வலைவீசின படலம் 64 செ. வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம் 86 செ. ஆகச் செய்யுட்கள் 150

21. நரி பரியாக்கிய படலம் 127 செ.

22. பரி நரியாக்கிய படலம் 66 செ. மண்சுமந்த படலம் 114 செ. ஆகச் செய்யுட்கள் 180,

23. பாண்டியன் சுரந்தீர்த்த படலம் 68 செ. சமணரைக் கழுவிலேற்றிய படலம் 82 செ. ஆகச் செய்யுட்கள் 150.

24. வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம் 55 செ. அருச்சனைப் படலம் 53 செ. ஆக செய்யுட்கள் 108.

திருப்பனந்தாள், 2—4—1954. **(Sd.) Kasivasi Arulnandhi Thambiran**

---

**Registered at Tiruvadamarudhur Sub-Registrar's Office on 2—4—1954 as No. 19 of 1954, Book No. 4, Volume 45, Pages 80 to 84.**

## மதுரையில் பெரிய புராணப் பிரசங்க நிதி ரூ. 7000

அருள்மொழித் தேவர் எனும் இயற்பெயரினரும், குன்றத்தூரில் சேக்கிழார் குடியில் அவதரித்தவரும், அநபாயசோழன் எனப்பெறும் இரண்டாம் குலோத்துங்க சோழனுடைய முதன் மந்திரியாயிருந்து அம்மன்னனுல் உத்தம சோழப் பல்லவன் என்று பட்டப்பெயர் தரப்பெற்றவரும், தில்லை வாழந்தணரே முதலாகச் சீர்படைத்த தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார் பதங்களைப் போற்றி ஒல்லையவர் புராண கதை உலகறிய விரித்துரைத்தற்குத் தில்லையம்பலவர் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்க அதனையே முதலிலும் இடையிலும் கடையிலும் வைத்து 4286 (4253) செய்யுட்கள் கொண்ட (12-ம் திருமுறையாகிய) பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தைத் தில்லையில் பத்திச்சுவை நனிசொட்டச் சொட்ட பாடிய கவி வலவரும், அரசன் வேண்டுகோட்படி சித்திரை ஆதிரைநாள் தொடங்கி எதிராமாண்டு சித்திரை ஆதிரை வரையில் தாமே புராண காதை விரிவுரை நடாத்தித் தொண்டர் சீர்பரவுவார் என்ற சிறப்புப் பெயர் பெற்றவரும், வைகாசிப் பூசத்தில் சிவகதி மேவியவரும் ஆகிய **சேக்கிழார் சுவாமிகளை நினைவு கூர்தற் பொருட்டும்**, அளவிலாத பெருமையராகிய அளவிலா அடியார் புகழைத் திருத்தொண்டத் தொகையில் இறைவன் அருள்வழி

நின்று நம்பியாரூரர் பாடியருளிய அதையே ஆதரவாகக் கொண்டு சேக்கிழார் சுவாமிகள் பாடியருளியமையின் நம்பியாரூரது திருநாளாகிய ஆடிச் சுவாதியில், சம்பந்தர், சைவஸ்தாபனம் செய்யும் பொருட்டுப் பல அற்புதங்கள் நிகழ்த்தியதும், வாதவூரடிகள் பொருட்டு இறைவன் பல திருவிளையாடல்கள் செய்யப்பெற்றதும், மூவர் தமிழ் மெய்ஞ்ஞானத் திருநெறித் தேவாரம் அருளப்பெற்றதும், திருச்சபைகள் ஐந்தனுள் வெள்ளியம்பலம் எனப்பெறுவதுமாகிய **மதுரையில்** தில்லை வாழந்தணரே முதலாகச் சீர்படைத்த தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார் புகழினைச் சொற்பொழிவு வாயிலாகப் பரப்புதற் பொருட்டும் இச்சேமவைப்பு நிறுவப்பெற்றது. இது 'மதுரையில் பெரிய புராணப் பிரசங்க நிதி' எனப்பெறும். இந்நிதி திருப்பனந்தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 7,000 (ரூபா ஏழாயிரம்.) இது ஆண்டொன்றுக்கு ரூபா 100-க்கு ரூ. 3 வட்டி தரக்கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெற்றது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் நெ. சிஏ. 138857 ரூ. 2000 ; சிஏ. 138831 ரூ. 5,000 ஆகக் கூடுதல் ரூ. 7,000. இந்நிதி நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலிக்கப் பெறும்.

3. இச்சேமவைப்பினின்று பெறக்கூடிய வட்டித் தொகை ரூ. 210. இதிலிருந்து பெரியபுராணப் பிரசங்கம் செய்வார்க்கு ஊதியம் அளிக்க ரூ. 180 செலவிடப்பெறும். எஞ்சிய தொகை இத்தருமத்தை நடத்தப் பயன்படுத்தப்பெறும்.

4. பெரியபுராணப் பிரசங்கம் செய்யக் கட்டுப்பாடுகளாவன ;—

அ. ஆண்டுதோறும் ஆடிச்சுவாதிக்கு முன்னும் பின்னுமாகத் தொடர்ந்து உசிதம்போல் 4½ நாட்கள் காலையிலும் மாலையிலும் நம்மால் நியமிக்கப்பெறும் சைவ சீலமுள்ள பழுத்த தமிழ்ப் புலவர்களால் பெரிய புராணத்தில் ஒன்பது பிரசங்கங்கள் மதுரையில் நடத்தப்பெறும்.

ஆ. ஷ புலவர்கள் பல்கலைக்கழகத்து வித்வான் அல்லது புலவர் தேர்வில் வெற்றி பெற்றவராகவும், அல்லது பி. ஏ., பி. ஓ. எல். முதலிய பட்டதாரிகளாகவும் நாவன்மை யுள்ளவ ராகவும், திருமுறை பயின்று சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சி பெற்றுச் சைவ நல்லொழுக்கம் உடையவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடையவர்களே ஆண்டு தோறும் நம்மாலும் நமக்குப்பின் உரிமை உள்ளவர்களாலும் பெரியபுராணப் பிரசங்கங்கள் செய்ய நியமிக்கப்பெறுவர்.

இ. சொற்பெருக்கு ஒன்றுக்கு ரூ. 20 (ரூபா இருபது) வீதம் சொற்பணியாளருக்கு ஊதியம் அளிக்கப்பெறும். இவ் வூதியம் சொற்பெருக்குச் சன்மானம், பிரயாணச் செலவு, நித் தியப் படிச்செலவு முதலிய எல்லாச் செலவுகளையும் உட் கொண்டது.

ஈ. எந்த நாளேனும் சொற்பணியாளர் எதிர்பாராத கார ணங்களால் வாராமற்போயின் நம்மாலும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்களாலும் நியமிக்கப்பெறும் பிறர் ஒருவர் அக்கட மையை ஆற்றி அச்சொற்பொழிவு அல்லது சொற்பொழிவு களுக்குரிய ஊதியத்தைப் பெறக்கடவர்.

உ. சொற்பெருக்குத் திட்டம்:

முதல் நாள் பிற்பகல் முதற்சொற்பெருக்கு-திருமலைச் சருக்கம்

| | | |
|---|---|---|
| திருமலைச் சிறப்பு | 40 | செய்யுள் |
| திருநாட்டுச் சிறப்பு | 35 | ,, |
| திருவாரூர்ச் சிறப்பு | 50 | ,, |
| திருக்கூட்டச் சிறப்பு | 11 | ,, |
| தடுத்தாட்கொண்ட புராணம் | 203 | ,, |

ஆகச் செய்யுள் 339,

2-ம் நாள் முற்பகல் 2-ம் சொற்பெருக்கு - தில்லைவாழந்தணர் சருக்கம்.

| | | |
|---|---|---|
| தில்லைவாழந்தணர் புராணம் | 10 | செய்யுள் |
| திருநீலகண்டர் | 44 | ,, |
| இயற்பகையார் | 36 | ,, |
| இளையான் குடிமாறர் | 27 | ,, |
| மெய்ப்பொருள் நாயனர் | 24 | ,, |

| | |
|---|---|
| விறன்மிண்டர் | 11 செய்யுள் |
| அமர்நீதி | 49 ,, |

ஆகச் செய்யுள் 201.

2-ம் நாள் பிற்பகல் 3-ம் சொற்பெருக்கு-இலைமலிந்த சருக்கம்.

| | |
|---|---|
| எறிபத்தர் | 57 செய்யுள் |
| ஏனாதிநாதர் | 42 ,, |
| கண்ணப்பர் | 186 ,, |
| குங்கிலியக்கலயர் | 35 ,, |
| மானக்கஞ்சாறர் | 37 ,, |
| அரிவாட்டாயர் | 23 ,, |
| ஆனாயர் | 42 ,, |

ஆகச் செய்யுள் 422

3-ம் நாள் முற்பகல் 4-ம் சொற்பெருக்கு - மும்மையாலுல காண்ட சருக்கம்.

| | |
|---|---|
| மூர்த்தியார் | 49 செய்யுள் |
| முருகனார் | 14 ,, |
| உருத்திரபசுபதியார் | 10 ,, |
| திருநாளைப்போவார் | 37 ,, |
| திருக்குறிப்புத் தொண்டர் | 128 ,, |
| சண்டேசர் | 60 ,, |

ஆகச் செய்யுள் 298

3-ம் நாள் பிற்பகல் 5-ம் சொற்பெருக்கு - திருநின்ற சருக்கம்.

| | |
|---|---|
| திருநாவுக்கரசர் | 429 செய்யுள் |
| குலச்சிறையார் | 11 ,, |
| பெருமிழலைக்குறும்பர் | 11 ,, |
| காரைக்காலம்மையார் | 66 ,, |
| அப்பூதி | 45 ,, |
| திருநீலநக்கர் | 38 ,, |
| நமிநந்தி | 33 ,, |

ஆகச் செய்யுள் 633

4-ம் நாள் முற்பகல் 6-ம் சொற்பெருக்கு - வம்பறுவரிவண்டுச் சருக்கம்.

திருஞானசம்பந்தர் புராணம் 1256 செய்யுள்

4-ம் நாள் பிற்பகல் 7-ம் சொற்பெருக்கு - வம்பறுவரிவண்டுச் சருக்கம்.

| | | |
|---|---|---|
| ஏயர்கோன் கலிக்காமர் | 409 | செய்யுள் |
| திருமூலர் | 28 | ,, |
| தண்டியடிகள் | 26 | ,, |
| மூர்க்கர் | 12 | ,, |
| சோமாசிமாறர் | 6 | ,, |

ஆகச் செய்யுள் 481

5-ம் நாள் முற்பகல் 8-ம் சொற்பெருக்கு - வார்கொண்ட வனமுலையாள் சருக்கம்.

| | | |
|---|---|---|
| சாக்கியர் | 18 | செய்யுள் |
| சிறப்புலி | 6 | ,, |
| சிறுத்தொண்டர் | 88 | ,, |
| கழறிற்றறிவார் | 175 | ,, |
| கணநாதர் | 7 | ,, |
| கூற்றுவர் | 9 | ,, |

ஆகச் செய்யுள் 303

5-ம் நாள் பிற்பகல் 9-ம் சொற்பெருக்கு — பொய்யடிமையில்லாத புலவர் சருக்கம்

| | | |
|---|---|---|
| பொய்யடிமையில்லாத புலவர் புராணம் | 3 | செய்யுள் |
| புகழ்ச் சோழர் | 41 | ,, |
| நரசிங்கமுனையரையர் | 9 | ,, |
| அதிபத்தர் | 20 | ,, |
| கலிக்கம்பர் | 10 | ,, |
| கலியர் | 17 | ,, |
| சத்தியார் | 7 | ,, |
| ஐயடிகள் காடவர்கோன் | 9 | ,, |

கறைக்கண்டன் சருக்கம்

| | | |
|---|---|---|
| கணம்புல்லர் | 9 | செய்யுள் |
| காரி | 5 | ,, |
| நின்றசீர் நெடுமாறர் | 10 | ,, |

| | |
|---|---|
| வாயிலார் | 10 செய்யுள் |
| முனையடுவார் | 7 ,, |

கடல்சூழ்ந்த சருக்கம்

| | |
|---|---|
| கழற்சிங்கர் | 13 செய்யுள் |
| இடங்கழி | 11 ,, |
| செருத்துணை | 7 ,, |
| புகழ்த்துணை | 7 ,, |
| கோட்புலி | 13 ,, |

பத்தராய்ப்பணிவார் சருக்கம்

| | |
|---|---|
| பத்தராய்ப்பணிவார் | 8 செய்யுள் |
| பரமனையே பாடுவார் | 2 ,, |
| சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார் | 1 ,, |
| திருவாரூர்ப் பிறந்தார் | 2 ,, |
| முப்போதும் திருமேனி தீண்டுவார் | 3 ,, |
| முழுநீறு பூசிய முனிவர் | 6 ,, |
| அப்பாலும் அடிச்சார்ந்தார் | 2 ,, |

மன்னியசீர்ச் சருக்கம்

| | |
|---|---|
| பூசலார் | 18 செய்யுள் |
| மங்கையர்க்கரசியார் | 3 ,, |
| நேசர் | 5 ,, |
| கோச்செங்கட்சோழர் | 18 ,, |
| திருநீலகண்டயாழ்ப்பாணர் | 12 ,, |
| சடையர் | 1 ,, |
| இசைஞானியார் | 1 ,, |

வெள்ளானைச் சருக்கம் 53 ,,

ஆகச் செய்யுள் 343

ஊ. இதில் மேலே வகுத்துள்ளவாறு 9 சொற்பொழிவுகள் நடத்தப்பெறும். சொற்பணியாளர் ஷெ சருக்கங்களில் உள்ள பொருளைத் தெளிவாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் வகையில் கேட்போர் மனங்கொள்ளுமாறு பத்திப் பெருக்குடன் சொற்பெருக்காற்ற வேண்டும்.

5. இத்தருமம் வேறு எம்முறையிலேயும் பயன்படுத்தப் பெறமாட்டாது. இந்நிதி நம் பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலேயும் இருந்துவரும்.

திருப்பனந்தாள்.
29—6—54. (Sd.) Kasivasi Arulnandhi Thambiran

---

Registered at Tirvadamarudhur Sub Registrar's office on 30—6—1954 as No. 29 of 1954. Book No. 4. Volume No 45, Pages 97 to 100.

## மதுரையில் கந்தபுராணப் பிரசங்க நிதி ரூ. 3,500

முருகப் பெருமானுடைய ஆறுபடை வீடுகளில் ஒன்றாகிய திருப்பரங்குன்றத்தை அண்மையிலுடையதும், திருஞான சம்பந்தப் பெருமான் சமணரோடு புனல்வாதஞ் செய்த பொழுது இட்ட ஏடு எதிர் ஏறச் சென்ற புனலுடைய வைகை யாற்றங்கரையில் விளங்குவதும், தமிழ் மெய்ஞ்ஞானத் திருநெறித் தேவாரம் அருளிய மூவரும் எழுந்தருளியிருந்த பெருமையுடையதும், பாண்டிய மன்னர்களுக்கு வழிவழித் தலை நகராக விளங்கியதும், பாண்டியன் நெடுமாறன் பொருட்டுச் சுரவாதமும் அவன் முன்னிலையில் அனல்வாதமும் புனல்வாதமும் நிகழ்த்திச் சம்பந்தரால் சைவஸ்தாபனம் செய்யப்பெற்ற பெருமையுடையதும்; திருவாதவூரர் பொருட்டுப் பல அற்புதங்கள் நிகழ்த்தப்பெற்றதும், இறைவன் 64 திருவிளையாடல்கள் செய்துள்ளதும், சிவபெருமான் நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறிய சிறப்புள்ளதும், தண்டமிழ் மதுரம் கூட்டுணவெழுந்த வேட்கையால் தமர நீர்ப்புவன முழுதொருங்கீன்றாள் தடாதகா தேவியென் றொருபேர் தரிக்க வந்ததுவும், தனிமுதலொருவன் சவுந்தர மாறன் ஆனதும், குமரவேள் வழுதி யுக்கிரன் எனப் பேர் கொண்டு எழுந்தருளியதும், செந்திலாண்டவன் திருவருள் பாலிக்கப்பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மதுரைக் கெழுந்தருளி மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடி அரங்கேற்ற அங்கயற்கண்ணி குழந்தையாக உருவெடுத்து வந்து நாயக்க மன்னன் மடியிலமர்ந்து பிள்ளைத் தமிழ் கேட்டு உள்ளம் உவந்து முத்துமாலை அருளியமையும், அத்திருமலை நாயக்கள் இறும்பூது எய்தி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளைச் சிவி

கையில் ஏற்றி உலாப் போதரப் செய்தமையும், அம்மன்னன் வேண்டுகோட்கிணங்கி மதுரைக் கலம்பகமும் திருக்குறட் சாரமாகிய நீதிநெறி விளக்கமும் பாடியமையும் ஆகிய வரலாறுகள் நிகழ்ந்ததும் ஆகிய மதுரையில் அறுமுக முடையவோர் அமலன் மாக்கதையாகிய கந்தபுராணத்தைக் கந்தசட்டி நாட்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்தும் கேட்பித்தும் மக்களை நற்பேறடைவித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப்பெற்றது. இது 'மதுரையில் கந்தபுராணப் பிரசங்க நிதி' எனப்பெறும்.

2. இதற்குரிய சேமவைப்பு ரூ. 3,500 (ரூபா மூவாயிரத்தைந்நூறு) ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3% கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சிஏ. 138856 ரூ. 2,000 ; சிஏ. 137054 ரூ. 1.000 ; சிஏ. 136997 ரூ. 500 ஆகக் கூடுதல் ரூ. 3,500. இந்நிதி நம்பேரிலும் நமக்குப்பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்துவரும்.

3. இம்முதற் பொருளினின்று கிடைக்கும் வட்டித் தொகையைக்கொண்டு ஆண்டுதோறும் மதுரையில் கந்தசட்டி நாட்களில் கந்தபுராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவார்க்கு ஊதியம் அளிக்க ரூ. 90 செலவிடப்பெறும். எஞ்சிய தொகை இந்த தருமத்தை நடத்தப் பயன்படுத்தப்பெறும்.

4. கந்தபுராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தக் கட்டுப்பாடுகள் ஆவன :

அ. ஆண்டு தோறும் மதுரையில் கந்தசட்டி ஆறு நாட்களிலும் நாடோறும் மாலையில் கந்தபுராணச் சொற்பொழிவுகள் சைவசீலமுள்ள பழுத்த தமிழ்ப்புலவர் ஒருவரால் நிகழ்த்தப்பெறும்,

ஆ. ஷை புலவர் பல்கலைக்கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்தலில் வெற்றிபெற்றவராகவும், அல்லது பி.ஏ., பி.ஓ.எல்., முதலிய பட்டதாரிகளாகவும், சொல்வன்மையுடையவராகவும். சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சியுடைய

வராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடைய ஒருவரே ஆண்டுதோறும் நம்மாலும் நமக்குப் பின் உரிமை யுள்ளவர்களாலும் கந்தபுராணப் பிரசங்கம் செய்ய நியமிக்கப் பெறுவர்.

இ. ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு காண்டம் வீதம் ஆறு நாட்களும் கந்தபுராணத்து ஆறு காண்டங்களிலுமுள்ள பொருளைச் சொற்பொழிவாகக் கேட்போர் மனங்கொள்ளு மாறு பக்திப்பெருக்குடன் சொற்பெருக்காற்றவேண்டும் உசிதம்போல் சிறிது மாற்றியமைக்கச் சொற்பொழிவாளருக்கு உரிமையுண்டு,

ஈ. கந்தசட்டி நாளில் நிகழ்த்தப்பெறும் ஆறுவது சொற் பொழிவு நிகழ்த்தி முடிந்ததும் 6×15 ஆக ரூ. 90 (ரூபா தொண்ணூறு) சொற்பணியாளருக்குச் சன்மானமாக அளிக் கப்பெறும். வட்டி வருமானத்துக்கு ஏற்ப இத்தொகை கூட்டவும் குறைக்கவும் பெறும். இச்சன்மானத் தொகை பிரசங்க சன்மானம், பிரயாணச் செலவு, நித்தியப் படிச்செலவு முதலிய செலவினங்களையும் உட்கொண்டது.

உ. ஷீடிபுலவர் எதிர்பாராத காரணங்களால் மதுரைக்குச் செல்லத் தவறினும் அல்லது சொற்பொழிவாற்றுகையில் சொற்பொழிவாற்ற முடியாதுபோயினும் நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் நியமிக்கப்பெறும் பிறர் ஒருவர் அக்கடமையை யாற்றி நாட் சொற்பொழிவுக்கு ரூ. 15 (ரூபா பதினைந்து) வீதம் பிரசங்க சன்மானம் பெறக்கடவர்.

5. இத் தருமம் வேறு எந்த முறையிலேயும் பயன் படுத்தப்பெறமாட்டாது. நம்மாலும் நமக்குப் பின் உரிமை யுள்ளவர்களாலும் இக்கந்தபுராணப் பிரசங்க நிதி பரிபாலனம் செய்யப்பெற்றுவரும்.

திருப்பனந்தாள்
26—9—1954.

**(Sd.) Kasivasi Arulnandhi Thambiran**

---

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 30—6—1954 as No. 28 of 1954, Book No. 4. Volume No. 45, Pages 95 to 97.

உ

சிவ சிவ

செந்திலாண்டவன் துணை

**திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவராக எழுந்தருளியிருக்கும்**

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி**

**அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத்தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொதுமக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் பேரறக் கட்டளைகள்.

| தொடர் எண் | தரும விவரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 1. | சிவஞானசித்தியார் உபந்நியாசக் கட்டளை அண்ணாமலை பல்கலைக் கழகம் ... | 15,000 |
| 2. | கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த ... | 11,500 |
| 3. | திருவாங்கூர் மகாராஜா தேவாரப்பரிசு ... | 5,000 |
| 4. | சேரமான் பெருமாள் தேவாரப் பரிசு, கொச்சி. ... | 5,000 |
| 5. | மூவர் தேவாரப் பரிசு, சீகாழி, திருவாரூர் திருவையாறு, திருப்பனந்தாள், ஆடுதுறை... | 10,000 |
| 6. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தப் போதகாசிரியர் நியமிக்க ... | 60,000 |
| 7. | அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச்சம்பளம் அளிக்க ... | 30,000 |
| 8. | திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 9. | இசைத் தமிழ்க் கல்விக்கு நிலப்பெறுமானம்... | 1,00,000 |
| 10. | திருப்பனந்தாளில் கால்நடை வைத்திய சாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் நிலப் பெறுமானம் ... | 20,000 |

| | | | |
|---|---|---|---|
| 11. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) | ... | 10,000 |
| 12. | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) | ... | 10,000 |
| 13. | திருநள்ளாற்றில் ஆவணிமூல அன்னதானம் | | 3,000 |
| 14. | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் | ... | 17,000 |
| 15. | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர் உணவுநிதி நிலப்பெறுமானம் | ... | 1,00,000 |
| 16. | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப்பெறுமானம் | ... | 66,000 |
| 17. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் | ... | 2,900 |
| 18. | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் | ... | 3,300 |
| 19. | கும்பகோணத்தில் மணிக்கூண்டு | ... | 25,000 |
| 20. | தஞ்சையில் காசநோய் வைத்தியசாலை | ... | 29,500 |
| 21. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) | ... | 9,000 |
| 22. | மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு | ... | 5,000 |
| 23. | தருமை ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் | ... | 5,000 |
| 24 | சென்னை விவேகானந்தா கல்லூரியில் ராஜாஜி சைவ சித்தாந்தக் கட்டளை | ... | 10,000 |
| 25. | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சர். எஸ். ராதாகிருஷ்ணன் சைவசித்தாந்தக் கட்டளை | | 20,000 |
| 26. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் | ... | 5,000 |
| 27. | மதுரைத் திருமலை நாயகர் தேவாரப் பரிசு | ... | 10,000 |

28. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகளுக்கு நிலப்பெறுமானம் ... 1.00,000
29. ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் (ஜனவரித் திங்கள் 30-ம் நாள்) ... 5,000
30. ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு நிலப்பெறுமானம் ... 1,50,000
31. டாக்டர் சுவாமிநாத அய்யர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை ... 3,500
32. குடந்தையில் காந்தியடிகள் பசுப் பரிசு ... 1,000
33. காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகார நிதி ... 3,000
34. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை கட்டிடம் ... 10,000
35. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... 5,400
36. விஷ்ணுபுரத்தில் மகாத்மா காந்தி நினைவு ஹைஸ்கூல் படிப்பக நிதி ... 1,000
37. குடந்தையில் ராஜாஜி அபிராமி அந்தாதிப் பரிசு ... 3,500
38. திருநெல்வேலியில், ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... 3,500
39. திருப்பனந்தாள் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப் பந்தல் தர்மம் ... 3,500
40. ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ... 3,500
41. சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி ... 35,000
42. சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ... 12,000

43. இராமேசுவரத்தில் ஆடி, தை அமாவாசைகளில் அன்னதானம் ... 3,500

44. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ... 26,025

45. பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ... 5,000

46. அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி ... 3,500

47. ஸ்ரீ காசி கேதாரீசுவரர் கோயிலில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானம் நவராத்திரி விஜயதசமி நாட்களில் ... 5,000

48. ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் நினைவுத் தேவாரப் பரிசு ... 3,500

49. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயிலில் மின்சார தீபம்போட ... 7,500

50. காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ... 5,000

51. திருவஞ்சைக்களத்தில் ஆடிச் சுவாதியில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் 7,000

52. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் இரண்டாண்டு உதவி நிதி ... 23,500

53. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்திற்கு நான்கு ஆண்டு மூலதனம் ... 28,000

54. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் திருச்செந்தூர் மூன்ருவது உதவி மூலதனம் ... 20,500

55. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும் நிலமும் ... 15,000

56. மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி அலகபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவ சித்தாந்த உபந்நியாசக் கட்டளை ... 5,000

57. செந்திலாண்டவன் அன்னதானம் சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் (ஆவணி மூலத்தில்) நிலப்பெறுமானம் ... 60,000

58, திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ ... 2,275

59. ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப் பள்ளி நிறுவ ... 45,000

60. ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசியாத்திரை நிதி ... 5,000

61. பனைக் கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு ... 5,000

62. (6) ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது ... 16,000

63. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் மதுரை இரண்டாண்டு உதவி மூலதனம் ... 14,000

64. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரயம் ... 14.000

65. 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் வகையரு—திருநெல்வேலி இரண்டாண்டு உதவி மூலதனம் ... 10,000

66. 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி வகையரு கும்பகோணம் இரண்டாண்டு உதவி மூலதனம் ... 14,000

67. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கு நன்கொடை ... 15,000

68. ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ... 27,97

| | | |
|---|---|---|
| 69. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் ... | 10,000 |
| 70. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப் பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ... | 8,000 |
| 71. | ஸ்ரீ காசியில் தை மாதத்தில் இந்தியக் குடியரசு தினம் அன்னதானம் ... | 10,000 |
| 72. | ஸ்ரீ வைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 73. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப்பெறுமானம் ... | 50,000 |
| 74. | சண்டேசுவர நாயனார் நினைவு தண்ணீர்ப் பந்தல் தருமம் திருவாப்பாடி ... | 3,000 |
| 75. | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ... | 7,000 |
| 76. | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் தேவாரப் பரிசு ... | 5,000 |
| 77. | சென்னையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் திருக்குறள் பதிப்பு ... | 35,000 |
| 78. | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் மங்கையர்க்கரசியார் நினைவுப் பரிசு நிதி ... | 3,500 |
| 79. | கும்பகோணம் தாலூகா மேலச் சூரிய மூலை கண்டியன் பழவாற்றின் மீது பாலம் கட்ட ... | 8,390 |
| 80. | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் நிதி ... | 3,500 |

| | | |
|---|---|---|
| 81. | பழுத்த தமிழ்ப் புலவர் காசியாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் ... | 5,000 |
| 82. | திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் சித்திரைப் பரணியில் ... | 7,000 |
| 83. | திருவஞ்சைக் களத்தில் ஸ்ரீ சேரமான், ஸ்ரீ சுந்திரமூர்த்தி நாயனார் நினைவு வாசக சாலை நிறுவ ... | 5,000 |
| 84. | திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி ... | 35,000 |
| 85. | இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன்மார்க்க சங்க நூல் நிலைய நிதி ... | 5,000 |
| 86. | லால்குடியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி ... | 15,000 |
| 87. | அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி திருப்பனந்தாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி ... | 5,000 |
| 88. | குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு ... | 5,000 |
| 89. | திருப்பூந்துருத்தில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு - சித்திரைச் சதயத்தில் ... | 15,000 |
| 90. | திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு ... | 5.000 |
| 91. | ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தர் நினைவுப் பரிசு ஸ்ரீவைகுண்டம் ... | 3,500 |
| 92. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் இராமேசுவரம் ... | 3,500 |
| 93. | ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் சென்னபுரி அன்னதான சமாஜம் சென்னை (லைகாசி அமரபக்ஷம்) திருதியை ... | 5,000 |

| | | |
|---|---|---|
| 94. | காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்னதானம் (ஆனி மகத்தில்) ... | 5,000 |
| 95. | திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 5,000 |
| 96. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் நினைவுப்பரிசு நகராட்சி மன்றத்தில் ... | 5,000 |
| 97. | திருநாரையூரில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ ... | 7,000 |
| 98. | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப்பரிசு... | 5,000 |
| 99. | தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை ... | 5,000 |
| 100. | மணிக்குடியில் கடலூர்க்கலயர் புனற் பந்தர் நிதி ... | 3,500 |
| 101. | காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞான சம்பந்த சுவாமிகள் நினைவு மாசி மாத அன்னதானம் ... | 5,000 |
| 102. | திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் திருவள்ளுவர் நினைவுப் பரிசு ... | 5,000 |
| 103, | ஸ்ரீ காசியில் பங்குனி மாதத்தில் கமலை ஞானப்பிரகாசர் நினைவு அன்னம்பாலிப்பு ... | 5,000 |
| 104. | திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி ... | 5,000 |
| 105. | காசியில் சித்திரை மாதத்தில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 106. | ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி நிதி ... | 40,000 |
| 107. | செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி நிலப்பெறுமானம் ... | 50,000 |
| 108, | திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி ... | 12,000 |

| | | |
|---|---|---|
| 109. | ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு - திருச்செந்தூர் ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப்பள்ளிகளில் ... | 7,000 |
| 110. | ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியார் நினைவு அன்னம் பாலிப்பு கார்த்திகை மாதத்தில் ... | 7.000 |
| 111. | சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவு சிவபோக சாரம் பரிசுநிதி ... | 5,000 |
| 112. | தஞ்சையில் ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5,000 |
| 113. | மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5.000 |
| 114. | திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல் தரும நிதி தத்துவாஞ்சேரி ... | 3,500. |
| 115. | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு மாசி - மிருக சீருஷம் ... | 7,000 |
| 116. | திருக்காளத்தியில் கண்ணப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 117. | ஸ்ரீ காசியில் சுந்தரர் நினைவு ஆடிமாத அன்னம் பாலிப்பு சேமவைப்பு ... | 7,000 |
| 118. | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சகலகலா வல்லி மாலைப் பரிசு—அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி மாயூரம் ... | 1,000 |
| 119. | சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5,000 |
| 120. | வெள்ளியம்பலவாண முனிவர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு—திருவாங்கூர் பல்கலைக் கழகத்தில் ... | 3,500 |
| 121. | காசியில் ஜாபள்ளி ஜமீன்தார் அன்னம் பாலிப்பு சேமவைப்பு ... | 6,000 |

122. மதுரையில் கமலை வெள்ளியம்பலவாணர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு ... 5,000

123. திருவாதவூரில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ... 5,000

124. சீகாழியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பால் நிதி ... 3,500

125. திருவண்ணாமலையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... 5,000

126. கல்கத்தா சர்வகலாசாலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் தமிழ்ப் பரிசுநிதி... 3,500

127. தில்லையில் பல்லாண்டு விளக்கு நிதி (கட்டிடம்) ... 5,000

128. ஸ்ரீ காசியில் அரிமர்த்தன பாண்டியன் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ... 7,000

129. ஸ்ரீ காசியில் திருமூலர் நினைவு ஐப்பசித் திங்கள் அன்னம் பாலிப்பு ... 7,000

130. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பல வாண முனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசு சேமவைப்பு ... 5,000

131. திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரர் கொள்ளிடத் தீர்த்த விழா நிதி (கட்டிடம்) ... 12,000

132. இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ பொம்மராஜு ஸ்ரீ மகாராஜுலிங்காரு நினைவு அன்னதானம் ... 5,000

133. கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வெங்கடப் பெருமாள் ராஜுலிங்காரு நினைவு அன்னதானம் (மாசி மகத்தில்) ... 3,500

134. திருவண்ணாமலை (பராசத்தியம்மன் சந்நிதியில்) திருவெம்பாவை சலவைக்கல் பதிப்பு... 2,500

135. சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு சிவபுராணம் சலவைக்கல்பதிப்பு, திருவெம்பாவை, எழுத்து தேர்ச்சீலைகள், தேர்க்கொட்டகை, ஒலிபெருக்கி வகையரு ... 14,500

136. (கும்பகோணம்) திருப்புறம்பயம் சாட்சிநாத சுவாமி தேவஸ்தானம் திருப்பணி, மின்விளக்கு, தேர்ச்சீலை வகையரு ... 7,700

137. சுவாமிமலை, திருச்செந்தூர், மதுரை, திருத்தணிகை, மைலாப்பூர், திருவண்ணுமலை, திருநெல்வேலி. கச்சியேகம்பம், கச்சிக்குமரகோட்டம், திருப்பனந்தாள் அருணஜடேசுவரர் தேவஸ்தானம், கும்பகோணம், திருப்பரங்குன்றம், திருக்கழுக்குன்றம், வைத்தீஸ்வரன்கோவில் சீகாழி, திருக்கடவூர், திருவையாறு, தருமபுரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருவாதவூர், விருத்தாசலம் ஆகிய தலங்களில் "சிவ சிவ" ஒளிவளர் விளக்கு அமைக்க ... 8,510

138. தில்லையில் (சிதம்பரத்தில்) இராஜ ராஜ அபயகுலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி (கட்டிடங்கள்) ... 16,000

139. திருப்பனந்தாளில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி ஆதிகுமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசை நிதி(வைகாசி அமரபக்ஷம் திருதியை) நிலப் பெறுமானம் ... 1,00,000

140. காஞ்சிபுரத்தில் ஸ்கந்த ஷஸ்டி விழாவில் கந்தபுராண பிரசங்க நிதி ... 3,500

141. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி நிலப் பெறுமானம் ... 2,00,000

| | | |
|---|---|---|
| 142. | காசியில் காளத்தி ராஜா நினைவுநாள் ஹஸ்தி பசுபதீச்சுர பூசை நிதி ... | 5,000 |
| 143. | நாகர்கோவிலில் ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் நூல்நிலையப் படிப்பக நிதி ... | 3,500 |
| 144. | காசியில் ஞானசம்பந்தர் நினைவு வைகாசித் திங்கள் அன்னம்பாலிப்பு ... | 7,000 |
| 145, | திருவாரூரில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பல வாணமுனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசு நிதி ... | 3,500 |
| 146. | திருப்பனந்தாளில் ஸ்ரீ செந்திலாண்டவன் அருளிப்பாடு நிதி நிலப்பெறுமானம் ... | 2,00,000 |
| 147. | திருவிடைமருதூரில் தைப்பூச அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 148. | தில்லையில் பெரிய புராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 149. | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆனிமாதம் முழுதும் ... | 7,000 |
| 150. | இராமேசுவரத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆடி மாதம் முழுதும் ... | 3,500 |
| 151. | மதுரையில் திருவிளையாடற் புராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 152. | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னம்பாலிப்பு நிதி புரட்டாசி மாதத்தில் ... | 7,000 |
| 153. | காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம்பாலிப்பு ... | 3,500 |
| 154. | காசியில் கோச்செங்கட் சோழர் நினைவு அன்னம்பாலிப்பு மாசி மாதம் ... | 3,500 |
| 155. | மதுரையில் பெரிய புராணப் பிரசங்க நிதி | 7,000 |
| 156. | மதுரையில் கந்த புராணப் பிரசங்க நிதி ... | 3,500 |

157. சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்பு நிலப்பெறுமானம் ... 1,50.000

158. கல்கத்தா பல்கலைக் கழகத்தில் ஸ்ரீகாசி வாசி சுவாமிநாத சுவாமிகள் நினைவு தமிழ்ப் பரிசு நிதி ... 3,500

159. சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி ... 7,000

160. திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு ஆனி மகம் ... 5,000

161. சீகாழியில் சட்டைநாதர் புழுகு நெய் சாத்து நிதி ... 3,500

162. மதுரையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பசு நிதி ... 3,500

163. ஸ்ரீ காசியில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு (பங்குனி மாதத்தில்) ... 5,000

164. ஸ்ரீ காசியில் இசைஞானியார் நினைவு அன்னம் பாலிப்பு (சித்திரை மாதத்தில்) ... 5,000

165. ஸ்ரீகாசியில் திருநீலகண்ட நாயனார் நினைவு அன்னம்பாலிப்பு (வைகாசி மாதத்தில்) ... 3,000

166. ஸ்ரீ காசியில் நன்பாட்டுப் புலவர் நினைவு ஆனி மாத அன்னம்பாலிப்பு ... 3,000

167. இராமேச்சுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு ... 3,500

168. ஸ்ரீ காசியில் மும்மையால் உலகாண்ட மூர்த்தி நினைவு ஆடிமாத அன்னம்பாலிப்பு... 3,000

169. திருவாரூரில் மனுநீதிச் சோழர் நினைவு பரிசு நிதி ... 3,500

170. ஸ்ரீ காசியில் குங்கிலியக் கலயர் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ... 3,000

171. திருப்பனந்தாளில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு பிரசவ விடுதி கட்டுவதற்கு நன்கொடை ... 5,000

172. ஸ்ரீ காசியில் உருத்திர பசுபதியார் நினைவு புரட்டாசி மாத அன்னம் பாலிப்பு ... 3,000

173. ஸ்ரீ காசியில் நெடுமாற நாயனார் நினைவு ஐப்பசி மாத அன்னம் பாலிப்பு ... 3,000

174. ஸ்ரீ காசியில் ஆனாயநாயனார் நினைவு கார்த்திகை மாத அன்னம் பாலிப்பு ... 3,000

175. இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ஸ்ரீ பொம்மராஜு நினைவு அன்னம் பாலிப்பு ... 6,000

176. ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி இராமலிங்கசுவாமிகள் நினைவு மாசிமாத அன்னம் பாலிப்பு நிதி ... 3,500

177. வட திருவாலங்காட்டில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம்பாலிப்பு ... 5 000

178. காஞ்சிபுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு ... 5,000

179. காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாச்சாரியர் நினைவுப் பசுப் பரிசு நிதி ... 3,500

180. காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பன் உருத்திராக்கத் தேவார நிதி ... 50,000

181. சுவாமிமலையில் அப்பர் நினைவு புனற் பந்தர் நிதி ... 3,500

182. திருப்பனந்தாள் சிவசிவ நால்நடை வைத்திய சாலைக்குப் புதிய கட்டிடம் கட்டுவதற்கு நன்கொடை ... 3,000

183. சிவன் கோயில்களில் தேவாரப் பாசுரங்களைப் பிற தெய்வப் பாடல்களோடு கொண்ட கல்லெழுத்துப் பதிப்பு — மதுரை, திருக்கழுக்குன்றம், மயிலாப்பூர் திருச்செந்தூர், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருவாரூர், திருக்குற்ருலம், திருப்பனந்தாள், திருப்புன்கூர், சீகாழி, வேதாரண்யம், திருவையாறு, அவிநாசி, திருவெண்ணெய்நல்லூர், திருவதிகை, திருமருகல், சுவாமிமலை, வைத்தீஸ்வரன் கோயில், திருச்சிராப்பள்ளி, திருவோத்தூர், திருவிடைக்கழி, சிதம்பரம், திருவண்ணமலை. வடதிருமுல்லைவாயில், பழநி ... 22,400

184. மதுரைச் சொக்கலிங்கம் சந்தன நெய்ப் பூச்சு நிதி ... 7,000

185. சிதம்பரம் நடராஜா சபையில் கீழ்புறம், மேற்புறம் அருகால் கதவு வெள்ளித்தகடு நகாஸ் வேலை செய்ய வெள்ளிக்கிரயம் கூலி வகையரு ரூ. 7000; ஷை அருகாலுக்கு ரூ. 4,000 ஆகமொத்தம் நன்கொடை 11,000

186. மதுரையில் தேவார நிதி ... 50,000

187. திருச்சிராப்பள்ளியில் தாயுமானவர் காவிரித் திருமஞ்சன நிதி ... 7,000

188. திருப்பனந்தாளில் குடிதண்ணீர் வசதிக்கு நான்கு குழாய்கள் நிறுவ நன்கொடை ... 4,500

189. இராமேசுவரத்தில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங்கடப்ப நாயுடு பகதூர்வாரு நினைவு அன்னதானம் ... 10,000

190. இராமேசுவரத்தில் கார்வேட் நகர ராஜா ஸ்ரீ பொம்மராஜு பகதூர் அவர்களின் நினைவு அன்னதானம் ... 12,000

191. ஸ்ரீ காசியில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங் கட்ட நாயனிம்வாரு நினைவு அன்ன தானம் ... 8,500

192. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு சகலகலாவல்லி மாலைப் பரிசு ... 2,000

193. கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வேங்கடப் பெருமாள் ராஜலிங்காரு நினைவு அன்னதானம் ... 12,000

194. திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் நினைவு புனற்பந்தர் நிதி ... 3,500

195. திருலோக்கி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆரம்பப் பாடசாலைக் கட்டிட நிதி ... 5,000

திருச்சிற்றம்பலம்

—



தியோட்டர் பிரிண்டிங் அண்டு லித்தோ ஒர்க்ஸ், திருச்சி.

உ

சிவ சிவ

## சிவ நாமம்

சிவ சிவ என்கிலர் தீவினை யாளர் ;
சிவ சிவ என்றிடத் தீவினை மாளும் ;
சிவ சிவ என்றிடத் தேவரும் ஆவர் ;
சிவ சிவ என்னச் சிவகதி தானே.

—திருமந்திரம்

தியோடர் பிரஸ், திருச்சி.

